உ



பரமபதி துணை.

புலவர் திலகராகிய

**புகழேந்திப் புலவரவர்கள்**

இயற்றிய

# நளவெண்பா

**மூலமும்**

மதுரை ஜில்லா, செம்பூர் வித்வான்

**வீ. ஆறுமுகஞ்சேர்வை அவர்கள்,**

மதுரை அமெரிக்கன் காலேஜ் தலைமைத் தமிழாசிரியர்

**ஆ. கார்மேகக் கோனாரவர்கள்,**

மதுரை ஸௌராஷ்டிர ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியர்

**பு. சிதம்பரபுன்னைவனநாத முதலியாரவர்கள்**

ஆகிய மூவரும்

புதுக்கியும், திருத்தியும், விளக்கியும் இயற்றிய

**விருத்தியுரையும்.**


மதுரை, புத்தக வியாபாரம்,

**இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனாரால்**

வெளியிடப்பெற்றது.

விலை] 1929. [ரூ. 2-8-0






எக்லெல்ஸியர் பிரஸ், மதுரை. ஸ்ரீ கோபால் மஹால்.

# முகவுரை.

"நளவெண்பா" என்பது, வியாசமுனிவரால் இயற்றப்பெற்ற வடமொழி மகாபாரதத்தின் ஆரணிய பருவம் ஐம்பத்திரண்டாம் அத்தியாயமுதல் இருபத்தெட்டு அத்தியாயங்களில் பிருஹதச்வ முனிவர், தருமருக்குக் கூறியதாக எழுதப்பட்டிருக்கும் நளசரித்திரமாகிய 'நளோபாக்கியான பர்வத்தைத்' தழுவி மகா கவி சிரேஷ்டராகிய புகழேந்திப்புலவரால், இனிய தமிழ் மொழியில் நேரிசை வெண்பாக்களால் அமைக்கப்பெற்ற அரிய நூலாகும். இது, 'முதல் வழி சார்பென நூல் மூன்றாகும்' என்றபடி அமைந்த மூவ்வகை நூல்களுள், வழிநூலாம். இங்குக்கூறிய நளோபாக்கியாந பர்வமே இதற்கு முதநூலாகும். பாண்டவர்கள் வனவாசஞ் செய்யுங் காலத்தில், அருச்சுனன் சிவபெருமானைச் சிந்தித்துத் தவமியற்றக் கைலாயமலைக்குச் செல்ல, அத்தருணம் தருமரும் மற்றைச் சகோதரரும், திரௌபதியும் வருத்தமுற்றிருக்கையில் வேதவியாசர் அங்கு வர, தருமர் முறைப்படி அவருக்கு வந்தன வழிபாடுகளியற்றி, அவரை நோக்கிச் "சுவாமி! எங்களைப்போன்று சூதாட்டத்தால் அரசுரிமை இழந்து, கானடைந்து, கவலையுற்றார் வேறெவரேனு முளரோ?" என்று விசனத்தோடு வினவ, 'அம்முனிவர் நளசரித்திரத்தை எடுத்துக் கூறத்தொடங்கினர்' என்று, இந் நளவெண்பாச் சுயம்வர காண்டத்தின் முதற் பதினொரு பாடல்களில் வருதல் கொண்டு இஃதுணரப்படும். வியாச பாரதத்தில் பிருஹதச்வமுனிவர் தருமருக்கு இந்நளன் வரலாற்றைக் கூறியதாக இருக்க, நளவெண்பா ஆசிரியர், வியாசர் கூறியதாகச் சொன்னது யாதுபற்றியோ? எனின் நன்னூல் பாயிரம், எழாவது சூத்திரத்தில், "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி, அழியா மரபினது வழிநூலாகும்" என்ற வழிநூல் இலக்கணப்படி, பிறநூல் மேற்கோள் கொண்டு இங்ஙனங் கூறியிருத்தல் வேண்டுமென்க. இங்ஙனமே வியாசர் தருமருக்கு நளசரித்திரத்தை எடுத்துக்கூறியதாக ஸ்ரீவில்லிபுத்தூரார் பாரதத்திலும், "நீவிரே யல்லிர்முன்னாள் நிலமுழு

தாண்டநேமி, நாவிரி சீர்த்தியாளன் நளனெனு நாமவேந்தன், காவிரி யேனத் தப்பாக் கருணைபான் சூதில்தோற்றுத், தீவிரி கானஞ்சென்ற காதைநும் செவிப்படாதோ" "தோத்திர மானதெய்வச் சுருதிகள் யாவுநான்காக் கோத்தவன் பின்னுஞ் சொல்வான்" எனக் கூறினமை உணர்க. முதனூலுக்கும், வழிநூலுக்கும் விகற்பங்காணு மிடங்களிலெல்லாம் இங்ஙனமே சமாதானங் காண்க. இங்குக் கூறியவற்றைக்கொண்டு, இந்நளவெண்பாவானது பாரதத்தின் வழிநூலென்பதும், இதிற் கூறப்படும் நள சரித்திரம் பாண்டவ சரித்திரத்தின் கிளைக்கதை என்பதும் உணர்க. இதுபற்றியே இதற்கு நளோபாக்கியானம் என்னும் பெயரமைந்துளது. முதற் கதைக்கு ஆக்கியானம் என்றும், கிளைக்கதைக்கு உபாக்கியானம் என்றும் பெயர். இன்னும் இந்நூல் இதிகாசத்தைத் தழுவிவந்த மகாகாவிய மெனவும்படும். இதிகாசமாவது: உபதேச பரம்பரையில்வந்த ஒருவரின் பழங்கதை ஒன்றைப் பிரதானமாக எடுத்துக்கொண்டு, பல கிளைக்கதைகளைப் புணர்த்தி விரித்துக் கூறுவது, இராமாயணமும், பாரதமும் இதிகாசத்தைச் சேர்ந்ததே. மகாகாவியமாவது: வாழ்த்து, தெய்வவணக்கம், தலைமைப் பொருளுரைத்தல் என்னும் மூவகை மங்களங்களுள் ஒன்றினை முதலிற் பெற்று, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்கள் நான்கையும் பயக்கும் பான்மையதாய், ஒப்புயர்வற்ற ஒரு தலைவன் மேலதாய், நாடு, நகரம், மலை, கடல், காலம், சந்திர சூரியரின் உதயாஸ்தமனம், திருமணம், மகுடாபிஷேகம், பொழில் விளையாட்டு, நீர்விளையாட்டு, மக்கட்பேறு, கலவியிற் களித்தல், புலவியிற் புலத்தல், மந்திரம், தூது, போர்ச்செலவு, போரிடல், வெற்றி முதலிய பலவித வருணனைகளை உடையதாய்ச்சருக்கம் இலம்பகம் பரிச்சேதம் முதலிய பிரிவுகள் பொருந்தி, வீரம் முதலிய சுவைகளும், அவற்றினை விளக்குங் கருத்துக்களும் விளங்கச் செவிக்கினிய ஒருதிறச் செய்யுட்களாலேனும், பலதிறப் பாக்களாலேனும் கட்டுரையாலேனும் கற்றோரால் இயற்றப்படுவதாம். இங்குக் கூறிய வருணனைகளிற் சில குறைந்து வரினும் இழுக்காகாது. இங்ஙனங் கூறியதனால் இது ஒரு கதையின் மேலதாகவே வருமென்றுணர்க. சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய நூல்கள் பெருங்காப்பியத்தைச் சார்ந்தவைகள்.

இனி, இந் நளசரித்திரத்தைத் தமிழிற் கூறும் வேறு சில நூல்களும் உண்டு; அவை: பாண்டி நாட்டின் ஓர் பகுதியில் அரசு செலுத்திய அதிவீரராமபாண்டியன் இயற்றிய நைடதமென்னும்

பெருங் காவியமும், மற்றொருவரால் இயற்றப்பட்ட நைடதக் கலித் துறை என்னும் நூலுமாம். இவற்றுள் நைடதம் பாரதத்தின் வழி நூலன்று; ஸ்ரீ ஹர்ஷகவி என்பவரால் வடமொழியிற் செய்யப்பட்ட நைஷத காவியத்தின் மொழிபெயர்ப்பு; இதில், நளசரித்திரம் முதற் கதையாகக் கூறப்பட்டுள்ளது. இதற்கும், நளவெண்பாவுக்கும் மிக்க வேறுபாடுளது. இவற்றுள் நைடதம் பிந்தினது. நைடதக் கலித் துறை என்னும் நூல் பிரசித்தமானதன்று.

இந் நளவெண்பாவில் கூறப்படும் சரித்திரமானது, பிறனுக்குக் கீழ்ப்படியாமல் உலக முழுவதையும் அரசாண்ட அரிச்சந்திரன், கார்த்தவீரியார்ச்சுனன், புருகுற்சன், புரூரவன், முசுகுந்தன் என்பவர்களோடு சேர்ந்த சக்கரவர்த்தியும், வரையாது கொடுப்போராகிய குமணன், சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நிருதி என்னும் முதல் வள்ளல்களோடு சேர்ந்த வள்ளலும், இப்பரதகண்டத்திலே உள்ள நிஷத தேசத்தின் மாவிந்த நகரத்தில், சந்திரகுலத்தரசனாகிய வீரசேனனது குமாரனாய்த் தோன்றி, அரசு செலுத்தியவனுமாகிய நள சக்கரவர்த்தியையும், விதர்ப்ப தேசத்திலே உள்ள குண்டின புரத்தில் சூரியகுலத்தரசனாகிய வீமராஜனது மகளாய்த் தோன்றி, நளனை மணந்த மகா பதிவிரதையாகிய தமயந்தியையும் பற்றியதாதலானும், பல வைதிக லௌகிக தருமங்களையும், தூதிலக்கணத்தையும், மந்திரிகளின் இயற்கைகளையும், சத்தியத்தின் சிறப்பையும், கற்பின் மகிமையையும், ஊழ்வினையின் உறுதியையும், பொருளின்பங்களின் நிலையின்மையையும், 'ஐசுவரிய மிழந்தபோதும், துன்பமுற்றபோதும் அறிஞர் கவலார்' என்பதையும், 'தீயார் விரைவில் அழிவார்' என்பதையும், 'சூதினால் தீமைவரும்' என்பதையும், மற்றும் பல நீதிகளையும் விரித்துக் கூறுவதாதலானும் மகா புண்ணிய கதையாம்.

இந் நள சரித்திரத்தைக் கேட்டவர்களைக் கலியுகத்திலும் கலிபுருஷன் தொடரமாட்டான்; நளனை நினைத்தமாத்திரத்தில் எவர்க்கும் எப்பொழுதும் எக்காரியமும் நிறைவேறும். இவை, நள வெண்பாவில், "என்காலத் துன்சரிதங் கேட்டாரை யானடையேன், மின்காலபில்வேலாய் மெய்என்றும்-நன்காவி, மட்டிறைக்குஞ் சோலை வளநாடன் முன்னின்று, கட்டுரைத்துப் போனான் கலி" என்றும் வருதலானும், நைடதத்தில், "இன்று தொட்டுன்பேர், வழுத்தினரையும் மருவலன் மன்ன வென்றேத்த" என்றும், "நின்னை மெய்ப்பரதனை நிகரிலி பார்த்தனை, முன்னினு நினைத்தவை அனைத்து முற்றுமால்" என்றும்

வருதலானும், வியாச பாரதத்தில், "கார்க்கோடகநாகம், தமயந்தி, நளன், இராஜ ரிஷியான இருதுபர்ணன் இவர்களது பெயரைச் சமய முற்றுழி நினைத்தல், சொல்லுதல், கலியை ஒழித்தற்குக் காரணமாம்" என்று கூறப்பட்டிருத்தலானும் உணரப்படும்.

இஃதித்துணைச் சிறப்பு வாய்ந்ததா யிருத்தலை நோக்கியே பல ஆசிரியர்கள் இதனைக் கிளைக்கதையாகவும், தனிக் காவியமாகவும், வழிநூலாகவும் இயற்றி, உலகத்திற்குப் பயன்படுத்தி இருக்கின்றனர். இப்புண்ணிய கதையைப்புகலும் நூற்களிலெல்லாம் இந்நளவெண்பா சிறந்த ஒன்றென்ப தொருதலை. இந் நூலின் பெருமிதமும், இந் நூற் பெயரிலக்கணமும், ஆக்கியோர் சிறப்பும், ஆக்குவித்தோர் உயர்வும், நூல் செய்தற் கேதுவும், இன்னும் இதைச் சார்ந்த பிற விஷயங்களும், இந் நூலின் முற்பகுதியாகச் சேர்க்கப்பட்டிருக்கும் புகழேந்திப் புலவர் வரலாற்றினும், இந்நூலுரைத் தொடக்கத்தி லுள்ள சிற்சில குறிப்புகளினும் விளக்கிக்காட்டப்பட் டிருக்கின்றன.

இந் நளவெண்பா இங்ஙனம் சிறந்து நிற்றலின், நந்தமிழ் நாட்டில் செந்தமிழ் விருப்புடையார் பலரும் இதனைக் கொண்டாடி வருகின்றனர். தமிழ்க்கலை கற்றுத் தேறிய வித்வான்களுக்கும், வித்தியார்த்திகளுக்கும், மற்றைய தமிழபிமானிகட்கும் இது பெரிதும் பயன்பட்டு வருகின்றது. "எவ்வகைத் தமிழ்க் கல்வியையும் தொடர் பின்றியும், முற்றுறாமலும், முட்டுறத்தட்டோடு துண்டு துண்டாக்கி, இதுவே மாணவர்க்கு இலகுவில் கல்வி புகட்டும் சிரேட்ட மார்க்கம்" என்று துணிந்து, ஒன்றிலுந் தேர்ச்சியுறாதபடி தமிழ் நாட்டு மாணவர்க்குக் கல்வி கற்பித்துவரும் ஆங்கிலக் கலாசாலைகளிலும் தயவுடன், இதில் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிற்சில செய்யுட்களும் சிற்சில சமயங்களில் பாடமாக வைக்கப்பட்டு, அவற்றிற்குச் சிறந்த புலவர்களால் உயர்ந்த உரைகளும் எழுதி உதவப்பட்டு வருகின்றன. எல்லா வகுப்பினர்க்குமே பயன்படுமாறு சில பெரிய வித்வான்கள் முழு நூலுக்கும் சிற்சில உரைகளும் எழுதி வெளிப்படுத்தி இருக்கின்றனர். எனினும், இவைகள் சற்றுச் சுருங்கிய உரைகளாயிருத்தலானும், ஆங்கிலக்கலாசாலைப் பாடச்சில்லறைச் செய்யுட்களுக்கு விரிந்த உரைகளிருப்பினும் நூல் முழுவதற்கும் பூர்த்தி பெறாதவைகளா யிருத்தலானும், "நளவெண்பா முழு நூலுக்கும் விரிவான உரை ஒன்றிருத்தல் மிகவும் அவசியம்" என்பது நந் தமிழ்நாட்டின்கண் பற்பல தமிழறிஞர்களின் அபிப்பிராயம்.

ஆதலின், அவ்வகை நோக்கமுடையாரில் ஒருவரும் மதுரைப் பிரபல புத்தகவர்த்தகரும், மதுரைத் தமிழ்ச்சங்கத்து அங்கத்தின ருள் ஒருவரும், முனிசிபல் கவுன்சிலருமாகிய கனம் இ. மா. கோபால கிருஷ்ணக்கோனர் அவர்கள், இவ்வுரையை எழுதுவிக்கும் முயற்சி யுடையவர்களாய் இதனை முடித்துதவவேண்டுமென என்பால் வற் புறுத்திக் கூறினார்கள். புலவர்திலகராகிய புகழேந்திப் புலவரால் இயற்றப்பெற்ற பெருங்காப்பியமாகிய இவ் அரிய நூலுக்கு விரிவுரை எழுதும் முழு ஆற்றல் என்பாலிலதேனும், கோனாரவர்களின் இன் னுரையை மறுக்க முடியாமையாலும், தமிழ்த் தொண்டு புரிதலையே உரிய தொழிலாகக் கொண்டிருக்கும் இயற்கையாலும், இயன்றவரை யில் எழுதி வெளிப்படுத்தினால் அரிய பெரிய வித்வான்கள் ஆராய்ந் துரைக்கும் குறைகளைத் தெரிந்து திருத்தி, அவர்களுடைய போதனை யால் மேன்மேலும் கல்வியில் தேர்ச்சியடையலா மென்னும் அவாவி னாலுமே என் சிற்றறிவிற்கெட்டியவரையில், எனது ஆசிரியரும், மதுரை அமெரிக்கன் மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதரா யிருந்த வருமாகிய ஸ்ரீமத் பாலகிருஷ்ண நாயுடு அவர்களிடம் நான் பயின்ற கல்வியின் உதவியாலும், பற்பல அறிஞர்களிடம் கேட்டுத் தெரிந்த பொருளுணர்ச்சியாலும், முந்தின உரையாசிரியர் உரைகளின் ஆராய்ச் சியினாலும் பன்னாள் முயன்று இவ் அரிய உரையை வரைந்துள்ளேன்.

இதில், புகழேந்திப்புலவர் வரலாற்றிலிருந்து 11-பாரங்கள் வரை உள்ளவை மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்வகழகத் தங்கத்தினருள் ஒருவரும், மதுரை அமெரிக்கன் காலேஜ் தலைமைத் தமிழாசிரியரு மாகிய ஸ்ரீமான் ஆ. கார்மேகக்கோனர் அவர்களின் உதவியாலும், மது ரைத் தமிழ்ச்சங்கத்து வித்வகழகத் தங்கத்தினருள் ஒருவரும், மதுரை சௌராஷ்டிர ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியருமாகிய ஸ்ரீமான் சிதம்பர புன்னைவனநாத முதலியாரவர்கள் உதவியாலும் வெளியான வை; மற்றவையாவும் எனது முழுப்பிரயாசையால் எழுதப்பெற்றவை. என்னால் எழுதப்பட்ட இவ் உரையில், செய்யுட்களை அனுசரித்துக் காட்டவேண்டிய விஷயங்களும், இலக்கணக் குறிப்புகளும், மிகவிரி வாக எழுதப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு செய்யுளினடியிலும் சரித்திரத்தொடர்ச்சி விடாமல் விளக்கிக்காட்டப்பட் டிருக்கின்றது. மூலத்தில் பொருள் முடிவுக்குத் தக்கவாறு பாட்டுகளின் வரிசை அமைக்கப்படாதிருந்த சிற்சில இடங்களில் பொருண் முடிபுக்குத் தகச் சிற்சில செய்யுட்கள் முன்பின்னாக மாற்றிக்கொள்ளப்பட் டிருக்

கின்றன. சிற்சில செய்யுட்பாடங்கள், பொருள் கொள்வதில் இடர்ப்பாடுறு மாறுபேதப்பட்டிருந்த இடங்களில், நேர்பொருள் கொள்ளுமாறு அப்பாடபேதங்கள் தக்ககாரணத்தோடு மாற்றிக்கொள்ளப்பட்டிருக்கின்றன. முன் உரைகளில் சிற்சில விடங்களில் வித்வ பரம்பரையின் உரைக்கிரமத்திற்கும், உலக வழக்கிற்கும் நூல் வழக்கிற்கும் மாறுபட்டுக்கிடந்த சிற்சில விஷயங்கள், பெரியோர்களின் அபிப்பிராயங்களைத் தழுவி மாற்றி எழுதப்பட்டிருக்கின்றன. முன்னுக்குப் பின் முரணாயிருந்த சில விஷயங்களும் முரண்பாடின்றி இயலுமாறு திருத்தமாக எழுதப்பெற்றிருக்கின்றன. இன்னும் இவ் உரையில் யான்மிக்க உழைப்பெடுத்தாற்றி இருக்கும் வேலைகள் பலவுள. அவையாவும், இவ் உரை முழுவதையும் நன்காராய்வார்க்குத் தெள்ளிதிற்புலனும். நான் இந்நூலுரையில் பிரயாசையுடன் எழுதியிருக்கும் சிற்சில மாறுதல்களைப்பற்றி, நடுநிலையும் தமிழபிமானமும் விசேஷ விற்பத்தியுமுடைய விவேகிகள் வெறுக்காது திருப்தியடைவார்களென்றே எண்ணுகிறேன். இந்நூல் இரண்டாம் பதிப்பில் ஆதியிலிருந்து அந்தம்வரை எனது நண்பர் மதுரைத் தமிழ் வித்வான் ஸ்ரீ: நா. கிருஷ்ணசாமி நாயுடவர்கள் சில பல அரிய விஷயங்களை நுணுகியாய்ந்து என் பொருட்டு எடுத்துக்கொண்ட உழைப்புக்காக அவருக்கு நான் என்றும் நன்றி செலுத்தக்கடப்பாடுடையேன். தமிழில் அவரது மதிநுட்பம் நான் மாத்திரமல்ல; எவரும் பாராட்டத்தக்கதே.

இந்நூலுரையில் பெரிய விஷயங்களும சாமானியர்க்கு எளிதில் விளங்குமாறு எளிய நடையில் எழுதப்பட்டிருத்தலானும், அவை எவர்க்கும் நல்விவேகத்தை உண்டாக்கக் கூடியவைகளாதலானும் இவ் இனியஉரை நூலானது தமிழர் அனைவர்க்கும் பயன் தருவதாம். ஆதலின், தமிழ் நாட்டாரனைவரும் இதனை அன்புடன் ஏற்று ஆதரித்து, எனக்கும், இதனை அச்சிட்டு வெளிப்படுத்திய ஸ்ரீமான்: இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனாரவர்கட்கும் மேன்மேலும் இத்தகைய தமிழ்த்தொண்டைச் செய்து வருதற்காம் மனவெழுச்சியை மீதுறச்செய்யுமாறு மிகவும் தாழ்மையோடும் விரும்புகின்றனன்.

இந்நூலுரை வெளிப்படுதற்கேற்றவாறு உதவிசெய்த உத்தம நண்பர்க்கும், இதனை அச்சிட்டுத் தமிழுலகத்திற்குப் பயன்படுத்திய கோனாரவர்கட்கும் எல்லாம் வல்ல இறைவன் நல்லருள் புரிவானாக.

இங்ஙனம்,

**வீ. ஆறுமுகன்.**

# புகழேந்திப்புலவர் வரலாறு

—(*)—

* பிறப்பிடம்:— அமிழ்தினுமினிய நந்தமிழ் மொழியினுள் முதற் பாவாகிய "வெண்பாவிற் புகழேந்தி" என நந்தமிழகத்தார் வியந்து கொண்டாடும் இப்புலவர் பெருமான், "மாலைக்களந்தைப் புகழேந்தியுந் தொண்டை மண்டலமே" எனவும், 'ஐயன் களந்தைப் புகழேந்தியாண்டான்' எனவும், 'காரார் களந்தைப் புகழேந்தி' எனவும் காணப்படும் தொண்டைமண்டல சதகத்துச் செய்யுள்களால், † தொண்டை நாட்டைச் சார்ந்த செங்கற்பட்டுக்குச் சமீபமாயுள்ள பொன் விளைந்த களத்தூரில் பிறந்தவரெனத் தெரிகிறது.

சாதி:— இவர் துளுவ வேளாள குலத்துதித்தவரெனக் கூறுவர்.

வசித்த நாடுகள்:—முதலில் பாண்டிய நாடும், பின் சோழநாடும், அதன்பின் அந்நாட்டின் ஓர் பகுதியான மள்ளுவ நாடுமாம்.

காலம்:— இவர் ‡ ஒட்டக்கூத்தர், கம்பர் முதலியவர்கள் காலத்தவர். ஒட்டக்கூத்தர் விக்ரமசோழன் அரசெய்திய பின்னிலையிலும், அவன் மகன் குமார குலோத்துங்கன் காலமுழுதும், அவன் மகன் இராச இராசனது இளமைக் காலத்திலும் இருந்து விளங்கினவராகத்

---

* "வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர் சயங்கொண்டான் விருத்தமென்னும்
ஒண்பாவிலுயர் கம்பன் கோவையுலா வந்தாதிக் கொட்டக்கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணாதே."

"வாழ்க மலைநாடு வாழ்க வளஞ் சோணாடு
வாழ்க வழுதி வளநாடே—வாழ்கவே
முன்னீர்மை யோடு முதனீர்மை காத்தோம்பும்
நன்னீர் வயற்றொண்டை நாடு."

என்ற நளவெண்பா வாழ்த்துச் செய்யுளில், தொண்டைநாட்டைச் சேரசோழ பாண்டிய நாடுகளிற் சிறப்பித்துக் கூறுதலும் இதனை வற்புறுத்தும்.

‡ இவர் சோழதேசத்தைச் சார்ந்த மணவூர்ச் செங்குந்த மன்னன் சிவசங்கபூபதிக்கு வண்டார் குழலி யென்னும் பெயர் வாய்ந்த மனைவியிடம், அருந்தவப் பயனாய், அம்பலக்கூத்தன் இன்னருளால் குமாரராய் அவதரித்தவர். ஆதலின், பெற்றோரால் இவர் அம்பலக்கூத்தன் என்று நாமகரணஞ் சூட்டப் பெற்றவர். என ஆராய்ச்சி வல்லுநர் அறிந்து கூறுகின்றனர்.

தெரிகிறது, விக்ரமசோழன் கி. பி. 1118-முதல் 1132வரை அரசாண்டவனெனத் தெரிதலால் ஒட்டக்கூத்தர்காலத்தவராய இவரதுகாலமும் அதேகாலமான பன்னிரண்டாம் நூற்றாண்டாகும்.

மதம்:— இவர், தாம்பாடிய நளவெண்பாவில் முதற்கண் "சேசரிதங்கூர நிலவலயந் தாங்குநளன், மாசரிதங்கூற வருந்துணையாய்—பேசரிய, மாமகிழ்மாறன் புகழாம் வண்டமிழ்வேதம்விரிக்க, மாமகிழ்மாறன்றாள் மலர்" என நம்மாழ்வார் விஷயமாகவும், காண்டங்கடோறும் முதற்கண் திருமால் விஷயமாகவும், வணக்கங்கூறி, நூலிடையில், நளனைக் கலி தொடரும்போது "நாராயணாய நமவென்றவனடியிற் சேராரை வெந்துயரம் சேர்ந்தாற்போல்—பாராளும், கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி, கற்றவனைச் சேர்ந்தான் கலி" எனவும், கலி நீங்கும்போது, "மிக்கோனுலகளந்த மெய்யடியே சார்வாகப், புக்கோ ரருவினைபோற் போயிற்றே—அக்காலம், கானகத்தே காதலியை நீத்துக்கரந்துறையும், மானகத்தேர்ப் பாகன் வாழ்வு" எனவும் எடுத்துக் கூறுதலால், வைணவர் எனவும்: "சேசரிதங்கூர..............—ஈசன், கரியானனத்தான் கருதுபுகழ் பூண்ட, கரியானனத்தான் கழல்" என விநாயகர் விஷயமாகவும், சுயம்வரகாண்டத்தின் தொடக்கத்தில் "கலாபமயிலிருந்த பாகத்தார்.....காப்பு" எனவும், கலி தொடர் காண்டம், கலி நீங்கு காண்டங்களில் "செக்கர் நெடுவானில் திங்கள்.....வெள்ளி நெடுங்கிரியான் மெய்யன்பர் உள்ளத்தான் எங்கட்குளான்" "போதுவார் நீறணிந்து பொய்யாத ஐந்தெழுத்தை, ஓதுவாருள்ள மெனவுரைப்பார்—நீதியார், பெம்மானமரர் பெருமானெம்பெருமான்கை, அம்மானின் முடிமரங்கு" எனவும், சிவபெருமானைச் சிறப்பித்துக் கூறுதலால், சைவர் எனவும்: இவரைக் கூறுவர். மேற்கூறிய ஆதாரங்களால் இவரை, அரியையும் அரனையும் ஒப்ப நோக்கும் உத்தம அத்வைதி எனக் கூறுதலே மிகப் பொருத்தமுடையதாம்.

இப்புலவர் செந்தமிழ் நாட்டிற்சென்று, ஆண்டுள்ள புலவரோடு அளவளாவிக் களிப்பதற் கெண்ணிச் "சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும், சௌந்தர பாண்டியனெனுந் தமிழ்நாடனும், சங்கப் பலகையுந் தழைத்தினி தோங்கும், மங்கலப் பாண்டி வளநாடு" சென்று அந்நாட்டின் தலைநகராகிய மதுரைமா நகரிற் செங்கோலோச்சிய கருணாகர பாண்டியனது சமுக வித்துவானாக அமர்ந்திருந்தனர். இக்காலத்து விக்ரம சோழன் தன்மகன் குமார குலோத்துங்

கனுக்குப் பாண்டியன் மகளை மணஞ்செய்து வைக்குமாறு தனது சமஸ்தான வித்வான் ஒட்டக்கூத்தப் புலவரிடம் சொல்லியிருந்தபடி, அவர் பாண்டியன் மகளை மணம்பேசக் கருணாகர பாண்டியன் சமூகத்தில் வந்தபோது, பாண்டியன் "ஓ! கூத்தரே! நமது பெண்ணைச் சோழன் மணஞ் செய்யத்தக்கவனோ? அவனிடம் யாது மேன்மை யுளது? கூறும் என, அவர் பாண்டியனே! சோழனது குதிரை முதலியவை உமக்குரிய புரவியாதியவற்றில் விசேடம் பெற்றவை என்றுகூறி, அவற்றை விளக்கும் பொருட்டு,

"கோரத்துக்கு ஒப்போகனவட்டம் அம்மானே!
கூறுவதும் காவிரிக்கு வையையோ அம்மானே,
ஆருக்கு வேம்பு நிகராகுமோ அம்மானே,
ஆதித்தனுக்கு நிகர் அம்புலியோ அம்மானே,
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ அம்மானே.
வெற்றிப் புலிக்கொடிக்கு மீனமோ அம்மானே
ஊருக்கு உறந்தைநிகர் கொற்கையோ அம்மானே
ஒக்குமோ சோணாட்டுக்குப் பாண்டிநாடு அம்மானே"

என்று தம்மரசனைப் புகழ்ந்துபாட, அருகிலிருந்த பாண்டியனது சமஸ்தான வித்துவான் புகழேந்திப்புலவர் கூத்தரை நோக்கி,

"ஒருமுனிவன் நேரியிலோ உரைதெளித்தது அம்மானே,
ஒப்பரிய திருவிளையாட்டு உறந்தையிலோ அம்மானே
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ அம்மானே
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ அம்மானே,
கரையெதிரே டேறியது காவிரியோ அம்மானே,
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ அம்மானே,
பரவை புணிந்ததுஞ் சோழன் பதந்தனையோ அம்மானே,
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வெளிதோ அம்மானே"

என்று தமதரசனையும், நகரையும் வியந்து பாடிக் கூத்தரையும் அவர் கூற்றையும் கண்டித்தனர். பின்னர்ப் பாண்டியன் ஒருவாறு இசைந்து, குலோத்துங்க சோழனுக்குத் தன் அருமந்த குமாரத்தியை மணம் செய்வித்துச் சிலநாள் கழித்தபின் புறப்பட்ட மணமக்களுடன் தன் குமாரத்திக்களித்த உயர்ந்த பொருட் சீதனத்தோடு, புகழேந்திப் புலவரையும் சமயம் நேர்ந்துழி புத்தி புகட்டுவதற்காகக் கௌரவ சீதனமாகக் கொடுத்தனுப்பி வைத்தான். அங்ஙனம் புகழேந்தி மணமக்களுடன் சோழதேசம் போகவே பழைய கறுவுகொண்

டிருந்த ஒட்டக்கூத்தர் அரசரிடம், சோழமன்னரையும் நாடு முதலியவற்றையும், முன் பாண்டியன் அவைக்களத்துப் புகழேந்தி பழித்து இழித்துரைத்தமையை எடுத்துக் கூறிப் புகழேந்தியைச் சிறைச்சாலையில் அடைப்பித்தனர். பின்னர் ஒருநாள் அரசன் பவனிவரும் சிறப்பைப் புகழேந்திப்புலவர் சிறைக்கூடத்திலிருந்து பார்க்க, அதைக் கண்ணுற்ற அரசன் தன் பக்கல் நின்ற கூத்தருக்குப் புகழேந்தியைச் சுட்டிக்காட்டி, 'ஓ வித்வானே! அதோ நிற்கும் புகழேந்தி, புலமையில் மிகச் சிறந்தவரல்லவா?' எனக் கூத்தர் இவரைக்கண்டு 'ஓ வேந்தனே!

"மான்நிற்குமோ இந்த வாளரி வேங்கைமுன் வற்றிச் செத்த
கான்நிற்குமோ இவ்வெரியுந் தழல்முன் கனைகடலின்
மீன்நிற்குமோ இந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தான்நிற்குமோ இக்கதிரோ னுதயத்தில் தார்மன்னனே"

என்று தம்மைப் புகழ்ந்து பாடியதைப் புகழேந்தி கேட்டு வளவனை நோக்கி 'மகாராஜ! இப்பாட்டை யான் வெட்டிப்பாடவா ஒட்டிப் பாடவா' என, அரசன் 'ஒட்டியே பாடும்' எனப் புகழேந்திப்புலவர்

"மான் அவன் நான் அந்தவாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கான் அவன் நான் அவ்வெரியுந் தழலும் கனைகடலின்
மீன் அவன் நான் அந்த வெங்கட்சுறவமும் வீசுபனி
தான் அவன் நான் அக்கதிரோனுதயமுந் தார்மன்னனே"

என்று ஒட்டிப்பாடித் தம் சாமர்த்தியத்தை விளக்கிக் காட்டினர். கூத்தரிடம் மிக்க அபிமானங் கொண்டிருந்த அரசன் இவற்றையெல்லாம் உணர்ந்தும் புகழேந்தியைச் சிறையினின்றும் விடுவிக்க மனங் கொள்ளவில்லை. ஒட்டக்கூத்தரோ எனின், புகழேந்தி ஒருவர் மேலன்றி ராஜசபையில் சன்மானம் பெற வரும் வேறு அநேக புலவர் பேரிலும் பொறாமைகொண்டு, அவர்களிலும் அநேகரைப் பிடித்துச் சிறையில் போட்டு நிட்டூரம் பண்ணியும், வேறு பலரைச் சிரச்சேதம் செய்வித்தும் வந்தார். இக்கொடுஞ் செயலுக் கஞ்சிய புகழேந்தி இதுவரை கொல்லப்பட்டவர்போக இன்னும் பலரைக்கொல்லுவிக்கப் போகிறாரே என்றெண்ணித் தம்முடன் சிறைவந் திருந்தவர்களுடைய உயிரைத் தப்புவிக்கக்கருதி அங்கிருந்த குயவன், அம்பட்டன், கருமான், தட்டான், தச்சன், வேளாளன் ஆகிய அறுவரைத் தெரிந்து, அவர்களை நல்ல பண்டிதர்களாக்கி வைத்திருந்தார். நவராத்திரிப் பூசை சமீபித்த போது, வழக்கப்படி துர்க்கா தேவிக்குப் பலிகொடுக்க எண்ணிச் சிறையிலிருந்த புலவர்களை ஒட்டக்கூத்தர்

அழைப்பிக்கப் புகழேந்தி மேற்சொல்லிய அறுவரையும் ஒருவர் பின் ஒருவராய் அனுப்பிவைத்தனர். முதல் முதல் ஒட்டக்கூத்தர் சமுகத்தில் குயவப்புலவன்செல்ல, அவனைக்கண்ட ஒட்டக்கூத்தர் கர்ச்சித்து

"மோனை முத்தமிழ் மும்மதமும் பொழி
யானைமுன் வந்தெதிர்த்தவ னுபடா"

என்று வினவக் குயவன்.

"கூனையுங் குடமுங் குண்டு சட்டியும்
பானையும் வனையு மங்குசப்பையல்யான்"

என அங்குசப்பயல் என்றும் குசப்பயல் என்றும் இருபொருள்பட விடை கூறக் கேட்டுத் திகைத்த கூத்தர் தைரிய சித்தராகி, அடுத்து வந்த பொட்டைக் கண்ணனாகிய அம்பட்டனைப் பார்த்து,

"விண்பட்டகொக்கு வல்லூறு கண்டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்கு நின்றாய் பொட்டையாய் புகல்வாய்"

என்று கேட்க, அம்பட்டன்.

"கண்பொட்டையாயினும் அம்பட்டன் நான் கவிவாணர் முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே"

என்று பதிலளித்தான். ஒருவர்க் கொருவர் சமர்த்தராய் இருப்பதைக் கண்ட ஒட்டக்கூத்தர் மூன்றாவதாக வந்த கொல்லனை நோக்கிப் பாட்டாகல் வினவாது, நீயாரடா வென வசன நடையில் கேட்க, அவன்

"செல்வன் புதல்வன் திருவேங்கடவன் செகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொன்ன பேரைக்குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர் முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப்பாணி கொண்டே"

என்று மடமடப்பாய் உத்தரம் சொல்லவே அதன்பின்னர் யாதொன்றும் பேசாமலிருந்து, விட்டுப் பின்னர் நாலாவதாக வந்த தச்சனைப் பார்த்து நீயார் என்ன, அவன்

"சொன்ன சந்தக் கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்ன சந்தக் கவி யேதென்ற போதி லெதிர்த்தவரை
வன்ன சந்தங் கெட வாயைக் கிழித்திந்த வாய்சசியினாற்
கன்ன சந்தங்களி லிற்கவி யாப்பைக் கடாவுவனே"

என்று பாட்டால் விடை பகர்ந்தான். அதனமே வந்த தட்டானை யும் நோக்கி நீ யார் சொல்லுக என, அவன் மிக்க கர்வங்கொண்டு,

"திகிரி வட்டக் குடைச் செங்கோ லபயன் செழுஞ்சிலம்பிற்
பகுதி யொட்டக்கூத்த பட்டனை நாணப் பணைக்கவியின்
மிகுதி யொட்டத் தட்டி விட்டகை யோட்டி லுருக்கிக்குத்திப்
புகுத வொட்டத் தட்டி மேலனுகா வண்ணம் போர் செய்வனே"

என்று கூறினான். இவ்வளவிற்குள் வாயற்று மௌனமான கூத்தர், கடைசியாக வந்த வேளாளனை நோக்கி நீயும் வித்வானா? பாடல் செய்வாயா என்று கேட்க, அவன்

"கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவாதொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவியொட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர் களோதமிழ் பாடிய பாவலரே"

என்று பாடியவுடன் கூத்தரைக் கண்டித்து, 'ஓ கூத்தா! உன் குற்றத்தை நீ உணராமல் கர்வித்திருக்கின்றாயே? நீ பாடிய அண்டத்துப் பரணியில் இவ்வண்டத்தையே நகரமாகவும், சக்கரவாளகிரியையே கோட்டையாகவும், அதற்குட்புறத்துள்ள கடல்களையே அகழாகவும், பூமியின் நடுவிலுள்ள மகாமேருவையே கோட்டைக்கொடிஸ்தம்பமாகவும் உருவகப்படுத்தி வருணித்திருக்கிறாயே! மதிலின் புறத்திலன்றோ அகழ் இருக்கவேண்டும்? அகத்தில் இருப்பதாகக் கூறியது குற்றமல்லவா? பெரும்புறக் கடலை அகழெனக்கூற மறந்தாய்போலும், கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பரும் தாம் பாடியருளிய இராமாயணத்தில் அயோத்திநகர் வருணனையில்

"நேமி மால்வரை மதிலாக நீள்புறப்
பாம மாகடல் கிடங்காகப் பன்மணி
வாம மாளிகை மலையாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போலுமே"

என்ற செய்யுளைப் பார்த்ததும், கேட்டதும் இல்லையா? என்று இகழ்ந்து பேசக் கூத்தர் அகங்காரம் தணிந்து வாயடங்கியொடுங்கி, இனிப் புலவர்களைச் சிறைப்படுத்தி வைப்பதிற் பயனில்லை; இவர்களை எல்லாம் ஏவிவிட்டு இராசசபையில் என்னை இவ்வாறு அவமானம்பண்ணுவித்த புகழேந்தியை இன்னும் சிறையில் வைத்தாட்டுவேனென்று சொல்லிக் காவலிலிருந்த புலவர்கள் யாவரையும் விடுவித்துப் புகழேந்தியை மாத்திரம் அருஞ்சிறையில் வைத்திருந்தார். அரசன் தனது ஆசிரியப்புலவர் கருதியது தீங்காயினும், அதற்கும் மாறாய் நடவாது புலவர் இட்டது சட்டமென்றிருக்க இசைந்திருக்கிறான் என்பதில்

அதிருப்தி யடைந்த பட்டத்தரசி; ஒருநாள் தன் சயனக்கிரகத்துக்குக் குலோத்துங்கன் வருவதுணர்ந்து அவனை உட்புகவிடாமல் கதவிற்குத் தாழிட்டாள். இதனையறிந்து ஊடலைத் தீர்த்தற்கேற்றவர் தன் புலவர் கூத்தரேயாமெனை இராசன் கூத்தரை அழைக்க அவர் தேவியின் வாசலில் வந்து நின்று

"நானே யினியுன்னை வேண்டுவதென்கொல் நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடுவாய் திறவாவிடிலோ
வானே றனைய இரவிகுலாதிபன் வாசல் வந்தால்
தானே திறக்கும் நின் கைத்தலமாகிய தாமரையே"

என்றுபாட, அவள் 'ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத்தாழ்' என்று இருதாழிட்டுக் கதவை முன்னிலும் உறுதியாகப் பூட்டிக் கொண்டாள். புகழேந்தியாரைச் சிறையில் வைத்திருப்பதே இராணியின் கோபத்திற்குக் காரணம் எனத் தெரிந்த இராசன், இராணியின் அபிமானப் புலவராகிய புகழேந்தியின் தன் எண்ணம் பூர்த்தியாகும் எனக்கண்டு, புகழேந்தியைச் சிறைக்கூடத்தினின்றும் விடுதலை புரிந்து அவரை அழைப்பிக்கப் புகழேந்தி வந்து,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடையேந்தியபொற்
குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகைம் மானாபரணன் நின்வாசல் வந்தால்
பிழையொன் றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே"

என்று பாடவும், சிசுவைக்கண்டு இரங்கும் தாய்போல அரசி தனது பிதாவின் சமஸ்தான வித்துவான்மேல் கொண்ட பிரியத்தாற் கதவைத் திறந்துவிட்டாள். புகழேந்திப் புலவர் தம் பெருமையை யுள்ளவாறுணர்ந்த குலோத்துங்கனால் சிறைநீக்கப்பட்டு அவ்வரசனால், கூத்தரைப் பார்க்கிலும் விசேஷ அன்புடன் நடத்தப்பட்டாரெனினும் ஒட்டக்கூத்தர், தம்மிடம் பொறாமைகொண்டிருத்தலையும், அவர் வழியே அரசன் செல்வதையும் கண்டு வெறுப்புற்று, இவர் அந்நாட்டின் முரணைநகர்ச் சந்திரன் சுவர்க்கி யென்னும் சிற்றரசனிடம் சென்று, அவன் வேண்டுகோட்கிணங்கி நளவெண்பா வென்னும் இந்நூலை இயற்றி அவனால் நன்கு மதிக்கப்பெற்று வாழ்ந்து வந்தனர். இவற்றை யெல்லாம் கேள்வியுற்ற சோழன் மீண்டும் புகழேந்தியாரைத் தன் சமூகத்தில் வரவழைத்துச் சிறப்புடன் உபசரித்துத் தனது சபையில், நளன் கதையைப் பிரசங்கிக்குமாறு வேண்டிக்கொள்ள அவர் அதற்குடன்பட்டு அவையின்கண் பிரசங்கித்து வருகையில்

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது."

என்ற பாடலைச் சொல்லும் பொழுது, ஒட்டக்கூத்தர் மல்லிகை அரும்பைச் சங்காகவும், வண்டைச் சங்கநாதஞ் செய்பவனாகவும் கற்பித்தது அழகே: ஆனால் சங்க வாத்தியஞ் செய்பவர் அதனடியை யல்லவோ வாயில்வைத்து ஊதுவார்கள்? அவ்விதம் மலர்களினடிப் புறத்து வண்டுகள் ஊதுகின்றனவல்லவே? மேற்பக்கத்திலன்றோ மொய்த்து, ஆரவாரிக்கின்றன, ஆதலால் இவ்வருணனை குற்றமென்று மறுத்துரைத்தார். அதற்குப்புகழேந்தியார், குடியனுக்கு வாயென்றும் மற்றதென்றும் தெரியுமா, என்று இவ்விதம் விடையிறுத்து ஒட்டக் கூத்தர் நிகழ்த்தும் ஆக்ஷேபணைகளுக் கெல்லாம், உடனுக்கு உடன் சாதுரியமாகத் தக்க சமாதானம் கூறி அவர் தம் வாயை அடக்கி வந்தனர். கம்பர் முதலிய புலவர்களும் புகழேந்தியின் கவித்திறத்தை யும் புத்தி சாதுர்யத்தையும் வியந்து கொண்டாடினார்கள். ஒட்டக்கூத் தர், பகை கருதிப் புறத்தில் அவமதித்தும் அகத்தில் அவர் கவித்திறத் தை வியந்தும் இருந்தார். ஒருநாள் கூத்தர் தம் மனைவியுடன் புகழேந்தி யின் கவியினினிமையைப் பாராட்டிக்கொண் டிருக்குங்கால் அவரைக் கொல்லக் கருதிக் கல்லுடன் மறைந்து நின்ற புகழேந்தி அதுகேட்டு அவரிடத்திருந்த பகைமைக்குணம் நீங்கி, அவர் முன்சென்று அளவளாவிச் சினேகங்கொள்ள, அவரும் மனமொத்து நட்புப்பூண்டனர்.

இவற்றைக் கேட்டுச் சந்தோஷித்த சோழன், ஒருநாள் இவர் களைத் திருநெய்த்தானம் என்னும் தலத்திற்கு அழைத்துச்சென்று அத்தலத்துச் சிவபெருமான்மீது 'நெய்த்தானத்தானைச் சேவித்தே' என்பதை மகுடமாகவைத்துச் சந்தவிருத்தமாக ஒரு கவி பாடுமாறு சொல்ல, ஒட்டக்கூத்தரும், புகழேந்தியும்,

---

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத" என்னும் அடியின் கற்பனை "எல்லியம் போதிருஞ் சிறைவண்டெம் பெருமான்குணம்பாடி, மல்லிகை வெண்சங்கூது மதிளரங்க மென்பதுவே" எனப் பெரியாழ்வார் திருமொழி யிலும், (திருமொழி-8. 8) "மல்லிகைப்போதின் வெண்சங்கம் வண்டூத" எனத் திருவாதவூரடிகள் திருச்சிற்றம்பலக் கோவையிலும் வருதல் காண்க.

"விக்கா வுக்கா வித்தா விப்போய் விட்டார் கட்டார் சுட்டோர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டக்கூ ழப்பா டத்தீ வெப்பா டப்பூண்
டெக்கா டக்கா னத்தா டப்போம் நெய்த்தா னத்தா னைசசே வித்தே'

"தற்கோ லிப்பூ சற்பா சத்தே தட்டா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்றா நெட்டோ டைப்பா ரைசசேல் மைப்பூ கத்தே றித்தாவிப்போய்
நெற்றா ளுற்றா லைப்பா கிற்சேர் நெய்த்தா னத்தா னைச்சே வித்தே"

எனவும் முறையே * பாடினார்கள்.

திருக்குறுங்குடி யென்னுந் தலத்தெழுந்தருளியிருக்கும் திருமாலைக் குறித்தும் வல்லோசையமைத்து இருவரும் கவித்துறை கூறவென அரசன் வேண்ட, இருவரும் முறையே:

"திக்கு ளொட்டுக்கயந் துக்கமுற்றுத் திடுக்கிட் டலற
மைக்கடற்குட் சரந்தைக்க விட்டோர்க் கிடமாமதுர
விக்கு முற்றிக் கணுச் சற்றுவிட்டுத் தெறித்திட்ட முத்தைக்
கொக்கு மொக்கிக் கக்கி விக்கு மச்சோலைக் குறுங்குடியே"

"எட்டெழுத்தைக் கருத்திற் குறித்திட்டு நித்தம்பரவும்
சிட்டர்கட்குத் திருப்பொற் பதத்தைச் சிறக்கத் தருமவ்
வட்ட நெட்டைப்பணி மெத்தை யத்தற் கிடம் வாரிசப்பொ
குட்டி னத்துக்குலம் தத்தி முத்தீனுங் குறுங்குடியே."

என்று பாடல்களைப் பாடினார்கள். ஏற்றத்தாழ்வின்றி ஒருபடித்தாய் விளங்கிய செய்புள்களை அரசன் கேட்டுச் சொற்சுவை பொருட்சுவை கற்பனாலங்காரங்களைக் கண்டு களித்து, இருவருக்கும் ஏற்ற வெகுமதியை ஈந்து கௌரவப்படுத்தினன். இவ்வாறே, இவர்கள் இரு புலவர்களும் அரசன் அவைக்களத்தும் சமயோசிதமான பாடல்களைப் பாடிச் சிறப்புப்பெற்று வந்தார்கள்.

ஒருநாள் சோழராஜன் தன்னிரு புலவர்களுடன் வீதியிற் கால்நடையாய் உலாவிச் செல்லுகையில், ஒரு வீட்டு முகப்பில், ஔவை

---

*"நூலார் கலைவல்ல செம்பியன் கேட்க நொடித்து மிக்க
கோலாகல னொட்டக் கூத்தனை யன்று தற்கோலி யென்று
மேலார் கவிசொல்லி நெய்த்தானத்தேசென்று வென்றுகொண்ட
மாலார் களந்தைப் புகழேந்தியுந் தொண்டை மண்டலமே"

என்ற செய்யுள் இவ்விபாத்தை வலியுறுத்தும்.

யார் வீற்றிருந்தார். அவர் சோழராஜனைக் கண்டதும், ஒருகாலையும், புகழேந்தியைக் கண்டதும் மற்றொருகாலையும் மடக்கி, ஒட்டக் கூத்தரைக் கண்டவுடனே முன் மடக்கிய இருகால்களையும் பழையபடி நீட்டிக்கொண்டார். இதைக்கண்ட கூத்தர் அவமானமும் கோபமும் மிகுந்தவராய் 'அம்மையே! நீர் இவ்வாறு செய்த காரணம் யாது, கூறுமின்!' என அவர் சோழன் கிரீடாதிபதியாதலால் ஒரு காலையும், புகழேந்தி புலவர்பதியாதலால் மற்றொருகாலையும் மடக்கினேன்: நீயோ கல்வி நிறைவற்ற மூடனாதலால் மறுபடியும் இரண்டு கால்களையும் நீட்டினேன்: நீ இந்தப் புகழேந்தியைப் போன்று சிறந்த புலவனாயின், சோழனையும், சோணாட்டையும் புகழ்ந்து, மதி என்னும் பதம் மூன்று முறைவர ஒருபாட்டுக் கூறு என,

"வெள்ளத் தடங்காச் சினவாளைவேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்து மழைத்துளியோ டிறங்குஞ் சோணாடா
கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண்டப்பேதை பெரிய மதியு மிழந்தாளே"

என்று பாடினர். ஔவையார் கேட்டு, கை கொட்டிச் சிரித்து, ஒட்டா! ஒருமதி கெட்டாய், உன் திறமை நன்று நன்று! என்று இழித்துரைத்துப்பின், புகழேந்திப்புலவரைப் பார்த்து நான் வேண்டியபடி நீர் பாடுக என, இவரும் அதற்கிணங்கி;

"பங்கப் பழனத் துழுமுழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர் தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா
கொங்கர்க் கமராபதி யளித்த கோவே ராசகுல திலகா
வெங்கட்பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப்பிறைக்கும் வீழ்வேலே"

என்று பாடினர். இதைக்கேட்டு ஔவையார் மிகவும் மகிழ்ந்து புகழேந்தியை விசேஷமாகக் கொண்டாடினர் என்பதாகவும் கூறுவர்.

புலவர் நன்றி பாராட்டல்:— இவர் தமக்குப் பலவரிசைகளும் கொடுத்து ஆதரித்து நளவெண்பாப் பாடும்படி செய்வித்த முரணை நகர்ச் சந்திரன் சுவர்க்கி என்னும் பிரபுவை:-

"மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான்—காமருபூந்
தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி"

"மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிரைக்குந்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி—நாமத்தார்
பாவேய்ந்த செந்தமிழா மென்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம்"

என, சுயம்வர காண்டம் 17, 57-ம் செய்யுள்களிலும்,

"தாருவெனப் பார்மேல் தருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போற்—கூரிருளிற்
செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினான்
வெங்கா னகந்தனிலே வேந்து"

"சங்க நிதிபோல் தருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றலக மீட்டாற்போல்—மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு"

என, கலி தொடர் காண்டம் 109, 128-ம் செய்யுள்களிலும்,

"வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி"

என, கலி நீங்குகாண்டத்துச் செய்யுளிலும் புகழ்ந்து நன்றிபாராட்டி யிருக்கின்றனர். புண்ணிய சரித்திரத்தினிடையில் ஒரு மனிதனைத் துதித்தல் தகுமோ? நர கவனம், நரகவன மன்றோ என்று ஆக்ஷேபிப்பாரு முளர். புலவர்கள் தம்மைப் பாதுகாத்த பிரபுக்களை, தாம் செய்யும் நூல்களில் நன்றியறிதலாக எடுத்தேத்துதல் இயற்கை என்பது, கம்பர் இராமாயணத்தில் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலையும், வில்லிபுத்தூரார் பாரதத்தில் வக்கபாகை வரபதியாட் கொண்டானையும், சிறப்பித்துக் கூறுதலானும் விளங்கும்.

இவர் தேச பாஷாபிமானம்:—நள வெண்பாவில் தமயந்தி சுயம் வரத்துக்கு வந்த மன்னர்களில் தமிழ்நாட்டு மூவேந்தரையும் முதலில் சிறப்பித்துக் கூறியிருப்பது இவரது தேசாபிமானத்தையும், "வண் டமிழ் வாணர்ப்பிழைத்த வான்குடிபோல் தீத்தழல்மீ மண்டு கொடுஞ்சுரத்து" (கலிதொடர் 113,) எனத் தமிழ்ப் புலவர் ஆற்றலைத் தெரிவித்திருப்பது இவர் தம் பாஷாபிமானத்தையும் விளக்கும்.

இப்புலவரது பெருமையை, இவர் தம்பெயரே நன்கு காட்டும். "கேட்டாலு மின்பங்கிடைக்குங் கண்டீர் கொண்ட கீர்த்தியோடு, பாட்டாலுயர்ந்த புகழேந்தி சொன்னபடி" எனப் படிக்காசுப்புலவர் கூறினர்.

---

## நளவெண்பாக் கதைச்சுருக்கம்.

சுயம்வரகாண்டம்:— இப்பரதகண்டத்தில், நிஷததேசத்து மன்னன் வீரசேனன் புத்திரன் நளமகாராஜனும், விதர்ப்பதேசத்து வீமராசனது புத்திரி தமயந்தியும், ஒரு தேவலோகத்து அன்னப்பறவையாலும், வேறு சிலராலும், ஒருவர் ஒருவருடைய அழகு, குணம், செயல் முதலியவற்றை யுணர்ந்து பரஸ்பரம் அன்பு பூண்டிருந்தனர். விதர்ப்பநாட்டரசன் தனது மகள் தமயந்திக்குச் சுயம்வரம் ஏற்படுத்தியகாலத்து, அதற்கு வந்த இந்திரன், அக்கினி, யமன், வருணன் ஆகிய தேவர்கள் நால்வரும், தங்களுக்காக நளனைத் தமயந்தியிடம் தூதனுப்பிப் பார்த்ததில், அவள் நளனையன்றிப் பிறரை வரிக்க இசையா திருப்பதுணர்ந்து, தங்கள் விருப்பத்திற் கிணங்கித் தூது சென்ற நளனுக்குப் பலவரங்களையும் ஈந்து, பின் நளனது வடிவத்தையே இவர்களும் கொண்டு சென்று சுயம்வரமண்டபத் தமர்ந்தனர். பல மன்னர்களும் நிரம்பிய மண்டபத்தில் தமயந்தி தோழியாலும், பிற குறிப்பாலும், உண்மைநளன் இன்னானெனத் தெரிந்து அவனுக்கே மாலைசூட்டி மணந்தனள். நிற்க, தமயந்தி சுயம்வரத்தைக் கருதி வந்துகொண்டிருந்த கலிபுருடன், வழியிற் சந்தித்த இந்திரன் முதலியோர் மூலமாகத் 'தமயந்தி தேவர்களையும் மதியாது நரனாகிய நளனையே வரித்துக்கொண்டனள்' என்பதைக் கேட்டு உக்கிரங்கொண்டு, தான் அவ்விருவரையும் பிரித்து அலைத்து வருத்துவதாகச் சபதம் பண்ணிச் சென்றான். மணம் நிறைவேறியபின் மாவிந்தநகர்க்குத் திரும்பிய நளனுக்குத் தமயந்தியிடம் ஓர் புத்திரனும் புத்திரியும் தோன்றினர்:—

கலிதொடர்காண்டம்:— கலிபுருடன் நளனிடம் 12-வருடமாகக் குற்றந்தேடியுங் காணாது, ஓர் நாள் நளன் சந்தியாவந்தனத்திற்குக் கால்கழுவுகையில் காலின்னோர்புறம் நீர் படாததாகிய குற்றத்தையே காரணமாகக்கொண்டு, நளனைப்பற்றி, அவனைப் புஷ்கரமன்னனுடன் சூதாடி நாடு நகரம் இழந்து மனைவிமக்களுடன் வனம்புகச்செய்து, அவ்விடம், மக்களை அந்தணன் மூலம் வீமராசனிடம் அனுப்பியபின் தமயந்தி முன்னிலையில் மாய அன்னப் பறவையாய்த் தோன்றித்

தன்னைப் பிடிக்கவிடுத்த ஆடையுடன் பறந்து ஏமாற்றிப் பாழ்மண்டபத்தில் தரித்திரத்தால் இருவரும் ஓர் ஆடை உடுத்து நித்திரை செய்கின்ற நள்ளிருளில் தமயந்தியை விட்டுப்பிரிய நளனுக்கு எண்ணம் உண்டாக்கித் தமயந்தி உணராது பிரிய ஆடையைக் கத்தரிக்கக் கருவியாக விளங்கிச் சபதப்படி தமயந்தியைப் பிரித்து வைத்தனன். விழித்தெழுந்த தமயந்தி கணவனைக் காணாது வருந்தித் தேடிச் செல்லுகையில், தன்னைப் பாம்பினின்றுங் காத்துமோகித்த வேடனைக் கற்பால் தகித்து விட்டுச் சிற்றன்னையாகிய சேதிநாட்டரசியாற் சென்று, பின் குண்டினபுரி அடைந்தனள்:—

கலிநீங்குகாண்டம்:— தமயந்தியைப் பிரிந்த நளன் தான்சென்ற காட்டில் தீவாய்ப்பட்ட கார்க்கோடகனை மீட்டு, அது கடிக்கச் சுயரூபமாறி, இயற்கை வடிவம் அடையவேண்டியகாலத்து உதவும் இரண்டு ஆடையைப் பாம்பிடம் பெற்று, வாகுகனென்ற பெயருடன் ருதுபர்ணனிடம் தேர்ப்பாகனுயமர்ந்து, தமயந்தி 'இரண்டாம் சுயம்வரத்தை' விரும்பிச் சென்ற ருதுபர்ணனிடம் வழியில், 'அக்ஷஹிருதயம்' என்ற வித்தையைத் தான்கற்று அவனுக்கு 'அஸ்வஹிருதயம்' என்ற வித்தையைக் கற்பித்த காலத்தில், கலியும் நீங்கினன். வீமன் உபாயப்படி, வந்த ருதுபர்ணன் பாகனைத் தமயந்தி பலவாறு சோதித்து நளனென்றே கண்டு பிதாவுக்கறிவிக்க, அவர் விருப்பின்படி நளன் பாம்பளித்த ஆடையைப் போர்த்துக்கொள்ள, சுயவடிவம் எய்தினன். கலியும் வேண்டும் வரமளித்து வாழ்த்தினன். பின், மனைவி மக்களுடன் மாவிந்தநகர் சென்று, புஷ்கரனைச் சூதில்வென்று தனது நாட்டைப்பெற்று நலம் பெற வாழ்ந்தனன் என்பதாம்.

## நளன் தமயந்தி இவர்கள் பூர்வவரலாறு.

அர்ப்புதகிரி என்ற ஓர் மலைச்சாரலில் ஆகுகன் என்ற வேடனும்; அவன் மனைவி ஆகுகி யென்பாளும், பக்கத்திலுள்ள கோயிலொன்றில் ஈஸ்வரனை முறையே உட்புறத் தொருவரும், வெளிப்புறத் தொருவருமாகப் பிரதிதினமும் பக்தியுடன் வந்தனை வழிபாடுகள் செய்து வாழ்ந்து வந்தார்கள். ஓர் நாள் சூரியாஸ்தமன காலத்தில், அவ்வழியே வந்து கோயிலைக் கண்டு நின்ற யோகீஸ்வரரொருவரை, வெளிப்பக்கத்து நின்று கொண்டிருந்த ஆகுகி கண்டதும், நமஸ்கரித்துத் "தேவரீர் எங்கு செல்கின்றவர்கள், பொழுது அஸ்தமித்துவிட்டபடியால், இரவு இங்குத் தங்கிச் செல்லுக, எனது நாயகனும்

ஆலயத்துள் வீற்றிருக்கின்றனன்" என்று இன்மொழிகூறி உபசாணை செய்தும், யோகி, பெண்களுடன் பேசுதல் தகாதென்று நினைத்தவராய், ஆருகி கேட்டவற்றி லொன்றுக்கும் பதிலுரையாமல் மௌனமாய் நின்றார். இதற்குள் கோயிலுள்ளிருந்து வெளியே வந்த வேடன் சுவாமியைக் கண்டதும், பஞ்சாங்க அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, "தாங்கள் எங்கு போக வேண்டியவர்கள்? தங்களுக்குத் தேவை யாவை?" என்று நல்வார்த்தை கூறியதின்பேரில், "அப்பா! நான் ஓர் யாத்திரீகன் (பரதேசி) எனக்கு வேண்டுவதொன்றுமில்லை, இரவு தங்கிச்செல்லவேண்டும். படுத்தற்கு இடங்கொடுத்தாற் போதுமானது" என்று மறுமொழி கூறினர். இதைக் கேட்ட ஆருகன், முனிவரைக் கோயிலுட் சயனித்துக் கொள்ளச் சொல்லி, தானும் தன் மனைவியும் வெளிப்புறத்திருப்பதாக நிச்சயித்திருப்பதை யறிந்த யோகி, பெண்பிள்ளை இராக்காலத்து வெளியே தங்கியிருத்தல் சரியன்றென்ன, வேடன் அங்ஙனமே ஆருகியையும் அவ்வாலயத் தூட்புறத்துள்ள தனது குடிசையினோர் புறத்து இருக்க வைத்து, தான் வேடர்க்குரிய வில் அம்பு முதலியவை கொண்டு வெளி நின்று விழித்துக் காத்துக் கொண்டிருந்தான். வெளியில் நின்ற வேடனை நள்ளிருளில் ஓர் பெரும் புலி வந்து பக்ஷித்துவிட்டது, பொழுது விடிந்ததும், வேடனிறந்து பட்டிருக்கக் கண்ட முனிவர், தம்பொருட்டு வேடன் உயிர் இழக்கப் பெற்றனனே என்று அநுதாபப் படுகையில், ஆருகி, தன் கணவன் தக்க முனி சிரேஷ்டராகிய தங்களுக் குதவி செய்து பிராணனை விட்டிருப்பதால் நற்கதியடைவான் என்று சமாதானங் கூறி, சந்தோஷத்துடன் தானும் அக்கினிப் பிரவேசஞ் செய்து உயிர்விடயத்தனித்தாள். அப்பொழுது பரமேஸ்வரன் பிரத்தியக்ஷமாய்த் தோன்றி, "நீயும் உனது கணவனும் செய்த நல்வினையால், அடுத்த ஜன்மத்தில் நீ விதர்ப்ப தேசத்தரசன் புத்திரியாகத் தோன்றுவாய், உனதுகணவன் நிஷததேச ராஜகுமாரனாகத் தோன்றுவன், இப்பிறப்பில் உங்கள் கூட்டுறவைப் பிரித்த இந்த யோகி, மறுபிறப்பில் அன்னப்பறவையாக வந்து, தூது சென்று, உங்களிருவரையுங்கூட்டி வைப்பான். அதன்மேல் உங்கட்கு முத்தியே, அதாவது வேறு ஜனனமில்லை" என்று அருளிய வண்ணமே அம்மூவரும் முறையே நளன், தமயந்தி, அன்னம் எனத் தோன்றினர் என்பதாம்.

---



உ

# நளவெண்பா

நளனது வெண்பா என விரியும் ஆறும் வேற்றுமைத்தொகை: நளனைப் பற்றிய வெண்பா என விரிந்தால், இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை: நளனது சரித்திர விஷயமான வெண்பா என்பது கருத்து, வெண்பா - தமிழ்ப்பாஷையில் ஐவகைச் செய்யுளில் ஒருவகைச் செய்யுள்: இது இங்கே அச்செய்யுளாலாகிய நூலுக்குக் கருவியாகு பெயர். நளன் என்ற பெயர் அவனது சரித்திரத்தை உணர்த்தி நின்றது. நளன்-வெண்பா-நளவெண்பா: நிலைமொழி உயர்திணைப் பெயரின் ஈறு கெட்டது, "நன்னூல் "பொதுப்பெயருயர்திணை" என்ற சூத்திரத்தில் 'சில விகாரமா முயர்திணை" என்பது விதி.

நளன்—இவன் கிருதயுகத்தில் பரதகண்டத்தில் மாவிந்த நகரத்தில் அரசு செலுத்தி வந்தவன், சந்திரகுலத்து வீரசேனன் என்னும் அரசனுக்குப் புத்திரனாய்த் தோன்றியவன்: பெருமையிற் சிறந்த * சக்ரவர்த்தி வள்ளல்களில் ஒருவன்: விதர்ப்பதேசத்துக் குண்டினபுரத்து அரசு செலுத்திய சூரியகுலத்து வீமன் என்பான் குமாரத்தியாகிய கற்பினிற் சிறந்த தமயந்தி என்பாளை மணஞ் செய்து கொண்டோன்.

இந்நூல் சுயம்வரகாண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்ற மூன்று காண்டங்களாகப் பகுக்கப்பட்டு ஏறக்குறைய 400-செய்யுள்களை உடையது. முதனூல், வழிநூல், சார்புநூல் என்ற முத்திற நூல்களுள் இது வழிநூல் வகையைச் சார்ந்தது: ஆகையால் முதனூலுக்கும் இந்நூலுக்கும் சிற்சில இடங்களிற் பேதங்கள் காணப்படும். இதன் முதனூல் வியாசமுனிவர் செய்துள்ள வடமொழி மஹாபாரதத்துள் ஆரணிய பருவத்துள் கூறப்பட்ட 'நளோபாக்கியான பருவம்', உபாக்கியா

---

* "அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புரூரவாச்சகரன், கார்த்த வீரியன்" என்றிவர் அறுவகைச் சக்ரவர்த்திகள்.

நளன் முதலெழு வள்ளல்களில் ஒருவன்.—முதலெழு வள்ளல்கள்: குமுணன், சகரன், சகரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி என்பவர்.

னம்—கிளைக்கதை, பாண்டவர் சரிதையிற் கூறும் ஓர் கிளைக்கதை யாகை யால் இச்சரித்திரம் முதற் சரித்திரம் ஆகாது.

பாண்டவர்கள் வனவாசத்தில் வருந்திக் கொண்டிருக்குங்கால் அவ ரிடத்து வந்த வியாசரை நோக்கித் தருமபுத்திரர் "எங்களைப்போல் சூதாடிப் பார்முழுதும் தோற்றுக் காட்டில் வருந்திய அரசர்களுமுளரோ" என்று வினவ, அதற்கு அங்ஙனம் வருந்திய அரசரும் உளரென நளச்சரித்திரத் தை வியாசர் அவர்கட்குக் கூறினரென்பது ஈண்டு அறியத்தக்கது.

நளச்சரித்திரம் கூறும் நைடதம் என்னும் தமிழ் நூலும் ஒன்றுண்டு: அது பன்னூற்றாண்டுகட்கு முன்னர்ப் பாண்டி நாட்டின் ஓர் பகுதியில் அரசு செலுத்தி இருந்த அதிவீரராமபாண்டியன் என்னும் அரசர் பெருந்தகை யால் வடமொழி நைஷதத்தி னின்றும் மொழி பெயர்த்து, விருத்தப்பாக்க ளால் சொன்னயம், பொருணயங்களுடன் பாடப்பெற்றுளது.

---

## காப்பு.

1. நேசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையாப்—பேசரிய
மாமகிழ்மா றன்புகழாம் வண்டமிழ்வே தம்விரித்த
மாமகிழ்மா றன்றாள் மலர்.

(இதன்பொருள்.) நேசர்-தன்னிடத்து நட்புக் கொண்டவர்கள், இதம் கூர-நன்மை மிகும்படி, நிலம் வலயம்-பூமண்டலத்தை, தாங்கும் நளன்-(தோளில்) தாங்கிக் காக்கின்ற நளமகா ராஜனது, மாசரிதம்-பெருமை பொருந்திய சரித்திரத்தை, கூற-செய்யுள் ரூபமாகச் சொல்லுதற்கு, பேச அரிய (அனந்த கல்யாணகுணம், செயல்களை யாவராலும்) சொல்ல முடி யாத, மாமகிழ்-லட்சுமிதேவி சந்தோஷிக்கின்ற, மால்தன் புகழ் ஆம்-திரு மாலினது கீர்த்தியாகிய, வண்தமிழ் வேதம்-வளப்பமிக்க தமிழ் வேதமா கிய திருவாய் மொழியை, விரித்த-(உலகினர்க்கு) வெளியிட் டருளிய, மாமகிழ்-பெருமை மிகக மகிழம்பூமாலையை அணிந்த, மாறன்தாள் மலர்-நம்மாழ்வாருடைய திருவடித் தாமரை மலர்கள், துணை ஆ(க)வரும்-உதவி புரிவனவாக வரும்; (என்றவாறு)

சரிதம் கூறத்தான்மலர் துணையாவரும் என்க. நேசர்-நேசம் என்னும் பண்படியாகப் பிறந்த பலர்பாற் படர்க்கைப்பெயர். கூர-கூர் என்னும் மிகு திப்பொருளைக் குறிக்கும் உரிச்சொல் அடியாகப் பிறந்த செயவெ னெச சம், காரியப்பொருட்டு நிலவலயம்-ஆறும் வேற்றுமைத் தொகை நிலைத் தொடர். வரும்-செய்யும் என்னும் முற்று, பலர்பால் ஒழிந்த மற்றை நான்கு பாலுக்கும் வருவது. துணையா-எச்சவீறு தொகுத்தல் விகாரம். பேசரிய

பேசுதற்கு அரிய என நான்காம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடருமாம். அரிய-அருமை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். 3-ம் அடி மகிழ்-வினைத்தொகை. தாள் மலர் உருவகம். மகிழ்-முதலாகு பெயராய் மாலையை உணர்த்தி நிற்றலான் இருமடி யாகுபெயர்.

நிலவலயம் தாங்குதலாவது-தோள் வலியைக் கொண்டு பகை வரை வென்று, குடிகளை அறநெறி வழுவாது காப்பாற்றுதலாம். நேசரிதங்கூர மாசரிதங்கூற எனக்கொண்டு நேசர்கள் இன்பம் அடையும்படியாக மாச ரிதத்தைக் கூறுவதற்கு எனவும் பொருள் கொள்ளலாம். இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்களின் சாரமாக, திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்மொழி, பெரிய திருவந்தாதி என்ற நான்கு பிர பந்தங்களையும் பெற்ற திருவாய்மொழி தமிழ்வேதம் எனப்பட்டது. தமிழ் மக்களும் வேதார்த்தங்களை உணர்ந்து, அஞ்ஞானம் ஒழிந்து வீடெய்தும் ஞானத்தைப் பெறச்செய்தனராதலின், வேதம் விரித்த என்றார்.

நம்மாழ்வார் அழுதல், பால்குடித்தல் முதலிய லோக வியாபார மின்றி உலக நடைக்கும், வலிய வினைகளுக்கும் மாறாக இருந்ததினால், மாறன் எனப்பட்டார். இவர், குழந்தைகளைப் பிறந்தவுடன் தனது பரிசத்தால் அஞ்ஞானத்துக்குள்ளாக்கி, அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி தூண்டுந் தன்மையதான சடம் என்னும் வாயுவை உங்காரத்தால் ஒறுத்து, ஓட்டியொழித்தவராகையால் சடகோபர் எனப்படுவர். பராங்குசன், திரு நாவீறுடைய பிரான், வகுளப்பிரான், குகைப்பிரான் முதலிய வேறு பெயர்க ளாலும் இவர் அழைக்கப்படுவர்.

இப்பாட்டில் தனிச்சொல் முதல் மற்றொரு பாடம்

..............................—ஈசன்
கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட
கரியா னனத்தான் கழல்

(இ-ள்) ஈசன் சிவபெருமானும், கரியான் - விஷ்ணுவும், அ (ன்) னத் தான்-பிரமதேவனும், ஆகிய மூவரும், கருது-சிந்திக்கின்ற, புகழ்பூண்ட- கீர்த்தியணிந்துள்ள, கரி ஆனனத்தான்-யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளது, கழல்-பாதம்......துணையாவரும்; (எ-று.)

கரியான்-கருமை என்னும் பண்பினடியாகப் பிறந்த குறிப்பு வினையா லணையும் பெயர். அனத்தான-தொகுத்தல் விகாரம், அன்னவாகனத்தை யுடைய பிரமன். கருது புகழ்-வினைத்தொகை. கரியானனம் வடமொழித் தொடர், ஆனனம்-முகம், கரி-கரத்தை (துதிக்கையை) யுடையது; கருமை நிறமுடையது கரியென்பாரு முளர். கழல்-வீரகண்டாமணி என்னும் ஓர் ஆபரணம். அதனை அணிந்துள்ள, பாதத்திற்கு ஆகுபெயர். மூவரும் என் னும் செவ்வெண்ணின் தொகையோடு முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

2. ஆதித் தனிக்கோலம் ஆனான் அடியவற்காச்
சோதித் திருத்தூணிற் றோன்றினான்—வேதத்தின்
முன்னின்றான் வேழ முதலே எனவழைப்ப
என்னென்றான் எங்கட் கிறை.

(இ-ள்) ஆதி-முதன்மையான, தனிக்கோலம் ஆனான் - ஒப்பற்றவராக அவதாரம் எடுத்தவனும், அடியவற்கு ஆ (க) - தன்னடியானான பிரகலாதாழ்வானுக்காக, சோதி-ஒளிபொருந்திய, திருத்தூணில் தோன்றினான்- அழகிய தூணிடத்தில் அவதரித்தவனும், வேதத்தின்முன்-வேதங்களுக்கு முதலாகிய பிரணவத்தில், நின்றான்-பொருளாக நின்றவனும், வேழம்-கஜேந்திரன் என்னும் யானை, முதலே என ஆதிகாரணனே என்று, அழைப்ப ஓலமிட்டு அழைக்க, என் என்றான்-என்னவென்று வந்து துயர் தீர்த்தவனுமாகிய திருமால்; எங்கட்கு இறை-எங்களுக்குத் தெய்வமாகும்.

எங்கட்கு என்று உளப்படுத்தியது, தம் முன்னோரையும் குலத்தாரையும் உட்கொண்டு. அடியவர்க்குறும் துயர்நீக்கி அவர் வேண்டியாங்கு உதவும் தண்ணளியை யுடைய தலைவனைத் தாமும் தெய்வமாகக் கொண்டபடியால், தாம் விரும்பியதும் நிறைவேறும் என்பார், கோலமானான் தூணிற் தோன்றினான், வேழமுன்னின்றான் என்ற வரலாற்றைக் குறிப்பித்தார். பிரணவமந்திரத்தின் விரிவே வேதமாதலால் பிரணவம் வேதத்தின் முன் எனப்பட்டது; வேதத்தின் முன் ஆறாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஆனான், தோன்றினான், நின்றான், என்றான் என்பன வினையாலணையும் பெயர்கள். அழைப்ப செயவெனெச்சம் காரியப்பொருட்டு. முதல், இறை-ஆகுபெயர். என்-எவன் என்னும் வினாவடியாகப் பிறந்த குறிப்புமுற்று. தூணின்-இன் ஐந்தாம் வேற்றுமை நீக்கப் பொருளது. ஆ-ஆக என்பதின் தொகுத்தல். ஆதி, கோலம், வடசொற்கள்; சோதி-ஜோதி என்னும் வடசொல்லின் விகாரம்.

**வராக அவதாரகதை:—** ஒரு காலத்தில் இரணியாக்கதன் என்னும் அசுரன் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு கடலில் மூழ்கி ஒளித்துக் கொள்ள, தேவர் முதலியோர் வேண்டுகோட்படி திருமால் வராகாவதாரமெடுத்து மண்ணிடந்து சென்று தன் வக்கிரதந்தக் கோட்டினால் குத்தி அவ்வசுரனைக் கொன்று பூமியைக் கோட்டிலேந்திக் கொணர்ந்து பழையபடி விரித்தருளின னென்பதாம்.

**திருமால் தூணில் தோன்றிய கதை:—** தேவர் முதலிய யாவராலும் கொல்லுதற்கரிய வரம் பெற்றவனும் இரணியாக்கதன் உடன் பிறந்தவனுமான இரணியன் திரிலோக சஞ்சாரியாய்த் தேவர் முதலியோருக்குத் தீங்கு விளைத்து, தன்னையே கடவுளாகத் தன்னாமஞ் சொல்லி வணங்கும்படி செய்து வருகையில் அவனுடைய குமாரனான பிரகலாதன் என்பவன்

சிறுவயது தொட்டே திருமாலடியனாய், தந்தையின் கட்டளைப்படி அவன் பெயரைச் சொல்லி, கல்வி கற்காமல் நாராயண மந்திரத்தை உச்சரித்து வர, அது கண்டு வெகுண்ட இரணியன் பிரகலாதனை எவ்விதத்தினும் தன் வசப்படுத்த முயன்றும் பயனில்லாமல் அவனைக் கொல்வதற்குப் பலவித உபாயந் தேடியும் முடியாமல் ஒருநாள் மாலைப்போதில் பிரகலாதனை அழைத்து நீ சொல்லும் நாராயணன் என்பவன் எங்கிருக்கின்றான் காண்பி என வினவ, அதற்கு அவன் பிள்ளை, 'தூணிலும் உளன் துரும்பிலும் உளன் நின்சொல்லினு முளன்' என்று விடையளிக்க, உடனே இரணியன் இங்குளனோ வென்று தனக்கு எதிரில் நின்ற தூணில் ஓங்கி அறைந்தனன். அதினின்றும் திருமால் மனிதவடிவமும் சிங்கருபமுங் கலந்த நரசிம்ம மூர்த்தியாய்த் தோன்றி இரணியனைத் தூக்கி மடிமீதிருத்தித் தனது நகமாகிய வாளால் அவனது மார்பைப் பிளந்து அழித்திட்டுப் பிரகலாதனுக்கு அருள் புரிந்தன னென்பதாம்.

வேழம் அழைத்த கதை:— ஓர் யானை முற்பிறப்பின் தொடர்ச்சியினால் உண்டாகிய விஷ்ணு பக்தியால் தினந்தோறும் ஆயிரம் தாமரை மலர் கொண்டு திருமாலை அருச்சித்து வருகையில் ஒரு நாள் வழக்கம் போல் தடாகத்திலிறங்கி மலர் பறிக்குங்கால் அக்குளத்திலுள்ள முதலை ஒன்று அதன் காலைக் கௌவிக்கொள்ள அக்கஜேந்திர ஆழ்வான் "ஆதிமூலமே" என்று ஓலமிட, திருமால் கருடவாகன மேற்கொண்டு அங்கு எழுந்தருளித் தனது சக்ராயுதத்தைப் பிரயோகித்து அம் முதலையைக் கொன்று இவ் யானையைக் காத்தருளினன் என்பதாம்.

3 கலாப மயிலிருந்த பாகத்தார் கங்கை
உலாவு சடைமே லுறையும்—நிலாவை
வழியவார்த் தாலன்ன மாநீற்றார் நாகம்
கழியவார்த் தார்நமக்கோர் காப்பு

(இ-ள்) கலாபம் மயில்-தோகையையுடைய மயில்போன்ற சாயலுடைய உமாதேவியார், இருந்த-தங்கியிருக்கப்பெற்ற, பாகத்தார்-இடப்பாகத்தையுடையவரும், கங்கை உலாவு-கங்காநதி ததும்பிக்கொண்டிருக்கின்ற, சடைமேல்-தமது சடைமுடியில், உறையும்-இருக்கின்ற, நிலாவை-சந்திரனது ஒளியை வழிய-(தமது மேனியில்) வழியும்படி, வார்த்தால் அன்ன சொரிந்தாற் போன்ற, மாநீற்றார் - பெருமை பொருந்திய விபூதியைத் தரித்தவரும், நாகம்-பாம்புகளை, கழிய - மிகுதியாக, ஆர்த்தார்-ஆபரணமாகக் கட்டினவரும் ஆனசிவபெருமான்; நமக்கு ஓர் காப்பு - நமக்குச் சிறந்த ஒரு காவலாவார்; (எ-று)

சிவபெருமான் திருமேனி முழுதும் விபூதிமயமாய் இருத்தலின், 'நிலவை வழியவார்த்தாலன்னமா நீற்றார்' என்றார்; நிலா வெண்ணிறமி

னது. கலாபம்-மயிலிறகு, மயில், பெண்களுக்குச் சாயலால் உவமை. பாகத்தார், நீற்றார், ஆர்த்தார் இவற்றில் ஆர்விகுதி உயர்வுப்பன்மை பாகத்தார் - அர்த்தநாரீச்சுரர். வார்த்தால் - ஆல் ஈற்று வினையெச்சம் அன்ன இடைச்சொல்லடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். நீற்றார்- நீறு + ஆர் நெடிற் றொடர்க் குற்றியலுகரம் தன்னொற்றிரட்டியது (நன் - உயிர் சூ 33) கழிய கழி என்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்த குறிப்பு வினையெச்சம். காப்பு-காக்கின்ற கடவுளுக்குத் தொழிலாகு பெயர். கலாபம், பாகம், வடசொல். கங்கா, சடா என்ற வடசொற்கள் கங்கை சடை என விகாரப்பட்டு வந்தன.

**மயிலிருந்த பாகத்தார் என்றதன் விவரம்:**—ஒருகாலத்து, கைலாயத்தில் சிவபெருமானும் உமாதேவியும் ஓராசனத்து வீற்றிருக்குங்கால் பிருங்கியென்னும் முனிவர், சிவபெருமானை மாத்திரம் வலஞ்செய்ய வெண்ணி ஓர் வண்டுருபமாய் ஆசனத்தைத் துளைத்துச் சிவபெருமானை மாத்திரம் வலஞ்செய்து செல்வதைக்கண்ட பார்வதிதேவி, பதியை நோக்கி முனிவர் என்னைப் பிரதக்ஷிணம் செய்யாமைக்குக் காரணம் யாதென்று வினவ, சிவபெருமான் இம்மை மறுமைப் பயன்களைப் பெற விரும்புகிற வர்கள் உன்னையும், முத்திபெற விரும்புகிறவர்கள் என்னையும் வணங்கு வர், என்று சொல்ல அது கேட்ட தேவி சிவபெருமானைப் பிரியாமலிருக் கும்படி தவஞ்செய்து வாமபாகத்தைப் பெற்றனள் என்பதாம்.

**சிவன் கங்கையணிந்த காரணம்:**—அஸ்வமேதயாகத்தின் பொருட்டு அனுப்பிய குதிரையைத் தேடிப் பாதாளலோகத்தில் சென்று கபிலர் சாபத்தால் எரிக்கப்பட்டு நற்கதியிழந்த தனது மூதாதைகளான அறு பதினாயிரம் சகர புத்திரர்களையும், ஈடேற்றும வண்ணம், பகீரதன் அருந்தவம் புரிந்து கங்காநதியைத் தேவலோகத்திலிருந்து கொண்டு வருகையில் அதிவேகமாகவருகின்ற கங்கையைப் பூமி தாங்கமுடியாதெனப் பகீரதன் சிவபெருமானைப் பிரார்த்தித்துவேண்ட, அவன் கேட்டபடி அப்பெருமான் அந்நதியைத் தன் முடியிலேற்றுச சிறிது சிறிதாகப் பூமி யின் கண் வரவிட்டனனென்பதாம.

---

## அவையடக்கம்.

[அதாவது, தாம் கூறும் பணிவான வசனங்களை வெளிப்படுத்திச் சபையோருக்கு அடங்கிக்கொள்ளுதல்; இனி, தாம் கூறும் விஷயத்தில் சபையோர் பிழைசொல்லாது, எளிய வசனங்களால் அவர் நாவை அடக் குதலுமாம். முன்னது அவைக்கு அடங்கும் அடக்கம் நான்காம் வேற்று மைப் பொருளது. பின்னது அவையை அடக்கல் இரண்டாம் வேற்றுமைப் பொருளது. அடக்கம் - தொழிற்பெயர்; அடங்கு-பகுதி, அம் - தொழிற் பெயர் விகுதி அடங்கு அடக்கு என வலித்தல் பெற்றது விகாரம் ]

4. வெந்தறுகண் வேழத்தை வேரிக் கமலத்தின்
தந்துவினாற் கட்டச் சமைவதொக்கும்—பைந்தொடையில்
தேன்பாடும் தார்நளன்றன் தெய்வத் திருக்கதையை
யான்பாட லுற்ற விது.

(இ-ள்) பைந்தொடையில் - பசுமையாகிய மலர்களில், தேன்பாடும்- வண்டுகள் இசை பாடுகின்ற, தார்நளன்தன் - மாலையையணிந்த நளமகாராசனது, தெய்வம் திருகதையை-தெய்வத்தன்மை பொருந்திய அழகிய சரித்திரத்தை; யான்பாடல் உற்ற இது-(அறியாதவனாகிய) நான்பாடத் தொடங்கியதாகிய இச்செய்கை; வெம்தறுகண் - கொடிய அஞ்சாமைத் தன்மையுடைய, வேழத்தை-யானையை, வேரிக்கமலத்தின் தந்துவினால்- வாசனை பொருந்திய தாமரைத் (தண்டினது) நூலினால், கட்ட-பிணிப்பதற்கு, சமைவது ஒக்கும்-முயல்வதை ஒத்திருக்கும்; (எ-று.)

எனவே இக்கதையைச்செய்ததற்கு அருமை கூறியவாறும். உவமையால் உபமேயத்திற்குப் பொருள்தந்துரைக்கப்பட்டது. சமைவது - தொழிற்பெயர். தந்துவினால்-தந்து + இன் + ஆல், தந்து வடமொழியாதலால் 'உயிர்வரின் உக்குறள்விட்டோடும்'' என்ற விதியை ஏற்காது இ, ஈ ஐ வழி யவ்வும், ஏனையுயிர்வழி வவ்வும், என்ற (நன்-உயிர்-12) பொது விதியை ஏற்று வகர உடம்படுமெய் பெற்றது. பசுமை + தொடை - பைந்தொடை ஈறுபோதல் என்ற சூத்திரவிதிப்படி, ஈற்றுமைகெட்டு அடி அகரம் ஐயாகி இனையவும் என்பதனால் சகரஉகரம் கெட்டு, இனவெழுத்து மிகுந்தது. தொடை - தொடுக்கப்படுவது தொடு-பகுதி, ஐ செயப்படு பொருள் விகுதி. தறுகண்-ஒருசொல், - அஞ்சாமை என்பதற்கு. நளன் தன்-தன்சாரியை, நளன் கதைக்குத் தெய்வத்தன்மையாவது கேட்போர்களைப் பரிசுத்தராக்குதலும், கலிபுருடன் சேராமலிருத்தலுமாம். இதனை "ஆதலால் இந்தப் புண்ணியன் சரிதம் ஆவுறக்கேட்டுளோர் தமக்கும், தீதறப்புகன்றோர் தமக்கு மெவ்வரமும் சித்தியாம் கலிதொடாதென்றே'' என்ற நல்லாப்பிள்ளை பாரதச் செய்யுளாலும் உணர்க. கமலம், தந்து வடசொல்; தெய்வம், கதை வடசொற்றிரிபு.

---

## சிறப்புப்பாயிரம்.

[அதாவது நூலுக்குச் சிறப்பாகத்தனியே புறத்துக் கூறப்பட்டிருப்பது. சிறப்புப்பாயிரத்து இலக்கணமாவது ''ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை, நூற்பெயர் யாப்பே நுதலியபொருளே, கேட்போர் பயனொடா யெண்பொருளும், வாய்ப்பக்காட்டல் பாயிரத்தியல்பே'' எனவும் ''காலங்களனே காரணமென்றிம் மூவகையேற்றி மொழிநருமுளரே'' எனவும் கூறியபடி, நூலைச் செய்தவனது பெயரும், நூல்வந்த வழியும், நூல்

வழங்கும் நிலத்தின் எல்லையும், நூலின் பெயரும், தொகுத்தல் முதலிய நூல் யாப்பும் கேட்கத்தகும் அதிகாரிகளும், நூலின் பயனும், நூல் செய்த காலமும், நூலரங்கேறிய இடமும், நூல் செய்ததற்குக் காரணமும் ஆகிய பதினொன்றும், விளங்கும்படியாக உணர்த்தலாம்.]

5. பாரார் நிடத பதிநளன்சீர் வெண்பாவால்
பேரார் புகழேந்தி பேசினான்—தாரார்
செழியனையும் சென்னியையும் சேரத் திறைகொள்
மொழியின் சுவையே முதிர்ந்து.

(இ-ள்) பேர்ஆர்-கீர்த்திவாய்ந்த, புகழேந்தி-புகழேந்திப் புலவர், தார் ஆர்-மாலையை அணிந்த, செழியனையும் - பாண்டியனையும், சென்னியையும் சோழனையும், சேர - ஒருங்குசேர, திறைகொள் - கப்பம்வாங்குகின்ற, மொழியின் சுவையே-(தமது) சொல்லின் இனிமையே, முதிர்ந்து-முதிர்ச்சிபெற, பார்ஆர் - பூமியிற்சிறந்த, நிடதபதி - நிடததேசத்து அரசனை, நளன்-நளமகாராசனது, சீர்-சிறப்புப்பொருந்திய சரித்திரத்தை, வெண்பாவால்-வெண்பாவென்னும் முதற்பாவால், பேசினான் - பாடினார்; (எ-று)

புகழேந்தி சுவைமுதிர நளன்சீர் வெண்பாவாற்பேசினான் என இயையும் புகழேந்தியார், தம் இனியசொற் சாதுரியத்தால் பாண்டியனையும், சோழனையும் தம் வசப்படுத்தி, அவர்களிடத்துப் பலவரிசைகளையும் பெற்று வாழ்ந்தனராதலின் செழியனையும் சென்னியையும் சேரத்திறைகொள் மொழியின் சுவையே என்றார். இதனால் சோழபாண்டியர்இருவரும் இப்புலவரிடத்துக்கொண்ட நன்கு மதிப்பு வெளியாம். பரிசுகள் திறைப்பொருளாகச் சொல்லப்பட்டன. தாரார் என்பதில், பாண்டியனுக்கு வேப்பமாலையையும் சோழனுக்கு ஆத்திமாலையையும் கொள்க. வெண்பாவிற் புகழேந்தி எனச்சிறப்பித்து ஓதப்படுவராதலால் இவர் மொழியின் சுவையே முதிர்ந்து பேசினார் எனப்பட்டது.

ஆர் வினைத்தொகை. சீர் - கதைக்குப்பண்பாகுபெயர், பேர் - பெயர் என்பதன் மரூஉ. புகழேந்தி-புகழையணிந்தவன் எனப் பொருள்படும், ஏந்து-பகுதி இ-; கருத்தாப்பொருள்விகுதி. மொழியின் சுவை ஆறும்வேற்றுமைத் தொகை, இன் சாரியை, மொழி + இன்சுவை எனக்கொண்டு மொழியினது இனிமையாகிய சுவையெனப் பண்புத்தொகையாக்குதலும் ஒன்று. முதிர-முதிர்ந்து எனத்திரிந்தது, இது எச்சத்திரிபு:—எச்சத்திரிபாவது ஒருவினையெச்சம் மற்றொரு வினையெச்சப்பொருளைத் தந்து நிற்றல். ஏகாரம் சிறப்பு, நிஷதபதி-வடசொல். நிடதம் என்னும் மலையின்பேர் அது இருக்கும் தேசத்தை உணர்த்தி நின்றது. நிடதமலை, மேருமலையின் தெற்கேயுள்ள நிடதம், ஏமகூடம், மந்தாரம் என்னும் மூவகை மலைகளுள் ஒன்று.

# சுயம்வரகாண்டம்.

---

தமயந்தியின் சுயம்வரமணத்தைக்கூறும் காண்டம் என்பது பொருள். காண்டம் நூலின்பெரும்பிரிவு, சுயம்வரம்-ஸ்வயம்வரம் என்ற வடசொல்லின் விகாரம்: சுயம்வரமாவது அரசர் பலர்கூடிய ஒருபெரியசபையினிடத்து ஓர் அரசகன்னிகை சென்று தான்விரும்பிய அரசனொருவனை நாயகனாக அடைதல். ஸ்வயம்-தான், வரம்-வரித்தல், இது சயமரம் என்றும் வழங்கும்.

---

## நூல்.

[நாடிழந்த தருமபுத்திரர் வனத்தில் வருந்தியிருந்தல்.]

1. பாண்டவரின் முன்தோன்றல் பார்முழுதும் தோற்றொருநாள்
ஆண்டகையே தூதுவனாய்ச் சென்றவனி—வேண்ட
மறுத்தா னிருந்தானை மண்ணொடும்போய் மாளப்
பொறுத்தா னிருந்தான் புலர்ந்து.

(இ-ள்) பார்முழுதும் - தன்னுடைய நாடுமுழுதையும், தோற்று (சூதாட்டத்தால்) தோற்றுவிட்டு, ஆண்தகையே-ஆண்மைக் குணமுடைய கண்ணபிரானே, தூதுவனாய்ச்சென்று-தூதனாகப்போய், அவனிவேண்ட-(குருநாடு) பூமியைவேண்டிக்கேட்க, மறுத்தான் - மறுத்தவனான துரியோதனன், இரும்தானை (யொடும்) - பெரியசேனையோடும், மண்ணொடும் போய்மாள -பூமியோடும்போய் இறக்கும்படி, பொறுத்தான் - பொறுத்தவனாகிய, பாண்டவரில்-பாண்டுபுத்திரர்களில், முன்தோன்றல் - முதற்புத்திரனாகிய (தருமபுத்திரன்), ஒருநாள் - ஒருதினத்தில், புலர்ந்து - முகம்வாடி, இருந்தான் - வனத்திலிருந்தான்; (எ-று.)

பொறுத்தவனாகிய தோன்றல் ஒருநாள் புலர்ந்து இருந்தான் என இயைக்க. இனி, முன்தோன்றல் மறுத்தான் இருந்தானை மண்ணொடும் போய்மாளப் பொறுத்தவனாகி ஒருநாள் புலர்ந்து இருந்தான் எனலுமாம் இப்பொருளில் பொறுத்தான் என்ற வினைமுற்று வினையெச்சமாகி நின்றது. தோன்றல்--தோன்றுதல் தொழிலாகுபெயராய் அரசனை உணர்த்திற்று. ஆண்தகை - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஒடு என்னும் மூன்றாம் வேற்றுமை உருபைத் தானை என்பதோடும் கூட்டுக. புலர்ந்து-செய்து என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். மாள-செயவெனெச்சம் காரியப்பொருளில் வந்தது. பாண்டவர்-பாண்டுபுத்திரர், பாண்டு - வெண்மை, தத்திதாந்தநாமம்-ஒருநாள்—ஒன்றாகியநாள் பண்புத்தொகை. புலர்ந்து-இதன்முன் 'முகம்' சொல்லெச்சம்.

[வருந்தி இருந்த தருமபுத்திரரை அரசர்கள் கண்டு அளவளாவுதல்.]

2. நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோர்
ஈட்டங்கள் சூழ இருந்தானைக்—காட்டில்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள் வேந்தர்
வருந்தகைய ரெல்லாரும் வந்து.

(இ-ள்) பேர் எழில்-மிக்க அழகுவாய்ந்த, தோள்வேந்தர் - புயத்தை யுடைய அரசர்களில், வரும் தகையர் எல்லாரும் - வந்துகாணுதற் குரிய தன்மையுடைய யாவரும், நாட்டின்கண்-நாட்டினிடத்து, வாழ்வை-சுகித் திருத்தலை, துறந்து - விட்டு, காட்டில் போய்- (காமிய) வனத்தில் போய், நான்மறையோர்-நான்கு வேதங்களையும் முற்று முணர்ந்த முனிவர்களது, ஈட்டங்கள்-கூட்டங்கள், சூழ-தன்னைச சூழ்ந்திருக்கும்படி, இருந்தானை - இருந்தவனாகிய, பெருந்தகையை-பெருமைக் குணத்தையுடைய தருமபுத்தி ரனை, வந்து—, கண்டார்கள்-கண்டு வினவினார்கள்; (எ று.)

நாட்டின்கண்-இன்சாரியை. வாழ்வு-ஆகுபெயராய் வாழ்க்கைக்குரிய பொருளை உணர்த்திற்று. துறத்தலாவது-பற்றற விடுதல், துற - பகுதி. நாட்டின்கண் வாழ்வைத் துறந்து காட்டில் போய்...—இருந்தானை எனக் கூட்டுக. மறை-சில ஜாதியார்க்கும், பெண்பாலர்க்கும் ஓதுவிக்கவும், ஓத வும் கூடாதென மறுக்கப் படுதலின் மறையெனப் பட்டது. இனி, இறைவ னுடைய குணம், செயல், பெருமை முதலியவற்றையும், ஆழ்ந்த கருத்துக் களையும், தன்னுள் மறைத்துக் கொண்டிருப்பதால் மறையெனினுமாம், இது வேதத்திற்குக் காரணக்குறி: மறு-பகுதி, ஐ-விகுதி. ஈட்டம் தொழிற் பெயர், ஈண்டு-பகுதி அம்-தொழிற் பெயர் விகுதி, ஈண்டு ஆகுபெயராய்க் கூட்டத்தாரை யுணர்த்தினது. மறையோர் ஈட்டம் ஆறும் வேற்றுமைத் தொகை. பெருந்தகை-பெருமை என்னும் பண்பினடியாகப் பிறந்த அன் மொழித் தொகை. இருந்தானை பெருந்தகையை-ஒரு பொருள் மேல் வந்த பெயரடுக்கு. வருந்தகையர்-வளருங் குணமுடையவர் எனவும் கூறலாம். தோளுக்கு எழிலாவது-திரண்டு வளர்ந்து வீரக்குணத்தோடு இலங்குதல்.

[வியாசமுனிவர் தருமபுத்திரரைச் சந்தித்தல்.]

3. கொற்றவேற் றானைக் குருநாடன் பாலணைந்தான்
எற்றுநீர் ஞாலத் திருணீங்க—முற்றும்
வழிமுறையே வந்த மறையெல்லாந் தந்தான்
மொழிமுறையே கோத்த முனி.

(இ-ள்) எற்றும்-மோதுகின்ற, நீர்-கடலாற் சூழப்பட்ட, ஞாலத்து. பூமியிலுள்ளாரது, இருள் நீங்க-அஞ்ஞான இருள் நீங்கும்படி, முற்றும்-

முழுமையும், வழி-குரு பரம்பரையில் முறையேவந்த-முறையாகவே உப தேசிக்கப் பட்டு வந்த, மறையெல்லாம்-வேதங்களை யெல்லாம், தந்தான்-சீடர்களுக்கு உபதேசித்த, மொழி - வேதப் பொருள்களை, முறையே கோத்த-முறையாகவே திருத்திக் கோவைப்படுத்திய, முனி-வியாசமுனிவன், கொற்றம்வேல் - வெற்றிபொருந்திய வேலாயுதத்தை யேந்திய, தானை-சேனைகளையுடைய, குருநாடன்பால்-குருநாட்டுக்கு அதிபதியான தருமபுத்திரனிடத்து, அணைந்தான்-வந்துசேர்ந்தான்; (எ-று)

எற்றுநீர்-வினைத்தொகை, அன்மொழித்தொகையாய்க் கடலையுணர்த்திற்று. ஞாலம்-இடவாகுபெயர்: அத்து-சாரியை. நீங்க-செய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். வேல் என்று கூறப்பட்டிருப்பினும், உபலக்ஷணத்தால் பிறபடைக் கருவிகளுக்குங் கொள்க. உபலக்ஷணமாவது "ஒருமொழியொழிதன் னினங்கொளற்குரித்தே" (நன்-பொது. சூ. 7.) வழி முறையே வருதலாவது-இறைவனருளாற் பிரமன் பெற்று, அவன் வசிட்டனுக்கும், அவன் பாராசரனுக்கும், அவன் தனக்கும் (வியாசனுக்கும்) உபதேசிக்கப் பெற்றது. மறு + ஐ + மறை; வேதத்திற்குக் காரணக்குறி.

உலகிற் காலகதியால், ஒன்றாகக் கலந்திருந்த வேதங்களைச் சிக்கறுத்து முறைப்படுத்தி, இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்ற நான்காகப் பகுத்தும், நூற்றைம் பத்தாறு அதிகரணங்களை யுட்கொண்ட 555 சூத்திரங்களையுடைய தென்று சொல்லப்படும் வேதாந்த சூத்திர மியற்றியும், புராணத்தைப் பதினெண் புராணங்களாக வகுத்தும், சூதமுனிவர் முதலாகிய பலமுனிவர்கட்குக் கற்பித்தும், விளங்கியவராதலின், வியாச முனிவர் மறை யெல்லாந் தந்தான் மொழிமுறையே கோத்தமுனி யெனப் பட்டார். மறையெல்லாந்தந்தான் என்பதற்கு பலவகையாகக்கிடந்த வேதங்களைச் சில்வாழ்நாட் பல்பிணிசிற்றறிவினராய மானிடர்க்கு இருககாதி நான்காக வகுத்துச் சுருக்கித் தந்தவர் எனக்கூறினும் பொருந்தும். குரு என்பவன் சந்திரவம்ஸத்துப் பேர்பெற்ற ஓர்அரசன். இவனால் அக்குலம் குரு குலம் என்றும், அந்நாடு குருநாடு குருக்ஷேத்திரம் என்றும், அழைக்கப்படும். இவன் குலத்திலுதித்த தருமபுத்திரர் குருநாடர் எனப்பட்டார். கொற்றம் - தொழிற்பெயர். கொல் - பகுதி, று சாரியை, அம்-விகுதி, லகரம் றகரமானது சந்தி. தானை, குரு-வடசொல், முனி-வடசொற் றிரிபு. (கடவுளை யெப்பொழுதும்) தியானஞ் செய்பவன் அல்லது திரிகால ஞான முடையவன் என்பது அதன் பொருள்.

[தருமர், வியாசர் வருகையால் மகிழ்ந்துபசரித்தல்.]

4. மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப்பெற்றேன்
பிறவிப் பெருந்துயர மெல்லாம்— அறவே
பிழைத்தேன்யா னென்றுனைப் பேராழி யானை
அழைத்தேவல் கொண்ட அரசு.

"திகிரி வட்டக் குடைச் செங்கோ லபயன் செழுஞ்சிலம்பிற்
பகுதி யொட்டக்கூத்த பட்டனை நாணப் பணைக்கவியின்
மிகுதி யொட்டத் தட்டி விட்டகை யோட்டி லுருக்கிக்குத்திப்
புகுத வொட்டத் தட்டி மேலனுகா வண்ணம் போர் செய்வனே"

என்று கூறினான். இவ்வளவிற்குள் வாயற்று மௌனமான கூத்தர், கடைசியாக வந்த வேளாளனை நோக்கி நீயும் வித்வானே? பாடல் செய்வாயா என்று கேட்க, அவன்

"கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவாதொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவியொட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர் களோதமிழ் பாடிய பாவலரே"

என்று பாடியவுடன் கூத்தரைக் கண்டித்து, 'ஓ கூத்தா! உன் குற்றத்தை நீ உணராமல் கர்வித்திருக்கின்றாயே? நீ பாடிய அண்டத்துப் பரணியில் இவ்வண்டத்தையே நகரமாகவும், சக்கரவாளகிரியையே கோட்டையாகவும், அதற்குட்புறத்துள்ள கடல்களையே அகழாகவும், பூமியின் நடுவிலுள்ள மகாமேருவையே கோட்டைக்கொடிஸ்தம்பமாகவும் உருவகப்படுத்தி வருணித்திருக்கிறாயே! மதிலின் புறத்திலன்றோ அகழ் இருக்கவேண்டும்? அகத்தில் இருப்பதாகக் கூறியது குற்றமல்லவா? பெரும்புறக் கடலை அகழெனக்கூற மறந்தாய்போலும், கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பரும் தாம் பாடியருளிய இராமாயணத்தில் அயோத்திநகர் வருணனையில்

"நேமி மால்வரை மதிலாக நீள்புறப்
பாம மாகடல் கிடங்காகப் பன்மணி
வாம மாளிகை மலையாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போலுமே"

என்ற செய்யுளைப் பார்த்ததும், கேட்டதும் இல்லையா? என்று இகழ்ந்து பேசக் கூத்தர் அகங்காரம் தணிந்து வாயடங்கியொடுங்கி, இனிப் புலவர்களைச் சிறைப்படுத்தி வைப்பதிற் பயனில்லை; இவர்களை எல்லாம் ஏவிவிட்டு இராசசபையில் என்னை இவ்வாறு அவமானம்பண்ணுவித்த புகழேந்தியை இன்னும் சிறையில் வைத்தாட்டுவேனென்று சொல்லிக் காவலிலிருந்த புலவர்கள் யாவரையும் விடுவித்துப் புகழேந்தியை மாத்திரம் அருஞ்சிறையில் வைத்திருந்தார். அரசன் தனது ஆசிரியப்புலவர் கருதியது தீங்காயினும், அதற்கும் மாறாய் நடவாது புலவர் இட்டது சட்டமென்றிருக்க இசைந்திருக்கிறான் என்பதில்

அதிருப்தி யடைந்த பட்டத்தரசி; ஒருநாள் தன் சயனக்கிரகத்துக்குக் குலோத்துங்கன் வருவதுணர்ந்து அவனை உட்புகவிடாமல் த்தவிற்குத் தாழிட்டாள். இதனையறிந்து ஊடலைத் தீர்த்தற்கேற்றவர் தன் புலவர் கூத்தரேயாமெனஇராசன் கூத்தரை அழைக்க அவர் தேவியின் வாசலில் வந்து நின்று

"நானே யினியுன்னை வேண்டுவதென்கொல் நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடுவாய் திறவாவிடிலோ
வானே றனைய இரவிகுலாதிபன் வாசல் வந்தால்
தானே திறக்கும் நின் கைத்தலமாகிய தாமரையே"

என்றுபாட, அவள் 'ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத்தாழ்' என்று இருதாழிட்டுக் கதவை முன்னிலும் உறுதியாகப் பூட்டிக் கொண்டாள். புகழேந்தியாரைச் சிறையில் வைத்திருப்பதே இராணியின் கோபத்திற்குக் காரணம் எனத் தெரிந்த இராசன், இராணியின் அபிமானப் புலவராகிய புகழேந்தியாரின் தன் எண்ணம் பூர்த்தியாகும் எனக்கண்டு, புகழேந்தியைச் சிறைக்கூடத்தினின்றும் விடுதலை புரிந்து அவரை அழைப்பிக்கப் புகழேந்தி வந்து,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடையேந்தியபொற்
குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகைம் மானாபரணன் நின்வாசல் வந்தால்
பிழையொன் றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே"

என்று பாடவும், சுவைக்கண்டு இரங்கும் தாய்போல அரசி தனது பிதாவின் சமஸ்தான வித்துவான்மேல் கொண்ட பிரியத்தாற் கதவைத் திறந்துவிட்டாள். புகழேந்திப் புலவர் தம் பெருமையை யுள்ளவாறுணர்ந்த குலோத்துங்கனால் சிறைநீட்கப்பட்டு அவ்வரசனால், கூத்தரைப் பார்க்கிலும் விசேஷ அன்புடன் நடத்தப்பட்டாரெனினும் ஒட்டக்கூத்தர், தம்மிடம் பொறாமைகொண்டிருத்தலையும், அவர் வழியே அரசன் செல்வதையும் கண்டு வெறுப்புற்று, இவர் அந்நாட்டின் முரணைநகர்ச் சந்திரன் சுவர்க்கி யென்னும் சிற்றரசனிடம் சென்று, அவன் வேண்டுகோட்கிணங்கி நளவெண்பா வென்னும் இந்நூலை இயற்றி அவனால் நன்கு மதிக்கப்பெற்று வாழ்ந்து வந்தனர். இவற்றை யெல்லாம் கேள்விபுற்ற சோழன் மீண்டும் புகழேந்தியாரைத் தன் சமுகத்தில் வரவழைத்துச் சிறப்புடன் உபசரித்துத் தனது சபையில், நளன் கதையைப் பிரசங்கிக்குமாறு வேண்டிக்கொள்ள அவர் அதற்குடன்பட்டு அவையின்கண் பிரசங்கித்து வருகையில்

*"மல்லிகையே வெண்சங்கா வண்டூதே வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது."

என்ற பாடலைச் சொல்லும் பொழுது, ஒட்டக்கூத்தர் மல்லிகை அரும்பைச் சங்காகவும், வண்டைச் சங்கநாதஞ் செய்பவனாகவும் கற்பித்தது அழகே: ஆனால் சங்க வாத்தியஞ் செய்பவர் அதனடியை யல்லவோ வாயில்வைத்து ஊதுவார்கள்? அவ்விதம் மலர்களினடிப் புறத்து வண்டுகள் ஊதுகின்றனவல்லவே? மேற்பக்கத்திலன்றோ மொய்த்து, ஆரவாரிக்கின்றன, ஆதலால் இவ்வருணனை குற்றமென்று மறுத்துரைத்தார். அதற்குப்புகழேந்தியார், குடியனுக்கு வாயென்றும் மற்றதென்றும் தெரியுமா, என்று இவ்விதம் விடையிறுத்து ஒட்டக்கூத்தர் நிகழ்த்தும் ஆக்ஷேபணைகளுக் கெல்லாம், உடனுக்கு உடன் சாதுரியமாகத் தக்க சமாதானம் கூறி அவர் தம் வாயை அடக்கி வந்தனர். கம்பர் முதலிய புலவர்களும் புகழேந்தியின் கவித்திறத்தை யும் புத்தி சாதுர்யத்தையும் வியந்து கொண்டாடினார்கள். ஒட்டக்கூத்தர், பகை கருதிப் புறத்தில் அவமதித்தும் அகத்தில் அவர் கவித்திறத்தை வியந்தும் இருந்தார். ஒருநாள் கூத்தர் தம் மனைவியுடன் புகழேந்தி யின் கவியினினிமையைப் பாராட்டிக்கொண் டிருக்குங்கால் அவரைக் கொல்லக் கருதிக் கல்லுடன் மறைந்து நின்ற புகழேந்தி அதுகேட்டு அவரிடத்திருந்த பகைமைக்குணம் நீங்கி, அவர் முன்சென்று அளவளாவிச் சினேகங்கொள்ள, அவரும் மனமொத்து நட்புப்பூண்டனர்.

இவற்றைக் கேட்டுச் சந்தோஷித்த சோழன், ஒருநாள் இவர் களைத் திருநெய்த்தானம் என்னும் தலத்திற்கு அழைத்துச்சென்று அத்தலத்துச் சிவபெருமான்மீது 'நெய்த்தானத்தானைச் சேவித்தே' என்பதை மகுடமாகவைத்துச் சந்தவிருத்தமாக ஒரு கவி பாடுமாறு சொல்ல, ஒட்டக்கூத்தரும், புகழேந்தியும்.

* "மல்லிகையே வெண்சங்கா வண்டூதே" என்னும் அடியின் கற்பனை "எல்லியம் போதிருஞ் சிறைவண்டெம் பெருமான்குணம்பாடி, மல்லிகை வெண்சங்கூது மதிளரங்க மென்பதுவே" எனப் பெரியாழ்வார் திருமொழி யிலும், (திருமொழி-8. 8) "மல்லிகைப்போதின் வெண்சங்கம் வண்டூத" எனத் திருவாதவூரடிகள் திருச்சிற்றம்பலக் கோவையிலும் வருதல் காண்க.

கொடுத்துத்திரும்பி, தாள் இரண்டும் நோவ-தங்களடிகளிரண்டும் நோவும் படி, தனித்தனியே-வேறு வேறாக, ஓடியநாள்-(நிலைகுலைந்து) ஓடிய காலத்தில், தோள் இரண்டும் அன்றே- (அவனுடைய) இரண்டு தோள்களும் அல்லவா, துணை-(அவனுக்கு)உதவியாய் நின்றபொருள்கள்; (எ-று.)

ஆதலால், இத்துணைவலிமைவாய்ந்த அர்ச்சுனனைக் குறித்து நீ எக்கவலையும் கொள்ளவேண்டாம் என்றவாறும்.

காண்டவன் வனம்-காண்டாவனம் என விகாரமாயிற்று. காண்டாவனம் காண்டவன் என்னும் அரக்கன் வசித்திருந்த இடம். தீ-ஓரெழுத்தொருமொழி, தீக்கடவுள்-பண்புத்தொகை, தீக்குக் கடவுள், தீயினது கடன் என வேற்றுமைத்தொகைப் படுத்தினுமாம். உண்ண என்பது உண என நின்றது இடைக்குறை. உண, நோவ, என்னும் செயவெனெச்சங்கள் காரியப் பொருளாதலால் எதிர்காலங் குறித்து நின்றன. கைக்கணை, இதில் கை என்பதை, கைக்குடை, கையரிவாள் என்பவற்றிற்போலச் சிறுமையை உணர்த்துவதாகக் கொண்டு, சிறு கணை யெனப் பொருள்கூறினும் பொருந்தும். இப்பொருளால், யாவராலும் வெல்லுதற்கரிய தேவர்களையும் சிறிய கணையாலே வென்றானென அருச்சுனனுடைய பேராற்றல் வெளிப்படும். தனித்தனி ஓடுதலாவது - ஒருவர் சென்றவழியொருவர் செல்லாது நிலைகுலைந்து பிரிந்தோடுதல். அமரர்-தேவாமிர்தபானத்தால் மரணமில்லாதவர்கள் ஓகாரம் - வினாவோடு எதிர்மறை. முகில் + தடுத்து 'னலமுன் றனவும்' என்ற சூத்திரவிதியால் நிலைமொழியீற்றுலகரத்தின் முன் தகரம்-றகரமாயும், "குறில் செறியாலள அல் வழி வந்த தகரந்திரிந்தபிற்கேடும்" என்ற மிகையால், வேற்றுமையிலும், தனிக்குறிலைசேராத நிலைமொழியீற்று லகரம் கெட்டு, வந்தது.

காண்டாவனத்தைத் தீயுண்ணக்கொடுத்த கதை:—கண்ணபிரானும் அர்ச்சுனனும் ஓரிடத்துத் தனித்திருக்குங்கால், யாகத்தின்கணிட்ட நெய்யை மிகுதியாகவுண்டதினா லுண்டாய குன்மவியாதியால் வருந்திய அக்கினிதேவன் அந்தணனுருக்கொண்டுவந்து, எனக்கு உணவிடுக என்றிரந்து நிற்க, அவர்கள் தருகிறோம் எனலும், "யான் அக்கினிதேவன் இந்திரன் வனமாகிய காண்டாவனத்தையே எனக்கு உணவாக அளித்தாற்றான் அங்கிருக்கும் மூலிகைகளால் என்நோய் நீங்கப்பெறும்" எனக்கேட்டனன். அதுகேட்ட கண்ணபிரானுடைய கட்டளையால், அக்கினி கொடுத்த அம்புப் புட்டியையும் வில்லையும், தேரையும், வெள்ளைக் குதிரையையும், அநுமக்கொடியையும் பெற்றுக்கொண்ட அர்ச்சுனன் கண்ணனோடு சென்று அவ்வனத்தை எரிக்கையில், தேவேந்திரன் சப்தமேகங்களையும் ஏவி வருஷித்து அக்கினியை அவிக்குமளவில், அருச்சுனன் சரக்கூடம் அமைத்து மேகங்களைத் தடுத்தனன். பின்பு தன்னுடன் பொருதற்குவந்த இந்திரன் முதலிய தேவர்களைத் தனித்தனியே புறங்கொடுத்

தோடும்படி அவருடன் போர் செய்து வனமுழுவதையும் அர்ச்சுனன் அக்கினிக்கு இரையாக்கினன் என்பதாம்.

[தருமன் முனிவரிடம் தான் நாடிழந்து காடுபுகக் காரணம் என்னெனல்.]

8. பேரரசு மெங்கள் பெருந்திருவுங் கைவிட்டுச்
சேர்வரிய வெங்கானஞ் சேர்தற்குக்—காரணந்தான்
யாதோவப் பாவென்று னென்றுந்தன் வெண்குடைக்கீழ்த்
தீதோவப் பார்காத்த சேய்.

(இ ள்) என்றும்-எக்காலத்தும், தன்வெண்குடைக்கீழ்-தனது வெண் கொற்றக் குடைநிழற்கீழ், தீது-தீமையான காரியங்கள், ஓவ ஒழியும்படியாக, பார்காத்த-பூமியிலுள்ளவரைப் பாதுகாத்த, சேய்-முருகக் கடவுளை யொத்த தருமபுத்திரன், அப்பா-அப்பனே! எங்கள்-எங்களுடைய, பேர் அரசும்-பெருமைதங்கிய ஆளுந்தன்மையையும், பெரும் திருவும்-பெரிய செல்வத்தையும், கைவிட்டு-இழந்துவிட்டு, சேர்வு அரிய-எவரும் செல்லுதற்கருமையான, வெம்கானம் - கொடியகாட்டை, சேர்தற்கு - யாங்கள் வந்து அடைந்ததற்கு, காரணம் யாதோ என்றான்-காரணம் எதுவோ என்று வினவினன்; (எ-று.)

தருமன் தனது ஆளுகையில் தன்மனதறிந்த தீங்கு ஒன்றுஞ் செய்திலனாதலின் இங்ஙனம் யாங்கள் அரசாட்சியையும் செல்வத்தையும் இழந்து, இந்தக் கொடிய காட்டில்வந்து வசிப்பதற்குரிய காரணம் என்னவென்று முனிவரிடத்து வினவினனென்க.

தீது-தீமை என்னும் பண்படியினின்று பிறந்த ஆகுபெயர். வெண் குடைக்கீழ்த் தீதோவப்பார்காத்தலாவது - ஏகசக்ராதி பத்யத்தால் உலகத்துமன்பதைகளுக்கு, தன்னாலும், தனது பரிசனத்தாலும், பகைவராலும், சோரராலும், மிருகாதிகளாலும், ஏற்படும் ஐவகைத் துன்பங்களும் உண்டாகாது அறநெறியோடு கோலோச்சுதல். சேய்-இளமை, ஈண்டு முருகக்கடவுளைக் குறித்தது. பலபராக்கிரமங்களிலும், அழகிய வடிவிலும், எளிதிற் பகையழித்தலிலும் தருமனுக்கு முருகக்கடவுள் உவமை.

ஓவ - காரியப் பொருட்டாகிய செயவெனெச்சம், ஓ-பகுதி-வ் சந்தி; அ-எதிர்கால வினையெச்ச விகுதி, பெருமை + அரசு-பேரரசு, பெருமையின், மைவிகுதி கெட்டு, வருமொழிமுதலுயிர்வர, பகுதியீற்று உகரம் கெட்டு, முதல் நீண்டது. அரசு-ஆகுபெயராய் ஆளுகையை உணர்த்தி நின்றது. ஐஸ்வரியங்கள் லட்சுமிகடாட்சத்தால் உண்டாகப் பெறுவனவாதலால், செல்வத்தைத் திரு எனறார். சேர்வு தொழிற்பெயர், சேர்-பகுதி, வு - விகுதி. காட்டிலகப்படும் ஆகாராதி கிடையாமைபற்றியும் துஷ்டஜெந்துக்கள் உளவாந்தன்மைபற்றியும் வெங்கானமென்றார். யாதோ-ஓகா-

ரம் வினுவோடு இரக்கப்பொருளது. உம்மைகளிரண்டும், உயர்வு சிறப் போடு எண்ணுப்பொருளன. வியாசமுனிவரை அப்பா என்றது உபசாரம்.

[வியாசர் தருமபுத்திரனுக்கு விடைகூறித் தேற்றல்.]

9. கேடில் விழுச்செல்வங் கேடெய்து சூதாடல்
ஏடவிழ்தார் மன்னர்க் கியல்பேகாண்—வாடிக்
கலங்கலைநீ என்றுரைத்தான் காமருவு நாடற்
கிலங்கலை நூன் மார்ப னெடுத்து

(இ-ள்.) இலங்கு-விளங்குகின்ற, அலை-அசைகின்ற, நூல்மார்பன்-பூணுநூலைத்தரித்த மார்பையுடையவனுன வியாசன், காமருவு - சோலைகள் சூழப்பெற்றுள்ள, நாடற்கு - குருநாட்டையுடைய தரும புத்திரனுக்கு, கேடுஇல்-அழிவில்லாத, விழுச்செல்வம்-பெரியசெல்வம், கேடு எய்து - அழிதலை அடைதற்கு ஏதுவாகிய, சூது ஆடல்-சூதாட்டத்தைச் செய்தல், ஏடு அவிழ்-பூவிதல்கள் விரியப்பெற்ற, தார்-மாலையையணிந்த, மன்னர்க்கு-அரசர்களுக்கு, இயல்பே-தகுதியானதே, (ஆதலால்) நீ,- வாடி-வருந்தி, கலங்கலை-மனக்கலக்க மடையாதே, என்று எடுத்து உரைத்தான்-என்று சொல்லித் தருமபுத்திரனைத் தேற்றினுன்; (எ-று.)

சூதாடுதற்கிசைந்ததே, தான் பெருஞ்செல்வம் இழந்து, காட்டினிடம் சென்றதற்கு ஏதுவாமென மனதிடைவைத்துக் கவன்ற தருமபுத்திரனை நோக்கி, வியாசர் சூதாடுதல் அரசர்க்குரிய ஆடல்களுள் ஒன்றே யாமெனக்கூறிக் கவற்சியை ஒழிக என்றனர் என்பதாம்.

இலங்குநூல்; அலைநூல் என்க. இலங்கு, அலை, வினைத்தொகை: நூன் மார்பன் - ஆரும் வேற்றுமைத் தொகை. 'லளவேற்றுமையிற் றடவும்' என்ற சூத்திரத்து மெலிமேவினணவும் என்ற விதியால் நிலைமொழியீற்று லகரம், வருமொழி முதலில் மகரம்வர, னகரமாகத் திரிந்தது; இலங்கலை நூன்மார்பன் என்பதற்கு, விளங்குகின்ற கடல்போன்ற சாஸ்திரப்பயிற்சி பொருந்திய மனதையுடையவன் எனினும் பொருந்தும். கேடு + இல்-குற்றியலுகரம் உயிர்வரக் கெட்டது; இல்-இன்மையென்னும் பண்பினடியாகப்பிறந்த ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் இதில் பகுதியே எதிர் மறையை உணர்த்தும். விழுச்செல்வம் பண்புத்தொகை. விழுமம் - பகுதி. கேடு முதனிலைதிரிந்ததொழிற்பெயர்; கெடு - பகுதி. கேடில் விழுச்செல்வம் ஒருவற்குக் கல்வியேயாதலால், விழுச்செல்வம் என்பதற்குக் கல்வி எனப்பொருள்கொண்டு, கல்வியறிவு கெடுதற்கு ஏதுவாகிய எனச் சூதாட்டத்தின் இயற்கையைக் கூறியதாகக் கொண்டுரைப்பினும் பொருந்தும். அவிழ்தார் வினைத்தொகை. காண்-முன்னிலைஅசை. கலங்கலை-முன்னிலை ஏவலொருமை எதிர்மறைவினைமுற்று, கா-சோலை, ஓரெழுத்தொருமொழி. எடுத்துரைத்தலாவது-காரண காரியங்களோடு கவற்சியொழிய விரித்துச் சொல்லுதல். எடுத்து என்பது உரைத்தான் என்பதை விசேடித்தது.

[தருமபுத்திரன் முனிவரிடம் "என்போல் சூதாடி நாடிழந்து வருந்தியவருளரோ" என்று வினவுதல்.]

10. கண்ணிழந்து மாயக் கவறாடிக் காவலர்தாம்
மண்ணிழந்து போந்து வனநண்ணி—விண்ணிழந்த
மின்போலு நூன்மார்ப மேதினியில் வேறுண்டோ
என்போ லுழந்தா ரிடர்.

(இ-ள்.) விண் இழந்த-ஆகாயத்தினின்று நீங்கிவந்த, மின்போலும்-மின்னலைப்போற் பிரகாசிக்கின்ற, நூல்மார்ப - பூணூலைத் தரித்துள்ள மார்பையுடையவனே, கண் இழந்து-அறிவுகெட்டு, மாயக் கவறு ஆடி-வஞ்சகம்பொருந்திய சூதாட்டம் ஆடி, மண்இழந்து - நாட்டை இழந்து, வனம் போந்து நண்ணி-காட்டில்போய் வசித்து, என்போல்-என்னைப் போல், இடர் உழந்தார்-துன்பத்தினால் வருத்தமுற்றவரான, காவலர் - அரசர்கள், வேறு உண்டோ-வேறு இருக்கின்றார்களோ? (எ-று)

மின்போன்றிலங்குகின்ற பூணூலை அணிந்த மார்பையுடையவனே! அறிவுகெட்டு, சூதாடி நாடிழந்து காடுசேர்ந்து என்னைப்போல வருந்திய அரசர்கள், வேறு எவர்களாயினு முளரோ? கூறியருள்வாயாக என்பதாம்.

விண்-ஆகுபெயராய் மேகத்தை உணர்த்திற்று. மேதினி-திருமாலாற் கொல்லப்பட்ட மது கைடவர் என்னும் அரசர்களுடைய மேதஸ் (நிணம்) படிந்ததால்; பூமிக்குக்காரணப் பெயர். வேறு - இருதிணையைம்பால் மூவிடங்கட்கும் பொதுவான குறிப்பு வினைப்பெயர், "வேறில்லையுண்டைம் பான் மூவிடத்தன" (வினை-சூ-20.) கண்ணிழந்து என்பதில் கண் என்பதை முதனிலைத் தொழிற்பெயராகக் கொண்டு பின்வருதலைச் சிந்தித்தல் எனவும் பொருள் கூறலாம். அறம் பொருளின்பங்கட்கு இடையீடாய்க் கருமங்கள் பலவற்றையும் சிதைத்தல்பற்றி மாயக்கவறென்றார். கவறு-சூதாடு கருவி. காவல்+அர் - காத்தலையுடையவர், கா+வலர், எனக் கொண்டு காத்தலில் வல்லவர் எனக்கூறலுமாம், தாம்-அசை. போந்து-இறந்த காலவினையெச்சம், புகுந்து என்பதின் விகாரம் என்பாருமுளர்.

[சூதாட்டத்தால் நாடிழந்த நளன்கதையை வியாசர் சொல்லத் தொடங்குதல்]

11. சேமவேன் மன்னனுக்குச் செப்புவான் செந்தனிக்கோல்
நாமவேற் காளை நளனென்பான்—யாமத்
தொலியாழி வைய மொருங்கிழப்பப் பண்டு
கலியால் விளைந்த கதை.

(இ-ள்.) தனிசெம்கோல்-ஒப்பற்ற செங்கோலையும், நாமம்-அச்சந் தரத்தக்க, வேல்காளை - வேலாயுதத்தையுமுடைய காளைபோன்றவனான

நளன் என்பான் - நளனென்று சிறப்பித்துச் சொல்லப்படும் அரசன், பண்டு-முற்காலத்தில், யாமத்து நடுஇரவில், ஒலி-ஒலிக்கின்ற, ஆழிவையம் கடலாற்சூழப்பட்ட பூமியை, ஒருங்கு இழப்ப-ஒருமிக்க இழக்கும்படி, கலியால்-கலிபுருஷனால், விளைந்தகதை - உண்டாகிய கதையை, சேமம் -(உலகத்துயிர்களுக்கு,) காவலாகவுள்ள, வேல் - வேலாயுதத்தையுடைய மன்னனுக்கு-தர்ம புத்திரனுக்கு, செப்புவான் - (வியாசமுனி) சொல்லுவான்; (எ-று.)

பகைவர் கள்வர் முதலியோரால் குடிகளுக்குண்டாகுந் துன்பம்வாராது காத்தல் வேலாயுதங் கொண்டாதலால் சேமவேல் மன்னனென்றார். வேல்-இலைவடிவமான ஆயுதம்; உபலக்ஷணத்தால் வேறு ஆயுதங்களையுங் குறித்துநின்றது. நாமம் என்பதில் அம்சாரியை. நாம் அச்சமென்பது "பேநாமுருமெனவரூஉங்கிளவி, யாமுறைமூன்று மச்சப்பொருள" என்பதினாலறிக. பகைவருக்குச்செருக்கு விளையுந்தோறும் அச்சஞ்செய்து, அதனை ஒழித்தலின் நாமவேல் என்றார். செப்புவான்-ஆண்டாற் படர்க்கை எதிர்காலவினைமுற்று, செப்பு-திசைச்சொல். தனிச்செங்கோல் பொது நீக்கி உலகமாளுங் கோலெனினுமாம். காளை-நளனுக்கு உவமை; தோற்றமும் கம்பீரமும்பற்றி, ஆகுபெயர். வேல் + காளை. 'லளவேற்றுமையிற்றடவும்' என்றவிதிப்படி வருமொழி முதலில் வல்லினம் வர நிலைமொழியீற்று லகரம் றகரமாயிற்று. ஒலி-வினைத்தொகை. ஆழி ஆழமுடையது என்னும் காரணப் பெயர். இ-கருத்தாப்பொருள்விகுதி. என்பான் - செயப்பாட்டு வினை வினையாலணையும்பெயர். ஒருங்கிழத்தலாவது - சிறிதுமின்றியிழத்தல். பண்டு-காலங்குறிக்கும் இடைச்சொல். இழப்ப-செயவெனெச்சம்; காரியப்பொருளில்வந்தது. சகுனியால் சூதாடி, நாடிழந்த தருமனுக்குக் கலியால்நாடிழந்த நளன்கதை கூறியவாறும். * நளன் மக்களுட் சிறந்தோனாதலால் இவன் கதையையே வியாசர் கூறத்தொடங்கினார். அடுத்த கவி முதல் நளனது கதையைக் கூறத்தொடங்கி, அவனது நாடுநகரவளப்பங்கள் சொல்லப்படுகின்றன.

[நிடதநாட்டுச்சிறப்பு]

12 காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் றளையவிழப்—பூமடந்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.

---

* நகரந்துறந்து காதலியுடன் வருந்திய கோவலனுக்குத் தேறுதல் கூறிய கௌந்தியடிகளும் இந்நளன் கதையையே கூறியதாகச் சிலப்பதிகாரம் மதுரைக்காண்டம் ஊர்காண்காதையில் "வல்லாடாயத்து மண்ணரசிழந்து, மெல்லியறன்னுடன் வெங்கானடைந்தோன்" என்பதுமுதல் அத்தொடக்கத்தனவாகிய ஆறடிகளாற் கூறியிருத்தலுங் காண்க.

(இ-ள்.) சாகரஞ்சூழ் சமுத்திரம் சூழ்ந்த, நல் நாட்டில்-நன்மையாகிய பூமியில், முன்னாட்டு-முதன்மையாக எடுத்துக்கூறத்தக்க, நாடு நிடத நாடானது, காமர்-அழகிய. கயல்புரள-சேல்மீன்கள் புரளுதலாலும், காவி முகை - நீலோற்பலமொட்டுக்கள், நெகிழ-மலர்தலாலும், தாமரையின் - தாமரைப்பூவினது, செம்தேன்தளை-நல்லதேனோடு கூடிய கட்டானது, அவிழ-விரிதலினாலும், பூமடந்தைதன் - செந்தாமரைமலரில் எழுந்தருளியுள்ள லட்சுமி தேவியினது, நாட்டம்-கண்ணை, போலும்-ஒத்திருக்கும், தகைமைத்து-குணம் பொருந்தியது; (எ-று.)

தாமரைமலர், கயல்மீன், கருங்குவளை இவைகள், முறையே அழகாலும், பிறழ்ச்சியாலும், உருவத்தாலுங் கருமை நிறத்தாலும் கண்போல விளங்குவனவாதலால் நீர்வளப்பத்தால் இவற்றை மிகுதியாகவுடைய நிடத நாடு, திருமகளது நாட்டம்போல்வதாயிற்று. கண்ணிற் சிறந்த வுறுப்பில்லையாதலால் நாட்டம்போலுமென்றார். இதனால் நிலவளமும் அதற்கேதுவாகிய நீர்வளமுங்கூறியவாறும். காமர் உரிச்சொல். புரள, நெகிழ, அவிழ, காரணப்பொருளில்வந்த செயவெனெச்சங்கள். காவி-நீலநிறம். குணவாகுபெயர். முகை தொழிலாகுபெயர். தாமரையின்-இன்சாரியை. செம்மை + தேன்-மைவிகுதிகெட்டு, மகரம் நகரமாயிற்று. 'பூவெனப்படுவது பொறிவாழ்பூவே, பூவிற் கருங்கலம்பொங்குதாமரை' என்பனவாதலால், பூமடந்தை என்பதில் பூ என்பது தலைமைபற்றித் தாமரைமலருக்காயிற்று. இனி பூ என்னும் பலபொருள் குறிக்கும் ஒருசொல் பூமியை உணர்த்தியதாகக்கொண்டு, பூமடந்தை பூமிதேவியெனினுமாம், மடந்தை என்றபெயர் இங்கே பருவப்பெயராகாமல் பெண் என்றமாத்திரமாய் நின்றது. இப்பருவத்துக்கு வயதெல்லை பதின்மூன்றாண்டுமுதல் பத்தொன்பதாண்டுவரை, தன்-சாரியை நாட்டம் தொழிலடியாகப்பிறந்தபெயர். நாடு-பகுதி, அம்கருவிப்பொருள்விகுதி. நாடு என்னும் பகுதி, நெடிற்றொடர்க்குற்றியலுகரமாதலால் "நெடிலோடுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள் டறவொற்றிரட்டும்" என்ற விதிப்படி, டகரம் இரட்டித்து "உயிர்வரினுக்குறண்மெய்விட்டோடும்" என்றவிதிப்படி உகரம்கெட்டுமுடிந்தது. போலும்-உவம உருபிடைச்சொல். தகைமைத்து பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்பு வினைமுற்று. ஏ - அசை. நல் + நாடு - ஐவேற்றுமையிற் றடவும் என்ற சூத்திரத்தில், "மெலிமேவினணவும்" என்ற விதிப்படி வருமொழி முதலில் மெல்லெழுத்து வர நிலைமொழியீற்று லகரம் னகரமாகி மேல் "னலமுன்றனவும் ணளமுன்டணவும் ஆகுந்தநக்களாயுங்காலே" என்ற விதிப்படி னகரத்தின்முன் நகரம் னகரமாயிற்று. சூழ்-வினைத்தொகை.

கடலைச் சாகரமென்றதன் வரலாறு:—சூரிய குலத்துச் சகரமகாராஜன் அஸ்வமேதயாகஞ் செய்தபொழுது பூமி பிரதக்ஷிணம் செய்து வர அனுப்பிய குதிரையைப் பொறாமைகொண்ட தேவேந்திரன் மாயையால்

ஒளித்துக் கொண்டு சென்று, பாதாள லோகத்தில் தவஞ் செய்து கொண்டிருந்த கபிலமுனிவர் பின்னே கட்டிவைக்க, அவ்வேள்விக் குதிரையை நாடிச்சென்ற சகரபுத்திரர் அறுபதினாயிரவரும்; பூமிமுழுதும் தேடிக்காணாமல் பாதாளலோகத்திற்குப் போகும் பொருட்டுப் பரதகண்டத்தின் கீழ்பாகத்தில் தோண்டிசசென்ற பெரும் பள்ளம், பின் பகீரதன் கொண்டு வந்த கங்கை முதலிய நதிகளின் நீரால் நிறைந்து சாகரம் என்னும் பெயர் பெற்றுக் கடலோடு கூடித் தானும் கடலின் பாற்பட்டது. [சகரரால் தோண்டப் பட்டது சாகரம், தத்திதாந்தநாமம். "நூறுயோசனை யகலமுமாழமும் நுடங்கக், கூறுசெய்தன ரென்பதால்" "சகரர் தொட்டலாற் சாகரமெனப்பெயர் சமைப்ப, மகரவாரிதி சிறந்தது" என்பன கம்பராமாயணம்.]

[இது முதல் ஐந்து பாட்டால் நகரச் சிறப்புக் கூறுகிறர்.]

13\. கோதை மடவார்தங் கொங்கை மிசைத்திமிர்ந்த
சீத களபச் செழுஞ்சேற்றால்—வீதிவாய்
மானக் கரிவழுக்கு மாவிந்தம் என்பதோர்
ஞானக் கலைவாழ் நகர்.

(இ-ள்.) (அத்தன்மைத்தாய நாட்டின்கண்) கோதை மடவார் தம்-மலர் மாலையணிந்த பெண்களுடைய, கொஙகைமிசை-முலைகளிடத்து, திமிர்ந்த-பூசியிருக்கப்பெற்ற, சீதச்செழும் களபச் சேற்றால்-குளிர்ச்சி பொருந்திய செழுமையான கலவைச் சந்தனச் சேற்றால், வீதிவாய் - வீதிகளிடத்து, மானக்கரிவழுக்கும்-பெருமைபொருந்திய யானைகள் கால்வழுக்கி வீழும் படியான, மாவிந்தம் என்பது-மாவிந்தமென்று சிறப்பித்துச் சொல்லப் படுவதாகிய, ஞானக் கலைவாழ் - ஞானத்தைத் தருகின்ற கல்வி நூல்கள் பயில்கின்ற, ஓர் நகர்-ஒரு நகரம் (உண்டு); எ-று.

அந்நகரத்து மங்கையர்கள் நீராடுதலால், அவர்கள் தனங்களிற் பூசியிருந்த கலவைச சாந்து கரையப் பெற்று, நீருடன் கலந்து வந்து தெருக்களில் வண்டலிட்டிருப்பதால் யானைகள் கால் வழுக்குமென அந்நகரத்துச் செல்வ வளத்தைக் கூறியவாறும். இது வீறுகோளணி. வீதியில் களபச் சேற்றின் மிகுதி, பெண்கள் தங்கள் நாயகரோடு கொண்ட ஊடலால் வழித்தெறிந்ததனு லுண்டாயதெனினும் பொருந்தும். மடவார்-மடமைக் குணமுடையவர். மடம் என்னும் பண்படியாகப் பிறந்த பெண்பாற் படர்க்கைப்பெயர். இது பெண்களுக் கியல்பாயுள்ள நாற்குணங்களுள் ஒன்று. மிசை-எழனுருபு. களபச்சேறு - பலவகை வாசனைத் திரவியம் சேர்த்துக் கூட்டப்பட்ட சாந்து. சேறு,-சேற்று என வேற்றுமையில் குற்றுகர மிக்கது. மானக்கரி-குறிப்புப் பெயரெச்சத் தொடர்நிலைத்தொடர். மானம், வலியுமாம். கரி-கரத்தை யுடையது சீதகளபம் - வடமொழித்தொடர். ஞானக் கலை,-சரஸ்வதியெனக் கொண்டு சரஸ்வதிக்கு இருப்பிடமான நகர் எனவும்.

கூறலாம். வாழ்நகர்-வினைத்தொகை. ஞானக்கலை வாழ்நகர் என்றதனால் அந்நகரமாந்தரது கல்விச சிறப்புக் கூறியவாறும். வீட்டிற்கு ஏதுவாகிய ஞானத்தைத் தருவது கல்வியேயாதலால் ஞானக்கலை யென்றார். ஞானம்-நித்யாநித்ய வஸ்துக்களைத் தெரிந்து உண்மைப் பொருளை உணரும் மெய்யறிவு. கோதை, ஞானம், கலை-வடசொற்றிரிபு. மடவார்தங்குலவு மெய்யிற்றிமிர்ந்த எனவும், மடவார்தங்கோதின் மெய்யிற்றிமிர்ந்த எனவும் பாடம்.

14. நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை
என்று மகில்கமழு மென்பரால்—தென்றல்
அலர்த்துங் கொடிமாடத் தாயிழையா ரைம்பால்
புலர்த்தும் புகைவான் புகுந்து.

(இ-ள்.) தென்றல்-தென்றற்காற்று, அலர்த்தும் - விரியச் செய்கின்ற, கொடி - கொடிச்சீலைகள் கட்டப்பட்டுள்ள, மாடத்து - உப்பரிகைகளில், ஆய்இழையார்-ஆய்ந்தெடுத்த ஆபரணங்களை அணிந்த பெண்கள், ஐம்பால்-தங்கள் கூந்தல்களை, புலர்த்தும் - உலர்த்துவதற்கு ஊட்டுகின்ற, புகை-அகிற்புகை, வான்புகுந்து ஆகாயத்திற் புகுவதினால், புயல்-மேகம், வான் நின்று-ஆகாயத்தி லிருந்து, பொழிந்த (காலம் தவறாமல்) பெய்த, நெடும் தாரை - பெரிய மழைத் தாரைகள், என்றும் - பெய்யும் பொழுதெல்லாம், அகில் கமழும்-அகிலின் மணம் மணக்கும், என்பர் என்று சொல்வர்; (எ-று.)

பெண்கள் ஈரமா யிருக்கும் தங்கள் கூந்தலை உலர்த்துவதற்கு ஊட்டப்படும் புகை மிகுதி ஆகாயத்திற் சென்று மேகங்களோடு சேர்தலால், அப்புகைகளில் படிந்து வருகின்ற மழைத்தாரைகளில் இயற்கையில் அகில் வாசனை பொருந்தி யிருக்கிற தெனக் கூறுவர் என்பதாம். இச்செய்யுளால் மாளிகையி னுயர்ச்சியும் மாதர்களின் செல்வ மிகுதியும் வெளியாம். அரச மகளிர் தம் கூந்தலுக்கு அகிற்புகை யூட்டல் மரபு.

அகில்-முதலாகு பெயர். தென்றல்-தெற்குத் திசையிலிருந்து வருங் காற்று. அலர்த்தும் - பிறவினைப்பெயரெச்சம்; அலர் தன்வினைப் பகுதி, த்-சந்தி, து-பிறவினைவிகுதி. ஆய் - வினைத்தொகை. ஐம்பால் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, விரிந்தால் ஐந்தாகிய பாலையுடையது எனவிரியும். பால்-பகுப்பு. பெண்கள் கூந்தல், ஐந்து பகுப்பாய் முடிக்கப்படுவன வாதலால் ஐம்பால் எனப் பெயர் பெறும். ஐம்பாலாவன, உச்சியில் முடிக்கப்படும் முடி, வலத்திலாவது, இடத்திலாவது முடிக்கப்படும் கொண்டை, பின்னே செருகுதலாகிய சுருள், சுருட்டி முடிப்பதாகிய குழல், பின்னிமுடிப்பதாகிய் பனிச்சை என்பன. புகுந்து-புகுவதால்; காரணப் பொருளில் வந்த செயவெனெச்சத்திரிபு.

15. வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன—கஞ்சங்
கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு.

(இ-ள்) கோடுவன-(அந்நகரத்தில்) வளைவன, வெம் சிலையே கொடிய விற்களே, சோருவன-தளர்ச்சியடைவன, மெல்குழலே - மென்மையான கூந்தல்களே, வாய்விட்டு அரற்றுவன - வாய்விட்டு அலறுவன, அம் சிலம்பே-(பாதத்தில் அணியும்) அழகிய சிலம்பென்னும் ஆபரணங்களே, கலங்குவன - கலக்கத்தையடைவன, கஞ்சமே-தண்ணீரே, மெய் நெறியை விட்டு உண்மையான நல்வழியை விட்டு, விலங்குவன - விலகிப்போவன, மாளிகை மேல் - உப்பரிகையிலுள்ள, காரிகையார் - பெண்களுடைய, கண்ணே - கண்களே;—வேறில்லை (எ-று.)

எனவே அந்நகரத்து மாந்தர்களில், மாறுபடுங் குணமுடையவர்களும், செல்வ முதலியவை இல்லாமையால் தளர்ச்சி உறுகின்றவர்களும், பிறர் அடிகளின்மீது வீழ்ந்து தம் குறைகளை முறையிட்டுப் புலம்புகின்றவர்களும், பலவிதத் துக்கங்களால் மனக்கலக்கம் அடைகின்றவர்களும், சன்மார்க்கத்தினின்று விலகுகின்றவர்களும் ஒருவரும் இல்லை என்பதாயிற்று.

*சிலை முதலியவற்றை மனிதரிற் பிரித்தலால் ஏகாரங்கள் பிரிநிலை. கஞ்சம் என்ற சொல்லிலும் பிரிநிலை ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. மென்குழல்-பண்புத் தொகை, மென்மையாகிய குழல் எனவிரியும். கஞ்சம் என்பதற்குக் கைத்தாளமெனினும் ஒக்கும் காரிகை-அழகு; ஆர் பலர்பால் விகுதி. அழகையுடைய பெண்களை உணர்த்திற்று (காரிகையென்பது கலித்துறையென்னும் பாவினுக்கு மொரு பெயர்) பெண்கள் கண்கள் மெய்ந்நெறியைவிட்டு விலகுதலாவது, தந்தம் நாயகரைக் காணுந்தோறும் உண்டாகும் நாணத்தாலும் மகிழ்ச்சியாலும், நேரே பாராது கண்களை வளைந்துக் கீழ் நோக்கிச் செலுத்துதல். மெய் + நெறி-எண்மூவெழுத்தீற்றெவ்வகை மொழிக்கும் என்ற (உயிர் புணரி-சூ-S.) சூத்திரத்தில் குறில் வழியத்தனி யைந்நொது முன்மெலி மிகலுமாம் என்ற விதிப்படி மெய்ந்நெறி என நகரம் மிகுந்தது. விலங்குவன விலகுவன என்பது எதுகை நோக்கி விரிந்தது. சிலை முதலிய பால்பகா அஃறிணைப் பெயர்கள் கோடுவன முதலிய பலவின்பாற் படர்க்கை வினைமுடிபால் பாற்பொதுமை நீங்கின கோடுவன முதலியவற்றை மனிதர்களின் ஒழித்து, சிலை முதலானவற்றிற்காட்டலால் ஒழித்துக் காட்டணியாம்.

16. தெரிவன நூலென்றுந் தெரியா தனவும்
வரிவளையார் தங்கண் மருங்கே—ஒருபொழுதும்
இல்லா தனவு மிரவே இகழ்ந் தெவரும்
கல்லா தனவுங் கரவு.

(இ-ள்.) என்றும்-எக்காலத்தும், தெரிவன-யாவராலும் அறியப்படுவன, நூல் - சாஸ்திரங்களே, தெரியாதனவும் - தெரியப்படாதவைகளும், வரிவளையார் தங்கள் - ரேகைகளையுடைய வளையல்களை யணிந்த பெண்களுடைய, மருங்கே-இடைகளே, ஒருபொழுதும்-எப்பொழுதும், இல்லாதனவும் - இல்லாதவைகளும், இரவே - யாசகமே, எவரும் - எப்படிப்பட்டவரும், இகழ்ந்து - எளனஞ் செய்து, கல்லாதனவும் - கற்காதவைகளும், கரவு - வஞ்சக ஒழுக்கங்களே ஆகும்; (எ று.)

எனவே அந்நகரத்திலுள்ள ஆடவர் அறிவு நூற்பயிற்சி மிகுதியுடையாரென்பதும், பெண்கள், மார்பு தலை முதலிய உறுப்புக்கள் மேலிருத்தல் பற்றி இடையுடையாரென அநுமித்துணரத்தக்க நுண்ணிய இடையையுடைய உத்தம இலக்கணம் வாய்ந்தவர்கள் என்பதும், வாழ்க்கைக்குரிய பெருஞ் செல்வம் நிரம்பப் பெற்றவர்களென்பதும், வஞ்சகமில்லாத மெய்ந்நெறியிலொழுகும் ஒழுக்கமுடையா ரென்பதும் பெறப்படும்.

நூலென்றது, இவ்வுலக இன்பத்திற்கு ஏதுவாகிய நூல்களல்லாத வீட்டின்பத்திற்கு ஏதுவாகிய ஞானநூல்களை. பஞ்சிநூலியன்றநூல் ஒரு மரத்தின் கோணலைத்தீர்த்துச செப்பஞ்செய்வதுபோல உயர்ந்தோ ரியற்றிய கலைகளும் மனிதருள்ளத்தின் அறியாமையாகிய கோட்டத்தை ஒழித்துச் சீர்ப்படுத்துதலால் நூல் எனப்பட்டது. ஆகையால் நூல் என்றது உவமையாகுபெயர். என்றும், எவரும்,-உம்மைகள் முற்றுப்பொருளன. வளையார், இரண்டனுருபும் பயனுந்தொக்கதொகை. வளை - வளைந்திருப்பது காரணச் சிறப்புப்பெயர். வரி சித்திரவேலைப்பாடு. இரவு, கரவு, தொழிற்பெயர்கள். ஏகாரங்கள் பிரிநிலை, நூல் கரவு என்ற இடங்களிலும் பிரிநிலையேகாரம் கூட்டியுரைக்க தெரிவன, தெரியாதன, இல்லாதன, கல்லாதன, என்ற செயப்பாட்டு வினைகளில் படுவிகுதி தொக்கு நின்றது.

17. மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான்—காமருபூந்
தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி.

(இ-ள்) பார் ஆளும் பூமியை ஆளுகின்ற, வேந்தன் - நளமகாராசனது, பதி - மாவிந்தநகரம், தாமரையாள் - செந்தாமரை மலரிலுள்ள வீரலட்சுமி, வைகும் - தங்குகின்ற, தடம்தோளான் - பெருமை பொருந்திய தோளையுடையவனும், காமர் - அழகிய பூதாரான் - மலர்களாகிய மாலை அணிந்தவனுமாகிய, மாமனுநூல் - பெருமைதங்கிய மனுதர்ம சாஸ்திரம், வாழ - வளரும்படி, வரு பிறந்த, சந்திரன் சுவர்க்கி - சந்திரன் சுவர்க்கி என்னும் அரசனால் செங்கோலோச்சி வரப்பட்ட முரணைநகர்தான் என்று-முரணை நகரமே என்று, சாற்றலாம் - சொல்லலாம்; (எ-று.)

நளமகாராசனது மாவிந்தநகரம் மள்ளுவநாட்டுச் சந்திரன்சுவர்க்கி முரணைநகரை ஒத்திருக்கும் என்றவாறும். இதனால் மாவிந்த நகரத்திலும் முரணைநகர்வளன் வனப்புவகையால் உயர்ந்ததெனக்கூறியபடியாம். இங்ஙனம் சந்திரன் சுவர்க்கியைப் பற்றியும் அவன் நாடுநகரங்களைப் பற்றியும் இவர் இந்நூலினிடையிடையே புகழ்ந்து பேசுதற்குக்காரணம் நூலாசிரியர் வரலாற்றில் கூறப்பட்டிருத்தல்காண்க. அரசர்தோளில் வீரலக்குமி வீற்றிருப்பதாகக் கூறுதல் கவிமரபு. "திருவுடை மன்னரைக்காணிற்றிருமாலைக் கண்டேனே" எனப்பெரியார் பணித்தபடி மன்னர்கள் விஷ்ணு அம்ஸமாவராகலின் 'தாமரைபாள் வைகுந் தடந்தோளான்' எனக் கூறினாரெனினும் பொருந்தும் 'தாமரை' எனப்பொதுவகையாற் கூறினாரேனும் இலக்குமிதேவிக்குரிய செந்தாமரையேகொள்க.

மநுநூல் - சூரியகுலத்தரசனாகிய மநுவென்பான்செய்த தர்மசாஸ்திரம். அது வாழ்தலாவது-அந்நூல்கூறும் விதிவிலக்குகளையறிந்து தன்னரசின்கீழ் உள்ளகுடிகளை ஒழுகச்செய்தலால் அத்தருமம் உலகத்தில்கெடாதுமேலும் மேலும்பரவுதல். சந்திரன்சுவர்க்கி - உலகத்தார்க்குச் சந்திரன் போலத்தண்ணளியால் மகிழ்வளித்துப் புகழ்நிலாவைப் பரப்புபவன். இனி சந்திரன் என்பவனுக்கு மகனாகிய சுவர்க்கியெனினுமாம், இதை 'சந்திரவாணன்' 'ஆதித்தன் கம்பன்' என்ற பெயர்வழக்கிலுங்காண்க. நூல் இருமடியாகுபெயர். வாழ-காரியப்பொருட்டாய செயவெனெச்சம். வரு-இறந்தகால வினைத்தொகை; இது வந்த என விரியும். தடந்தோள்-உரிச்சொற்றொடர். காமரு-காமர்-உ-சாரியை, காமர்-கண்டாரால் விரும்பப்படுந்தன்மை; இஃது உரிச்சொல். பூ + தார்-பூந்தார். "பூப்பெயர் முன்னினமென்மையுந் தோன்றும்" (நன்-உயிர்-சூ-50.) என்றவிதிப்படிவருகிற வல்லினம் பொதுவிதியால் மிகாமல் இனமாகிய நகரமெல்லினம் தோன்றிற்று; மூன்றாம் வேற்றுமை உருபும் பயனுந்தொக்கதொகை.

18 ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாருஞ் செல்வப் பெடைவண்டோ—டூடா
முருகுடைய மாதர் முகநனைக்குந் தண்டா
ரருகுடையான் வெண்குடையா னங்கு.

(இ - ள்) ஆங்கு-அந்நகரத்தில், பீடுஆரும்-பெருமை நிறைந்த, செல்வம்பெடை-சிறப்பமைந்த பெண்வண்டு, வண்டு ஒடு ஊடா - ஆண்வண்டுகளோடு பிணங்கிக்கொண்டதனால், உடைய-அரும்புகள் கட்டவிழ (அதனால்,) முருகு-(ஒழுகுகின்ற) தேன், அருகுமாதர்முகம் - பக்கத்திலுள்ள பெண்கள் முகங்களை,, நனைக்கும்-நனையப்பண்ணுகின்ற, தண்தார் உடையான் -குளிர்ந்த மாலையைமார்பில் உடையவனும், வெண்குடையான் - வெண்மையான குடையை யுடையவனும் ஆகிய, ஓடாததானை-(பகைவர் சேனைக்குப்பயந்து பின்னிட்டு) ஓடாத சேனைகளையுடைய, நளன் என்று-

நளமகாராஜனென்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, ஒருவன் - ஒரு அரசன், உளன்-இருந்தான்; (எ-று.)

ஆங்கு நளனென்னொருவன் உளன் எனமுடிக்க. முருகுடைய மாதர் முகநனைக்குந்தண்டார் என்ற குறிப்பால், தன்னைச் சேர்ந்தோர்க்கெப்போதும் இதம்செய்கின்ற தண்ணளியை உடையானென்பது புலப்படும். மாதர் என்றது அரசனது பட்டமகிஷிகளை. அருகினின்றும் ஏவல் செய்யும் பரிசாரிகை மகளிரை எனினுமொக்கும். மாதர் என்னும் உரிச்சொல் ஆகுபெயராய்ப் பெண்களை உணர்த்திற்று. மாதர் - காதலென்னும்பொருளது; "மாதர்காதல்" என்பது தொல்காப்பியவிதி. மாதர்முலைநனைக்குமெனவும், மாந்தர்முகநனைக்குமெனவும், பிரதிபேதமுண்டு. வெண்குடையுரான் என்ற குறிப்பால் கலியிருள்கெட அரசுசெலுத்தும் புகழுடையான் என்பதும்; ஓடாததானை நளன் என்றதால், பகைவர்க்கு எஞ்ஞான்றும் தோற்காதுவெற்றியே கொள்ளும் பேராற்றல் உடையவன் என்பதும் பெற்று நளனது கருணையும் வீரமும் வெளியாம்.

ஆங்கு என்னும்சுட்டு, மேற்செய்யுளிற்கூறிய பதியென்றதைக்குறித்து நின்றது. செய்யுளாதலின் சுட்டு முதல் நீண்டது. வண்டுக்குச் செல்வமாவது பொன்ரேகைகளையும் பொற்சிறகுகளையுமுடைமை. பெடை-பறவையின் பெண்பாற்பெயர். ஊடுதல்-கலவியில் நிகழும் பிணக்கம். ஊடுதல் அரும்புடைதலுக்கும், அரும்புடைதல் தேன் ஒழுகுதலுக்கும் காரணம். முருகுஎன்பதைத் தேன் எனப்பொருள்கொள்ளாது மாதர்க்கு விசேஷணமாக்கி இளமையுடையமாதரென உரைத்தலுமொன்று. இப்பொருளுக்கு, பெடையூடுதலால் தன்கண்ணுள்ள தேனால் முகங்களைநனைக்குமெனமாலையைக்கருத்தாவாகக் கொள்க. தண் + தார்-"ணலமுன்றனவும் ணளமுண்டணவும் ஆகுந்தநக்களாயுங்காலே" என்ற விதிப்படி, ணகரத்தின் முன்வந்த தகரம் டகரமாயிற்று. ஊடா - காரணப்பொருளில்வந்தது, எச்சத்திரிபு. ஓடாத-எதிர்மறைப்பெயரெச்சம். தானை, முகம்-வடசொற்றிரிபு. வண்டு-மென்றொடர்க்குற்றியலுகரம், ஓடு என வருமொழிமுதலில் உயிர்வரக் கெட்டு நின்ற மெய்யின்மேல் உயிர் ஏறிநின்றது. ஓடு-மூன்றனுருபு.

[நளனது செங்கோற் சிறப்பு.]

19 சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் றனிக்காத்தான்—மாத
ரருகூட்டும் பைங்கிளியு மாடற் பருந்து
மொருகூட்டில் வாழவுலகு.

(இ-ள்.) தாது - மகரந்தப்பொடி, அவிழ் - சிந்துகின்ற, பூந்தாரான் - பூமாலையணிந்த நளமகாராசன், சீதம்மதிக்குடைகீழ்-குளிர்ச்சிபொருந்திய சந்திரன்போன்ற தனது குடைநிழலின்கீழ், செம்மை அறம்-குற்றமில்லாத

தருமங்கள், கிடப்ப-நிலைநிற்கவும், மாதர்-பெண்கள், அருகு ஊட்டும்-பக்கத்தில்வைத்து உணவுகளை ஊட்டிவளர்க்கின்ற, பைங்கிளியும் - பசுமையாகிய கிளிகளும், ஆடல்பருந்தும் - வலிமையையுடைய பருந்தும், ஒருகூட்டில் ஒரேகூண்டில், வாழ-சேர்ந்து வசிக்கவும், உலகு-உலகத்தை, தனிக்காத்தான் பிறருக்குப்பொதுவில்லாமல் ஆண்டான். (எ-று.)

தாரான் கிடப்ப, வாழ, உலகுகாத்தான் எனக்கூட்டுக. அவன்குடையைச் சீதமதிக்குடையெனக் கூறுதலால், குடிகள் யாதொரு துன்பமுமுறாது இன்புற்று வாழ்ந்தார்களென அவனது அரசாட்சி நலனும், விளக்கமும் கூறியவாறு. மதிக்குடை உவமைத்தொகை; மதி-மதுவை (அமிர்தம்) உடையது. மதி, குடைக்கு உவமை வட்டவடிவிலும் வெண்ணிறத்திலும், பகுத்தறிவில்லாத பறவைகளும் தம்முட்பகையின்றி அன்பும் அருளும் பொருந்திவாழ உலகுகாத்தான் என்ற குறிப்பால், வலியார் மெலியாரை வருத்துதலும் பகைத்தலும் இன்றி, நட்போடு வாழ்ந்தனரெனக் குறிப்பித்தவாறும். இதனால் அவனது அரசாட்சியில் சாந்தகுணமே தலைநின்றது என்பது புலனும். "ஒருதுறைப்புனல் சினப்புலியுமானு முடனே உண்ணவைத்த உரவோன் உலகில்வைத்தவருளும்" என்ற சயங்கொண்டார்வாக்கும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

ஊட்டும் உண்-பகுதி, டு-பிறவினைவிகுதி, பகுதிமுதல் நீண்டது விகாரம், ணகரம் டகரமாதல்சந்தி, உம்-பெயரெச்சவிகுதி. வாழ, கிடப்ப-காரியப்பொருளில்வந்த செயவெனெச்சம். பைங்கிளி-பசுமை + கிளி, ஈற்றுமைகெட்டு, முதல் அகரம் ஐகாரமாகி, சகர உகரங்கெட்டு, ஙகர இனவெழுத்து மிக்கது. ஆடற்பருந்து வேற்றுமையில் வல்லினம்வர லகரம் றகரமாயிற்று. அவிழ் - வினைத்தொகை. தனிக்காத்தலாவது பலநாடுகளையும் வென்று பிறருக்குச்சிறிதுஞ் சுதந்தரமின்றி ஆளுதல். இதனால் இவன் சக்ரவர்த்தியென்பது புலப்படும். செல்வமகளிர் கிளி பூவை முதலிய பறவைகளைப் பொழுதுபோக்கிற்காக வளர்த்தல் வழக்கம்.

[நளன் சோலை புகுதல்.]

20 வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான்—தேங்குவளைத்
தேனாடி வண்டு சிறகுலர்த்து நீர்நாடன்
பூநாடிச் சோலை புக.

(இ-ள்.) தேன்குவளை - வாசனைமிகுந்தகுவளைமலர்களிலுள்ள, தேன்-தேன்களில், ஆடி-முழுகி, வண்டு-வண்டுகள், சிறகு உலர்த்தும் - இறகுகளை உலரச்செய்கின்ற, நீர்நாடன் - நீர்வளமிக்க நிடதநாட்டரசனாகிய நளன், பூநாடி-மலர்களைவிரும்பி, சோலைபுக - சோலையில் போகிறதற்கு, வாங்கு - வளைந்த, வளைக்கையார் - வளையல்களையணிந்த கைகளையுடைய

பெண்களின், வதனமதி-முகமாகிய சந்திரனிடத்து, பூத்த - மலர்ந்த, பூங்குவளைக் காட்டிடையே-(கண்களாகிய) அழகிய நீலோற்பலக்காட்டின் நடுவில், போயினான்-சென்றான்; (எ-று.)

நாடன், நாடி புகழப்போயினான் எனமுடிக்க. வாங்குவளைக் கையார் என்பதைவளைவாங்குகையார் எனக்கொண்டு, நளனது அழகில்ஈடுபட்டால் காமத்தாலுடல் மெலிதல்பற்றித்தாமே கையினின்றும் கழல்கின்ற வளையல்களையுடைய பெண்கள் எனினுமாம். வதனமதிபூத்த பூங்குவளை யென்றது முகத்தின்கண்ணுள்ள கண்களை. இத்தொடர் உருவகம். மதிபூத்த, மதியானதுபூத்த எனமுதல் வேற்றுமையாக்கினுமாம். பூங்குவளைக் காட்டிடையே போயினானென்றதன்கருத்து; பெண்கள், தனது கட்டழகை வியந்துபார்த்துக்கொண்டிருக்கப் போயினான் என்பதாம்.

குவளை முதலாகுபெயராய் மலரையுணர்த்திற்று. காடு - தொகுதி; தொகுதியைக்காடென்றல் மரபு. போயினான்-ஆண்பால் இறந்தகாலவினைமுற்று, போ-பகுதி, இன் இறந்தகால இடைநிலை, ஆன் விகுதி. உலர்த்தும்-பிறவினைப் பெயரெச்சம். தேன் × குவளை-தேங்குவளை 'தேன்மொழி மெய்வரினியல்பும்' என்ற (நன்-மெய்-சூ-11.) சூத்திரத்து வலிவரின் ஈறு போய் மெலிமிகலுமாமிருவழி என்ற விதிப்படி ஙகர மெல்லெழுத்து மிகுந்து வந்தது.

[வசந்தகால வருகை.]

21 வென்றி மதவேடன் வில்லெடுப்ப வீதியெல்லாம்
தென்றன் மதுநீர் தெளித்துவர—நின்ற
தளவேனன் மீதலருந் தாழ்வரைசூழ் நாடற்
கிளவேனில் வந்த தெதிர்.

(இ-ள்.) நின்ற (முல்லைநிலத்தில்) வளர்ந்துநின்ற, தளவு முல்லைக்கொடிகள், ஏனல்மீது - (குறிஞ்சி நிலத்திலுள்ள) தினைப்பயிரின்மேல் படர்ந்து, அலரும்-மலர்கின்ற, தாழ்வரை-நீண்ட மலைகள், சூழ்நாடற்கு எதிர்-சூழ்ந்தநாட்டையுடைய நளனுக்கு எதிரில், வென்றி - வெற்றியையுடைய, மதன்வேள்-மன்மதன், தன்வில் எடுப்ப - போர்செய்யத் தனது வில்லைக்கையிலெடுக்கவும், தென்றல் - தென்றற்காற்று, வீதிஎலாம் - அரசன்செல்லும் வீதிமுழுமையும், மதுநீர் - (மலர்களின்) தேனாகியநீரை, தெளித்துவர - தெளித்துக்கொண்டு வரவும், இளவேனில் - இளவேனிற்காலமானது, வந்தது-வந்து சேர்ந்தது, (எ-று.)

நாடற்கு எதிர் இளவேனில் எடுப்ப, வர, வந்தது என இயைக்க. இனி, நளன் தமயந்தியின்மீது விருப்பங்கொண்டு வருந்துஞ் செய்தியைக் கூறுவாராதலால், ஆதற்கிணங்க மன்மதனுக்குப் போர்த்தொழிலில் ஊக்கமுங்களிப்பும் மிகுதியுமுண்டாகுதற்குரிய இளவேனிற்காலம் நளனை

எதிர்கொண்டதாகக் கூறினர். இளவேனிற்காலம் - சித்திரை வைகாசி மாதங்கள். ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் ஒருவர்க்கொருவர் வேட்கை (ஆசை)யை உண்டாக்குதலாலும், யாவராலும் விரும்பப்படுகின்ற கட்டழகை யுடைமையாலும், மன்மதனுக்கு வேள் எனப்பெயர். இது காமன் என்னும் வடசொல்லின் பொருள்கொண்டது. வேள் என்னும் பெயர் முருகக்கடவுளுக்கும் உடைமைபற்றி வேறுபடுத்த, மதவேள் என்றார். மதவேடன் வில்லெடுப்ப-வில்லென்ற ஆயுதவுரிமைபற்றி மதனாகியவேடன் எனப்பொருள் கொள்ளினுமாம். மன்மதனுக்கு வென்றியாவது-விரும்பினவரைத் தன்வசப்படுத்துதல்: வில்-கரும்புவில், புஷ்பவில்லும் இரும்புவில்லும் கூறுவர். தென்றற்காற்று, பலசோலைகளிலும்படிந்து மலர்களிலுள்ள தேன்களை வாரிக்கொண்டு வந்து இறைத்தலால் தென்றன்மதுநீர் தெளித்துவர என்றார். ஒரு பிரபுவருகையில் மெய்காப்பாளர் விற்பிடித்து உடன் வருதலும், வாசனைநீர் வழியில் தெளிக்கப்பெற்றிருத்தலும், இயல்பாதலால் இளவேனிலும் இங்ஙனம் வந்ததென்றார். இங்ஙனம் வந்ததெனவே அரசனை வெல்லக்கருதிச் செருக்குடன் வந்ததென்பது தொனிக்கும். வீதியெலாம்-எலாம் என்னும் பன்மைப்பெயர் இடப்பன்மை குறித்து நின்றது; இடைக்குறை. முல்லைநிலத்துக்குரிய முல்லைக்கொடிகள் குறிஞ்சிநிலத்துக்குரிய தினைப்பயிர்கள்மீது படருமெனக்கூறியது திணைமயக்கம். (திணைமயக்கமாவது ஒருநிலத்துக்குரியபொருள் மற்றொரு நிலத்திற்கலந்து கிடப்பதாகக் கூறுதல்) இதனால் நிடதநாட்டில் முல்லைக்கும் குறிஞ்சிக்குமுள்ள அணிமையும், இந்நாடு மலையரணிற் சிறந்ததென்பதும் விளங்கும்.

சூழ்-வினைத்தொகை, எடுப்ப, வர - செயவெனெச்சங்கள், வரை-யென்னும் கணுவின்பெயர் மூங்கிலுக்காய் மூங்கில் மலைக்காதலால் இருமடியாகுபெயர். வேள் + தன்-வேடன் 'ணலமுன்றனவும்' என்ற சூத்திரவிதிப்படி ளகரத்தின்பின்வந்த தகரம் டகரமாகி 'குறில் செறியாலள' என்ற சூத்திரவிதிப்படி ளகரம் கெட்டது. வென்றி - தொழிற்பெயர். வெல்,-பகுதி, றி-விகுதி, றகரம் னகரமானது விகாரம். மதன் × வேள்-மதவேள் 'சிலவிகாரமா முயர்திணை' என்ற விதியால் னகரம்கெட்டது.

[நளன் பூஞ்சோலையடைதல்.]

22. தேரிற் றுகளைத் திருந்திழையார் பூங்குழலின்
வேரிப் புனலணைப்ப வேயடைந்தான்—கார்வண்டு
தொக்கிருந்தா லித்துழலுந் தூங்கிருண்வெய் யோற்கொது
புக்கிருந்தா லன்ன பொழில். [ங்கிப்

(இ ள்.) கார்வண்டு-கருமையாகிய வண்டுகள், தொக்கு இருந்து-கூடியிருந்து, ஆலித்து - சந்தோஷித்து, உழலும் - உலாவித்திரிகின்ற

ஆங்கு இருள்-மிகுந்தஇருள், வெய்யோற்கு ஒதுங்கி - சூரியனொளிக்குப் (பயந்து) மறைந்து, புக்கு இருந்தால் அன்ன - புகுந்திருப்பதை யொத்த, பொழில்-சோலையை, தேரின் துகளை-தேர்செல்லுதலாலுண்டாகும் தூசிகளை, திருந்து இழையார் - திருத்தமான ஆபரணங்களையணிந்த பெண்களது. பூங்குழலின்-பூவையணிந்த கூந்தலினது, வேரிப்புனல் தேனாகியநீர், நனைப்ப - நனைக்கும்படி, அடைந்தான் - (நளமகாராஜன்) சேர்ந்தான்;

பெண்களினது குழலின் வேரிப்புனல் - தேர் செல்லுதலாலெழுந்த துகளை நனைப்பப்பொழில் அடைந்தான் நளன் என்க.

நளன் என்னும் வினைமுதல் வருவித்துரைக்கப்பட்டது. சோலைகளில் மரங்கள் நெருங்கித் தழைததிருத்தலால் சூரியனொளி உட்புகப்பெறாமல் குளிர்ந்து இருண்டிருத்தலால் சூரியனுக்குப்பயந்த இருள் குடியிருந்தாற்போல்வதாயிற்று. 'வெயினுழைகல்லாக்குயினுழைபொதும்பர்' என்றபடி. உழலும் பொழில், புக்கிருந்தாலன்னபொழில் எனக்கூட்டுக.

வண்டுகள் சோலையிலுள்ள தேனை மிகுதியாகவுண்டு செருக்கித்திரியுமாதலால், ஆலித்துழலும் என்றார். வெய்யோன்-வெம்மையென்னும் பண்படியாகப்பிறந்தபெயர்; செய்யுளில் விகுதி ஆ ஓவாயிற்று. அன்ன-குறிப்புப் பெயரெச்சம். நளனுடன் செல்லுகின்ற பரிசாரிகைப் பெண்கள் கூந்தலிற்சூடியுள்ள மாலையினின்றும் ஒழுகும்தேன் அவன் ஏறிச்செல்லும் தேர்ச்சக்கரத்தினின்றும் உண்டான புழுதியை நனைத்து அடக்குகின்ற எனக்கூறினார். இதனால் பெண்கள் சூடியுள்ள மாலைகளினது தேன்மிகுதி விளங்கும் தேரின்-இன் ஏதுப்பொருளில்வந்த ஐந்தனுருபு. இழை-இரத்தினங்கள்; இழைத்துச்செய்யப்பட்டது. நனைப்பவே-ஏ அசை. கார் கருமையென்ற பண்பின்விகாரம், பெருமையுமாம். தொகு, புகு, என்ற பகுதிகள் தொக்கு புக்கு என இரட்டித்து இறந்தகாலங்காட்டின.

[அந்த நளன் ஓர் அன்னப்பறவையைக் காணுதல்.

23 நீணிறத்தாற் சோலை நிறம்பெயர நீடியதன்
றாணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப—மாணிறத்தான்
முன்னப்புட் டோன்று முளரித் தலைவைகு
மன்னப்புட் டோன்றிற்றே யாங்கு.

(இ ள்.) அப்புஉள் -ஜலத்தில், தோன்றும்-உண்டாகின்ற, முளரித் தலை-தாமரைமலரிடத்து, வைகும் - வாசஞ்செய்யும்படியான, அன்னப்புள்-அன்னப்பறவையானது;-நீள்நிறத்தால்-நெடுந்தூரம் விளங்குகின்ற தனது இறகின் வெண்ணிறத்தால், சோலை-இருண்ட அந்தச்சோலையானது, நிறம் பெயர - நிறம்வேறுபடவும், நீடியதன் தாள்நிறத்தால் - நீண்ட தன்னுடைய கால்களின் சிவந்தநிறத்தால், பொய்கை தலம்-தடாக இடம், சிவப்ப சிவக்கவும், ஆங்கு-அச்சோலையில், மாண்நிறத்தான்முன் - மாட்சிமை வாய்ந்த

நிறத்தையுடைய அதாவது மார்பையுடைய நளராசனுக்கு முன்னே, தோன்றிற்று - காணப்பட்டது. (எ-று.)

அன்னப்புள் பெயர, சிவப்ப ஆங்குமுன்தோன்றிற்று என இயையும்.

உடல்முழுவதும் வெளுத்தும், காலும் மூக்குஞ் சிவந்தும் விளங்குகிற உத்தம இலக்கணம்வாய்ந்த அரச அன்னமாதலால் 'நீணிறத்தாற் சோலை நிறம்பெயரநீடியதன் றூணிறத்தாற் பொய்கைத்தலஞ் சிவப்ப' தோன்றிற்று என்றார். சோலைநிறம்பெயர்தலாவது தனது இருண்ட நிறம் கெட்டுப் பிரகாசமாகிய வெண்ணிறமாதல்.

பெயர, சிவப்ப-காரியப்பொருளில்வந்த செயவெனெச்சம் மாண் நிறத்தான் - மாட்சிமைப்பட்ட மார்பையுடையவனெனலே பொருந்தும். முளரி-அதன் பூவிற்காதலின் முதலாகுபெயர், முள்அரைநளையுடையது என்பது பொருள் (அரி-தண்டு,) அன்மொழித்தொகை. தலை-எழனுருபு. நீடிய-இறந்தகாலப்பெயரெச்சம், நீடு-பகுதி, இன்-இறந்தகால இடைநிலை, அ-பெயரெச்ச விகுதி, இடைநிலை னகரக்கேடு கடைக்குறை; ய்-சந்தி. முன்னப்புள் அன்னப்புள் என்ற அடிகள் திரிபுநயம். அன்னங்கள் தாமரை மலரைச் சயனமாகக் கொண்டிருத்தல் இயல்பு.

[அரசன் பரிசாரிகைப் பெண்ணிடத்து அன்னத்தைப் பிடித்துத்
தாச்சொல்லுதல்.]

24 பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமன்
மேதிக் குலமேறி மென்கரும்பைக்—கோதிக்
கடித்துத்தான் முத்துமிழுங் கங்கைநீர் நாடன்
பிடித்துத்தா வென்றான் பெயர்ந்து.

(இ-ள்.) மேதிக்குலம் - எருமைக்கூட்டம், ஏறி - வயல்களிற்சென்று, மென்கரும்பை - மென்மையான கரும்பங்கழிகளை, கடித்துக்கோதி-கடித்துத்தின்று, முத்துஉமிழும்-முத்துக்களைக் (கடைவாயினின்றும்) கக்குகின்ற, கங்கைநீர் நாடன் - கஙகைநதிபாய்கின்ற நிடத நாட்டரசன், பெயர்ந்து-அங்கேபோய், பேதை - பெண்ணே! மடம் அன்னம்தன்னை - இளமையான அன்னப்பறவையை, பிழையாமல் - தப்பாமல், பிடித்துத்தா என்றான்-பற்றிக்கொடு என்று கேட்டான்; (எ-று.)

நீர்நாடன் பெயர்ந்து சென்று பேதைஎன்னும் பெண்ணே! அன்னந் தன்னைப் பிடித்துத்தாவென்றான் எனக்கூட்டுக.

எருமைகள் கரும்புகளைக் கடித்துத்தின்னும்பொழுது, அக்கரும்புகளின் கணுக்களிலுள்ள முத்துக்கள் அவைகளின் கடைவாயிலொதுங்கிக் கீழேவிழும் என்றார். இதனால் நாட்டின் வளப்பமிகுதி கூறியவாறும். கரும்பு முத்துப்பிறப்பிடங்களில் ஒன்றாதலால் இங்ஙனம்கூறினார். இதனைத் ''தந்திவராக மருப்பிப்பி பூகந்தழைகதலி, நந்துசலஞ்சல மீன்றலைகொக்கு

நளினமின்னார், கந்தரஞ்சாலி கழை கன்ன லாவின்பற்கட் செவிகார், இந் துவுடும்புகராமுத்தமீனு மிருபதுமே" என்ற, இந்நூலாசிரியர் செய்துள்ள இரத்தினச்சுருக்கத்துச் செய்யுளாலுணர்க.

பெயர்ந்து என்பதற்குப் பூக்கொய்யச்சென்ற எண்ணம் மாறி எனப் பொருள்கூறினும் பொருந்தும். பேதை என்றது உடன் சென்றிருந்த பரி சாரிகைப்பெண்களிலொருத்தியை. இது பெண்கள் குணம் நான்கனு ளொன்ருகியமடமைக்குணம். 'பேதைமையென்பது மாதர்க்கணிகலம்' என் றதனுலுமுணர்க; பண்பாகுபெயராய்ப் பண்பியை உணர்த்தி நின்றது; அண்மைவிளி, குலம்-கூட்டம், வடசொல். பிழையாமை - தப்பிஓடாமை. தா என்ற ஏவலொருமை வினை முற்று அரசனுகிய மிக்கோன் இரப்புரை யாய் நின்றமையால், மரபுவழுவமைதி. தான்-அசை.

[பெண்கள் அரசன்கட்டளையால் அன்னத்தைப் பிடித்துக் கொணர்தல்.]

25. நாடிமட வன்னத்தை நல்ல மயிற்குழா
மோடிவளைக்கின்ற தொப்பவே—நீடியநற்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து.

(இ-ள்) நல்லமயில்குழாம்-சிறந்த மயில்கூட்டம், மடம் அன்னத்தை நாடி-இளமையுடைய அன்னப்பறவையைப் பிடிக்கவிரும்பி, ஓடி - சுற்றி, வளைக்கின்றது ஒப்ப - வளைத்துக் கொள்வதைப் போல, நீடிய - நீண்ட, நல்பைங்கூந்தல்வல்லியர்-நல்ல கரிய கூந்தலையுடைய பூங்கொடிபோன்ற பெண்கள், பற்றிக்கொடுபோந்து - அன்னத்தை (வளைத்துப்) பிடித்துக் கொண்டுவந்து, தம்கோவின்முன்-தங்கள் அரசனுகிய நளனுக்கு எதிரில், தாழ்ந்துவைத்தார்-வணங்கி வைத்தார்கள்; (எ-று)

இப்பெண்கள் மயில்போல மெல்லிய சாயலுடையவர்களாகையால் இவர்கள் மடவன்னத்தையோடி வளைக்கின்றமைக்கு மயிற்குழாம் ஓடி வளைப்பதை உவமைகூறினர். * மாதர்களைமயிற்குழாம்போன்று என்றதற் கேற்ப, அவிழ்ந்துதொங்கிய கூந்தல், மயில்களின் கலாபம் போன்றிருந் தது என்பார் நீடியநற்பைங்கூந்தல் என்ருர். இங்ஙனம் கூறியவாற்ருலே அன்னத்தைப் பிடிக்கவேண்டுமென்ற அவாவினுல் கூந்தல் சோர்தல் முத லியவற்றையும் மதித்திலர் என்பதும் விளங்கும். பசுமையையுங் கருமை யையும் வேறுபாடின்றிக்கூறும் மரபால் கருங்கூந்தலைப் பைங்கூந்தலென்

* இந்நளசரிதம்கூறும் தமிழ்நைடதநூலில் 'ஓதிமம், பாழியந்தோளி னுன்கையிற்பற்றினுன்' என நளனே அன்னத்தைப் பிடித்ததாகக் கூறி யிருத்தல் ஈண்டு அறியத்தக்கது.

ரூர். நெய்தோயப்பெற்று மயிர்ச்சாந்தணிந்துவிளங்குதலின் 'பைங்கூந்தல்' என்பதற்கு வளப்பமிக்க கூந்தலெனினுமாம்.

வல்லியர்கள்-விகுதிமேல்விகுதி. வல்லி - உவமஆகுபெயர், வல்லி - பெண்களின் உறுப்புகளில் இடைக்கும், அவர்களது மெல்லிய தன்மைக்கும் உவமை கூறப்படும். நாடி-அரசன் ஆணையைக்கருதியுமாம். செய்து என்னும் வாய்ப்பாட்டு இறந்தகாலவினையெச்சம். கொடு - கொண்டு என்பது இடை குறைந்து விகாரமாயிற்று. கோவின்-இன்சாரியை, கோ-தலைமையுணர்த்தும் ஒருசொல். முன் - இடமுன். வளைக்கின்றது - நிகழ்காலத்தொழிற்பெயர். நல்ல-நன்மையென்னும் பண்பினடியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். இச்செய்யுள் உவமையணி. ஏ-அசை.

[அப்பொழுது அன்னங்கலங்குதல்.]

26 அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் றிருமுன்னர் வைத்தலுமே—யன்ன
மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.

(இ-ள்.) அங்கு-அச்சோலையில், ஆய்இழையார்-ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களையணிந்தபெண்கள், அன்னம்தனைபிடித்து-அன்னப்பறவையைப் பிடித்துக்கொண்டுபோய்—, மன்னன்திருமுன்னர் - நளராஜனது அழகிய சமுகத்தில், வைத்தலுமே - வைத்தவுடனே, அன்னம் - அந்த அன்னமானது, தன்னுடைய-தனது, வான்கிளையைத்தேடி - பெரியசுற்றத்தைத் தேடி, மலங்கிற்று-வருந்தியதாய், மன்னவனைக்கண்டு-அரசனைப் பார்த்து, கலங்கிற்று-கலக்கமடைந்தது; (எ று.)

ஆயிழையார் அன்னந்தனைப்பிடித்து வைத்தலும், தேடி மலங்கி, கண்டு கலங்கிற்று எனவினைமுடிவுசெய்க.

ஆயிழையார் என்பதற்கு ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களையுடையாள் என்பதன்றி அழகிய ஆபரணங்களையுடையாரெனினும் பொருந்தும். ஆய் அழகு என்னும் பொருளில்வருதலை "மாயோன்முன்கையாய்தொடிகடுக்கும், கண்கூடிருக்கைத்திண்பிணித்திவவின், ஆய்தினை யரிசியவைய லன்ன" என்ற பொருநராற்றுப்படை 14 - 16 - அடிகளிலும் "நீர்திரண்டன்ன கோதை பிறக்கிட்டாய்கோலவிர்தொடி விளங்கவீசி" 'பேயுமணங்குமுருவுகொண்டாய் கோற்கூற்றம்' என்ற மதுரைக்காஞ்சி 562, 563, 662-அடிகளிலும் ஆய் என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் அழகிய எனப்பொருளுரைத்திருத்தலாலுணர்க.

யாவராலும் விரும்பத்தகுந்த ராசசமுகமாதலால், திருமுன் என்றார். திரு கண்டாரால் விரும்பப்படும் தன்மை, பண்புப்பெயர். முன்னர் - அந்

சாரியை. வைத்தலும்-இறந்தகாலவினையெச்சம், வை-பகுதி, உம் - வினையெச்சவிகுதி தகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி. இதனையடுத்த எகாரம் அசை. மற்றையிரண்டும் இரக்கப்பொருளன. மலங்கிற்று முற்று எச்சப்பொருளில்வந்தது. மலங்கிற்று, கலங்கிற்று என முற்றுப்பொருளாய்த் தனித்தனி யுரைப்பினும் அமையும். உடைய - ஆறும்வேற்றுமைச்சொல்லுருபு. வான்கிளை உரிச்சொற்றொடர். கிளை உவம ஆகுபெயர், மரத்தைக் கிளைபோலத்தன்னைச் சேர்ந்து இருக்கும் உறவினத்தைக் குறிக்கும். மன்னவன்-பெருமையுடையவன், அ-சாரியை, வ் பெயரிடைநிலை. பிடிபட்டபோது கலங்குதலாதியாகிய அதன் சாதித்தன்மைகளைச் சொல்லுதலால் இச்செய்யுள் தன்மைநவிற்சியணி.

[அரசன் கலங்கிய அன்னத்திற்குத் தேறுதல்மொழி கூறுதல்.]

27. அஞ்சன் மடவனமே யுன்ற னணிநடையும்
வஞ்சி யனையார் மணிநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகா ணென்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன்.

(இ - ள்) களிவண்டு - (தேனுண்டு) களித்தலை யுடைய வண்டுகள், மாண - தாம்செழிப்புறும்படி, பிடித்த-பற்றியுள்ள, தார்மன் - மலர்மாலையணிந்த நளமகாராசன்:—, மடம் அனமே - இளமையான அன்னமே!, அஞ்சல் - பயப்படாதே, உன்தன்அணிநடையும் - உன்னுடைய அழகிய நடையும், வஞ்சிஅனையார் மணிநடையும்-வஞ்சிக்கொடிபோன்ற மெல்லிய பெண்களது அழகியநடையும் (ஆகிய இவ்விரண்டனுள்,) விஞ்சியதுகாண-மேலானது இன்னதென்று பார்க்கும்பொருட்டே, பிடித்தது - (நான்உன்னைப்) பிடித்தது, என்றான்-என்றுசொன்னான்; (எ-று.)

அன்னமே! உன்னையான் பிடித்தது கொல்வதற்காவது, கூட்டிலடைத்து வருத்துவதற்காவது அல்ல. உன்நடையின் அழகினையும், உன் நடைக்கு ஒப்பாகக்கூறப்படும் பெண்களது நடையினையும் ஒப்பிட்டுப்பார்ப்பதற்கே. ஆதலால் நீ அஞ்சற்க எனக்கலங்கிய அன்னத்திற்குத் தேறுதல் கூறினனென்க. 'களிவண்டு மாணப்பிடித்ததார்மன்' என்றமையால்பிறர்க்காதாரமாய் இதஞ்செய்வதேயன்றி, பிறரை வருத்துதற்குணம் சிறிதுமிலன் என்பது தோன்றும். பிடித்தது என்பதற்கு மலர்களால் தொடுக்கப்பட்டது எனக்கூறுதலும் பொருந்தும். வண்டுக்குக்களி கள்ளுண்டலாலுண்டானது. களிவண்டு வினைத்தொகை. மாண-மாண்பு என்னும்பண்படியாகப்பிறந்த செயவெனெச்சம், காரியப்பொருளில்வந்தது. மன்-பண்பாகுபெயர். அனம்-அன்னம் என்பதன்விகாரம். அஞ்சல் - எதிர்மறை ஏவல்வினைமுற்று, அஞ்சு-பகுதி, அல்-எதிர்மறைவிகுதி; இது ஐம்பால் மூவிடங்கட்கு வாராமையால் வியங்கோள் முற்று ஆகாது. தன்-சாரியை. மட

நடையும் எனவும்பாடம். விஞ்சியது-வினையாலணையும்பெயர். பிடித்தது-இறந்தகாலத் தொழிற்பெயர், காண்-முன்னிலையசை. தேற்றத்தில் வந்ததெனினுமாம்.

[அரசன் சொல்லால் அன்னம் கலக்கம் ஒழிதல்.]

28. செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனியன்னம்—வெய்ய
அடுமாற்ற மில்லா வரசன்சொற் கேட்டுத்
தடுமாற்றந் தீர்ந்ததே தான்.

(இ-ள்) செய்யகமலம்-செந்தாமரைமலரில் வாசஞ்செய்கின்ற, திருவைநிகரான- இலக்குமியை ஒத்த, தையல்-பெண்ணால், பிடித்த-பிடித்துக் கொண்டுவரப்பட்ட, தனி அன்னம் - ஒப்பற்ற அந்த அன்னப்பறவையானது, வெய்ய - கொடிய, அடுமாற்றம் இல்லா - கொல்லும் பகைமைக் குணமற்ற, அரசன்சொல்-நளனதுபேச்சை, கேட்டு—, தடுமாற்றம் - மனக் கலக்கம், தீர்ந்தது நீங்கப்பெற்றது ; (எ-று.)

அரசன் முன்வைக்கப்பட்ட அன்னமானது அவனது இனிய ஆறுதல் மொழியால் கொலைப்பயம் நீங்கித்தெளிந்ததென்பதாம்.

• செய்ய, வெய்ய-செம்மை, வெம்மையென்ற பண்படியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சங்கள். கமலம்-கம்-ஜலத்தில், அலம்-பிரகாசிப்பது வடசொல், ஆகுபெயர். தையல்-அழகு, பண்பாகுபெயராய் அதனையுடைய வளை யுணர்த்திற்று. தனி அன்னம் பிரிக்கப்பட்ட அன்னம் எனினுமாம். அடுமாற்றம்-வினைத்தொகை. தடுமாற்றம்-தொழிற்பெயர், தடுமாறு பகுதி, அம்-தொழிற்பெயர் விகுதி. இல்லா(த) ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச சம். அன்னம் தடுமாற்றம்தீர்ந்தது, சினைவினை முதலோடுஞ்சேர்ந்தது.

[அன்னம் நளனுக்குத் தமயந்தி தக்கவள் எனல்.]

29. திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே யுன்ற
னிசைமுகந்த தோளுக் கிசைவாள்—வசையி
றமையந்தி யென்றோதுந் தையலாண் மென்றோ
ளமையந்தி யென்றோ ரணங்கு.

(இ-ள்.) திசைமுகந்த-எட்டுத்திக்கிலுள்ளாரையுந் தன்னுளடக்கிய, வெண்கவிகை - வெண்கொற்றக் குடையையும், தேர் - தேர்ச்சேனையையுமுடைய, வேந்தே-அரசனே !, இசைமுகந்த-கீர்த்தி நிரம்பப்பெற்ற, உன்தன்-உன்னுடைய, தோளுக்கு-தோள்களுக்கு, மென்தோள் - மென்மையானதோள், அமை அந்தி -மூங்கில்போலும் அழகுடையாள், என்று - என்றுசொல்லப்பட்ட, ஓர் அணங்கு - ஒருதெய்வப்பெண்போன்ற, வசையில் - (அழகு, குணம், செயல் இவற்றால்) குற்றமில்லாத, தமையந்தி

என்று —, ஓதும் - சொல்லப்பட்ட, தையலாள் - பெண்ணானவள், இசைவாள் - தகுதியாவாள்; (எ-று.)

வேந்தே! தோளுக்கு தமயந்தியென்றோரணங்கு இசைவாள் என்க.

இதனாலே அவளுனக்குக்கிடைப்பாளாயின், உனது தோள் முதலிய உறுப்புக்களின் அழகுபயன்படுமென நளனுக்குத்தமயந்தி இன்றியமையாச் சிறப்பினள் எனக்கூறியவாறு. திசை-கிழக்கு, தென்கிழக்கு தெற்கு என வரும் எட்டுத்திசைகளும், இங்கு ஆகுபெயராய்த் திசையிலுள்ளாரையுணர்த்திற்று. நால்வகைச்சேனையுள் தலைமைபற்றித் தேர் என்றார், மற்றப் படைகளுக்கு உபலக்ஷணம். ஆளுகையைக்கவிகையென்றது உபசாரம். தோளுக்கு இசைமுகத்தலாவது போரில் வெற்றிபெறுதலும், கொடைமுதலியவற்றிற்சிறத்தலும், முழந்தாள் அளவும் தாழ்ந்து திரண்டு, அழகும் வலிமையும் வாய்ந்து விளங்குதலும் ஆகிய இவற்றாலுண்டாகும் புகழைப் பெறுதல். தமயந்திக்கு வசையின்மையாவது நற்குண நற்செய்கை அழகு முதலியவற்றில் குறைவுபடாமை. அந்தத்தையுடையவள் அந்தி, (அந்தம்-அழகு) இ - பெண்பால்விகுதி, பகுதியீற்று அம்-கடைக்குறை. மூங்கில் தோளுக்கு உவமை, திரண்டு வழவழப்பாயிருக்குந்தன்மைபற்றி.

திசை - திசா என்ற வடசொல் விகாரம். தமையந்தி - யகரத்தின்முன் நின்ற அகரத்திற்கு ஐகாரம் போலியாய்வந்தது. (போலியாவது ஒருசொல்லில் ஒரு எழுத்து உள்ளவிடத்து அவ்வெழுத்துக்கீடாக வேறொரு எழுத்து வந்து நின்றாலும் பொருள் வேறுபடாமல் ஒத்திருப்பது.) கவிகை-கவிந்திருப்பது, தொழிற்பெயர்.

[நளன் தமயந்தியிடத்து ஆசைகொள்ளுதல்.]

30 அன்னமொழிந்த மொழிபுகா முன்புக்குக்
கன்னி மனக்கோயில் கைக்கொள்ளச்—சொன்னமயி
லார்மடந்தை யென்றா னநங்கன் சிலைவளைப்பப்
பார்மடந்தை கோமான் பதைத்து.

(இ-ள்.) பார்மடந்தைகோமான்-பூமியாகியபெண்ணுக்கு அரசனாகிய நளன், அன்னம்மொழிந்த அன்னப்பறவை சொல்லிய, மொழிபுகாமுன்-சொல்செவியில் நுழையாததற்குமுன்னமே, கன்னி - கன்னிப்பருவத்தினளாகிய தமயந்தி, மனக்கோயில்-தன்மனமாகியகோயிலை, புக்கு - (உள்ளே) புகுந்து; கைகொள்ள - சுவாதீனம்செய்து கொண்டதனால், அநங்கன் - மன்மதன், சிலைவளைப்ப-கரும்புவில்லையெடுத்துவளைத்ததினால், பதைத்து - மனம் பதறி, சொன்னமயில் - நீ சொல்லியமயிலுக்கு ஒப்பானவள், ஆர்மடந்தை-யாருடையமகள், என்றான் - என்று (அன்னத்தை) வினவினான்;

கோமான், மனக்கோயில் கன்னிகைக்கொள்ள, வளைப்ப, பதைத்து ஆர்மடந்தை என்றான் எனக்கூட்டுக.

அன்னம் தமயந்தியைப்பற்றிக்கூறிய இனிய வசனங்களால் தன்வச மிழந்து காமபரவசனாய் அவளது வரலாற்றையறியவிரும்பி அம்மடந்தை எவ்வரசன் குமாரத்தியென வினவினனென்றவாறும். மொழி - மொழியப்படுவது எனும்பொருளது, செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்டது. முன்-காலமுன். கன்னி-விவாகமாகாத இளம்பெண், கைக்கொள்ளுதற்கு வினைமுதல். கைக்கொள்ள-ஒருசொல்நீர்மைத்து; செய்வெனெச்சம் காரணப்பொருளது இறந்தகாலம். சிலைவளைத்தற்குக் கைக்கொள்ளுதலும், பதைத்தலுக்குச் சிலைவளைத்தலுங் காரணமாமென்க. வளைப்ப-செயவெனெச்சம். சொன்ன-இப்பெயரெச்சத்தில் இறந்தகால இடைநிலையின் முதல் குறைந்து நின்றது, மயில் என்னும் பெயரைத்தழுவிற்று. மயில் - உவம ஆகுபெயர். ஆர் யாரென்பதன் மரூஉ: (மரூஉவாவது தொன்று தொட்டு வருதலின்றி இடையில் எழுத்துக்கள் தோன்றியுந் திரிந்துங் கெட்டும் இலக்கணஞ் சிதைந்து தானே மருவி வழங்குவது) மடந்தை - இங்கேபெண் என்றமாத்திரையாய் நின்றது. அநங்கன்-ந + அங்கன் உருவமில்லாதவன், வடசொல்; சிவபெருமான், சனகாதியர்க்கு யோகநிலையை உபதேசிக்கத் தான்நிஷ்டையிலிருக்குங்கால் பிரமனாதியோர் வேண்டுகோட்கிணங்கி மலரம்புகொண்டு விக்கினஞ்செய்தகாலத்தில் மன்மதன் சிவபிரானால் நெற்றிக்கண்கொண்டு எரிக்கப்பட்டு உருவமிழந்தான் என்ற செய்தி இப்பெயர்க்கண் அறியக்கிடந்தது.

சிலை-வில்என்னும்பொருளில்வந்த இச்சொல், கல் என்னும் பொருளில் வருமிடத்து வடசொல். கோமான்-கோ-பகுதி, மான்-பெயர் விகுதி, இச்சொல்கோன் என னகரச்சாரியைபெற்றும்வரும். தமயந்தியின் அழகு முதலியவற்றைப்பற்றிக் கூறுஞ் சொல்லைக்கேட்டறிதலாகிய காரணத்திற்குமுன்னே கன்னிமணக்கோயில் கைக்கொள்ளுதலும் மன்மதன் வில் வளைத்தலுமாகிய காரியங்கள் பிறத்தலைச் சொல்லுதலால் மிகையுயர்வு நவிற்சியணியாம்.

[அன்னம் தமயந்தியின் வரலாற்றைக் கூறத்தொடங்கல்]

31. எழுவடு தோண் மன்னா விலங்கிழையோ் தூண்டக்
கொழுநுதியிற் சாய்ந்த குவளை—யுழுநர்
மடைமிதிப்பத் தேன்பாயு மாடொலிநீர்நாடன்
கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு.

(இ-ள்.) எழு அடு தோள் - தூணைவென்றதோளையுடைய, மன்னா அரசனே, இலங்கு இழை விளங்குகின்ற ஆபரணங்களையணிந்த தமயந்தியாகிய அப்பெண்ணானவள், உழுநர்--உழவர், ஏர்தூண்ட--ஏரைச்செலுத்துகையில், கொழுநுதியில்-கொழு என்னுங்கருவியின் நுனியால், சாய்ந்த-சாய்ந்துவிழுந்த, குவளை -குவளைமலர்களினின்றும், மடைமிதிப்ப--(அவ்வுழவர் வரம்பின்றி பெருக்குமிகுதிபற்றி) நீர்மடைகளை மிதித்து விடும்படி

தேன்பாயும் - தேன்பாயப்பெற்ற, மாடு - பக்கங்களையுடைய, ஒலிநீர்நாடன் ஒலிக்கின்ற நீர்வளப்பமிக்க விதர்ப்பநாட்டரசனாகிய, கொடைவிதர்ப்பன்-- கொடுக்குங்குணமுடைய வீமராஜன், பெற்றது ஓர்கொம்பு--பெறப்பட்ட வளாகிய ஒப்பற்ற பூங்கொம்புபோல்வாள்: (எ-று.)

மன்னு! இலங்கிழை நாடன்பெற்ற கொம்பு என்க. உழவர்கள் உழும் படைச்சாலில் சாய்கின்ற குவளைச்செடிகளின் பூக்களினின்றும் பெருக் கெடுத்துப்பாய்கின்றதேன் நீருடன் கலந்து மிகுதியும் வயலகத்துப் பெரு கிக்கொள்வதால், வேண்டிய அளவு வடித்துக்கொள்வதற்கு வயல்களில் நீர் செல்லும் வழியாகிய மடைகளைக் காலால்மிதித்து உடைத்துவிடுவார் கள் என அந்நாட்டின் நீர்நிலவளப்பமிகுதி கூறியவாறும். குவளைமடை மிதிப்பத் தேன்பாயும் என்பதற்கு-குவளைப்பூக்களை மடைவர்யினிடத்து மிதிப்பதினால் அவைகளினின்றும் தேன்பாய்கின்ற என உரைத்தலுமாம்.

தனக்கு உவமையாகும் தூணையும் வென்றுவிளங்குமென நளனது தோள்வனப்பைக்குறிக்க 'எழுவடுதோள்' என்றார். அடுதோள் - வினைத் தொகை தூண்போன்ற தோளௌன்பாருமுளர். இலங்கிழை-வினைத்தொ கைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. ஏர்தூண்ட-இரண்டாம்வேற் றுமைத்தொகை நிலைத்தொடர். நுதியிற்சாய்ந்த - மூன்றும்வேற்றுமைப் பொருளில்வந்த உருபுமயக்கம். உழுநர் என்ற வினைமுதலை மிதிப்ப - என்ற வினைக்கும் கூட்டுக. தூண்ட, மிதிப்ப - செயவெனெச்சங்கள். ஒலிநீர் - வினைத்தொகை. கொம்பு என்றதற்கேற்ப, பெற்றது என்றார். கொடை - தொழிற்பெயர், கொடு-பகுதி, ஐ-விகுதி.

32. நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்சா
வார்க்குஞ் சிலம்பே யணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீ
ழாளுமே பெண்மை யரசு.

(இ-ள்) (தமயந்தி) நால்குணமும்--நான்குகுணங்களும், நால்படை ஆ(க) -- நான்குவகைச்சேனையாகவும், ஐம்புலனும் -- ஐந்துபொறிகளும், நல் அமைசச ஆ--அறிவுடையமந்திரியாகவும், ஆர்க்கும் சிலம்பே--(பாதத் தில் அணியப்பெற்று) ஒலிக்கின்ற சிலம்பு என்னும் ஆபரணங்களே, அணி முரசு ஆ--அழகிய முரசவாத்தியங்களாகவும், கண் (எ)--கண்களே, வேல் படையும்வாளும்ஆ -- வேலாயுதமும் வளாயுதமுமாகவும், வதனம் மதி குடைக்கீழ் - முகசந்திரனாகியகுடையின்கீழே, பெண்மை அரசு - பெண் தன்மையாகிய ராச்சியத்தை, ஆளும் - ஆளுவாள்: (எ-று)

நான்கு குணங்களே (தன்னைக்காக்கின்ற) சதுரங்கசேனைகளாகவும், பஞ்சேந்திரியங்களே நன்னிலையில் நிறுத்தும் அறிவிற்சிறந்த மந்திரிக ளாகவும், காலிலணிந்திருக்கும் நூபுரங்களே பெருமை முதலியவற்றை

வெளிப்படுத்தும் முரசவாத்தியங்களாகவும் தன்னுடைய கண்களே எதிர்த்தவரை வருத்தும் வேலாயுசமும் வாளாயுதமுமாகவும் ஓர் அரசனைப்போல் கொண்டு முகமாகிய சந்திரவட்டக்குடையின்கீழ் பெண்தன்மையாகிய ஆளுகையைச்செய்யும் என்பதாம்.

நாற்குணங்களாவன — நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு. நாணமாவது-.பெண்டிர்க்கு இயல்பாக அமைந்துள்ள மனவொடுக்கம். மடமாவது-அறிவித்தும் பேதைமையால் தான்கொண்டது விடாமை. அசசமாவது--காணுதவொன்றைக் கண்டவிடத்துக்கொள்ளும்பயம். பயிர்ப்பாவது பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்குநிலைமை. நான்குபடைகள் தேர், கரி, பரி, காலாள் என்பவை. ஐம்புலன்-மெய், வாய், கண், மூக்கு, செவி, புலன் ஈணடுபொறியின்மேனின்றது--சிலம்பே என்னுமிடத்துள்ள பிரிநிலை ஏகாரத்தைகுணம். புலன் எ்பவற்றிற்கும் கூட்டுக. இசசெய்யுளால் தமயந்தி குணம்செயல் அழகு முதலியவற்றில் ஒப்புயர்வற்றவளாய், மனத்தைப் பொறிவழிப் போக்காது பெண்கள் நாயகமாய் விளங்கினுள் என்பது பெறப்படும். நாற்குணம், நாற்படை, ஐம்புலன்-தொகைக்குறிப்பு, வாளுமே என்ற இடத்துள்ள ஏகாரத்தைக் கண் என்பதனோடும், கண்ணு - என்பதிலுள்ள ஆகாரத்தை வேற்படையும் வாளும் என்பவற்றோடும் கூட்டிப் பொருள்கொள்க. கண்-பால்பகா அஃறிணைப்பெயர். ஆக என்னும் செயவெனெச்சங்கள் ஈறுகுறைந்தன, ஆளும்-செய்யும் என்னும்முற்று, பெண்பாலுக்கு வந்தது. குணம், முரசம், வதனம்-வடசொற்றிரிபு. இச்செய்யுளுள் நாற்குணம் படையாகவும் ஐம்புலன்கள் அமைச்சாகவும், சிலம்பு முரசாகவும், கண்கள் வேலும் வாளுமாகவும், பெண் தன்மை ஆளுகையாகவும், உருவகஞ் செய்திருத்தலால் சிறப்புருவகம். இதனை வடநூலார் சவிசேஷணரூபகம் என்பர். வதனத்தை மதியாக உருவகம் செய்து அதனையே பெயர்த்தும் குடையாக உருவகம் செய்தமையால் உருவக உருவகம்.

33. *மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தேற
மாட்டா *திடையென்று வாய்விட்டு—நாட்டே
னலம்புவார் கோதை *யடியிணையில் வீழ்ந்து
புலம்புமா நூபுரங்கள் பூண்டு.

(இ-ள்.) இடை-இடையானது, மோடு இளங்கொங்கை - உயர்வாகிய, இளமை பொருந்திய முலைகளை, சுமந்து ஏறமாட்டாது - தாங்கி நிற்க மாட்டாது, என்று-, ஈள்தேன் - புதியதேன், அலம்பு - ததும்புகின்ற, வார்-நீண்ட, கோதை - கூந்தலையுடைய தமயந்தியின். இணையடியில் - இரண்டு பாதங்களிலும், நூபுரங்கள் - சிலம்புகள், வீழ்ந்துபூண்டு-வீழப்பெற்றுவிடாமற் பற்றி, வாய்விட்டுப் புலம்பும்-வாய்விட்டு அலறும்; (எ-று.)

* இடைசுமந்தேறமாட்டாதென்று நூபுரம் கோதை அடியில் வீழ்ந்து பூண்டு வாய்விட்டுப் புலம்பும் என்க.

பிறர் துயரங்கண்டிரங்கும் பெரியோர் போல நூபுரம், நுண்ணிய இடை கொங்கைகளைச் சுமந்து நிற்க ஆற்றாதென வருந்தி முறையிட்டதென்பதாம். இயற்கையாகப் பாதங்களில் அணியப் பெற்று ஒலிக்கும் சிலம்பின் ஒலியை இங்ஙனம் குறித்தார். இது தற்குறிப் பேற்றவணி. இதனால் இவளது பருவத்தழகும், இடையின் நுண்மையும் விளங்கும். சிலம்பு வாய்விட்டரற்றுதலாவது - சிலம்பினுளிட்டிருக்கும் பரல்மணிகளால் நடக்குந்தோறும் கலீர் கலீர் என்றொலி யுண்டாதல். மாலைகளை மிகுதியாக அணிந்திருத்தலால் அலம்புவார் கோதை என்றார். இதனால் மலர்களிலுள்ள தேன் மிகுதி விளங்கும். நாள்தேனாவது-அன்றலர்ந்த மலர்களிலுண்டாகுந்தேன். கோதை-மாலையுமாம். இதனை "கோதை முன்கைத்தோற் கட்டி குழல்தார் காற்றொழுங்கு சேரன்" என்ற நிகண்டாலும், 'கொங்கு விம்மு கோதையொடு கோதைதாழ' என்ற பின்னோர் வாக்காலும் அறிக. மோடு-மோட்டென, குற்றியலுகரம் தன்னொற்றிரட்டிற்று. அலம்பு, வார்-வினைத்தொகை; வார்கோதை - வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. புலம்பும்-செய்யும் என்னும் முற்று ஆம்-அசை. மாட்டாது - ஒன்றன்படர்க்கை எதிர்மறை வினைமுற்று. இடை-ஆகுபெயர். கோதை நூபுரம் - வடசொல். இதுவும் அடுத்ததும் இடையின் சிறப்பு.

34. என்று நுடங்கு மிடையென்ப வேழுலகு
நின்ற கவிகை நிழல்வேந்தே—யொன்றி
யறுகாற் சிறுபறவை யஞ்சிறகால் வீசுஞ்
சிறுகாற்றுக் காற்றாது தேய்ந்து.

(இ-ள்.) ஏழ் உலகும் - ஏழுதீவுகளிலும், நின்ற - நிலைபெற்ற, கவிகை நிழல்வேந்தே-குடையின் நிழலையுடைய அரசனே, இடை - தமயந்தியின் இடையானது, அறுகால் சிறுபறவை — ஆறுகால்களையுடைய வண்டுகள், ஒன்றி--பொருந்தி, அம்சிறகால்- -(தமது) அழகியசிறகுகளால், வீசும்--வீசுகின்ற, சிறுகாற்றுக்கு -- மெல்லியகாற்றுக்கு, ஆற்றாது -- பொறுக்காது தேய்ந்து -- சுருங்கி, நுடங்கும்--அசைந்துகொண்டிருக்கும், என்ப;

வேந்தே இடை காற்றுக்கு ஆற்றாது தேய்ந்து நுடங்கும் என்க.

உலகு என்பது ஈண்டு தீவு என்னும் பொருளது. தீவு ஏழாவன நாவல், இரலி, குசை, கிரௌஞ்சம் கமுகு, தெங்கு புட்கரம், இவற்றை "இவர் சரு நாவலோடே யிறலியே குசை கிரவுஞ்சம், புலி புனை கமுகு தெங்கு புட்கரந்தீவேழின்பேர்" என்ற சூடாமணிநிகண்டாலுமறிக, ஏழுலகு நின்ற கவிகை நிற்றலாவது--அவை ஏழும் இவனது ஆளுகைக்குட்பட்டிருத்தல். இச்செய்யுளாலும் மிகச்சிறிய வண்டினது இறகின் காற்றிற்கும் ஆற்றாது நுடங்கும் என இடையினது மெல்லிய நுட்பத்தைக் கூறியவாறும். தமயந்தி கூந்தலிற்சூடியிருக்கும் மலர்மாலைகளில் தேனையுண்டற்கு வண்டுகள் அவள்பக்கல் சென்றடையுமென்க. அறுகால் என்ற விசேஷணத்தால் சிறுபறவை வண்டையுணர்த்திநின்றது. பொன்வரிகளைப்பொருந்

தப்பெற்றிருத்தலால் அஞ்சிறகென்றும், மெல்லிய இறகால்வந்த காற்றாத லால் சிறுகாற்று என்றும் கூறினர். அறுகால் என்பதை அன்மொழித்தொகையாகக்கொண்டு அறுகாற் சிறுபறவை என்பதை இருபெயரொட்டுப் பண்புத் தொகையெனினுமாம்

எழுலகு பண்புத்தொகை, என்ப - பலர்பாற்படர்க்கை வினைமுற்று. பறவை-தொழிலடியாகப் பிறந்தபெயர் பற பகுதி, வ்-சந்தி ஐ வினைமுதற் பொருள் விகுதி. அறுகாற்சிறுபறவை-இரண்டனுருபும் பயனும் தொக்கன.

35. செந்தேன் மொழியாள் செறியளக பந்தியின்கீழ்
இந்து முறியென் றியம்புவார்—வந்தென்றும்
பூவாளி வேந்தன் பொருவெஞ் சிலைசார்த்தி
ஏவாளி தீட்டு மிடம்.

(இ-ள்.) பூவாளிவேந்தன்--புஷ்பபாணங்களையுடைய அரசன் (மன்மதன்), என்றும்வந்து - எப்பொழுதும்வந்து, பொருவெம்சிலை - போர்செய்தற்குரிய கொடியவில்லை, சார்த்தி--வைத்து, ஏ ஆளி - அம்புவரிசைகளை, தீட்டும் இடம் - தீட்டுகிற இடமானது, செம்தேன்மொழியாள் - செம்மையான தேன்போன்ற இனியசொற்களையுடைய தமயந்தியினது, செறி - நெருங்கிய, அளகபந்தியின்கீழ்-முன்மயிர்வரிசையின்கீழ் (இருக்கிற), இந்து முறி - சந்திரனது துண்டம், என்று இயம்புவார் - என்று சொல்வார்கள்.

வேந்தன் தீட்டுமிடம் இந்துமுறி என்றியம்புவார். தீட்டுமிடம்-தீட்டுதற்குரிய சாணைக்கல். இந்து முறியென்றது - இளம்பிறையைப்போன்ற நெற்றியை, உருவகம். சிலையென்றது தமயந்தியின்புருவத்தை. முறி-தொழிலடியாகப்பிறந்தபெயர், முறி-பகுதி, செயப்படுபொருள் விகுதி ஐ புணர்ந்துகெட்டது. இந்துமுறி ஆறாம்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். இனி வேந்தன் தீட்டும் இடமாகிய நெற்றியை இந்து முறியென்றியம்புவார் எனவு மியைத்துப்பொருள் கூறலாம். செறிஅளகம்-வினைத்தொகை.

மன்மதன் மலரம்புகளையுடையவனாதலால் பூவாளி வேந்தன் என்றார் ஏவாளி - கூர்மையான அம்புகளெனினுமாம். பந்தி, இந்து - வடசொல். இப்பாட்டால் நெற்றியின் சிறப்பன்றி, 'செந்தேன் மொழியாள்' என்ற வகையால் சொல்லின் வனப்புங்கூறினர்.

[நளன், அன்னத்தைத் தமயந்தியோடு சம்பந்தம் யாதெனல்.]

36 அன்னமே நீயுரைத்த வன்னத்தை யென்னாவி
உன்னவே சோரு முனக்கவளோ—டென்னை
அடைவென்றான் மற்றந்த அன்னத்தை முன்னே
நடைவென்று டன்பா னயந்து.

(இ-ள்.) அந்த அன்னத்தை-(தமயந்தியைப்பற்றிச்சொல்லிய)அவ்வன்னப்பறவையை, முன்னே - இளம்பருவததிலேயே, நடைவென்றாள்தன்பால் - வெற்றிகொண்டவளாகிய தமயந்தியினிடத்தில், நயந்து - விருப்பமுற்று, அன்னமே!—, நீ உரைத்த அன்னத்தை - நீ இப்பொழுது என்னிடம் சொல்லிய அன்னம்போல்பவளாகிய தமயந்தியை, உன்ன - நினைக்க, என்ஆவிசோரும் - எனது உயிர்தளர்கின்றது, உனக்கு அவளோடு—, அடைவு என்னை என்றான் யாதுசம்பந்தம் என்று விஞவிஞன்; (எ-று.)

தமயந்தின் அழகுமுதலியவற்றை அன்னத்தின்வாயிலாக உணர்ந்த நளன், அவள்மீது ஆசைமீதூரப்பெற்று, அவளைத்தனக்குக் கூட்டுவித்தற் குரிய் இயைபு அன்னத்திற்குண்டோ எனத் தெரிய எண்ணங் கொண்டு இவ்வாறு விஞவிஞன் என்க. உன்னவே என்றதிலுள்ள ஏகாரம் இனி அவளை நேரிற் கண்டால் மிகுந்த காமமயக்கத்தைக் கொடுக்கும் என்பதை உணர்த்தி நின்றது.

அவளோடு-ஓடு என்ற மூன்றனுருபு ஏழாம்வேற்றுமைப் பொருளில் வந்தது. அடைவு-சேர்க்கை, தொழிற்பெயர்; அடை-பகுதி, வு-தொழிற்பெயர்விகுதி. நடை-தொழிற்பெயர், என்னை-எவன் என்பதன் மரூஉவாகிய விஞவினைக்குறிப்புமுற்று. முதலடி மூன்றுஞ்சீர்க்கண்ணுள்ள அன்னம்-உவம ஆகுபெயர். உன்ன-செயவெனச்சம்.

[அடைவு என்னையென்றதற்கு அன்னம் விடையளித்தல்.]

37. பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாமவடன்
மாமனைவாய் வாழு மயிற்குலங்கள்—காமன்
படைகற்பான் வந்தடைந்தான் பைந்தொடியாள் பாத
நடைகற்பான் வந்தடைந்தே(ம்) நாம்.

(இ-ள்.) பூமனைவாய்வாழ்கின்ற-தாமரைமலராகிய வீட்டில் வாசஞ்செய்கின்ற, புள்குலங்கள்-பறவைக்கூட்டங்களாகிய, யாம், அவள்தன்-தமயந்தியினுடைய, மாமனைவாய்வாழும்-பெரியமாளிகையில் வாசஞ்செய்கின்ற, மயில்குலங்கள் மயில்கள் கூட்டங்களாகவிருக்கிறோம், காமன்-மன்மதன், படைகற்பான்-(அவளுடையகண்களிடத்தில்) படைத்தொழிலைக் கற்கும்பொருட்டு, வந்து அடைந்தான்-வந்துசேர்ந்தான், நாம் - நாங்கள், பைந்தொடியாள்-பசியவளையல்களணிந்ததமயந்தியினுடைய, பாதம் - கால்களிடத்தில், நடை கற்பான்-நடையைக் கற்பதற்கு, வந்து-விருப்பத்துடனே கருதி, அடைந்தேம்-சேர்ந்தோம்; (எ-று.)

எனவே தமயந்திக்கு விளையாட்டுப் பொருளாய் உடனுறைதலே எங்கட்கும் அவட்குமுள்ள சம்பந்தம் என்றதாயிற்று.

பூமனை - பண்புத்தொகை. பூ - தலைமைபற்றி மலர்களிலுயர்ந்த தாமரைக்காயிற்று, பூ என்பதில் வினைமுதற் பொருள் விகுதி இ-புணர்ந்துகெட்

டது. வாய்-எழனுருபு, யாம் என்றது தன் இனங்களை யுளப்படுத்தி. நடையழகிற்சிறந்த அன்னமே "தமயந்தி யிடத்து நடை கற்பான் வந்தடைந்தேம்" என்றமையால் தமயந்தியின் நடையழகு மிகுதி கூறியவாறும். நடைக்குக் கற்குமிடம் பாதம் என்றமையால் படைக்குக் கற்குமிடம் தமயந்தியின் கண் என வருவித் துரைக்கப்பட்டது. ஆடவர் மனத்தைக்கவர்ந்து வருத்துகின்ற தன்மையால் கண்கள் மன்மதனுக்குப் படை பயிற்று மிடமாகக் கூறப்பட்டன. இதனால் பருவத்தின் அழகு கூறியவாறு, கற்பான்-பானீற்று எதிர்கால வினையெச்சம், படை-ஆகுபெயர், தொழிலை யுணர்த்திற்று (படை-பகைவரைப் படுக்கும் கருவி படு-பகுதி, (படுத்தல் - அழித்தல்), ஐ - கருவிப்பொருள் விகுதி). அடைந்தேம்-தன்மைப் பன்மை.

38. இற்றது நெஞ்ச மெழுந்த திருங்காதல்
அற்றது மான மழிந்ததுநாண்—மற்றினியுன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடையான் தேர்ந்து.

(இ-ள்.) வெம்காமம் தீஉடைய-வெப்பம்பொருந்திய காமமாகிய தீயை யுடைய, நெஞ்சு உடையான் - மனமுடைய நளன், தேர்ந்து - துணிந்து, நெஞ்சம் இற்றது-மனநிலையழிந்தது, இரும்காதல் எழுந்தது-மிகுந்த ஆசை அதிகரித்தது, மானம் அற்றது - மானம் ஒழிந்தது, நாண் அழிந்தது-நாணம் கெட்டது, (ஆதலால்) இனி - இனிமேல், என்னுடைய வாழ்வு-எனது உயிர்வாழ்க்கை, உன்வாய்உடையது - உன்வாயின் சொல்லளவிலே நின்றது, என்றான்-என்று சொன்னான்; (எ-று.)

எனவே தமயந்தியைப் பெறுதல் உன்னாலன்றி என்முயற்சியால் ஆவதொன்றில்லையென அவளையடைதலின் அருமை கூறியவாறும்.

உன்வாயுடையது என்னுடைய வாழ்வு என்றான் என்றதன் குறிப்பு நீபோய் உனது சொற்சாதுரியத்தால் அவளை எனக்கு உடம்படுத்தி வருவாயாயின் யான் உயிரோடிருப்பன், இன்றேல் உயிர்நீங்கப் பெறுவேன் என்றதை வெளிப்படுத்தியது., வாய் உடையது என்றது, அன்னத்தின் சொற்சாதுரியத்தால் ஆகும் காரியத்தை. நெஞ்சம்இறுதல்-ஆடவர்க்குரிய அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடியாகிய குணங்கள் கெடுதல். இற்றது ஒன்றன்பாற்படர்க்கை இறந்தகாலவினைமுற்று, இறுஎன்றபகுதி இரட்டித்தது. மானம்-நற்குடியிற் பிறந்தவன் எஞ்ஞான்றுந் தன்னிலையி னின்று தாழாமையும், ஒரோவழி தாழ்வுவந்தவிடத்து உயிர் வாழாமையும் ஆம். "மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னா, ருயிர் நீப்பர் மானம் வரின்" என்ற ஆன்றோர்வாக்கு இங்கு அறியத்தக்கது. நாணுவது - மனம்கூசுதலுடைமை. காமம், தீப்போல் நினைத்தாரைச்சுட்டு வருத்துதலால் காமத்தீ என்றார். மற்று-இது வினைமாற்றுப் பொருளில் வந்தது. வாழ்வு - தொழிற்பெயர்.

39. வீமன் திருமகளாம் மெல்லியலை உன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன்—சேம
நெடுங் குடையாய் என்றுரைத்து நீங்கியதே அன்னம்
ஒடுங்கிடையாள் தன்பால் உயர்ந்து.

(இ-ள்) சேமம்-(உயிர்களுக்குநிழலால்) காவலான, நெடும் குடையாய்-பெரிய குடையையுடைய அரசனே, வீமன் திருமகளாம் - வீமராசனது புத்திரியான லட்சுமியையொத்த தமயந்தியான, மெல்லியலை - மெல்லிய மேனியாளை, உன்னுடைய-, வாமம்நெடும்புயத்து-அழகியபெரிய தோள்களிடத்து, வைகுவிப்பேன்-தங்கும்படிசெய்வேன், என்று உரைத்து-என்றிவ்வாறுசொல்லி, அன்னம்-அன்னமானது, ஒடுங்கு இடையாள் தன்பால்-சிறுத்த இடையையுடையவளான தமயந்தியிடத்து, உயர்ந்து - உயரப்பறந்து, நீங்கியது-போயிற்று; (எ-று).

பல அரசர்களும் விரும்புதற்கேதுவாகிய அழகுநலம் வாய்ந்த தமயந்திக்கு, உனது அழகுமுதலிய பெருமைகளையெடுத்துக்கூறி உன்னை இடைவிடாது நினைக்கும் உள்ளத்தளாகச்செய்து அவள் உன்னையேமணஞ் செய்துகொள்ளும்படி செய்து முடிப்பேன் என, அவள்மீது விருப்புற்று வருந்துகின்ற நளனைத் தேற்றியவாறும்.

மெல்லியல் என்பதை மென்மையென்னும் பண்படியாகப் பிறந்த அன்மொழித்தொகையாகக்கொண்டு தமயந்தியெனப்பொருளுரைக்க. உலகத்துயிர்களை வெண்குடையால் தண்ணிழல்தந்து புரக்கும் தண்ணளியையும் மனத்தூய்மையையுமுடைய உனக்கு எண்ணியது எளிதிற்கைகூடும் என்பதை உணர்த்துதற்குச் 'சேமநெடுங்குடையாய்' என அரசனை அன்னம் விளித்தது. நெடும்புயத்துவைகுவித்தல் என்றது அறநெறியால் செய்துவைக்கும் மணத்தை, வைகுவிப்பேன் - பிறவினைத்தன்மை யொருமை எதிர்காலவினைமுற்று, வைகு-பகுதி, வி-பிறவினைவிகுதி. வீமன், புயம், சேமம்-வடசொல் விகாரம். பீமன் என்பது வீமன் எனத் திரிந்தது. பீமன் என்பதற்குப் பகைவரை அஞ்சச்செய்பவன் என்று பொருள்.

அன்னமாகிய பறவைக்கும், நளனாகிய மானுடனுக்கும் சம்பாஷணை நடந்ததென்பது எவ்வாற்றால் ஒக்குமெனின், —தேவலோகத்து அன்னமெனக்கூறப்படுதலால் மனிதபாஷையறிந்து நளனுடன் பேசிற்றென்றுவது, அக்காலத்துமாந்தர்பலர் பறவையின்பாஷை உணர்ச்சி பெற்றிருந்தாராதலால் பேசிற்றென்றுவது கொள்ளப்பொருந்துமென்க.

பறவைமுதலியவற்றிற்கும் பாஷையுண்டென்பதை "பேய்பூதம்மந்திகிளிபூவை பேசுதலா, லாகுமே தன்மைபொது" என்ற சூத்திரத்தானுமுணர்க. ஒடுங்கு இடை-வினைத் தொகைநிலைத்தொடர்.

[இதுமுதல் ஐந்துபாட்டு நளனது கைக்கிளை]

40. இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற் காணுங்கொல்
இவ்வளவிற்காத லியம்புங்கொல்—இவ்வளவின்
மீளுங்கொ லென்றுரையா விம்மினான் மும்மதநின்
றாளுங்கொல் யானை யரசு.

(இ-ள்) மும்மதம் நின்று-மூன்றுமதங்களும் பொருந்தி, ஆளும் - ஆட்சிசெய்யும்படியான, கொல்யானை அரசு-கொல்கின்ற யானையையுடைய நளமகாராசன், இவ்வளவில்செல்லும்கொல் - இதுவரைசென் றிருக்குமோ, இவ்வளவில்காணும்கொல் - இவ்வளவுநேரத்திற் பார்த்திருக்குமோ, இவ்வளவில் காதல் இயம்பும்கொல் - இவ்வளவுகாலத்துள் (தனது) ஆசையைச் சொல்லியிருக்குமோ; இவ்வளவில்—, மீளும்கொல் - (அன்னம்) திரும்புமோ, என்று உரையா-என்று சொல்லிக்கொண்டே, விம்மினான் - துக்கத்தினால் தேம்பிக்கொண்டிருந்தான்; (எ-று.)

காமமுற்றோர்க்கு ஓர்நாழிகை ஓர் ஊழிபோற் காணப்படுமாதலால், இவ்வளவிற்செல்லுங்கொல் என்று நினைத்ததற்குப்பிற்பட்ட சிறிதுகாலத்தைப் பெரிதாய் எண்ணி இவ்வளவிற் காணுங்கொல் என்றது முதலாக எடுத்துக்கூறி நளன் வருந்தினான் என்றவாறாம்.

மும்மதங்களாவன கன்னமதம் கபோலமதம், கோசமதம் என்பன. வடநூலர் எழுமதமுங் கூறுவர். நால்வகைச் சேனைகளிலும் யானைச் சேனையே சிறத்தல்பற்றி யானையரசு என்று விசேடித்தார். யானையரசு - யானைபோன்ற அரசெனினுமாம். யானையேசிறந்தது என்பது 'தானை யானை குதிரை' யென்ற புறத்திணையியற் சூத்திரத்தால் அறியப்படும். மும்மதம் என்றவிடத்து உம்மை விகாரத்தால்தொக்கது. மும்மதத்தை யாளுதலாவது, அவற்றைத் தன்வசப்படுத்தி நிற்றல்.

கொல்யானை-வினைத்தொகை. அளவு காலத்திற்குப் பண்பாகுபெயர். கொல் என்னும் இடைச்சொற்கள் ஐயப்பொருளில் வந்தன. இதனை "கொல்லேயையமசை நிலைக்கூற்றே" என்ற (நன் - இடை-16.) சூத்திரத்தாலுணர்க. உரையா-செய்யா என்னும் வாய்பாட்டு உடன் பாட்டு இறந்தகாலத்தெரிநிலை வினையெச்சம். விம்முதல்-பெருமூச்செறிதல்.

41. சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி அழிந்திட்டான்—பூவி

* கைக்கிளை-ஒருபக்கத்தில் உண்டாவது, கை-சிறுமை, கிளை-உறவு எனப்பொருள் கூறுதலுமொன்று. இது தலைவியின்வேட்கைக்குறிப்பு தன்மேல் நிகழ்வதன்முன் தலைவன் தன்காதல்மிகுதி கூறுதலால் கைக்கிளையாயிற்று. இது ஆண்பாற் கைக்கிளை.

னிடையன்னஞ் செங்கா லிளவன்னஞ் சொன்ன
நடையன்னந் தன்பா னயந்து.

(இ-ள்.) (நளன்) பூவின் இடைஅன்னம் - செந்தாமரைப்பூவில் எழுந்தருளியுள்ள அன்னம்போலும் திருமகளையொத்தவளும், செம்கால் இள அன்னம்சொன்ன - சிவந்த காலையுடைய இளமையாகிய அன்னத்தினாற் சொல்லப்பட்ட, நடை அன்னம் தன்பால் - நடையிற் சிறந்த அன்னம் போன்ற தமயந்தியினிடத்து, நயந்து - விருப்பங்கொண்டு, சேவல் - ஆண் குயில், பெடைகுயிலுக்கு - பெண்குயிலுக்கு, பேசும் - (கலவிக்குறிப்பைக் காட்டிப்) பேசுகின்ற, சிறுகுரல் கேட்டு - மெல்லிய ஓசையைக்கேட்டு, ஆவி உருகி-உயிர் தளர்ந்து, அழிந்திட்டான்-அறிவிழந்தவனானான்; (எ-று)

ஒன்றோடொன்று குலவிக்கூவும் குயிலினொலியைக் கேட்டுத் தமயந்தியிடம் காதல்கொண்ட தானும் அவ்வாறு தமயந்தியை மணந்திருத்தற்கில்லையே என வருந்தினானென்க.

குயில்-கேட்போர் மகிழும்படி பாடுகின்ற இனிய ஓசையுடைய ஓர் பறவை. மாரனுக்குக்காகளவாத்தியமான குயிலினது சிறுகுரல் காமோத்தீபகமாய்க் காமுகரைமிகவருத்தும். பிறருக்கு இனிமையானவையெல்லாம் காமுகர்க்கு வெறுப்பைத்தருகின்றனவாகவே தோன்றுமாதலால், இனியகுயிலோசையும் நளனுக்குத் துன்புறுத்துவதாயிருந்தது.

சேவலே பறவை யாண்பாற்பெயர், "சேவற்பெயர்க்கொடைசிறகொடு சிவணும், மாயிருந்தூவி மயிலலங்கடையே" என்பதனால், ஆண்குயில் சேவலெனப்பட்டது. பெடைக்குயில் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை, குயிற்பெடையென மாற்றுக. ஆவியுருகுதலுக்கும் அழிதலுக்கும், நயந்தலும் கேட்டலும் காரணமாய் நின்றன. பூவின் இடை அன்னம் நடை அன்னம், இவற்றில் அன்னம் உவமையாகு பெயர். அழிந்திட்டான்-ஆண்பாற்படர்க்கை இறந்தகாலவினைமுற்று; அழி - பகுதி, இடு - பகுதிப்பொருள் விகுதி அல்லது துணைவினை. இடை - ஏழனுருபு.

42, அன்ன முரைத்த குயிலுக் கலசுவான்
மென்மயிறன் றோகை விரித்தாட—முன்னதனைக்
கண்டாற்றா துள்ளங் கலங்கினான் காமநோய்
கொண்டார்க்கிஃ தன்றோ குணம்.

(இ-ள்.) அன்னம் உரைத்த - அன்னத்தினால் சொல்லப்பட்ட, குயிலுக்கு-குயில்போன்றவளாகிய தமயந்தியின்பொருட்டு, அலசுவான்-வருந்துகின்ற நளன், மெல்மயில் - மிருதுத்தன்மைவாய்ந்த மயிலானது, தன் தோகைவிரித்துஆட - தனதுகலாபத்தைப்பரப்பி ஆடாநிற்க, அதனைமுன் கண்டு அங்ஙனம் விரித்தாடும் மயிலினைத் தனக்கு எதிரில்பார்த்து, ஆற்றாது - பொறுக்காது, உள்ளம் கலங்கினான் - மனம்கலங்கிநின்றான், க

நோய் கொண்டார்க்கு - காமவியாதியுள்ளவர்களுக்கு, குணம் - வன்மை, இஃது அன்றோ-இப்படிக்கலங்குதலல்லவா, (கலங்குதலேயாம்); (எ-று.)

கண்டார்க்குச் சந்தோஷத்தை விளைக்கும் மயிலின் நர்த்தனம், நளன் விரகியாதலால் அவனுக்கு வருத்தத்தை யுண்டுபண்ணுவதாயிற்று.

குயில்-தமயந்திக்கு. இனியமொழிக்கு உவமை; இருமடியாகு பெயர். குயிலுக்கு நான்காம் வேற்றுமைக்குவ்வுருபு பொருட்டுப்பொருளது. அல சுதல்-மனம் ஒருநிலைநில்லாது கலங்குதல். அலசுவான் - வினையாலணையும் பெயர். அதனை-அது-ஒன்றன்பாற்பெயர், அன் சாரியை, ஐ - இரண்டாம் வேற்றுமை உருபு உள்ளம் கலங்கினான் "உயர்திணைதொடர்ந்த பொருள் முதலாறு மதனொடுசார்த்தினத்திணைமுடிபின" என்ற (நன்பொது சூ-26) விதிப்படி உயர்திணையொடு சேர்ந்த அஃறிணைச் சினைப்பெயர் அவ்வுயர் திணை முடிபையே பெற்றது; இது திணைவழுவமைதி. காமநோய் - இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. அன்றோ-ஒகாரம் வினாப்பொருள். நளன் மயிலாடுதலைக்கண்டு வருந்தினான் என்ற சிறப்புப்பொருளை, 'காமநோய் கொண்டார்க்கிஃதன்றோ குணம்' என்ற பொதுப்பொருளால் சாதித்த லால், இது வேற்றுப்பொருள் வைப்பணி.

43. வாரணியுங் கொங்கை மடவாள் நுடங்கிடைக்குப்
பேருவமை யாகப் பிறந்துடையீர்—வாரீர்
கொடியா ரெனச்செங்கை கூப்பினா னெஞ்சந்
துடியா நெடிதுயிராச் சோர்ந்து.

(இ-ள்) (நளமகாராசன்) நெஞ்சம் துடியா - மனந்துடித்து, நெடிது உயிரா-பெருமூச்செறிந்து, சோர்ந்து - தளர்ந்து, கொடியார் - பூங்கொடி யாரே, வார் அணியும் கொங்கை - கச்சையணிந்திருக்கின்ற தனங்களை யுடைய, மடவாள் - தமயந்தியினது, நுடங்கு இடைக்கு - அசைகின்ற இடைக்கு, பேர் உவமை ஆக - பெருமைதங்கிய உவமைப்பொருளாகும் படி, பிறந்து உடையீர் - பிறந்து அப்பேற்றைப் பெற்றிருக்கிறவர்களே, வாரீர் - வாருங்கள், என-என்று, செம்கைகூப்பினான் - சிவந்தகைகளைக் குவித்து அவற்றை அழைத்தான்; (எ-று.)

நளன் துடியா, உயிரா, சோர்ந்து கொடியார் உடையீர் வாரீர் எனக் கூப்பினான் எனக் கொண்டு கூட்டுக.

அசைந்துவிளங்கும் பூங்கொடிகள் தனது காதலியின் இடைபோல் தோன்றலால், மனமகிழ்ந்து காமமயக்கத்தால் அவற்றை வணங்கினான் என்பதாம். தலைவியது இடைபோன்றிருந்த உயர்வும் மகிழ்வும்பற்றி அஃறிணையான கொடிகளைக் கொடியாரென உயர்திணைப்படுத்திக் கூறினான்;

மடவாள்-மடமையென்னும் பண்படியாகப்பிறந்த பெண்பாற்பெயர், ஆள்-பெண்பால்விகுதி: நுடங்கு இடை-வினைத்தொகை. உவமை-பொருளுக்கு ஆகுபெயர், உவமா என்ற வடசொல்லின் திரிபு, (உவமையாவது - ஒருபொருளோடு மற்றொரு பொருளுக்கு ஒப்புமை விளக்குவது). கொடி-இடைக்கு உவமை வடிவும் தன்மையும்பற்றி. பிறந்துடையீர் ஈர் முன்னிலைப்பன்மை விகுதி. வாரிர்-ஏவற்பன்மை எதிர்கால வினைமுற்று, இர்-ஏவற்பன்மை விகுதி கொடியார் என்பதில் கொடுமையானவர் எனச்சிலேடைப் பொருள் படுதலுங் காண்க. அரசர்க்குப் பாதமும் அகங்கையும் சிவந்திருத்தல் உத்தம இலக்கணமாதலால் அவ்விலக்கணம் அமைந்த நளனது கையைச் செங்கையென்றார். செங்கை என்ற விசேடணத்தால் அகங்கை என்பது பெறப்பட்டது, செம்மை பகுதி, மையீறுகெட்டது. கூப்பினான்-ஆண்பாற்படர்க்கை இறந்தகாலப் பிறவினைமுற்று; கூம்பு என்னும் தன்வினைப் பகுதியடியாகப்பிறந்த கூப்பு பகுதி. ஒருபொருளை அடைய விரும்பி வருந்துகின்றவர் மனக்கலக்கமடைதலும் பெருமூச்சுவிடுதலும் இயல்பாதலால் 'நெஞ்சந்துடியா நெடிதுயிரா' எனக்கூறினார்.

ஒரு பொருளை அடைய விருப்ப மிகுந்தவர் மனக்கலக்க மடைதலும் பெருமூச்சுவிடுதலும் இயல்பாதலால் 'நெஞ்சந்துடியா நெடிதுயிரா' எனக்கூறினார். துடியா, உயிரா-செய்யாஎன்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலத் தெரிநிலை வினையெச்சம் நெடிது-நெடுமையென்னும் பண்பினடியாகப் பிறந்த பெயர். நெஞ்சம்-இடவாகுபெயர்.

44. கொங்கையிள நீராற் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பாற்
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தின்—மங்கைநறுங்
கொய்தாம வாசக் குழனிழற்கீ ழாறேனோ
வெய்தாமக் காம விடாய்.

(இ-ள்) மங்கை-தமயந்தியினது, கொங்கை இளநீரால்-கொங்கைகளாகிய இளநீராலும், குளிர்ந்த இளம் சொல் கரும்பால்-குளிர்ச்சி பொருந்திய மெல்லிய சொற்களாகிய கருப்பஞ்சாற்றினாலும், பொங்கு-[அழகு] மிகுகின்ற. சுழி என்னும்-உந்திச்சுழி யென்று சொல்லப்படும், பூந்தடத்தில்-தாமரைத்தடாகத்திலும், நறும்-நல்ல, கொய்தாமம்-[அப்பொழுது] பறித்தமாலைகளின், வாசக் குழல் நிழல்கீழ்-வாசனை பொருந்திய கூந்தலின் நிழலிலும், வெய்து ஆம்-வெப்பமான, அ காமவிடாய் அந்தக்காமவெப்பத்தை, ஆறேனோ, ஆற்றிக்கொள்ளப் பெறேனோ; (எ-று.)

இளநீர், கருப்பஞ்சாறு நீர்த்தடாகம் சோலைநிழல் இவற்றை யடைந்தோர் தமது வெப்பத்தைத் தணித்துக் கொள்வதுபோல, நளனும் தமயந்தியினது இளநீர் போன்ற கொங்கைகளையும் கரும்புரசம் போன்ற சொல்லையும், தடாகம் போன்ற உந்தியையும், சோலை போன்ற கூந்தல் நிழலையும்

அடைந்து அநுபவித்து எனது காமவெப்பத்தை நீக்கிக்கொள்ள மாட்டே னோ வெனத் தன்னுள் கூறிக்கொண்டதாம். தாகத்தைத் தணித்தல் இள நீர் முதலியவற்றின் இயல்பு. இளமையும் திரண்ட வடிவும் பற்றிக் கொங் கை, இளநீரென்னும், இனிய தன்மை பற்றிச் சொல், கரும்பென்றும், குழிந்து ஆழ்ந்திருக்குந் தன்மைபற்றிச் சுழி பூந்தடமென்றும் உருவகமாக் கிக் கூறப்பட்டன. நிழல் என்ற அளவில் சோலை என்பது தானே போதரு மாதலின் குழலைச் சோலையென உருவகமாக்காது கூறினர்.

இளநீர்-இளமையென்னும் பண்படியாகப்பிறந்த அன்மொழித்தொகை ; நீரையுடைய குரும்பையை உணர்த்திற்று. கரும்பு-ஆகுபெயர். சுழி-தொழி லாகுபெயர், சுழிந்திருப்பது. கொய்-வினைத்தொகை. காமவெப்பத்தின்கொ டுமையைக் குறித்தற்கு வெய்தாம் என்று அடை கொடுத்தும், அ என்றுசுட் டியும் கூறினர். வெய்து-வெம்மை என்னும் பண்படியாகப் பிறந்த ஒன் றன்பாற் பெயர். ஆறேனோ-ஓகாரம் இரக்கமும், அவாமிகுதியும் பற்றி நின்றது. இச்செய்யுள் உருவகவணி.

[தமயந்தி தனியே சென்று அன்னத்தை என்ன செய்தி எனல்.]

45. மன்னன் விடுத்த வடிவிற் றிகழ்கின்ற
அன்னம் போய்க் கன்னி அருகணைய—நன்னுதலுந்
தன்னுடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
என்னுடல் சொல்லென்று ளீங்கு.

(இ-ள்.) மன்னன் விடுத்த-நளராசன் அனுப்பிய, வடிவில்-அழகினால், திகழ்கின்ற-விளங்குகின்ற, அன்னம் போய்-அன்னப்பறவை சென்று, கன் னி அருகு அணைய-தமயந்தியின் பக்கத்திற் சேர, நல்நுதலும்-நல்ல நெற்றி யையுடைய தமயந்தியும், தன் ஆடல் விட்டு-தன் விளையாட்டைவிட்டு, தனி இடம் சேர்ந்து ஒருவருமில்லாத தனித்த இடத்தை அடைந்து, ஆங்கு-அவ் விடத்தில், அதனை-அவ்வன்னப் பறவையை (நோக்கி), ஈங்கு நாடல்-இவ்வி டத்தே நீ விரும்பி வந்த பொருள், என்சொல் என்றாள்-என்ன வென்று கேட்டாள் ; [எ—று]

தோழியருடன் விளையாடிக் கொண்டிருந்த தமயந்தி தன்னிடத்து வந்த அன்னத்தின் எண்ணத்தைப் பலருமிருக்கு மிடத்து வினவி யறிதல் தகாதென்று தனித்த இடஞ் சென்று வினவினள் என்பதாம்.

தமயந்தி தனது ஆடலை விட்டு அன்னத்தை விரும்பித் தனியிடஞ்சேர் ந்து வினவுதற்கு அதனது அழகிய உருவமே காரண மென்பார் 'வடிவிற்றி கழ்கின்ற அன்னம்' என்று விசேடித்தார். நன்னுதல்-பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, ஆடல்-தொழிற்பெயர், அங்கு இங்கு என்னும் சுட்டுப் பெயர்கள் ஆங்கு ஈங்கு என முதல் நீண்டன. என்- வினா வினைக்குறிப்பு முற்று என்னுடல் என்பதற்கு என்னைக் குறிப்பாக

நோக்குதற்குக் காரணம் என்னை எனலுமாம். நாடல்-தொழிலாகு பெயர். விடுத்த, திகழ்கின்ற என்ற பெயரெச்ச அடுக்குகள் அன்னம் என்னும் பெயர் கொண்டு முடிந்தன.

[இதுவும் அடுத்த செய்யுளும் அன்னம் நளனை வர்ணித்தல்.]

46. செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் மங்கையர்கள்
தம்மனத்தை வாங்குந் தடந்தோளான்—மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்து நானிலத்து மிக்கான்
உளனென்பான் வேந்த னுனக்கு.

(இ-ள்.) செம்மனத்தான்-செம்மையான மனமுடையவனும், தண் அளியான்-குளிர்ந்த கிருபை யுடையவனும், செங்கோலான்-செங்கோலுடையவனும், மங்கையர்கள் தம் மனத்தை-இளம் பெண்களுடைய மனத்தை, வாங்கும்-தன் வசப்படுத்தும், தடம் தோளான்-விசாலமான தோள்களுடையவனும், மேல் நிலத்தும்-மேலுலகத்தி லுள்ளவர்களிலும், நால் நிலத்தும்-பூமியிலுள்ளவர்களிலும், மிக்கான்-சிறந்தவனுமாகிய, மெய்ம்மை நளன் என்பான்-சத்தியத்தை யுடைய நளமகாராச னென்று சொல்லப் படுபவன், உனக்கு—, வேந்தன்-தலைவனாய், உளன்-இருக்கின்றான்; [எ-று.]

செம்மையாவது-பாரபக்ஷமின்றி நடுவு நிலைமையினிற்றல். அளி-தொடர்பில்லார் மாட்டு நிகழுங்கிருபை. தண்ணளியனாதற்குச் செம்மனமும், செங்கோலனாதற்குத் தண்ணளியுங் காரணமாமென்க. செங்கோன்மையாவது-வேந்தனாற் செய்யப்படும் அரசு முறையினது தன்மை, அம்முறை ஒருபாற் கோணாது செம்மையான கோல் போறலின் செங்கோலெனப்பட்டது. செங்கோன்மையுடையவன் செங்கோலன். 'மங்கையர்கள் தம்மனத்தை வாங்குந் தடந்தோளான் வேந்தனுனக்கு உளன்' என்ற வகையால், தமயந்தி அவாவுறுதற்கேற்ற நளனது அழகின்மிகுதியும், உங்களிருவீருக்கும் அழகொத்திருத்தலால் அன்பும் ஒத்து, இன்பஞ் சிறக்குமெனத் தமயந்தி நளனது இன்றியமையாச் சிறப்புங் கூறப்பட்டன. தடந்தோள்-உரிச்சொற்றொடர். நிலம்-இடவாகுபெயர், மேனிலம்-சுவர்க்கம், நானிலம்-பூமி, பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, நான்காகிய நிலம் என விரியும். குறிஞ்சி, முல்லை பாலை, மருதம் நெய்தல் என்ற நிலம் ஐந்தனுள் பாலை தனக்கோரிடமின்றி ஏனைய நான்கு நிலங்களினிடையிடையே அந்நிலங்கள் தத்தம் வளங்குன்றியக்கால் தோன்றப் பெறுவதாலும், நன்மக்கள் வசித்தற்குரிய நிலம் மற்றை நான்குமே யாதலாலும், ஜெந்துக்கள் வாழுதற்கேற்ற தன்மை பொருந்தாததான பாலையை ஒழித்து, சிறப்பாக நிலம் நான்கே கொள்ளுதல் நூன்மரபு, "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்தும், பாலையென்பதோர் படிவங்கொள்ளும்", என்ற சிலப்பதிகார அடிகளீண்டு நோக்கத்தக்கவை.

47. அறங்கிடந்த நெஞ்சு மருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்டோள் வலியுந்—திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேற் றேர்வேந்த ரொப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு.

[இ-ள்] அறம் கிடந்த நெஞ்சும்-தருமம் நிறைந்த மனமும், அருள் ஒழுகு கண்ணும்-கருணை பெருகி வடிகின்ற கண்ணும், மறம்கிடந்த-வீரம் பொருந்திய, திண்தோள் வலியும்-உறுதியான புஜபலமும், [ஆகிய இவைகளில்] திறம்கிடந்த-எல்லா வல்லபமும் மிக்க, செம் கண்மால் அல்லனேல்-சிவந்த கண்களையுடைய விஷ்ணுவே யல்லாமல், அங்கண்மாஞாலத்து-அழகிய இடமகன்ற பெரிய பூமியில், தேர்வேந்தர்-ரதாதிபர்கள், அவற்கு-அந்த நளமகாராஜனுக்கு, ஒப்பரோ-ஒப்பாவார்களோ?; [ஆகார்] என்று.

தர்மகுணம், தண்ணளி, புயவலி முதலிய சிறந்த குணங்களிற் காத்தற் கடவுளான தேவிற் சிறந்த திருமாலே அந்த நளனுக்கு ஒப்பாகக் கூறலாமே யன்றி உலகத்துள்ள எவ்வரசரையும் ஒப்புமை கூறத் தகாதென்பதாம்.

மால் - பெருமைக்குணமுடையவன், லட்சுமியைத் தரித்தவனுமாம் ஏல்-எனில் என்பதன் மரூஉ. ஓகாரம்-எதிர்மறைப்பொருளது.

இதுவும் அடுத்த செய்யுளும் தமயந்தியின் வருத்த மிகுதி.

48 புள்ளின் மொழியினொடு பூவாளி தன்னுடைய
உள்ளங் கவர வொளியிழந்த—வெள்ளை
மதியிருந்த தாமென்ன வாய்த்திருந்தாள் வண்டின்
பொதியிருந்த மெல்லோதிப் பொன்.

[இ-ள்.] வண்டின் பொதி-வண்டுக்கூட்டம், இருந்த-தங்கியிருந்த, மெல் ஓதி-மென்மையாகிய கூந்தலையுடைய, பொன்-இலக்குமிபோன்ற தமயந்தி, புள்ளின் மொழியினொடு-அன்னத்தின் சொல்லுடனே, பூவாளி- [மன்மதனது] மலரம்பு, தன்னுடைய உள்ளம் கவர-தனது மனத்தைக் கொள்ளை கொள்ளுதலால், ஒளி இழந்த-பிரகாசமற்ற, வெள்ளை மதி-வெண்மையான சந்திரன், இருந்தது ஆம் என்ன—இருந்ததைப்போல, வாய்த்து- [முகம் விளர்த்தலைப்] பெற்று, இருந்தாள்; [எ-று.]

தமயந்தி நளனது அழகின் திறத்தை உள்ளவாறு விரித்துக்கூறியஅன்னப்பறவையின் சொல்லைக்கேட்டு நளன் மேல் ஆசை கொண்டு தன் வசமிழந்து செயலற்றிருந்தனளென்பதாம்.

புள் இன்மொழி யெனக்கொண்டு புள்ளினது இனிய மொழியெனினுமாம். பூவாளி உள்ளங் கவருதலுக்கு முன் கவர்ந்தது புள்ளின் மொழி யாதலால், மொழியினொடு பூவாளி யெனக்கூறினர்-பூவாளி-இருபெயரொட்

டுப் பண்புத்தொகை. பூவாளி மன்மதனுமாம். தன்னுடைய-உடைய; ஆறும் வேற்றுமைச் சொல்லுருபு. கவர-செயவெனெச்சம் காரணப்பொருளில் வந்தது. வெள்ளை-பண்புப்பெயர். வண்டின்-இன், சாரியை, பொதி-முதனிலைத் தொழிலாகுபெயர். ஓதி-பொன்-இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை, ஓதி-பெண்மயிர் [ஆண்மயிரின் பெயர்-குஞ்சி.] பொன்-உவமவாகு பெயர்.

49. மன்னன் மனத்தெழுந்த மையனோ யத்தனையும்
அன்ன முரைக்க வகமுருகி—முன்னம்
முயங்கினாள் போற்றன் முலைமுகத்தைப் பாரா
மயங்கினா ளென்செய்வாள் மற்று.

[இ-ள்.] மன்னன் மனத்து-நளராஜனது மனதில், எழுந்த-தமயந்தி (பொருட்டு) உண்டாகிய, மையல் நோய்அத்தனையும்-காமநோய் முழுவதையும், அன்னம் உரைக்க-அன்னமானது எடுத்துக்கூற [அதனால்] அகம் உருகி-மனங்கரைந்து, முன்னம்- [அன்னத்தால் நளனையறியும்] முன்னதாகவே, முயங்கினாள் போல்-அவனைத் தழுவிக்கொண்டவள் போல, தன் முலை முகத்தை-தனது தனங்களை, பாரா-பார்த்து, மயங்கினாள்-அறிவழிந்திருந்தாள், மற்று என் செய்வாள்-வேறு என்ன செய்வாள்; [எ-று.]

ஆசை மேலீட்டால் தழுவாத நளனைத் தழுவியதாக மயங்கித் தனது தனங்களைப் பார்த்துத் தழுவியதாலாகும் நகக்குறி முதலியவை காணப் பெருமையால் இதற்கு யாது காரணமென மயங்கினாள் என்பதாம். தழுவப் பெற்ற பெண்கள் நகக்குறி கண்டு மகிழ்தல் இயல்பு. இதனை "முலை மீது கொழுநன்ற னகமேவு குறியை முன்செல்வமில்லாத அவர்பெற்ற பொருள் போற், கலைநீவி யாரேனு மில்லாவி டத்தே கண்ணுற்று நெஞ்சங்களிப்பீர்" என்ற கலிங்கத்துப் பரணிச் செய்யுளாலும் அறிக.

அத்தனையும் எஞ்சாமைப் பொருளது — உரைக்க செயவெனெச்சம். பாரா-செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். மற்று-பிறிது என்னும் பொருளில் வந்தது.

[நளனைத் தனக்கு மணஞ்செய்து வைக்கும்படி தமயந்தி அன்னத்தை வேண்டுதல்.]

50. வாவி யுறையு மடவனமே என்னுடைய
ஆவி யுவந்தளித்தா யாதியாற்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி யென்றுரைத்
பார்வேந்தன் பாவை பதைத்து. [தாள்

[இ-ள்] பார்வேந்தன் பாவை-பூமியை ஆளுகின்ற அரசனான வீமனது மகளான தமயந்தி, பதைத்து-[ஆசை-மிகுதியால்] மனம்பதறி, [பறவையை

நோக்கி] மடஅனமே-இளமையான அன்னமே! காவின் இடை சென்று-நளன் இருக்குஞ் சோலையிற் போய், தேர் வேந்தற்கு-ரதாதிபனான அந்நள மகாராசனுக்கு, என் நிலைமை-எனது அன்பு நிலைமையை, உரைத்தி-நீ சொல்வாய், [அங்ஙனம் சொல்லி அவனை எனக்கு மணமகனாக்குவாயானால்] என்னுடைய ஆவி உவந்து அளித்தாய் ஆதி-எனது உயிரை மகிழ்ந்து கொடுத்தவனாவாய், என்று உரைத்தாள்-என்று சொன்னாள்; [எ-று.]

நான் நளனிடத்திற் கொண்டிருக்கும் ஆசை மிகுதியை அவனுக்கு எடுத்துக்கூறி அவனை எனக்கு மணஞ்செய்து வைத்திடாயாயின், எனது உயிர் வருந்தியொழியுமெனத் தனது ஆசை மிகுதியை வெளியிட்டாள். அரசன், அமைச்சர் முதலிய பலருடன் இருந்து ராசகாரியங்களிற் கவனஞ் செலுத்தி யிருக்குங்கால் எனது கருத்தை வெளியிடின் கனவு வேளையிற் சொல்வதுபோற் செவியில் நுழையாதாகையால் என்னை மனங்கொள்ளாது விடுதல் கூடும்; ஆகையால் அங்ஙனமின்றி, தனித்துச் சிங்கார வனத்தில் உல்லாசத்துடன் இருக்கும் சமயம் பார்த்து என் குறையைக் கூறிக்காரியத்தைமுடிப்பாய் என்றற்குக் 'காவினிடைத் தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி' என்றுரைத்தாள்.

வாவி-வாபி என்ற வடசொல்லின் விகாரம். அளித்தாய் — முன்னிலை ஒருமை இறந்த கால வினையாலணையும் பெயர். ஆதி-முன்னிலை ஒருமை எதிர்கால வினைமுற்று, இ-முன்னிலை ஒருமை விகுதி, காலங் காட்டிற்று.

[அதற்கிணங்கி அன்னம் நளனிடம் செல்லல்]

51\. மன்னன் புயமின் வனமுலைக்குக் கச்சாகும்
என்ன முயங்குவிப்பே னென்றன்னம்—பின்னும்
பொருந்தவன்பா லோதிமலர்ப் பூங்கணைகள் பாய
இருந்தவன்பாற் போன தெழுந்து

[இ-ள்] அன்னம் - அன்னமானது, [தமயந்தியை நோக்கி] மன்னன் புயம்-நளமகாராசனுடைய தோள்கள், நின் வனம் முலைக்கு-உன்னுடைய தொய்யிற் கோலம் அமைந்த தனங்களுக்கு, கச்சு ஆகும் என்ன-ரவிக்கையாகுமென்று சொல்லும்படி, முயங்குவிப்பேன்-அணையும்படி செய்வேன், என்று-என்று சொல்லி, பின்னும்-மேலும், பொருந்த-[அவள் மனதில்] பதியும்படி, அன்பால் ஓதி-அன்பினால் சில வார்த்தைகளைச் சொல்லி, (பின்பு) மலர் பூ கணைகள் - [மன்மதனது] பூவாகிய அழகிய அம்புகள், பாய-பாயும்படி, இருந்தவன்பால்-[வருந்தி] இருந்தவனாகிய நளராசனிடத்தில், எழுந்து போனது-[விடைபெற்றுக்கொண்டு] பறந்து போயிற்று; எ-று

நளன் தனக்கு மணமகனாய்க் கிட்டுவானோ எனச்சந்தேகித்த தமயந்திக்கு அன்னம் தவறாது உன்னை அவனுக்கு மணஞ் செய்விப்பேன் எனக் கூறித் தன்னை அனுப்பிய நளனிடம் சென்றது என்பதாம்.

புயம் மூலைக்குக் கச்சாகுத ல்வேறுபடாது இரண்டும் பொருந்தி இருத்தல். தொய்யிலாவது மகளிர் மார்பிலும் தோளிலும் மன்மதன் வில் முதலியவற்றைச் சந்தனத்தால் எழுதப் பெறும் ஒரு வகைக் கோலம். பின்னும்—உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. முயங்குவிப்பேன்—பிற வினைத்தன்மை ஒருமை வினைமுற்று. பால்—இடம்; ஏழாம் வேற்றுமை உருபு. நின் மலர்க்கைக்கு என்றும் பாடபேதமுண்டு.

[அன்னம் சென்றபின் வருந்தியிருந்த தமயந்தியின் நிலைமையைத் தோழிகள் தாய்க்கு உரைத்தலும் தாய் வீமராஜனுக்கு உரைத்தலும்.

52. கொற்றவன்றன் றேவிக்குக் கோமகடன் றோழியர்கள்
உற்ற தறியா உளநடுங்கிப்—பொற்றொடிக்கு
வேறுபா டுண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனைக்
கூறினாள் பெற்ற கொடி.

[இ-ள்] கோமகள் தன் தோழியர்கள்-இராச குமாரத்தியாகிய தமயந்தியினது தோழிமார்கள், உற்றது அறியா-தமயந்திக்கு நேரிட்ட [விருத்தமிகுதியை] தெரிந்து, உளம் நடுங்கி-மனம் பதறி, கொற்றவன் தன் தேவிக்கு-வெற்றியை யுடைய வீமராசனுடைய மனைவிக்கு, பொன் தொடிக்கு-பொன்னாலாகிய வளையல்களை அணிந்த தமயந்திக்கு, வேறுபாடு-[முன்னிலைமைக்கு] மாறுதல், உண்டு என்றார்-உண்டாயிருக்கிறதென்றுசொன்னார்கள்; அதனை-அச்செய்தியை, பெற்ற கொடி-தமயந்தியைப் பெற்றதாயானவள், வேந்தனுக்கு-அரசனுக்கு, கூறினாள்-சொன்னாள்; [எ—று.]

தமயந்தியின்-இன்ப துன்பங்களைத் தமதாகக் கொள்ளும் உயிர்த்தோழியர்களாய் அவளைக் காப்பவர்களாதலால் தமயந்தியின் வேறுபாட்டுக்கு உள்ளம் நடுங்கி உடனே நற்றாய்க்குத் தெரிவித்தார்கள், அதனை அவள்வீமராசனுக்குத் தெரிவித்தாள் என்பதாம்.

கணவன்மேல் விருப்பங் கொண்டாளென்னல் இடக்கரடக்கலாதலால் அதனை மறைத்து வேறுபாடு உண்டென்றார். அறியா-உடன்பாட்டு இறந்தகால வினை யெச்சம், உயிர்த் தோழியர்க்கு அறியக்கூடாதது ஒன்றில்லாததால் இதற்கு அறியாமல் என்று பொருள் கொள்ளல் சிறப்பின்று. உற்றது-ஒன்றன்பால் வினையாலணையும் பெயர். பொற்றொடி-மூன்றாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. வேறுபாடு-முதனிலை நீண்ட தொழிற் பெயர். மற்று-அசை கொடி—உவமையாகு பெயர்.

[வீமன் தமயந்தியின் மாளிகை சேருதல்.]

53. கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப் பைங்கால்
மருங்குலவ வார்முரச மார்ப்ப—நெருங்கு
புரிவளைக்கை நின்றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற
வரிவளைக்கை நல்லாள் மனை.

[இ-ள்] கருங்குழலார்-கருமையாகிய கூந்தலையுடைய பெண்களது, செங்கையினால்-சிவந்த அகங்கையால்வீசும், வெண்கவரிப்பைங்கால்-வெண் சாமரையினது குளிர்ந்த காற்று, மருங்கு உலவ-இருபக்கங்களிலும் வீசவும், வார்முரசம்-வாரணிந்த முரச வாத்தியங்கள், ஆர்ப்ப-ஒலிக்கவும், நெருங்கு புரிவளை-நெருங்கிய முறுக்குகளையுடையசங்குகள், நின்று ஏங்க-நிலைபெற்று ஒலிக்கவும், போய்,—பெற்ற-தான்பெற்ற, வரிவளைக்கை நல்லாள் மனை-கீற்றுப்பொருந்திய வளையல்களணிந்த கைகளையுடைய நற்குண நற்செய்கைகளையுடைய தமயந்தியினது மாளிகையில், புக்கான்-புகுந்தான்; [எ—று.]

முதலடியில் கருமை செம்மை வெண்மை பசுமை என்ற ஒன்றுக்கொன்று முரணுன நிறங்கள் வரும்படி தொடுத்தமையின் தொடைமுரண். வார் முரசமென்பதற்குப் பெரிய முரசமென்று வருவித்தும் பொருள் கொள்க.

[தமயந்தி தன்னிடம் வந்த தந்தையை வணங்கல்

54. கோதை சுமந்த கொடிபோ லிடைநுடங்கத்
தாதை திருவடிமேற் றான்வீழ்ந்தாள்—மீதெல்லாங்
காந்தாரம் பாடிக் களிவண்டு நின்றரற்றும்
பூந்தார மெல்லோதிப் பொன்.

[இ-ள்.] மீது எல்லாம்-மேலெல்லாம், களிவண்டு-மதுவுண்டு களிக்கின்ற வண்டுகள், காந்தாரம்பாடி-காந்தாரம் என்னும் பண்ணைப்பாடி, நின்று அரற்றும்-நீங்காமல் சப்திக்கின்ற, பூதார் அம் மெல் ஓதிப் பொன்-பூமாலையை அணிந்த அழகிய மென்மையாகிய கூந்தலையுடைய இலக்குமியை யொத்த தமயந்தி, கோதை சுமந்த கொடிபோல்-மலர் மாலையைச் சுமந்துள்ள பூங்கொடியைப்போல், இடை நுடங்க-இடை தளரும்படி, [வந்து] தாதைதிரு அடிமேல்-தந்தையினுடைய அழகிய பாதங்களில், தான் வீழ்ந்தாள்-தான் விழுந்து வணங்கினாள்; எ—று.

கோதை-கூந்தலுமாம், அப்பொருளில் இது இல்பொருளுவமம். காந்தாரம்-ஓர் வகைப்பண், இது குறிஞ்சியாழ்த்திறம் எட்டில் ஒன்று. இதனை "பறைந்தவைவளங்காந்தாரம் படுமலை மருளயிர்ப்புச், செறிந்த பஞ்சுரமெய்யாற்றுச் செந்திறங் குறிஞ்சி யென்ப" என்ற சூடாமணி நிகண்டடிகளால் அறிக. பொன் உவமவாகுபெயர்.

[வீமன் தமயந்திக்குச் சுயம்வரம் நடத்த நினைத்தல்.]

55. பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதன்மேல்
நீரரும்பத் தன்பேதை நின்றாளைப்—பாராக்
குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளு மணம்

[இ-ள்.] பேர் அழகு-மிகுந்த அழகு, சோர்கின்றது என்ன-வழிகின்றது என்று உவமை சொல்லும்படி, பிறைநுதல்மேல்-பிறைச் சந்திரன்

போன்ற தனது நெற்றியில், நீர் அரும்ப - வேட்கை மிகுதியாலாகிய வேர்வைநீர் துளிக்க, நின்றாள்-நின்றவளான, தன் பேதையை-தனது குமாரத்தியின் நிலைமையை, பாரார்-பார்த்து,—குலம் வேந்தன்-உயர்ந்த குலத்திற் பிறந்த வீமராசன்,-கோவேந்தர் தம்மை மலர் வேய்ந்து கொள்ளும் மணம்-மேன்மை பொருந்திய அரசர்களில் ஒருவனை மலர் மாலை அணிந்து மணஞ் செய்து கொள்ளத் தக்க சுயம் வரத்தை, சிந்தித்தான்-தன் மகளுக்கு நாட்ட வேண்டுமென்று நினைத்தான்; [எ—று]

வேட்கை மிகுதியால் நெற்றியிலிருந்து ஒழுகும் வேர்வையை அழகு ஒழுகுவதாகக் குறித்தார். என்ன என்பதைப் போல என உவம உருபாக்கிப் பொருள் கொள்ளலும் பொருந்தும். பிறைநுதல்-உவமத்தொகை; நெற்றிக்குப் பிறைச்சந்திரன் உவமம்-வளைந்த வடிவோடு அழகுள்ளதாய்ப் பார்ப்பார்க்கு மகிழ்ச்சி விளைத்து விளங்குதற்கு. பேதை நின்றாளை என்ற விடத்து ஐ உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. பேதை-இளமையுடையவள் அல்லது அறிந்தும் அறியாதவள் போல் ஒடுங்கியிருப்பவள். நின்றாள்-வினையாலணையும் பெயர். மலர்-மாலைக் கருவியாகுபெயர். குலம்-வடசொல்.

[வீமன் தமயந்திக்குச் சுயம்வர நாளைக்குறித்து வெளியிடல்.]

56. மங்கை சுயவரநா ளேழென்று வார்முரச
மெங்கு மறைகென் றியம்பினான்—பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கைக் கொழுந்தோடு நன்னாடன்
வேந்தர்மேற் றூதோட விட்டு.

[இ-ள்] பைங்கமுகின் கூந்தல்மேல்-பசுமையான பாக்கு மரங்களின் மட்டல்களின்மேல், கங்கை கொழுந்து ஓடும்-ஆகாச கங்கை நதியின் நீர்த்திவலைகள் வீசப்பெற்ற, நல்நாடன்-நல்ல விதர்ப்ப நாட்டை யுடையவனான வீமன், வேந்தர் மேல் தூது ஓடவிட்டு- (அயல்நாட்டு) அரசர்களிடத்துத் தூதர்களை விரைவாகச் செலுத்தி, மங்கை சுயம்வர நாள் ஏழ் என்று-தமயந்தியின் சுயம்வரத்திற்குக் குறிப்பிட்ட, தினம் [இன்றைக்கு] ஏழாவது நாளென்று, வார்முரசம் எங்கும் அறை-வாரணிந்த முரசு வாத்தியத்தை [இந்நாட்டில்] எவ்விடத்தும் அடித்துத்தெரிவிப்பீர்களாக, என்று இயம்பினான்-என்று [முரசமடித்தற்குரிய வள்ளுவர்களை நோக்கிச்] சொன்னான்; [எ-று.]

'மங்கை சுயம்வரநாள் ஏழென்று' வேந்தர்மேல் தூதோட விட்டு எனக் கூட்டியுரைத்துக் கொள்க. அயல்நாட்டரசர்களுக்குத் தூதர்கள் வாயிலாகத்தெரிவித்துத் தன்னாட்டுச் சனங்களுக்கு முரசு மூலமாகத் தெரிவித்தனனென்க: மங்கை-மங்கைப் பருவத்தை உடையவளை உணர்த்திற்று. மங்கைப் பருவம் பனிரண்டு முதல் பதின்மூன்று வரை. முரஜம் வடசொல். அறைகென்று அறைகவென்று அகரம் தொகுத்தல். "பைங்கமுகின் கூந்தன்மேற் கங்கைக் கொழுந்தோடும்" என்று அந்நாட்டுக் கமுகமரங்கள் ஆகாய கங்கை வரை அளாவியிருக்கின்றனவென வருணித்து நிலவளத்தை விளக்

இயவாறும். இப்பொழுதுள்ள விதர்ப்ப நாட்டெல்லையை ஆராயுமிடத்துக் கங்காநதி அந்நாட்டில் ஓடுகிறதில்லை யெனத் தெரிதலால் பூலோக கங்கை யென்று சொள்ள இடமின்று. அக்காலத்து அந்நாடு கங்காதீரம் வரைபரவி யிருந்ததாகக் கொள்ளிற் பொருந்தும். இனி, கங்கை யென்று உபசாரமாக உயர்ந்த தீர்த்தங்களுக்குச் சொல்வது போல மற்ற நீர்ப் பெருக்கைக் கூறி யதாகக் கொண்டு அந்நாட்டின் நிலவளத்தையும் விளக்கியதாகவும் கொள் ளலாம். தூது என்பது அமைச்சு, வேந்து, என்பன போல் உயர்திணைப் பொருள் குறிக்கும் அஃறிணைச் சொல்.

அரசர்கள் சுயம்வரத்துக்குப் புறப்பட்டு வருதல்.

57. மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிரைக்குந்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி—நாமத்தார்
பாவேய்ந்த செந்தமிழா மென்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம்.

[இ-ள்] மாமுத்த வெண்குடையான்-பெரிய முத்துக்களால் ஆக்கப் பட்ட வெண் கொற்றக் குடையை யுடையவனும், மால்களிற்றான்-பெரிய யானைப்படைகளை யுடையவனுமாகிய, வண்டு இரைக்கும் தாமத்து-வண்டு கள் ஒலிக்கும் மாலையையுடைய, அரி-இந்திரனை யொத்த, சந்திரன் சுவர்க்கி-சந்திரன் சுவர்க்கியினுடைய, நாமத்து ஆர்-பெயரைப் பொருந்திய, பாவேய்ந்த செந்தமிழ் ஆம் என்ன-பாடல்களை அழகாகச் செய்தமையைப் பெற்ற செந்தமிழைப்போல, கோவேந்தர்—சிறந்த அரசர்களது, செல்வக் குழாம்-செல்வத்தையுடைய கூட்டம், பரந்தது-பரவிற்று; [எ-று.]

தமயந்தியின் சுயம்வரத்திற்கு வருகின்ற அரசகூட்டங்கள் சந்திரன் சுவர்க்கி விஷயமாகப் புலவர்கள் செய்த செய்யுள் விளங்கும் செந்தமிழ் மொழிபெருகி வந்தாற்போல வந்ததெனக் கூறினார்; இதனால் ஆசிரியரது நன்றியறிதற்குணமும் பாஷாபிமானமும் சிறந்து விளங்கும். பா—செய்யு ளின் பொதுப் பெயராய் நின்றது. முத்தம் அம் சாரியை. செந்தமிழாம்-ஆம் அசை. அரிச்சந்திரன் - அரியை ஒத்த சந்திரன்; இரண்டனுருபும் பய னும் உடன்தொக்கதொகை. அரிச்சந்திரன் சுவர்க்கி எனக்கொண்டு அரிச் சந்திரனைப்போன்று சத்தியீவானாகிய சுவர்க்கியெனவும் பொருளுரைப்பர். இச்செய்யுள் உவமையணி.

அரசர்கள் குண்டினபுரம் சேர்ந்திருத்தல்.

58. செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வளர்மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய்—வந்தடைந்த
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரி லீண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து.

[இ ள்] செந்து-மகரந்தப் பொடிகளில், அடையும்-பொருந்துகின்ற வண்டு உறைதார்-வண்டுகள் மொய்க்கின்ற மாலையை யணிந்த, செய்யாள்-

லெட்சுமி தேவி, வளர்மார்பன்-தங்குகின்ற மார்பையுடைய வீமராசனது, கந்து அடையும் வேழம்-கட்டுத்தறியிற் பொருந்தியுள்ள யானைகளையுடைய, கடைத்தலைவாய்-தலைவாயிலில், கோவேந்தன் மாதைக் குறித்து-ராசராசனாகிய வீமராசனது புத்திரியாகிய தமயந்தியைக்கருதி, பூவேந்தர் தங்கள்கிளை-மண்ணரசர்களது கூட்டம், பொன்நகரில் அழகிய குண்டினபுரத்தில், ஈண்டிற்று-எங்கும் விரவி நெருங்கினது; [எ-று.]

தமயந்தியின் சுயம்வரத்தைக் குறித்துவந்த அரசர்களுக்கு வீமராசனது அரமனை இடம்பெருமையால் அவர்கள் நகரமுழுவதும் நெருங்கி யிருந்தார்கள் என்பதாம். உறை, வளர்-வினைத் தொகை, கந்து-யானை கட்டுந்தூண். அரசன் விஷ்ணு அம்சமாதலால், 'செய்யாள் வளர்மார்பன்,' என்றார். தலைவாய்க்கடைஎன்பது கடைத்தலைவாய் எனநின்றது;இது இலக்கணப்போலி. தார் என்ற விசேஷணம் மார்பிற்கு; செய்யாள்வளர் தார்மார்பன் என மாற்றுக. ஈண்டிற்று-ஒன்றன் படர்க்கை இறந்தகால வினைமுற்று.

59. புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமு மினிதுறைந்தார்—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்றன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு.

[இ-ள்.] தெள்-தெளிவாய் விளங்குகின்ற, அரி-[உத்தம இலக்ஷணங்களாகிற] சிவந்த ரேகைகள்பொருந்திய, கண்-கண்களையுடைய, பூமகளை-செந்தாமரைப் பூவில் வாழ்கின்ற இலக்குமிக்குச் சமானமானவளும், பொன்னை-பொன்போல் அருமையானவளும், பொருவேல்-போர்க்குரிய வேலாயுதத்தையுடைய, விதர்ப்பன் தன் கோமகளை-விதர்ப்பதேசத்தரசனாகிய வீமனது சிறந்த மகளுமாகிய தமயந்தியை, தம் மனத்தே கொண்டு-தங்கள் தங்கள் மனத்திலே நினைத்து, [அவளைத் தாம்தாம் மணஞ்செய்ய வேண்டுமென்று விரும்பி என்றபடி] [பலதேசத்தரசர்களும் வந்து] புள் உறையும் சோலைகளும்-பறவைகள் வசிக்கின்ற சோலைகளும், பூங்கமல வாவிகளும்-அழகிய தாமரைத் தடாகங்களிலும், உள்ளும்புறமும்-முறையே உட்புறத்திலும் வெளிப்பாகத்திலும், இனிது உறைந்தார்-சுகமாகவசித்தார்கள்;[எ-று.]

சுயம்வரத்தின் பொருட்டு வந்த அரசர்கள் மிகப் பலராகையால் நகரமிடம் போதாமல், சோலைகளிலும், தடாகக்கரைகளிலும் வசித்தார்களென்பது கருத்து. சோலைகளின்உட்பக்கத்திலும் வாவிகளின்வெளிப்புறத்திலும் தங்கினார்களென முறைநிரனிறையாகக்கொள்க. தங்கியிருந்த இடங்களின் செழித்தவளத்தாலும், வீமராசன் செய்வித்த பலவசதிகளாலும்,உடம்பும், தமயந்தியை மணஞ்செய்துகொள்வதிலுள்ள ஆசையால் மனமும்,இனிமையடையும்படி தங்கினார்களென்றற்கு 'உள்ளும் புறமுமினிதுறைந்தார்' என்றாரெனினுமாம், புள்ளுறைதலை வாவிகளுக்குங் கூட்டிக்கொள்க, பூமகளை, பொன்னை, கோமகளை-இவை ஒரு பொருள்மேல் வந்த பெயரடுக்குகள்.

அன்னத்தின் வரவை நளன் காணல்.

60. வழிமேல் விழிவைத்து வாணுதலா ளுைம
மொழிமேற் செவிவைத்து மோகச்—சுழிமேற்றன்
நெஞ்சோட வைத்தயர்வான் கண்டா னெடுவானில்
மஞ்சோட வன்னம் வர.

[இ-ள்] வழிமேல்-அன்னம் சென்றவழியில், விழிவைத்து-தனது பார்வையை வைத்து, வாள் நுதலாள்-பிரகாசம் பொருந்திய நெற்றியையுடைய தமயந்தியினது, நாமமொழிமேல்-பெயராகிய சொல்லைக் கேட்பதில், செவிவைத்து-செவி சாய்த்து, மோகச் சுழிமேல்-காமமாகிய நீர்ச் சுழியில், தன் நெஞ்சு ஓட வைத்து-தனது மனதை ஓடும்படி வைத்து, அயர்வான்-வருந்துகின்றவனான நளன், நெடுவானில்-பெரிய ஆகாயத்தில், மஞ்சு ஓட-[தான் வருகின்ற வேகத்தில் சிறகுகளாலுண்டாகிய காற்றால்] மேகங்கள் கலைந்து கலைந்து விலகி ஓடும்படி, அன்னம் வரக் கண்டான்-அன்னப்பக்ஷியானது பறந்து வருவதைப் பார்த்தான்; [எ—று.]

நளன்:-அன்னம் வந்தவுடன் தமயந்தியினது உடன்பாட்டுச்சொல்லைக் கேட்க வேண்டுமென்ற பேரவாவோடிருந்தவனாதலால் 'வழிமேல் விழி வைத்து வாணுதலாளுைம மொழிமேற் செவிவைத்து' எனவும், காமமாகிய நீர்ச்சுழியில் தனதுமனது அகப்பட்டு மயங்குகின்றானாதலால் 'சுழிமேற்றன் னெஞ்சோட' எனவும் கூறினார். 'மஞ்சோட அன்னம் வர' என்றதனால் காரியசித்தியோடு வருகின்ற அன்னத்தினது அதிக விரைவு குறிக்கப் பட்டது. மஞ்சு என்பதற்குப் பொலிவு எனக் கொண்டு காரிய அநுகூலப் பொலிவுடன் அன்னம் வந்தது எனவும் கூறுவர்.

அயர்வான்-வினையாலணையும் பெயர். வர-நிகழ்கால வினை எச்சம்.

நளன் தமயந்தியின் காதலைக்கேட்டு மகிழ்தல்.

61. முகம்பார்த் தருணோக்கி முன்னிரந்து செல்வர்
அகம்பார்க்கு மற்றோரைப் போல—மிகுங்காதல்
கேளா விருந்திட்டா னன்னத்தைக் கேளாரை
வாளால் விருந்திட்ட மன்.

[இ-ள்] கேளாரை-பகைவர்களை, வாளால்-தனது வாளாயுதத்தினால் விருந்து இட்ட-கூளி பறவை முதலியவைகளுக்கு விருந்து செய்த, மன்-நளமகாராசன்:-செல்வர்முகம்பார்த்து-தனவந்தர்களுடையமுகத்தைப்பார்த்து, அருள்நோக்கி - அருளால் உண்டாகிய [அவர்களது] இனிய சொல்லை ஆராய்ந்து பார்த்து, முன்இரந்து - முன்னே யாசித்துச் சென்று, அகம் பார்க்கும் - அவர்கள் உள்ளக் கருத்தை அறிய எதிர்பார்த்து நிற்கின்ற, அற்றோரைப் போல-தரித்திரத்தைப்போல, மிகும் காதல்-தன்மேல் தமயந்

திக்கு உண்டாகின்ற மிகுந்த ஆசையை, அன்னத்தை - அன்னப்பறவையினிடம், கேளா இருந்திட்டான்-கேட்டுக்கொண்டிருந்தான்; [எ - று.]

செய்மைக்கண் தங்களைப்பார்த்தபோது அவர்கள் இனிய முகத்தினராதலைத் தெரிந்து அணுகிய அளவில் அருளோடு கூடிய இன்சொல்லை யறிந்து இவற்றால் உட்கருத்தைத் தெரிந்து யாசிக்க உடன்படுகின்ற யாசகர்களைப்போல, அன்னத்தினுடைய இனியமுகத்தைப் பார்த்து, தனக்கு இனிமையாகச் சொல்லத் தொடங்குகின்ற தேறுதல்வார்த்தைகளைத்தெரிந்து,அவைகளால் காரியசித்தியோடுவந்த அன்னத்தினது உட்கிடையை அறிந்து, தன்மேற் தமயந்திக்குண்டான காதலைப் பலமுறை கேட்டு மகிழ்ந்திருந்தனன்.

அற்றோர்-பொருள் ஒன்று மில்லாது இழந்தவர் [யாசகர்] கேளா, உடன்பாட்டு வினையெச்சம். அன்னத்தை-உருபு மயக்கம். கேளார் எதிர்மறை வினையாலணையும் பெயர். கேளா கேளாரை என்பன மூன்றுமடியில் முரண். விருந்துண்ணுதற்குப் பேய் முதலியவை வருவித்துரைக்கப்பட்டன. பகைவர்களை வாளாற்கொன்றான் என்பதை விருந்திட்டான் என வேறொரு வகையாற் சொன்னதனால் இது பரியாயமொழியணி. இது பிறிதினவிற்சியணி யெனவும் பரியாயமொழியணி எனவும்படும். "கருதியது கிளவாதப்பொருடோன்றப் பிறிதொன்று கிளப்பது பரியாயம்மே" என்ற தண்டியலங்காரச் சூத்திரத்தால் இதன் இலக்கணத்தை யறிக. இருந்திட்டான்-இறந்தகால வினைமுற்று, இடு - பகுதிப்பொருள் விகுதி.

62. அன்னக் குலத்தி னரசே யழிகின்ற
என்னுயிரை மீள வெனக்களித்தாய்—முன்னுரைத்த
தேமொழிக்குத் தீதிலவே யென்றான் திருந்தாரை
ஏமொழிக்கும் வேலா னெடுத்து.

[இ-ள்.] திருந்தாரை-பகைவர்களை, ஏம் ஒழிக்கும்-செருக்கின் களிப்பைக் கெடுக்கின்ற, வேலான்-வேலாயுதத்தையேந்திய நளன்;— அன்னக்குலத்தின் அரசே-அன்னக்கூட்டங்கட்கு அரச அன்னமே!, அழிகின்ற-இறந்து படுதற்கிருந்த, என் உயிரை-எனது உயிரை, மீள- [அழியாது] திரும்ப, எனக்கு அளித்தாய்-எனக்குத் தந்து ரட்சித்தாய், முன் உரைத்த- [மாதர்களில்] முதன்மையாக நாட்டி உன்னாற்சொல்லப்பட்ட,தேன்மொழிக்கு-தேன்போன்ற மொழியினையுடைய தமயந்திக்கு, தீது இலவே-தீமை இல்லனவா? என்றான் எடுத்து-என்று விசேஷமாகக் கேட்டான்; [எ-று.]

'மற்றினியுன் வாயுடைய தென்னுடைய வாழ்வு' [சுயம் - 38] என்று கூறிய நளன், தமயந்தியிடம் சென்று தன்மேற் காதல்கொள்ளும்படிசெய்து மணஞ்செய்வதற்குடன்படுத்திவந்த அன்னத்தைநோக்கி, 'அழிகின்ற, என்னுயிரை மீள வெனக்களித்தாய்,' என்று மகிழ்ச்சியுடன் கூறினான்.

'முன்னுரைத்தது' என்பதற்கு முன்னே நீ சொன்னது எனினுமாம். தேமொழி-உவமைத்தொகைப்புறத்துப்பிறந்தஅன்மொழித்தொகை,தேன் மொழி-வருமொழிமுதல் மெல்லினமானதால் நிலைமொழியீறு கெட்டது, [நன்-மெய்-சூ, 11] தீதில் என்றது அவள் க்ஷேமமா என்றுகேட்டபடி.திருந் தார்-பகைவர்கள், தனது சொல்லுக்குக் கட்டுப்படாதவர்கள், எதிர் மறை வினையாலணையும் பெயர். ஏமம்-ஏம்என இடைகுறைந்துவந்தது.

ஏமம் என்பதற்குக் காவல்எனப் பொருள்கொண்டு பகைவர்களைப்பார் காத்தலை விலக்குகின்றவன் எனலுமாம்.

அன்னம் தமயந்தியின் நிலைமையை நளனிடம் உரைத்தல்.

63. கொற்றவன்ற னேவலினாற் போயக் குலக்கொடிபா
லுற்றதுவு மாங்கவடா னுற்றதுவும்—முற்றும்
மொழிந்ததே யன்ன மொழிகேட் டரசற்
கழிந்ததே உள்ள அறிவு.

[இ-ள்.] கொற்றவன் தன் ஏவலினால் - வெற்றியையுடைய நளராச னது கட்டளையினால், அக்குலக் கொடிபால்-உயர்ந்த குலத்திற்பிறந்த பூங் கொடிபோன்ற அந்தத்தமயந்தியினிடத்து, போய்உற்றதுவும்-தான்போய்ச் சேர்ந்ததையும், ஆங்கு-அவ்விடத்தில், அவள் உற்றதுவும் - [தனது சொல் லால் நளன்மேல்] தமயந்திகொண்ட ஆசை மிகுதியையும், முற்றும்-எல்லா வற்றையும், அன்னம் மொழிந்தது-அன்னம் சொல்லிற்று; மொழிகேட்டு- அவ்வார்த்தையைக் கேட்டதனால், அரசற்கு-நளனுக்கு, உள்ள அறிவுஅழிந் தது-இருந்த அறிவும் [மோகமிகுதியால்] கெட்டது; [எ-று.]

அன்னம் தமயந்தியின் காதல் வார்த்தையைக் கூறியவுடன் நளன் ஆசைமிகுதியால் அறிவிழந்தனன் என்பதாம்.

கொடி-உவமஆகுபெயர், உற்றதுவும்-என்பதில் குற்றியலுகரம் உயிர் வரக்கெடாது, "இஈஐவழியவ்வும் ஏனையயிர் வழிவவ்வும்" என்ற பொது விதிப்படி வகரஉடம்படுமெய் பெற்றுநின்றது. 'உயிர்வரினுக்குறண்மெய் விட்டோடும்' என்ற சூத்திரத்தில் 'கெடும்' என்னாது 'ஓடும்', என்றதினால் இவ்விதியை அமைத்துக்கொள்வர். உற்றது - நளனது அழகு முதலியவற் றை அன்னம் வாயிலாகக் கேட்டபோது தமயந்தி அடைந்த துயரெனினு மாம். இறந்தகாலத் தொழிற்பெயர். தன்-சாரியை, தான்-ஏ-அசைகள்.

அதுகேட்டு நளன் வருந்தல்.

64. கேட்ட செவிவழியே கேளா துணர்வோட
ஓட்டை மனத்தோ டுயிர்தாங்கி —மீட்டுங்
குழியிற் படுகரிபோற் கோமான் கிடந்தான்
தழலிற் படுதளிர்போற் சாய்ந்து.

[இ-ள்.] கேட்ட-தமயந்தியின் நிலையைக்கேட்ட, செவிவழியே-காதின் வழியாகவே, உணவுகேளாது ஓட-அறிவு தன்னைக்கேளாமல் ஓடிப்போக, [அதனால்] கோமான்-நளன், ஓட்டைமனத்தோடு உயிர்தாங்கி-ஓட்டையான மனதுடனே பிராணனைத் தாங்கிக்கொண்டு, மீட்டும்-மறுபடியும், தழலில்-அக்கினியில், படுதளிர்போல்-விழுந்த தளிரைப்போல், சாய்ந்து-தனது ஆசனத்தில் விழுந்து, குழியில்படுகரிபோல்-படுகுழியில் விழுந்துகிடந்த யானையைப்போல், கிடந்தான் - செயலற்றுக் கிடந்தான்; [எ-று.]

தமயந்தியைப்பற்றிக் கேட்டவுடனே தனது அறிவு அவள் வசப்பட்டுச் செயலற்றுக்கிடந்தான் என்பது கருத்து.

ஓட்டைமனமாதற்கு உள்ளீடாகிய உணர்வு ஓடுதல் காரணம். ஓட-செயவெனெச்சம். மீட்டும்-இறந்தது தழீஇய எச்சவும்மை. முதலடியில் கேட்ட கேளா, முரண்தொடை. குழி-யானையைப்படுப்பதற்கு வஞ்சகமாயமைத்திருக்கும் பள்ளம். படுகரி வினைத்தொகை.

வீமன் அனுப்பிய தூதர்கள் நளனிடம்வந்து சுயம்வரச்செய்தி கூறல்.

65. கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப
ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினார்—போதில்
பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாடன்
அடையாத வாயி லகம்.

[இ-ள்.] கோதை-தமயந்தியினது, சுயம்வரநாள்-சுயவரத்துக்குக் குறித்தநாளை, கொற்றவனுக்கு-அரசனுக்கு, உற்று உரைப்ப போய்ச்சொல்லுவதற்கு, ஏதம் இலா காட்சியர்-குற்றமில்லாத அறிவுடையவர்களான தூதர்கள், போதில்-மலர்களில், பெடைஓடு-பெண்வண்டுகளுடனே, வண்டு-ஆண்வண்டுகள், உறங்கும்-தூங்கிக்கொண்டிருக்கின்ற, பேர் ஒலி நீர் நாடன்-மிக்க ஓசையையுடைய நீர்வளப்பமுள்ள நிஷததேசத்தை யுடையவனான நளனுடைய, அடையாத-எப்பொழுதும் மூடப்படாத, வாயில் அகம்-அரமனைவாசலிடத்து, வந்து எய்தினார்-வந்துசேர்ந்தார்கள்; [எ-று.]

நளனது அரமனைவாசலை மூடாத வாயிலென விசேடித்ததால் நளன் பகைவரச்சம் சிறிதுமில்லாதவனென்பதும், யாசகர் வரவை அவர்களுக்குக் கொடுப்பதற்கெதிர்பார்த்திருப்பவனென்பதும், குறையிரந்துவருங்குடிகட்குக் காணுதற் கெளியனுமென்பதும் அறியப்படும்.

கோதை-மாலை; அதுபோன்ற மிருதுவாகிய பெண்ணுக்கு உவமையாகுபெயர். கோதை கூந்தலெனக்கொண்டால் சினையாகுபெயராம்.

தூதர்கள் சொல்லுதற்கேற்ற காலமுதலியவற்றை ஆராய்ந்தறியும் நுட்ப அறிவுடையராயிருத்தல் வேண்டுமென்பார் 'ஏதமிலாக்காட்சியர்,' என்றார்.

இலா-இன்மை என்னும் பண்பினடியாகப் பிறந்த ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், ஆ-சாரியை. காட்சி-தொழிற்பெயர் காண், பகுதி, சி-விகுதி. பெடை பறவைப்பெண்பாற்பெயர். வீட்டினது முன்னிலம் என்று பொருள்படுகிற இல்வாய் என்பது 'வாயில்' என முன்பின்னாகமாறியது; இலக்கணப்போலி, ஒலிநீர் வினைத்தொகை.

தூதர் செய்தி கூறியதும் நளன் குண்டினபுரம் புறப்படுதல்.

66. காவலன்றன் றூதர் கடைக்கா வலர்க் கறிவித்
தேவலிற்போ யீதென் றியம்புதலும்—மாவிற்
பொலிந்ததேர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்ததோள் வேந்தன் விரைந்து.

[இ-ள்.] காவலன் தன் தூதர்-விதர்ப்பராசனுடைய தூதர்கள், கடைக் காவலர்க்கு-வாயில்காப்போர்க்கு, அறிவித்து-[தாங்கள்வந்த செய்தியைத்] தெரிவித்து; ஏவலின் -[பின் நளராசனுடைய] கட்டளையின்படி, போய்-உள்ளே சென்று, இயம்புதலும் சொல்லுதலும், பூவாளி-(மன்மதனது) மலரம்புகள், பாய-பாய்தலினால், மெலிந்ததோள்-இளைத்த தோளையுடைய நளமகாராசன், விரைந்து-வேகமாக, மாவின் பொலிந்ததேர்-குதிரைகளினால் விளங்குகின்ற தேரை, பூட்டு என்றான்-கட்டு என்று சாரதிக்குக் கட்டளையிட்டான்; [எ-று.]

வீமராசனது தூதர்கள் போய்ச் சுயம்வர விஷயத்தை நளனிடம் தெரிவித்தமாத்திரத்தில் நளன் குண்டினபுரிக்குச் செல்லுவதற்குத் தேரை விரைந்து சித்தம்பண்ணச் சாரதிக்குக் கட்டளையிட்டானென்பதாம்.

'பூவாளி பாய மெலிந்தது' என்றது தமயந்தியைப்பற்றி அன்னம் உரைத்தநாள்முதல் உண்டான ஆசைமிகுதியால் ஏற்பட்டமெலிவை,மாவிற் பொலிந்த தேர் என்பதிலுள்ள இல்-உருபைத் தேர் என்பதோடு கூட்டித் தேரில் மாவைப்பூட்டு என்றான் என்றுரைப்பினும் பொருந்தும்.

பூட்டு ஏவலொருமைப் பிறவினை; பூண்-தன்வினைப்பகுதி. இது-ஈது வெனச் செய்யுளின்கண் சுட்டுநீண்டது.

[நளன் தமயந்தி சுயவரத்துக்கு, குண்டினபுரம் புறப்படல்.]

67. கெட்ட சிறுமருங்குற் கீழ்மகளிர் நீள்வரம்பி
லிட்ட பசுங்குவளை யேரடித்த—கட்டி
கரையத்தே னூறுங் கடனாட னூர்க்கு
விரையத்தே ரூரென்றான் வேந்து.

[இ-ள்.] வேந்து-அரசனாகிய நளன், கெட்ட சிறுமருங்குல் கீழ்மகளிர்-இளைத்த நுட்பமாகிய இடையையுடைய கடைசியரால், நீள்வரம்பில் இட்ட

பசுங்குவளை-நீண்ட வயல்களின் வரம்பின்மேல் பிடுங்கிப்போட்ட (களைகளாகிய) பசுமையான குவளைப் புஷ்பங்களினின்றும், ஏரடித்தகட்டி - ஏர்களால் உழுது உண்டாகிய மண்கட்டிகள், கரைய-கரைந்துபோகும்வண்ணம், தேன்ஊறும்-தேன்ஊற்றெடுத்துப் பெருகுகின்ற, கடல் நாடன்ஊர்க்கு-கடற்கரையை யடுத்துள்ள (விதர்ப்ப) நாட்டையுடைய வீமனது நகரத்துக்கு தேர்-ரதத்தை, விரைய-அதிசீக்கிரமாக, ஊர் என்றான்-செலுத்து என்று [சாரதியை நோக்கிச்] சொன்னான்; [எ—று.]

வயல்களில் களைகளாக முளைத்த குவளைப்புஷ்பங்களைப் பிடுங்கிக் கரையிலிட, அப்பூங்களினின்றும் வழிந்தோடிய தேன் வயல்களிற் பாய்ந்து,உழுதலினால் உண்டாகிய மண்கட்டிகளைக் கரைத்துச் சமப்படுத்துமெனக்கூறி அந்நாட்டின் நிலவளத்தையும் நீர்வளத்தையும் வெளியிட்டவாறும். பசுமை-குவளை-பசுங்குவளை, பண்புப்பெயர் 'ஈறுபோதல்' என்ற சூத்திர விதிப்படி, மைவிகுதிகெட்டு இனமெல்லெழுத்து மிகுந்தது. குவளை முதலாகுபெயர். வேந்து, உயர்திணைப் பொருள் குறித்த அஃறிணைச் சொல். கடைசியர்-மருதநிலத்துப் பெண்கள். கீழ் என்பது பூமியைக் குறித்து அதைத் திருத்தும் மகளிரைக் கீழ்மகளிர் என்றார் என்ப

[நளன் குண்டினபுரம் சேர்தல்.]

68. சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு பின்னாக்
கடற்றானை முன்னாகக் கண்டான்—அடற்கமைந்த
வில்லியரும் பொற்றாம வீமன் திருமகளாம்
நல்லுயிரும் வாழு நகர்.

[இ-ள்.] சடைச்செம்நெல்-சடைபோல் நெருக்கிய செந்நெற்பயிர்கள், பொன்விளைக்கும்-பொன்போன்ற நெற்கதிர்களை விளைக்கின்ற, தன்நாடு-தனதுநாடாகிய நிடதேசம், பின்ஆ [தனக்குப்] பின்புறத்ததாகக் கழியவும் கடல்தானை-கடல்போற்பரந்த தனது சேனை, முன்ஆக—தனக்கு முன்னே செல்லவும், அடற்கு வீரத்திற்கு, அமைந்த-பொருந்திய, வில்லியரும் வில்லையுடைய பல அரசர்களும், பொன்தாமம்-பொன்னாலாகிய மாலையை [அணிந்த], வீமன் திருமகள் ஆம் நல்உயிரும்-வீமராசனது அழகிய மகளாகிய இனிய தனதுஉயிர்போன்ற தமயந்தியும், வாழும்நகர்-வாழ்கின்ற குண்டினபுரியை, கண்டான்-[நளன்] பார்த்தான்; [எ-று.]

நளன் தனது நால்வகைச் சேனையுடனே தனது நாட்டைவிட்டுப் புறப்பட்டுச் சுயம்வரத்திற்காகப் பல தேசத்து அரசர்களும் வந்து தங்கியிருக்கின்ற குண்டினபுரி சேர்ந்தனன் என்பதாம்.

சடைசெந்நெல்-கதிர்த்திரட்சியை யுடைய நெல். பொன்-அதன் நிறமான தானியத்திற்கு உவமையாகுபெயர். பின்னா-ஆக என்ற எச்ச ஈறு தொக்கது. தானைக்குக் கடல் உவமை, மிக்க பரப்பிற்கும், ஆரவாரத்திற்கும், பார்ப்போர்க்கு அச்சம் தருவதற்கும், அணிஅணியாக வருதற்கும்

என்க. தமயந்தியைத் தனது ஆருயிராகக் கருதியிருக்கின்றமையால் அவள் அவனுக்கு நல்லுயிர் எனப்பட்டாள். 'நல்லியல்' எனவும் பாடம் நல்ல லக்ஷணமுடையாள் என்பது பொருள். வில்லியர்-பலர்பாற் படர்க்கைப் பெயர். அடற்கமைந்த-போர்க்குரியவுமாம்.

இதுநிற்க நாரதமுனிவர் இந்திரனிடம் செல்லுதல்.

69 நெற்றித் தனிக்கண் ணெருப்பைக் குளிர்விக்குங்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்—உற்றடைந்தான்
தேனாடுந் தெய்வத் தருவுந் திருமணியும்
வானாடுங் காத்தான் மருங்கு

[இ-ள்] நெற்றித் தனிக்கண் நெருப்பை-சிவபெருமானது நெற்றியிலுள்ள ஒப்பற்ற கண்ணினது நெருப்பை; குளிர்விக்கும்-தனது இசையால் குளிரச் செய்யும், கொற்றம்-மேன்மை பொருந்திய, தனியாழ்-ஒப்பில்லாதவீணையை உடைய, குல முனிவன்-மேன்மையுள்ள நாரத முனிவன்—தேன்நாடும்-வண்டுகள் விரும்பிச் செல்கின்ற, தெய்வத் தருவும்-தெய்வத்தன்மை வாய்ந்த கற்பகவிருக்ஷங்களையும், திருமணியும்-அழகிய சிந்தாமணி யென்ற ரத்தினத்தையும், வான்நாடும்-சுவர்க்க லோகத்தையும், காத்தான் மருங்கு பாதுகாப்பவனாகிய இந்திரனிடம், உற்று அடைந்தான்-போய்ச்சேர்ந்தான்; [எ-று.]

தாம் பாடும் சங்கீத இனிமையால் சிவபிரானது நெற்றிக் கண்ணின் உக்கிரத்தையுஞ் சாந்தப்படுத்தும் நாரத முனிவர் இந்திரன் சபை போய்ச் சேர்ந்தார் என்பதாம். அவரது யாழ் 'மகதி' யென்று பெயர் பெறும். கொற்றம்-மற்ற எல்லா வீணைகளிலும் சிறந்து நிற்றல். நாரதர் இசை நூல் வல்லவர் என்பது 'நாரதன் வீணை நயந்தெரி பாடலும்' என்ற சிலப்பதிகார அடியாலும், 'தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீயம் முதலாயுள்ள தொன்னூல்களும் இருந்தன' வென்று அடியார்க்கு நல்லார் உரைத்த உரையாலும், 'தலமுதலூழியிற்றானவர் தருக்கறப், புலமகளாளர் புரிநரப்பாயிரம் வலிபெறத்தொடுத்த வாக்கமை பேரியாழ்ச், செலவு முறையெல்லாஞ் செல்கையிற் றெரிந்து, மற்ற யாழுங் கற்று முறை பிறழான் நாரதகீதக் கேள்வி நுனித்து' என்ற உதயணகாவியச் செய்யுளாலும் அறியப்படும். இன்னிசை நூல் முழுதுணர்ந்த யாழ்வல்லோனே என்றார் பின்னூலுடையாரும்.

நெருப்பை என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கதாகக் கொள்க. தருவுக்குத் தெய்வத்தன்மை-வேண்டுவார் வேண்டிய வற்றை யெல்லாம் கொடுத்தல். சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்ற பஞ்சதருக்களும், சிந்தித்தவற்றை எல்லாந் தரத்தக்க சிந்தாமணி முதலிய நிதிகளும் இந்திரனுக்குரிய செல்வங்களாம். தேன்-நல்ல மணத்தையே நாடிச் செல்லும் ஒருவகை வண்டு. இதனை "மங்கை நல்லவர் கண்ணும் மனமும்போல், எங்குமோடி யிடறுஞ் சுரும்புகாள், வண்டு காண் மகிழ் தேனி

னங்காண்மது உண்டுதேக்கிடு மொண்மிஞிறீட்டங்காள்" என்ற சிந்தாமணி குணமாலையாரிலம்பகத்துச் செய்யுளில் ஆசிரியர்நச்சினார்க்கினியநம்தேனினம் என்பதற்கு இப்பொருளே உரைத்திருத்தலா லுணர்க.

சிவபிரானுக்கு நெற்றியிற் கண் உண்டான விபரம்;—ஓர் காலத்து, கைலாயத்தில் ஓர் சோலையில் சிவபிரானும் அம்மையாரும் வீற்றிருக்குங் கால் அம்மை விளையாட்டாகச் சிவபெருமானது இருகண்களையும் மூட, அங்ஙனம் மூடப்பெற்ற ஓர் இமைப்பொழுது ஓர் ஊழிக்காலம் போல உலகம் அந்தகாரத்தால் மூடப்பெற்று வருந்த அதுகண்ட சிவபெருமான் தன் நெற்றியில் ஓர் கண்ணைத் திறந்து அக்கண்ணினால் உலகத்துக்குற்ற துயரை நீக்கினார் என்பதாம்.

பூலோகத் தூரசர்கள் எவரும் இப்போழது தேவலோகத்திற்கு வாராதது ஏனென்று இந்திரன் நாரதனை வினவுதல்.

70\. வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்றா
ராரு மிலராலென் றையுற்று—நாரதனார்
நன்முகமே நோக்கினா னாகஞ் சிறகரிந்த
மின்முகவேற் கையான் விரைந்து.

[இ-ள்] நாகம்-மலைகளின், சிறகு அரிந்த-சிறகுகளை வெட்டின, மின் முகவேல்-மின்னல்போல் விளங்குகின்ற முனையையுடைய வச்சிராயுதத்தை ஏந்திய, கையான்-கையை யுடையவனான இந்திரன்,—வீரர்-வீரர்களான, விறல் வேந்தர்-பெருமையையுடைய அரசர், ஆரும் எவரும், விண்ணாடு சேர்கின்றார் இலர்-சுவர்க்க லோகத்திற்கு வருகின்றார்களில்லை, (இதற்குக் காரணம் யாதோ?) என்று ஐயுற்று-என்று சந்தேகப்பட்டு, [அச்சந்தேகத்தை நீக்கிக்கொள்ள] விரைந்து-விரைவாய், நாரதனார் நல்முகமே நோக்கினான்-நாரதமுனிவருடைய தெளிவான முகத்தையே பார்த்தான்; [எ-று.]

பூலோகத்தில் அரசர்கள் போர் செய்து மனித உடம்பைவிட்டுத் திவ்ய தேகம் பெற்று விருந்தாய் வாராமல் தன்னுடைய சுவர்க்க போகத்தைத் தானே அநுபவித்துக் கழிக்கும்படி இருத்தலால் வீரர்கள் தன் நாட்டிற்கு *விருந்தாக வாராதது என்ன காரணம் என்று சந்தேகங் கொண்டு பூலோகத்தினின்று வருகின்ற நாரத முனிவரை வாயினாற் கேளாது குறிப்பாக அவர் முகத்தை நோக்கினான் என்பதாம். [போர்முகத்தில் அஞ்சாது யுத்

---

*"என்றுமுனி வரனுரைப்பக் கடல் புடைசூழ் நிலவலயத்திகல் வேல் மன்னர், துன்றுசமர் துறந்தனர்கொல் சுடர்க்கதிர்போழ்ந் தரமகளிர்துணை மென் கொங்கை, மன்றல்விழைந் திங்கெமக்கோர் நல்விருந்தாய் வரலொழிந்தவாறே தென்றான், குன்றினிருஞ் சிறையரிந்த சுடர்வயிரப் படைசுமந்த குவவுத்தோளான்", என்ற நைடதச் செய்யுளீண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

தஞ்செய்து உயிர்விடுகின்றவீரர்கள் சூரியமண்டில வழியாகச் சுவர்க்கமடைதல் இயல்பு.] தன் செல்வத்தைத் தானே அநுபவித்தல், கூடாதென்பது "இரத்தலினின்னாது மன்றநிரப்பிய, தாமேதமியருணல்" எனவும், "விருந்து புறத்ததாத்தானுண்டல் சாவா, மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று" எனவும், திருவள்ளுவர் கூறுமாற்றானும் உணரப்படும்.

தமது கருத்தை வெளிப்படையாலன்றி கண், கை முதலிய உறுப்புகளின் செய்கையால் குறிப்பாக உணர்த்துதல் அரசர் இயல்பாதலாலும், அவரதுகருத்தைக் குறிப்பால் தெரிந்து அதற்கு இணங்க நடப்பது அரசரைச் சேர்ந்தொழுகுவாரது இயல்பாதலாலும், இந்திரன் அவரது தெளிந்தமுகத்தையே நோக்கினான் என்க.

விறல் வலிமையுமாம். ஆர்-யார் என்பதன்மரூஉ. இலார்-இடைக்குறை. ஐயுற்று, ஐயமுற்று என்பதன் விகாரம். நாரதனார் ஆர் உயர்வுப்பொருளது; நாரதன் என்ற சொல்லுக்குத் தத்துவஞானத்தை உபதேசிப்பவன் என்பதும், ஒற்றுமையைக் கெடுக்கின்றவன் என்பதும் பொருள். நாகம்-வடசொல், சலியாதது என்பது பொருள். இலக்கணையாய் வேல் என்பது வச்சிராயுதத்தைக் குறித்து நின்றது. ஏகாரம்-பிரிநிலை.

நாகம் சிறகரிந்த வரலாறு:—முக்காலத்தில் மலைகள் சிறகுகளையுடையனவாயிருந்து ஆகாயத்திற் பறந்துபல நகரங்களின் மீது விழுந்து அழித்துக் கொண்டிருந்ததினால் இந்திரன் அவற்றின் சிறகைத் தன் வச்சிராயுதத்தினால் வெட்டினான் என்பது புராணக்கதை.

அதற்கு நாரதர் தமயந்தியின் சுயம்வரச் செய்தி கூறல்.

71. வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சயம்வரத்து—மாமன்னர்
போயினா ரென்றான் புரந்தரற்குப் பொய்யாத
வாயினான் மாதவத்தோர் மன்.

[இ-ள்.] பொய்யாத வாயினான்-பொய்க்காத சொல்லையுடையவரும், மாதவத்தோர் மன்-பெரிய தவமுடையவர்களுக்குத் தலைவருமான நாரதர்,- புரந்தரற்கு-இந்திரனுக்கு, வீமன் மடந்தை-வீமராஜன் புத்திரியாகிய தமயந்தியினது, மணத்தின்-கலியாணத்துக்குரிய, விரைதொடுத்த தாமம்-வாசனைமிகுந்த மாலையை, சயம்வரத்துப் புனைவான்- [அவளுடைய சுயம் வரத்தில் தாங்கள் தாங்கள் [பெற] விரும்பி, மாமன்னர்-பெருமை பொருந்திய அரசர்களெல்லாரும், போயினார் என்றான்-அங்குச் சென்று அவ்வைபவத்தை எதிர்பார்த்து இருக்கின்றார்கள் என்று சொன்னார்; [எ-று.]

மேற்கூறியவாறு சந்தேகித்துக் குறிப்பாக வினாவின இந்திரனுக்குத் தமயந்தியின் சுயம்வரச் செய்தியைத் தெரிவிக்கச் சென்ற நாரதர் அவன்

குறிப்பையுணர்ந்து அதற்கு விடையாகவே தாம் குறித்துவந்த செய்தியைப் பொருந்தக் கூறினர் என்பதாம்.

புனைவான்-வானீற்று வினையெச்சம், விகுதியே எதிர்காலங் காட்டும். சுயம்வரம் என்பது சயம்வரம் என விகாரப்பட்டது. புரந்தரன்-பகைவர் நகரத்தை யழிப்பவன் என்று பொருள்படும்.

"பொய்ம்மை மொழி புகன்றறியேம் புகலமன மெண்ணுகினு, மெய்ம் மையல துரையாநா வேதநவில் பயிற்சியால்" என்று கூறியபடி சத்தியமான வேதத்தை எப்போதும் ஓதிப்பழகியதால் பொய்படாத நாவினையுடையார் என்பார் நாரதரைப் பொய்யாத நாவினன்' என்று விசேடித்தார். இனி, [அருள் கொண்டு கூறினலும் வெகுண்டு கூறினலும் அந்தந்தப் பலன்களைத் தந்தே விடுகின்ற நிறை மொழிகளை யுடைமையால்] தவறிப் போதலில்லாத வாக்குடையான் என்றுமாம். தவம்-தபஸ் என்ற வடசொல்லின் விகாரம். வாய்-ஆகுபெயராய்ச் சொல்லைக் குறித்து நின்றது.

நாரதர் தமயந்தியை வர்ணித்தல்.

72. அழகு சுமந்திளைத்த வாகத்தாள் வண்டு
பழகு கருங்கூந்தற் பாவை—மழகளிற்று
வீமன் குலத்துக்கோர் மெய்த்தீப மற்றவளே
காமன் றிருவுக்கோர் காப்பு.

[இ-ள்] [அத்தமயந்தி] அழகு சுமந்து இளைத்த-தனது பேரழகைச் சுமப்பதினால் மெலிந்துபோன, ஆகத்தாள்-தேகத்தை யுடையவள், வண்டு பழகு-[தேனைவிரும்பி.] வண்டுகள் நெருங்கிப் பயில்கின்ற, கரும் கூந்தல் பாவை-கரிய கூந்தலையுடைய பாவை போன்றவள். மழகளிறு-இளமையான யானைப்படையையுடைய, வீமன் குலத்துக்கு-வீமராசனது வம்ஸத்திற்கு, ஓர் மெய்த்தீபம்-ஒப்பற்ற மெய்ம்மையான தீபம்போன்றவள், அவளே-அத் தமயந்தியே, காமன் திருவுக்கு-மன்மதனது செல்வத்துக்கு, ஓர் காப்பு-சிறந்த காவலாவாள்; [என்று நாரதர் கூறினர்.]

அழகு சுமந்து என்றதனல் கட்டழகுடையாள் என்பது பெறப்பட்டது. வண்டு பழகுதலாவது கூந்தலிலுள்ள மலர்களின் தேனை விரும்பி வண்டுகள் மொய்க்கப்பெற்றிருத்தல். பாவை-உவம ஆகுபெயர். மழகளிறு-உரிச்சொற் றொடர், இவளது அழகு குணம் செயல் முதலியவற்றால் வீமராஜன் குலத் தையாவரும் அறிதலால் தமயந்தியைத் 'தீபம்' என்றும், இவளதுபேரழகால் புருடர்கள் யாவரும் காமனதுவசப்படுதலினல் 'காமன்றிருவுக்கோர் காப்பு' என்றும் கூறினர். கருங்கூந்தல்-பண்புத்தொகை.

**இந்திரன் முதலிய தேவர்கள் தமயந்தியின் சுயம்வரத்திற்குப் புறப்படுதல்.**

73. *மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தானும் வானவருங்*
*கோல்வளை தன் மாலை குறித்தெழுந்தார்—சால்புடைய*
*விண்ணாடு நீங்கி விதர்ப்பன் றிருநகர்க்கு*
*மண்ணாடு நோக்கி மகிழ்ந்து.*

[இ-ள்] [நாரதர் சொல்லியதைக் கேட்ட] மால் வரையை-பெரிய மலைகளை, வச்சிரத்தால்-வச்சிராயுதத்தினால், ஈர்ந்தானும்-சிறகரிந்த இந்திரனும், வானவரும்-அக்கினி யமன் வருணன் ஆகிய தேவர்களும், கோல்வளை தன்-அழகிய வளையலணிந்த தமயந்தியினது, மாலை குறித்து சுயம்வரமாலையைக் கருதி, சால்பு உடைய-[எல்லாச் செல்வமும்] நிறைதலை யுடைய, விண் நாடு நீங்கி-சுவர்க்கத்தினின்று நீங்கி, விதர்ப்பன் திருநகர்க்கு-வீமராசனுடைய அழகிய குண்டினபுரத்திற்குச் செல்லும்பொருட்டு, மண் நாடு நோக்கி-மண்ணுலகத்தை நோக்கி, மகிழ்ந்து எழுந்தார்-விருப்பத்தோடு புறப்பட்டார்கள்; [எ-று.]

தமயந்தியின் சுயம்வரத்தை நாரதர் வாயிலாகக் கேட்ட இந்திரன் முதலிய தேவர்கள் தமயந்தியை விரும்பிச் சுயம்வரத்திற்காகப் பூலோகம் நோக்கிப் புறப்பட்டார்கள் என்பதாம்.

கோல்வளை-வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்த் தமயந்திக்காயிற்று. மாலை சுயம்வரமாலை. சால்பு-உரிச்சொல்.

**சுயம்வரத்துக்கு வருகின்ற நளனைத் தேவர்கள் காணுதல்.**

74. *பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபாற் போயின தன்*
*சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்—முந்தி*
*வருவான்போற் றேர்மேல் வருவானைக் கண்டார்*
*பெருவானிற் றேவர் பெரிது.*

[இ-ள்] பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபால்-பசியமாலையணிந்த வேலாயுதத்தையுடைய வீமராசனது மகளாகிய பாவை போன்ற தமயந்தியிடத்து, போயின-சென்றதாகிய, சிந்தை கெடுத்து-மனதைக் காணமற் போக்கி, அதனைத் தேடுவான்-அம்மனதைத் தேடும் பொருட்டு, முந்திவருவான்போல் - [எல்லா அரசர்க்கும்] முன்னமே வருபவனைப் போல, தேர்மேல் வருவானை-ரதத்தின்மீது வருகின்ற நளமகாராசனை, பெரு வானில் தேவர்-பெரிய சுவர்க்கலோகத்தினின்றும் வருகின்ற இந்திரன் முதலிய தேவர்கள், பெரிது கண்டார்-நன்றாகக் கண்டார்கள்: [எ-று.]

பைந்தெரியல் - பசுமையாகிய தெரியல்; பண்புத்தொகை, பாவை-ஆகுபெயர். தேடுவான்-வான் எதிர்கால வினையெச்ச விகுதி.

இந்திரன் நளனைப் பார்த்து உன்னால் ஒரு காரியம் ஆகவேண்டுமெனல்.

75. காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோ
னேவற் றொழிலுக் கிசையென்றான்—ஏவற்கு
மன்னவனு நேர்ந்தான் மனத்தினான் மற்றதனை
இன்னதென வோரா திசைந்து.

[இ-ள்] விண்ணவர்கோன் - தேவர்க் கரசனாகிய இந்திரன், காவல் குடை வேந்தை - [உலகத்திற்கு] பாதுகாவலாகிய குடையையுடைய நளமகாராசனை, கண்ணுற்று-பார்த்து, ஏவல் தொழிலுக்கு இசைஎன்றான், [நாங்கள்] ஏவுவதொரு காரியத்தைச் செய்வதற்கு உடன்படுவாய் என்று பொதுப்படக் கூறினான், மன்னனும்-நளமகாராஜனும், அதனை இன்னது எனமனத்தினால் ஓராது - அத்தொழிலை இன்னதென்று மனத்தினால் ஆராய்ந்து பாராது; ஏவற்கு இசைந்து-அவர்கள் ஏவும் தொழிலைச் செய்தற்கு உடன்பட்டு, நேர்ந்தான்-தான் அங்ஙனஞ் செய்வதாக உறுதி கூறினான்; [எ-று.]

முன்னமே தமயந்தியிடத்தில் ஈடுபட்டிருந்த மனதானது, அவள் சுயம்வரத்தைக் கேட்டமாத்திரத்தில் நளனைப்போகும்படி விரைவாகத் தூண்ட அங்ஙனம் வருகின்றவனாகிய நளனை இந்திரன்முதலியோர் தடுத்தனர் என்ப.

நளனுடைய செல்வச் சிறப்புகளையும் அழகிய உருவத்தையும் நற்குண நற்செயல்களையும் கேள்வியாலறிந்திருந்த தேவர்கள், அவனை நேரேகண்டவுடன் நளனைக்கண்ட தமயந்தி அவனையன்றி மற்றொருவனையும் விரும்பாளென்று கருதியவராய், இவனையே நமக்குத் தூதாக இசைவித்தால் இருவருக்கும் இருக்குங்காதல் நீக்கி இத்துணைச் சிறப்புப்பெற்ற அரசனைத்தூதாகக்கொண்ட தேவர் திறம் என்னவாமோவென வியந்து தமயந்தி தங்களை விரும்பக் கூடுமென்று ஆலோசித்து நளனைத் தூதாக அனுப்ப வேண்டுமென்று நிச்சயித்து, தேவர் தலைவனான இந்திரன் இவனிடம் முன்னமே காரியத்தை வெளியிட்டால் இசையானெனக் கருதித் தந்திரமாய் உடன்படுத்த வெண்ணி இவ்விதம் பொதுப்பட 'ஏவற்றொழிலுக்கு இசை' என்றான். அது கேட்ட நளன், தான் குறிப்பறிந்தீயும் குணம்படைத்த வள்ளலாகையாலும், தேவர் தலைவனான பெரியான் ஒன்றுவேண்ட இசையாமல் மறுப்பது தகுதியன்றெனக் கொள்ளும் பெருந்தன்மை படைத்தவனாகையாலும்: உடன்பட்டனன் என்க.

கண்ணுறுதல்-பார்த்தல், கண்ணுறு பகுதி. இன்னது-இடைச்சொல்லடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. ஓராது-எதிர்மறை வினையெச்சம்.

இந்திரன் நளனை நோக்கி எங்கட்காகத் தமயந்தியிடம் தூது செல்ல வேண்டுமெனல்.

76. செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
எங்களிலே சூட்ட வியல்வீமன்—மங்கைபாற்

றாதாக வென்றானத் தோகையைத்தன் னாகத்தாற்
கோதாக வென்றானக் கோ.

[இ-ள்] செம் கண் மதயானை - சிவந்த கண்களையுடைய மதயானை போன்ற, தேர்வேந்தே-ரதாதிபனே! தேமாலை-தேன்சொரிகின்ற சுயம்வர மாலையை, எங்களிலே சூட்ட-எங்களில் ஒருவனுக்கு அணியும்படி, இயல் வீமன் மங்கைபால் - சௌந்தரியமுடைய வீமராசன் புத்திரியாகிய தமயந்தியிடம்; தூது ஆக-தூதாகச் செல்வாயாக, என்றான் - என்று [இந்திரன்] சொன்னான் [அதற்கு இசைந்தவனாய்], அ கோ-அந்த அரசனாகிய நளன், அ தோகையை - அத்தமயந்தியை, ஆகத்தால் - மனத்தால், கோது ஆக-கோதுபோல [அதாவது தனக்கு உபயோகமற்றவளாக எண்ணி], வென்றான்-[தன் மனது அவள் வசப்படாமல்] ஜயித்தான்: [எ று.]

நளன் சத்தியந்தவறுத் தகையனாதலால் தான் காதல் செய்திருந்த தமயந்தி பால் இந்திரன் மனம் வைத்தது தெரிந்தவுடன், தான் அளித்தவாக்குக்கெடாதபடி, முன்புதான் கொண்டிருந்த காதலை ஒழித்தனனென்பதாம்.

யானைக்குக்கண் சிவத்தல் கோபத்தால். தேன்மாலை தேமாலை, "தேன் மொழி மெய்வரின்" என்னும் சூத்திரவிதி, 'தூதாக' இதில் ஆக வியங்கோள்முற்று-ஆ-பகுதி, கு சாரியை: க விகுதி. தோகை யென்னும் வாலின் பெயர், சினையாகு பெயராய் மயிலையும், பின் அது உவம வாகு பெயராய் மயில்போன்ற சாயலையும் உணர்த்திற்று, இருமடியாகு பெயர். கோது-சாரமில்லாத பொருள். ஆகவே நளன் தமயந்தியைத் தனக்கு உபயோகமில்லாதவளாகக் கருதினானென்றறிக.

77. தேவர் பணிதலைமேற் செல்லுந் திரிந்தொருகான்
மேவுமிளங் கன்னிபான் மீண்டேகும்—பாவிற்
குழல்போல நின்றுழலுங் கொள்கைத்தே பூவின்
நிழல்போலுந் தண்குடையா னெஞ்சு.

[இ-ள்] பூவின்-பூமியிலுள்ளவர்க்கு, நிழல்-நிழலைச் செய்கின்ற, தண்குடையான்-குளிர்ந்த [வெண்கொற்றக்] குடையையுடையவனாகிய நளனது நெஞ்சு-மனம் தேவர்பணி - தேவர்களது ஏவலை, தலைமேல் - தலைமேற்கொண்டு, செல்லும்-போகும், ஒருகால் - மற்றொருவேளை, திரிந்து - மாறி, மேவும் இளம் கன்னி பால் தன்னால் விரும்பப்படுகின்ற இளமையான கன்னியாகிய தமயந்தியினிடம், மீண்டு ஏகும்-திரும்பிச் செல்லும், பாவில்-நூற்பாவினிடத்தில், குழல்போல நெய்கின்ற குழல் என்னுங்கருவிபோல, நின்று உழலும்-அங்கங்கே நின்று திரிகின்ற, கொள்கைத்து-தன்மையையுடையது.

தேவர்களால் தமயந்தியினிடத்துத் தூதாக அனுப்பப்பட்ட நளனது மனதானது பாவினுள்ளோடும் குழாய்போல் மாறிமாறி வருந்திற்றென்பதாம். குழல்-வஸ்திரமாக்குவதற்குத் தறியிற்கட்டப்பட்டிருக்கும் பாவினுள்

இருபக்கத்தும் செலுத்தப்படும் ஓர் கருவி. தலைமேல் என்றவிடத்து 'தாங்கி' என்னும் சொல் வருவித்துரைக்க. பூ-ஜனங்களுக்கும், நெஞ்சு-மனதிற்கும் இடவாகுபெயர். பணியைத் தலைமேற் கொள்ளுதலாவது, சிறிதும் மறுக்காமல் பெரும் பேருக ஏற்றுக் கொள்ளுதல். போலும்-அசை, ஏ-இரக்கப் பொருளது. கொள்கைத்து-ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று.

78. ஆவ துரைத்தா யதுவே தலைநின்றேன்
தேவர்கோ னேயத் திருநகரிற்—காவல்
கடக்குமா றென்னென்றான் காமநீ ராழி
அடக்குமா றுள்ளத் தவன்.

[இ ள்.] காமம் நீர் ஆழி-காமமாகிய நீர் நிறைந்த சமுத்திரத்தை, அடக்கும் ஆறு- [பெருகாமல் அடக்குகின்ற வழியை யுணர்ந்த, உள்ளத்தவன்-மனமுடைய நளன்,—தேவர்கோனே-தேவர்களுக் கரசனுகிய இந்திரனே, ஆவது உரைத்தாய்- [உங்களுக்கு] ஆகவேண்டிய காரியத்தைச் சொன்னுய், அதுவே தலைநின்றேன்-அந்த ஏவலையே சிறப்பாகப் பெற்று நின்றேன், அ திருநகரில்-அந்த அழகிய குண்டினபுரத்திலுள்ள, காவல்-காவலாளர்களை, கடக்கும் ஆறு-[அவர்கள் தெரிந்துகொள்ளாதபடி] கடக்கின்றவிதம், என் என்றான்-என்ன என்று கேட்டான்; [எ-று.]

தன்னையே தமயந்தி மணந்துகொள்வாள் என்று உணர்ந்து அவள் சுயம்வரத்திற்கு ஆசையுடன் போகின்ற நளன் இடைவழியில் தேவர்கள் தங்களுக்காகத் தூது செல்லவேண்டுமென்று கேட்டுக் கொள்ள அதற்கிசைந்து தான் தமயந்திமீது கொண்ட காதலை ஒழித்த மனஉறுதியுடையவனுதலால் நளனைக் 'காமநீராழி அடக்குமா றுள்ளத்தவன்' என்றார்.

காமநீராழி-உருவகம். ஆவது ஒன்றன்பாற் படர்க்கை எதிர்கால வினையாலணையும் பெயர். தலை நின்றேன் - ஒரு சொல் நீர்மையது. காவல்-காக்கின்றவர்களுக்கு ஆகுபெயர். உள்ளத்தவன் - வினையாலணையும் பெயர். அதுவே என்றதனுல் தான் அவளிடத்து விருப்பங் கொண்டவனுக இருந்தும் அப்போது அவ்விருப்பத்தை வாய்மையைக்கருதி முற்றும் வெறுத்தான் என்பது தோன்றியது.

பிறர் காணுது மறைந்து செல்லும்படி நளனுக்கு இந்திரன் வரமளித்தல்.

79. வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான் — யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்
பாணுறுந் தாரானைப் பார்த்து.

[இ-ள்] வார்வெம் சிலை ஒழிய-நீண்ட கொடிய வில்லைக்கொண்டல்லாமல், வச்சிரத்தால்-வச்சிராயுதத்தைக் கொண்டு, மால்வரையை-பெரிய மலைகளை, போர்வெம்சிறகு அறுத்த-பொருது அழிக்கின்ற கொடிய இறகுகளை வெட்டித் தள்ளிய, பொன் தோளான்-அழகிய தோள்களையுடையஇந்திரன், கார்வண்டின்-கரியவண்டுகளின், பாண்நாறும்-பாடல்கள் தோன்றப்பெற்ற, தாரானை-மாலையையணிந்த நளனை, பார்த்து—யாரும் உனைக் காணார்-[பிறர்] எவரும் உன்னைக் காணமாட்டார், போய் அவளைகாண்-[நீ] சென்று அந்தத் தமயந்தியைப் பார், என்றான்-என்று சொன்னான்; [எ-று.]

யாரும் அறியாது செல்லுதற்கு உபாயம்கேட்ட நளனுக்கு இந்திரன்;- தம்முருத் தெரியாமல் எங்கணும் செல்ல நினைக்கின்றவர்களுக்கு அங்ஙனமேசெய்யும் வன்மையையுடைய 'மாலிகாஞ்சனம்' என்னும் மந்திரத்தை உபதேசித்து அனுப்பினான் என்க.

வச்சிராயுதம், சிறப்பாய் இந்திரனுக்கு உரியதாம் தன்மை தோன்ற, வார் வெஞ்சிலையொழிய வச்சிரத்தால் என்றார். வண்டின் பாணாறுந்தார்-வண்டுகள் மொய்த்து இசைபாடுதற்கேற்ற மாலை, நாறுதல்-தோன்றுதல், இந்திரன் மலைகளின் சிறகுகளை வெட்டிய காலத்து மைநாக பர்வதம் மட்டும் ஓடிக்கடலிடையே ஒளித்துக் கொண்டதென்னும் செய்தியற்றி 'வார் வெஞ்சிலையொழிய' என்பதற்கு மைநாக பர்வதம் ஒன்று தவிர எனவும் பொருள் கொள்ளலாம். மற்று அசை.

குண்டினபுரச் சிறப்பு.

80 இசைமுகந்த வாயு மியலெறிந்த நாவுந்
திசைமுகந்தா லன்ன தெருவும்—வசையிறந்த
பொன்னாடு போந்திருந்தாற் போன்றதே போர்விதர்ப்ப
நன்னாடர் கோமா னகர்.

[இ-ள்] போர்-யுத்தஞ் செய்தலிற் சிறந்த, விதர்ப்ப நல் நாடர் கோமான்-விதர்ப்ப மென்னும் நல்ல நாட்டிலுள்ளவர்களுக்கு அரசனாகிய வீமராசனது, நகர்-குண்டினபுரி,—இசைமுகந்த வாயு-கீர்த்தியைக் கொண்டிருக்கின்ற வாயில்களாலும், இயல் தெரிந்த நாவும்-சிற்பநூலிற் கூறுமுறைப்படி அமைக்கப்பட்ட நடுவிடங்களாலும், திசை முகந்தால் அன்ன தெருவும்-எட்டுத்திசைகளையும் முகந்து கொண்டதைப்போன்ற பெரியவீதிகளாலும், வசை இறந்த-குற்றம் நீங்கிய, பொன்னாடு-சுவர்க்கலோகம், போந்து இருந்தால் போன்றது-[அங்ஙனமே பெயர்ந்து பூமியில் வந்து] தங்கி யிருந்தது போல [நளனுக்குத் தோன்றியது; [எ-று.]

கோட்டைக்கோபுர வாயில்களாலும், நகரத்தின் மத்திய பாகங்களாலும், பெரிய வீதிகளாலும் விதர்ப்பதேசமென்று கூறப்பட்ட குண்டினபுரியானது தேவலோகத்தை ஒத்திருந்தது என்பது கருத்து.

இசை முகந்த வாயும் என்பதற்கு சங்கீத சாஸ்திரங்கள் பயிலப்பெறுகின்ற கோபுரவாயில்களென்றும், இயல் தெரிந்த நாவும் என்பதற்கு இலக்கண நூல்கள் பயிலப்பெறுகின்ற நகர் மத்திய மண்டபப் பிரதேசங்களென்றும் பொருள் கொள்ளக் கிடக்கின்றது. இச்செய்யுள் உவமையை அங்கமாகப் பெற்று வந்த தற்குறிப்பேற்றவணி. அன்ன- இடைச்சொல் அடியாகப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம். போந்து-இறந்தகால வினையெச்சம்; புகு என்பதன் மரூஉவாகிய போ-பகுதி.

அவ்வாறே சென்ற நளனும் தமயந்தியும் அந்தப்புரத்தில்
ஒருவரை யொருவர் பார்த்தல்.

81. தேங்குவளை தன்னிலே செந்தா மரைமலரப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே—யாங்கு
மதுநோக்குந் தாரானும் வாணுதலுந் தம்மிற்
பொதுநோக் கெதிர்நோக்கும் போது.

[இ-ள்.] ஆங்கு-அந்தப்புரத்துக் கன்னிமாடத்தில், மதுநோக்கும் தாரானும்-வண்டுகள் [தேனைவிரும்பி மொய்த்துத்] திரிகின்ற மாலையை அணிந்த நளனும், வாள்நுதலும்-பிரகாசந்தங்கிய நெற்றியையுடைய தமயந்தியும், தம்மில்-தங்களுக்குள், பொது நோக்கு-பொதுப்பார்வையாக, எதிர் நோக்கும் போது-எதிர் நோக்கின காலத்தில், தேங்குவளை தன்னில்-[தமயந்தியின் கண்களாகிய] மணமுள்ள குவளை மலர்களில், செந்தாமரை மலர-[நளனுடைய கண்களாகிய] செந்தாமரை மலர்கள்மலர, பூங்குவளை-[தமயந்திகண்களாகிய] அழகிய அக்குவளைப் புஷ்பம், தாமரைக்குப்பூத்தது-[நளன்முகமாகிய] அத்தாமரை மலரிடையே மலர்ந்தது; [எ-று.]

தேங்குவளை, செந்தாமரை யென்றது, முறையே தமயந்தி நளன் இருவரது கண்களை, முதலில் நளன் தமயந்தியைப் பார்த்தனன் பின் தமயந்தி நளனைப் பார்த்தனள் என்பதாம்: பொது நோக்கு, காமக்குறிப்பின்றிப்பார்க்கும் பார்வை. தேன்-குவளை-தேங்குவளை "தேன்மொழிமெய்வரின்" என்ற சூத்திரவிதி. பூ-குவளை-பூங்குவளை "பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்" என்ற சூத்திரவிதி. செந்தாமரை, இதிலுள்ள விசேஷணம் இனம் விலக்க வந்தது. தாமரைக்கு உருபுமயக்கம்-[நன். பெயரியல் 60.] நோக்குதல், விரும்புதல், வாணுதல், அன்மொழித்தொகை. ஏ-அசை.

82. நீண்ட கயலத்தை நீலக் கடைசென்று
தீண்டி மளவிற் றிறந்ததே—பூண்டதோர்
அற்பின்றாழ் கூந்தலாள் வேட்கை யகத்தடக்கிக்
கற்பின்றாழ் வீழ்த்த கதவு.

[இ-ள்.] தாழ்கூந்தலாள்-தொங்குகின்ற கூந்தலையுடைய தமயந்தியானவள், வேட்கை-விருப்பத்தை, அகத்து அடக்கி தனது மனமாகிய வீட்டில்

வெளிப்படாமல் வைத்து, கற்பின் தாழ்-கற்பாகிய தாழக் கோலே, வீழ்த்த கதவு பூட்டப்பட்டிருந்த நிறையாகிய கதவானது, நீண்ட கமலத்தை [நளன் கண்களாகிய] பெரிய தாமரை மலர்களை, நீலம் கடை - நீலோற்பல மலர் போன்ற தனது கடைக்கண் பார்வையானது, சென்று-போய், நீண்டும் அளவில்-பொருந்திய மாத்திரத்தில், பூண்டது ஓர் அன்பின்-முன்னே தான் கொண்டிருந்த ஒப்பற்ற அன்பினால், திறந்தது-திறந்துகொண்டது;[எ-று.]

தமயந்தி நளனைப்பார்த்தமாத்திரத்தில் அன்பின்முதிர்ச்சியால்தன்னை மறந்து தனது நாணம் ஒழிந்து நின்றாள் என்பதாம். ஏ-அசை.

நிறை மனத்தைப் புறத்தே செல்லாது நிறுத்தல். கமலம் நீலம் முறையே நளன் தமயந்தி கண்கள், உருவகம். கமலம்-நீரில் தோன்றுவதென்று காரணப்பொருள்படும். நீலம்-பூவிற்குக் குணவாகுபெயர். அன்பு என்பது அற்பு என எதுகை நோக்கி வலிந்து நின்றது. தாழ் கூந்தல் - வினைத் தொகை. வேட்கை தொழிற் பெயர், வேள்-பகுதி, கை-விகுதி, கற்பின் தாழ்-உருவகம்; இருபெயரொட்டுப் பண்புத் தொகை. இன்-சாரியை. கற்பாகிய தாழ்என விரிக்க. பூண்டது-முற்றெச்சம். வீழ்த்த-பிறவினை இறந்த காலப்பெயரெச்சம், வீழ்-பகுதி, அ-பெயரெச்சவிகுதி.

83 உய்ஞ்சு கரையேற வொட்டுங்கொ லொண்டொடியாள்
நெஞ்சு தடவு நெடுங்கண்கள்—விஞ்சவே
நீண்டதோ வங்ஙனே யிங்ஙனே நீண்மலராள்
ஆண்டதோள் மன்னன் அழகு

[இ-ள்] ஒண் தொடியாள்-ஒளி பொருந்திய வளையல்களை அணிந்த தமயந்தியினுடைய, நெஞ்சு தடவும்-நளனது மார்பைப் பரிசிக்கின்ற,நெடும் கண்கள்-பெரிய கண்கள், அங்ஙனே-அம்மார்பிடத்து விஞ்சவே-மிகுதியாக, நீண்டதோ-பரவினவோ, [அன்றேல்] நீள்மலராள் ஆண்டதோள் - பெரிய செந்தாமரை மலரிலுள்ள திருமகள் தனக்கு இடமாகக் கொண்ட தோள் களையுடைய, மன்னன் அழகு-நளமகாராஜனுடைய அழகாகிய கடலை, இங்ஙன்-இங்கே, உய்ஞ்சு-தப்பி, கரைஏற ஒட்டும்கொல்-கரையேற முடியுமோ.

நளனது மார்பைத் தமயந்தி இமைகொட்டாது பார்க்கப்பார்க்க அழகு விஞ்சி அவனுடைய அழகில் ஈடுபட்டுக் கிடந்தமையால் கவி இங்ஙனம் ஐயப் பொருள் தோன்றக் கூறினார்; நளனது கட்டழகை வியந்து கூறியவாறும்.

கண்கள் நீண்டதோ என்றது பன்மையில் ஒருமை வந்த பால்வழுவமைதி, உய்ந்து என்ற வினையெச்சத்தில் உய்ஞ்சு என நகரத்திற்கு ஞகாரமும், தகரத்திற்குச் சகரமும் போலியாய் வந்தன. கொல், ஓ-ஐயப்பொருளன,

84. மன்னாகத் துள்ளழுந்தி வாரணிந்த மென்முலையும்
பொன்னாணும் புக்கொளிப்பப் புல்லுவனென் — றுன்னா
எடுத்தபே ரன்பை யிடையே புகுந்து
தடுத்ததே நாணாந் தறி.

[இ-ள்] வார் அணிந்த-கச்சால் இறுக்கப்பட்ட, மெல் முலையும்-மெல்லிய தனங்களும், பொன் நாணும்-பொன்னாலாகிய கயிறும், மன் ஆகத்துள்-நளனுடைய மார்பில், புக்கு-புகுந்து, அழுந்தி - அழுத்தப்பட்டு, ஒளிப்ப-மறையும்படி, புல்லுவன் என்று-தழுவுவேன் என்று, உன்னா-நினைத்து-எடுத்தபேர் அன்பை-தான் கொண்ட பெரியஆசையாகிய [யானையை], நாண் ஆம் தறி-நாணமாகிய கட்டுமரம், இடையே புகுந்து-இடையில் போய், தடுத்தது-தடைசெய்து விட்டது; [எ-று.]

ஆசை மிகுதியால் நளனைத்தழுவ நினைந்த தமயந்தி நாண மிகுதியால் அது ஒழிந்து அங்ஙனமே நின்றனள் என்பதாம்.

நாணத்தைத் தறியாக உருவகஞ் செய்தமைக் கேற்ப அன்பை யானையாக உருவகஞ் செய்யாதது ஏகதேச உருவகம். வார் அணிந்த மென்முலை என்பதற்கு-கச்சை அழகுபெறச் செய்கிற தனங்கள் எனினுமாம். உம்மை யிரண்டும் எண்ணுப் பொருளன. உன்னா-உடன்பாட்டு வினையெச்சம்.

அவ்வாறு பார்த்த, தமயந்தி, நளனை நீயார்? என்றல்.

85. காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ விஞ்சைக் கிறைவனோ — தேவனோ
உள்ளவா சொல்லென்றா ளூசற் குழைமீது
வெள்ளவா ணீர்சோர விட்டு.

[இ-ள்] ஊசல்குழைமீது-ஊஞ்சலாடுவதுபோலத் தொங்கி அசைகின்ற குழை என்னும் காதணிமீது உலாவுகின்ற, வாள்நீர் வெள்ளம்-வாளாயுதம் போன்ற கண்களின் நீரை வெள்ளம் போல, சோரவிட்டு - பெருக்கி, [தமயந்தி நளனை நோக்கி], காவல் கடந்து - [அந்தப்புரக் காவலர்களுடைய] காவலைத்தாண்டி, எங்கள் கன்னிமாடம் புகுந்தாய்-எங்களது கன்னியாமாடத்துள்ளே வந்தவனான நீ, விஞ்சைக்கு இறைவனோ-மாயவித்தை கட்குத் தலைவனான வித்தியாதரனோ?, தேவனோ-தேவர் உலகத்தவனோ?, யாவனோ-உள்ள ஆசொல்-உள்ளவாறே சொல், என்றாள்-என்று வினவினாள்; [எ-று.]

இங்கு கண்ணீர் சோரவிட்டமை ஆடவர் அடையப் பெறாத கன்னிமாடத்தில் திடீரென்று ஓர் புருஷனைக் கண்டதனால் என்னாகுமோ வென்று கொண்ட மிக்க பயத்தினாலென்க. அல்லது மிகுந்த சௌந்தரியமுடைய புருஷனைக் கண்டதனால் உண்டாகிய ஆநந்தத்தினா லென்றாவது, அன்றி இத்தன்மை வாய்ந்த இவன் தனக்கு நாயகனாவனோ எனக்கொண்ட கவலை

யாலுற்ற சோகத்தினு லென்றுவது ஆகியது எனவும்கொள்ளலாம். எங்கள் என்ற உளப்பாட்டுத் தன்மைப் பன்மை முற்று, தன் தோழிகளையுந் தன்னுடன் கூட்டிக் கூறியது. கன்னிமாடம் கலியாணமாகாத இளம் பெண்கள் வசிக்கும் அந்தப்புரத்தில் ஓர் இடம். காவலாளருக்கும் தெரியாது, காவலையுங்கடந்து வந்தமையால், விஞ்சைக்கு இறைவனே, தேவனே, என ஐயமுற்றுக் வினவினுள். புகுந்தாய் யாவனோ என்றது, புணர்ச்சியால், புகுந்தாயாவனோவென யகரம் கெட்டது, இது யாழமுன்னர், என்ற சூத்திரத்து மேல் என்ற மிகையால அமையும். யாவனோ, ஓ-அசை, மற்றை இரண்டு ஓகாரங்களும் ஐயம். விஞ்சை-வித்யாஎன்ற வடசொல்லின் சிதைவு. தேவன்-வடசொல். வாள்- உவமையாகுபெயர்; ஆ-ஆறு என்பதன் விகாரம்- இனி வெள்ளமென்பதை நீர்ப்பெருக்கையுடைய கடலெனக் கண்ணுக்கு உவம ஆகு பெயராய்ப் பொருள் கொண்டு, வாள் பிரகாசம் என்றுரைப்பினுமாம்.

86. தீராத காமத் தழலைத்தன் செம்மையெனும்
நீரா லவித்துக் கொடுநின்று—வாராத
பொன்னுட ரேவலுடன் போந்தவா சொல்லித்தன்
நன்னுடுஞ் சொன்னு னளன்.

[இ-ள்] நளன்·நளமகாராஜன், தீராத காமத் தழல் ஒழியாத காமாக்கினியை, தன் செம்மை எனும் நீரால்-தனது நடுநிலைமைக் குணமாகிய ஜலத்தால், அவித்துக்கொடு நின்று-அவித்து, வாராத [பூலோகத்திற்கு]. வருதற்கரிய, பொன்நாடர் ஏவலுடன்-தேவர்களுடைய கட்டளையினுல், போந்த ஆ [று] - தான் வந்த விபரத்தை, சொல்லி—தன் நல்நாடும் - தனது நல்ல நாட்டின் பெயரையும், சொன்னுன்-சொல்லி நின்றுன்; [எ-று]

செம்மை-நடுவு நிலைமை தவறுத தன்மை. தான் தூதுக்கு இசைந்த காலத்தில் தமயந்தியைக் கோதாக நினைத்து வந்தவனுகையால் இப்பொழுது இவளை விரும்பி நிற்றல் முறைமையன்றெனக் கொண்டு மனத்தை ஒருவழி நிறுத்துகின்று ஞதலால் 'காமத்தழலைத் தன்செம்மையெனு நீராலவித்துக்கொடு நின்று' எனக் கூறினுர். காமத்தைத் தழல் என்றமைக் கேற்பச் செம்மையை நீரென்று கூறினுர்; நீர் அக்கினியை அழிக்கும் ஆற்றலுளது.

வாராத என்பதிலுள்ள எதிர்மறை தேவர்களுடைய வரவின் அருமை குறித்து நின்றது. ஆ-ஆறு என்பதன் விகாரம். உடன் என்னும் மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு அவ்வேற்றுமை ஆலுருபுப் பொருளில் வந்தது விசேஷணப் பொருளதுமாம்.

யாவனோ விஞ்சைக் கிறைவனோ எனக்கேட்ட தமயந்திக்கு நளன், தன்னை முதலில் இன்னுனெனக் கூறினுல் முன்னமே தன்னை மணக்க

விரும்பியுள்ள தமயந்தி தன்மீது மிகுந்த அவாவுற்றுப் பின் தான் கூறப் போகும் விஷயத்தை மனதிற் கொள்ளா ளாகையாலும், தான் மேற்கொண்டு வந்த காரியத்தைப் பிரதானமாகக் கொள்ளாதவன் என்ற வசை தனக்கு ஏற்படு மாதலாலும், தனது பெயர் முதலியவற்றைக் கூறுது தான் வந்த காரியத்தை முதலிற் கூறிப்பின் தன் நாட்டை மாத்திரம் குறிப்பித்தனன்.

நளன், தமயந்தியை நோக்கி நீ இந்திரனுக்குச் சுயம்வர மாலை சூட்டுவாய் என்றல்.

87. என்னுரையை யாதென் றிகழா திமயவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவா யென்றுன் றொடையிற்றேன் றும்பிக்கே
ஊட்டுவா னெல்லா முரைத்து.

[இ-ள்] தொடையில் தேன்-தன்னுடைய பூமாலையிலுள்ள தேனை, தும்பிக்கு ஊட்டுவான்-வண்டுகளுக்கு உண்பிப்பவனுன நளன், எல்லாம் உரைத்து-[தான் இன்னுனென்பதும் தான் வந்ததற்குக்காரணம் இதுவென்பதும் ஆகிய] எல்லாவற்றையுஞ் சொல்லி, என்உரையை யாது என்று இகழாது-என் வார்த்தையை என்ன பயன் என்று அலட்சியம் செய்யாது, இமையவர் வாழ் பொன் உலகம் காக்கும் புரவலனை-தேவர்கள் வசிக்கின்ற பொன்மயமான சுவர்க்கலோகத்தைப் பாதுகாக்கின்ற அரசனுன இந்திரனுக்கு, மென்மாலை சூட்டுவாய் - மென்மையாகிய சுயம்வர மாலையை இடுவாய், என்றுன்-என்று சொன்னுன்: [எ-று.]

இந்திரன் தேவர் தலைவனுகலின் அவனைப்பற்றி முதலில் தூது பேசினுன். பிறரையும் இங்ஙனம் முறையே பேசினுனென்க. உரைத்து என்றுன் என்றும், இகழாது சூட்டுவாய் என்றும் இயையும்.

தமயந்தி தனக்கே சுயம்வரமாலை சூட்டப்பெற்று இன்பத்தை அநுபவிக்கும் உரிமையும் தகுதியும் ஒருங்கே அமையப்பெற்றும், அங்ஙனம் விரும்பாது அவளை விரும்பி வந்த தேவர்பொருட்டு, தூதுபோகின்ற நளமகாராசனது 'தனக்கெனவாழாப் பரோபகார குணத்தை' நன்கு வெளிப்படுத்துதற்கு, 'தொடையிற்றேன் தும்பிக்கே யூட்டுவான்' என்றூர். இமையவர் கண்ணிமைக்கப்பெருத விசேடமுடையவர் புரவலனை-உருபு மயக்கம். ஏ-அசை.

தமயந்தி நளனை நோக்கி உன்னையே மணஞ்செய்வே னென்றல்.

88. இயமரநின் ருர்ப்ப இனவளைநின் றேங்க
வயமருதோண் மன்னு வருத்த—சுயம்வரந்தான்
நின்பொருட்டா லென்று நினைகென்று ணீள்குடையான்
தன்பொருட்டா லவா டளர்ந்து.

[இ-ள்] நீள் குடையான் தன் பொருட்டால்-பெரிய குடையையுடைய நளமகாராசன் விஷயமாக, நைவாள் - வருந்துகின்றவளாகிய தமயந்தி, தளர்ந்து-[அவ்வார்த்தையைக் கேட்டதும்] தளர்ச்சியடைந்து, [நளனை நோக்கி] வயம்மருதோள் மன்னு-வெற்றிபொருந்திய தோள்களையுடைய ... இயம்மரம்நின்று ஆர்ப்ப-வாத்தியங்களும் ஊதுகருவிகளும் நிலைத்து சப்திக்கவும், இனம் வளை நின்று ஏங்க-சங்குகள் கூட்டமாக நிலைத்து ஒலிக்கவும், வகுத்த-ஏற்படுத்திய, சுயம்வரம்-இந்தச்சுயம் வரத்தை, நின்பொருட்டால் தான் என்று-உன்னை மணஞ்செய்தல் நிமித்தமாகவே, [அமைத்தது என்று] நினைக என்றாள்-நினைப்பாயாக என்று சொன்னாள்; [எ-று.]

ராஜகன்னிகைகளுக்கு உரியமுறைப்படி அமைந்த சுயம்வரமாயினும் அச்சுயம்வரத்தில் நான் உன்னையே மணப்பன் எனக் கூறினாள் என்பதாம். மரம் கருவியாகு பெயராய், மரத்தினாலாகிய கொம்பு என்னும் ஊதுகருவிக்காயிற்று. இயமரம் என்பதை ஒரு சொல்லாகக் கொண்டு வாத்தியங்கள் எனப்பொதுவாகக் கூறினும் பொருந்தும். மருவு என்பது மரு எனவிகாரப்பட்டது. நினைக என்றாள் என்பது நினைகென்றாள் எனத்தொக்குநின்றது.

நளனை நோக்கி உனக்கேமாலை சூட்டுவேனெனக் கூறிய தமயந்தி
நீ அவசியம் சுயம்வரத்திற்கு வரவேண்டுமெனல்.

4. போதாரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தா
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே—சோதிச்
செழுந்தரள வெண்குடையாய் தேவர்களு நீயும்
எழுந்தருள்க என்றாள் எடுத்து.

[இ-ள்] போது-செந்தாமரை மலர்போன்ற, அரிக்கண்-செவ்வரிபரந்த கண்களையுடைய, மாதராள்-அழகியவளான தமயந்தி [நளனைப் பார்த்து], சோதிசெழுந்தரள வெண்குடையாய்-ஒளியையுடைய செழுமையான முத்துக்களால் அலங்கரித்த வெள்ளைக்குடையை யுடையவனே!, பொன்மாலை சூட்ட ஆதரித்தார் தம்மோடு-அழகிய சுயம்வரமாலை சூட்டப்பெற விரும்பினவர்களான அரசர்களுடனே, அவையகத்து-சுயம்வர சபையிடத்து, தேவர்களும் நீயும் எழுந்தருள்க-[நீ இங்கு குறித்த] தேவர்களுடன் நீயும் எழுந்தருள்வாயாக, என்றாள் எடுத்து-என்று எடுத்துச் சொன்னாள்; [எ-று.]

போது கருங்குவளை மலரெனினுமாம், அரி-ரேகை, மாதர்-கண்டாரால் விரும்பப்படுவதாகிய அழகு. ஆதரித்தார்-ஆதரம் என்னும் வடசொல்லின் அடியாகப் பிறந்த இறந்தகால வினையாலணையும் பெயர் தரளம் வடசொல். எழுந்தருள்க, வியங்கோள் வினைமுற்று, இது ஐம்பான் மூவிடங்கட்கும் பொதுவாதலால், தேவர்களும் நீயும் என்ற முடிபு கொண்டது.

இந்திரனுக்கு மாலை சூட்டவேண்டுமென்ற நளன், தான் சுயம்வரத்திற்கு வந்தால் இந்திரனுக்கு மாலை சூட்டாது தனக்கே மாலை சூட்டுவாள்

என நிச்சயங் கொண்டவனாய், ஒருகால் வராது இருந்து விடுவனோ என்ற ஐயத்தால், 'நீயும் எழுந்தருள்க' எனத்தனியே எடுத்துக் கூறினார்.

நளன் மீண்டு வந்து இந்திரனை வணங்குதல்.

90. வானவர்கோ னேவல் வழிச்சென்று வாணுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே—தேன்முரலும்
வண்டார் நளன்போந்து வச்சிராயு தற்றொழுதான்
கண்டா ருவப்பக் கலந்து.

[இ-ள்] வானவர்கோன்-தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனுடைய, ஏவல்வழி-கட்டளையின்படியே, தான் சென்று-தான் [தூது] போய், வாள் நுதலை அணுகி-பிரகாசம் பொருந்திய நெற்றியை யுடையவளான தமயந்தியைச்சந்தித்து, மீண்டபடி-திரும்பிய விபரத்தை, சாற்ற-சொல்லுதற்கு, தேன் முரலும் வள் தார்நளன்-வண்டுகள் ஒலிக்கப்பெற்ற அழகிய மாலையை அணிந்த நளமகாராஜன், போந்து போய், கண்டார் உவப்ப-பார்த்தவர் கள் சோஷிக்கும்படி, கலந்து -[அத்தேவர்களுடன்] கலந்து, வச்சிராயுத தொழுதான் - வச்சிராயுதத்தை யுடையவனை இந்திரனை வணங்கின

தங்கள் விருப்பத்தின்படி தூதுசென்று மீண்டதைக் குறித்துத்தே கள் மகிழ்தலும், காரியசித்தி பெறுதற்றிறம் வாய்ந்த இவன் தமயந்தி எவ்விதத்தினும் தங்களுக்கு மாலைசூட்டும்படி செய்திருப்பான் என்று வருகைபைக்கண்டு அவர்கள் மகிழ்தலுந்தோன்றக் கண்டாருவ என்று கூறினர் ஏவல்-தொழிற்பெயர். ஏவல்வழிச் செல்லல் கிசைந்து ஒழுகுதல். வாணுதல்-அன்மொழித்தொகை. தேன்- வண்டார் பண்புத்தொகை. வஜ்ரஆயுதன்-வஜ்ராயுதன், தீர்க்கசந் ழித் தொடர் [அஆமுன் அஆவர இரண்டுங் கெட ஓர் ஆகாரம்

வச்சிராயுதற் றொழுதான்-இரண்டாம் வேற்றுமைத் தொ பின் விகாரமும் விகாரத்தியல்பும்,' என்ற சூத்திர விதிப்படி விகாரமாயிற்று. கண்டார்-வினையாலணையும் பெயர் தானணுகி-தா எனவும் பிரிக்கலாம், நணுகுதல்-சேர்தல். ஏ அசை.

தூதுசென்று மீண்டநளன் விபரத்தைத் தேவர்கட்குக் கூற

91. விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் திருமகள்பால்
நண்ணு புகழ்நளனு நன்குரைத்த—பெண்ணணங்கி
வன்மொழியுந் தேவர் மனமகிழத் தானுரைத்த
மென்மொழியுஞ் சென்றுரைத்தான் மீண்டு.

[இ-ள்] விண்ணவர்தம் ஏவலுடன் - தேவர்களது கட்டளை வீமன் திருமகள் பால்-வீமராசனது அழகிய மகளிடத்து, நண்ணு-

சென்ற, புகழ்நளனும்-கீர்த்தியையுடைய நளமகாராசன், மீண்டு சென்று-திரும்பி வந்து, தேவர் மனமகிழத் தான் மொழிந்த மென்மொழியும்-அத்தேவர்களது மனம் சந்தோஷமடையத்தான் [அவளுடன்] கூறிய மென்மையாகிய வார்த்தையையும், நன்கு உரைத்த பெண் அணங்கின்வல் மொழியும்-[அதற்கு எதிராக] நன்றாகச் சொன்ன சிறந்த அப்பெண்ணினது கடுமையான வார்த்தையையும், உரைத்தான்-சொன்னான்; எ-று.]

தேவர்களுடைய கட்டளையினால் தூது சென்ற நளன், தமயந்திபாற் சென்று மீண்டு வந்து, தான் அவளிடம் கூறியதையும், அவள் அதற்குரைத்த மறுமொழியையும் தேவர்களிடம் கூறினானென்பது இதன் கருத்து.

விண்-மேலுலகம்; அதிலுள்ளவர், விண்ணவர். ஏவலுடன்-என்பதிலுள்ள உடன், உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு. தேவர் கட்டளையினால் நளன் சென்றானாதலின் இதனைக் கருவிப் பொருளில் வந்ததெனக் கோடலு மொன்று; அங்ஙனங் கொள்ளின் கருவிப் பொருள்தரும் ஆலுருபு உடனுருபாக மயங்கியதெனக்கொள்க. திருமகள்-என்பதற்கு இலக்குமி எனப்பொருள் கொள்ளினும் அமையும்; அங்ஙனம் கொள்ளின் இதனைத் தமயந்திக்கு உவமையாகு பெயராக்குக; மனுக்கு இவள் ஐசுவரியம் போன்றவளாதலின், இவளை அவனுடைய லக்குமி யென்றல் மிகவும் பொருத்த முடைத்து. பால்-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. நண்ணுபுகழ்-என்பதை வினைத்தொகையாகக் கொண்டு ண்ணு என்பதனைப் புகழுக்கடையாக்கினும் அமையும். புகழ்நளன்-இரண்ாம் வேற்றுமையுருபும் பயனு முடன்றொக்க தொகை. நளனும்-என்பதிள்ள உம்மை இசைநிறைப் பொருளில் வந்தது. நன்கு-பண்புப் பெயர். ரைத்த பெயரெச்சம். பெண் அணங்கு-இருபெயரொட்டுப் பண்பு; பெண் கிய அணங்கு என விரியும்; அணங்கு-தெய்வம்; இது, தெய்வம்போலச் றந்தவள் என்னும் பொருள்பட்டுத் தமயந்தியின் உயர்வை விளக்கி நின்றது. வன்மொழி, மென்மொழி என்பன பண்புத் தொகைகள். நளன் தமயந்தியைத் தேவர்க் குடன்படுத்த வேண்டி இனிய மொழிகளைக் கூறினமையின் அவன் மொழியை மென்மொழி யென்றும், அவள் மறுத்தற் பொருட்டுக் கடுஞ்சொற்களைக் கூறினமையின் அவள் மொழியை வன்மொழி யென்றுங் கூறினார் ஆசிரியர். நளன் உரைத்தவை யனைத்தும் தேவர்க் கனுகூலமானவையே ஆதலின், 'தேவர் மனமகிழத் தானுரைத்த' என்றார். பின்னுள்ள உம்மைகளிரண்டும் எண்ணுப் பொருளன. உரைத்தான்-ஆண்பாற் படர்க்கை இறந்த கால வினைமுற்று. மீண்டு, சென்று என்பன-வினையெச்சங்கள்; இவை உரைத்தான் என்பதனோடு இயைந்து முடியும்.

நளனுக்குத் தேவர் வரங் கொடுத்தல்.

92. அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்

பெற்றா யெனவருண ணாகண்ட லன்றருமன்
மற்றோனு மீந்தார் வரம்.

[இ-ள்] வருணன், வருணனும், ஆகண்டலன்-இந்திரனும், தருமன்-யமனும், மற்றோனும்-[இவரோடு கூடிவந்த] மற்றொருவனாகிய அக்கினியும், [உண்மையாகத் தூதுசென்றுவந்தநளன்மீதுபிரியமுடையவர்களாய்அவனை நோக்கி] அங்கி-நெருப்பையும், அமுதம்-அன்னத்தையும், நீர்-ஜலத்தையும், அம்பூ-அழகிய பூமாலையையும், அணி-ஆபரணங்களையும், ஆடை-வஸ்திரங்களையும், நீஎங்கு வேண்டினை-நீஎவ்விடத்தில் விரும்புவாயோ, அவ்விடத்தே-அவ்விடத்திலேயே, சங்கை அற-சந்தேக மில்லாமல், பெற்றாய்-அடைவாய், என-என்று, வரம் ஈந்தார்-வரத்தைக் கொடுத்தார்கள்; [எ-று.]

நளன் தூதுசென்று வந்ததற்கு மகிழ்ந்து வருணன்முதலிய தேவர்கள், அவனுக்கு நெருப்பும், அன்னமும், நீரும், பூமாலையும், ஆடையாபரணங்கள் முதலியவைகளும் வேண்டியவிடத்திற் கிடைக்குமாறுவரங்கொடுத்தார்கள்.

இங்கு நெருப்பு முதலியவற்றைப்பெற வருணன் முதலிய தேவர்கள் வரம்கொடுத்தாரென்று பொதுப்படக் கூறியிருப்பினும் நைடதத்தில்,

"கருணையி னெய்திய காளையை நோக்கி
யருமக மெவ்வுழி யாற்றினு மாங்க
ணுருவொடு வந்தவி யுண்குவ மென்னு
மருவரு நல்வரம் வாசவ னீந்தான்"

என்று கூறப்பட்டிருத்தலால், இந்திரன், நளனுடைய யாகத்தில் உருவோடு வந்து அவிர்ப்பாகம் வாங்கி உண்பதாக வரங்கொடுத்தான் என்றும்,

"மிடல்கெழு மேழக மேற்கொளு மேலோ
னுடைதிரை வேலையி னின்னமு தொப்ப
மடிதலில் வெங்கன லின்றியும் வாளா
வடிசி லடுந்தொழில் விஞ்சை யளித்தான்"

என்று சொல்லப்பட் டிருத்தலால், அக்கினி, நெருப்பு இல்லாமல் உணவு சமைக்கும் தன்மையைக் கொடுத்தான் என்றும்,

"அல்ல லுழந்தனு ரெய்தினு நெஞ்சி
னல்லற மெய்தவு நண்ணிய ஞாட்பில்
வெல்படை வேண்டுவ வெய்தவும் வென்றிக்
கொல்சின வெம்பக டூர்தி கொடுத்தான்"

என் வருதலால், யமன், சத்துருக்களை வெல்லத் தக்க வலிமை பொருந்திய ஆயுதங்களைக் கொடுத்தான் என்றும்,

"தார்புல ராது தயங்கவும் வேண்டி
னார்கலி வற்ற வமைக்கவு மல்லா
னீரறு பாலையி னெஞ்சி னினைப்பின்
வார்புன லெய்தவும் வருண னளித்தான்"

என்றிருத்தலான், வருணன் மாலைவாடாதிருக்கவும், கட்டுலவுற்றச்செய்யவும் நீரில்லாவிடத்தில் நீருண்டாகச்செய்யவும் வரங்கொடுத்தான் என்றும்,

"ஆண்டகைக் கின்ன வளித்தரி வைக்கு
மாண்டகு கற்பை வருத்துவ மென்றுத்
தீண்டின ராவி சிதைந்திடு மாறும்
வேண்டுரு வெய்தவும் விண்ணவ ரீந்தார்."

என்று கூறப்பட்டிருத்தலால், மேற்கூறிய எல்லாத் தேவர்களும் இவ்வாறு தனித்தனி வரங்கொடுத்ததுமன்றி, மேலும், நளனுக்கும் தமயந்திக்கும் வேண்டிய உருவம் பெறவும், தமயந்தியின் கற்பழிக்கத் துணிந்தவர் உயிர் விடவும் அருளினரென்றும் கொள்க. வருணன் பூமாலை வாடாதிருக்க வரங்கொடுத்தானென்றதால் ஆடையாபரணங்களையும் பெற அருளினனென்பது பெறப்படும். இன்னும் பாரதத்தில், இந்திரன், நளனுடையயாகத்தில், தான் உருவத்துடன் வந்து அவிர்ப்பாகம் பெற்றுக்கொள்வதாகவும், கடைசியில் நளன்நற்பதவி யடையும்படியாகவும், அக்கினி, நளனுக்குவேண்டியவிடத்தில் நெருப்பைப் பெறும்படி யாகவும், சோதிலோக பதவி கிடைக்கும்படியாகவும், யமன் தருமத்தில் மனம்நிலைத்திருக்கும்படியாகவும் வேண்டிய விடத்து அன்னரசம் பெறும்படியாகவும், வருணன் தண்ணீரையும் வாடாத பூமாலை முதலியவைகளையும் விரும்பியபோது பெறும்படியாகவும்வரங்கொடுத்தாரென்பதுகூறப்பட்டிருக்கிறது. இவற்றில் ஒன்றற்கொன்று சிறிது விகற்பப் படினும் 'வரங்கொடுத்தார்' என்றதில் எல்லா மடங்குமாதலின், உரையில் இவற்றை விரித்துரைத்தல் முறைமையாம். இவ் வெண்பாவில் இவற்றுள் சிலவற்றை மாத்திரம் தொகுத்துச் 'சுருங்கச் சொல்லல்' என்னும் அழகு பற்றிக் கூறினர்.

அங்கி, அமுதம், நீர், அம்பூ, அணி, ஆடை என்பவற்றுள் எண்ணும்மைகள் தொக்கன. வேண்டினே, பெற்றாய் என்பவற்றுள் உறுதியை விளக்கற்பொருட்டு எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. இது,

"விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி"

என்னும், [நன். பொ. ௩௮. சூ] விதிப்படி வந்த கால வழுவமைதி. அம்பூ அணியாடை-பண்புத் தொகைகள். மற்று-அசை. மற்றேனும் என்பதிலுள்ள உம்மை எச்சப் பொருளது. மற்றையோனும் என்பது மற்றேனும் என விகாரப்பட்டு வந்தது. "மற்றையதென்பது சுட்டியதற்கினம்" என்ற நன்னூல் இடையியல் ௧௫-ஆம் சூத்திர விதிப்படி, முன்னே வருணன் முதலியவர்களைச் சுட்டிக் கூறினமையால், 'மற்றோன்' என்பது அவரோடுசேர்ந்த அக்கினியை உணர்த்திற்று. வரம்-தேவவீகை. ஈந்தார்-பலர்பாற் படர்க்கை இறந்தகால வினைமுற்று. ஈந்தார் வரம்-வரம் ஈந்தார் என மாற்றுக.

நளன் தேவரிடம் வரம் பெற்று, அவரோடு
தமயந்தி சுயம்வர ஸ்தானஞ் சேர்தல்.

93. அங்கவர்கள் வேண்டும் வரம்கொடுக்கப் பெற்றவர்கள்
தங்களொடுந் தார்வேந்தன் சார்ந்தனன்மேல்—மங்கை
வயமருவு கின்ற மனக்கா வலர்க்குச்
சயமரந்தான் கண்டதோர் சார்பு.

(இ-ள்.) தார் வேந்தன்-மலர்மாலையை அணிந்த நளமகாராஜன், அங்கு-அவ்விடத்தில், அவர்கள்-அத்தேவர்கள், வேண்டும்-விரும்பிய, வரம்-வரங்களை, கொடுக்கப் பெற்று-தரப் பெற்றுக்கொண்டு, மேல்-பின்னர், அவர்கள் தங்களொடும்-அத்தேவர்களுடனே, மங்கை-தமயந்தியின், வயம்-வசத்தில், மருவுகின்ற (விருப்பத்தால்) பொருந்துகின்ற, மனம்-உள்ளத்தை யுடைய, காவலர்க்கு அரசர்க்கு. சய மரம் கண்டது-சுயம்வரஸ்தானமாக ஏற்படுத்திக் காணப்பட்டதாகிய, ஓர் சார்பு-ஓரிடத்தை, சார்ந்தனன்-அடைந்தான்.

நளன் தேவரால் வரம் கொடுக்கப் பெற்று அவர்களுடனே, சுயம்வரத்துக்கென் றேற்பட்ட விடத்திற் சேர்ந்தான் என்பது இதன் கருத்து.

'தார்வேந்தன், சயமரந்தான் கண்டதோர் சார்புசார்ந்தனன்' என இயைக்க, அங்கு, அவர்கள்-சேய்மைச் சுட்டுக்கள், வேண்டும்-பெயரெச்சம். வரங்கொடுக்க-இரண்டாம் வேற்றுமை யுருபு தொக்க தொகை பெற்று-வினையெச்சம், சார்ந்தனன் என்பதனோடு முடியும். பெற்றவர்கள் தங்கள் என்பதில் தம்-சாரியை; கள் விகுதிமேல் விகுதி. மேல்-என்பதை மங்கையொடு கூட்டி மேலான மங்கையென உரைப்பினும் அமையும் வயம்-ஏழாம் வேற்றுமைச சொல்லுருபு மன்னரெல்லோரும் தமயந்தியை மணம் செய்ய விரும்பிவந்தமையின், 'மங்கை வய மருவுகின்ற மனக் காவலர்' என்றார் புலவர். சயமரம்-சுயம்வரம் என்பதன் திரிபு. கண்டது என்பது, 'ஏற்படுத்தியது' என்னும் பொருள் தரும்; 'உரை செய்தான்' என்பதற்கு 'உரை கண்டான்' எனவும், 'நகர் செய்தான்' என்பதற்கு, 'நகர்கண்டான்' எனவும் வழங்குதலான் இஃதுணரப்படும். தங்களொடும் என்பதிலுள்ள உம்மை அசை நிறைப் பொருளது, தான்-அசை. மன்னரை உத்தேசித்தே சுயம் வரம் ஏற்படுததப்பட்டதாதலின், 'காவலர்க்குச் சயமரந்தான் கண்ட சார்பு' என்றார் ஆசிரியர். சார்பு-தொழிற்பெயர்; அஃதாகு பெயராய்ச் சார்ந்திருக்கு யிடத்தை யுணர்த்திற்று. கண்டது-வினையாலணையும் பெயர்.

நளன் தூது வந்து சென்றபின் தமயந்தி சோர்வடைதல்.

94. தூதுவந்த காதலனைச் சொல்லிச் செலவிடுத்த
மாதுவந்து பின்போன வன்னெஞ்சால்—யாதும்
அயிர்த்தா ளுயிர்த்தா ளணிவதன மெல்லாம்
வியர்த்தா ளுரைமறந்தாள் வீழ்ந்து.

(இ-ள்.) சொல்லி-(உரைக்க வேண்டியவைகளை) உரைத்து, தூதுவந்த-தன்னிடத்தே தேவர் பொருட்டுத் தூதுவனாகி வந்த, காதலனை-தன் விருப்பத்திற் குரியவனாகிய நளனை, செல-செல்லும்படி, விடுத்த-அனுப்பிய, மாது தமயந்தி, உவந்து-மகிழ்ந்து, பின்போன-அந்நளன்பின்னே சென்ற, வன்நெஞ்சால்-கடுமையான மனத்தினால், (அதாவது, அவனுடனே மனஞ்சென்றமையால்); யாதும்-(அவனைப்பற்றிய) எந்தக் காரியத்திலும், அயிர்த்தாள்-சந்தேகங் கொண்டாள், உயிர்த்தாள்-பெருமூச்சு விட்டாள், அணி-அழகிய, வதனமெல்லாம்-முகமெல்லாம், வியர்த்தாள்-வியர்வை யடைந்தாள், வீழ்ந்து-(மண்மேற்)சாய்ந்து, உரைமறந்தாள்-வார்த்தை கூறுதலையும்மறந்தாள்; எ-று.

நளன் தன்னைப் பிரிந்து சென்றபின், தமயந்தி, அவன்மீ தேற்பட்ட காதலால்வருந்தினளென்பது இதன்கருத்து, மனம்அவனிடத்தே மிகுதியும் பற்றி நின்றமையால் அவன் செல்லு மிடமெல்லாம் செல்லுமாதலின் 'பின் போன நெஞ்சு' என்றும், அஃதங்ஙனம் சென்று துன்பத்தை உண்டாக்கினமையால் 'வன்நெஞ்சு' என்றும் அதனைக் கூறினார் ஆசிரியர். காதல் கொண்ட மடவார் தங்கள் காதலனுடைய செய்கைகளைப் பற்றிச் சிந்தித்துச் சிந்தித்துப் பலவிதத்திலும் சந்தேகங்கொள்வது இயற்கையாதலின், இவளும், 'நம் காதலர்நம்மைப்போலவே விருப்பமுடையவராயிருப்பாரோ' 'நம்மைமணஞ் செய்வாரோ, செய்யமாட்டாரோ' என்று பல சந்தேகங்களைக் கொண்டாள். பெருமூச்சுவிடல், முகம்வியர்த்தல், மண்மேற்சாய்தல், உரைமறத்தல் முதலியன, ஆசை என்னும் மெய்ப்பாட்டாணிகழ்வன. மெய்ப்பாடாவது, மனத்தூள்ளே நிகழுந் தன்மை புறத்தே விளங்கத் தேகத்திலுண்டாம் செயல்கள். இந்த ஆசை என்னும் மெய்ப்பாடு, "அவைதாம், வீரமசச மிழிப்பொடு வியப்பே, காமமவல முருத்திர நகையே" என்று தண்டியலங்கார சுவையணிசூத்திரத்திற் கூறிய எண்வகை மெய்ப்பாடுகளு ளொன்று.

சொல்லி-வினை யெச்சம். தூது ஒருவர் ஒரு காரியத்திற்கிணங்குமாறு அதற்குரிய வார்த்தைகளைப் பேசுந்தொழில்; அஃதாகு பெயராய் அதனையுடையானை உணர்த்திற்று. காதல்-விருப்பம்; அதனையுடையவன் காதலன். விடுத்த-பெயரெச்சம்அணிவதனம் பண்புத்தொகை. மாது-எழுவாய்; இஃது அயிர்த்தாள், உயிர்த்தாள், வியர்த்தாள், மறந்தாள் என்னும்பல பயனிலைகளைக் கொண்டது. உவந்து-இதனை வந்து எனக்கொண்டு "அன்னத்தின் பின்னர் நளனிடத்துச் சென்று பின்" அவனோடு வந்து நளன் வரும்போது என்க் கொள்ளுதலும் பொருந்தும்.

95. உள்ளம்போய் நாண்போ யுரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்றளிர்போல்—பிள்ளைமீன்
புள்ளரிக்கு நாடன் திருமடந்தை பூவாளி
உள்ளரிக்கச் சோர்ந்தா ளுயிர்.

(இ-ள்) பிள்ளைமீன்-குட்டிகளாகிய சிறுமீன்களை, புள்-நீர்ப்பறவைகள், அரிக்கும்-வாயினுற்சேர்த்து வாரி விழுங்கும், (நீர்வளம் பொருந்திய)நாடன்-விதர்ப்ப நாட்டுக்கதிபனுகிய வீமனுடைய, திரு-அழகினையுடைய, மடந்தை-மகளாகிய தமயந்தி, பூவாளி-மன்மதனுடைய புஷ்ப பாணங்கள், உள்-தன் மனத்தை, அரிக்க-அறுக்க, (அதனுலே) உள்ளம் போய்-அம்மனமும் போக, நாண்போய்-வெட்கமும்போக, உரைபோய்-வார்த்தையும்போக, வரி-சிவந்த இரேகைகளையுடைய, நெடுங்கண்-நீண்டகண்களினின்றும், வெள்ளம்போய்-நீர்ப்பெருக்கும் வெளியேறிப் போக, வேகின்ற-நெருப்பிடைப் பட்டெரிகின்ற, மென்தளிர்போல்-மெல்லிய தளிரைப் போல, உயிர் சோர்ந்தாள்-ஆவி தளர்ந்து சோர்வை அடைந்தாள், எ-று

முன் நளன் பால் தன்மனஞ் சென்றதால் வருந்தியவள், பின்னர்த்தனிப்பட்ட வேட்கையுடையாரைச்சமயங்கண்டு வருத்தும்மன்மதன் ஏவியபாணம் மனத்தை அறுக்க அதனுல்,உள்ளம், நாண் முதலியன போக ஆவிசோர்ந்தாளென்க. காதல் மிக்க தலைவன் தலைவியருள் தணந்தாரொருவரை மன்மதன் புஷ்ப பாணங்களால் வருத்துதல் இயல்பு. மலர்ப் பாணங்கள் ஐந்து வகைப்படும். அவையிற்றை இங்குப் 'பூவாளி' என்று ஒருமையாகக் கூறினுர் ஆசிரியர்: இது சாதி யொருமை யெனப்படும் மன்மதனுக்கு மலர்ப்பாணங்களைந்தென்பதை, இந்நூலாசிரியரே செய்த இரத்தினச் சுருக்கத்தில் வரும்,

"ஆலைக் கரும்புசிலை யைங்கணைப்பூ நாண்சுரும்பு
மாலைக் கிளிபுரவி மாருதந்தேர்—வேலை
கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளங்
கொடிமகரந் திங்கள் குடை"

என்னுஞ் செய்யுளானுணர்க. அம்மலர்ப் பாணங்கள் ஐந்தாவன: தாமரை மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்பனவாம்; இவற்றை,

"குடைகவித்த நற்கஞ்சங் கோதறுசூ தப்பூ
கடியுமசோ கந்தளவு காவி—படையெடுத்து
வாங்காச் சமர்விளைக்கு மாரனுக்கெப் போதுமங்கை
நீங்காக் கணையா கினை"

என்னும் இரத்தினச் சுருக்கச் செய்யுளானுணர்க. இவற்றில் தாமரைமலர் வேட்கை யுடையார்க்குக் காதலர்மீது நினைப்பையுண்டாக்கும்;மாம்பூதேகத்திற் பசலையையுண்டாக்கும்;அசோகுஉணவைநீக்கிவிடும்; முல்லைபடுக்கையையுண்டாக்கும்; நீலோற்பலம் சாக்காட்டைத் தரும். இக்குணங்களை,

"நினைக்கு மரவிந்த நீள்பசலை மாம்பூ
வனைத்துணவு நீக்கு மசோகு—வனத்திலுறு
முல்லை கிடைகாட்டு மாதே முழுநீலங்
கொல்லுமத னம்பின் குணம்"

என்னும் இரத்தினச் சுருக்க வெண்பாவாற் றெளிக. இங்குத் தமயந்திக்கு மனம்போனது அரவிந்தத்தின் செய்கையாலுண்டானது; 'உள்ளம்போய்' என்றதனானே அது நளன் பாற்சென்ற தென்பது பெறப்படும்; இதுவே நினைத்தலாம். நாண் முதலியன போய்க் கண்ணீர் வெளிப்பட்டுச் சோர்வுண்டானது முல்லையின் செயலாலேற்பட்டது இவையெல்லா முண்டாக ஆவி சோர்ந்தாளெனவே, 'முல்லை கிடை காட்டும்' என்பதற் கேற்ப, படுக்கையிற் கிடந்தாளென்பது பெறப்படும். அரவிந்தம் முதலிய சில பாணங்கள் தங்கள் செய்கைகளைச் செய்யத் தொடங்கி மனத்தை வேதனைப் படுத்த அதனால் அவள் மனத்தை நளனிடத்தே செலுத்தி நாண் போய் உரை போய்க் கண்ணீர் வடித்து, வேகின்ற தளிர்போல் ஆவி சோர்ந்தாளெனக் கூட்டுக. புஷ்பபாணங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தொழிலைச் செய்வன வாயினும் முதலில் மனத்திற் புகுந்து அதனைக் கலக்கியே செய்வனவாதலின் 'பூவாளி உள்ளரிக்க மற்றவை நிகழ்ந்தன' என்றார்.

காரணப்பொருட்டாய் வந்த 'போக' என்னும் செயவெனெச்சம் போய் எனச் செய்தெனெச்சமாய்த் திரிந்து வந்தது. "சொல்திரியினும் பொருள் திரியா வினைக்குறை" என்பது விதி. உள்ளம் போய், நாண் போய் முதலியவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. நெடுங்கண்-பண்புத் தொகை. அரித்தல்-பல பொருள்களைச் சேர்த்து வாருதல், அறுத்தல்; புள்ளிற்குச் சேர்த்து வாருதலையும், உள்ளிற்கு அறுத்தலையுங்கொள்க. நீர்ப்பறவைகள் திரளாக நீரில் வீழ்ந்து மீன்களை ஒரு பக்கமாக ஒதுக்கி வாயினாற் சேர்த்து வாரி யுண்ணுதல் அவற்றின் இயற்கை; இவை மீன்களை ஒதுக்கும்போது பெரும்பான்மையும் சிறு மீன்களே பயந்து ஒருபக்கத்தில் திரளாக ஒதுங்கும்; இது பற்றியே 'பிள்ளைமீன் புள்ளரிக்கும்' என்றார். நீர்ப்பெருக்கின்றி மீன்களும் பறவைகளும் சேராவாதலின் 'பிள்ளைமீன் புள்ளரிக்கும' என்றதனானே நீர் வளம் மிகுந்துள்ள தென்பது தானே போதரும்; ஆகவே விதர்ப்ப நாடு, நீர் வளம் மிகுந்த நாடென்பது பெறப்படும். 'உயிர்சோர்ந்தாள்' என்பதில் உயர்திணை யெழுவாயின் பயனிலையோடு அஃறிணை யெழுவாயும் முடிந்தது. "உயர்திணை தொடர்ந்த பொருள்முதலாறும், அதனொடு சார்த்தி னத்திணை முடிபின" என்ற நன்னூல் பொதுவியல் 26 நம். சூத்திர விதிப்படி

இதுவுமது.

96. பூவின்வாய் வாளி புகுந்த வழியேயென்
ஆவியார் போனா மவ்வழியே—பாவியேன்
ஆசைபோ காதென் றழிந்தா ளணியாழின்
ஓசைபோற் சொல்லா ளுயிர்த்து.

[இ-ள்.] அணி-அழகிய, யாழின்-வீணையினது, ஓசைபோல்-இசையை நிகர்த்த, சொல்லாள்-வார்த்தைகளை யுடைய தமயந்தி, பூவின்வாய்-மலர்களினுலே பொருந்திய, வாளி-அம்புகள், புகுந்த வழியே-பிரவேசித்துண்டான

துவாரத்தின் வழியாக,என் ஆவியார் போனாலும்-எனதுயிர் போய்விட்டாலும்,அவ்வழியே-அந்த வழியாகவே,பாவியேன்-பாதகியாகிய என்னுடைய, ஆசை-[காதலர்மீ தேற்பட்ட] விருப்பமானது,போகாது-செல்லமாட்டாது, என்று-என்றுசொல்லி, உயிர்த்து-பெருமூச்செறிந்து,அழிந்தாள்-வாடினாள்;

முன்னே மன்மதபாணங்களால் உள்ளம், நாண் முதலியனபோய் உயிர் சோர்ந்த தமயந்தி, பின் அப்பாணங்கள் புகுந்த துவாரத்தின் வழியே என்னுயிர்போய்விட்டாலும் நளன் மீதுண்டாய ஆசை போகாது நின்று ஜன்மங்கடோறும் தொடர்ந்து வருத்து மென்று மெலிந்தாள் என்பது இதன் கருத்து; அம்புகள் புகுந்த துவாரத்தின் வழியே யாவும் போகக்கூடியனவாயிருந்தாலும் ஆசை போகாதென்று கூறியதால் தமயந்திக்கு நளன்மீதேற்பட்ட காதலின் உறுதிப்பாட்டை விளக்கினார். ஆசை போகாதது நன்மையாயிருக்க அதன்பொருட்டு அவள் என் வாடினாளெனில், நளன் அவளை மணந்தால் மட்டும் அவளுக்கு அதுநன்மை பயக்குமேயன்றி மணக்காவிடில் துன்பத்தையே தருவதாதலின், அவன் அங்ஙனம் தன்னை மணம் புரிந்து தனக்கேற்பட்டுள்ள துன்பத்தை நீக்குவானோ அல்லது நீக்கமாட்டானோ என்னும் ஐயத்தால் வாடினாளென்க.

பூவின்வாய்-மூன்றும்வேற்றுமைத்தொகை. புகுந்த-பெயரெச்சம். ஆவியென்பது ஆவியாரென உயர்திணைப் பலர்பால் விகுதிபெற்று வந்ததுதிணை வழுவமைதி; இஃது உயர்வில்வந்த திணைவழுவமைதி யெனப்படும். "உவப்பினுமுயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணை யிழுக்கினுமியல்பே" என்பது நன்னூல் [பொதுவியல்-உ அ]ம் சூத்திரம்; மயிலார், குயிலார், கிளியார் என்பன இதற்குதாரணங்களாம். என்று-வினையெச்சம்- அழிதல் இங்கு வாடுதற் பொருளில் வந்தது. 'யாழின் ஓசை போற் சொல்லாள்' என்பதுபண்புவமையணி சொல்லாள்-எழுவாய்.அழிந்தாள்-பயனிலை.

இதனால் சூரியாஸ்தமனம் சொல்லப் படுகின்றது.

97. வையம் பகலிழப்ப வான மொளியிழப்பப்
பொய்கையு நீள்கழியும் புள்ளிழப்ப—பையவே
செவ்வாய வன்றி றுணையிழப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு

(இ-ள்) வையம்-பூமியானது, பகல்-பகலை, இழப்ப-இழக்கவும், வானம்-ஆகாயம்,ஒளி-பிரகாசத்தை,இழப்ப-இழக்கவும்,பொய்கையும்-தடாகங்களும் நீள்-நீண்ட,கழியும் உப்பாறுகளும், புள்-நீர்ப்பறவைகளை,இழப்ப-இழக்கவும் செவ்வாய-சிவந்தவாயையுடைய,அன்றில்-அன்றிற்பறவைகள்,'துணை'-துணை என்னும் சொல்லை, இழப்ப-இழக்கவும், (அதாவது ஆணும் பெண்ணும் இரண்டெனப் படாமல் ஒன்றாகவும்), வெவ்வாய்-உஷ்ணமான வாயில்,

விரி-விரிந்த, கதிரோன்-கிரணங்களையுடையசூரியன்,பைய-மெல்ல, வெற்பு-அஸ்தமனகிரியில், சென்று அடைந்தான்-போய்ச் சேர்ந்தான், [எ-று.]

சூரியன் அஸ்தமிக்கவே உலகத்திற்பகலும், வானத்தில் ஒளியும், பொய்கையிலும் கழியிலும் பறவைகளும், அன்றிற் பறவைகளின்இரண்டென்னும் பிரிவும் நீங்கி விடுமாதலின், 'வையம், வானம் முதலியன, பகல், ஒளி முதலியவற்றை இழப்ப, விரிகதிரோன் வெற்படைந்தான்' என்றார். அன்றிற் பறவைகள் இணைபிரியாதவையெனினும்பகலில்சஞ்சரிக்கும் காலத்தில் சற்றுவிலகி இரண்டென்னுந் தன்மையைக்காட்டித் திரிந்து இராக்காலம் வந்தவுடன் இணையிரண்டும் கழுத்தோடு கழுத்தைச்சேர்த்துப் பின்னிக்கொண்டு ஒன்றுபோலாகி உறங்குவனவாதலின்,அதற்கேற்ப 'இரண்டென்னுந்தன்மைநீங்க' என்று பொருள் படுமாறு 'துணையிழப்ப' என்றார். இங்ஙனமின்றித் துணையிழப்ப என்பதற்கு, 'கூடிமருவும்படியான சகாயங்களை இழக்க' என்று பொருள் கோடலுமொன்று, அன்றிலுக்குத் தாக்கத்திற்றன் பிரியாது தேகமொன்றாகக் கலக்குந் தன்மை அதிக மென்பது அறிஞர் அறிந்த உண்மை; எப்பொழுதும் இணைபிரியாத்தன்மையில் அன்றிலே சிறந்ததென்பதும் நூல்களால் உணரப்படும்; ஆதலின், 'கூடி மருவும்படியான சகாயங்களை யிழக்க' என்று பொருள் கோடல் இயற்கைக்கு முற்றும் விரோதமாயிருத்தலின் அஃதத்துணைச் சிறப்பன்றாம்; ஆண் பெண் ஆகிய இரண்டு அன்றில்களில் ஒன்றுக்கு அழிவு நேருமேல் மற்றொன்று உடனே உயிர்விடும்; இச்செய்கையைப் பலர் நேரில் கண் கூடாகக் கண்டு மிருக்கலாம்; இதனாலேயே 'அன்றில் பிரிந்துபேடு ஆற்றுமோ மயல்தன்னை' என்றும், ஆன்றோர் கூறியிருக்கின்றனர்.

இழப்ப-காரணப் பொருட்டாக வந்த செயவவெனச்சம். நீள்கழி, விரிகதிர்-வினைத் தொகைகள். இழப்ப எனவரும் நான் கிடத்தும் எண்ணும்மைகள் தொக்கன; இவை வினைச் செவ்வெண் எனப்படும்; "வினையொடு வரினுமெண்ணினை யேற்பன" என்னுஞ்சூத்திரத்தில் 'ஏற்பன' என்றமையின் (இடையியல்-கூ ம்) சூத்திரவிதிப்படி இத்தனையென்று கணக்கிடுந்தொகைச் சொல்லைப் பெறுவாயின. பைய-குறிப்பு வினையெச்சம்; பை-பண்புப் பகுதி, அ-பெயரெச்சவிகுதி, ய்-உடம்படுமெய்; பை என்பது மந்தம் எனப்பொருள் படும். வெவ்வாய் என்பதை இரண்டாம் வேற்றுமைத்தொகையாகக் கொண்டு 'வெவ்விய வாயையுடைய' எனப்பொருள் விரிப்பினுமமையும், கதிரோன்-எழுவாய்; அடைந்தான்-பயனிலை.

இதுவுமது

98. மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கிற்
பாயிருளென்னும் படாம் வாங்கி—செய்கின்

றறைந்தா ரணம்பாட ஆடிப்போய் வெய்யோன்
மறைந்தான் குடபால் வரை.

(இ-ள்.) மாயிரு-மிகவும் பெரிய, ஞாலத்து-பூமியிலுள்ள, உயிர்-பிராணிகள், காண-பார்க்கும்படி, வான்-ஆகாயமாகிய, அரங்கில்-நடனசாலையில், பாய்-பரவிய, இருள் என்னும்-இருட்டு என்கிற, படாம் வாங்கி-திரைச் சீலையை விலக்கி, ஆரணம்-பூமியிலுள்ள வேதமானது, சேய்நின்று-தூரத்தில் நின்று, அறைந்து-உயர்ந்த வாக்கியங்களைச் சொல்லி, பாட-பாடுதலைச்செய்ய, வெய்யோன்-சூரியன், (ஒரு நாடகக்காரன் போல நின்று,) ஆடிப்போய்-நாட்டியஞ்செய்து கொண்டே சென்று, குடபால்-மேற்குத்திக்கில் உள்ள, வரை-அஸ்தமய கிரியில், மறைந்தான்-ஒளித்தான்; [எ-று.]

சூரியன், இருள் நீங்கவும் வேதகோஷ்டங்கள் முழங்கவும் உதயஞ்செய்து ஆகாயத்திற் சஞ்சரித்து அஸ்தமயகிரியிற் போய் அஸ்தமித்ததை, ஒருநாடகக்காரன் நாடக மேடைமேல் நின்று ஆடிப்போனது போல உருவகப்படுத்தினார். இது சிறப்புருவகவணியெனப்படும்; சிறப்புருவக மாவது: ஒருபொருளை யெடுத்து அதற்குச் சிறந்த அடைகளை உருவகஞ் செய்து அவற்றானே யுருவகமாக்கி யுரைப்பது. நாடகக்காரன் அரங்கில்வந்து முன்னிடப்பட்டுள்ள திரையை விலக்கிக்கொண்டு ஆடித் தன் ஆட்டம் முடிந்தபின் மறைவிடத்திற் செல்வது வழக்கமாதலின், அவ்வாறே தோன்றி மறைந்தசூரியனை அவனுக்கு நிகராகக் கூறினார்.

மா, இரு ஒரு பொருட் பன்மொழி; ஒரு பொருளை விசேஷப் படுத்திக் காட்டுதற்கு இங்ஙனம் இரண்டு சொற்கள் சேர்ந்து ஒரு சொன்னீர்மையன வாய் வருதல் இயற்கை; "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா" என்பது நன்னூற் பொதுவியல் சூத்திரம். மா-உரிச்சொல்லாதலின், வருமொழி முதலுயிர் புணர வகரந்தோன்று மிடத்து அது தோன்றாது "இடையுரி வடசொலின் இயம்பிய கொளாதவும்" என்ற விதியால் யகரந்தோன்றிற்று.

இதில், அந்திப் பொழுது வந்தவிதம் கூறப்படுகின்றது.

99. மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

[இ-ள்] மல்லிகையே-மல்லிகை யரும்பினையே, வெண்சங்கா-வெண்மையான சங்காக, [வாயில் வைத்து], வண்டு-வண்டுகள், ஊத-ஊதி முழக்கவும், வான்-சிறந்த, கருப்புவில்லி-கரும்பு வில்லையுடைய மன்மதன், கணை தெரிந்து-பாணங்களை, ஆராய்ந்து பார்த்தெடுத்து, [வில்லிற்றொடுத்து வைத்துக்கொண்டு], மெய்காப்ப-தேகத்தைக் காத்துவர, முல்லை எனும்-முல்லை

மலர் என்கிற, மென்மாலை-மெல்லிய மாலையானது, தோள் அசைய-தோளில் அணியப்பட்டு ஆடாநிற்க, புன்மாலை-அற்பமான இருளையுடைய, அந்திப் பொழுது-மாலைக்காலமானது, [ஓர் அரசன் பவனிவருதல் போல்], மெல்ல நடந்தது-மிருதுவாக நடந்து வந்தது; [எ-று.]

அந்திப் பொழுது வந்ததை, சங்க முழக்கம் முதலிய சிறப்புக்களுடன் பவனிவரும் அரசன் வருவதுபோல உருவகப் படுத்திக் கூறினார் ஆசிரியர். மல்லிகை யரும்புகளில் மகரந்தம் உண்ணும் பொருட்டுச் சேர்ந்திருந்தவண்டுகள், அரசன் பவனி வருங்காலத்தில் சங்கத்தை வாயில்வைத்தூதி முழக்குவாரைப் போன்றிருந்தன. மாலைக்காலம் வந்தவுடனே தணந்தாரைவருத்துதற்கு மன்மதன் மலர்ப்பாணங்களுடன் ஆயத்தமாவது இயல்பு; அங்ஙனம் அவன் ஆயத்தமானது அந்திப் பொழுதாகிய அரசனுக்கு ஆயுதங்களுடன் மெய் காப்பாளன் வருவதுபோன்றிருந்தது; அரசன் வெளிச்செல்லுங்கால் மெய்காப்பாளர் உடன் செல்வது வழக்கம். முல்லை மலர்கள் எங்கும் மலர்ந்தது அந்திக்கால மாகிய அரசன் தோளில் மாலை அசைவது போன்றிருந்தது. இராஜநடை மந்தமான நடையாதலின் அதற்கேற்ப 'மெல்லநடந்தது' என்றார். அந்திப்பொழுதும் மெல்லவருதல் இயற்கை. அந்திக்காலம் வரும்போது சிறிது இருள் கலந்திருக்குமாதலின் 'புன்மாலை அந்திப் பொழுது' என்றார்; மாலை இருள். இதில், கூறப்பட்டதும் சிறப்புருவக மெனப்படும்.

ஊத, காப்ப, அசைய என்பன வினை யெச்சங்கள்; இவைநடந்ததுஎன்னும் வினைமுற்றைக்கொள்ளும்; இவற்றிற்கு கஎ-ம் செய்யுளிற்கூறிய இலக்கணங்களை அமைத்துக் கொள்க. மல்லிகை, முல்லை யென்பன பொருளாகு பெயர்கள். கரும்பு கருப்பு என்றாயது வலித்தல் விகாரம். வெண்சங்காவண்டே, கணைதெரிந்து மெய்காப்ப என்பன இசை யெச்சங்களாதலின், இவற்றிற்கேற்ற சொற்கள் வருவித்துரைக்கப்பட்டன; இசையெச்சமாவது-வாக்கியங்களில் அவ்வவ்விடத்திற் கேற்ப ஒரு சொல்லும் பலசொல்லும் வருவித்துரைக்கப்படுவது. மெல்ல-குறிப்பு வினை யெச்சம்; மெல் பண்படிப் பகுதி, அ-வினை யெச்சவிகுதி, லகர மிரட்டியது சந்தி. மாலைக்காலமானது தணந்தார்க்கு மிகவுந் துன்பத்தைச் செய்வதாதலின், அதுகுறித்து, "புன்மாலை அந்திப்பொழுது" என்பதற்கு 'அற்பமான இயல்பினையுடைய மாலைக்காலம்' எனப்பொருளுரைப்பினும் அமையும்; இங்கே மாலை- இயல்பு. அந்திப்பொழுது-எழுவாய், நடந்தது-பயனிலை.

இதில் அந்திக்காலத்தின் இயல்பு கூறப்படுகின்றது.

100. புற்கென்றா ரந்தி புனைமலர்க்க ணீரரும்ப
நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான்—முற்கொண்
டடைகின்ற வேந்தர்க்கும் ஆண்டஞ்சி னோர்க்கும்
இடைநின்ற காலம்போ லின்று.

[இ-ள்] அந்தி- [மேற்கூறியபடி தோன்றிய] அந்திப் பொழுதானது, புற்கு என்றார்- விரகதாபத்தினால் கபிலநிற மடைந்தவர்களுடைய, புனை- அழகிய, மலர்க்கண்-நீலோற்பல மலர் போன்ற கண்களில், நீர் அரும்ப-நீர் சுரக்கும்படி, நிலம்காப்பான்- ஓர் அரசனிடத்திலுள்ள பூமியைக் கைப்பற்றிக் காக்கும்பொருட்டு, முற்கொண்டு-முன்னேறி, ஆண்டு-அவ்விடத்தில், அடைகின்ற-சேர்கின்ற வேந்தர்க்கும்-அரசருக்கும், அஞ்சினோர்க்கும்-அங்குச்செல்லப்பயந்து பின்னின்ற அரசர்க்கும், இடை நின்ற காலம் போல்-நடுவில்நின்றகாலம் அவர்களுக்குக் கலக்கத்தைச் செய்வதுபோல, நிற்கின்றது-அவ்விரகதாபத்தை யுடையார்க்குக் கலக்கத்தைத் தருவதாய் நின்றது, அந்தோ;

ஓர் இராஜ்ஜியத்தைக் கைப்பற்றத் துணிந்து முன்னேறிச் சென்றவர்க்கும், அஞ்சி நின்றவர்க்கும், அவர்களின் காரியத் தொடக்கத்திற்கும் முடிவிற்கும் இடையிலுள்ள காலம். 'நமக்கு வெற்றி யுண்டாகுமோ தோல்வி யுண்டாகுமோ' என்னும் கலக்கத்தை யுண்டாக்கும்; அதுபோல் அந்திப் பொழுதும் விரகதாபத்தை யுடையார்க்கு, 'நம் காதலர் நம்மைச் சேர்வரோ சேரமாட்டாரோ' என்னும் கலக்கத்தை யுண்டாக்கக் கூடியதாதலின், இஃது அதற்கு நிகராகச் சொல்லப் பட்டது; விரக தாபத்தை யுடையா ரென்பது மணஞ்செய்து காதலரைப் பிரிந்தாரையும், மணஞ் செய்யாது ஒரு காதலர் மேல் காந்தர்வ முறைப்படி விருப்பங் கொண்டிருப்பாரையுங் குறிக்கும்; ஆகவே, மேலே 'முன்னேறிச் சென்றவர்க்கும் அஞ்சிநின்றவர்க்கும்' என்ற உவமை இவ்விருபாலார்க்கும்பொருந்திற்று. இன்னும்அந்திப்பொழுது, சூரியனால் விடப்பட்டும், சந்திரனால்கைப்பற்றப்படாமலுமிருப்பதாதலின், மேற்கூறப்பட்டவர்களின் காரியத் தொடக்கத்திற்கும் முடிவிற்குமிடையிலுள்ள காலத்தோடிதனை ஒப்பிட்டதுமற்றொருவகையிலும்மிகப்பொருத்தமுடைத்தென்க. இன்னும், 'நிலங்காப்பான் முற்கொண்டடைகின்ற வேந்தர்க்கும் ஆண்டஞ்சினோர்க்கும் இடைநின்ற காலம் போல்.' என்ற தொடருக்கு, "தாங்கள் நிலத்தைக் காக்குந் தன்மையினாலே [அதாவது தாம் அரசராயிருப்பதால் தம்மைத் தமயந்திமணம் புரிந்து கொள்வாளென்னும் எண்ணத்தினாலே] சுயம்வரம் ஏற்படுத்தப்பட்டிருக்கும் அவ்விடத்தில் முன்னேறி அடைந்தவர்க்கும், தம்மை அவள் மணம் புரியமாட்டாளென்னும் எண்ணத்தால் அஞ்சி அங்குப்போகாமல் நின்றவர்க்கும், தமயந்தியின் மணம் நிகழ்வதற்கிடையில் நின்றகாலம் 'தமயந்தி எவரைமணஞ் செய்வாளோ' 'நளன் நம்மை மணஞ்செய்து கொள்ளுவனோ' என்னுஞ்சந்தேகத்தால் கலக்கத்தை யுண்டாக்கியது போல்" எனப் பொருள்கொள்ளினும் அமையும்.

புற்கு-கபிலநிறம்; அதாவது கருமை கலந்த பொன்னிறம்; இது பசுமையாயிருக்கும். எனல் என்பது என்றிருத்தல் எனப் பொருள் படுதலால் புற்கென்றார் என்பது கபில நிறம் பெற்றிருப்பவர் எனப்பொருள்பட்டது; இதனை, 'தண்ணென்றிருந்தது' என்பது 'குளிர்ந்தது' எனப்பொருள் படுவது

போலக்கொள்க. புற்கென்றூர் என்பதில் என்றுஎன்னும் இடைச்சொல்பண் போடியையந்தது; "வினைபெயர்குறிப்பிசை யெண்பண்பாறினும், எனவெனு மொழிவருமென்று மற்றே" என்னும் [நன்-இடை-ஙி-ஆம்] சூத்திரவிதியா லிஃதமைந்ததென்க. இனி, 'புற்கென்றூரந்தி புனைமலர்க்கணீ ரரும்ப நிற்கின்றது' என்பதை 'புற்கென்று ஆர் அந்தி புனைமலர்க்கண் நீர் அரும்ப' எனப்பிரித்து 'கபில நிறமாகப் பொருந்திய அந்திப் பொழுதானது அழகிய மலர்களாகிய கண்களில் தேனாகிய நீர் சுரக்கும்படி நிற்கின்றது' எனப் பொருள் கொண்டு, அந்தியை ஒரு விரகியைப்போல ஆசிரியர் உருவகஞ் செய்தாரெனினும் அமையும்; இங்ஙனங் கொள்ளுமிடத்து, அந்திக்கால சூரியகிரணஞ் சிறிதும், இருள் சிறிதும் கலப்பதால் மாலையில் கபிலநிறமுண்டாகுமென்க. அந்தி-அந்த்யம் என்னும் வடசொற்றிரிபு; இதற்குக் கடைசி யென்று பொருள். இதுபகலின் முடிவுகாலமாதலின். அந்தோ - இரக்கக் குறிப்பிடைச்சொல் 'புற்கென்றூர் கண்ணீர் அரும்ப' என்பதற்கு 'கபிலநிற மடைந்த விரகிகள் கண்ணீர் வடிக்க' என்றும் பொருள் கொள்ளலாம். அங்ஙனம் கொள்ளின், "உயர்திணை தொடர்ந்த பொருண்முதலாறும், அதனொடு சார்த்தி னத்திணை முடிபின" என்னும் [நன்-பொ-உசு] சூத்திர விதியால் இஃதமைந்ததென்க. 'நிற்கின்றது' என்பது இயல்பினால் வந்த காலவழுவமைதி. "விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும், பிறழவும் பெறூஉ முக் காலமு மேற்புழி" என்பதுவிதி. இச்செய்யுள் ஆசிரியர் கூற்றாக அமைந்தது. இன்று-அசை.

இதில் சந்திரோதயம் சொல்லப்படுகின்றது.

101. பைந்தொடியா ளாவி பருகுவா னிற்கின்ற
அந்தி முறுவலித்த தாமென்ன—வந்ததால்
மையார்வேற் கண்ணாள் வனமுலைமே லாரழலைப்
பெய்வா னமைந்த பிறை.

[இ-ள்] பைந்தொடியாள்-பசியவளையலையணிந்த தமயந்தியினது, ஆவி உயிரை, பருகுவான்-குடிப்பதற்கு, நிற்கின்ற-மேற்கூறியபடிதோன்றிநின்ற அந்தி-மாலைக்காலமானது, முறுவலித்தது ஆம் என்ன-[தன் காரியம் சித்தியாததற்குச் சந்தோஷித்து] சிரித்ததாமென்று சொல்லும்படி, மைஆர்-அஞ்சனம் பொருந்திய, வேல்-வேலைப்போன்ற, கண்ணாள்-கண்களையுடைய தமயந்தியின், வனம்-அழகு பொருந்திய, முலைமேல்-தனங்களின் மீது, ஆர்-நிறைந்த, அழலை-நெருப்பை, பெய்வான்- சொரியும் பொருட்டு, அமைந்த-பொருந்திய, பிறை-சந்திரன், வந்தது-ஆகாயத்தில் தோன்றியது; [எ-று.]

நளன் மீது காதல் கொண்டு அவனைக் கூடாதிருந்த தமயந்திக்கு அந்திப்பொழுதானது மரண வேதனைக்குச் சமமாகிய வேதனையைச் செய்வதாதலின் அதனை, 'பைந்தொடியாள் ஆவி பருகுவானிற்கின்ற அந்தி' என்

றார். ஒருவர்க்குக் காரிய சித்தியில் சிரிப்புண்டாவது இயற்கை யாதலின், இங்கே ஆவிபருகநின்ற அந்திக்கு முறுவல் சொல்லப்பட்டது. மாலைக்காலத்தில் சந்திரன் தோன்றியது அம்மாலை சிரித்தது போன்றிருந்த தென்க. விரகதாபத்தை யுடையார்க்குச சந்திரன் வெம்மை செய்யக்கூடியதாதலின், அதனை 'அழலைப் பெய்வான் அமைந்த பிறை' என்றார். அந்தி முறுவலித்தல் என்பது இல் பொருளுவமை.

பருகுவான், பெய்வான் என்பன வினை யெச்சங்கள். நிற்கின்ற, அமைந்த-பெயரெச்சங்கள். ஆல்-அசை.

இதில் திங்கள், தமயந்தியின்மீது நெருப்பைச் சொரிந்தமை கூறப்படுகின்றது.

102. கூட்டுமை போற்சிறந்த கூரிருளைக் கூன்கோட்டால்
கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள்—ஈட்டுமணிப்
பூணிலா மென்முலைமேற் போதச் சொரிந்ததே
நீணிலா வென்னு நெருப்பு

[இ-ள்] கூட்டுமைபோல்-சேர்க்கப்பட்ட மையைப்போல, சிறந்த-நிறத்தினால் சிறப்புற்ற, கூர்-மிகுதியான, இருளை-அந்தகார மென்னும் மண்ணை, கூன்-வளைவாகிய, கோட்டால் பக்க மென்கிற கொம்பினால், கோட்டு மண் கொண்ட- [குத்திப் பெயர்த் தெறிந்து அதனால் அக் கொம்பில் தங்கிய] கோட்டு மண்ணாகிய களங்கத்தைக் கொண்ட, குளிர் திங்கள் - குளிர்ச்சி பொருந்திய சந்திரனென்னும் விருஷபம், ஈட்டும்-சேர்க்கப்படுகின்ற, மணிப்பூண்-இரத்தின பரணங்கள், நிலாம் பிரகாசிக்கின்ற, மென்முலைமேல்- [தமயந்தியின்] மெல்லிய தனங்களின் மேல், நீள்-அதிகமான, நிலா என்னும்-சந்திரிகையென்கின்ற, நெருப்பு-அக்கினியை, போத-நிறைய, சொரிந்தது-(துன்பம் விளையுமாறு) பெய்தது; [எ-று]

இருளைப்பெயர்த் தெறிந்து தன்னிடத்தே களங்கத்தைக கொண்டு விளங்கிய சந்திரனைப் பூமியைக்கொம்பினால் பெயர்த் தெறிந்து அக்கோட்டில் மண்ணைக் கொண்டு செருக்குற்றுத் திரியும் ஓர் இடபமாக உருவகப்படுத்தினார். 'கோட்டு மண்கொண்ட' என்ற குறிப்பினால் விருஷபம் குறிப்பிடப்பட்டது; அதற்கேற்ப இருள் மண்ணாகவும், வளைந்த பக்கம் கொம்பாகவும், திங்கள் விருஷபமாகவுங் கொள்ளப்பட்டன. கோட்டால் என்பதற்குப் பின், 'குத்திப்பெயர்த் தெறிந்து அதனால் அக்கொம்பில் தங்கிய' என்ற சொற்கள் இசை யெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன. 'கூன் கோடு' என்பது சிலேடையாய் வளையாகிய சந்திரனுடைய ஓரப்பக்கத்தையும், வளைந்த கொம்பையும் உணர்த்திற்று. யானை, விருஷபம் முதலியன மதர்த்துக்கொம்பினால் பூமியைக் குத்திப்பெயர்த் தெறியுங்காலத்தில் அவற்றின் கொம்பில் சிறிது மண் தங்கி யிருக்கும்; அது கோட்டு மண்ணென்று சொல்லப்படும்;

அம்மண் மதர்த்துத்திரியும் யானை, எருது முதலியவற்றிற்கு ஒரு வீரசின்னமாம். தமயந்தி பெயர் கூறப்படாமல், 'திங்கள் தனத்தின்மேல் நெருப்பைச் சொரிந்தது' என்று கூறப்பட்டிருப்பினும் அந்தி, நிலாத் தோற்றம் முதலியன அவள் பொருட்டே கூறப்படுவன வாதலின், தமயந்தி என்னும் பெயர் கூட்டியுரைக்கப்பட்டது. சந்திரனிடத்தே உள்ள களங்கம் இருளின் சிறு கூறுபோற் கரியதாதலின், அதனை இருளிற் பெயர்த் தெடுத்ததாகக் கூறினார்.

கூட்டுமை-வினைத்தொகை. சிறந்த, கொண்ட, நிலாம் என்பன பெயரெச்சங்கள். நிலாவும் என்னும் பெயரெச்சம் ஈற்றய லுயிர்மெய் கெட்டு நின்றது; "செய்யுமெனெச்சவீற் றுயிர்மெய் சேறலும்......" என்னும் [நன்-வினை. உஉ-ம்] சூத்திரத்தை உய்த்துணர்க. நிலா வென்னு நெருப்பு-இரு பெயரொட்டுப் பண்பு. நெருப்பு-நெருப்பை; இரண்டன் தொகை.

தமயந்தி தன் காதற் றுன்பத்தை அன்னங்க
ளிடத்தே கூறுதல்.

103. அன்னங்கா ணீங்களுமவ் வாதித்தன் றானும்போய்
மன்னும் படியகலா வல்லிரவில்—மின்னும்
மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கு நாங்கள்
பிழைத்தால்வந் தேனென்னும் பேர்.

[இ-ள்] அன்னங்காள்-அன்னங்களே!, நீங்களும் நீவிரும், அ அந்த, ஆதித்தன் தானும்-சூரியனும், போய்-சென்று, மன்னும்படி-உங்கட் குரிய விடங்களிற் பொருந்தி யிருக்கும்படி, அகலா-நீங்காத, வல்இரவில்-வலிமையான இவ்விராத்திரியில், மின்னும்-மின்னிப் பொழிகின்ற, மழை-மேகங்களின், தாரை-நீ ரொழுக்காகிய, வல் இருட்கும்-வலிமையாகிய இருட்டுக்கும் வாடைக்கும்-வடகாற்றுக்கும், நாங்கள்-நானும் என்னைப் போன்றவர்களும், பிழைத்தால்-உயிர் நீங்காமல் தப்பினால் [நானே நீங்கள் வரும்போது உங்களிடத்தில்] பேர்-எம்முடைய பேரும், வந்தேன் என்னும்-நானும் பிழைத்து வந்தேன் என்று கூறும், [நாங்கள் பிழைப்போம் என்பதும் எங்கள் பேர் நிலைக்கும் என்பதும் சந்தேகந்தான் என்றபடி.]

மேற்கூறியபடி நிலவு தோன்றிய பின்னர், சிறிது மழையும் வாடைக் காற்றுமுண்டாகத் தமயந்தி வருந்தித் தன்னைப்போலவே அவற்றிற்கு விரோதமுடையனவாகிய அன்னங்களை விளித்து அவற்றினிடம் இங்ஙனங் கூறினாள். சூரியனும் மழைக்கு விரோதியாதலின் அதனையுஞ் சேர்த்து 'நீங்களும் அவ்வாதித்தனும் போய் மன்னும்படி' என்றாள். ஒரு வகுப்பார்க்கு விரோதிகளான மற்றொருவகுப்பார் தங்கள் குறைகளையும், விரோதிகளின் கொடுமைகளையும் கலந்து பேசிக்கொள்ளுதல் இயல்பு. மழையும் வாடையும் உண்டான விடத்துச் சூரியன் மறைதலும், அன்னங்கள் ஒடுங்குதலும் இயற்

கை. இன்னும் இரவும், சூரியனை ஒழித்து அன்னங்களை யொடுக்கி, தமயந்தியையும் வருத்தக் கூடியதாதலின் 'நீங்களும் ஆதித்தனும் போய் மன்னும்படி அகலாவல்லிரவில்' என்பதற்கு, "நீங்களும் சூரியனும் சென்று மறைந்திருக்கும்படி நீங்காத இராத்திரியில்" எனப்பொருள் கொண்டு அவற்றின் ஒடுக்கத்திற்கு இரவையே காரணமாகக் கூறினும் அமையும். இந்த இரவிலும் மழையிலும் வாடையிலும், அன்னங்களும் ஆதித்தனும் மறைந்திருந்தாலும் மறுதினம் வெளிவருவதில் நிச்சயமுண்டு, விரகிகளுக்கோ, தாங்கள் வாதனைப்படுவதால் தங்கள் உயிர் நிலைக்கும் விஷயத்தில் ஐயமே நிகழும்; ஆதலினாலேயே, தமயந்தி அன்னங்களிடத்தே "நீங்களும் எங்களைப் போலவே ஒடுங்கினீரெனினும் நாளை வெளிப்படுவீர்கள்; நாங்கள் பிழைத்து வருவது நிச்சயமில்லை" என்னும் குறிப்புத் தோன்ற, "நாங்கள் பிழைத்தால் வந்தேனென்னும் பேர்" என்றாள்; பேர்நிலைத்து நிற்றலே ஒருவர் நிலைபெற்றிருத்தற்கும், பேர்மறைதலே ஒருவரின் அழிவுக்கும் முக்கிய அறிகுறிகளாதலின் 'பிழைத்தால் பேர் வந்தேன் என்னும்' என்றாள். 'பேர்வந்தேன் என்னும்' என்பதாவது, 'பேரானது உங்களைப்போலவே நானும் பிழைத்து வந்தேன் என்று சொல்லும்' என்பதாம். 'நாங்கள் பிழைத்தால் எங்கள்பேர் இந்த உலகின் கண் நிலைநின்று வழங்கும்' என்றபடி.

அ ஆதித்தன் என்பதில் அகரம் சேய்மைச் சுட்டு. ஆதித்தன்றானும் என்பதில்தான்-அசையிடைச்சொல். மின்னுதலேமழைபொழிதலுக்குக்காரணமாதலின் 'மின்னும்', என்பதற்கு 'மின்னிப்பொழியும்' என்று பொருளுரைக்கப்பட்டது. மழைத் தாரைகள் நெருங்கிய விடத்து இருளுண்டாவது இயற்கையாதலின் 'தாரை வல்லிருள்' என்றார். இருட்கும், வாடைக்கும் என்பவற்றுள் நான்கனுருபு நீக்கப்பொருளில் வந்தது; இஃதுருபு மயக்கம், "யாதனுருபிற் கூறிற் றாயினும், பொருள்சென் மருங்கில் வேற்றுமை சாரும்" என்பது. விதி. 'பிழைத்தால் வந்தேன் என்னும் பேர்' என்பதில் 'நாங்கள் பிழைப்பது மில்லை, எங்கள் பேர் நிலைத்து நிற்பதுமில்லை' என்ற கருத்து அடங்கியிருப்பதால் இஃது எதிர்மறை யெச்ச மெனப்படும்.

### தமயந்தி, ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களைச் சந்திரன் வெம்மையால் ஏற்பட்ட கொப்புளம் என்று கூறுதல்.

104 செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—இப்பொழுதும்
மீன் பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து.

[இ-ள்] செப்பு-பொற்செப்பை நிகர்த்த, இளம் கொங்கைமீர்-இளமையாகிய தனங்களையுடைய தோழிப்பெண்களே!, இப்பொழுதும்-இக்காலத்திலும்; திங்கள்-சந்திரனது, சுடர்பட்டு-கிரணம் தாக்கியதனால், 'கொப்புளம்-

கொண்ட-கொப்புளங்களை யடைந்த, குளிர்வானை - குளிர்ச்சிபொருந்திய ஆகாயத்தை, (நீங்கள்) தெரிந்து-அறிந்திருந்தும், தேன்பொதிந்த-தேன் போலும் இனிய சொற்கள் நிறைந்த, வாயால்-உங்கள் வாயினாலே, மீன் பொதிந்து நின்ற-நக்ஷத்திரக்கூட்டங்கள் நிறைந்து நிலைபெற்ற, விசும்பு என்பது-ஆகாயம் என்று சொல்வது, என்கொலோ-என்ன புதுமை! [எ-று.]

தமயந்தி, நெடுந்தூரத்திலிருக்குந் தன்னையேசுடுகின்றசந்திரன், தான் சஞ்சரிக்குமிடத்திலுள்ள ஆகாயத்தை மிகவும் தகிப்பானென்றும், அதனாலேயே அங்குக் கொப்புளங்கள் அதிகமாகக் கிளம்பின வென்றும் தன் காதல் மயக்கால் இங்ஙனம் ஒன்றை மற்றொன்றாகக் கருதிக் கூறினாளென்க. தோழிகள் உள்ளதை உள்ளபடி உணர்ந்து இனிய வார்த்தைகளால் சொல்லக்கூடியவர்களாயிருந்தும் தன்னுடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாக ஆகாயத்தை மீன்பொதிந்ததென்று கூறியதால், அதன் பொருட்டு அதிசயித்து, "கொப்புளங்கொண்ட குளிர்வானை, தேன்பொதிந்த வாயாற் றெரிந்து மீன் பொதிந்து நின்ற விசும்பென்பதென்கொலோ" என்றாள். இங்ஙனம் நக்ஷத்திரங்களைக் கொப்புளங்களாக உருவகித்துக் கூறியது அவநுதியுருவகவணி எனப்படும்; அவநுதியுருவகமாவது, உண்மைப் பொருளை மறுத்து ஒப்புமைப் பொருளை யுடன்பட்டுக் கூறுதலாம்; இதில் உண்மைப் பொருள்களாகிய நக்ஷத்திரங்களை மறுத்து ஒப்புமைப் பொருள்களாகிய கொப்புளங்களை உடன்பட்டுக் கூறினமை யுணர்க. "ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்" என்னும் (நன்பெய 0உ-ஆம்) சூத்திர விதிப்படி, 'கொங்கைமார்' என்னும் ரகரவீற்றுயர் திணைப் பல்லோர் படர்க்கைப்பெயர் ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாகத் திரிந்து விளியாயிற்று. கொல் என்னும் அசையிடைச் சொல் இங்கே வியப்புப் பொருளில் வந்தது. தேன் இனிமைக்காய் இனிமை சொல்லுக் காயிற்று; இஃது இருமடி யாகுபெயரெனப்படும்.

மன்மதனைச் சிவன் கொன்றதாகச் சொல்வது
பொய்யென்று தமயந்தி கூறுதல்.

105 கானுந் தடங்காவுங் காமன் படைவீடு
வானுந்தேர் வீதி மறிகடலும்—மீனக்
கொடியாடை வையமெல்லாங் கோதண்ட சாலை
பொடியாடி கொன்றதெல்லாம் பொய்.

[இ-ள்.] கானும்-காடுகளும், தடம்-விசாலமான, காவும்-சோலைகளும், காமன்-மன்மதனுடைய, படைவீடு-பாசறை [அதாவது சண்டைக்குஆயத்தமான சேனைகள் தங்குமிடமாம்] வானும்-ஆகாயமும், தேர்வீதி இரதத்தைச் செலுத்துகின்ற தெருவாம், மறி-அலைகள் மடங்குகின்ற, கடலும்-சமுத்திரமும், மீனக்கொடி ஆடை - மச்சவுருவம் எழுதப் பெற்ற கொடிச் சீலையாம், வையம் எல்லாம்-பூமி முழுதும், கோதண்டசாலை-வில் வைக்குமிடமாம்,

[இவை இங்ஙன மிருப்ப] பொடியாடி-சிவபெருமான், கொன்றதெல்லாம்-[அக்காமனைக்] கொன்றதாகச் சொல்வதெல்லாம், பொய்-அபத்தமேயாம்.

மன்மதனுடைய படைவீடு, தேர்வீதி, கொடி முதலியன வெல்லாம் நிலைபெற்றிருத்தலானும், தனக்கவன் வேதனையைச் செய்வதனாலும் தமயந்தி அம்மன்மதன் இருப்பதை யுணர்ந்தாள். ஆதலின், அவன் இங்ஙன மிருப்பது மெய்யாயிருக்க, உலகத்தவர், பொடியாடி அவனைக் கொன்று விட்டாரென்று சொல்வது பொய்யென்று கூறினாள் என்க. அடவியிலும் சோலையிலும் மன்மதன் படைக்குறிகளாகிய மலர்களும், மயில், குயில், கிளி, வண்டு முதலியவைகளும் தங்கி யிருப்பதால் அவற்றை அவனுக்குப்படைவீடென்றும், ஆகாயத்தில் அவன்தேராகிய தென்றல்சஞ்சரிப்பதால் அதனைத் தேர் வீதியென்றும், கடலில் அவன் கொடியாகிய மீனத்தின் இனங்கள்சஞ்சரிப்பதால் அதனைக் கொடியென்றும், பூமியெல்லாம் அவன் வில்லாகிய கரும்பு நிறைந்திருப்பதால் அதனைக் கோதண்ட சாலையென்றும் உருவகப் படுத்தினார் ஆசிரியர். காடு குறிஞ்சியைச் சார்ந்தது; சோலை மருதத்தைச் சார்ந்தது. இவ்விரண்டிலும் மன்மதன் படைகள் உண்டு. கான் என்பது காட்டை உணர்த்து மென்பதையும், கா என்பது சோலையை உணர்த்து மென்பதையும், "துடவை நந்தனவனம்பூந்தோட்டமே யரியுய்யானம், கடி பொழிலுத்தியானங் காமரச் செறிவாராமம், நெடியதண்டலையினோடு நீளுபவனமே சோலை" "அடவிகான் புறவம் பொச்சை யாரணி யங்காந்தாரம், கடம்வனு முளரி தில்லங்ககனங் கண்டகமேதாவம், விடர்சுரம் பழுவங்கானல் விபினமே கட்சிகானம், கடறு கானனமே யத்தங் களரிகாடிருபானாற் பேர்" என்னும் சூடாமணி நிகண்டுச் செய்யுளடிகளா னுணர்க.

படை-பாசறை, அதாவது பகைமேற்சென்றோ ருறைவிடம். மறிகடல்-வினைத்தொகை. வையமெல்லாம்-என்பது ஒருமையிற் பன்மைவந்த பால் வழுவமைதி "ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும், ஓரிடம் பிற விடந் தழுவலுமுளவே" என்பது [நன்-பொது-உ கூ-ஆம்] சூத்திரம். கொன்றதெல்லாம் என்பதையும் இங்ஙனமே கொள்க. பொடி-திருவெண்ணீறு அதனைப் பூசியவர்-பொடியாடி.

தமயந்தி நிலவு, இரவு முதலியவற்றை நிந்தித்துப் புலம்புதல்.

106. கொள்ளைபோ கின்ற துயிரென்னுங் கோளரவின்
முள்ளெயிறோ மூரி நிலாவென்னும்—உள்ளம்
கொடிதிரா வென்னுங் குழையுந் தழல்போல்
நெடிதிரா வாய்புலரா நின்று.

[இ-ள்.] உயிர்-என்னுடைய ஆவி, கொள்ளை போகின்றது-மன்மதனால் துராகிருதமாகக் கைப்பற்றப்பட்ட பொருளாகச் செல்கின்றது, என்னும்-என்று [தமயந்தி] சொல்லுவாள், மூரி-வலிமையுள்ள, நிலா-சந்திரன், கோள்-

கொல்லுந் தொழிலையுடைய, அரவின்-பாம்பினது, முள்எயிறோ-முள்ளைப் போன்ற விஷப்பல்லோ, என்னும்-என்று பிதற்றுவாள், இராகொடிது என்னும்-இந்த இரவானது கொடுமையுடையது என்று கூறுவாள், [இவ்வாறு] நெடிது இரா-நீண்டதாகிய இரவில், [பல கூறி] தழல்போல் - நெருப்பைப் போல, வாய்புலராநின்று-வாய் உலர்ந்து, உள்ளம்குழையும்-மனம் வாடுவாள்;

மன்மத பாணத்தாலும், சந்திரனாலும், இரவாலும் வருந்திய தமயந்தி, உயிர் கொள்ளைபோகின்றதென்றும், நிலவு பாம்பின் விஷப்பல்லென்றும், இரவு கொடிதெனறும் கூறி வாய்புலர்ந்து மனம் வாடினளென்பது இதன் கருத்து. கொள்ளை-துராகிருதமாக ஒருபொருளைப் பறிக்குந் தொழில்; இஃது இங்கே ஆகுபெயராய்க்கொள்ளையிடும் பொருளையுணர்த்திற்று. இங்கேஇவள் சம்மதமின்றியே மன்மதன் இவளுடைய உயிரை வருத்திக்கவரத்துணிந்தன னாதலின், 'உயிர் கொள்ளை போகின்றது' என்றாள். காதலால் ஆவிகலங்குதல் கொள்ளை போதலாகக் கூறப்பட்டது. நிலவு, விரகிகளுக்கு விஷத்தைப் போலவெப்பத்தைச் செய்வதாதலின் அதனை, 'கோளரவின்முள்ளெயிறோ' என்றாள். இரவு சீக்கிரம் கழியாமலிருந்து துன்பத்தைச் செய்ததாதலின் அதனை, 'இரா கொடிது' என்றாள்.

என்னும்-செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று; பெண்பாலைக் கொண்டு முடிந்தது; இது படர்க்கையிற் பலர்பால் ஒழிந்தஆண்பால்,பெண்பால், ஒன்றன்பால், பலவின் பால்களிற் செல்லும். "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லாதாகும் செய்யுமென்முற்றே" என்பது [நன்-வினை-உ௯] ஆம் சூத்திரம். கோளரவு-இரண்டனுருபும் பயனும் தொக்க தொகை. கோள்-முதனிலை திரிந்த தொழிற் பெயர். முள்ளெயிறு-உவமைத்தொகை. உள்ளங்குழையும் எனக்கூட்டியது, கொண்டுகூட்டுப் பொருட் கோள்; "யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை, ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே" [நன்-பொது-௬எ-ஆம் சூத்திரம்] என்பது விதி. கொடிதிரா-மொழிமாற்று. 'வாய்புலராநின்று உள்ளம் குழைந்தாள்' என்பதில், சினைவினை முதலொடுமுடிந்தது. "சினைவினை சினையொடும் முதலொடுஞ்செறியும்" என்பது [நன்-வினை-உ௬-ஞ]விதி. புலராநின்று-புலர்ந்து இது செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; இதில், புலராநில்-பகுதி; புலர்-பகுதியெனின், ஆநில்-சாரியை யெனக் கொள்ளப்படும்.

103-ஆம் செய்யுளில், 'நாங்கள் பிழைத்தால் வந்தேனென்னும் பேர்' என்பது முதலாக, இச் செய்யுளில், 'கொள்ளைபோகின்ற துயிர்' என்பதிறுதிக்கூட்டி, என்னும் என்ற முற்றோடு முடிக்க.

**தமயந்தி சந்திரனை நோக்கிக் கூறி மாரனையும் சூரியனையும் பழித்தல்.**

107. ஈரமதியே இளநிலவை இங்ஙனே
சோர்குழலின் மீதே சொரிவதேதவன்—மாரன்

பொரவளித்தான் கண்ணி யுனக்குப் புலரா
இரவளித்தா னல்லனோ வின்று.

[இ-ள்.] ஈரம்-குளிர்ச்சி பொருந்திய, மதியே-சந்திரனே, இளநிலவை-இளமையாகிய சந்திரிகையே, இங்ஙனே-இவ்வாறு வெப்பமாயிருக்கும்படி, சோர்குழலின் மீது-தளர்கின்ற கூந்தலையுடைய பெண்ணாகிய என் மேல், சொரிவது-பொழிவது, எவன்-யாது காரணம்?, மாரன்-மன்மதன், பொர-இவ்வாறு என்னோடு போர் செய்து வருத்தி என்னை வெல்லும்படி, உனக்கு-நினக்கு, கண்ணி-வெற்றிமாலையை, அளித்தான் - கொடுத்தான், [இப்படி உனக்கவன் வெற்றிமாலையைத் தரவும் நீ ஜெயங்கொள்ளவும் அனுகூலமாயிருக்கும்படி] இன்று-இன்றைக்கு, புலரா-விடியாத, இரவு-இராத்திரியை, அளித்தான்-கொடுத்துவிட்டுப் போய் மறைந்து இன்னும் வராமலிருக்கிற சூரியன், நல்லனோ-நன்மையையுடையவனோ, [மிகவும் கொடியன்என்றபடி]

இச்செய்யுளும் அடுத்த பாட்டும் குளகமாதலின், இதன் ஈற்றிலுள்ள 'இன்று இரவளித்தான் நல்லனோ' என்பதையும், அடுத்த செய்யுளின் முதலிலுள்ள, "வெங்கதிரோன்றன்னை விழுங்கிப்புழுங்கியோ' என்பதையும் கூட்டி முடித்துக் கொள்க. இச்செய்யுள் 'ஆடி வரிவண் டருகே பறக்கவே' என்ற பாடலுக்குப்பின் 110-வதாக முன் அச்சுப் பிரதிகளில் சேர்க்கப்பட்டிருந்ததெனினும், ஆங்கு முன் பின் தொடர்ச்சியின்றியும், முடிபில்லாமலும் இருந்தமை நோக்கி, உரைக்குப் பொருத்தமாயிருக்குமாறு ஈண்டுச் சேர்த்துக் கொள்ளப் பட்டது பொருத்தமில்லாதவோரிடத்தில் ஒருசெய்யுளை வைத்து இசை யெச்சமாகப் பல சொற்களைக் கூட்டி வலிந்து பொருள் கொண்டு முடித்தலினும், அதனைப் பொருத்தமுள்ள விடத்திற் சேர்த்து உரை யெழுதல் கிரமமென்பது எமது துணிபு. ஏட்டுச சுவடிகளில் செய்யுள் வரிசை, மாறுபட்டுக் கிடத்தலுங் கூடுமாதலின். அச்செய்யுட்களை அந்த வரிசையின் படியே வைத்து வலிந்து பொருள் முடிபு கண்டெழுதுதல் அத்துணைச்சிறப் பன்று. பொருண் முடிபுக்குத்தக அவற்றை இடமாற்றிச் சேர்த்தல் மிகவும் பொருத்த முடைத்தாம். இதனால் நூலுக்கு எவ்விதமான குறைவுபாடுமின் றென்பதை அறிஞர் உணர்வர்.

சந்திரன் குளிர்ச்சியையுடையதா யிருந்தும் தன்னுடைய விரக தாபத்தினாலேதமயந்திக்குஅதுவெப்பமுடையதாய்த்தோற்றியமையால் அவள்அதை நோக்கி, 'குளிர்ச்சி பொருந்திய இளநிலவை நீ இப்படி வெப்பமாகச் சொரிதற்குக் காரணமியாது?' என்று வினவினாள். எவரும் பெண்ணென்றால் இரங்குவார்கள்; உனக்குப் பெண்பாலாகிய என் மீதும் இரக்கமில்லையே என்பது தோன்ற 'சோர்குழலின் மீது சொரிவதெவன்' என்றாள். சந்திரிகை யிருந்த காலத்தில் விரகதாபத்தையுடையார்க்குக்காதல்அதிகப்பட்டு அவர்கள்மன்மத வாதனையால் இளைத்துப்போதல் இயற்கையாதலானும்; மாரனுடைய செய்கைக்குச் சந்திரன் துணையாயிருத்தலானும்,அச்சந்திரனே அவனுக்குக்குடையாக அமைதலானும், 'மாரன் உனக்குப் பொரவளித்தான் கண்ணி' என்றுங்

கூறினாள். அரசர்தம்சேனாதிபதிகட்கு வெற்றிக்கறிகுறியாக வெற்றிமாலையை அளித்தல் இயல்பு; அது போலவே மன்மதன் தன் துணைவனாகிய சந்திரனுக்குவெற்றிமாலையைக்கொடுத்தானென்க. கண்ணி-இங்கேபூமாலை, இனி, கண்ணி யென்பதைப் புட்படுக்குங் கயிறெனக் கொண்டு, பறவையாகிய என்னைப் பிடித்து வருத்துதற்கு மன்மதனாகிய வேடன், தன் துணைவனாகிய சந்திரனிடம் மையலாகிய புட்படுக்குங் கயிற்றைக் கொடுத்தான் எனினும் அமையும்; இங்கே, கண்ணி-புட்படுக்குங்கயிறு. சூரியன்மறைந்ததே இரவு உண்டாதற்குக் காரணமாதலானும், இரவு நீட்டித்தலும் தன்துயர்க் கேதுவாதலானும், சந்திரனுக்கும் மாரனுக்கும்வெற்றிக்கிடமாதலானும், தமயந்தி, சூரியனையும், 'புலரா இரவளித்தான் நல்லனோ' என்றுங் கூறினாள்.

ஈரமதியே-சேய்மைவிளி. இளநிலவு-பண்புத்தொகை. சோர்குழல்-வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. சோர்குழலின் மீது என்றது தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி; என் மீது எனச் சொல்லவேண்டுந் தன்மையில் சோர்குழலின் மீது எனப் படர்க்கைச்சொல் சேர்த்துச் சொல்லப்பட்டது. எவன்-வினாவிடைச்சொல். பொர - வினையெச்சம்; புலரா-பெயரெச்சம். இரவளித்தான் என்பது சூரியனுக்கு வினையாலணையும் பெயர், 'நல்லனோ' என்பதில் ஓகாரம் ஒழியிசைப் பொருளைத்தந்து நின்றது. ஒழிந்த சொற்களைத் தருவது ஒழியிசை யெனப்படும்; ('நல்லனோ' என்பதில்) நல்லவனில்லை, கெட்டவன என்ற சொற்கள் அமைந்து நிற்றல் காண்க. "ஒழியிசை வினாசிறப் பெதிர்மறை தெரிநிலை, கழிவசை நிலைபிரிப் பெனவெட்டோவே" என்பது (நன்-இடையியல்-௪) சூத்திரம்.

தமயந்தி இரவின் வெம்மை கூறல்.

108 வெங்கதிரோன் றன்னை விழுங்கிப் புழுங்கியோ
கொங்கை யனலிற் கொளுந்தியோ—திங்கள்
விரிகின்ற வெண்ணிலவால் வேகின்ற தேயோ
எரிகின்ற தென்னோ விரா,

(இ-ள்.)இரா-இந்த இரவானது,வெம்-வெப்பமாகிய,கதிரோன் தன்னை-சூரியனை, விழுங்கி-உட்கொண்டு, (அதனால்) புழுங்கியோ-வெப்பத்தை அடைந்தோ, (என்னைப்போன்ற விரகதாபத்தை யுடையவர்களின்) கொங்கை அனலில்-தனங்களி னுண்டாகின்றஅக்கினியால்,கொளுந்தியோ-பற்றப்பட்டோ, திங்கள்-சந்திரனிடத்தே, விரிகின்ற-பாவியிருக்கின்ற, வெண்ணிலவால்-வெண்மையாகிய சந்திரிகையின் வெப்பத்தால், வேகின்ற தேயோ-தகிக்கப் படுகின்றதினாலோ, என்னோ-வேறு எதனாலோ, எரிகின்றது (என் உடம்பில்) காந்துதலைச்செய்கின்றது; [எ-று.]

சூரியனை விழுங்கியதனாலோ, கொங்கை அனலால் கொளுவப்பட்டோ சந்திரகிரணத்தால்வெந்ததனாலேயோ, வேறு யாது காரணத்தாலோ இரவா

னது என் உடம்பில் எரிதலைச் செய்கின்றது என்பது இதன் கருத்து. சூரியன் மறைய இருள்வந்தபடியால் அதனை அவ்விரவு விழுங்கிவிட்டதாகத் தமயந்திகுறித்தாள்; விரகதாபத்தால்கொங்கை அதிகவெப்பமடைந்திருக்குமாதலின் அதனை அனலென்று கூறினாள். விரகிகளுக்குக் குளிர்ந்த நிலவும் வெப்பத்தைச் செய்யக்கூடிய தாதலின் அதனையும் அக்கினியாகவே குறித்தாள். அவ் விரவில் வேட்கை வெப்பம் அவளுக்கதிகரித்து மிக்க துயரத்தைச்செய்தபடியால், அவ்விரவு உஷ்ணமிக்க சூரியன் முதலியவற்றோடுசேர்ந்து தகிக்கின்றதென்று அவள் கூறினாள். "நெருப்பழற் சேர்ந்தக்கால் நெய்போல்வதூஉம், எரிப்பச்சுட் டெவ்வநோயாக்கும்" என்றபடி இரவு குளிர்ச்சியுடையதாயிருந்தாலும், வெப்பமானவற்றோடு சேர்ந்தால் தானும் வெம்மையடைவது இயற்கையாதலின் அதனை இவ்வாறு கூறினாள். இரவு சூரியனை விழுங்குதலும், கொங்கையனலால் அவ்விரவு கொளுவப்படுதலும், நிலவால் வேதலும் இல்லையெனினும், விரக தாபத்தை யுடையார் மனம் மாறுபட்டு இயற்கைக்கு விரோதமான மாற்றங்களைக் கூறுதல் சுவாபமாதலின், தமயந்தியும் இவ்வாறு கூறினாள். இது புலம்பல் என்னும் மெய்ப்பாடு.

வெங்கதிரோன் - பண்புத்தொகை; வெம்மையென்னும் பண்புப் பகுதி மைவிறுகெட்டுப் புணர்ந்தது. கதிரோன்-கிரணங்களை யுடையவன், தன்- அசைமொழி, புழுங்கியோ, கொளுந்தியோ, வேகின்றதேயோ, என்றோ என்பவற்றிலுள்ள ஓகாரங்கள் ஐயப்பொருளில் வந்தன. கொங்கையனல்- ஆறும் வேற்றுமைத் தொகை. வேகின்றதே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப்பொருளது. நெருப்பு என்னைச் சுடுகின்றது என்பது போல இரவு என்னை எரிக்கின்றது என்பது அமைந்தது.

இரவு நீட்டித்ததற்குத் தமயந்தி ஆற்றல்.

109. ஊழி பலவோ ரிரவாயிற் றோவென்னும்
கோழி குரலடைத்த தோவென்னும்—ஆழி
துயிலாதோ வென்னுஞ் சுடர்மதியங் கான்ற
வெயிலா லுடலுருகா வீழ்ந்து.

[இ-ள்.] ஊழி பல-அநேகம்யுகங்கள், [கூடி] ஓர் இரவுஆயிற்றோ-இந்த ஓர் இராத்திரியாயினவோ, என்னும்-என்று தமயந்தி கூறுவாள்; [விடியற்காலத்திற் கறிகுறியாகக்கூவும்] கோழி-கோழிச்சேவலானது, குரல் அடைத்ததோ-தான் கூவாமலிருக்குமாறு குரல் அடைக்கப் பெற்றதோ, என்னும்- என்று சொல்லுவாள், ஆழி-சமுத்திரமானது, துயிலாதோ-தூங்கமாட்டாதோ, என்னும்-என்று சொல்லி வருந்துவாள், [இவ்வாறு இரவு நீட்டித்தபடியால் மேலும்] சுடர்-பிரகாசமுள்ள, மதியம்-சந்திரன், கான்ற-கக்கிய, வெயிலால்-[சந்திரிகையாகிய] வெய்யிலினாலே, உடல்-தேகமானது, உருகா- உருகி, வீழ்ந்து-படுக்கையிற் சாய்ந்து கொண்டு; [எ-று.]

விரகதாபத்தை யுடையார்க்கு ஒரு விநாடி நேரமும் ஒரு யுகம் போலத் தோற்றுதல் இயற்கையாதலின், அவ்விரவில் நித்திரையின்றி வருந்திய தமயந்திக்கு, ஒவ்வொரு நாளிலும் ஏற்பட்ட நாழிகையைக் கொள்ளும் இராக்காலம்பல யுகங்கள் சேர்ந்த காலம்போல நீட்டித்துத்தோற்றிற்று. அதனால் அவள் ஒவ்வொரு விநாடியிலும் 'நெடுநேரமாயிற்றே, இன்னும் விடியவில்லையே' என்று கலங்கினாள். அதுபற்றியே 'ஊழிபலவோ ரிரவாயிற்றோ, கோழிகுரலடைத்ததோ, ஆழி துயிலாதோ' என்றாள். ஊழி-யுகமுடிவு; பிரமனுடைய ஆயுட்காலம். விடியற்காலத்தில் கோழிச்சேவல்கூவுதலும், இராக்காலத்தில் அதிக ஆர்ப்பரிப்பையும் பகற்காலத்தில் அடங்கிய ஒலியையுமுடைய சமுத்திரம் விடியுந் தருணத்தில் முழக்கங்குன்றுதலும் இயற்கையாதலின் இரவு நீட்டித்தபோது வருந்திய தமயந்தி, 'கோழி குரலடைத்ததோ, ஆழிதுயிலாதோ' என்றாள். விரகிகட்குச் சந்திரன் குளிர்ச்சி வெம்மையாகத் தோற்றுமாதலின், அதனை 'சுடர்மதியங் கான்ற வெயில்' என்றார் ஆசிரியர்.

மேலைப்பாட்டும், இச்செய்யுளும், கீழ்ப்பாட்டும் குளகமாதலின், மேலைப்பாட்டின் ஈற்றிலுள்ள 'எரிகின்ற தென்றோவிரா' என்பதனோடு, இச்செய்யுளில், 'ஊழிபலவோ ரிரவாயிற்றோ வென்னும்' என வருவதைக் கூட்டி முடிக்க. இச்செய்யுளின் ஈற்றிலுள்ள 'வீழ்ந்து' என்னும் எச்சத்தைக் கீழ்ப்பாட்டில் 'மெலிவாள்' என வரும் முற்றோடுகூட்டி முடித்துக்கொள்க. ஆயிற்றோ, அடைத்ததோ, துயிலாதோ என்பவற்றிலுள்ள ஐகாரங்கள் ஐயப்பொருளன. கோழி குரலடைத்ததோ என்பதில் சினைவினை. அசசினைக்குரிய முதல் வினையோடுமுடிந்தது ஆழி-ஆழத்தையுடையது. சுடர்மதியம்-இரண்டாம்வேற்றுமைத்தொகை. கான்ற-பெயரெச்சம்; இது வெயில் என்றபெயருடன் முடியும். உருகா-செய்யாவென்னும் வாய்பாட்டுவினையெச்சம்; இது வீழ்ந்து என்னும் எச்சத்திலுள்ள தன்கருத்தாவின் வினையைக்கொண்டது. "சினைவினைசினையொடும் முதலொடுஞ்செறியும்" என்பது [நன்-வினை-உ௬] சூத்திரம். வீழ்ந்து-வினையெச்சம்; இது, கீழ்ப்பாட்டில் வந்துள்ள மெலிவாள் என்ற முற்றோடு கூட்டி முடியும்.

வண்டு பறக்கத் தமயந்தி மெலிவாள் என்பது.

110. ஆடி வரிவண் டருகே பறக்கவே
வாடி மெலிவாள் வனமுலைமேல்—ஓடிப்
பொறையாகச் சோர்வாள் பொறுக்குமோ மோகத்
துறைவா யடங்காத் துயர்.

[இ-ள்.] வரிவண்டு-இரேகைகளை யுடைய வண்டானது, அருகே-சமீபத்தில், பறக்கவே-[மார்பிலணிந்திருக்கும் மாலையினுள்ள மகரந்தம் முதலியவற்றை விரும்பி] பறந்து ஆடுதற்கே, வாடி-மேனி வாட்ட மடைந்து,

மெலிவாள்-இளைப்பாள், [இங்ஙனம் அவள் மெலியும்போது மேலும் அவ் வண்டு] வனம்-அழகுபொருந்திய, முலைமேல்-தனங்களின்மீது, ஓடி-விரைந்துசென்று தங்கி; [அதனாலே இயற்கையிலேயே பாரமாயிருக்கும் தனங்களில் இன்னும் அதிகமாக] பொறையாக-பாரமாக. [அப்பாரத்தால் இடை முன்னிலும் மெலிவதாலே] சோர்வாள்- முன்னிலும் அதிகமாகத் தளர்ச்சியடைவாள், [இங்ஙனம்] மோகத்துறைவாய்-ஆசைவழியினிடத்தே, [உண்டாகிய] அடங்காத்துயர்-தணியாத துன்பத்தை, [பெண்பாலாகிய அத்தமயந்தி] பொறுக்குமோ-தாங்குவளோ, [தாங்கமாட்டாள் என்றபடி] [எ-று.]

வண்டு மோகத்தை வளர்த்து விடுவதாதலின், அஃதருகே பறக்கவும் வருந்தினாள் தமயந்தி. இயற்கையில் கனத்திருக்கும் தனங்கள் ஆசை மிகுதியால் இன்னும் வீங்கும்; அதனோடு வேறு பொருளுஞ் சேர்ந்தால் பாரம் அதிகரிக்கும்; அங்ஙனம் கனம் அதிகரிக்கவே இடைமிகவும் தளர்ச்சியடைவதால் விரகதாபத்தை யுடையார் மிகவும் வாட்டமடைவார். ஆதலின், சமீபத்தில் வண்டு பறப்பதற்கே துயர் கொண்டு வருந்திய தமயந்தி, மேலும் அது, தனங்களின்மேற் சேர்ந்து பாரத்தை அதிகப்படுத்த அதனால் மேலும் வாட்டமடைந்தனளென்க. 'வனமுலைமேல் ஓடிப்பொறையாக' என்பதற்கு 'அழகு பொருந்திய தனமே பூரித்துச் சுமையாக' எனப்பொருள் கோடலுமொன்று 'வண்டு அருகே பறக்கவே மெலிவாள்' என்பதில் குறைவுப் பொருளை உறுதிப்படுத்திக் காட்டும் தேற்றேகாரங் கொடுத்துச்சொன்னதற்கேற்ப 'அவ்வண்டு முலைமேற்சேர முன்னிலும் வருந்தினாள்' என்றுகூறலே சிறப்புடைத்தாகலானும், ஓடுதற்றொழில் வண்டுக்கேயன்றித் தனங்களுக்கின்மையானும் அங்ஙனம் 'முலைமேல் ஓடி' என்பதற்குத் 'தனம்-பூரித்து' எனப்பொருள் கோடல் அத்துணைச் சிறப்பன்றென்க. மேற்கூறிப்போந்த சிறந்த பொருள் இல்லாதவிடத்து வேண்டுமெனின், இங்ஙனம் வலிந்து பொருள் கோடல் அமையும். மோகத்தாலுண்டாந்துயர் எவராலுஞ் சகித்தற்கருமையாதலின், பெண்ணாயிருக்கும் இவள் பொறுப்பாளோ என்றார் ஆசிரியர். மெலிவாள், சோர்வாள் என்பவற்றில் இயல்பினால் இறந்த காலம் எதிர்காலமாகச் சொல்லப்பட்டது; இது காலவழுவமைதி "விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும், பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி" என்பது [நன். பொது. ௩௩] சூத்திரம்.

இதில், தமயந்தி, நிலவால் வருந்தித் தனியே

தளர்ந்தமை கூறப்படுகின்றது.

111\. தாங்கு நிலவின் தழல்போய்த் தலைகொள்ளத்
தேங்குழல்சேர் வண்டு சிறைவெதும்ப—ஓங்குயிர்ப்பின்
தாமங் கரியாத் தனியே தளர்கின்றாள்.
யாமங் கரியாக நின்று.

[இ-ள்.] தாங்கும்-சந்திரனால் சுமக்கப்படுகின்ற, நிலவின்-சந்திரிகையினுடைய, தழல்-நெருப்பானது, போய்-சென்று, தலை கொள்ள-தமயந்தியின் சிரசைத் தனக்கிருப்பிடமாகப் பற்றிக் கொண்டமையினாலே, [அதாவது சிரசில் அந்நெருப்பு அதிகரிக்க அத்தழலினாலே] தேம் - வாசனை பொருந்திய, குழல் சேர்-கூந்தலில் சேர்ந்திருக்கின்ற, வண்டு-வண்டானது, சிறைவெதும்ப-இறகு வெந்து வருந்தவும், ஓங்கு-அதிகரிக்கின்ற, உயிர்ப்பின்-அவளுடைய உஷ்ணமாகிய பெரு மூச்சினாலே, [அவளால் மார்பில் அணியப்பட்டிருக்கும்] தாமம்-பூமாலையானது, கரியாக-எரிந்து கரியாகவும் இன்று-இந்த நாளில், யாமம்-இரவே, கரியாக-இவற்றிற்கெல்லாம் சாட்சியாக, [வேறோர் துணையுமின்றி] தனியே-தனியாக, தளர்கின்றாள்-தமயந்தி வாடுகின்றாள்; [எ-று]

சந்திரிகையானது, சந்திரனிடத்தே எப்பொழுதும் பொருந்தி யிருக்கின்றமைபற்றி அதனைச 'சந்திரன் தாங்கும் நிலவு' என்றார் ஆசிரியர். நிலவின் தன்மை குளிர்ந்திருக்குமெனினும், காமவேதனைப்பட்ட தமயந்திக்கு அது வெப்பத்தையே தருவதாயிருக்குமாதலின் அதனைத் 'தழல்' என்றார். சந்திரிகையாலுண்டான நெருப்பானது தமயந்தியின் தேகத்திற்பட அவ்வுடல் வெதும்பி அவ்வெப்பமானது சிரசிற்கேறியது; விஷம் முதலியன சிரசிற்கேறியவுடன் வேதனை அதிகரித்தல் இயல்பாதலின், தமயந்திக்கும் அழல் தலைக்கேற வருத்தம் மிகைப்பட்டது. சிரசில்வெப்பம் அதிகரிக்கவே குழலில் சேர்ந்திருந்த வண்டும் இறகு கருகியது. தமயந்திக்கு இங்ஙனம் உடல் முழுதும் வெப்பம் அதிகரித்திருந்தமையால் அவளுடைய மூச்சும் தழலாகவே யிருந்தது; அது படவே நெஞ்சிலணியப் பட்டிருந்த மாலையும் கரிந்தது. தமயந்தி வருந்தும் அக்காலத்தில் பக்கத்திலிருந்த இரவேயன்றி வேறொருவரு மில்லையாதலின், அவ்விரவே அவளின் துன்பத்தை யறியும் சாட்சியாக நின்றது என்றும், தனியே தளர்கின்றாள் என்றும் கூறினார்.

கொள்ள, வெதும்ப, கரியாக என்பன வினை யெச்சங்கள்; தளர்கின்றாள் என்பதனோடு முடிந்தன. தாமம் கரியாக என்பதில் ககரந் தொக்கது. தளர்ந்தாள் என இறந்தகாலமாக வரற்பாலது, கால வழுவமைதியால் நிகழ்காலமாக வந்தது. இங்குக்கூறிய விஷயம் முன்னடந்ததெனினும், இநூலில் எதிர் நோக்கில் வருதல் குறித்து அதைச்சுட்டி இன்று என்றார் ஆசிரியர். இன்று என்பதற்கு 'நூலில், முன்னே அந்த விஷயம் நடந்த நாளாகக் கூறப்படும் இந்நாளில்' என்று பொருள்படும்.

தமயந்தி வருந்தி யிருந்த நிலைமையை அவள் தவஞ் செய்ததாக இதில் ஆசிரியர் உருவகஞ் செய்து கூறுகின்றார்.

112. மையிட்ட கண்ணருவி வார வளைசோரக்
கையிற் கபோலத் தலம்வைத்து—மெய்வருந்தித்

தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழியாள்
தானிருந்து செய்வாள் தவம்.

[இ-ள்.] மை இட்ட-அஞ்சன மெழுதப் பெற்ற, கண்-கண்களினின்றும், அருவி-மலையாறு போன்ற நீரொழுக்கானது, வார-ஒழுக, வளை-வளையல், சோர-கழன்றுவிழ, கையில்-கரத்தின்மேல், கபோலத்தலம்-கன்னத்தை, வைத்து-சேர்த்து, மெய்வருந்தி-தேகவருத்தங்கொண்டு, தேன்-மதுவானது, இருந்த-தங்கிய, பூங்கணையே-மன்மதனுடைய புஷ்பபாணமே, தீயாக-நெருப்பாக அமைய, தேம்-தேன்போலும் இனிய, மொழியாள்-வார்த்தைகளையுடைய தமயந்தி, இருந்து-அவ்விரவில் தனித்திருந்து, தவம் செய்வாள்-[நளனை அடையவேண்டுமென்று தியானித்தலாகிய] தவத்தைச் செய்பவளாயினாள்; [எ-று.]

தமயந்தி, கண்ணீர் சோர, வளைகழல, உடல்மெலிந்து வருந்திக் கையிற் கன்னத்தைச் சேர்த்து, வெப்பமான மன்மத பாணத்தின் சேர்க்கையைப் பெற்றுத் தனித்து நளனையே தியானித்துக் கொண்டிருந்த நிலைமை, முனிவர் தவஞ்செய்தது போன்றிருந்தமையால், ஆசிரியர் அவளைத் 'தவஞ் செய்வாள்' என்றுகூறினார். முனிவர் பகவானிடத்துக் கொண்டபக்தியால் மனமுருகிக் கண்ணீர் விட்டு ஆகாரமின்றி உடல்மெலிந்து சங்குவளை முதலியன சோரப் பஞ்சாக்கினி மத்தியிலிருந்து தவஞ்செய்தல் இயற்கை; இச்செய்கைகளைப் போன்ற செயல்கள் தமயந்தி யிடத்தும் பொருந்தி யிருந்தனவாதலின் அவள்பாற் றவம் கூறப்பட்டது. இருடியரிற் சிலர் சங்குவளை முதலியவற்றைக் கையிலணிந்திருப்பது வழக்கம். தவ நிலைகளில் கன்னத்திற் கை வைத்திருத்தலும் ஒரு நிலை. முனிவர்க்குப் பஞ்சாக்கினி யிருத்தல் போலத் தமயந்திக்கு வெப்பமாகிய மலர்ப்பாணங்களே அக்கினியாயின.

மையிட்ட-இரண்டாம் வேற்றுமைத்தொகை. இட்டகண்-இதில்செயப்பாட்டுவினை செய்வினையாக மாறி வந்தது. கண்ணருவி-நீக்கப் பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமைத் தொகை. வார, சோர, வைத்து, வருந்தி, ஆக, என்பன வினையெச்சங்கள்; செய்வாள் என்பதனோடு முடியும். கபோலத்தலம்-கன்னத்தினிடம். தேன் இருந்த என்பதற்கு, வண்டு தங்கிய எனப் பொருள் கோடலுமொன்று. அருவி-உவமையாகு பெயராய் அதனைப் போன்ற கண்ணீரை யுணர்த்திற்று. தேம்-இனிமை யெனினும் அமையும். செய்வாள் என்பதில், கால வழுவமைதியால் இறந்தகாலம் எதிர்காலமாக மாறி வந்தது. தான்-அசை.

இதில், நிலவு மறைந்து, இருள் மிகுந்தது கூறப்படுகின்றது.

113. அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய்—உள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
இதயமே போன்ற திரா.

[இ-ள்.] இரா-அந்த இராத்திரியானது, [மேற்கூறியபடி நிலவால் தமயந்தி வருந்திக் கொண்டிருக்கும்போது நடுச்சாமத்தில் அந்நிலவு மறைந்தமையால்] அள்ளிக் கொள்ளுத லாகும்படி [அதாவது: அள்ளிக் கொள்ளும் படியான வடிவமுடையதாகி] அடையத்திரண்டு-முழுவதுங் கூடி, ஒன்றாய்-ஒன்றாகி, கொள்ளிக்கும் - கொள்ளிக்கட்டைக்கும், விள்ளாத-இடைவிட்டு நீங்காத, கூர்-மிகுந்த, இருளாய்-இருளாக, [அதனால்] உள்ளம்-மனதை, புதைய வைத்த - மறையவைத்த, [அதாவது மனதை வேறோரிடத்திற் செலுத்தி மறைத்துத் தம்மைக் கூடுவாரிடத்தில் மிகுதியாக வைத்தவர்களைப்போல நடிக்கின்ற] பொது மகளிர் தங்கள்-பரத்தையர்களுடைய, இதயம்- உள்ளத்தை, போன்றது நிகர்த்தது; [எ-று.]

கபடம் நிறைந்த வேசிகளுடைய மனதைப்போல, நிலாமறைந்தகாலத்தில் தோற்றிய இராவானது இருள் நிறைந்ததாய்த் தோற்றியது என்பது இதன் கருத்து. தமயந்தி, முன்னிரவில் தோற்றிய சந்திரனால் மிகவும் வாடி மயங்கினாள்: அங்ஙனம் அல்லற்படும்போது நள்ளிரவு வர, அன்று பாதியிரவில் நிலவு மறையுந்திதியாதலால், அப்பொழுது அச்சந்திரன் மறைந்துவிட இருள் மிகுந்த தென்க. சந்திரன் மறைந்தது நள்ளிரவிற்றென்பதை அடுத்த பாட்டில், 'இடையாமங் காவலர்கள் போந்தார்' என வருதலால் உணர்க. இருள் கைக்கு அகப்படக் கூடாததெனினும், அப்பொழுதுமிகுந்த கருமையாய்ச் செறிந்து கட்புலனுக்கோர் வடிவமுடையதுபோலத் தோற்றினமையின், கைகளினால் அள்ளிக்கொள்ளும் பொருள்போல விளங்கிற்று இதுபற்றியே ஆசிரியர், 'அள்ளிக் கொளலாய் அடையத்திரண்டு' என்றார். எத்தகைய இருளும் நெருப்பின் பிரகாசத்தைக்கண்டால் விலகும். அங்ஙனமிருந்தும் இவ்விருள் அதற்கும் நீங்காத தன்மையுடையதென்று சொல்லும்படி மிகுந்திருந்தது; அது குறித்தே 'கொள்ளிக்கும் விள்ளாத கூரிருள்' என்றார். நெருப்பைக் கண்டவுடனே எத்தகைய இருளும் நீங்குதல் இயற்கையாயிருக்க, ஆசிரியர், இங்ஙனம் கூறிய தென்னையோவெனின், இருளின் மிகுதிப்பாட்டை விளக்கற்கென்க; இதனானே அவ்விருள் கொள்ளிக் கட்டைக்கும் நீங்காதிருந்ததெனக் கொள்ளலாகாது. தாசிகள் பணத்தின்மீதே மிகுதியும் மனதைச் செலுத்தி, அதனைக் கொடுத்தாரிடம் எட்டுணையும் விசுவாசம் செலுத்தாதவர்களாயிருப்பார்கள்; இவ்வாறு நடிக்கும் அவர்களுடைய கபட உள்ளமானது மகா அந்தகார முடையதாய்ச் சேர்ந்தார்க்கு நீங்காத் துன்பம் பயப்பதாயிருக்கும்; அவர் சேர்க்கை யின்பமும் பயனற்றதாகும்; இது குறித்தே நாயனாரும் குறளில்,

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று"

என்று கூறினார். இவர்களின் நடிப்புள்ளத்தைப் போலவே இருளும் மனிதர்க்கு மிக்க துயரைச் செய்வதாகும்; ஆதலினாலே, அவ்விருள் தாசிகளு

டையமனதிற்குவமையாகக் கூறப்பட்டது. தாசிகள் கபடநெஞ்சைக்கொண்டதுபோல, இரவு இருளைக்கொண்ட தென்க. பரத்தையர், பணங் கொடுத்தார் பலர்க்கும் பொதுவாக ஒவ்வொரு நாளினு மனைவியரா யிருந்து ஜீவிப்பவர்களாதலின், அவர்கட்குப் பொதுமகளிர் என்ற பெயர் ஏற்பட்டது. பொது மகள்- எவர்க்கும் உரிய பெண்.

கொளளாய், திரண்டு, ஒன்றாய் என்பன வினை யெச்சங்கள்; விள்ளாத என்ற எதிர்மறைப் பெயரெச்சத்திலுள்ள வினைகொண்டு முடியும். கொள்ளி-நெருப்புறுவிறகு விள்ளுதல்-இடைவிடுதல். இருளாய்-என்பதில், ஆகவென்னும் செயவெனெச்சம், செய்தெனெச்சமாகத் திரிந்து வந்தது. 'கூர் இருளாக இரா பொதுமகளிர் தங்கள் இதயமே போன்றது' எனமுடிக்க. கொள்ளிக்கும் என்பதிலுள்ள உம்மைஉயர்வு சிறப்புப் பொருளது. புதையவே, இதயமே என்பவற்றி னீற்றிலுள்ள ஏகாரங்கள் தேற்றப் பொருளன. வைத்த-பெயரெச்சம். மகளிர் தங்கள்-என்பதில், தம், கள் இரண்டும் சாரியையிடைச்சொற்கள்; கள் என்பதைப் பன்மை விகுதியெனக் கொண்டு விகுதிமேல் விகுதியெனினும் அமையும். 'உள்ளம் புதைய வைத்த பொதுமகளிர்' என்பதற்கு,பணங்கொடுத்துத் தங்களைச்சேர்ந்தாருடையமனதைத்தங்களிடமே பதியும்படி பொய்யன்பு காட்டி நடித்தபரத்தையர் எனவும் பொருள்.

இதில், இரவில் நகர் காப்போர் வந்தமை கூறப்படுகின்றது.

114. ஊக்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர்—காக்க
இடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின்
புடைவா யிருள்புடைத்தாற் போன்று.

(இ-ள்) ஊக்கிய- மேலே உயர்த்தப்பட்ட, (அதாவது உரத்த சப்தத்தோடு கூறும்) சொல்லர்-வார்த்தையை யுடையவர்களும், ஒலிக்கும்-சப்திக்கின்ற, துடி-துடியெனும் பறை முழக்கத்தைப் போன்ற, குரலர்-கண்டத்தொனியை யுடையவர்களும், வீக்கிய-இறுக்கிக் கட்டிய, கச்சையர்-இடைவாரையுடையவர்களும், வேல்வாளர்-வேலும்வாளுமாகிய ஆயுதங்களையுடையவர்களுமான, காவலர்கள்-காவற்காரர்கள், இருளின்புடை-இருட்டின் பக்கத்திலே, வாய்-பொருந்திய, இருள்-மற்றொரு இருளானது, புடைத்தால் போன்று-அதனை அடித்துத் தள்ளினதைப் போல, இடையாமம்-நடுச்சாமத்தில்,காக்க-நகர்காவல்புரிவதற்கு,போந்தார்-வந்தார்கள், [எ-று.]

நடுநிசியில் நகர்காப்போர், தங்கள் காவற்றொழிலைப் புரிதற்கு வந்தனரென்பது இதன்கருத்து. ஊக்கிய சொல்லர்களும் ஒலிக்குந்துடிக்குரலரும், வீக்கியகச்சையரும், வேலாயுதத்தையும் வாளாயுதத்தையுமுடையவர்களுமாகியஇடையாமங்காவலர்கள் ,இருளின் புடைவாய்இருள்புடைத்தாற்போன்று

நகர் காக்கப் போந்தார் என இயைக்க. ஒவ்வொரு இராஜாங்க நகரத்திலும், சோரரால், மனிதர்க்குத் தீங்குநேராதிருக்கும்வண்ணம்இராக்காலத்தில்,நகர் காப்போர், இராஜ கட்டளைப்படி தெருக்கடோறும் சுற்றிச் சுற்றித் திருடர் அஞ்சியோடுமாறு, பெருந்தொனியிட்டுக் காவல்புரிவது வழக்கம். அவ்வழக் கத்தின்படியே அன்று இராக்காவலர்கள் வந்தனர். 'இடையாமங் காவலர் கள் போந்தார்' எனவே, அப்பொழுது நடுச்சாம மாயிற்றென்பது தானே போதரும். காவற்காரர்கள் பெருந் தொனியிட்டுக் கூவுவார்க ளாதலின், 'ஊக்கிய சொல்லர்,' என்றும்,'துடிகுரலர்' என்றும் கூறினர் ஆசிரியர். துடி-மலைச்சார்பாகிய குறிஞ்சி நிலத்திலும், பாலைநிலத்திலும் முழக்கப்படும்பறை; இது,இடுக்கிடக்கூடிய பேரொலியையுடையது கச்சையர் என்பதற்குச்சல்ல டத்தை யணிந்தவர்க ளென்றேனும், கவசத்தை யணிந்தவர்க ளென்றேனும் பொருள்கூறினும் அமையும். காவலர்கள், இருளில் கரிய இருட்டொகுதிகள் போன்று விளங்குவார்களாதலின், அவர்கள் வந்தது,அவ்விருளில் வேறு சில இருள்கள் புகுந்து அதனை அடித்து விலக்குவதுபோன்றிருந்தது. சொல்லர், குரலர்,கச்சையர்,வேல்வாளர் என்பன இருபெயரொட்டுப் பண்படிகளாய்க் காவலர் என்றபெயரோடு, சொல்லரும் குரலரும் கச்சையரும் வேல்வாளரு மாகிய காவலர்கள் என்றுவிரிந்துமுடியும்;இவற்றுள்எண்ணும்மைகள்தொக் கன. யாமங்காவலர்-என்பதில், "வேற்றுமைமப்போய் வலிமெலியுறழ்வும், அல்வழியுயிரிடை வரினியல்பும்முள" என்னும் (நன்-மெ-பு. 17. ஆம் சூத் திர) விதியால் மெலி உறழ்ந்தது. புடை எழனுருபு.

நடுநிசியில் உலகத்தார் உறங்கினமை

இதில் கூறப்படுகின்றது.

115. சேமங் களிறுபுகத் தீம்பாலின் செவ்வழியாழ்
தாமுள் ளுறைபுகுதத் தார்வண்டு—காமன்றன்
பூவாளி யைந்திற் புகத்துயில் புக்கதே
ஓவாது முந்நீ ருலகு.

(இ-ள்.) களிறு-யானையானது,சேமம்-காவலிடத்தை, புக-சேரவும்,தீம்-தித்திப்பான,பாலின்-பாலைப்போன்ற, செவ்வழி-செவ்வழிஎன்னும்பண்ணை யுடைய,யாழ்தாம் வீணைகள், உறையுள்-உறையினுள்ளே, புகுதவும்-சேரவும், தார்-புஷ்பங்கள் மொய்க்கின்ற, வண்டு-வண்டுகள், காமன்தன்-மன்மதனு டைய,பூவாளிஐந்தில்-ஐந்துபாணங்களாகியமலர்களில்,புக-சேரவும், முந்நீர்-மூவகைநீர்களாகிய சமுத்திரத்தாற்சூழப்பட்ட,உலகு-உலகமானது,ஓவாது-நீங்காமல், துயில் புக்கது-தூக்கத்திற் சேர்ந்தது;(நித்திரை செய்தது) எ-று.

• களிறு காவலிடத்தைச் சேரவும, யாழ் உறையுட்பிரவேசிக்கவும்,வண்டு கள் புஷ்பங்களிற்சேர்ந்து பறவாமல்தங்கவும்,உலகம்நித்திரை செய்தது என்

பது இதன்கருத்து. நள்ளிரவில், யானை, கூடத்திற்கட்டுத்தறியிற் கட்டப்படுதலும், முன்னிரவில் யாழ் வாசித்துக்கொண்டிருந்தவர்கள் அதனை நிறுத்தி வீணையை உறையிற் சேர்த்தலும், பறந்து பற்பலவிடங்களிற் சஞ்சரிக்கும் வண்டுகள் பறத்தல் ஒடுங்கி நல்ல மலர்களிற்சேர்ந்தொடுங்கலும்,மனிதர் எல்லாக்காரியங்களையுமொடுக்கி நித்திரைசெய்தலும் இயற்கையாதலின்,'யானை முதலியன இங்ஙனமாக உலகம்நித்திரைசெய்தது' என்றுரைத்தார் ஆசிரியர். பண்களில் செவ்வழிப்பண்ணானது நெய்தநிலப்பண்; மிக்கஇனிமை பொருந்தியது;வீணையில் வாசிக்கப்படும் பண்களில் இதுமிக உயர்ந்ததாம், ஆதலின், இவ்விசை தீம்பாலின் சுவையோடு உவமை கூறப்பட்டது; யாழுக்குச் செவ்வழி மிகச் சிறந்ததென்பது தோன்ற, 'செவ்வழி யாழ்' என்றுங் கூறினார். முன்னிரவுநேரத்தில் மலர்கள்மலரும்; அங்ஙனம் மலருந்தருணத்தில்வண்டுகள்ஒவ்வொருமலரிடத்தும் இசைபாடிப்பறந்துசென்று இதழ்குடைந்துமகரந்தமுண்டுதேன்பருகிக்களித்தாடிச்சஞ்சரிப்பனவாம்;எனினும், நடுச்சாமத்தில் அவை ஒவ்வொரு உயர்ந்தமலரிற் சேர்ந்து இதழ்குடைந்தபடியே பறத்தல் ஒடுங்கித் தங்கிவிடும்; சில வண்டுகள், இராக்காலத்திலும் சஞ்சரிக்கக் கூடியனவாயினும், நடுநிசியில், இரவிற்சஞ்சரிக்கும் பேயு முறங்குமாதலின், அவைகளும் ஒடுங்குதல் இயற்கை. வண்டுகள் பற்பல மலர்களிற் சேர்வனவெனினும், விசேஷமாக உயர்ந்த மலர்களிற் சேர்வது இயற்கையினாலும், மலர்களில் மன்மதனுக்குப் பாணங்களாக அமைந்த மலர்களே சிறந்தனவாதலினாலும் 'தார்வண்டு காமன்றன் பூவாளி ஐந்திற்புக' என்றார் ஆசிரியர்.

'சேமங்களிறு புக' என்பதை, 'களிறு சேமம்புக' எனமாற்றுக. புக,புகுத என்பன செய வென்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள்; புக்கது என்ற முற்றோடு முடியும். தீம்பால்-பண்புத்தொகை, பாலின் என்பதில், இன் - உவமவுருபு, செவ்வழியாழ் - இரண்டாம் வேற்றுமைத் தொகை. யாழ்தாம் என்பதில், தாம்-சாரியை, 'காமன்தன்' என்பதில், தன்-சாரியை 'பூவாளி ஐந்தில்' என்பதை, 'வாளி ஐந்து பூவில்'எனமாற்றிப் 'பாணங்களாகிய ஐந்து மலர்களில்' என்று பொருளுரைக்க முந்நீர் - மூன்றுவகை நீர்கள்; அவை யாவன. ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்பனவாம்;சமுத்திரம்இம்மூன்று நீர்களையுடையதாம்; அதனாற் கடல் முந்நீர் என்னும் பெயர்பெற்றது. நீரின் பெயர் கடலுக்காய் வந்தமையின் இஃதாகு பெயராம். உலகு-இடவாகு பெயராய் உலகத்திலுள்ள மனிதரை யுணர்த்து மாதலின், 'உலகு துயில் புக்கது' என்பதற்கு, 'உலகத்தார் உறங்கினார்கள்' என்று பொருள்.

அந்த யாமத்தில் பேயும் உறங்கிற்றென்பது
இதிற் கூறப்படுகின்றது.

116. ஊன்றின் றுவகையா லுள்ள வுயிர்புறம்பே
தோன்றுங் கழுதுந் துயின்றதே—தான்றன்

உரைசோரச் சோர உடல்சோர வாயி
னிரைசோரக் கைசோர நின்று.

(இ-ள்.) ஊன் - மாமிசத்தை, தின்று - புசித்து, உவகையால் - அதன் பொருட்டு உண்டாகிய சந்தோஷத்தினால், உள்ள-தனக்குள்ளே அடங்கியிருக்கின்ற, உயிர்-மூச்சு, புறம்பே-வெளியில், தோனறும்-அதிகரித்துவீசும்படியான, கழுதும்-பேயும், தன்உரை-தன்னுடையவார்த்தை, சோரச்சோர-மிகத்தளரவும், உடல்சோர-தேகமானது தளர்ச்சியடையவும், வாயின் இரை-வாயினிடமாக வுள்ள உணவானது, சோர-சோர்ந்துவிழவும், கைசோர-கரங்களும் தளரவும், நின்று-தள்ளாடிநின்று கொண்டு, துயின்றது - தூங்கிற்று.

இராக்காலத்தில் தூக்கமின்றிச் சஞ்சரிக்கக்கூடியபேயும் அந்த இடையாமத்தில் நித்திரைசெய்த தென்பது இதன் கருத்து எனவே, அந் நள்ளிரவுஎத்தகையினரையும்மயக்கி விடக்கூடியதென அவ்விடையாமத்தின் வன்மை கூறப்பட்டது. நள்ளிரவில் பேயும் ஒருமுகூர்த்தநேரம் தூங்குமென்பது உலகவழக்கு; இங்ஙனம்பேயுந் தூங்கும் இடையாமநேரத்தை, வயிரவர் காவல் நேர மென்பர் சிலர்; வயிரவர் காவலில் எதுவும் இயங்கா தென்பது தொன்றுதொட்டு வரும் வழக்கு. பேய் விலாப்புடைக்க ஊனைத்தின்றிருப்பதால் மூச்சுத் திணறி விடுதல் இயற்கை. தூக்கம் வருங்காலத்தில் வார்த்தை தடுமாறுதலும், உடல் சோருதலும் வாயிலுள்ள உணவும் நழுவி வீழ்தலும், கை சோர்தலும் இயற்கை யாதலின் இங்கே தூக்கத்தில் நின்ற பேய்க்கும் அக் குணங்களுண்டாயின.

உயிர் புறம்பேதோன்றுங்கழுது என்பதில், உயிர் தோன்றும் என்னும் சினை வினை கழுது என்னும் முதலொடு சேர்ந்து முடிந்தது தோன்றும்-பெயரெச்சம்- கழுதுந்துயின்றது என்பதில், 'இரவில் தூங்காதவலிய இயற்கையுடைய பேயையுந் தூங்கவைத்தது அவ்விடையாமம்'எனப் பொருள்பட்டுக் கழுது முகத்தான் அந்நள்ளிரவின்வலியதன்மை தோன்றுதலால்,கழுதும் என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்புப் பொருளது; 'குறவருமருளுங்குன்று' என்பது இதற்குதாரணமாம்; இனி, அவ்விரவுங்கழுதும் இழி தன்மையுடையன வாதலின், உம்மையை இழிவு சிறப்புப் பொருளதெனக் கோடலுமொன்று. தான்-அசை. சோரச் சோர - மிகையென்னும் பொருணிலையால் வந்த சொல்லடுக்கு. "அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல், இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்" என்பது விதி.

நள்ளிரவில் தமயந்தி வருந்தினமை கூறப்படுகின்றது.

117. அன்றிலொருகண் டுயின்றொருகண் ணோர்வத்தால்
இன்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ்சொல்-இன்று
தவிர்ந்ததே போலரற்றிச் சாம்புகின்ற போதே
அவிழ்ந்ததே கண்ணீ ரவட்கு.

(இ-ள்.) அன்றில் - அன்றிலென்னும் பறவையானது, ஒருகண் ஒரு கண்ணால், துயின்று - நித்திரைசெய்து, ஒருகண்-மற்றொருகண்ணை, ஆர்வத்தால்-அன்பினாலே, இன்-இனிமையாகிய, துணைமேல்-தன் இணையின்மேல், வைத்து - செலுத்தி, உறங்கும் என்னும் - தூங்கும் என்று சொல்லக்கூடிய, சொல் - வார்த்தையானது, இன்று - இன்றைக்கு, தவிர்ந்ததேபோல்-நீங்கி விட்டதைப்போல, அரற்றி - கதறி, சாம்புகின்றபோது-கூட்டில் தூக்கத்தால்தன் இயற்கையையும் விட்டுப் பிரிந்தொடுங்கும் அந்நள்ளிரவில், அவட்கு-அந்தத் தமயந்திக்கு, கண்ணீர் கண்ணீரானது, அவிழ்ந்தது - விரகவேதனையால் ஒழுகலாயிற்று; [எ-று.]

இணைபிரியாத அன்றிலும் இணைபிரிந்து நித்திரையால் கூட்டில் ஒடுங்கத்தக்க இடையாம நேரத்தில், தமயந்தி கண்ணீர் விட்டுக் கலங்கினாள் என்பது இதன் கருத்து. அன்றில் இராக்காலத்தில் நித்திரை செய்யும்போது கூட இணைபிரியாது ஒருகண்ணைத் தன துணையின்மீது செலுத்தி விழித்துக் கொண்டு மற்றொரு கண்ணை மூடி நித்திரைசெய்யும். இதுபற்றியே 97-ஆம் செய்யுளில், 'அன்றில் துணை யிழப்ப' என்பதற்கு, 'அன்றிலானது இரண்டென்னுந்தன்மை நீங்கிக் கழுத்தொடு கழுத்தைச் சேர்த்துத் துணையோடொன்றாய்க் கூட்டில் சேர 'என்று பொருள் கூறப்பட்டது. இங்ஙனம் அன்றில் இணைபிரியாதிருப்பினும் நடுச்சாமத்தில் தூக்கம் மிகுதிப்படுமாதலின் அச்சமயத்தில் சிலமுறைகூவி இரண்டு கண்களையும் மூடி இணையைப்பிரிந்து சற்றே தூங்கும்; அதுபற்றியே, "அன்றில் ஒருகண் துயின் றொருகண் ஆர்வத்தால் இன்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ் சொல் இன்று தவிர்ந்ததேபோல ரற்றிச் சாம்புகின்றபோது" என்றார் ஆசிரியர்; இதனானே இடையாமத்தின் வன்மை கூறப்பட்டது; இது, மேலைப்பாட்டில் 'கழுதுந்துயின்றது' என்றதால் இடையாமத்துயர்வை விளக்கினதுபோல அமைந்தது. அன்றில்பிரிந்தொடுங்குஞ் சமயத்தில் கூவியது, 'ஒரு கண்ணைத் துணைமேல் வைத் துறங்கும்' என்னுஞ் சொல் தன் பிரிவால் பொய்த்துப் போய் விட்டதென்று கருதி அதன்பொருட்டுக் கதறுவது போன்றிருந்தது. அதனானே, "ஒரு கண் ஆர்வத்தால் இன்றுணைமேல் வைத் துறங்கு மென்னுஞ் சொல் தவிர்ந்ததே போலரற்றி" என்றார் ஆசிரியர் அன்றிலும் இங்ஙனம் கதறித் துணையைப் பிரிந்தொடுங்கக் கண்ட தமயந்திக்கு அந்நள்ளிரவில் முன்னைக் காட்டினும் விரகவேதனை அதிகரித்தமையால் அவள் கண்ணீர்விட்டுக்கலங்கினாளென்க;

அன்றில் என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. போதே, அவிழ்ந்ததே என்பவற்றி னீற்றேகாரங்கள் ஈற்றசைகளாம்.

இதில் தமயந்தி இரவு விடியாதிருத்தற்கு வருந்திப் புலம்பினமை கூறப்படுகின்றது.

118. உடைய மிடுக்கெல்லா மென்மேலே யோச்சி
விடிய மிடுக்கின்மை யாலோ—கொடியன்மேல்

மாகாதல் வைத்ததோ மன்னவர்த மின்னருளோ
வேகாத தென்னோ விரா.

(இ-ள்.) (மேலைச் செய்யுளிற் கூறியவாறு கண்ணீர் விட்டுக் கலங்கிய தமயந்தி இரவு நீட்டித்திருப்பதை நோக்கி) இரா-இந்த இரவானது, உடைய மிடுக்கெல்லாம்-தனக்குரிமையான பலமெல்லாவற்றையும், என்மேலே-தனித்திருப்பவளாகிய என்மீது, ஓச்சி-செலுத்திவிட்டு, விடிய-விடிவதற்கு, மிடுக்கின்மையாலோ-வல்லமை யில்லாமற் போனபடியினாலேயோ, கொடியன் மேல்-(இவ்வாறு நான் தனித்திருந்து கலங்கச்செய்த) கொடியவனாகிய நளன் மீது, மா-சிறந்த, காதல் வைத்ததோ-தான் ஆசையை வைத்துப் பிரிய மனமில்லாமலிருப்பதனாலோ, மன்னவர்தம்-அங்ஙனம் தன்னால் விரும்பப் பட்ட நளபூபதியினுடைய, இன் அருளோ-இனிய கிருபையினாலேயோ, (அதாவது அவர் தன்மீது கிருபையைச் செலுத்திக்கொண்டிருப்பதினாலோ) என்னோ-வேறு எக்காரணத்தாலோ, ஏகாதது நீங்கி விடியாமலிருப்பது; [எ-று.]

இரவு நீங்காமலிருப்பது, தன்பலமுழுவதையும் என்மேற் செலுத்தித் தனக்கு விடிவதற்கு வல்லமையில்லாமற் போனதினாலேயோ, தான் நளன் மீது ஆசை வைத்து அவனை விட்டு நீங்கத் தனக்கு இஷ்டமில்லாமலிருப்பதனாலோ, மன்னவர் அருளைப் பெற்றுக்கொண்டதனாலோ, வேறு எக்காரணத்தாலோ என்பது இதன் கருத்து, தமயந்தி, தனக்கு மிக்க துயரத்தைச் செய்து கொண்டிருந்த இரவை, தன்னைப்போலவே ஒரு பெண்ணெனவும், அதுவும் தன்னைப்போல நளன்மீது காதல்கொண்டிருப்பதாகவும், அதனாலேயே சக்களத்திப்பகைமை கொண்டு தனக்கிடர்செய்வதாகவும், அது காதல் கொண்டிருப்பதற்குநளனும்அதன்மீதுகிருபை செலுத்தியதாகவும் அங்ஙனம்அவன் கிருபையைப் பெற்றுக் கொண்டிருப்பதனாலேயே அது நீங்க இஷ்டமில்லாதிருப்பதாகவும் குறிசது இங்ஙனம் கூறினாளென்க. நளன் தனக்குமாத்திரம் கொடுமை செய்தவனாதலின் அதற்குத் தக அவனை முதலிற் கொடியன், என்றும், இரவின்மேல் இன்னருளைச் செலுத்தியதால் அதற்குத் தகப் பின்னே மன்னவர் என்றும் தமயந்தி கூறினாளென்க. காதன்மிக்குடையார் தம்காதலரை இங்ஙனம் தாழ்த்தியும் உயர்த்தியும் கூறுவது இயற்கை. இரவின் மேல் இவ்வாறு இல்லாத தன்மைகளையேற்றி ஒரு பெண்ணெனக் குறித்துக் கூறியது காதன் மயக்கானிகழ்ந்த தென்க. ஒருவர் ஒரு காரியத்தில் தங்கள் பலமுழுவதையுஞ்செலுத்திவிட்டால் மற்றொரு காரியத்தைச் செய்வதற்கு வலியற்றவராய் விடுவது இயற்கை; அதனாலேயே, 'மிடுக்கெல்லாம் என்மேலே ஓச்சி விடிய மிடுக்கின்மையாலோ' என்றாள் தமயந்தி.

இன்மையாலோ, வைத்ததோ, இன்னருளோ, என்னோ என்பவற்றிலுள்ள ஓகாரங்கள் ஐயப்பொருளில் வந்தன. ஈற்றடியை 'வேகாத தென்னோ விரா' எனப் பாடமோதி, 'இரா வெந்து போகாம லிருப்பதென்னோ' எனப் பொருள் கூறுவாருமுளர்; வேதற்கேது வேது மின்மையானும், இங்கு நீங்

காதிருத்தலே எடுத்துக் கூறுதலே மிகப் பொருத்த முடைத்தாகலானும் அவ்வுரைபொருந்தாமையுணர்க. வைத்ததோ, இன்னருளோ, என்றே என்பவற்றுள் ஆலுருபுகள் தொக்கின்றன. முன்அச்சுப்பிரதிகளில் இச்செயுள் 122-ஆவதாகச் சேர்க்கப்பட்டிருந்த தெனினும் அந்வயத்திற்கும் பொருண் முடிபுக்கும் தக இவண் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

இதிலும், இராவின் கொடுஞ் செயல் குறித்துத்
தமயந்தி புலம்பினமை கூறப்படுகின்றது.

119 ஏழுலகுஞ் சூழிருளா யென்பொருட்டால் வேகின்ற
ஆழ்துயர மேதென் றறிகிலேன்—யாழி
வரையோ வெனுநெடுந்தோண் மன்னாவோ தின்னும்
இரையோ விரவுக் கியான்.

(இ-ள்.) என் பொருட்டால்-என்நிமித்தமாக, ஏழ் உலகும்-ஏழு உலகங்களையும், சூழ் சூழ்கின்ற, இருள் ஆய் இருள் உண்டாகி, எரிகின்ற - எரிகின்ற தனலேற்பட்ட, ஆழ்துயரம்-ஆழ்ந்ததுன்பமானது, ஏதென்று-எதனால் உண்டானதென்று, அறிகிலேன் - நான் அறியேன், யாழி-வலிமையுள்ள, வரை-மலைபோன்ற, நெடுந்தோள் - நீண்டதோள்களையுடைய, மன்னா - நளமகாராசனே!, இன்னும் - இன்னமும், யான்-நான் - இரவுக்கு-இவ்விராத்திரிக்கு, இரையோ- உண்ணும் உணவோ?, ஓ-ஐயோ!, ஓது - நீ கூறுவாயாக, என்னும்-என்று தமயந்தி கூறுவாள்; (எ-று)

ஏழுலகு என்றது சப்த தீவுகளை; ஏழுதீவுகளைக் கொண்டதே இவ்வுலகமாதலின், இதனை ஏழுலகென்றார் ஆசிரியர். இருளின்மிகுதி, தமயந்திக்கே வேதனையைச் செய்துகொண்டிருந்தமையானும், அவ்விருளால் வெப்பம்அதிகரித் திருந்தமையானும், அவள். 'என்பொருட்டால் ஏழுலகுஞ் சூழ் இருளாய் வேகின்ற ஆழ்துயரம்'என்றாள் தமயந்தி பொருட்டாகவே இருள்மிகுந்து எரிச்சலைசெய்து அவளுக்கு வேதனையுண்டாக்கியது எனினும் அஃதின்னது குறித்துச் செய்கிறதென்பது விளங்காமையின் அவள் 'ஏதென்றறிகிலேன்' என்றுங் கூறினளென்க. துன்பமேலிட்டவர் தங்கள் துயரத்தைத் தங்கள் அருமைக்காதலரிடத்தே கூறுதல் இயற்கையாதலின், தமயந்தியும் தன்துயரத்தைத் தனக்கினியவனாகிய நளனை விளித்து அவனிடத்தே கூறினாள். இரவானது தமயந்தியைத் தன் உணவைப் போல விழுங்கிக்கொண்டிருந்தமையின், அவள்,'முன்னர்தான் இவ்விரவின் வாய்ப்பட்டுமீட்பாரின்றித் துயர்கொண்டு வருந்தினோம்;இப்போது நம்காதலனாகிய நளன் இந்நகரில்வந்திருந்துங்கூட நாம் ஏன் வருந்தவேண்டும்; அவனிடம் முறையிட்டால் விரைவில் அவன் நம்துயரத்தை நீக்குவன்' என்பது குறித்தே இங்ஙனம் நளனை விளித்து, "மன்னா! யான் இன்னும் இரவுக்கிரையோ ஓது" என்று தன்குறையைக் கூறி முறையிட்டாளென்க. "இன்னும்யான் இரவுக்கிரையோ" என்

றதனால்,'நீ இங்கு வந்திருந்துங்கூட நான் இரவுக்கிரையாகலாமா? விரைவில் வந்து என்னை விடுதலைசெய்' என்பது தானே அமையும்.

சூழ் இருள் - வினைத்தொகை. வேகின்றதுயரம் - மூன்றும்வேற்றுமை புருபும் பயனும் உடன்றொக்கதொகை;இதில் வேகின்ற என்னும் பெயரெச்சம்,துயரம்என்னும் காரியப்பெயரைக்கொண்டு முடிந்தது, அம்புபட்டபுண், சங்கு சுட்ட சுண்ணும்பு, அரிசிவெந்த சோறு என்பவற்றிற்போல. 'அறிகிலேன்' என்பதில், கில்-என்பது ஆற்றற் பொருண்மையை உணர்த்தும் ஒருவகை இடைநிலை; இம்முற்றில் எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது. 'பாழி வரை நெடுந்தோண் மன்னு' இன்னும் யான் இரவுக்கிரையோ ஓ ஓது! எனக் கூட்டுக. மூன்றுமடியி லுள்ள ஓ-இரங்குதற் பொருளில் வந்தது. 'இரையோ' என்பதிலுள்ள ஓகாரம் வினுப்பொருளது. இனி, "யாழி வரையோ என்னும் நெடுந்தோள் மன்னு? ஓ தின்னும் இரையோ இரவுக்கு யான்" எனக்கொண்டு, "வலியமலையோ வென்று சொல்லக்கூடிய நெடுந்தோள் மன்னனே! ஐயோ! நான் இரவுக்குத் தின்னும் இரையோ" என்று பொருளுரைத்தலு மொன்று. இங்ஙன முரைத்தல்; முன்பின்வரும் செய்யுட்களின் பொருண் முடிபிற்குப் பொருந்தா திருத்தலின் சிறப்பன்றென்க.

இதில் ஊதைக் காற்று வந்தமை கூறப்படுகின்றது

120. கருவிக்கு நீங்காத காரிருள்வாய்க் கங்குல்
உருவிப் புகுந்ததா லூதை--பருகிக்கார்
வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை
உண்டுபோ கட்ட வுயிர்க்கு.

(இ-ள்)கருவிக்கும்-அறுத்துப் பிளக்கும் ஆயுதத்தாலும், நீங்காத-நீக்கப்படாத, கார் கரிய, இருள்வாய் இருளிலே, கார்வண்டு-கரியவண்டானது, பருகி-தேனைக்குடித்து விட்டு, போகட்ட-போட்டுவிட்ட, மலர்போல்-மலரைப்போல, மருள்-மயக்கத்தைச் செய்கின்ற, மாலை-அந்திப்பொழுதானது, உண்டு-வல்லமை யெல்லாவற்றையும் உட்கொண்டு, போகட்ட-போட்டுவிட்ட, உயிர்க்கு-தமயந்தியின் உயிரை மேலும் உண்பதற்கு, ஊதை, குளிர்காற்றானது, கங்குல்-இராத்திரியை, உருவி-நடுவே பிளந்து கொண்டு, புகுந்தது- (தமயந்தி இருக்குமிடத்தில்) வந்து நுழைந்தது; [எ.று.]

மாலைப்பொழுதில் வாட்டமடைந்திருந்த தமயந்தியின் உயிரை வருத்துதற்கு மிகுந்த இருளிலே குளிர் காற்றும் வந்தது என்பது இதன் கருத்து. இருள், எதனுலும் நீக்கக்கூடாததாய் மிகவுஞ்செறிந்திருந்ததால் அதனைக் கருவிக்கும் நீங்காதகாரிருள்'என்றார்புலவர். இத்தகைய இருள் மிகுந்த அந்த இரவையும்பிளந்துகொண்டு ஊதைபிரவேசித்தமையினாலே 'கங்குல் உருவிப் புகுந்ததால் ஊதை'என்றுங்கூறினர். இதனால், இவ்வூதையானது; அக்காரி

ருளினும்மிக்கவன்மையுடையதென்பது பெறப்படும். வண்டு, தேனைப்பருகி விட்டுச்சென்ற மலரானது சாரமற்றதாயிருக்கும்;அதைப்போல, மாலைக்காலமானது வன்மையையெல்லாம் கவர்ந்து விட்டபடியால் தமயந்தியின் உயிரானது எவ்வித வலிமையு மின்றி நிசாரமா யிருந்தது; இப்படி நிசாரமாயிருந்த உயிரை மேலும் வருத்துதற்கு ஊதைக் காற்று வந்தது.இது குறித்தே ஆசிரியர்,"கார்வண்டு பருகிப் போகட்ட மலர்போன் மருண்மாலை உண்டுபோகட்ட வுயிர்க்கு ஊதை புகுந்தது" என்றார். ஊதைகருவிக்கும் நீங்காத காரிருள் வாய்க் கங்குல் உருவிப்புகுந்த வன்மை யுடையதாதலின் அவ்விருளைக்காட்டினும் அதிகமாகத் தமயந்தியை வருத்தும் இயல்பினையுடையதாம். ஆதலின் இவ்வூதை புகுந்தமாத்திரத்தில்தமயந்தி முன்னினும்அதிகமாகவருத்தமுற்றாளென்க. ஊதைக் காற்றுக் கூடல் விருப்பை அதிகரிக்கச்செய்யும்; அதனால் ஒருதலைக் காம முடையவர்க்குத் துன்பமேலிடும்; இங்ஙனம் ஒருதலைக் காம முடையார்க்குக் குளிர்காற்று முதலியன துயர் செய்யு மென்பதை,

"மூத்துங் களபமுந் தண்பனி நீரு முயங்குமலர்த்
தொத்துங் குளிரியுந் தூய்மலர்ப் பாயலுஞ் சூழ்ந்துபுறங்
கத்துங் கடலுங் கதலியு மாலியுங் கங்குலுமிப்
பத்தும் பெரும்பகை யாய்விட்ட வாமொரு பைந்தொடிக்கே"

என்னும் இரத்தினச் சுருக்கச் செய்யுளானுணர்க.

கருவிக்கும் என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. கருவிக்கு-நான்காம் வேற்றுமை விரி; இஃதாற்றற் பொருண்மையில் வந்தது; இது "நான்காவதற்குரு பாகுங்குவ்வே, கொடைபகைநேர்ச்சிதகவதுவாதல், பொருட்டு முறை யாதியினிதற்கிதெனல் பொருளே" என்ற (நன். பெ. சூ. ௨௧)ல்'ஆதி' என்றதிலடங்கும். வாய்-எழனுருபு. புகுந்ததால் என்பதில் ஆல் அசை. போகட்ட என்பதற்குப் 'போகக்கெடுத்த' என்பது பொருளாம். கெடுத்த என்பது விட்ட, அல்லது இழந்த, அல்லது நீங்கிய என்ற பொருள்களில்அமைந்தது; ஆகவே, போகக் கெடுத்த என்பதற்குப் போக விட்ட என்பது திரண்ட பொருளாம். போக அட்ட என்பது அகரந் தொகுத்தலாய்ப் போகட்ட என்றாயது; இதில் போக அடு என்ற இரண்டுஞ் சேர்ந்து ஒரு சொன்னீர்மைத்தாய்ப் போகடு என்று பகுதியாம்; இதில் பெயரெச்ச விகுதியாகிய அ-வர, டகர வொற்றிரட்டிப் போகட்ட என்றாயது; இச்சொல்இக்காலத்தில் போட்ட என வழங்குகின்றது; போகட்டஎன்பதுபண்டைய வழக்கு இதனைச் சீவகசிந்தாமணி951.ஆம் செய்யுளுரையில் நச்சினார்க்கினியர், 'போகட்டவுடம்பையும்' என வரைந்திருத்தலானும்,ஷை நூல்1365-ஆம்செய்யுளில் திருத்தக்க தேவர் 'போகடாய்' எனப் பிரயோகித் திருப்பதனாலும்,ஷை நூல் 2177: ஆம் செய்யுளில் 'போகடாத' எனக் கூறியிருப்பதனானு முணர்க. உயிர்க்கு-என்பது நான்காம் வேற்றுமைப் பொருட்டுப்பொருளது. புகுந்தால் என்பதிலுள்ள ஆல்-அசை. உயிர்க்கு-உயிரை உண்பதற்கு; இசை எச்சம்.

அங்ஙனம் ஊதைபுகுந்தவுடன் தமயந்தி
வருந்தினமை இதிற் கூறப்படுகிறது.

121. எழுந்திருக்கு மேமாந்து பூமாந் தவிசின்
விழுந்திருக்குந் தன்னுடம்பை மீளச்—செழுந்தரளத்
தூணோடு சேர்க்குந் துணையேது மில்லாதே
நாணோடு நின்றழிவா ணைந்து.

(இ-ள்.) (மேற் கூறியபடி ஊதைக் காற்று வந்தவுடனே விரகவேதனை மிகுந்து வருந்திய தமயந்தி) பூ-அழகிய, மாந்தவிசின்-மாந்தளிர் பரப்பிய ஆசனத்தினின்றும், ஏமாந்து-விரும்பி, எழுந்திருக்கும்-(நளனையே இடைவிடாது தியானித்துக்கொண்டிருந்தபடியால் அந்த எண்ண முதிர்ச்சியே நளன் வடிவமாக எதிரே தோன்றி உருவெளித் தோற்றமாக நின்றபடியால் அவன் மெய்யாகவந்துவிட்டானென்றே நினைத்துச்சந்தோஷித்து அவனை எதிர்கொண்டழைப்பதற்காக) எழுந்திருப்பாள், (அங்ஙனம் எழுந்து போன மாத்திரத்தில் அவ்வுருவம் இல்லாமற் போகவேமனம்வாடி) விழுந்திருக்கும்-வீழ்ந்து கிடப்பாள், மீள-திரும்பவும், (எழுந்து) தன்உடம்பை-தன்னுடைய தேகத்தை, (அதுவிரகாக்கினியால் நெருப்பாயிருந்தமையால் அவ்வெப்பந் தணியுமாறு) செழும்-செழுமையாகிய, தரளத் தூணோடு முத்துப் பதிப்பிக்கப்பட்ட ஸ்தம்பத்தோடு, சேர்க்கும்-சேர்ப்பாள், ஏதும் துணையில்லாது-ஒரு துணையுமில்லாமல், நைந்துநின்று-மனம்வருந்தி நின்று, நாணோடு-(தான் அச்சமயத்தில் செய்யும் செய்கைகளெல்லாம் தனக்கு வெட்கத்தை யுண்டாக்கியபடியால் அந்த) வெட்கத்தினாலும், அழிவாள்-வாடுபவளாயினாள்; [எ-று]

ஊதைக்காற்றுவந்தவுடனே விரகவேதனை அதிகப்பட அதிகப்படத் தமயந்திக்கு நளன் மீது அதிக சிந்தனை யுண்டாயிற்று; அச்சிந்தனையால் நளனுடைய உருவெளித் தோற்றம் எதிர்ப்பட்டது; அதனைக் கண்டவுடனே அவள் நளனே வந்து விட்டானென்று நினைத்து, 'ஆசை வெட்கமறியாது' என்றதற்கிணங்கத் தானேபோய் அவனை எதிர்கொண்டழைப்பதற் கெழுந்தாள். உடனே அத் தோற்றம் காணாமற் போகவே, தன் புத்தி மயக்கத்தினாலேயே அச் செய்கை நிகழ்ந்ததெனக் கருதிச் சோபமுற்றுத் தவிசில் வீழ்ந்துபடுத்தாள். அங்ஙனம் மாந்தளிர்த்தவிசிற்படுத்தும் விரகாக்கினியால் உடல்வெதும்பியபடியால் அவ்வெப்பத்தைச்சகிக்காமல் அதனைத்தணித்துக் கொள்ளுமாறு மீண்டும் எழுந்து முத்துக்கள் பதிக்கப்பட்ட தூணில் தன் உடம்பைசசேர்த்தாள். இத் துயரங்களெல்லாம்நீங்குமாறு அங்கே தனக்குத் தேறுதல் சொல்வாரொருவருமில்லாமையினாலே தனிப்பட்டு வருந்தினாள். மதிமயக்கத்தால் நடந்த இசசெய்கைகளெல்லாம் தனக்கு மிக்கமானக்கேட்டை உண்டாக்கியபடியால்வெட்கத்தையும்அடைந்தாள். விரகாக்கினி மிகுந்துள்ளவர்க்கு அதனைச்சாந்தப்படுத்தும்பொருட்டுத் தவிசு, சயனம் முதலியவற்றில்மாந்தழிர், வேறு குளிர்ந்த மலர்கள் முதலியவற்றைப் பரப்பிவைத்தல்

வழக்கம்; ஆதலின், 'மாந்தவிசு' என்றார் ஆசிரியர். அணிகளில் அழகு செய்யும் பொருட்டு முத்துக்களைப் பதித்துவைத்தல் இயற்கை. அவ்வாறு முத்துக்கள் பதிக்கப்பட்ட தூணே இங்கு 'செழுந்தரளத் தூண்' என்றது. தமயந்தியோடு அத்தருணம் பொருந்தி நின்றது நாணேயன்றி வேறொன்று மின்மையால் 'துணையேது மில்லாது நாணோடு நின்றழிவாள்' என்றார் ஆசிரியர்.

எழுந்திருக்கும், விழுந்திருக்கும் என்பவற்றுள் இருக்கும் என்பது துணைவினை. இல்லாதே என்பதில் ஏ. அசை. நாணோடு என்பதில் ஓடுருபு கருவிப்பொருளில் மயங்கி வந்தது.

இதுவுமது.

122. விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருள்போற் சோரும்—புரிகுழலைத்
தாங்குந் தளருந் தழலே நெடிதுயிர்க்கும்
ஏங்குந் துயரோ டிருந்து.

[இ-ள்] [இன்னும் அத் தமயந்தி] விரிகின்ற-பரந்திருக்கின்ற, மெல் அமளி-மெல்லிய படுக்கையில், வெள்-வெண்மையாகிய, நிலவின் மீது-சந்திரிகையின் மேல், சொரிகின்ற-பொழிகின்ற, கார் இருள் போல்-கரிய இருளைப் போல; சோரும்-[தன் சோகத்தால் தளர்ந்து] அவிழ்ந்து வீழ்கின்ற, புரி-சுருண்ட, குழலை-கூந்தலை, தாங்கும்-கையினாலே ஏந்துவாள், தளரும் [அப்படி யேந்துதலினாலே அச்சுமையைப் பொறுக்க லாற்றாது உடல்] தள்ளாடுவாள், நெடிது-நீட்சியாகிய, தழலே - நெருப்பையே, உயிர்க்கும்- பெருமூசசாக வெளிப்படுத்துவாள், துயரோடு இருந்து-இவர்றாலுண்டாகுந் துன்பத்துடனே யிருந்து, ஏங்கும்-அழுவாள்; [எ-று.]

விரக வேதனை யுடையார்க்குக் குழல் சோர்தலும், உடல் தள்ளாடுதலும், பெருமூச்சு விடுதலும், கண் கலங்கி யழுதலும் இயற்கை, ஆதலின், தமயந்திக்கு முடித்த கூந்தல் அவிழ்ந்து அமளியில் வீழ்ந்தது; அதனைச் சேர்த்துமுடிக்கும் ஆற்றல் அச்சமயம் அவளிடத்தின்மையால் அவள், அங்ஙனம் சோர்ந்த குழலைக்கரத்தாலேந்தினாள்; அசசமயம் அவளுடைய உடல் மிகவும்மெலிவுற்றிருந்ததாதலின், அக்கூந்தலைக்கரத்தால் தாங்கியபொழுது அச்சுமையைத் தாங்கமாட்டாது அவள் தளர்ந்தாள்; அவளுடைய தேகத்தினுள்ளே விரகாக்கினியால் வெம்மையே மிகுந்திருக்குமாதலின், அவளால் விடப்படும் பெருமூச்சும் நெருப்பு மயமாகவே யிருந்தது. இங்ஙனம் தேகத்தளர்ச்சியும், உள் வெப்பும் அதிகரித்தமையால் அவளுக்குத் துயரம் அதிகரித்தது; அதனால் அவள் கண்கலங்கி அழவும் ஆரம்பித்தாள். அவளுடைய அமளியில்வெண்டுகில் விரிக்கப்பட்டிருந்தது. அதில்கரியகூந்தல், அவிழ்ந்து வீழவே அத்தோற்றமானது வெள்ளிய சந்திரிகையின் மீது காரிருள்

சொரிந்த தோற்றம் போன்றிருந்தது. அவள் குழலைக் கரத்தால் தாங்கின மாத்திரத்திலேயே அவளுக்குத் தேகத் தளர்ச்சியுண்டாகு மாதலின், 'தாங்குந்தளரும்' என்றார் புலவர். மூச்சு நெருப்பாகவே யிருந்ததென்பதுதோன்ற 'தழலே நெடிதுயிர்க்கும்' என்றார்.

மெல், வெள் என்பன மை யீறு கெட்ட பண்புப் பெயர்கள். நிலவின் என்பதில் இன்-சாரியை. மீது-ஏழாம் வேற்றுமைச்சொல்லுருபு; இதிலுள்ள ஏகாரம்-அசை. கார், கருமை யென்னும் பண்புப்பெயர் விகாரம். புரிகுழல்-வினைத்தொகை. தழலே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப்பொருளது. நெடிது-நெடுமை யென்னும் பண்படியிற் பிறந்த வினையுரிச் சொல்; இஃதிங்கே வினையை விசேடித்து வந்தமையின் இப்பெயர் பெற்றது; இதனைக் குறிப்பு முற்றென்றும், அதுவே இங்ஙனம் எச்சமாயிற்றென்றும் கொள்ளினும் அமையும்; இங்ஙனங் கொள்ளுமிடத்தும் இது வினையுரிச்சொல்லே யாகும். துயரோடு என்பதிலுள்ள ஓடு உருபு உடனிகழ்ச்சிப்பொருளது. துயர்வேறு, தமயந்தி வேறாய் அவள் அதனோடு கூடியிருந்தமையால் இங்ஙனம் உடனிகழ்சிப் பொருளதாகவே கொள்ளல் சிறப்புடைத்தாம். இனித் துயர் தனக்குள்ளே நிகழ்வதாதலின், அதற்கும் அவளுக்கும் நீக்கத்தன்மை யின்றெனக் கொண்டு, அவ்வுருபை விசேஷணப் பொருளதெனக் கொள்ளினும் அமையும்; விசேஷணமாவது குணத்தைவிளக்குவது; இங்ஙனங் கொள்ளும்போது 'துயரோடிருந்து' என்பதற்குத் 'துமருள்ளவளா யிருந்து' என்பது பொருள்.

இதுவுமது.

123. மயங்குந் தெளியு மனநடுங்கும் வெய்துற்
றுயங்கும் வறிதே யுலாவும்—வயங்கிழைபோய்ச்
சோருந் துயிலுந் துயிலாக் கருநெடுங்கண்
நீருங் கடைசோர நின்று.

[இ-ள்.] [இன்னும் அத்தமயந்தி] மயங்கும் மயக்கத்தை அடைவாள், தெளியும்-தெளிவாள், மனம் நடுங்கும்-மனங்கலங்குவாள், வெய்து உற்று-வெப்பம் பொருந்தி, உயங்கும்-வருந்துவாள், வறிதே-ஒரு காரணமுமில்லாமல் சும்மா, உலாவும்-அங்குமிங்கும் திரிவாள், வயங்கு - பிரகாசிக்கின்ற, இழை-ஆபரணம், போய்-போக, [அதாவது கழன்று விழ] சோரும்-தளர்ச்சியடைவாள், துயிலா-நித்திரை கொள்ளாத, கரு-கரிய, நெடு-நீண்ட, கண்-கண்களினின்று வடியும், நீர்-நீரானது, கடை-அக் கண்களின் நுனியில், சோர-வடிய, நின்று-நின்றுகொண்டே, துயிலும்-சோப நித்திரைகொள்வாள்.

தமயந்தி முதலில், நளனுடைய சேர்க்கை தனக்குக் கிடைக்கவில்லையே என்ற ஏக்கத்தை யடைந்ததால் மயங்கினாள்; பின்னர் அவன் தன்னுடைய சுயம்வரத்திற்கு வந்திருப்பதால் தன்னை மணந்து கொள்வானென்று தெளிவடைந்தாள்; அவ்வாறடைந்தும், அவன் தேவர் பொருட்டுத் தன்னிடம்

தூது வந்தமையால் "அவர் தேவர்க்குத் தூதுவராய் நம்மிடம் வந்தாரே; நம் மீது விருப்பமுடையவரா யிருந்தால் அங்ஙனம் வருவாரா? இப்படி அவர் தூது வந்தமையால் நம்மீது விருப்பமில்லாதவரா யிருந்தாலு மிருத்தல் கூடும்; ஆதலால் அவர் நம்மை மணந்து கொள்வது அவ்வளவு உறுதியில்லை" என்று உடனே அவளுக்கோர் சந்தேக முதித்தது; அதனால் அவள் மீண்டும் மனநடுக்க மெய்தினள்; அந்நடுக்கத்தால் அவளுடைய மேனி வெதும்பிற்று; அதனால், அவள் வருத்தமடைந்தாள். அங்ஙனம் வருத்தம் மிகவே இருக்கவும் படுக்கவும் அவளால் இயலாமையால் ஒரு காரியமுமில்லாமல் வீணே அங்கும் மிங்கும் உலாவத் தலைப்பட்டாள்; இவ்வாறு திரிந்துதிரிந்து மேனி யிளைத்துப் போயினமையால் அவள் தேகத்திலணியப்பட்டிருந்த ஆபரணம் தானே கழன்றுவீழ்ந்தது; அங்ஙனம் உடல் மெலிந்து திரிய அவளுக்கு நித்திரையும் வராமற் போயிற்று; அப்படி அவள் நித்திரையு மற்றுச்சோர்ந்து வருந்தியதால் அவளுடைய கண்களில் நீர் பெருகி அவற்றின் ஓரங்களில்வடிந்தது. இவ்வாறு சோபம் அதிகரிக்கவே உலாவித்திரிந்த அவள், காலோய்ந்து ஓரிடத்திற் சோபமுற்று நின்றாள்; அச்சோபத்தால் கண்கள் சோர்ந்து மூடிக் கொண்டன. இவ்விதம் அவள் கண்களை மூடிக்கொண்டு நின்ற நிலை நித்திரை செய்வது போன்றிருந்தது; இதையே ஆசிரியர் 'சோர நின்று துயிலும்' என்றார். இது சோபத்தால் நிகழும் ஒருவிதக் கண்மயக்கம்; சோபநித்திரை யென்று சொல்லப்படும்; ஆனால் இது நித்திரை யன்று; அறிதுயிலாய் நிகழ்வது; மிக்க மன வேதனையுடையார்க்கு இச செயல்களெல்லாம் நிகழ்தல் இயற்கை.

மன நடுங்கும் என்பதில் சினைவினை முதலொடு முடிந்தது. வெய்து-வெம்மை யென்னும் பண்படியிற் பிறந்த பெயர்; இதில் வெம்மை-பகுதி; து-பகுதிப் பொருள் விகுதி; பண்புப்பகுதியின் மை விகுதி கெட்டு முன்னின்ற மகரமெய்யகரமெய்யாகத் திரிந்தது. போகவென்னும்செயவனெச்சம்,போய் எனச் செய்தனெச்சமாகத் திரிந்துவந்தது. கரு, நெடு என்பன கருமை, நெடுமைஎன்னும் பண்படிகளின்மையீறுகெட்ட விகாரங்கள் நீரும் என்பதிலுள்ள உம்மை அசைநிறைப் பொருளது கண்ணீர்-நீக்கப்பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமைத்தொகை; கண்களினின்றும் வெளிப்படும் நீர்என விரியும்; இனி இதனைப்பொருட்பிறிதின்கிழமையில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகையாகக் கொள்ளினு மமையும்; அங்ஙனங் கொள்ளின், கண்களினுடைய நீர் என விரித்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

இதில், இரவில் வருந்தும் விரகிகளின்
உயிர்க்கும் காப்புண்டோ என்பது கூறப்படுகின்றது.

124. விழுது படத்திணிந்த வீங்கிருள்வாய்ப் பட்டுக்
கழுதும் வழிதேடுங் கங்குற்-பொழுதிடையே
நீருயிர்க்குங் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்தம்
ஆருயிர்க்கு முண்டோ அரண்.

(இ-ள்) விழுதுபட-விழுதுஉண்டாக, திணிந்த-நெருங்கியதும், வீங்கு-அதிகரித்ததுமாகிய, இருள்வாய்-இருட்டினிடத்திலே, பட்டு-அகப்பட்டு, கழுதும்-பேயும், (வழிதெரியாமல்மயங்கி) வழி தேடும்-செல்லும் மார்க்கத்தை ஆராய்ந்து தேடும்படியான, கங்குல் பொழுதிடை-இராக்காலத்தில், நீர் உயிர்க்கும் - நீரைச் சொரிகின்ற, கண்ணோடு-கண்களுடனே, நெஞ்சு உருகி மனம் கரைந்து, வீழ்வார் தம்-படுக்கையில் வீழ்ந்து வருந்துகின்றவர்களாகிய விரகிகளுடைய, ஆருயிர்க்கும்-அரிய உயிருக்கும், அரண் காவல், உண்டோ-உளதோ; (இல்லை என்றபடி) [எ-று.]

விரகதாபத்தையுடையார்க்கு அவ்விரகத்தை அதிகப்படுத்தி மிக்கதுயரத்தைச் செய்யக்கூடிய இருள் மிகுந்த இரவில், அவ்வேதனையால் நீரொழுகுங் கண்ணோடு மனங் கரைந்து வீழ்ந்து வருந்துவாருடைய அரிய உயிருக்குக் காவலில்லையென்பது இதன்கருத்து. இதுகவியின் கூற்று. இது வெளிப்படுத்தக் கூடாமல் மனத்தேநிகழ்ந்து ஒருதலைக்காமமுடையாரை வருத்தும் இயல்பினையுடைய துயரமாதலின், இத்துயரத்திற் குட்பட்டார் அடுத்திருப்போரிடத்தும் இதனைக் கூறுமல் நினைத்து நினைத்து வருந்துவர்; சில சமயம் அவர், உயிர்ப் பாங்கியர்க்கு உண்மை கூறி அறத்தொடு நிற்றல் அகப்பொருட்டுறைகளில் ஒன்றெனினும், இராக் காலத்தில் தாமாத்திரம் துயரத்தால் நித்திரையிழந்திருக்க, மற்றையர் அயர்ந்து நித்திரை செய்வார்களாதலின் அஃதுமியலாமற் போம்; ஆதலின் அவர், தனித்து வருந்தி உயிர் சோருதல் இயற்கை. இதுபற்றியே புலவர், 'நெஞ்சுருகி வீழ்வார் தம் ஆருயிர்க்குமுண்டோஅரண்' என்றார். விழுது-ஆலவிருக்ஷம் முதலியவற்றில் திரள்திரளாக இறங்கும் வீழ்; இருட்டொகுதியும் ஆகாயத்திலிருந்து இவ்வகை விழுது இறங்கினது போலவேயிருக்குமாதலின், 'விழுது படத்திணிந்த வீங்கிருள்', என்றார். விழுதுபட என்பதற்கு விழுதின் தன்மையுண்டாக எனப் பொருள் விரிக்க வேண்டும். திணிதல்-நெருங்குதல் வீங்குதல்-அதிகரித்தல். பேய், இருளில் சஞ்சரிக்கக் கூடியது; அங்ஙனமிருப்ப அக்கழுதும் வழிதேடும் கங்குல் என்றதனால் அவ்விருளின் மிகுதிப்பாடு விளங்கிற்று.

திணிந்த-பெயரெச்சம். வீங்கிருள்-வினைத்தொகை. வாய்-ஏழாம்வேற்றுமைச் சொல்லுருபு. இடை-ஏழனுருபு; இதிலுள்ள ஏகாரம்-அசை. கண்ணோடு வீழ்வார்-மூன்றும் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர். தம்-சாரியை. வீழ்வார்தம் ஆருயிர் வலிமையிற் குறைவு பட்டதாதலின், ஆருயிர்க்கும் என்றதிலுள்ள உம்மை இழிவு சிறப்புப் பொருளது. உண்டோ என்பதின் ஓகாரம் இல்லை என எதிர் மறுத்தற் பொருளது.

இதில், அவ்விரவு நீங்கியமை கூறப்படுகின்றது.

125. பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமுத மூம்முகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப—வாசம்

அலர்ந்ததேங் கோதையா ளாழ்துயரத் தோடு
புலர்ந்ததே யற்றைப் பொழுது.

(இ-ள்.) பூசுரர்தம் - பிராமணர்களுடைய, கைம்மலரும் - கரங்களாகிய மலர்களும், பூங்குமுதம்-அழகிய ஆம்பல்மலர்களும், முகிழ்ப்ப-குவியவும், காசினியும்-பூமியிலுள்ளவர்களும், தாமரையும்-தாமரைமலர்களும், கண்விழிப்ப-கண்திறக்கவும், (அதாவது மலரவும்) வாசம்-வாசனை, அலர்ந்த-பரவிய, தேம்-தேன்நிறைந்த, கோதையாள்-மாலையை அணிந்த தமயந்தியின், ஆழ் துயரத்தோடு-ஆழ்ந்த துன்பத்துடனே, அற்றைப்பொழுது-அன்றைய இராக்காலம், புலர்ந்தது-நீங்கிற்று; [எ-று.]

விடியற்காலத்தில் பிராமணர்கள் கைகுவித்துசூரியனை வணங்கிஅனுஷ்டானஞ்செய்வார்கள்; அல்லிமலர்கள் குவிந்துவிடும்; உலகத்தாரெல்லோரும் நித்திரை தெளிந்தெழுவார்கள்; தாமரைமலர்கள் மலரும். ஆதலின், புலவர், "பூசுரர்கைம்மலரும்,குமுதமும்முகிழ்ப்ப,காசினியுந்தாமரையுங்கண்விழிப்ப, புலர்ந்தது அற்றைப் பொழுது" என்றார். விரகிகளுக்கு விரகவேதனை இரவில் அதிகப்பட்டிருந்து அவ்விரவு நீங்கும்போது தானும் நீங்கிவிடும்; இராக்காலத்தில்அவர்கள்,வேறுதுணையும்வேறுசெய்கைகளின்நிகழ்ச்சியும்இன்றித் தனித்திருப்பதால் அவர்களின் மனத்திலுள்ள காதலர் விருப்பமானது அதிகரித்துஅவர்களுக்கு வேதனையைச் செய்யும்; பகற்காலத்தில் அவர்களின்சமீபத்தில் பலர் சஞ்சரிப்பும் பலசெய்கைகளின்நிகழ்ச்சியும் மிகுந்துண்டாமாதலின், அவர்களது மனம் பல விஷயங்களிலும் பிரிந்து செல்லும்; அப்போது அம்மனத்தில் திடமாகப் பற்றப் பட்டிருந்த காதலானதுசிறிது தணியும்;அதனால் அவர்களுக்குத் துயரமும் குறைந்து விடும்; இதுவே விடியற்காலம் வந்தவுடன் துயரம் நீங்குவதற்குக்காரணமாம். ஆதலின், 'கோதையாள் ஆழ் துயரத்தோடு அற்றைப்பொழுதுபுலர்ந்தது' என்றுங்கூறினர் ஆசிரியர் அற்றை-அன்று, பொழுது-நேரம், இவ்விரண்டுஞ் சேர்ந்து அன்றைக்காலம் என்றாகும்; எனினும், இங்கு இரவின் நிகழ்ச்சியே கூறப்பட்டு வந்தமையின், காலம் என்பது இராப்பொழுதிற்குக் கொள்ளப்பட்டது; இனி, 'அற்றைப்பொழுது கழிந்தது' என்பதற்குப் 'பகலும் இரவும் கொண்ட அந்த நாளின் நேரம் நீங்கிற்று' எனப் பொருள் கூறினும் அமையும். எவ்வாறு கூறினும், 'அற்றைப் பொழுது கழிந்தது' என்றதனால் 'மறுநாள் உதயகாலம்வந்தது' என்பதுபெறப்படும். புலர்தல்-கெடுதல்; அஃதிங்கே நீங்குதற் பொருளில் வந்தது.

பூசுரர்-பூமிதேவர்கள்; பூ-பூமி, சுரர்-தேவர், பிராமணர்கள் உலகினுக்குத்தேவர்போன்று விளங்குபவராதலின், இப்பெயர் பெற்றனரென்க.

"முருகார் மலர்த்தாம முடியோனை யடியார் முயற்சித் திறம்
திருகாமல் விளைவிக்கு மதயானை வதனச் செழுங்குன்றினைப்
பருகூதன் முதலாய முப்பத்து முக்கோடி புத்தேளிரும்
ஒருகோடி பூதேவ ருங்கை தொழுங்கோலை யுறவுன்னுவாம்"

என்ற வில்லி பாரதச் செய்யுளில் பிராமணர்களைப் பூதேவர் எனக் கூறப் பட்டிருத்தலை உணர்க. தம் சாரியை. குமுதமும் முகிழ்ப்ப என்பதில் மகரம் விரித்தல்விகாரம். கைம்மலர்-இருபெய ரொட்டுப்பண்புத்தொகை; இஃதணி வகைகளுள் உருவக வணியெனப்படும்; உருவக வணியாவது, "உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித் தொன்றென மாட்டினஃ துருவகமாகும்" என்ற தண்டியலங்காரம் பொருளணியியற் சூத்திரப்படி, உவமையாம்பொரு ளையும், உவமிக்கப் படும் பொருளையும் வேறுபா டொழிவித்து, ஒன்றென்ப தோருள்ளுணர்வு தோன்ற வொற்றுமை கொளுத்துதலாம். கையும் மலரும் இங்ஙனமே அமைதல்காண்க; இவ்வகை உருவகத்துள்ளும் இது தொகையுரு வகமெனப்படும். தொகையுருவகமாவது, ஆகியவென்னும் சொற்றொகுத்துக் கூறுதலாம்;இதில்அங்ஙனமேஅச்சொல்தொகுத்திருத்தல்காண்க. இதுவிரிக் குங்கால்கையாகியமலர்எனவிரியும் குமுதம்,தாமரை முதலாகுபெயர்கள். காசினி-இடவாகுபெயர். கண்விழித்தல்-மலர்தல்; காசினியோர் மலர்தலாவது, தூக்கத்தால் வாடியிருந்தமை யொழித்து முகமலர்ச்சி யடைதலாம். அன்று பொழுதென்பது ஐசசாரியை பெற்று அன்றைப்பொழுதென்றாய் வலித்தல் விகாரத்தால் அற்றைப்பொழுதென்றாயது. இச செய்யுளில், "பூசுரர் தங்கைம் மலரும்பூங்குமுதமும்முகிழ்ப்ப"என்றது புணர்நிலையணியாம்;புணர்நிலையணி யாவது "வினைபண்பென வினையிருபொருட் கொன்றே, புணர மொழிவது புணர்நிலையாகும்" என்ற தண்டியலங்காரம் பொருளணியியல் சூத்திரப்படி வினையானும் பண்பானும் இரண்டுபொருளுக்கொன்றேபொருந்தச்சொல்லு தலாம்; கைம்மலர்குமுதம்ஆகியஇரண்டினும்குவிதலாகியஒரேவினை அமைதல் காண்க;இங்ஙனம்அமைதலின், வினைப்புணர்நிலை, பண்புப்புணர்நிலை என்னும் இரண்டுவகைகளுள் இது வினைப்புணர் நிலை யணியென்றுஞ் சொல்லப்படும். "காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப" என்பதும் இவ்வணியைச் சார்ந்ததே யாம். எனினும் இவ்விரண்டற்கும் வேறுபாடுண்டு; முன்னையது முகிழ்த்தற் பொருளில்வந்தது;பின்னதுமலர்தற்பொருளில்வந்தது; இன்னும் இவைஒப்பு மைக் கூட்ட வணியிலும் அடக்கப்படும். ஒப்புமைக்கூட்டமாவது, "கருதிய குணத்தின் மிகுபொருளுடன் வைத், தொருபொரு ளுரைப்ப தொப்புமைக் கூட்டம்"என்றதண்டியலங்காரப் பொருளணியியற்சூத்திரப்படி, ஒருபொரு ளைச் சொல்லுமிடத்துத் தான்கருதிய குணமுதலாயினவற்றின் மிக்க பொரு ளைக் கூடவைத்துச்சொல்லுதலாம்;இவற்றுள்குமுதத்தோடு, உயர்ந்தபொரு ளாகிய பூசுரர் கைம்மலரும், தாமரையோடு உயர்ந்தபொருளாகிய காசினியும் ஒப்புமையாக எடுத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. இந்த ஒப்புமைக் கூட்ட மும் புகழொப்புமைக் கூட்டமெனவும், பழிப்பொப்புமைக் கூட்டமெனவும் இருவகைத் தாம்; உயர்த்திக்கூறல் புகழும்,தாழ்த்திக்கூறல்பழிப்புமாம்; இங் கே முகிழ்த்தலைசசொன்னது பழிப்பு;மலர்தலைசசொன்னது புகழ்ச்சி; கைம் மலர் குவிதல் நற்கரும மாயினும் குவிதற்றன்மை ஒன்றை மட்டும் நோக்கிக் குவிதலாகிய குமுதத்தின் இழி தன்மையோடு சேர்க்கப் பட்டதென்க. அங் ஙனம் சேர்க்காவிடின் பழிப் பொப்புமைக் கூட்டத்தில் முரண் படும்.

இதில் சூரியோதயங் கூறப்படுகின்றது.

126. வில்லி கணையிழப்ப வெண்மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருள்கிழியத் தோன்றினான் -வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று.

(இ-ள்.) வல்லி-கொடிபோன்றபெண்ணாகிய தமயந்தியினது, மணமாலை-கல்யாணத்திற்கறிகுறியாக அவளால்இடப்படும்மாலையை, வேட்டிடு-விரும்பியிருக்கின்ற, தோள்-தோள்களையும், வாள்-வாளாயுதத்தையும் உடைய அரசர் முன்னே-அரசர்களுக் கெதிரில், செம்-செம்மையாகிய, கதிரோன்-கிரணங்களையுடைய சூரியன், குணவாயில் கீழ்திசையில் உள்ள, குன்று-உதயகிரியின் மிசை, வில்லி-கருப்பு வில்லையுடைய மன்மதன், கணை இழப்ப-[காமுகர் மீது இரா முழுதும் எய்து அவர்களை வருத்திக் கொண்டிருந்த] புஷ்பபாணங்களைக் கைவிடவும், வெண்மதியம்-வெண்மையாகிய சந்திரன், சீர்-[இராக்காலத்தில் பிரகாசித்து ஒரு தலைக்காம முடையாரை வருத்தி அடைந்திருந்த] சிறப்பை, இழப்ப-இழந்து ஒளி மழுங்கவும், [அச்சந்திரன் மறைந்தவுடன் வந்து கூடிக்காதலுடையாரை வருத்திக் கொண்டிருந்த] தொல்லை-அத்துன்பத்தையுடைய, இருள்-அந்தகாரமானது, கிழிய-பிளவுபட்டு நீங்கவும், தோன்றினான்-உதயமாயினான்; [எ-று.]

மன்மதன், காமுகர் மீது ஏவிக்கொண்டிருந்த புஷ்பபாணங்களைக் கைவிடவும், சந்திரன் ஒளியிழப்பவும், இருள்நீங்கவும், தமயந்தியின்மணமாலையை விரும்பியிருந்த தோள்களையுடைய அரசர்களுக்கு முன்னே சூரியன் கீழ்த்திசையில் உதித்தான் என்பது இதன் கருத்து. மன்மத பாணங்கள் பெரும்பாலும் புஷ்பங்களே; அந்த மலர்கள் இராக்காலத்திற்றான் அதிகமாக மலரும்; அப்போது அம்மலர்களின் வாசனை தென்றற்காற்றோடு சேர்ந்துபரவும் அதனால் காமுகர்க்குக் காமக்கிளர்ச்சி அதிக முண்டாய் வேதனை அதிகரிக்கும்; இப்படி மலர்களின் வாசனையால், அதிகரிப்பதையே, மன்மதன் புஷ்பபாணங்களைக் காமுகர் மீது ஏவியதாகவும், அதனால் அவர்கள் வருந்தியதாகவும் கவி வல்லோர் கூறுவர்; அம்மலர்களுக்கு உரித்தான தேவன் மன்மதனாதலின், அவற்றை அவனுக்குப் பாணங்களாக ஏற்படுத்திக் காமுகர் மீது போர்செய்தல் முதலிய சம்பந்தங்களைக் கற்பித்துச் சொல்வது தொன்று தொட்ட வழக்கு. அவ்வகை மலர்கள் பகற்காலத்தில் வாசனை குறைந்து சுருங்க, காமுகர்க்குக் காமக் கிளர்ச்சி குறைந்து வாதனை அடங்கும்; அது மன்மதன் போரைக் கைவிட்டது போலாம்; அது குறித்தே ஆசிரியர், 'வில்லிகணை யிழப்ப' என்றார். வில்லி யென்பது பொதுவாக வில்லையுடையவன் எனப்பொருள் படுமேனும், இங்கு மன்மதனுடைய போர்நிகழ்ச்சியே பெரும்பான்மையும் கூறப்பட்டு வந்தமையின், அதற்கு மன்மதன் என்று பொருள் கூறப்பட்டது. சூரியோதயங் கண்டவுடனே சந்திரன் ஒளி யிழப்பது இயற்

கையாதலின், 'மதியஞ் சீரிழப்ப' என்றார். இதற்கு முன் இருள் மிகுதியே பெரும்பான்மையும் கூறப்பட்டு வந்திருத்தலின், சந்திரன் இருந்ததாகச் சொல்வதற்கு இடமில்லையே? அங்ஙனமிருப்ப 'மதியஞ் சீரிழப்ப' என்றது எங்ஙனம் பொருந்தும்? எனின், 'இருள மிகுதியாக வியாபித்தபோது சந்திரன் மேற்றிசையில் கீழே மறைந்தது எனினும் அதன் ஒளி அத்திசையிற் சிறிது பரவியிருந்தது; அவ்வொளியும் சூரியோதயத்தில் மறைந்தது; ஆதலின், ஆசிரியர் அங்ஙனங் கூறினரென்க. சூரியனைக் கண்ட வுடன் இருள் பிளவுபட்டு இருந்த விடந்தெரியாமல் ஓடுமாதலின், 'இருள் கிழிய' என்றார். இருள், விரகிகளுக்கு மிக்க துன்பத்தைச்செய்து கொண்டிருந்த தாதலின், அதனைத், 'தொல்லையிருள்' எனவுங்கூறினார். இங்குக் கூறியவை யனைத்தும் சூரியோதயத்திற் கறிகுறிக ளாதலின், இவை யுண்டாகச் 'செங்கதிரோன் தோன்றினான்' என்றார் புலவர். அங்கு வந்திருந்த அரசர்களெல்லோரும் தமயந்தியின் மணத்தையே விரும்பி வந்திருந்தார்க ளாதலின், 'வல்லி மணமாலை வேட்டிடுதோள் அரசர்' என்று கூறப்பட்டார்கள் அப்போதேற்பட்ட சூரியோதயமானது, தமயந்தியின் சுயம் வரத்தைக்காட்டி அரசர்களுக்கே மிகுந்த மகிழ்ச்சியைச் செய்யக் கூடியதாயிருந்தபடியால், 'அரசர் முன்னே செங்கதிரோன் தோன்றினான்' என்றுங் கூறினார் ஆசிரியர். இங்ஙனம் இச் சூரியோதயம் அரசர்க்கு மகிழ்ச்சி செய்யக் கூடியதா யிருத்தலின், 'அரசர் முன்னே செங்கதிரோன் குணவாயிற் குன்று தோன்றினான்' என்பதை 'அரசர் முன்னே செங்கதிரோன் குன்றுகுண வாயில்தோன்றினான்' எனமாற்றி 'அரசர்க் கெதிரே சூரியன் உதயகிரியில் நல்ல சுகம் பொருந்திய விடத்தில் உதித்தான்' எனப்பொரு ளுரைப்பினும் அமையும்; இங்ஙனம் பொருள் கொள்ளுமிடத்து, குணம்-சுகம், வாய் இடம். இவையெல்லாம் நிகழச் சூரியன் உதயமானது முக்கியமாகத் தமயந்தி துயர்நீங்கதற்கேது வாகலின், அவளுக்கு இச சூரியோதயம் நளன் தோற்றியது போன்றது என்பது குறிப்பாய் வருவித்துப் பொருள் கொள்ளுதலும் அமையும்.

மதியம் என்பதில் அம்-சாரியை. இழப்ப, கிழிய என்பன வினையெச்சங்கள். வல்லி-உவமையாகு பெயர். வேட்டிடு என்பதில் இடு-பகுதிப் பொருள்விகுதி; இது துணைவினை யென்றுஞ் சொல்லப்படும். வாளரசர்-உடைமைப் பொருளில் வந்த இரண்டாம் வேற்றுமைத்தொகை; வாயில்-ஏழாம் வேற்றுமைச சொல்லுருபு வாய், இல் என்னும் ஈருருபுகளுஞ் சேர்ந்து ஓருருபாய் வந்தன. "வில்லி கணை யிழப்ப, வெண்மதியஞ் சீரிழப்பத் தொல்லை யிருள் கிழிய" என்பது பழிப்பொப்புமைக் கூட்டவணி. சூரியன் உதித்ததை நளன் தோன்றியதாகக் குறிப்பாற் கூறு மிடத்து அஃ தொட்டணியாம்; ஒட்டணியாவது, கவி தன்னுற் கருதப்பட்ட பொருளை மறைத்து அதனை வெளிப்படுத்தற்குத் தக்க பிறிதொன்றினைச் சொல்வதாம்; இங்கு நளன்தோன்றியதாகச் சொல்லுதல் மறைத்து அதனை வெளிப்படுத்தற்குச் சூரியோதயத்தைக் கூறியிருத்தல் உணர்க.

இதில் அரசர், சுயம்வரத்திற்கு வந்தமை
கூறப்படுகின்றது.

127. முரசெறிந்த நாளேழு முற்றியபின் கொற்ற
வுரைசெறிந்த தோண்மன்னர் வந்தார்—விரைசெறிந்த
மாலை துவள முடிதயங்க வால்வளையும்
காலை முரசுங் கலந்து.

[இ-ள்] [தமயந்திசுயம்வரத்தை] முரசு-எறிந்த பேரிகையை அடித்துத் தெரிவித்த, நாள்-நாளானது, ஏழு ஏழாவதாக, முற்றியபின்-முடிந்தபிறகு, [அதாவது முரசெறிந் ததிலிருந்து ஏழு நாட்கள் கழிந்த பிறகு எட்டாவது நாளில்] கொற்றம்-வெற்றியையுடைய, வரை செறிந்த-மலையோடு உவமையாகப்பொருந்திய, தோள்-புயங்களையுடைய, மன்னர்-அரசர்கள், விரை செறிந்த-வாசனை சேர்ந்திருக்கின்ற, மாலை-பூவாரங்கள், துவள-மார்பில் அசையவும், முடி [அவர் சிரசில் அணியப்பட்டிருந்த] கிரீடங்கள், தயங்க-பிரகாசிக்கவும், வால்வளையும்-அவர்களுடைய வெண்மையாகிய சங்குகளும், காலை முரசும்-காலை நேரத்தில் அடிக்கப்படும் பேரிகைகளும், கலந்து-கலந் தொலிப்ப. வந்தார் [மேற்கூறியபடி சூரியோதயமான வுடனே குண்டின புரத்தில்] வந்து சேர்ந்தார்கள்; [எ-று.]

முன்னே வீமன் முரசறைவித்த நாளில், 'இதற்கு ஏழாம் நாள் தமயந்தி சுயம்வர நாள்' என்று குறிப்பிட்டான்; அது, இந்நூலின் 56-வது செய்யுளில் "மங்கைசுயவரநாளேழென்று வார்முரச மெங்கு மறைகென் றியம்பினான்" என்பதனாலுணரப்படும். அதில் 'நாள் ஏழ்' என்பதை முரசறைந்த நாளிற்கு ஏழாவது நாளென்றும், அதுவும் அதற்கடுத்த நாளிலிருந்து எண்ணப் பட்டு ஏழாவது எண்ணிக்கையில் வந்தநாளென் றுங்கொள்ளவேண்டும். இங்ஙனம் ஒரு பொருளை எல்லை வைத்து எண்ணுவதில் அதைச்சேர்த் தெண்ணுதலு முண்டு, சேர்க்காமல் எண்ணுதலு முண்டு; ஆதலின், இங்கு முரசெறிந்த நாளைச் சேர்க்காமல் மற்ற நாட்கள் எண்ணிக்கை யிடப்பட்டன. ஆகவே முரசெறிந்த நாளைச்சேர்த் தெண்ணுங்கால் சுயம்வரநாள் எட்டாவது நாளா கும். அதுபற்றியே இச்செய்யுளில் 'முரசெறிந்த நாளேழு முற்றியபின்' என்றார் ஆசிரியர். இதனானே சுயம்வரநாள் எட்டாவது நாளென்பதும், அன்றே அரசர் வந்தா ரென்பதும் பெறப்படும். இங்ஙனமின்றி, முன்பாட்டிற் கூறிய நாட்களை ஏழென்று கொள்ளின், இதில் 'நாளேழு முற்றியபின்' என் றிருத் தலின் முன்னுக்குப் பின் முரணாகும். இங்ஙனம் சுயம்வர நாள் எட்டாவது நாளென்று பொருள் கொண்டதற்கேற்ப, 'முரசெறிந்த நாளேழு முற்றிய பின்' என்பதற்கு, 'சுயம்வரத்திற்காக முரசறைந்து தெரிவித்த நாட்கள் எட்டில், ஏழுமுடிந்தபிறகு' எனப்பொருள் கொள்ளினும் அமையும். இங்ஙனங் கொள்ளுமிடத்து, 'நாள் ஏழு' என்பதைக் காலம் தற்கிழமையில் இடமாய் நின்ற ஏழாம் வேற்றுமைத்தொகை யெனக்கொண்டு, நாளில் ஏழு என்று

விரிக்கவேண்டும்; இதில் நாள் என்றது எட்டு நாட்களையுங் குறிக்கும். ஒவ்வொரு அரசரும் தமயந்திக் குரியவரோடு சண்டையிட்டு ஜெயங்கொண்டாவது அவளை வலிதில் மணஞ்செய்யக்கூடிய வல்லமை யுடையவர்க ளாதலானும், அங்ஙனமே அவர்கள் பின்னே நளனோடு சண்டை யிட்டமை யானும் அவர்களைக் "கொற்ற வரை செறிந்த தோள் மன்னர் வந்தார்" என்றார் ஆசிரியர். ஒவ்வொருவரும் வருகின்றவேகத்தால் மார்பின் மாலை மிக்கசையுமாதலின், 'மாலை துவள' என்றார். இதனால் அவர்கள், தமயந்தியின் விருப்பால் விரைந்தோடி வந்தார்களென்பது பெறப்படும். அவ்வாறு அவர்கள் விரைந்தோடி ஒருவரோடொருவர் நெருங்கி வருங்காலத்தில் அவர்களுடையமுடிகள் ஒன்றோடொன்று உராயும்; அப்படி உராய்வதால் அவற்றில் பிரகாசம் அதிகரிக்கும்; ஆதலின் இது குறித்தே புலவர், 'முடிதயங்க' என்றுங் கூறினார். உதய காலத்தில் இராஜாங்க நகரங்களில் சங்கும் பேரிகையும் முழங்குவது இயற்கை; ஆதலின், அரசர் சென்ற அந்நேரத்தில் அவை முழங்கின; இது குறித்தே, 'வால்வளையுங் காலைமுரசுங் கலந்து மன்னர் வந்தார்' என்றார் புலவர். அந்த அந்த நேரத்தில் நடக்கும் நற்காரியங்களுக் கறிகுறியாக ஒவ்வொரு நாளிலும் காலை, மத்தியானம், மாலை என்னும் மூன்று நேரங்களிலும், அரசன் அரண்மனை, கோவில் முதலியவற்றில் பேரிகை முழங்குவது வழக்கம்; ஆதலின், இங்கே காலையில் முழங்கின முரசு, 'காலை முரசு' என்னப்பட்டது. இந்தச் சங்கும் முரசும் வந்த அரசர்களுக் குரியவைகளாய் அவர்களுடனே முழங்கி வந்தனவெனினும் அமையும்.

முரசெறிந்த என்பதில் செயப்பாட்டு வினை செய்வினையாக மாறி வந்தது. குறிப்பிட்ட விஷயத்தைக் கூறிய பின்னரே பறை சாற்றுவோர் முரசறைவார்க ளாதலின், 'முர செறிந்த' என்பதில் விஷயத்தைக் கூறியது தானே அமையும். ஆதலின் அதற்கேற்ப, முர செறிந்த என்பதனோடு 'தமயந்தி சுயம்வரத்தைத் தெரிவித்த" என்னுஞ் சொற்கள் இசை யெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன. 'நாளேழும்' என்பதின் உம்மை முற்றுப்பொருளது. வரை செறிந்த-உவமைத் தொகை. கலப்ப என்னும் செயவெனெச்சம், கலந்து எனச்செய்தெனெச்சமாகத் திரிந்து வந்தது.

இதில் நளன் வந்து அவ்வரசர்களுக்கு நடுவில்
இருந்தமை கூறப்படுகின்றது

128. மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீல—முன்றில்
குறுவிழிக்கு நேர்நாடன் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய்.

[இ-ள்] [மேலைப்பாட்டிற் கூறியவாறு அரசர்களெல்லோரும் அங்கே வந்து சுயம்வர மண்டபத்திற் சேர்ந்திருந்த பிறகு] முன்றில்-வீட்டின் வாயிலிலே, கன்று-எருமைக் கன்றுகள், குதட்டிய-சிறுகமென்று உதப்பித் தள்

ளிய, கார்-கருமையாகிய, நீலம்-குவளை மலர்கள், குறுவிழிக்கு-அங்குள்ள மாதரின் சிறு விழிகளாகிய கருவிழிக்கு, நேர்-நிகராய்க்கிடக்கின்ற, நாடன் விதர்ப்ப நாட்டுக்கதிபனாகிய பீமனுடைய, கோதை-பெண்ணாகிய தமயந்தியின், பெருங்கண்ணின்-பெரிய கண்களின் மத்தியிலுள்ள, சிறு விழிக்கு சிறிய பார்வையாகிய கருவிழிக்கு [அதாவது அக்கருவிழியின் அன்பான பார்வையைப் பெறும்பொருட்டு] நோற்று இருந்த-தவஞ்செய்திருந்த, சேய்-இராஜகுமாரனாகிய நளன், அணைய-அத் தமயந்தியை மணந்து சேரும்பொருட்டு, மன்றல்-வாசனைபொருந்திய, அம்-அழகிய, தார்-மாலையை அணிந்த மன்னர்நடு-அவ்வரசர்களுக்கு நடுவில், வந்து இருந்தான்-வந்தமர்ந்தான்.

நாட்டில் உழவர்களுடைய வீட்டின்முன்றிலிலே எருமைக்கன்றுகளுக்குக்குவளைகள் உணவுக்காக அவர்களால் கொண்டு வந்து போடப்படும். அவற்றை அக்கன்றுகள் சிறிது சிறிது மென்று தக்கும்; அப்போது குவளை மலர்கள் சிற்சில பாகங்கள் கடிக்கப்பட்டுக் குறைவுற்று நிலத்தில் வீழும்; அப்படிக்குறைவுபட்ட மலர்கள் சிறியனவா யிருக்குமாதலின், அவை, மாதருடைய கண்ணுக்கு நடுவிலிருக்கும் கருவிழிக்கு நிகராய் விளங்கும்; ஆதலின், 'முன்றில் கன்று குதட்டிய கார் நீலம் குறு விழிக்கு நேர் நாடன்'' என்றார் புலவர்; இதனானே அந்நாட்டுயர்வு விளங்கும்.

"கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில''

என்றபடி, கண்களின் எதிர்நோக்கே ஆசையையும் சம்மதத்தையும் வெளிப்படுத்துவதாதலின், பெண்களிடமிருந்து அது பெற்றார் அவர்களுடைய சேர்க்கை யின்பத்தைப் பெற்றவர் போலாவர்; ஆதலின், நளன் தமயந்தியினிடத்தே அத்தகைய பார்வையைப் பெறுதற்கு விரும்பித் தவஞ்செய்து கொண்டிருந்தான். அத்தவத்தின் பயனாக முன் தேவர் பொருட்டு அவளிடம் தூது சென்ற காலத்தில் அப்பார்வையைப் பெற்றான்; அதுபற்றியே "கோதை பெருங்கண்ணின் சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய்'' என்றார் ஆசிரியர். கண்ணின் சிறு விழியாவது கண்ணுக்கு நடுவிலிருக்கும் கருவிழியாம்; நேர்நோக்கில் இவ்விழியே எதிர்ப்படும். ஆதலின், ஆசிரியர் 'கண்ணின் சிறு விழிக்கு' என்றார். இங்ஙனம் நளன் அவளுடைய சம்மதத்தைப் பெற்றிருந்தாலும் மணம் முடிந்த பின்னரே அவளின் சேர்க்கையை அடையக்கூடியவனா யிருந்தபடியினாலே, அங்ஙனம் நோற்றிருந்த சேய், அணைய வந்திருந்தான் என்றுங் கூறினார். இதனால் அவனே தமயந்தியை மணஞ்செய்வான் என்பது பெறப்படும். இந்நிச்சயத்தால் அங்குக் கூடிய மன்னர்களுக்குள் அவனே சிறந்தவனென்றுங் கருதப்படுவான். ஆதலின் அச்சிறப்பு நோக்கி 'மன்னர் நடு வந்திருந்தான்' எனவு முரைத்தார் புலவர். ஒரு கூட்டத்திற் சிறந்தார் நடுவிலிருப்பது உலக இயற்கை.

நடுவணைய-ஏழாம் வேற்றுமைத் தொகை. குதட்டல்-வாயில் வைத்து மென்றும் மெல்லாமலும் உதப்பித்தள்ளுதல். நீலம்-குணவாகு பெயர்; நீல மென்னும் நிறக்குணப் பெயர் அதனையுடைய குவளை மலருக்காயிற்று. முன்றில்-இல்முன்; வீட்டின் முன்பக்கம் என்பது இதன் பொருள்; இங்ஙனம் இல்முன் என்பது முன்றில் எனமாறி வந்தது இலக்கணப் போலி யெனப்படும்; இலக்கணப் போலியாவது இலக்கண மில்லாததாயினும், இலக்கண முடையது போலச் சான்றோரால் தொன்று தொட்டுவழங்கப்படுவது. குறு, சிறு என்பன மையீறு கெட்ட பண்புப் பகுதிகள். விழிக்கு நேர்-ஒப்புப் பொருளில் வந்த நான்காம் வேற்றுமை விரி. நாடன்-குறிப்பு வினையாலணையும் பெயர். கோதை-மாலை; இஃதாகு பெயராய் அதனையுடைய பெண்ணை உணர்த்திற்று. விழிக்கு நோற்றிருந்த என்பது நிமித்த காரண காரியப் பொருளில் வந்த நான்காம் வேற்றமை விரி. இருந்த-பெயரெச்சம்; இது-சேய்என்ற பெயரோடு முடியும். கண்ணின் சிறு விழி யென்பதை ஆறும் வேற்றுமை யுருபு தொக்க தொகையாக வேனும் ஏழாம் வேற்றுமைப்பயன் றொக்க தொகையாக வேனும்கொள்ளவேண்டும். ஏழாம்வேற்றுமைப்பயன் தொக்க தொகையாகக் கொள்ளுமிடத்து, இன்-ஏழனுருபு சேய் என்பது முருகனுக்கும் பெயராதலின் இதனை உவமையாகு பெயராகக் கொண்டு முருகக்கடவுளை நிகர்த்த நளன் எனக்கூறினும் அமையும்.

தமயந்தி மணப்பந்தலுக்கு வந்தமை
இதிற் கூறப்படுகின்றது.

129. நித்திலத்தின் பொற்றோடு நீலமணித் தோடாக
மைத்தடங்கண் செல்ல வயவேந்தர்—சித்தம்
மருங்கே வரவண்டின் பந்தர்க்கீழ் வந்தாள்
அருங்கேழ் மணிப்பூ ணணங்கு.

[இ - ள்] அரும் அருமையான, கேழ்-நிறத்தினையுடைய, மணி இரத்தினங்களினாலாகிய, பூண்-ஆபரணங்களை யணிந்த, அணங்கு-தெய்வப்பெண் போன்றதமயந்தி, [தன்னுடைய] மை-அஞ்சன மெழுதப்பெற்ற, தடம்-விசாலமாகிய, கண்-கண்கள். செல்ல-காதுகளுக்கு நேராகப்பாய, [அக்கண்களின் கருமை நிறம் பிரதிபலிப்பதனாலே அச்செவிகளி லணியப்பட்டிருந்த, நித்திலத்தின்-முத்துக்களை யுடைய, பொற்றோடு-பொன்னாலாகிய காதணிகள், நீலமணி-நீலரத்தினம் பதித்த, தோடாக-தோடுபோல் விளங்க. [அத்தோற்றம் குவளை மலர் போன்றிருந்தபடியால்] வயம்-வெற்றி பொருந்திய, வேந்தர்-அரசர்களுடைய, சித்தம்-மனமானது, வண்டின்-அக்குவளை மலரிற் சேரும் வண்டைப்போல, மருங்கேவர-அத்தோடுகளின் பக்கத்திற் சேர, [அதாவது அத்தோடுகளை அம்மன்னர்கள் விரும்பி நினைத்துக் கொண்டிருக்க] பந்தர்க்கீழ்-பந்தலினிடத்தே, வந்தாள்-வந்து சேர்ந்தாள்; [எ-று.]

நித்திலப் பொற்றோடுகளானவை நீலமணித் தோடுகள் போல ஆகும் படி அவற்றிற்கு நேராக மைத்தடங்கண்பாய, அத்தோடுகள் நீலோற் பலங்கள்போல் விளங்கியபடியால், அவற்றை நோக்கிய அரசர்களுடைய சித்தம் அந்நீலோற்பலங்களில் சேரும் வண்டுகள் போல அவற்றின் சமீபத்திற்செல்லத் தமயந்தி பந்தரின் கீழ்வந்தாள் என்பது இதன் கருத்து. தமயந்தியைச் சேடிகள் அலங்கரித்துப் பந்தலுக்கு அழைத்து வந்தார்கள். அப்போதவள் தலைகுனிந்தபடியே இருமருங்கினும் கூடியிருக்கும் அரசர் கூட்டத்தைக் கடைக்கண்களால் நோக்கினாள்; அப்போது கண்களின் கருவிழியின் ஒளியானது பொற்றோடுகளிற் பாய அவ்வொளியினால் அப்பொற்றோடுகள் நீல நிறம் பெற்று நீலமணித் தோடுகள் போலவிளங்கின. அவள் அங்ஙனம் நோக்கியதையும், தோடுகள் நிறம் மாறிப் பிரகாசித்ததையும் அரசர்கள் விருப்பத்தோடு நோக்கினார்கள். அங்ஙனம் நீலநிறமாக விளங்கிய தோடுகள் நீலோற்பலங்கள் போன்றிருந்தபடியால் அவற்றில் சென்ற அரசர்களுடைய சித்தங்கள் அவற்றிற் சேரும் வண்டுகள் போன்றிருந்தன. குலமகளிர் ஆடவரை நோக்குதல் கூடாமையெனினும் ஒரு காரியத்தை முன்னிட்டு மனிதர் கூடுமிடத்து ஆங்கு எவரெவர் வந்துள்ளாரென்பதை உணர்ந்து கொள்ளும்பொருட்டு நாணத்தோடு தலைகுனிந்து கடைக்கண்களால்நோக்குதல் இயற்கை; ஆதலின், தமயந்தியும், அக்கூட்டம் தன்மணத்தின்பொருட்டுக் கூடியதாதலானும், அதில் தனக்குரிய நாயகன் வந்திருக்கின்றானோவென்பதையும், மற்றவர்கள் இன்னவர்இன்னவர் என்பதையும் உணர்ந்துகொள்ள வேண்டியிருந்தமையானும்அக்கூட்டத்தைக்கடைக்கண்களால்நோக்கினாள்

இங்குச் சித்தத்திற்கும் வண்டிற்கும் கூறிய உவமை தொழிலுவமையெனப்படும். பொற்றோடு நீலமணித் தோடாக என்பது இயைபிலுருவகம். தடங்கண்-பண்புத்தொகை. பந்தர்-மொழியீற்றுப்போலி, கீழ்-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. பூண் அணங்கு-பூணை அணிந்த அணங்கு; இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனுமுடன்றொக்க தொகை.

இதில், தமயந்தியை அரசர் நோக்கினமை
கூறப்படுகின்றது.

130. பேதை மடமயிலைச் சூழும் பிணைமான்போல்
கோதை மடமானைக் கொண்டணைந்த—மாதர்
மருங்கின் வெளிவழியே மன்னவர்கண் புக்கு
நெருங்கினவே மேன்மே னிறைந்து.

(இ-ள்.) பேதை-அறியாமைக் குணத்தையுடைய, மடம்-இளமை பொருந்திய, மயிலை-மயிலினை, சூழும்-சூழ்கின்ற, பிணைமான் போல்-பெட்டைமான்களைப்போல, கோதை-மாலையையணிந்த, மடம்-இளமைபொருந்திய, மானை-மானைநிகர்த்த தமயந்தியை, கொண்டு அணைந்த-அழைத்துக்கொண்டு வந்து அங்கே சேர்ந்த, மாதர்-தோழிப் பெண்களுடைய, மருங்கின்-இடைகளுக்கி

டையில் தோன்றும், வெளிவழியே-வெளியின்வழியாக, மன்னவர்-அரசர்களுடைய, கண் கண்கள்,புக்கு புகுந்து, மேல்மேல்-மேலும் மேலும், நிறைந்து-தமயந்தியின் மேனியழகிற்கூடி, நெருங்கின-செறிந்தன; (அரசர்கள் தமயந்தியின் அழகை நோக்கினார்கள் என்றபடி) [எ-று.]

முன்னே தமயந்தி பந்தலின் கீழ் வந்தவுடன் அவளுடைய சிரசு மேலே தெரிந்தமையால், அரசர்கள் அவளின் கடைக்கண்பார்வையையும், தோடுகள் நிறம்மாறியதையும்நோக்கினார்கள். பின்னர் அவளுடைய மேனியழகைநோக்க விரும்பிப் பார்த்தபோது அவளைத் தோழிகள் சூழ்ந்திருந்தமையால் நேர் நேராகப் பார்த்தல் இயலாமற்போயிற்று. அதனால், அங்ஙனம் சூழ்ந்து நின்ற மாதர்களின் இடைகளுக்கு நடுவே தோன்றிய வெளிவழியாகஅவளைப்பார்த்தார்கள்; மாதர்களின இடைகள்மெலிந்திருப்பனவாதலின், அவர்கள்சூழ்ந்து நின்ற போதும் அவர்களுடைய இடைகளுக்கு நடுவில் வெளிகள் தோன்றின அவ்வெளிகள், அவர்கள், அவளைப் பார்த்தற்கு அனுகூலமாயிருந்தன.

பேதை-மையீறு கெட்டபண்படி;பேதைமை யென்பது மகடூஉக்குணம் நான்கினொன்று; இது மடம்என்றுகூறப்படும்; இக்குணமாவது கபடற்ற தன்மையோடிருத்தலாம்; இது,மாதர்களுக்கு மற்றகுணங்களைக் காட்டினும்சிறந்ததாம், "பேதைமையென்பது மாதர்க்கணிகலம்"என்பதால் இஃதுணரப்படும்;இக்குணம் இங்கு மயிலுக்குக் கூறப்பட்டதுஅதுவும் மாதர்க்குவமையாதலின். தமயந்தியைத் தோழிகள் சூழ்ந்திருந்த தோற்றம், மயிலைப் பெட்டைமான்கள் சூழ்ந்திருந்தது போன்றிருந்தது. மயில், மாந்தர்கட்குச் சாயலால் உவமையாதலின், இது பண்புவமையெனப்படும். மான், பார்வையால்உவமையாதலின் இது தொழிலுவமையாம். மான்-உவமையாகுபெயர்.

தமயந்தி மேற்கூறிய பந்தலில் தனக்கென்றமைக்கப்பட்டிருந்த மண்டபத்திற் சேர்ந்தமை இதிற் கூறப்படுகின்றது.

131. மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்-மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னஞ் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று.

(இ-ள்.) மின்நிறத்து-மின்னல் போன்ற நிறத்தினையும், செய்யதாள்-சிவந்த கால்களையும், வெள்ளை-வெண்மையாகிய, சிறை-சிறகுகளையுமுடைய, அன்னம்-ஓர் அன்னமானது, செம்கமலம்-சிவந்த தாமரைமலர்களையுடைய, பொய்கைவாய்-தடாகத்தில், போவதே போன்று-செல்வதையே நிகர்த்து, பொன்னின் பொன்னலாகிய, மடம்-இளமைபொருந்திய, பாவை-பதுமை போன்ற தமயந்தி, மன்னர்-அரசர்களுடைய, விழி-கண்களாகிய, தாமரை-செந்தாமரைமலர்கள், பூத்த-மலர்ந்திருக்கிற(அதாவதுமன்னர்கள் செந்தாம

ரை மலர்போன்ற தங்கள் கண்களால் நோக்கிக்கொண்டிருக்கிற) மண்டபத்தே-சுயம்வரமண்டபத்திலே, போய்ப்புக்காள்-சென்றுசேர்ந்தாள்; [எ-று.]

இங்கே மண்டபம் என்றது தமயந்தியிருத்தற்குத் தனியாக மேற்கூறிய பந்தலின் நடுவில் அமைக்கப்பட்டதாம். மணமுதலிய சிறப்புக்கள் நடக்குங் காலத்தில் ஆடவர் கூடியிருக்கும் சபையில் ஸ்திரிகள் வரவேண்டியிருந்தால் அவர்கள் தங்குதற்குப் பிரத்தியேகமாகமண்டபம் அமைப்பது வழக்கம்;இது சீவகசிந்தாமணிக் காந்தருவதத்தையிலம்பகம் முதலியவற்றில் இங்ஙனம் மண்டபம் அமைத்ததாகக்கூறப்பட்டிருப்பதால்உணரப்படும். ஆதலின்,அவ், வழக்கம் பற்றியே இந்த தமயந்திக்கும் மண்டபம் அமைக்கப்பட்டதென்க மேற் கூறியபடி பந்தலுக்குட்சென்ற தமயந்தி பின்னர் இம்மண்டபத்தை யடைந்தாள்.அரசர்கள், அம்மண்டபத்தில் எப்பொழுது தமயந்தி வந்து சேர்வாளோ என்று அதனையே நோக்கிக் கொண்டிருந்தார்களாதலின் 'மன்னர் விழித்தாமரைபூத்த மண்டபத்தே' என்றார் ஆசிரியர்.

விழித்தாமரை-உவமையுருவகம். இங்கே செம்மை, மென்மை, அழகு முதலியவற்றால் கண்களுக்குத்தாமரைமலர் உவமை கூறப்பட்டமையின்இது பண்புவமையாம். தாமரை பூத்த என்பதற்கேற்ப மண்டபத்தைத் தடாகமாக உருவகப்படுத்தவேண்டும்; இங்ஙனங்கொள்வது ஏகதேச உருவகமாம். அன்னம், நடையால் தமயந்திக்குவமையாயினமையின் இதுதொழிலுவமை. 'செங்கமலப் பொய்கை, மன்னர் விழித்தாமரை பூத்த மண்டபத்திற்குவமை இது தாமரை பூத்தலாகிய தொழில் பற்றி வந்தமையின் இதுவும் தொழிலுவமையாம்; பாவை-உவமையாகுபெயர். வெள்ளை-பண்புப்பெயர்;வெண்மையென் பதன்மை விகுதிபோய் வெள்எனநின்றுஐவிகுதி பெற்று, ளகரவொற்றிரட்டி வெள்ளையென்றாயது. செய்யதாள்வெள்ளைச் சிறை-முரண்தொடை; "சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே' என்பதால் இதனை யுணர்க. தாமரை-தாமரஸமென்ற வடசொல் விகாரம். மண்டபம் வடசொல் கமலம்-வடசொல். பொய்கைவாய் என்பதில், வாய் ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு.

மண்டபத்தைச்சேர்ந்த தமயந்தியின் கடைக் கண்
செல்லு மிடத்தே பாணத்தைச் செலுத்துதற்கு
மன்மதன் ஆயத்தமாய் நின்றான் என்பது
இதற் கூறப்படுகின்றது.

132. வடங்கொள் வனமுலையாள் வார்குழைமே லோடும்
நெடுங்கட் கடைபார்த்து நின்றான்—இடங்கண்டு
பூவாளி வேந்தன்றன் பொன்னுவம் பின்னேயிட்
டேவாளி நாணின்மே லிட்டு.

(இ-ள்.) பூவாளி-மலர்ப்பாணங்களையுடைய, வேந்தன்-அரசனாகிய மன்மதன், (தமயந்தி அங்கு வந்து சேர்ந்தவுடனே அவளை விரும்பிய அரசர்கள்

மீது தான் பாணப் பிரயோகஞ் செய்தற்குச் சமயம் வாய்த்த படியால் இது தான் தருணமென்று) இடம்கண்டு-அந்தச்சமயத்தை உணர்ந்து தன்-தன்னுடைய, பொன்-அழகிய, ஆவம் அம்புக்கூட்டை, பின் இட்டு-பிறபக்கமாகிய முதுகிற்சேர்த்து, ஏவாளி-ஏவுதலையுடைய மலர்ப்பாணங்களை,நாணின்மேல்-வில்நாரியின்மீது, இட்டு-தொடுத்துக்கொண்டு,வடம்கொள்-முத்துமாலையை அணிந்த, வனம் அழகுபொருந்திய, முலையாள்-தனங்களையுடைய தமயந்தியினது, வார்-நீட்சி பொருந்திய,குழைமேல்-காதுகளின்மீது,ஓடும்-பாய்கின்ற, நெடும் கண்கடை-நீண்ட கண்களின் ஓரங்களை, பார்த்து நின்றான்-நோக்கி (அவைசெல்லுமிடத்தேபாணங்களை ஏவுதற்குஆயத்தமாகி) நின்றான் .[எ-று.]

தமயந்திஅம்மண்டபத்தைச்சேர்ந்தவுடன்அரசர்கள் அவளை ஆவலோடு பார்த்துக்கொண் டிருந்தார்களாதலின், அவள் கடைக் கண்ணால் அவர்களை நோக்கிய மாத்திரத்தில் மேலும் அவர்களுக்கு ஆசை அதிகரிக்கும்; அதனால் மிக்கவேதனையுண்டாம்; அந்தச்செய்கைக்கு அதிதேவதை மன்மதனாதலின் அந்த வேதனை அம் மன்மதனுடைய பாணங்களால் உண்டாவதாகக் கூறப் படும். ஆதலின், இங்கே மன்மதன் வில் அம்புகளோடு தமயந்தியின் கடைக் கண் நோக்கத்தைப்பார்த்து, அது செல்லுமிடத்தே தானும் பாணங்களை ஏவுதற்கு ஆயத்தமாகி நின்றான் என்றார் ஆசிரியர். இதில் மன்மதன் தமயந்தியினுடைய கடைக்கண்நோக்குக் குறிப்பின்படி ஏவல்செய்பவனாகஅமைந்தானென்பது குறிப்பாலமையும்.

குழை-காதணி; அஃதாகுபெயராய் அதனையுடைய காதை யுணர்த்திற்று கண்கடை என்பதில் வருமொழிமுதல் வல்லினம்வர ணகரம் டகரமாயிற்று. இடம்-இங்கே சமயத்தைஉணர்த்திற்று. வேந்தன்-இறைமைத் தன்மையுடையவன்; மன்மதன் உலகத்தில் சம்சார பந்தத்தில் அகப்பட்ட எல்லோரையும் அடக்கியாளும் திறமை பெற்றவனாதலின் வேந்தன் எனப்பட்டான். பின்னே என்பதில் ஏ-அசை ஏவாளி-ஏவுதலையுடைய அம்பு; இதிலுள்ள ஏ-அல்லீறுகெட்டதொழிற்பெயர்; ஏவல் வாளி என்பது ஏவாளி யென விகாரப் பட்டு நின்றது. நின்றான் என்பது தமயந்தியின் முன்அவன் பணிவை விசேடித்தது.

தோழி ஒருத்தி, தமயந்திக்கு அரசர்களைக்
குறிப்பிட்டுக் காட்டுதல்.

133. மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து.

(இ-ள்.) இயல் அணங்கு-நற்குணம்பொருந்தியதெய்வப்பெண் போன்ற பெண்ணாகிய ஒருதோழி, தேர்-இரதங்களையுடைய, வேந்தர் தம்மை-அவ்வரசர்களை,தெரிந்து (இன்னவர்இன்னவர்எனத்தான்)தெரிந்துகொண்டு,தார்-

வெற்றி மாலையை அணிந்த, வேந்தன்-வீமராஜன், பெற்ற-குமாரத்தியாக அடைந்த, தனி-ஒப்பற்ற, கொடிக்கு-பூங்கொடிபோன்ற தமயந்திக்கு, முன் நின்று-எதிரில் நின்று, மன்னர்-அந்த அந்த அரசர்களுடைய, குலமும், வம்சத்தையும், பெயரும்-பெயரையும், வளம்-வளம்பொருந்திய, நாடும் நாட்டையும், இன்ன-இப்படிப்பட்ட, பரிசு என்று தன்மையுடையன வென்று சொல்லி, காட்டினாள்-அடியில் வருமாறு சுட்டிக் காட்டினாள்; [எ-று.]

சுயம்வரகாலத்தில்வந்திருப்பவர்களைஇன்னார்இன்னாரென்றுபெண்ணிற்குக்காட்டவேண்டியது'முறைமை; ஏனெனில், பெண்தனக்குரிய நாயகனைத் தெரிந்துகொள்ளற்கென்க. இங்ஙனம்காட்டாவிடின்பெண் தனக்கு விருப்பமான நாயகனைத்தேர்ந்தெடுத்தல் இயலாதாம். ஆதலின், இங்கு, கலியாணத்திற்குமுன் தோழிப்பெண்தமயந்திக்கு அரசர்களைக்காட்டத்தொடங்கினாள். ஒருவனை, அவனது குலத்தாலும் நலத்தாலுமே ஒரு பெண் விரும்புவாளாதலின் இங்குத் தோழி அரசர்களுடைய குலம், பெயர் முதலியவற்றை முற்கூறிப்பின்னர் அவர்களைச்சுட்டிக்காட்டத்தொடங்கினாள். இயல் அணங்கு-நற்குணம் பொருந்திய தெய்வமாது போன்ற தோழிப்பெண்; இயல்-இலக்ஷணம், நற்குணம்; அணங்கு-தெய்வப்பெண்; அணங்கென்பது உவமையாகுபெயராய் அவ்வணங்கைப்போன்றபெண்ணை யுணர்த்திற்று. இனி, இயலணங்கு என்பதை, இயற்றமிழுக் குரிய தெய்வமாகிய சரஸ்வதி எனப் பொருள் கொண்டு அவளே வந்து தமயந்திக்கு அரசர்களைக் காட்டினாளெனக் கூறுவாருமுளர்; 150 ஆஞ் செய்யுளில், 'காவலரைத் தன்சேடிகாட்ட" என வருதலால் இது முரண்படுதல் பற்றிப் பொருந்தாமை யுணர்க.

தோழி அரசர்களின் தன்மைகளையெல்லாம் உள்ளபடி உணர்ந்து கூறுதற்கேற்ற அறிவினை யுடையவளாதலின் அதற்கேற்ப, அவளை, 'இயலணங்கு' என்றார் ஆசிரியர். அணங்கு, கொடி என்பன உவமையாகுபெயர்கள். இன்ன-இகரச் சுட்டினடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; இதில், இ-பகுதிச் சுட்டு, அ-பெயரெச்சவிகுதி, ன்-சந்தி, மற்றொரு-ன்-சாரியை. பரிசு-தன்மை; இஃதாகுபெயராய்க் குல முதலியவற்றின் மேனின்றது. முன்-இடமுன்.

சோழநாட்டரசனைக் காட்டல்.

134. பொன்னி யமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகின்
சென்னி தடவுந் திருநாடன்—பொன்னிற்
சுணங்கவிழ்ந்த பூண்முலையாய் சூழமரிற் றுன்னார்
கணங்கவிழ்ந்த வேலனிவன் காண்.

(இ-ள்.) பொன்னின்-பொன்னைப்போல, சுணங்கு-தேமல், அவிழ்ந்த-விரிந்திருக்கின்ற, பூண்-ஆபரணங்களைத் தரித்த, முலையாய்-தனங்களையுடைய தமயந்தியே!, சூழ்-பகைவர் சூழ்கின்ற, அமரில்-யுத்தத்தில், துன்னார்-பகைவர்களுடைய, கணம்-கூட்டமானது, கவிழ்ந்த-வீழ்வதற்கு ஏது

வான, வேலன் - வேலாயுதத்தை யுடையவனுகிய, இவன் - இம்மன்னன், பொன்னி-காவிரியாற்றினுடைய, அமுதம்-நீரினது, புதுக்கொழுந்து புதிய திவலைகள், பூங்கமுகின்-மலர்களையுடைய பாக்குமரங்களின், சென்னி-உச்சியை, தடவும்-தடவுகின்ற, (நீர் வளம்மிகுந்த) திரு-செல்வம் பொருந்திய, நாடன் சோழநாட்டரசன், காண்-நீ பார்ப்பாயாக; [எ-று.]

கொழுந்து-இளங்கிளையாம்; அஃதிங்கே நீருக்குக் கூறப்பட்டமையின் நீரினின்றும் மேற் பாகத்திற் பல பிரிவுகளாகச் சிதறும் நீர்த்திவலைகளை யுணர்த்திற்று. கொழுந்து, மரம் செடி முதலியவற்றின் மேற்பாகத்தில் உற்பத்தியாதல் போல நீர்த்திவலையும் நீரின் மேற்பாகத்தில் உற்பத்தியாவதாதலின் கொழுந்தெனப்பட்டது. வெள்ளம் மிகுந்து பெருகிய காலத்தில் மேலுயர்ந்து மரங்களின் உச்சியிலும் நீர்த்திவலைகள் பரவுதல் இயற்கை. இதனுல் காவிரியாற்றின் வெள்ள மிகுதி கூறப்பட்டது. இங்ஙனம் வெள்ள மிகுதி கூறவே அந்நாடு நீர்வளம் மிக்கதென்பதும், காவிரியைக்கூறியதனுல் அது சோழநாடென்பதும், இந்நாட்டரசனென்றதனுல் அவன்சோழனென்பதும்; 'துன்னார் கணங்கவிழ்ந்த வேலன்' என்றதனுல் அச்சோழன் போரிற் சிறப்புற்று வெற்றி பெற்ற வேல்வல்லானென்பதும் பெறப்படும்.

"மவ்வீ றொற்றொழிந் துயிர்ீ றொப்பவும், வன்மைக்கினமாத் திரிபவுமாகும்" என்ற விதிப்படி அமுதம்புது என்பது அமுதப்புது என்ருயது. "பூப்பெயர் முன்னினமென்மையும் தோன்றும்" என்றவிதிபற்றிப் பூகமுகு, பூங்கமுகு என்ருயது. சணங்கவிழ்ந்த-காரியப்பொருளில் வந்த பெயரெச்சம், இது நோய் தீர்ந்த மருந்து என்பது போல அமைந்தது. காண்-அசையெனினுமமையும். வேலன்-வினையாலணையும் பெயர். எவரும் தம்முடைய நாடு முதலியவற்றை முதன்மையாகக் கருதுதல் இயற்கை யாதலின், இங்குப் பற்பலதேசங்களையும், அவற்றின் அரசர்களையும் கூறப்புகுந்த புலவர் தாமிருந்து இந்நூலை இயற்றிய நாடாகிய சோழ நாட்டையும், அந்நாட்டுக் கதிபனையும் முன்னே சிறப்பித்துக் கூறினர்.

பாண்டியனைச் சுட்டிக்காட்டல்.

135. போர்வாய் வடிவேலாற் போழப் படாதோருஞ்
சூர்வாய் மதரரிக்கட் டோகாய்கேள்—பார்வாய்ப்
பருத்ததோர்மால்வரையைப்பண்டொருநாற்செண்டால்
திரித்தகோ விங்கிருந்த சேய்.

(இ-ள்) போர்வாய்-யுத்தத்தில், வடி-கூர்மை தங்கிய, வேலால்-வேலாயுதத்தினுலே, போழப்படாதோரும்-பிளக்கப்படாத வலிமையையுடைய வீரரும், (தான்பாய்ந்தமாத்திரத்தில்) சூர்வாய்-சுழற்சியைப்பொருந்தும்படியான, மதர்-களிப்பினையுடைய, அரி-(சிவந்த) இரேகைகள்பொருந்திய, கண்-நேத்திரங்களையுடைய, தோகாய்-மயில்போன்ற தமயந்தியே!, கேள்-நீ கேட்பா

யாக, இங்கு இருந்த இவ்விடத்தில்வீற்றிருக்கிற, சேய் இராஜகுமாரன், பார் வாய்-பூமியில், பருத்தது ஓர்-பருத்ததாகிய ஒரு, மால் மேகங்கள் தங்கியிருக்கின்ற, வரையை-மலையை, (மேருவை) பண்டு-முன்னே, ஒருகால் ஒருசமயத்தில், செண்டால்-பந்தினால், (அடித்து) திரித்த நிலைகுலைந்து பெயரச் செய்த, கோ-பாண்டிய ராசனுவான்; [எ-று.]

"மால்வரையைப் பண்டொருகால் செண்டால் திரித்தகோ" என்றதனாலே இவன் பாண்டியன் என்பது தானே போதரும்; மேருவைச் செண்டாலடித்தவன் உக்கிரபாண்டியன்; இக்கதை திருவிளையாடற்புராணத்திற்காணப்படும் இங்குக்கூறியவனை உக்கிர பாண்டிய னென்றே கொள்ள வேண்டும், அன்றி அவன் வழிவந்தாரொருவனெனக்கூறின், மேருவைச்செண்டாலடித்த உக்கிர பாண்டியன் செய்கையைச் சிறப்பினால் அவனுக்கேற்றிக்கூறியதாகக் கொள்ள வேண்டும்; இங்ஙனம் ஒரு குலத்தில் ஒருவன் செய்த புகழ்ச் செய்கையை அவன் வழி வந்தாரெல்லோருக்கும் கூறுதல் இயற்கை; இங்ஙனம் ஒருவன் சிறப்பு, பெயர் முதலியவற்றை மற்றொருவனுக்குக் கூறுதல் ஆகுபெயர்வகையுள் அடக்கப்படும் இவ்வாறுகொள்ளும்போது, 'திரித்தகோ' என்பதற்கு 'திரித்தகோவின் வழியில்வந்தவன்' எனப்பொருள் விரிக்கவேண்டும். "பண்டொருகால்" என்றகுறிப்பினால் முன்னேமேருவைச்செண்டாலடித்த உக்கிரபாண்டிய னிருந்தானென்பதும், இங்குக் கூறியவன் அவன்வழிவந்தாரொருவனென்பதும் பெறப்படும். எத்தகைய வீரரும் தமயந்தியினுடைய கண்பார்வை தங்கள் மீதுபட்டமாத்திரத்திலேசுழற்சியடைவார்கள் ஆதலின், 'வடிவேலாற்போழப்படாதோரும்சூர்வாய்மதர் அரிக்கண்' என்றார் ஆசிரியர்.

போர் வாய் என்பதில் வாய்-ஏழனுருபு. போழப்படாதோரும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்புப்பொருளது சூர்த்தல்என்னுந்தொழிற்பெயர் தல்லீறு கெட்டு முதனிலைத்தொழிற்பெயராய்ச் சூர் என நின்றது தோகாய்-விளிவேற்றுமை விரி; தோகை என்னும் பெயர் ஈற்றைகாரங்கெட்டு ஆய் என்னும் விளியுருபு பெற்று வந்தது. மால் வரை என்பதற்குப் பெரிய மலையெனப் பொருள் கூறலாமெனினும், முன் பருத்தஎன்னும் உரிச்சொல் வந்திருத்தலால் அங்ஙனங்கூறல், கூறியது கூறலாமென்று, கொள்ளப்படுமாதலின் மால் மேகமாகக் கொள்ளப்பட்டது.

சோ மன்னனைக் குறித்துக் காண்பித்தல்.

136. வென்றி நிலமடந்தை மென்முலைமேல் வெண்டுகில்போற்
குன்றருவி பாயுங் குடநாடன் —நின்றபுகழ்
மாதே யிவன்கண்டாய் மானத் தனிக்கொடியின்
மீதே சிலையுயர்த்த வேந்து.

(இ-ள்.) நின்ற-நிலைபெற்ற, புகழ்-கீர்த்தியையுடைய, மாதே-பெண்ணே!, இவன்-இந்த அரசிளங்குமரன், வென்றி-வெற்றி பொருந்திய, நிலமடந்தை-

பூமிதேவியினுடைய, மெல்-மெல்லிய, முலைமேல்-தனத்தின்மீது, (அணியப்பட்ட) வெண்துகில்போல்-வெண்மையான வஸ்திரம்போல, குன்று-கொல்லி மலையில், அருவிபாயும் அருவியான துபாயப்பெற்ற, குடநாடன்-குடநாட்டிற் கதிபதியும், மானம்-பெருமை பொருந்திய, தனி ஒப்பற்ற, கொடியின்மீது-துவஜத்தின் மீது, சிலை-வில்லின் வடிவத்தை, உயர்த்த-ஏற்றிவைத்த, (அதாவது கொடியில் சிலைவடிவம் அமைத்து மேலே தூக்கிய) வேந்து-அரசனுமாகிய சேரன்; [எ-று.]

கொல்லிமலையைப் பூமிதேவிக்குத் தனமாகவும், அதன் மேலிருந்து நடுவில் வழியும் அருவியை அத்தனத்தின் மேலிடப்படும் வஸ்திரமாகவும் உருவகப்படுத்தினார் ஆசிரியர். 'வென்றி நிலமடந்தை' என்றதனால் இங்குக் குறித்த பூமி சேரன் வெற்றியினால் தனக்குள்ளடக்கப்பட்டு ஆண்டதென்பது பெறப்படும். குன்று பருமையாலும், வடிவத்தாலும் தனத்திற்குவமை. அருவி நிறத்தாலும் உருவத்தாலும் வெண்டுகிலுக்குவமை. குடநாடு மேல்நாடு; குடம்-மேற்கு. குடநாட்டுக்குச்சிறந்தகிரி கொல்லிமலையாதலின், குன்று என்பதற்குக் கொல்லிமலையென்று பொருள் கொள்ளப்பட்டது. சேரனுக்கு விற்கொடியாதலின், 'கொடியின்மீது சிலையுயர்த்த வேந்து' என்றார் ஆசிரியர். கண்டாய் என்பதும் மீதே என்பதில் ஏ என்பதும் அசை.

யதுகுலத்தரசனைச்காட்டல்.

137. ஆழிவடி யம்பலம்ப நின்றானு மன்றொருகால்
ஏழிசைநூற் சங்கத் திருந்தானும்—நீள்விசும்பில்
நற்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
செற்றானுங் கண்டாயிச் சேய்.

(இ-ள்.) வடி-கூர்மையாக்கப்பட்ட, அம்பு பாணத்தை, ஆழி-சமுத்திரத்தில், அலம்ப-கழுவும்படி, நின்றானும்-நின்றவனும், (அதாவது நின்று கழுவியவனும்) அன்று-அந்தக் காலத்தில், ஒரு கால்-ஒருசமயத்தில், ஏழ்இசை-ஏழுவகையான சுரங்களையுடைய, நூல்சங்கத்து-சங்கீத சாஸ்திர சபையில், இருந்தானும்-தலைவனாயிருந்தவனும், நீள்விசும்பில்-நீண்ட விண்ணுலகத்திலுள்ள, நல் தேவர்-நல்லதேவர்களுக்கு, தூது-தூதுவனாகி, நடந்தானும்-சென்றவனும், பாரதப் போர் பாரதயுத்தத்திலுள்ள வீரர்களை, செற்றானும்-உபாயத்தால் கொன்றொழித்தவனும், இச் சேய்-இந்தக்குமாரன்; [எ-று.]

இங்குக்கூறியவன், மதுராநகரத்தையாண்டவேந்தயதுவமிசத்தரசனாவன். ஆழிவடியம்பலம்பநின்றவனும், ஏழிசைநூற் சங்கத் திருந்தானும் யதுகுலத்தானாகியஹைஹயன் மரபிற் றோன்றிய கார்த்தவீரியார்ச்சுனன்; இவன் ஒரு காலத்தில் நருமதாநதிசங்கமத்தருகே, தன்னிடம் அகப்பட்டிருந்தஇராவணனை மீட்கவந்தஇராக்ஷதரைக்கொன்று கடலிலே ஆயுதத்தைக்கழுவினான்; மற்றொருகாலத்தில், நாரதமுனிவருக்கும், விசுவாவசு என்னுங் கந்தருவனுக்கும்

சங்கீதத்தில் தர்க்கம்நேர்ந்தபோது அச்சங்கீதசபையில் தலைவனுபிருந்தான். நீள் விசும்பில் நற்றேவர் தூது நடந்தானும், பாரதப்போர் செற்றானும் ஸ்ரீகிருஷ்ணன். இவர் பாண்டவர் பொருட்டுத் துரியோதனனிடத்தில் தூது நடந்ததும், பாண்டவர்க்குத் துணையாய்நின்று பாரதப்போரைமுடித்ததும் உலகப்பிரசித்தம். இங்கே 'நற்றேவர்' என்றுகூறியது பாண்டவர்களை; அவர்கள் தேவர்களின் அமிசமாகவே பிறந்தவர்களாதலின் தேவரெனப்பட்டார். சார்த்தவீரியார்ச்சுனனுடையசெய்கையையும் கிருஷ்ணனுடையசெய்கையையும் அவர்களுக்குப்பின்தோன்றியயதுகுலமன்னனொருவன்மேலேற்றிக்கூறினார் ஆசிரியர். இங்ஙனங் கூறியது குலச்சிறப்புவிளங்குதற்கென்க. மிக்ககீர்த்தி பெற்றவர்களுடையசெய்கையை அவர்களுடையகுலத்திற்பிறந்த ஒருவன்மேல்சிறப்புநோக்கிஇங்ஙனம்ஏற்றிக்கூறுதல் புலவர்களுடைய வழக்கம். கிருஷ்ணன்நளனுக்குப் பிற்காலத்தவனுயிருக்க அவனுக்கும் பிற்பட்ட ஒருவனை இங்ஙனங் கூறிய தென்னையோ வெனின், அவன், இக்கவிக்கு முற்பட்டவனாதலின் கவிவழக்காற்கூறியதென்க; இராமாயணத்தில் கம்பர், சடையப்பவள்ளலைக் கூறியது போலவும், இந்நூலில் இவ்வாசிரியர் முரணை நகரையும் சந்திரன் சுவர்க்கியையும் கூறியதுபோலவும் இதைக் கொள்ள வேண்டும்.

ஆழி-ஆழத்தையுடையது. அலம்பஇன்றான் எனவேகழுவினான் என்பது தானே அமையும், அன்று சேய்மைச்சுட்டு; இது முன் சென்ற காலத்தைக் குறிக்கும். ஒருகால் என்பது அக்காலத்திலே அச்செய்கைநடந்த சமயத்தைக் குறிக்கும்; போர் என்ப தாகுபெயராய்ப் போரிலுள்ள வீரரைக் குறிக்கும் மகாவிஷ்ணுபூமிபாரம் தீர்த்தற்பொருட்டுக்கிருஷ்ணனாக அவதரித்துப்பாண்டவர் துரியோதனாதியர் ஆகிய இருவகையார்க்கும் போர்நிகழச்செய்து அப்போரில் ஐம்பத்தாறு தேசத்திலுள்ள அரசர்களையும் படைகளுடன் குழுமுவித்து முடிவில் பாண்டவர் தவிர மற்ற எல்லோரையுமே ஒழிவித்தனராதலின் அச் செயலுக்கேற்ப ஆசிரியர் அக்கிருஷ்ணனைப் 'பாரதப்போர் செற்றான்' என்றார். கண்டாய்-அசை.

குருநாடனைக் கூறுதல்.

138 தெரிய லிவன்கண்டாய் செங்கழுநீர் மொட்டை
அரவின் பசுந்தலையென் றஞ்சி—இரவெல்லாம்
பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புட் டாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன்

(இ-ள்.) தெரியல்-மாலையை அணிந்த, இவன்-இவ்விராஜகுமாரன், செங்கழுநீர்-செங்கழுநீரின், மொட்டை-அரும்பை, அரவின்-பச்சைப் பாம்பினுடைய, பசுந்தலைஎன்று-பசுமையாகிய தலையென்று நினைத்து, அஞ்சி-பயந்து இரவு எல்லாம்-இராத்திரி முழுவதும், பிள்ளைக்குருகு-குஞ்சாகிய அன்னம்; இரங்க-ஒலியிட்டுக்கதற, பேதை-அறியாமையை யுடைய, புள்-அதன் தாயா

ஙியபறவை, (அக்குஞ்சு உறங்கும் பொருட்டுத்) தாலாட்டும் - தாலாட்டிக் கொண்டிருக்கின்ற, வள்ளை-வள்ளைக் கொடிகள் மிகுந்திருக்கும், (நீர்வளம் பொருந்திய மருதநிலத்தையுடைய) குருநாடர் குருநாட்டிலுள்ளவர்களுக்கு, மன்-அரசன், கண்டாய்-நீ அறிவாய். எ-று.

நீர்த்தடாகத்தின் ஓரத்திலுள்ள செழித்தசெடிகளில் பச்சைப்பாம்புகள் தலையைநீட்டிக்கொண்டிருப்பது இயற்கையாதலின் அவற்றைப்போன்றிருக்கும்செங்கழுநீர் அரும்பைக்கண்டு அத்தடாகத்திலுள்ள அன்னக்குஞ்சுபயந்து கதறும் அங்ஙனம்அது தூங்காமற் கதறவே,அதன்காரணத்தைஉணராமல் தாய்ப்பறவை அக்குஞ்சைத் தூங்கவைக்கும்பொருட்டு இரவு முழுவதும் ஓயாமல்தாலாட்டிக்கொண்டிருக்கும். இங்ஙனம்அன்னக்குஞ்சு செங்கழுநீர் அரும்பைப் பச்சைப்பாம்பின் தலை யென்று மயங்கியதாகவும், அதன் தாய் அக்காரணத்தையுணராமல் தாலாட்டியதாகவுங் கூறியதனால் இது மயக்கவணியாம். இங்ஙனம் கூறியதனால் குருநாடு நீர்வளம்மிக்க மருதநிலத்தையுடைய தென்பதுபெறப்படும். இந்நாடு ஆதியிலேசந்திரகுலத்திற்பிறந்தகுருவென்பவனால் அமைக்கப்பட்டதாதலின் குருநாடெனப்பெயர் பெற்றது. 'பிள்ளைக்குருகிரங்கப்பேதைப்புள் இரவெல்லாம் தாலாட்டும்' என இயைக்க குருகு என்பதற்குநாரைஎனப்பொருள்கூறினும்அமையும். செங்கழுநீர்ப்பூ-நீர்ப்பூவகைகளில் ஒன்று இதன் அரும்பு பச்சைப் பாம்பின் தலையைப் போன்றிருக்கும்; அரவு என்பது பெரும்பான்மையும் ஸர்ப்பத்தை உணர்த்து மெனினும் பாம்பின் பொதுப் பெயராதலின், அதற்கு இங்கே பச்சைப்பாம்பெனப் பொருள் கொளப்பட்டது. 'பசுந்தலை' என்றுகூறியவதனால், பசுசைப்பாம் பென்பது தானே போதரும். பிள்ளையென்னும் பெயர் இங்குப் பறவைக் குஞ்சுக்குவந்தது. 'பேதைப்புள்' என்ற குறிப்பால் அது பெண்பறவை என்பது பெறப்படும்.

'தெரியிலிவன்'எனவும் பாடபேதமுண்டு; அங்ஙனங்கொள்ளின் 'தெரியில்' என்பதற்கு 'ஆராயுமிடத்து' எனப்பொருளுரைக்க வேண்டும். இயல்பு பற்றியகாலவழுவமைதியால்காண்பாய் என்பதுகண்டாய்என வந்தது. 'கண்டாய்' என்பதற்குப்'பார்த்தனையா' எனப்பொருளுரைத்தலு மொன்று; இனி அதனை அசை யெனினும் அமையும். இரங்குதல் ஒலித்தல்;அஃதிங்கே கதறுதற் பொருளில் வந்தது. வள்ளை-ஒருவகை நீர்க்கொடி.

மத்திர தேசத்தரசனைக் கூறல்.

139. தேமருதார்க் காளை இவன் கண்டாய் செம்மலர்மேல்
காமருசங் கீன்ற கதிர்முத்தைத்-தாமரைதன்
பத்திரத்தா லேற்கும் படுகர்ப் பழனஞ்சூழ்
மத்திரத்தார் கோமான் மகன்.

(இ-ள்.) தேம்-வாசனை, மரு-பொருந்தியிருக்கின்ற,தார் மாலையையணிந்த, காளை-குமரனாகிய, இவன்-இம் மன்னன், தாமரை-தாமரைக் கொடியானது, தன்-தன்னுடைய, செம்மலர் மேல்-சிவந்தபுஷ்பத்தின்மேலே, காம

விரும்பும்படியான, சங்கு-சங்கமானது, ஈன்ற-பெற்ற, கதிர் பிரகாசம் பொருந்திய, முத்தை-முத்தினை, (அது நழுவிக்கீழே விழுங்காலத்தில்) பத்திரத்தால்-இலையினாலே, ஏற்கும்-தாங்கிக் கொண்டு பிரகாசத்தைச் செய்கின்ற சிறப்பினையுடைய, படுகர்-பள்ளங்களையுடைய, பழனம்-மருத நிலமானது, சூழ்ந்த - சூழ்ந்திருக்கப் பெற்ற, மத்திரத்தார் - மத்திர தேசத்தாருடைய, கோமான்-அரசனது, மகன்-குமாரனுவான். எ-று.

சூல் முதிர்ந்த சங்குகள் தாமரைமலர்களில்ஏறி முத்துக்களையீனும்.தாமரைமலரின் இதழ்கள் வழவழப்புடையன வாதலின் அம்முத்துக்கள் அவற்றில் நில்லாமல் நழுவிக் கீழே விழும்; அங்ஙனம் விழுங்காலத்தில் அம்மலர்களினடியில் தாமரையிலைகள் விரிந்திருக்குமாதலின் அவற்றின்மீது வீழ்ந்து தங்கிப் பிரகாசிக்கும். இத்தகைய காட்சியையுடைய நீர்ப் பள்ளங்கள் ஆங்காங்கே அமைந்திருக்க மருதநிலம் விளங்குமாதலின், "கதிர்முத்தைத் தாமரைதன் பத்திரத்தா லேற்கும் படுகர்ப்பழனம்" என்று மருத நிலத்தைச் சிறப்பித்துக் கூறினார் ஆசிரியர். இதனால் மத்திர தேசமானது மிக்க நீர்வளமும் நிலவளமும் பொருந்திய தென்பது பெறப்படும்.

தேமருவு, காமருவு என்பன ஈற்றுகரங்கெட்டு தேமரு,காமரு எனநின்றன. காமுதல் என்னுந் தொழிற் பெயர் தல்லீறும் உகரச சாரியையுங்கெட்டுக்காம் எனப்பகுதி மாத்திரமாய் நின்று மரு என்பதனோடு புணர்ந்தது; காமுதல்-விரும்புதல், மருவுதல்-பொருந்துதல்; காமுதல் மருவு என்பதற்கு விரும்புதல் பொருந்திய என்று பொருளாம்; ஆதலின், 'காமரு' என்பதற்கு 'விரும்பும்படியான' என்று பொருள் வரையப்பட்டது. குமரனைக்காளை என்றது உவப்பினால் வந்த மரபுவழுவமைதி. கண்டாய் என்பதை மேலைச்செய்யுட்களிற் கூறியவாறே கொள்க. ஈன்ற-பெயரெச்சம். கதிர்முத்து இரண்டாம் வேற்றுமைத் தொகை. பத்திரம்-வடசொல்.

மச்ச தேசத்தரசனைக் கூறல்.

140. அஞ்சாயன் மானே இவன்கண்டா யாலைவாய்
வெஞ்சாறு பாய விளைந்தெழுந்த-செஞ்சாலிப்
பச்சைத்தாள் மேதிக் கடைவாயிற் பாலொழுகும்
மச்சத்தார் கோமான் மகன்.

(இ-ள்.) அம்-அழகிய, சாயல்-நிறத்தினையுடைய, மானே-(பார்வையால்) மானைப் போன்றவளே!, இவன்-இவ்விராஜ குமாரன், ஆலைவாய்-கரும்பை ஆட்டும் ஆலையினின்றும் பெருகுகின்ற, வெம்-விருப்பத்தையுடைய, சாறு-கருப்பஞ்சாறானது, பாய-பாய்தலினாலே, விளைந்து எழுந்த-செழிப்பாக உற்பத்தியாகி நெல்விளையப் பெற்று வளர்ந்தோங்கிய, செம்சாலி-செந்நெற் பயிர்களின், பச்சைத்தாள்-பசுமையான தாள்களால், (அதாவது அத்தாள்களை மெல்லுவதால்) மேதி-எருமைகளினுடைய, கடைவாயில் - வாயின்

கடைப்பாகத்தில், பால் ஒழுகும்-பால்போல வெளுத்த இரசம் ஒழுகுகின்ற, மச்சத்தார்-மச்ச தேசத்தாருடைய, கோமான்-அரசனது, மகன்-புத்திரன்,

மருத நிலத்தில் ஆலைகளிற் கரும்பையிட்டு ஆட்டிச் சாறெடுக்கப்படும். அப்பொழுது அவ்வாலைகளினின்றும் வெளிப்படும் சாறானது பெருக்கெடுத்தோடி நிலங்களிற்பாய்ந்து அவற்றிலுள்ள செந்நெற் பயிர்களைச் செழிப்பாக வளர்ந்தோங்கச் செய்யும்; அவற்றின் பசுந்தாளை எருமைகள் கடித்துத்தின்னும்பொழுது அவற்றில் பால் பிடித்திருக்கும் அரைவிளைச்சலான நெற்கள் மெல்லப்படுவதால், அந்த எருமைகளின் கடைவாயில் பால்போன்ற இரசம் பெருகி வழியும். கருப்பஞ்சாற்று மிகுதியும், நெற்செழிப்பும், எருமையின் நுகர்ச்சியும் கூறப்பட்டதால் இந்நாட்டின் நீர்வளமும் நிலவளமும் மேம்பட்டனவென்பது விளங்கிற்று. இந்நாட்டில் நீர்வளம் மிகுந்திருப்பதால் எவ்விடத்தும் பற்பலவகை மீன்கள் அதிகரித்திருக்கும்; இக்காரணம் பற்றியே இந்நாடு மச்சநாடெனப்பட்டது.

மான்-உவமையாகு பெயர். கண்டாய் என்பதற்கு முன் பாடல்களிற் பொருள் கொண்டது போலக்கொள்க. ஆலைவாய் என்பதில் வாய்-ஏழனுருபு. வெம்மையென்னும் பண்படிமை மீறுகெட்டு வெம் என நின்றது. இஃது இங்கே விருப்பத்தை உணர்த்திற்று. சாறு ஸாரம் என்னும்வடசொல் விகாரம். சாலி-ஸாலீ என்னும் வடசொற்றிரிபு. மச்சம்-மத்ஸ்யம் என்னும் வடமொழித் திரிபு. பச்சை-பசுமை யென்பதன் மையீறு கெட்டு ஐ விகுதிபெற்றுத்தன்னொற் றிரட்டியது. வாய்க்கடை யென்பது கடைவாய் என முன்பின்னாக மாறிற்று. இஃது இலக்கணப்போலி யெனப்படும். கோமான் என்பதில் மான்-பெயர் விகுதி.

அவந்தி நாட்டரசனைக் கூறுதல்.

141. வண்ணக் குவளை மலர்வவ்வி வண்டெடுத்த
பண்ணிற் செவிவைத்தப் பைங்குவளை-யுண்ணா
தருங்கடா நிற்கு மவந்திநா டாளும்
இருங்கடா யானை யிவன்.

(இ-ள்.) இவன்-இந்த இராஜகுமாரன், வண்ணம்-அழகு பொருந்திய, குவளை மலர்-நீலோற்பல மலரை, வவ்வி, வாயாற்கவ்வி, வண்டு-வண்டுகள், எடுத்த உயர்த்திப்பாடிய, பண்ணில்-பாட்டில், செவிவைத்து-காதைச்சேர்த்து, (அப்பாடலின் இனிமையை அச்செவியின் வழியாகக் கிரகித்து அந்த ஆனந்தபரவசத்தால்) அப்பைங்குவளை-(முன்னே தின்னும் பொருட்டுவாயிற் கவ்விய) அந்தப் பசுமையான நீலோற்பலத்தை, உண்ணாது - தின்னாமல், அருங்கடா-அருமையான எருமைக் கடாக்கள், நிற்கும் - மௌனமாய் நிற்கின்ற, அவந்திநாடு - அவந்திதேசத்தை, ஆளும்-ஆட்சி புரிகின்ற, இரும்-பெரிய, கடாயானை-ஆண்யானை போன்றவன்; [எ-று.]

தின்னுதற்கு நீலோற்பலத்தைப் பறித்து வாயிற் கவ்விய எருமைக் கடாக்கள், வண்டுகளின் இசையைக் கேட்டவுடனே அவ்வானந்தத்தின் மூழ்கி மனம் ஸ்தம்பித்து அந்நீலோற்பலத்தை மெல்லாமல் நிற்கும். ஒன்றில் மனமுழுவதையும் செலுத்தியவர்கள், வேறெந்த விஷயத்திலும் புத்தியைச் செலுத்தாமல் ஸ்தம்பித்து நிற்பது உலக வியற்கை. இவ்வாறு எருமைக் கடாக்களும் வண்டின் இசையைக்கேட்டு, வாயிலுள்ள இரையை மெல்லாமல் நிற்குமென்றதனால் அந்நாட்டில் நீர்வளமிக்க மருத நிலமும், சோலையும் செழித்திருக்கு மென்பது பெறப்படும். இங்ஙனம் எருமைக் கடாக்களே இசையில் மிக்கவிருப்பமுடையனவா யிருந்தன வென்று கூறியதனால் அந்நாட்டிலுள்ளார் சங்கீதத்தில் அளவற்ற அவாவுடையவர்களா யிருப்பார்களென்பது சொல்லாமலே அமையும்.

எடுத்தல்-உயர்த்துதல்; அஃதிங்கே உயர்த்திப் பாடுதலை உணர்த்திற்று, அவந்திநாடு மாளவதேசம், யானை-அவந்தி தேசாதிபதிக்கு உவமையாகு பெயராய் வந்தது.

பாஞ்சால மன்னனைக் காட்டல்.

142. விடக்கதிர்வேற் காளை இவன்கண்டாய் மீனின்
தொடக்கொழியப் போய்நிமிர்ந்த தூண்டில்-மடற்கமுகின்
செந்தோடு பீறித்தேன் செந்நெற் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன்.

(இ-ள்.) விடம்-விஷம் பொருந்திய, கதிர்-பிரகாசமுள்ள, வேல்-வேலாயுதத்தையுடைய, காளை-குமரனாகிய, இவன்-இம்மன்னன், மீனின்-மச்சங்களின், தொடக்கு-சிக்குதல், ஒழிய-நீங்க, (அதாவது மீன்பட்டுத் தூக்கும் போது அம்மீன் தான் சிக்கிக் கொண்டிருந்த முள்ளை விட்டுப் பறிபட்டு வீழ்ந்து விட விசை கொண்டு தூக்கிய வேகத்தால்). போய்-மேலேசென்று, நிமிர்ந்த-உயர்ந்த, தூண்டில்-தூண்டிலின் முள்ளானது, மடல்-பாளைகளையுடைய, கமுகின்-பாக்குமரத்தின், செம்தோடு-சிவந்த பூவிதழ்களை, பீறி-கிழிக்க, (அவற்றிலிருந்து வடியும்) தேன்-தேனானது, செந்நெல் செந்நெற்களின், பசும் தோட்டில்-பசுமையான குருத்திலைகளிலே, வந்து ஓடு-வந்து பாய்கின்ற, (மருதநிலச் சிறப்பையுடைய) பாஞ்சாலர்-பாஞ்சால தேசத்தாருடைய; மன்-இறைவன்; [எ-று.]

தடாகங்களில் தூண்டில்போட்டு மீன்பிடிப்பவர்கள், அத்தூண்டிலில் மீன் சிக்கியதுணர்ந்து அதனை விசைகொண்டு மேலேதூக்குவார்கள். நீரைவிட்டு வெளியில் வந்தவுடனே சிலமீன்கள் கனத்தால் முள்ளினின்றும் பறிபட்டு நீரில் வீழ்ந்துவிடும். அங்ஙனம் விழவே அம்மீன்களின் கனத்தால் அத்தூண்டிலில் ஏற்பட்டிருந்த வளைவு நிமிர்வதாலும், தூண்டிற்காரர் முன்னே சுண்டி இழுத்த விசையாலும், அத்தூண்டில் மிக்க விசையாக மேலே

நிமிர்ந்து கரையில் நிற்கும் கமுகமரங்களின் பாளைகளிற்றாக்க, அதன் முன் விளுல் அப்பாளைகளிலுள்ள மலர்கள் கிழிந்து அவற்றிலிருந்து தேனொழுகும். அத்தேன், அக்கமுகமரங்களி னடியிலிருக்கும் செந்நெற் பயிரகளின் குருத்திலைகளிற் பாயும் இங்ஙனம் தேன்பாயும் பாஞ்சாலநா டெனவே, அந்நாடு நீர்வளமும நிலவளமும் மிக்க தென்பது விளங்கும்.

ஆயுதங்களை விடந்தோய்த்துச் செய்தல் இயல்பு; ஆதலின், 'விடக்கதிர் வேல்' என்றார் புலவர். கண்டாய்-அசை. தொடக்கு-சிக்கு; தொழிற் பெயர். தூண்டில் என்பது அதின் நுனியிலுள்ள முள்ளைக்குறிக்கும், பசுந்தோட்டில் என்பதில் தோடு-இலை. செந்நெல் என்பது சிவந்தநெல்லா லுண்டாகிய பயிரை உணர்த்திநின்றது.

கோசல நாட்டரசனைக் காட்டல்.

143. அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலில்
செந்நெ லரிவார் சினையாமை-வன்முதுகில்
கூனிருப்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்
தேனிருந்த சொல்லாயிச் சேய்.

(இ-ள்) தேன்-தேனினுடைய இனிமையானது, இருந்த-பொருந்தியிருக்கின்ற, சொல்லாய்-வார்த்தையை உடையவளே!, இச்சேய் இவ்விராஜகுமாரன், அன்னம்-அன்னப் பறவைகளை, துயில் - தூக்கத்தினின்றும், எழுப்ப- (ஓசையானது) எழுப்பும்படி, அம்-அழகிய, தாமரை வயலில்-தாமரைகள் நிறைந்தவயல்களிலே, செந்நெல்-செம்மையான நெற்கதிர்களை, அரிவார்-அறுக்கிற பள்ளர்கள், சினை ஆமை-கருக்கொண் டிருக்கின்ற ஆமைகளின், வன்முதுகில்-வலிமை பொருந்தியமுதுகிலே, கூன் இருப்பு-அரிவாளை தீட்டும்-கூர்மையாக்கும் பொருட்டுத் தீட்டுகின்ற, குலம்-மேலான இனத்திற் சேர்ந்த, கோசல நாடன்-கோசல நாட்டரசன்; [எ-று.]

வயல் ஓரங்களில் தாமரைகள் மலர்ந்திருக்கும்; அம்மலர்களில் அன்னங்கள் நித்திரை புரியும்; அப்போது பள்ளர்கள் நெற் கதிர்களை அறுக்கும் பொருட்டு அரிவாளை ஆமையின் முதுகில் தீட்டுவார்கள்; அவ்வாறு தீட்டுவதாலுண்டாகும் ஓசையைக் கேட்டு மேற்கூறிய அன்னங்கள் நித்திரை விட்டெழும். இங்ஙனங் கூறியதால் அந்நாட்டின் மருதநிலச் சிறப்பு விளங்கும். ஆமை முதுகில் பள்ளர்கள் அரிவாளைத் தீட்டுதல் வழக்கம். இறந்துபோன ஆமையின் முதுகோட்டிலேயே அவர்கள் பெரும்பாலும் அரிவாளைத் தீட்டுவதுண்டு. ஆதலின் இங்கே 'சினையாமை வன்முதுகில்' என்பதை, 'சினையாயிருந்து இறந்துபோன ஆமையின் முதுகில்' என்று கொள்ள வேண்டும்; உயிருடனிருக்கும் ஆமையின் முதுகில் என்று கொள்ளலாகாது. உயிருள்ள ஆமையின் முதுகில் அரிவாள் தீட்டுதல் அசம்பாவிதமாம். சினையாமையின் முதுகு வன்மையா யிருக்குமாதலின் இங்கு அதனைக் கூறினார் ஆசிரியர்.

எழுப்ப என்னும் வினையெச்சம், அரிவார் என்ற முற்றோடும், தீட்டும் என்ற பெயரெச்சத்தோடும் முடியும். செந்நெல்-ஆகு பெயராய்க் கதிரை உணர்த்திற்று. கூனிரும்பு-வளைவாகிய இரும்பு; கூன்-வளைவு; இரும்பு என்பதாகுபெயராய்அதனாலாம் கருவியை உணர்த்திற்று. குலம்-வமிசம்; இதனை இராஜகுமாரனுக் கடையாக்குக. தேன்என்பது அதன் இனிமையைஉணர்த்திற்று. "முக்காலத்தினு மொத்தியல் பொருளைச் செப்புவர் நிகழுங் காலத் தானே" என்ற விதிப்படி, 'தேனிருக்கும்' என முக்காலத்திற்கும் பொருத்தமாக இருக்கவேண்டியது, 'தேனிருந்த' என இறந்தகாலங்காட்டிவந்தது காலவழுவமைதியென்க. சேய்-செம்மை யென்னும் பண்புப்பெயரின் விகாரம்; "ஈறுபோதல் ....." என்னும் சூத்திரவிதி பற்றி இங்ஙனமாயது; இச்சொல் முதலிற்பண்பாகுபெயராய்ச்செந்நிறமுடைய முருகக்கடவுளையுணர்த்திப் பின்பு உவமையாகு பெயராய் அக்கடவுளைப் போன்ற இராஜகுமாரனையுணர்த்திற்று; இஃதிங்ஙனம் வந்ததால் இருமடியாகு பெயரெனப்படும்.

மகத தேசத்தரசனைக் கூறல்.

144. புண்டரிகந் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல்
வண்டிரியுந்தெண்ணீர் மகதயர்கோன்-எண்டிசையில்
போர்வேந்தர் கண்டறியாப் பொன்னாவம் பின்னுடைய
தேர்வேந்தன் கண்டாயிச் சேய்

(இ-ள்) எண்திசையில்-எட்டுத்திக்குகளிலும் உள்ள, போர்வேந்தர்-யுத்தத்தில் வல்லவராகிய அரசர்கள், கண்டறியா-பார்த்தறியாத,பொன்-பொன்னாற்செய்யப்பட்ட, ஆவம்-அம்புக்கூட்டை, பின் உடைய முதுகின்புறத்திலுள்ள, தேர்-இரதத்தையுடைய,வேந்தன்-அரசனாகிய, இச்சேய்-இவ்விராஜகுமாரன், புண்டரிகம்-செந்தாமரை மலர்கள், தீஎரிவபோல்-அக்கினிபிரகாசிப்பதுபோல,விரிய மலர, (அதன்மேல்)பூம்புகைபோல்-அழகிய புகையைப்போல, வண்டு-வண்டுகள், இரியும் (தேனைக்குடித்து அதைவிட்டுநீங்கி மேற்பாகத்தில்) பறந்து திரிகின்ற, தெண்ணீர்-தெளிவான நீர் வளத்தையுடைய, மகதயர்கோன் - மகத தேசத்தார்க்கு மன்னன்; [எ-று.]

தடாகங்களில்உள்ள தாமரைப் புஷ்பங்கள் மலர்ந்திருப்பது அக்கினி சொலிப்பதுபோன்றிருக்கும்; அம்மலர்களிற் சேர்ந்துதேனைப்பருகி அவற்றினின்றும் நீங்கி மேலேபறக்கும்வண்டுகள் அந்த அக்கினியிலிருந்து கிளம்பும் புகையைப்போன்றிருக்கும். இத்தகையதாமரைகள் மலர்ந்த நீர்ப்பெருக்கையுடைய மகதம்என்றதனால் அந்நாடு நீர்வளம்மிக்கதென்பதுபெறப்படும் அரசர்களுடையமுதுகில்அம்புக்கூடு.கட்டப்பட்டிருக்கும்;அவர்கள்யுத்தஞ்செய்யுங்காலத்தில் தோற்றோடுவார்களாயின் அவர்கள் முதுகு எதிரிகளுக்குத் தெரியும்: அதனால்அங்கே கட்டப்பட்டிருக்கும் அம்புக்கூடும் தெரியும்; இங்ஙனம் அவர்கள் புறமுதுகு காட்டியோடாமல் வீரத்தோடு எதிர்த்து நின்று பகைவர்களிடம் யுத்தம் புரிந்து ஜெயம் பெறுவார்களாயின் அவர்களுடைய

முதுகையும், அம்புக் கூட்டையும் எதிரிகள் காணுதல் முடியாது. இவ்வாறு புறமுதுகிடாதவனே சுத்த வீரனாவான்; ஆதலின் இவ்வரசன் அஷ்டதிக்குகளிலுமுள்ள அரசர்களுக்கும் சண்டையில் பின்னிடாதவன் என்பது தோன்ற "எண்டிசையில் போர்வேந்தர் கண்டறியாப் பொன்னுவம் பின்னுடைய தேர்வேந்தன்" என்றார் ஆசிரியர். இதனால் இம்மன்னன் ஒப்பற்ற வீரனென்பது பெறப்படும்.

நிறத்தாலும் உருவத்தாலும் தாமரை மலருக்கு நெருப்பும், வண்டுக்குப் புகையும் உவமை கூறப்பட்டன; இவை பண்புவமை யெனப்படும். புண்டரிகம்-புண்டரீகம் என்னும் வடசொல் விகாரம். எரிவ-எரிவது என்பதன் விகாரம். இரிதல்-நீங்குதல். தென்னீர் பண்புத்தொகை. மகதம்-வடசொல். எட்டுத்திசை கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்பன. திசை-திசா என்றவடசொற்றிரிபு. போர்-தொழிற்பெயர்; பொருதல் என்பது தல்லீறுகெட்டு முதனிலைதிரிந்து போர் என்றாயது. வேந்தன்-முற்றெச்சம்; வேந்தனாகிய இச்சேய் மகதயர் கோன் எனக் கூட்டவேண்டும். கண்டாய் என்பதை மேலைச் செய்யுட்களிற் கொண்டது போலக் கூட்டிப் பொருள் கொள்க.

அங்கநாட்டதிபனைக் காட்டல்.

145. கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோடிடறித்
தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால்-வான்கடல்வந்
தந்தோ வெனவெடுக்கு மங்கநா டாளுடையான்
செந்தேன் மொழியாயிச் சேய்.

(இ-ள்.) செந்தேன் சிவந்த தேன்போன்ற (இனிமை வாய்ந்த), மொழியாய்-சொல்லையுடையவளே!, இசேய்-இந்தஇராஜகுமாரன், கூன்-வளைவான, சங்கின் பிள்ளை-சங்கின் பிள்ளையானது, கொடிப்பவளக்கோடு-கொடியாகிய பவளத்தின்கொம்பில், இடறி-தடுக்குதலுற்று, தேன்கழியில்-தேனோடு கலந்திருக்கும் உப்புக்கழியில், (அதாவது சமுத்திரத்தின் பக்கத்தில் வந்துபாயும் உப்பாற்றிலே) வீழ-வீழ்ந்து அங்குள்ள உவர்ச் சேற்றிலழுந்தி வெளிப்பட முடியாமல் வருந்த, (அதுகண்டு) வான்கடல்-பெரிய சமுத்திரமானது, (அதன் வருத்தத்திற்கு) அந்தோ என-ஐயோ என்று இரங்கி, திரைக்கரத்தால்-அலையாகியகையினால், எடுக்கும்-எந்துகின்ற, (கடல் வளத்தையுடைய) அங்கநாடு அங்கதேசத்தை, ஆளுடையான் ஆளுதலை யுடையவன்; [எ-று]

சமுத்திரத்தில் வாழும் சங்கின்பிள்ளையானது நீரில் சஞ்சரிக்குங்காலத்தில் ஆங்குள்ள கொடிப்பவளக் கொம்பில் இடறி அவ்வேகத்தால் அச்சமுத்திரத்தில்வந்துபாய்ந்து கொண்டிருக்கும் உப்பாற்றின் சேற்றில் வீழ்ந்து அதைவிட்டு வெளியேற முடியாமல் வருந்தும்; அப்போது சமுத்திரத்தின் அலையானது அவ்விடத்தில் மோதித் திரும்புகையில் அவ்விளஞ்சங்கை எந்திக்

கொண்டு வந்து விடும்; அலை இரைந்து செல்வது சமுத்திரம் சங்கின் பொருட்டு ஐயோவென்றிரங்கினதாகக்குறிப்பிடப்பட்டது. அலை சமுத்திரத்திற்குக் கையாக உருவகிக்கப்பட்டது. இவ்வாறு சங்கு சமுத்திரம் முதலியவற்றின் செய்கைகளைச் சிறப்பித்துக் கூறியவதனால் அங்கதேசம் கடல்வளம் மிக்கதென்பது பெறப்படும்.

கழி உப்பாறு; இதில் மருதநிலச சார்பான வெள்ளமும் வந்து பாயக் கூடுமாதலின் அங்கிருந்துவந்த தேனுங் கலந்திருக்கும்; அதுபற்றியே தேன் கழி யென்று சிறப்பித்தார் ஆசிரியர். ஆள்தல் என்னுந் தொழிற் பெயர் தல்லீறு கெட்டுப் பகுதியளவாய் ஆள் என நின்று உடைய வென்பதனோடு புணர்ந்து ஆளுடைய வென்றாயது.

கலிங்க தேசத்தரசனைக் கூறல்.

146. வெள்வாளைக் காளைமீன் மேதிக் குலமெழுப்பக்
கள்வார்ந்த தாமரையின் காடுழக்கிப்-புள்ளோடு
வண்டிரியச் செல்லு மணிநீர்க் கலிங்கர்கோன்
தண்டெரியற் றேர்வேந்தன் றான்.

(இ-ள்) தண்-குளிர்ச்சிபொருந்திய, தெரியல்-மாலையைஅணிந்த, தேர்-இரதத்தையுடைய, வேந்தன் - இவ்வரசன், வெள்வாளை - வெண்மை நிறம் பொருந்திய வாளைகளென்கின்ற, காளைமீன்-இளம் பருவமுள்ள மீன்கள், மேதிக்குலம்-எருமைக் கூட்டத்தை, எழுப்ப மடிகளில் மோதி எழுப்பிவிட, (அவை எழுந்து) கள்வார்ந்த-தேன் ஒழுகுகின்ற, தாமரையின் காடு-தாமரை வனத்தை, புள்ளோடு-பறவைகளுடனே, வண்டு - வண்டுகள், இரிய-பயந்தோதுங்குப்படி, உழக்கி-கலக்கிச்சிதைத்து, செல்லும்-போவதற்கிடமாகிய, மணி-முத்தைப்போல் தெளிந்த, நீர் நீர்த் தடாகங்களை யுடைய, கலிங்கர் கோன்-கலிங்க நாட்டார்க் கதிபதி, [எ-று.]

தடாகங்களில் நீர் பெருகி இருப்பதால், எருமைகள் களித்து அவற்றிற் போய்ப்படுத்திருக்கும். அப்போது நீரிற் களித்து விளையாடும் வாளைமீன்கள் அவ்வெருமைகளின் பால்மடியிற் பாயும்; அப்பாய்ச்சலால் அவ்வெருமைகளுக்குச் சிறிது உபத்திரவ முண்டாகும். அதனால் அவை பயந்தெழுந்து வெளியேறியோடும்; அங்ஙனம் ஓடும் வேகத்தால், தாமரைகள் சிதையும்; அத்தாமரையிற்சேர்ந்திருந்த பறவைகளும் வண்டுகளும் பயந்துஅதைவிட்டு நீங்கிப்பறக்கும். ஆசிரியர் இவற்றைக் கூறியதன் மூலம் நீர்வளத்தை விளக்கிக்காட்டியபடியால் அந்நாடு நீர்நிறைந்த தடாகங்கள் மலியப்பெற்றதென்பது விளங்கும். தாமரையின்காடு-ஆறன்தொகைப் பொருளது.

வாளை மீன்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை; காளைமீன் என்பதும் அங்ஙனமே கொள்ளப்படும். மேதிக்குலம் - ஆறும் வேற்றுமைத் தொகை. எழுப்ப வினையெச்சம்; இது, செல்லும் என்னும் பெயரெச்சத்தோடு முடி

யும் வார்ந்த-பெயரெச்சம். காழி உழக்கி இரண்டாம் வேற்றுமைத்தொகை. புள்ளோடு வண்டு-உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர். இரிய-வினையெச்சம். நிறம்பற்றி நீருக்கு முத்து உவமைகூறப்பட்டது. தேர்வேந்தன்-இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனுமுடன் றொக்கதொகை. செல்லும் என்னும் பெயரெச்சம் நீர் என்னும் இடப்பெயர் கொண்டு முடிந்தது. தான்-அசை.

கேகயர் கோனைக் கூறுதல்.

147. அங்கை வரிவளையா யாழித் திரை கொணர்ந்த
செங்கண் மகரத்தைத் தீண்டிப்போய்க்-கங்கையிடைச்
சேல்குளிக்குங் கேகயர்கோன் தெவ்வாடற் கைவரைமேல்
வேல்குளிக்க நின்றானிவ் வேந்து.

(இ-ள்.) வரி-கீற்றுக்களையுடைய, வளை-வளையலை யணிந்த, அங்கையாய்-அழகிய கையையுடையவளே, தெவ் பகைவர்களுடைய, ஆடல் போர் செய்தலையுடைய, கை-புஜமாகிய, வரைமேல்-மலையின் கண், (யுத்தஞ் செய்யுங்காலத்திலே) வேல்-தன்னுடைய வேலாயுதமானது, குளிக்க-அழுந்தும்படி, (அதனை யேவி ஜெயங்கொண்டு) நின்றான்-போர் முகத்தில் நின்றவனாகிய,* இவ்வேந்து - இவ்வரசன், ஆழித்திரை - கடலின் அலையானது, கொணர்ந்த-கொண்டு வந்து ஒதுக்கிவிட்ட, செம்கண்-சிவந்த கண்களையுடைய, மகரத்தை-சுறாமீனை, சேல்-கெண்டைமீன், தீண்டி-தொட்டு,போய்-சென்று, கங்கை இடை-கங்காநதியிலே, குளிக்கும்-அமிழ்கின்ற, (அக்கங்கை நீர்வளம் பெருகிய) கேகயர்கோன்-கேகய நாட்டாருடையஅரசன்; [எ-று]

கங்கை சமுத்திரத்தில் பாய்வதால் அச்சமுத்திரத்தின் அலை அக்கங்கை நீரோடு எதிர்த்து மோதும்போது அவ்வலையுடனே சமுத்திரத்தில் வாழும் சுறா மீன் கங்கையில் வந்து கலக்கும். அப்போது கங்கையிலுள்ள சேல்மீன் அச்சுறாவின்மீது ஊராய்ந்துசென்று அக்கங்கா ஜலத்தில் மூழ்கும். இயற்கையில் அச்சுறாவைப் பரிசித்துக் கங்கை நீரில் சஞ்சரிக்கும் சேல்மீனை, அச்சுறாவைத் தொட்டதோஷம் நீங்கக்கங்கையில் மூழ்கினதாகக் குறித்தார் ஆசிரியர். இழிந்தவரைத் தொட்ட மாத்திரத்தில் அத்தீட்டு நீங்க உயர்ந்தோர் புண்ணிய தீர்த்தத்தில் மூழ்குதல் இயற்கை. இங்கே கங்கையில் வாழும் சேல் உயர்ந்ததும், உவர்ச் சமுத்திரத்தில் வாழும் சுறா தாழ்ந்ததுமாதலின், சேல், அந்தச் சுறாவைத் தொட்டதோஷம் நீங்கக் கங்கையில் மூழ்கிற்றென்க. இவ்வாறு கங்கைக்கும் சமுத்திரத்துக்கும் சம்பந்தம் கூறப்பட்டமையின் கேகயதேசம், கடலிற் கங்கை பாயும் முகத்துவாரத்தை யுடையதென்பது பெறப்படும். "தெவ்வாடற் கைவரைமேல் வேல்குளிக்க நின்றானிவ் வேந்து" என்றதனால், இந்நாட்டரசன் போர்முகத்து எதிர்த்து நின்ற பகைவரை வெல்லும் வேல்வல்லானென்பது விளங்கும்.

வரி-வளையலில் அலங்காரத்திற்காக இடப்படும் கீற்று. மகரம்-முதலை யெனினுமாம், இடை-ஏழாம் வேற்றுமைச சொல்லுருபு. கேகயம் கைஹஹயம் என்னும் வடசொற்றிரிபு. வேல் குளித்தல்-வேல் அழுந்துதல்.

காந்தார தேசத்தரசனைக் காட்டல்

148. மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது
தானேகு மன்னந் தனிக்கயிற்றில்-போநீள்
கழைக்கோ தையரேய்க்குங் காந்தார நாடன்
மழைக்கோதை மானேயிம் மன்.

(இ-ள்.) மழை-மேகம்போன்ற,(கரிய)கோதை-கூந்தலையுடைய, மானே-மான்போன்ற பார்வையுடைய பெண்ணே!, இம் மன்-இந்த அரசன், மா-சிறந்த,நீர் நீரையுடைய,நெடும் கயத்து நீண்டகுளத்திலே, வள்ளைக் கொடிமீது-வள்ளைக் கொடியின் மேல், ஏகும்-நடந்து தள்ளாடிச செல்கின்ற, அன்னம்-அன்னப் பறவையானது,தனிக்கயிற்றில்-(இரு மருங்கும் நாட்டப்பட்ட மூங்கில்களினிடையிற் பொருத்த) ஒற்றைக் கயிற்றில், போம்-(தள்ளாடிநடந்து) போகின்ற, நீள்-நீண்ட, கழைக்கோதையர்-(மூங்கிலிலேறிவிளையாடும்)கழைக்கூத்திகளாகிய பெண்களை, ஏய்க்கும்-நிகர்த்திருக்கும்படியான (நீர்வளம் மிக்க), காந்தாரநாடன் -காந்தாரநாட்டிற்கதிபன்; [எ-று.]

குளத்தின் நீரின்மேல் வள்ளைக் கொடி கயிறுபோலப் படர்ந்திருக்கும்; அந்தக் கொடியின்மேல் அன்னம் ஏறி நடந்து செல்லும்; அவ்வாறு நடக்கும போது அது தள்ளாடிவீழ்வதுபோல் அசைந்தசைந்து காலைஉறுதியாக ஊன்றி அக்காலின்பலத்தைக்கொண்டேசெல்லும்.இவ்வாறுசெல்லும்தோற்றமானது, இரண்டுமூங்கில்களை இருபக்கத்திலும் நாட்டி, அவற்றினிடையில் ஒற்றைக்கயிற்றைநீளத் தொடுத்து,அதன்மேல் தள்ளாடிநடந்துசெல்லும்கழைக்கூத்தியின் ஆட்டத்தைப்போன்றிருக்கும். இவ்விதமான கயிற்றில் கழைக்கூத்திகள், தலையில் ஐந்தாறு பானைகளை அடுக்கிச் சுமைசேர்த்துக்கொண்டு, தாங்கள் வீழாதிருப்பதற்கு ஆதரவாயிருக்கும்பொருட்டொருமூங்கிலைமார்பிற் சேர்த்து அதன் நடுப்பாகத்தைப் பிடித்துக்கொண்டு தாங்கள் சாயும் பக்கத்தில் அந்தமூங்கிலைத் தூக்கித்தூக்கி உடலை நிலைக்கச் செய்து அடிமேல் அடிவைத்து நடந்து காட்டிக் கழைக் கூத்தாடுவது வழக்கம்; இன்னும் உயர்ந்தவோர் மூங்கிலை நட்டு அதன் உச்சியில் ஏறிநின்று கழைக்கூத்திகள் பலவிதமான விளையாட்டுக்களைச் செய்து முடிவில், அம்மூங்கிலிற் பொருத்து நாலா பக்கங்களிலும் கீழே கொண்டுவந்து கட்டப்பட்டிருக்கும் கயிறுகளில் ஒரு கயிற்றிற் பாய்ந்து கீழிறங்குவதும் ஒருவகைக் கழைக்கூத்தாம். இவ்வாறு அவர்கள் மூங்கில்களிலேறியே பலவிதமான வேடிக்கைத் தொழில்களைச் செய்பவர்களாதலின் கழைக்கூத்திகள் எனப்பட்டார்; கழை-மூங்கில்; அதிலேறி விளையாடுவோர் கழைக்கூத்திகள் அல்லது கழைக்கூத்தர்கள்; இவர்கள் குறவர் வகுப்பைச் சார்ந்த ஒருவகை ஜாதியார்.

நீரின்மேற்படர்ந்தவள்ளைக்கொடி, மூங்கிலிற்கட்டிய கயிற்றையும், அக்கொடியின்மேல் நடந்துசென்ற அன்னங்கள் கழைக்கூத்திகளையும் நிகர்த்தன. இவை வடிவையும் தொழிலையும்பற்றி ஒன்றற்கொன்றுவமையாயின. இங்ஙனம் நீர்வாழ் பிராணிகள் வள்ளைக்கொடியில் ஏறிப்பாயும் செய்கையைக் கழைக்கூத்திகளின் செய்கைக்கு உவமித்திருப்பதை,

"கூடினார்க ணம்மலராக் குவளையங் குழியிடை
வாடுவள்ளைமேலெலாம் வாளையேறிப் பாய்வன
பாடுசால் கயிற்றிற்பாய்ந்து பல்கலனொலிப்பப் போந்து
ஆடுகூத்தி யாடல்போன்ற நாரைகாண்ப வொத்தவே"

என்னும் சீவகசிந்தாமணி நாட்டுச்சிறப்புச்செய்யுளானு முணர்ந்துகொள்க. அக்குளங்களின் நீர் மிகவும் பரிசுத்தமுடைய தென்பது விளங்க 'மாநீர்' என்றார் புலவர். கயம் கசம். தான்-அசை நீள் கழைக்கோதையர் என்பதில், 'நீள்' கழைக்கு அடை. ஏய்க்கும்-உவமவுருபு. மழைக்கோதை-உவமைத்தொகை. மான்-உவமையாகு பெயர்.

## சிந்து நாட்டரசனைக் காட்டல்.

149. அங்கை நெடுவேற்க ணாயிழையாய் வாவியின்வாய்
சங்கம் புடைபெயரத் தான்கலங்கிச்—செங்கமலப்
பூச்சிந்து நாட்டேறல் பொன்விளைக்குந் தண்பணைசூழ்
மாச்சிந்து நாட்டானிம் மன்.

(இ-ள்.) அங்கை உள்ளங்கையையும், நெடுவேல்-நீண்டவேலாயுதத்தையும், (நிகர்த்த) கண்-கண்களையுடைய, ஆயிழையாய்-ஆராய்ந்தெடுக்கப்பட்ட ஆபரணங்களை யணிந்தவளே!, இ மன்-இந்தஅரசன், வாவியின்வாய்-தடாகங்களிலே, சங்கம் சங்குகள், (தாமிருந்ததான இடத்தைவிட்டு)புடை, பக்கத்தில், பெயர-ஊர்ந்துசெல்ல, (அதனாலே) கலங்கி அசைதலுற்று, செங்கமலப்பூ-செந்தாமரைமலரினின்றும், சிந்தும் சொரிகின்ற, நாள் தேறல்-புதிய தேனானது, (பாய்ந்து) பொன்-பொன்னைப்போன்ற நெல்லை, விளைக்கும்-விளையச்செய்கிற, தண்-குளிர்ச்சி பொருந்திய, பணை-வயல்கள், சூழ் சூழ்ந்த, மா-சிறப்புப்பொருந்திய, சிந்துநாடன் சிந்து தேசாதிபன்; [எ-று.]

தடாகங்களிலே சங்குகள் ஊர்ந்து செல்லும்போது அவற்றின் பாரத்தைத் தாங்கமுடியாமல் செந்தாமரை மலர்கள் அசையும்; அவ்வசைவினால் அவற்றிலுள்ள தேனானது சிந்தித் திரண்டு நீரோடு கலந்துபோய் வயல்களிற் பாயும்; அதனாலே அங்கு நெற்கள் செழிப்பாக வளர்ந்து விளையும்.

அங்கை அகங்கைஎன்பதன்விகாரம்; அகங்கைஎன்பதற்கு உட்பக்கக்கை என்று பொருள்; அஃது உள்ளங்கை எனவழங்கும்; உள்ளங்கைஎன்பதில்அம்-சாரியை; உள்ளங்கையையும் கண்ணுக்குவமைகூறுவது வழக்கம்; 'இவ்வளவு

கண்ணாள்' என்று ஔவை அகங்கையைக் கண்ணுக்குவமையாகக் காட்டிக் கூறியிருத்தலால்இஃதுணரப்படும்.இனி.'அங்கைநெடுவேற்கண்'என்பதற்கு 'அழகிய கையில் வைத்திருக்கக்கூடிய நீண்டவேலை நிகர்த்தகண்' எனப்பொருள்கூறினும்அமையும். ஆயிழை-வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. ஆய்-விளியுருபு. தான்-அசை. பூச்சிந்து-நீக்கப் பொருளில் வந்த ஐந்தாம்வேற்றுமைத்தொகை. பொன்-நெல்லுக்கு உவமையாகுபெயர். வயல்களிலுண்டாம் விளைவைத்திருவென்று கூறுதல் நாட்டு வழக்கமாதலின், அவ்வழக்கம் பற்றி இங்கு. நெல்லைப் பொன் என்றார் ஆசிரியர் எனினும் அமையும். இங்கே பொன்-திரு. அது நெல்லுக் காயிற்று.

நளன் வடிவங்கொண்டு வந்திருந்த நான்கு தேவர்களைக் கண்டு தமயந்தி சஞ்சலப்படல்.

150. காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணாநின்
றாசலா டுற்றா ளுளம்.

[இ-ள்.] (மேற்கூறியபடி சொல்லி) காவலரை- (சுயம்வரத்துக்கு வந்திருந்த) பூலோகத்து அரசர்களையெல்லாம், தன் சேடி-தன்னுடைய தோழி, காட்ட-காட்டிக்கொண்டுவர, பூவரைந்த-மலர் சூட்டப்பெற்ற, மாசுஇல்லா-குற்றமில்லாத, பூங்குழலாள்-அழகிய கூந்தலையுடைய தமயந்தி, கண்டு-பார்த்துக்கொண்டே வந்து, மற்று-பின்பு, ஈர் இருவர்-நால்வராய், நளன் உருவாய்ச் சென்று இருந்தார்-நளன் வடிவமாகி ஆங்குச் சென்றிருந்தவர்களாகிய, தேவர் அவரை-தேவர்களென்னும் அவர்களை, காணாநின்று-பார்த்து உளம்-மனமானது, ஊசலாடு உற்றாள் - ஊசலாடுதலைப் பொருந்தினாள்; (அதாவது மனம் ஊசலாடுவதைப் போல அங்குமிங்கும் அலைந்து சஞ்சலப்படுவதைப் பொருந்தினாள்); [எ-று.]

இங்குக் கூறிய தேவர்கள் நால்வரும் யாவரெனில், முன்னே நளனைத் தமயந்தியிடம் தூதனுப்பிய இந்திரன், அக்கினி, இயமன், வருணன் ஆகியவர்கள்; இவர்கள் அங்ஙனம் அவனைத் தூதனுப்பிப் பார்த்தும் தமயந்தி தங்களை விரும்பாமல் நளனையே விரும்பியதை யறிந்தார்களாதலின், அவளை வஞ்சித்தாவது பெறவேண்டுமென்னுங் கருத்தினால் நளன் வடிவந்தாங்கிச் சுயம்வரமண்டபத்திற் சேர்ந்திருந்தார்கள். இப்படி யிருக்கும் போது மேற்கூறியவாறு ஒவ்வொரு இராஜகுமாரனையும் பார்த்துக் கொண்டு வந்த தமயந்தி, இங்குக் கூறிய தேவர்களும், நளனும் ஒரே வடிவமுடையவர்களாயிருக்கக் கண்டு, 'இவர்களில் நாம் விரும்பிய நளன் யாவனோ, அவனைத் தெரிந்து நாம் எப்படி மாலை யிடுவது" என்றெண்ணி மனங் கலங்கினாள்.

சேடி-சேட என்னும் வடசொற்றிரிபு. உரு-ரூபமென்ற வடசொல்லின் விகாரம். மற்று-இடைச்சொல்; இஃதிங்கே பின் என்னும் பொருளைத்தந்து நின்றது. காணுநின்று-உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம்; இதில், காணு நில்-பகுதி. ஊசலாடு என்பதில், ஆடு-தல்லீறு கெட்ட தொழிற் பெயர்.

தமயந்தியின் மணத்திற்கு உலகத்திலுள்ள எல்லா

அரசர்களுமே வந்தனரெனல்.

151. பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து.

[இ-ள்] (மேற்கூறியபடி தமயந்தி கலங்கி நிற்குந் தருணத்தில் முன்னு ரைத்தபடி) வானவரும் (இந்திரன் முதலிய) தேவர்களும், பொன்தேர்-அழ கியதேரையுடைய, நளன் உருவாய்-நளன் வடிவமாகி, போந்து- (தாங்களி ருக்குமிடத்தை விட்டுச்) சென்று, வந்து இருந்தார்-(தமயந்தியால் சூட்டப் படும்மாலையைப் பெறுவதற்குச் சுயம்வரமண்டபத்தில்) சேர்ந்திருந்தார்கள். (இவர்களே இவ்வாறுதமயந்தியின் விருப்பத்தால் வெட்கங்கெட்டு மானிட வடிவத்தையும் தாங்கி வந்திருந்தார்களென்றால்) பூணுக்கு-ஆபரணங்கட்கு அழகு அளிக்கும்-அழகைக் கொடுக்கின்ற, பொன் தொடியை-பொன்னாலா கிய வளையலையணிந்த தமயந்தியை, கண்டக்கால்-மனத்தினால் நோக்குவார் களாயின், நீள் நிலத்து-நீண்ட இப்பூமியிலுள்ள, நல்வேந்தர்-நல்ல அரசர்க ளில், எவர்-எவர்தாம், நாண் உக்கு-வெட்கங்கெட்டு நெஞ்சு உடைய-மனக் கலக்கமுற்று, வாராதார் - வாராதிருப்பவர்?; (எல்லோருமே பேராசை கொண்டு வந்திருந்தார்கள் என்றபடி); [எ-று.]

இந்திரன் முதலிய தேவர்களும தமயந்தியின் மண மாலையைப் பெற விரும்பி, 'பிறப்பில் நம்மிலும் இழிந்தவனான நளன் வடிவத்தைக் கொள்ளு கின்றோமே' என்ற வெட்கஞ்சிறிதுமின்றி அத்தமயந்தியால் விரும்பப்பட்ட நளனது வடிவத்தைத் தாங்கி வந்திருந்தார்களென்றால், பூலோகத்திலுள் ளஅரசர்களில் எவர்தாம் அவளை நினைத்த மாத்திரத்தில் அவ்வாறு வெட் கங்கெட்ட செய்கைகளைச் செய்துகொண்டு வாராமலிருப்பவர்? எல்லோரு மே வந்திருந்தார்கள் என்பது இதன் கருத்து. "நாணுக்கு நெஞ்சுடைய நல் வேந்தர் நீணிலத்து மற்றேவர் வாராதார்" என்று அரசர்க்கு நாணக்கேடும், நெஞ்சுடைதலுஞ்சொன்னதனால், தேவரும் வெட்கங்கெட்டுநெஞ்சுடைந்து வந்தார்களென்பது தானே அமையும். வெட்கங்கெடுதலாவது பிறர்பார்த்து நகைக்கத்தக்க செய்கைகளை நாணமின்றிச் செய்தலாம்; நெஞ்சுடைதலா வது தமயந்தியின் விருப்பத்தால் மனமிளகி, 'அவள், கிடைப்பாளோ-கிடை க்கமாட்டாளோ' என்று கலங்குதலாம். அரசர்கள் தமயந்தியின் விருப்பாற்

செய்த வெட்கங்கெட்ட செய்கைகளாவன. மனிதர் எப்பொழுதுமேசெய்து கொள்ளாத நூதன அலங்காரங்களைச் செய்துகொள்ளுதலும், தங்கள் அலங்காரத்தைத் தாங்களே திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொள்ளுதலும், அடிக்கடி கண்ணாடியிற் பார்த்துத் தங்கள் மீசைகளை முறுக்கிக் கொள்ளுதலும், காலை ஆட்டிக்கொண்டிருத்தலும், உதட்டைக் கடித்தலும், மனிதர் நடக்காதவிதமாக நடத்தலும், வீண் தற்புகழ்ச்சி பேசுதலும், இன்னும் இவை போன்ற செய்கைகளுமாம். "ஆசை வெட்கமறியாது" என்றபடி இக்குணங்கள் மனிதர்க்கு இயற்கையில் ஏற்படக் கூடியவைகள். இத்தகையரை நல்வேந்தர் என்றது இவர்களுடைய செங்கோன்மையைப் பற்றியென்க. நெஞ்சுடைய என்பதற்கு, மனவுறுதியுள்ள என்று பொருளுரைத்தலு மொன்று. தமயந்தி இயற்கையழகுடையவளாதலின் அவளுக்கு ஆபரணங்கள் அழகளிப்பனவன்றும், அவளது இயற்கையழகே அவற்றிற்கழகைக் கொடுக்கும்; இது பற்றியே ஆசிரியர் 'பூணுங்கழ களிக்கும் பொற்றொடி' என்றார். இங்ஙனமிருப்ப அவள் நகைகளை ஏன் சுமையாக அணிந்தாளெனில், மங்கலத்தின் பொருட்டென்க. அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் என்னும் நால்வகைத் தேர்வீரர்களில் நளன் முதன்மை பெற்ற அதிரத வீரனாதலின், அவனைப், 'பொற்றேர் நளன்' என்று உயர்ந்த அடை கொடுத்துக் கூறினர் ஆசிரியர். இனி நளன் தேர்ச்சாரத்தியஞ் செய்வதில் வல்லவனாதலின், 'பொற்றேர் நளன்' என்பதற்கு 'அழகிய தேரை ஓட்டுவதில் வல்லவனாகிய நளன்' என்றுரைத்தலுமாம்; நளன் பின்னால் ருதுபர்ணனுக்குத் தேர்ப்பாகனாக அமைதலால் இஃதுணரப்படும்.

இச்செய்யுளில் 'வானவரும் நளனுருவாய்ப் போந்து வந்திருந்தார்' என்றதனால் 'பூலோகத்திலுள்ள எல்லா அரசர்களும் வந்திருந்தார்கள்' என்றதை விளக்கியது தண்டாபூபி காங்யாயமாம்; இவ்வாறு கூறியது தொடர் நிலைச் செய்யுட்பொருட் பேரணி என்று சொல்லப்படும். தண்டாபூபி காங்யாயமாவது, ஓரெலி தடியை விழுங்கியதுபொ ரப்படுதலால் அத்தடியிற்கட்டியிருந்த பணியாரமும் விழுங்கியது பெறப்படுதல் போல்வதாம்.' தண்டம்-தடி; பூபிகம்-பணியாரம். இவ்வலங்காரத்தை வடநூலார், காவ்யார்த்தா பத்யலங்காரமென்பர். பொற்றொடி-மூன்றும் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. பின்னே 'வாராதார் எவர்' என வருதலால் அதற்கேற்ப, 'கண்டக்கால்' என்பதற்கு, 'மனத்தால் நோக்குவார்களாயின்' என்று பொருளுரைக்கப்பட்டது. இங்கே நோக்குதல் எண்ணுதலாம்; இது 'நோக்கினோக்கம்' என்று கூறப்படும்; நோக்கினோக்கமாவது கண்பார்வையல்லாத பார்வையாம்; அது தியானித்தல்; இது சீவக சிந்தாமணி நச்சினார்க்கினியர் உரையில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது இனி, 'கண்டக்கால்' என்பதற்குக், 'கண்ணால் பார்த்தால்' என்றும் பொருளுரைக்கலாம். இவ்வாறுகொள்ளுமிடத்து தமயந்தியின் உருவத்தையோ உருவப் படத்தையோ அரசர்கள் முன்னேகண்டு அவள்மீது ஆசைகொண்டிருந்தார்களென்றும், அவ்விருப்

புத்தால் வந்தார்களென்றும் கொள்ளவேண்டும். வேந்தர் எவர்-ஏழாம்வேற்றுமைத்தொகை; வேந்தரில் எவர் என விரியும். "ஏ இருவழியும்" என்றதனால் எவர் என்பதில் ஏ-முதலில் வினாவாயிற்று. மற்று-அசை. எவர் வாராதார்-எதிர்மறை யெச்சம் வானவரும் என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்புப் பொருளது; இதற்கேற்ப, 'வானவரும் வந்திருந்தார்' என்ற தொடருக்குப்பின், 'இவர்களே இவ்வாறு தமயந்தியின் விருப்பத்தால் வெட்கங்கெட்டு மானிட வடிவத்தையுந் தாங்கி வந்திருந்தார்களென்றால்' என்னுஞ் சொற்கள் இசை யெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன. போந்து என்பது செல்லுதற் பொருளிலும், வந்து என்பது சேர்தற் பொருளிலும் வந்தன. இனிப் போந்து என்பதை அசையாகக் கோடலு மொன்று.

### தமயந்தி நளனை அறிதற் பொருட்டுக் கடவுளை வேண்டுதல்.

152. மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியா னாகிற கடிமாலை—அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட வருளென்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து.

[இ-ள்.] (இங்ஙனம் எல்லோரும் வந்து கூடி யிருக்கும்போது மேற்கூறியபடிதேவர்களும் நளனும் ஒரே வடிவமுள்ளவராயிருத்தல்கண்டு நளனை எவ்வாறுணர்ந்து அவனுக்குமாலை சூட்டுவதென்று மனங்கலங்கிய தமயந்தி அந்நளனை அறிந்துகொள்ளற் பொருட்டு) சூழ்-உயிர்களைவிடாது வந்தடைகின்ற, விதியின் மன்னவனை-விதிக்குத்தலைவனான கடவுளை, தன்மனத்தே-தன்னுடைய மனத்திலே, வைத்து-கொண்டு தியானித்து, யான்-நான், மின்னும்-பிரகாசிக்கிற, தார்-மாலையையணிந்த, வீமன் தன்-வீமராஜனுடைய, மெய்மரபில்-சத்தியமுள்ள குலத்தில், (உதித்து) செம்மை சேர்-நற்குணம் பொருந்திய, கன்னிஆகில்-கன்னியா யிருப்பேனானால், அன்னம்-அன்னமானது, சொன்னவனை முன்னே எனக்குக் கூறிய அந்நளனுக்கே, கடிமாலை-மணமாலையை, சூட்ட-சூட்டுதற்கு, அருள் என்றாள்-கிருபை செய்வாயாக என்று வேண்டினாள்; [எ-று.]

குலஸ்திரீகள், ஒருவனை நாயகனாக நினைத்தபின் மற்றொருவனுக்குஎவ்வகைக் காரணத்தைக் கொண்டும் மாலையிடக்கூடாதாதலானும், அங்ஙனம் செய்யின் அவர்களுடைய கற்புக்குப்பங்கம் வருமாதலானும்தமயந்தி, தான் விரும்பிய நளனுக்கே மாலைசூட்ட விரும்பினாள். எனினும், தேவர்கள்நளன் வடிவந்தாங்கி வந்து அவளுக்கு மயக்கத்தைச் செய்தபடியால் அவள் உண்மையான நளன் இன்னவன் என்று உணர முடியாதவளா யிருந்தாள். அதனால், அவள், "நமக்கு நன்மை தீமைகளை நம்பழ வினைக்குத் தக்கவாறு ஏற்படுத்தக்கூடிய தெய்வமே நாயகனையும் நியமிக்கக் கூடியதாதலின், அது

செலுத்தியபடியே நாம் முன் நினைத்த நாயகனையே இப்போது தெரிவிக்குமாறு அதனையே வேண்டுவோம்" என்று விதிக்கடவுளைப் பிரார்த்தனை செய்தாள். எப்பொழுதும் குலமகளிர்க்குத் தீங்கு நேராதாதலால், "வீமன் றன் மெய்ம்மரபிற்செம்மை சேர்கன்னியாளுகில், அன்னந்தான் சொன்னவனைக் கடிமாலை சூட்ட அருள்" என்று மேலும் அவள் தன் குலத்தின்மேல் ஆணையிட்டுக் கூறினாள் என்றபடி.

விதி-தெய்வகட்டளை; அதாவது மனிதர் முற்பவத்திற் செய்த வினைகளுக்குத் தக்கவாறு அவற்றின்பயனாக நன்மைதீமைகளை வகுத்து அவற்றை அவர்களிடம் அடையும்படி தெய்வம் செய்வது; இக்கட்டளை மனிதர்க்குத் தெய்வத்தால் விதிக்கப்படுவதாதலின் விதியெனப்பட்டது. இந்த விதியை ஏற்படுத்தக்கூடிய தெய்வத்தையே இங்கு, 'விதியின் மன்னவன்' என்றார் ஆசிரியர். தேவநியமிப்பு, பழவினையையுடைய உயிர்களிடம் சென்றடைதல் தவறாதாதலின், அவ்விதிக்கு, 'சூழ்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இனி, பதிவிரதைகளுக்குநாயகனே தெய்வமாதலின், இங்குத்தமயந்தி தனக்கு நாயகனாகக் குறித்த நளனையே தெய்வமாக நினைத்துத் தன்னோக்கம் நிறைவேறுமாறு கிருபை செய்யும்படி வேண்டினளெனக் கொண்டு, "சூழ்விதியின் மன்னவனை" என்பதற்கு, "தான் நளனுக்குமனைவியாகும்படி வந்தடைந்த ஊழினாலே நளமகாராஜனைத் தனக்கு நாயகனாகவும் தெய்வமாகவும் மனத்தில் தியானித்து" என்று பொருள் கூறினும் அமையும். "குறில்வழி யத்தனி யைங்கொது முன் மெலி மிகலுமாம்" என்ற விதிப்படி மெய்மரபு-மெய்ம்மரபு என மெலிமிகுப் புணர்ந்தது. செம்மை-நல்லொழுக்கத்திற்குப் பண்பாகு பெயர். கன்னி-அழியாவியல்பையுடையவள்; புருடர்தீண்டப்பெறாதவள். கடி-உரிச்சொல்; இஃதிங்கே கலியாணமென்ற பொருளில் வந்தது. சொன்னவனை - உருபுமயக்கம்; நான்கனுருபு இரண்டனுருபாக மயங்கி வந்தது. விதி வடசொல் மனம்-மநஸ் என்ற வடமொழித் திரிபு.

தெய்வகிருபையால் தமயந்தி சில குறிகளைக்கொண்டு
நளனை இன்னானென் றறிதல்.

153. கண்ணிமைத்த லாலடிகள் காசினியிற் றோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே யன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு.

(இ-ள்) (மேற்கூறியபடி தெய்வத்தை வேண்டிய பின்னர் அத்தெய்வ கிருபையால்) நறு-நல்ல, (வாசனை பொருந்திய) தாமரை-செந்தாமரை மலரை, விரும்பும்-விரும்பி அதில் வீற்றிருக்கின்ற, நல்நுதலே-அழகிய நெற்றியையுடையவளாகிய இலக்குமியையே, அன்னாள்-நிகர்த்தவளாகிய தமயந்தி, ஆங்கு-(அப்படி வேண்டி நின்ற) அவ்விடத்தில், (அந்த ஐவரில் ஒருவனுக்கு)

கண் இமைத்தலால்-கண்கள் இமை கொட்டுதலாலும், அடிகள்-பாதங்கள் காசினியில்-பூமியில், தோய்தலால்-படிதலாலும், வண்ணம்-அழகு பொருந்திய, மலர்மாலை-பூமாலையானது, வாடுதலால்-வாட்டமடைவதாலும், எண்ணி-(இவற்றை நன்றாக) ஆலோசித்து, (இவன் தான் நளன் என்று) நளன் தன்னை-தான்விரும்பியிருந்த நளமகராஜனை, அறிந்தாள் தெரிந்துகொண்டாள்; எ-று.

தேவர்க்குக் கண்ணிமைத்தலும், கால் நிலந்தோய்தலும், மாலை வாடுதலுமில்லை; மனிதர்க் கிவையுண்டு மனிதர்க்கும், தேவர்க்கும் இவ்வேறுபாடுண்டெனினும், தமயந்திக்கு முன்னே தோற்றாதிருந்து தெய்வத்தை வேண்டியபின் தோன்றிற்று. அதனால், அவள், அக்குணங்கள் இல்லாதவர்களைத் தேவர்களென்றும், அவைகளையுடையவனை மானிடனென்றும் உணர்ந்து அக்குறிப்பினால் நளனை இன்னானென்று தெரிந்துகொண்டாள்

இமைத்தலால், தோய்தலால், வாடுதலால் என்பவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. காசினி-காச்யபீ என்ற வடசொல்லின் சிதைவு; பூமி, ஒரு காலத்தில் கசியபமுனிவர்க்குப் பரசுராமனால் தானஞ்செய்யப்பட்டது; அதனால் இப்பெயர் பெற்றதென்க. இலக்குமியிருப்பது செந்தாமரையாதலின், தாமரை யென்பதற்குச் செந்தாமரை யென்று பொருளுரைக்கப் பட்டது. நன்னுதல்-பண்புத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை.

தமயந்தி நளனுக்கு மணமாலை சூட்டுதல்.

154\. விண்ணரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகல் ஞாலங் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

(இ-ள்.) (மேற்கூறியபடி நளனைத் தெரிந்து கொண்டபின்பு) பொன்-இலக்குமியை நிகர்த்த தமயந்தி, விண் அரசர் எல்லாரும்-தேவலோகத்து மன்னர்களான (இந்திரன் முதலிய) தேவர்கள் யாவரும், வெள்கி-வெட்கத்தையடைந்து, மனம் சுளிக்க-மனம் வருந்தவும், கண் அகல்-இடம் அகன்ற, (அதாவது விசாலமான) ஞாலம்-பூமியிலுள்ள ஜனங்கள், களிகூர-சந்தோஷமிகவும், மண் அரசர்-பூலோகத்துமன்னர்கள், தம்மனத்தே-தங்கள்மனத்திலே, வன்மாலை வலிய மயக்கத்தை, சூட-கொள்ளவும், வயம்-வெற்றி பொருந்திய, வேந்தை-நளமகராஜனுக்கு, பொன்மாலை-அழகிய மலர்மாலையை, சூட்டினாள்-தோளில் இட்டாள்; [எ-று ]

தமயந்தி நளனுக்கு மாலைசூட்டினாள்; அதைக்கண்டு தேவர்கள் வெட்கி மனம்வருந்தினார்கள்; உலகத்தார் யாவரும்சந்தோஷமடைந்தார்கள்; பூலோகத்து அரசர்களெல்லோரும் மனமயக்கங் கொண்டார்கள் என்பது இதன் கருத்து. தேவர்கள் தமயந்தியை ஏமாற்றியாவது மணம் புரிந்து கொள்ள வேண்டுமென்று நளனுருவம்பெற்றுவந்திருந்தும், அவள் நளனையேதெரிந்து

அவனுக்கு மாலை சூட்டியபடியால் வெட்கமுந் துக்கமுங் கொண்டார்கள்; உலகத்தார் நளனுக்குத் தக்கமனைவி வாய்த்தாளே என்பதைப்பற்றிச் சந்தோஷமடைந்தார்கள். பூலோகத்தரசர்கள், 'நாம் தமயந்தியை விரும்பிவந்தும் அவள் நம்மை விரும்பவில்லையே' என்றுநாணமடைந்ததால் மனமயக்கம் பொருந்தினார்கள். நளன் தன் புஜத்தில்ஒருமாலை சூடியபொழுது மற்றையரசர்களும் தங்கள் அவயவமொன்றில் ஒருமாலை சூட்டினார்கள் என்று ஒருவகைப் பரிகாசந்தோன்றச் சிலேடையாக "மன்னரசர் வன்மாலை தம்மனத்தே சூட" என்றார் ஆசிரியர். மால்-மயக்கம். ஐ-சாரியை.

களிக்க, களிகூற, சூட என்பன காரணகாரியப் பொருட்டில்வந்த செயவெனெச்சங்கள்; சூட்டினாள் என்றவினைமுற்றோடு முடியும்; சூட்டினாள் என்பது காரணம்; களிக்க முதலியன அதனாலாம் காரியங்கள். ஞாலம்-இடவாகுபெயர். கூரஎன்றவினையெச்சத்தில் கூர்-என்ற உரிச்சொல் பகுதி. வேந்தை-உருபு மயக்கம்; நான்கனுருபு இரண்டனுருபாக மயங்கி வந்தது. பொன்-உவமையாகுபெயர். பொன்மாலை என்பதைப்பொன்னாற் செய்தமாலையெனினும் அமையும். மன்மாலை யென்னும் பாடம்; அது சிறப்பன்று.

### நளன் மாலைபெற்றவுடன் மற்றையரசர்கள் முகம் வாடுதல்.

155 திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம் போய்
வெண்டாமரையாய் வெளுத்தவே—ஒண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது.

(இ-ள்.) ஒள்-பிரகாசம் பொருந்திய, தாரை-வலிமையையுடைய, கோ-மேன்மைபெற்ற, மாலை-மாலையைஅணிந்த, வேலான்வேலாயுதத்தைக்கரத்திற்றரித்தநளன், குலம்மாலை(தான்பிறந்த)குலத்திற்கும்(புகுந்த)குலத்திற்கும்மாலைபோலஅலங்காரஞ்செய்பவளான, வேல்-வேலாயுதம்போன்ற(கூரிய), கண்ணாள்-கண்களையுடையவளாகிய தமயந்தியினது, பூமாலை- (மணத்திற்குரிய) மலர்மாலையை, பெற்று இருந்த போது-அடைந் திருந்த சமயத்தில், திண் தோள்-வலிமையானதோள்களையுடைய, வயம்-வெற்றிபொருந்திய, வேந்தர்-அரசர்களுடைய, செம்தாமரைமுகம்-(இயல்பிற்)செந்தாமரை மலரைப்போல விளங்கியமுகங்கள், போய் (அவ்வியல்பு) நீங்கி, வெள் தாமரை ஆய்-வெண்டாமரைமலர் போலாகி, வெளுத்த வெண்மை நிறத்தை அடைந்தன; [எ-று.]

முன்செய்யுளிற் கூறியபடி மற்ற அரசர்கள், நளன்சுயம்வர மாலையைப் பெற்றது கண்டுவெட்கிமனமயக்கத்தைஅடைந்துபின்னர்அவ்வெட்கத்தால் முகம்வெளுத்துப்போயினர் நாணத்தால் முகம் வெளுத்தல் இயல்பாதலின், செந்தாமரை மலர் போலச் சிவந்த ஒளியுடன் பிரகாசித்த அரசர்களுடைய முகங்கள் வெட்கத்தை யடைந்த மாத்திரத்தில் வெளுப்படைந்து விட்டன

அரசர்களுடைய முகங்கள் பலவாயினும் ஜாதி யொருமை பற்றி முகம் என ஒருமையாய் வந்தது இஃதிங்ஙனம் வரினும், பன்மையே யாதலின், 'வெளுத்த,' என்றபலவின்பால் முற்றைக்கொண்டது; இனி முகம்-பால்பகா வஃறிணைப்பெயராதலின் இங்ஙனம் பலவின்பால் முற்றைக்கொண்டதெனினும்அமையும். தாரை-கூர்மையெனினும்அமையும்.வேலுக்குமாலைசூட்டிஅதனைப்பூஜித்துக்கையிலெடுப்பது வீரர்களுடையசெய்கை: இங்ஙனம்வேலுக்கு மாலை சூடுதல் சிந்தாமணி முதலிய நூல்களிற் கூறப்பட்டுள்ளன; ஆதலின் இங்கு,'மாலைவேல்'என்பதற்கு'மாலையைஅணிந்தவேல்'எனப்பொருள்கூறப் பட்டது. 'ஒண்டாரைக் கோமாலை வேல்' என்பதற்கு 'ஒள்ளிய கூர்மையை, யுடையவச்சிராயுதம்போன்ற இயல்பினையுடையவேல்'எனப்பொருள் கூறலு மொன்று; இங்ஙனம் பொருள்கொள்ளுமிடத்து, கோ-வசசிராயுதம், மாலை-இயல்பு. மாலைவேற்கண்ணாள்-இருபெயரொட்டுப்பண்புத்தொகை. மாலையாகிய வேற் கண்ணாள் எனவிரியும். தாரை-தாரா என்ற வடசொற் றிரிபு. போது பொழுது என்பதன் மரூஉ.

நளன் தமயந்தியோடு சுயம்வரமண்டபத்தி னின்று புறப்படுதல்.

156. மல்லன் மறுகின் மடநா குடனாகச்
செல்லு மழவிடைபோற் செம்மாந்து—மெல்லியலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டான்
நன்மாலை வேலா னளன்.

(இ-ள்.)நல்மாலை-நல்லமாலையை அணிந்த, வேலான்-வேலையுடையவனாகிய, நளன்-நளமகாராஜன், மல்லல்-வளப்பம் பொருந்திய, மறுகில்-வீதியில் மடம்-இளமைபொருந்திய, நாகு-பசுவானது, உடன் ஆக-கூடவர, செல்லும்-நடக்கின்ற, மழவிடைபோல்-இளமையான விருஷபம் போல, செம்மாந்து-களிப்படைந்து, மெல் இயலாள்-மெல்லிய தன்மையுள்ள தமயந்தியினது பொன்மாலை-அழகிய மாலையை, பெற்ற-சூடிய, தோளோடு-புயங்களுடனே புறப்பட்டான்-அவ்விடத்தை விட்டுச் செல்பவனாயினான்; [எ-று.]

இளங்காளையானது கன்னிப்பசுவுடனே வீதியில் இறுமாந்து செல்வது போல நளன் தமயந்தியினது மணமாலையைப் பெற்றதோளுடனே, அவளும் உடன் வரக்களிப்படைந்து மற்ற அரசர்களுக்கு முன்னே மிக்க தலைமையுடன் போடு புறப்பட்டான் என்பது இதன் கருத்து. ஒரு பசுக்கூட்டத்திலுள்ள இளம்பசுவை வலிமையும் இளமையு முள்ள காளையே தனக்குரிமையாக்கச் சேர்த்துக் கொண்டு இறுமாப்போடு மற்றையெருதுகளுக்கு முன்னிலையிற் செல்லும்; அவ்வாறுசெல்லினும் மற்றையெருதுகள் வன்மையற்றவைகளாது

லின் ஒடுங்கிப் போயிருக்கும். ஆதலின், மற்ற அரசர்கள் ஒடுங்கி முகம்வாடி யிருப்பத் தமயந்தியை மணமுடித்துக் களிப்புடன் சென்ற நளனுக்கு அவ் விளங்ஞாயிறு உவமை கூறப்பட்டது.

நாகு-எருமை, சங்கு, நந்தை, பசு, மரை யிவற்றின் கன்னிப் பெண்ணை யுணர்த்தும் பொதுக்குணவாகுபெயர்; பின் மழவிடை யென்றதனால் அதற் கேற்ப அது இளம்பசுவெனக்கொள்ளப்பட்டது. மழ-மழவு என்னும்பண்புப் பெயரின் விகாரம்; இஃதிளமை குறிக்கும் உரிச்சொல்லெனவும்படும். செம் மாந்து-இதில் செம்மா-பகுதி; இதன்செயவெனச்சம்-செம்மாப்ப; செயி னெச்சம் செம்மாப்பின், செம்மாந்தால். ஏமாந்து, இறுமாந்து முதலியவைகளுக் கும் இப்படியே கொள்க. ஒடு உருபு ஓர் விசேஷக்குறியான பொருளில் வந் தது; மாலையை அணிந்திருந்தது இங்கு விசேஷம்; இஃதடைமொழிப் பொருளென்று சொல்லப்படும். வேலான் நளன்-இருபெயரொட்டு

தேவர்கள் திரும்பிச் செல்லும் வழியில்
கலிபுருஷனைக் காணுதல்

157. வேலை பெறுவமுதம் வீமன் திருமடந்தை
மாலை பெறுதகலும் வானாடர்—வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லாக்கும்
இருங்கலியைக் கண்டா ரெதிர்.

(இ-ள்.) வேலை திருப்பாற்கடலினால், பெறு-பெறமுடியாதவோர், அமு தம்-அமிருதம் போன்றவளான, வீமன் திருமடந்தை-வீமனது அழகிய மக ளான தமயந்தியினுடைய, மாலை-மணமாலையை, பெறுது-அடையாமல், அக லும்-நீங்கிச் செல்கின்ற, வானாடர்-விண்நாட்டினராகிய தேவர்கள், வேலை-கரையை, பொரும் மோதுகின்ற, கலி-ஒலிக்கின்ற, நீர்-நீரையுடைய கடலாற் சூழப்பட்ட, ஞாலத்தை-பூமியிலுள்ளோரை, புல்நெறியில்-இழிவான வழி யில், ஆக்கும்-செலுத்துகின்ற, இரும்-பெரிய, கலியை-கலிபுருஷனை, எதிர்-எதிரில், கண்டார்-பார்த்தார்கள்; [எ-று.].

நளனுருக் கொண்டு சுயம்வர மண்டபத்தில் வந்திருந்த தேவர்கள், தம யந்தி நளனுக்கே மாலை சூட்டிய துணர்ந்து வெட்கித் தம்முலகத்திற்குத் திரும்பிச்சென்றார்கள்; அவ்வாறு செல்லும்போது வழியில்,' தமயந்தியின் மணமாலையைப் பெறவிரும்பி வந்த கலிபுருஷனைக் கண்டார்களென்பது இதன் கருத்து. பாற்கடலில் உண்டாகிய அமுது தேவர்களால் விரும்பப் பட்டு அவர்களிடமே சேர்ந்திருப்பது. தமயந்தி வேலையாற் பெறப்படாமல் வீமனாற்பெறப்பட்டு நளனிடம்சேர்ந்தஅமுது. ஆதலின், தமயந்தி அவ்வேலை யமுதினுஞ் சிறந்தவளாவாள்; தேவர்களையும் இவள் விரும்பாதிருந்தமையே இவளுடைய சிறந்த தன்மையைவிளக்கும். இதுபற்றியே. ஆசிரியர், 'வேலை

பெருஅமுதம்' என்றார் தமயந்தியை. 'வேலைபெரு அமுதம் வீமன் திருமடந்தை' என்பதற்கு, 'வேலைபெருதவளும் அமுதம் போன்றவளுமாகிய வீமன் பெற்ற இலக்குமி, எனப் பொருள் கூறினும் அமையும்; அங்ஙனம் கொள்ளுமிடத்து, அமுதம் என்றதற்குச் சிறப்புக் கூறினபடியே திருப்பாற்கடலிற் பிறந்த இலக்குமியினுஞ் சிறந்தவள் தமயந்தி யென்க.

மடந்தை-பெண்ணின்பெயர்; அஃதிங்கே மகளை யுணர்த்திற்று. வேலை-வேலா என்ற வடசொற்றிரிபு. நீர்-ஆகுபெயராய்க் கடலை யுணர்த்தும். ஞாலம் இடவாகுபெயர் கலிக்குப்பெருமையாவது, உலகத்தவரைஇழிவானவழியிற் செலுத்துதலாம். இருங்கலி என்பதற்கு கரிய நிறமுடைய கலிபுருஷன் எனினும் அமையும். கலி-கலியுகத்துக்குத் தலைவன், பாவத்திற்குரிய தெய்வம், ஒழுக்கந் தவறுவோரை வருத்துபவன்; இவனைச் சனியினது அம்சமென்ப; இனிச் சனியென்லே கூறுதலு மொன்று; நைடத வுரையில் கலியென்பதற்கு யாண்டும் சனியெனவே பொருள் கூறப்பட்டுளது.

நளனுக்குத்தமயந்தி மாலைசூட்டியவுடன், இந்திரன் அரசர்களை நளனோடுபோர் செய்யும்படி தூண்டிவிடப் போர் நிகழ்ந்து, தேவரும் அரசரும் நளனுடன் யுத்தஞ்செய்து அவனுக்குத்தோற்ற வரலாறு நைடதத்திற் கூறப்பட்டுளது. ஆசிரியர் இதில் விரிவஞ்சி அதனைக் கூறாது விடுத்தனர் போலும். முன்னோர் செய்புளுரையில் போரைப் பற்றிய விஷயம் கூறப்பட்டிருக்கிறது; இவ்விஷயம் இந்நூலில் இல்லை யெனினும் நைடதம் முதலியவற்றில் இருப்பது கொண்டு அங்ஙன முரைத்தாம்.

கலி, தமயந்தியின் சுயம்வரத்துக்குச் செல்லுதலைக் கூறுதல்.

158. ஈங்குவர வென்னென் றிமையவர்தங் கோன்வினவத்
தீங்கு தருகலியுஞ் செப்பினான்—நீங்கள்
விருப்பான வீமன் திருமடந்தை யோடும்
இருப்பான் வருகின்றேன் யான்.

(இ-ள்.) ஈங்கு-இவ்விடத்தில், வரவு-நீவருதல், என்னென்று என்ன காரணமென்று. இமையவர்தம்-தேவர்களுடைய, கோன்-அரசனாகிய இந்திரன், வினவ-வினாவ தீங்குதரு-தீமையைக் கொடுக்கின்ற, கலி-கலிபுருஷன், நீங்கள் விருப்பான-நீங்கள் விரும்பிய, வீமன்-வீமனது, திருமடந்தையோடு அழகிய பெண்ணாகிய தமயந்தியுடனே, இருப்பான்-சேர்ந்திருத்தற்கு, (அதாவது அவளை மணஞ்செய்து அவளுடன் கூடியிருப்பதற்கு) யான் வருகின்றேன்-நான் வருகிறேன், (என்று) செப்பினான்-சொன்னான்; [எ-று]

இந்திரன், 'இங்கு நீ வருதற்குக் காரணமியாது?' என்று வினவ, கலிபுருஷன் அவனையும் மற்றவர்களையும் நோக்கி, 'நீங்கள் தமயந்தியை விரும்

பிச்சுயம்வரத்துக்கு வந்ததுபோல நானும் அவளைவிரும்பிச் சுயம்வரத்திற்கு வந்தேன்" என்றான் என்பது இதன் கருத்து.

வரவு-தொழிற்பெயர். இமையவர் தம் என்பதில் தம் சாரியை. ஈவியும் என்பதிலுள்ள உம்மைஇறந்தது தழுவிய எச்சப்பொருளது, செப்பு-தெலுங்கிலிருந்து வந்த திசைச்சொல். விருப்பு-விரும்பு என்னும் முதனிலை திரிந்ததொழிற்பெயர். ஆனவென்னும் பெயரெச்சத்தில், இன்,என்றஇறந்தகால இடைநிலை முதல் தொக்கது. மடந்தையோடும்-என்பதில் உம்-அசை, இருப்பான்-வினையெச்சம்; பான்-வினையெச்சவிகுதி: இதுவே எதிர்காலங் காட்டும். என்று என்பது இசையெச்சமாக வருவிக்கப்பட்டது. நீங்கு: குவ்விகுதி பெற்ற பண்புப் பெயர். தருகலி-வினைத் தொகை. "குறியதன் கீழாக் குறுகலு மதனோ, டுகரமேற்றலு மியல்பு மாந்தாக்கின்" என்ற (நன். உயி-பு-22.ஆம்.சூ) விதிப்படி வினை என்பது வின எனக்குறுகி அதனோடு உகரமேற்று வினவு என்றாய் வினையெச்ச விகுதியாகிய அகரஞ் சேர்ந்துவினவ என்றாயது.

சுயம்வரத்தில் தமயந்தி நளனுக்கு மாலை சூட்டியதாக
இந்திரன் கலிபுருஷனுக்குக் கூறுதல்!

159. மன்னவரில் வைவே னளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான்—உன்னுடைய
உள்ளக் கருத்தை யொழித்தே குதியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து.

[இ-ள்.] [மேற்கூறியபடி சொன்ன அக்கலியை நோக்கி,] வெள்ளை-வெண்மையான, தனி-ஒப்பற்ற, யானை- [ஐராவத மென்னும்] யானையையுடையவனை, வேந்து-தேவர்க்கிறைவ னென்னும் இந்திரன், மன்னவரில்-அரசர்களுள், வை-கூர்மைதங்கிய, வேல் வேலாயுதத்தையுடைய, நளனே-நளமகாராஜனே, மதி-சந்திரன் போன்ற, வதனம் முகத்தையுடையவளாகிய, கன்னி அழியாவியல்புள்ள பெண்ணென்னும் தமயந்தியினது, மணமாலை-கலியாணத்திற்குரிய மாலையை,கைக்கொண்டான்-புயங்களிற் கொண்டான், [ஆதலால்] உன்னுடைய-உனது, உள்ளக்கருத்தை-மனத்தின் எண்ணத்தை, ஒழித்து நீக்கி, ஏகுதி-செல்வாயாக, என்றான்-என்று கூறினான்; [எ-று.]

தமயந்தியின் சுயம்வரம் முடிந்து அதில் நளனே தமயந்தியின் மணமாலையைப் பெற்றானாதலின், இனி நீ செல்வதிற் பயனில்லை; உனதெண்ணத்தைவிடுத்து உனக்குரிய விடஞ் சேர்வாயாக என்று இந்திரன் கூறினான் என்பது இதன் கருத்து.

வை-கூர்மையைக் குறித்தலால் இங்கு உரிச்சொல் நளனே என்பதில் ஏகாரம் பிரிநிலைப் பொருளது. மதிவதனம்-உவமைத் தொகை. வதனம்-வடசொல். கன்னி-அழியா வியல்பை யுடையவள். கை இங்கே தோளை

புணர்த்திற்று, மாலை சூட்டப்பெற்றது அதுவே யாதலின். ஏகுதி-ஏவலொருமைமுற்று; இ-விகுதி, த்-எழுத்துப் பேறு.

கலிபுருஷன், நளனையும், தமயந்தியையும்
வருத்துவேன் என்று கூறுதல்.

160. விண்ணரசர் நிற்க வெறித்தேன் மணமாலை
மண்ணரசற் கீந்த மடமாதின்—எண்ணம்
கெடுக்கின்றேன் மற்றவடன் கேள்வனுக்குங் கீழ்மை
கொடுக்கின்றே னென்றான் கொதித்து.

[இ-ள்.] [அதுகேட்டுக் கலிபுருஷன்] கொதித்து-மனஸ்தாபமடைந்து, விண் அரசர்-வானுலகத்திறைவராகிய தேவர்கள், நிற்க-மணமாலை பெறாமல் அவமானமுற்று நிற்கும்படி, [செய்து அந்த] வெறிதேன்-வாசனையையும் தேனையுமுடைய, மணமாலை-கலியாணத்திற் குரியமாலையை, மண் அரசற்கு-பூவுலகத்தரசனாகிய நளனுக்கு, ஈந்த-கொடுத்த [அதாவது சூட்டிய], மடமாதின்-இளமை பொருந்திய பெண்ணாகிய தமயந்தியினது, எண்ணம்-பிரியமான நினைவை, கெடுக்கின்றேன்-நான் கெடுத்து விடுகிறேன், மற்று-பின்னரும், அவள் தன்-அவளுடைய, கேள்வனுக்கும்-கணவனாகிய அந்நளனுக்கும் கீழ்மை-தாழ்வான நிலைமையை, கொடுக்கின்றேன் - கொடுக்கிறேன்; என்றான்-என்று சொன்னான்; [எ று.]

தேவர்களையும் மதிக்காமல் தமயந்திபூவுலகத்திலுள்ள ஓர்மன்னனுக்கு மாலைசூட்டியதனால், அவளுடைய விருப்பத்தைக் கெடுத்து, அவளால் விரும்பப்பட்ட அம்மன்னனையுந் தாழ்மைப் படுத்துகின்றேனென்று கூறினான் கலிபுருஷன் என்பது இதன் கருத்து.

வெறிதே என்றும் பாடம்; அங்ஙனங் கொள்ளின் 'விண்ணரசர் மாலை பெறாமல் வெறிதே நிற்க' என மாற்றிப் பொருளுரைக்க வேண்டும். இங்கு, 'மடமாது' என்பதற்குப் பேதைப்பெண் எனப்பொருள் கொண்டு, 'தமயந்தி உயர்வு தாழ்வறியாமல் மண்ணரசனுக்கு மாலை சூட்டியதனால் மிகவும் பேதை' என்று கலிபுருஷன் இகழ்ந்துரைத்தானெனக் கூறினும் அமையும். எண்ணம் தொழிற் பெயர்; அம்-விகுதி. இந்த எண்ணமாவது நளனுடன் கூடி வாழ்தலாம். கேள்வன்-கேண்மையை யுடையவன்; கேண்மை-நண்பு. கேள்வன்என்பதில், கேண்மையென்னும் பண்படியாகிய கேள்-பகுதி, அன்-விகுதி, வ்-பெயரிடைநிலை; சந்தியெனினுமாம். கெடுப்பேன், கொடுப்பேன் என எதிர்காலத்தில் வரத்தக்கவை, கெடுக்கின்றேன், கொடுக்கின்றேன் என நிகழ்காலத்தில் வந்தது விரைவு பற்றி வந்த காலவழுவமைதி. அவள் தன் என்பதில், தன் சாரியை. மற்று-பின்னென்னும் பொருளது.

நளன், தமயந்தி இவர்களுடைய குணாதிசயங்களை
இந்திரன் கலிக்குக் கூறிப்போதல்.

161 வாய்மையுஞ் செங்கோல் வளனு மனத்தின்கண்
தூய்மையு மற்றவன் றோள்வலியும்—பூமா
நெடுங்கற்பு மற்றவற்கு நின்றுரைத்துப் போனான்
அடுங்கொற்ற வச்சிரத்தா னாங்கு

[இ-ள்.] அடும்-பகைவரைக்கொல்லுகின்ற, கொற்றம்-வெற்றியையுடைய, வச்சிரத்தான்-வச்சிராயுதத்தை யுடையவனாகிய இந்திரன், அவன்-அந்த நளனுடைய, வாய்மையும்-சத்தியத்தையும், செங்கோல்-செம்மையாகிய அரசாட்சியின், வளனும்-சிறப்பையும், மனத்தின்கண் மனத்தினிடமாகவுள்ள, தூய்மையும்-பரிசுத்தத்தையும், தோள்வலியும்-புஜபலத்தையும், பூ-தாமரை மலரில் வீற்றிருக்கின்ற, மா-இலக்குமியை நிகர்த்தவளாகிய தமயந்தியினது, நெடுங்கற்பும்-நீண்ட(அதாவது அதிகரித்த)பதிவிரதாதருமத்தையும், ஆங்கு-அப்பொழுது, அவற்கு-அக்கலிபுருஷனுக்கு, நின்று-(சிறிது பொழுது எதிரில்)நின்று, உரைத்து-(விவரமாகச்) சொல்லி,போனான்-சென்றான்; [எ-று.]

மேற்கூறியபடி கலிபுருஷன், தமயந்தியையும், நளனையும் வருத்துவேன் என்று கூறியதைக் கேட்ட-இந்திரன் அவ்விருவருடைய நற்குணங்களையும் அக்கலியினிடம் விவரமாக உரைத்துச் சென்றான். என்பது இதன் கருத்து. இதனால் இந்திரன் கலியை நோக்கி,''நீதி தவறி நடப்போரிடத்தில் மட்டுமே உன்சாமர்த்தியம் செல்லும்;இவர்கள் சத்திய முடையவர்களா யிருப்பதனால் இவர்களிடத்தில் உன் பிடிக்குச்செல்லாது'' என்-தை விளக்கிக் காட்டினான் என்பது குறிப்பாகப் பெறப்படும்.

கோல்-ஆகுபெயராய் அரசாட்சியை உணர்த்திற்று. வளன்-வளம் என்பதன் போலி; ''மகரவிறுதி யஃறிணைப்பெயரின், னகரமோடுறழா நடப்பனவுளவே''என்னும்(நன்-எழுத்தியல் சூஎ ஆம். சூ)விதிப்பற்றி வந்தது. மனத்தின் கண் என்பதில், இன்-சாரியை, கண்-ஏழனுருபு மா-இது இலக்குமிக்குப்பெயராதலின் வடசொல். கற்பு-கணவன்வழி நிற்கக் கற்றல்; கற்றல் என்பது கற்றலாலுண்டாம் ஒழுக்கத்தை யுணர்த்தும்.

கலிபுருஷன் நளனையும் தமயந்தியையும்
பிரிப்பேனென்றல்.

162. செருக்கதிர்வேற் கண்ணியுடன் தேர்வேந்தன் கூட
இருக்கத் தரியே னிவரைப்—பிரிக்க
உடனாக வென்று னுடனே பிறந்த
விடநாக மன்னன் வெகுண்டு.

(இ-ள்.) (இந்திரன் மேற்கூறியவாறுசொன்னதைக் கேட்டவுடனே மேலும் பொறாமைகொண்டு) உடனே பிறந்த-(பிறக்கும் பொழுது கூடத்தோன்றிய, விடம்-விஷத்தையுடைய, நாகம்அன்னான் சர்ப்பத்தைப் போன்றவனாகிய கலி, வெகுண்டு-கோபித்து செரு-போர்செய்யவல்ல, வேல்-வேலாயுதத்தைப் போன்ற, கண்ணியுடன் கண்களை யுடையவளாகிய தமயந்தியோடு, தேர்-இரதத்தையுடைய, வேந்தன் நளமகாராஜன், கூடயிருக்க ஒன்றாகக் கூடியிருக்க, தரியேன்-நான் மனம்பொறேன், (ஆதலால்) இவரை-இவர்களை, பிரிக்க-பிரிப்பதற்கு, உடன் ஆக-என்னுடன்நீயும் சேரக்கடவாய், என்றான்-இந்திரனை நோக்கிக் கூறினான்; [எ-று.]

நளன், தமயந்தி ஆகியவர்களின் நற்குணங்களை, இந்திரன் எடுத்துக் கூறக்கேட்ட கலிபுருஷன் மேலும் பொறாமைகொண்டு கோபமுற்று, இத்தகையதம்பதிகளைக் கூடிவாழவொட்டாமல் நான்செய்கிறேன்; நீயும் அதற்குதவி புரியவேண்டும்என்று இந்திரனைநோக்கிக் கூறினனென்பது இதன் கருத்து-தூர்க்குணமுடையார்க்குப் பிறரது நற்செய்கைகளிலும் பொறாமையுண்டாய்,அவர்கள், அந்நல்லோர்க்கு நலம் புரியாமல் தீங்கே செய்ய நாடுவது உலகியற்கை ஆதலின், கலிபுருஷனும் இங்கே இவர்களுக்குக் கேடுசெய்ய நாடினான் என்பது பொருள்.

உடனேபிறந்த விடநாகமன்னான் என்ற உவமை பிறவியிலேயே கொடுமை வாய்ந்தவனென்பதை விளக்கும். மகளிர் கண்மிகக்கூறியதாய்-ஆடவரது நெஞ்சிற்பாய்ந்து அவரைத் துன்பத்திற்குள்ளாக்குவனாதலின், அதற்கு அக்குணமே வாய்ந்த வேலாயுதம் உவமையாகக்கூறப்பட்டது. கண்ணி-என்பதில் இ-பெண்பால்விகுதி. நாகம்-சந்தனமரத்தில் அல்லது மலையில்வாழ்வது. வெகுண்டு-என்பதில், வெகுள்-பகுதி.

இதில் சூரியோதயங் கூறப்படுகின்றது.

163. வெங்கதிரோன் றானும் விதர்ப்பன் திருமடந்தை
மங்கலநாட் காண வருவான்போல்—செங்குமுதம்
வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கும் நன்னெஞ்சில்
தீயடங்க ஏறினான் தேர்.

(இ-ள்) வெம்-வெப்பமாகிய, கதிரோன் தானும்-கிரணங்களையுடைய சூரியனும், விதர்ப்பன்-விதர்ப்ப தேசத்துக்கதிபதியான வீமராஜனது, திருமடந்தை-அழகியபெண்ணாகியதமயந்தியின், மங்கலம்நாள்-திருக்கலியாணம் நடக்கும் தினத்தை, காண-பார்த்தற்கு, வருவான் போல்-வருகின்றவனைப் போல, செங்குமுதம் சிவந்த அல்லிமலர், வாய் அடங்க-முகங்குவியவும், மன்னற்கும் நளமகாராஜனுக்கும், வஞ்சிக்கும்-வஞ்சிக்கொடிபோன்ற தமயந்திக்கும், நல்நெஞ்சில்-எப்பொழுதும் நன்மையே பொருந்தியிருக்கின்ற மனத்திலே, (எழுந்த) தீ-காதல் வெப்பானது, அடங்க-தணியவும், தேர் ஏறினான்-தன் தேரின்மீதேறிப் புறப்பட்டான், (உதயமாயினான் என்றபடி;) [எ-று.]

சூரியனுக்கு அல்லி பகையாதலால் அவனுதயங்கண்டவுடனே அதுமுகங் குவிந்தது; அல்லி இரவில் சந்திரனைக்கண்டு மலர்தலும், பகலில் சூரிய வெப்பம் பட்டமாத்திரத்தில் குவிதலும் இயற்கை; வாயடங்க என்பதற்கு வாய் மூட என்றும் பொருள் கூறலாம்; சிறந்த வீரனொருவனைக் காணின் அவனுடைய எதிரிகள் வாயொடுங்குதல் இயற்கையாதலின், அல்லியும் தனக்கு விரோதியாகிய சூரியனைக்கண்டமாத்திரத்தில் வாயொடுங்கிற்றென்க. தமயந்தியும் நளனும் சுயம்வரத்தால் தம்பதிகளென நிச்சயிக்கப்பட்டார்களெனினும் மணமுடிக்கப்பெறுமையால் அன்றிரவுபிரிந்தேயிருந்தார்கள்; அதனால் அவ்விருவர் மனதிலும் எப்பொழுது நாம் நெருங்கியிருக்கப் பெறுவோமோ என்றவிருப்பம் மேலிட்டிருந்தது, அவ்விருப்பமிகுதியால் மனத்தில் காதல்-வெப்பம் அதிகரித்திருந்தது; சூரியோதய மானவுடனே 'இன்று மணம் நடக்கும்; இனி நாம் சேர்ந்திருப்போம்' என்ற சந்தோஷமுண்டாயிற்று; அதனால் முன் ஏற்பட்டிருந்த காதல் வெப்பம் நீங்கிற்று. பிரிவுத்துயரானது மனத்தை வெதுப்புமாதலின் அஃதிங்கே தீயாக உருவகஞ் செய்யப்பட்டது. சுயம்வரம் முடிந்தவுடன் இரவாயிற்று; அவ்விரவிற்றான் தேவர்கள் வழியில் கலிபுருஷனைக் கண்டு அவனோடு மேற்கூறியபடி வார்த்தையாடினார்கள். பின் எல்லோரும் தங்கள் தங்கள் இருப்பிடஞ் சேர்ந்தார்கள். தமயந்தியுடன் சுயம்வர மண்டபத்தை விட்டுப் புறப்பட்ட நளன் தன்னுடைய வாசஸ்தானஞ் சேர்ந்தான்; தமயந்தி அந்தப்புரஞ் சேர்ந்தாள். அதன்மேல் அவ்விரவு நீங்கிச் சூரியோதய மாயிற்று. இங்ஙனம் இயற்கையாகச் சூரியன் உதித்ததைத் தமயந்தியின் திருமணங் காணஉதித்ததாகக் காரணங்கற்பித்துக்கூறியது ஏதுத்தற்குறிப்பேற்றவணி

திருமடந்தை என்பதை இலக்குமிபோன்ற பெண் என உரைப்பினும் பொருந்தும். குமுதம்-முதலாகுபெயர். வஞ்சி-ஒருவகை நீர்க்கொடி; மெல்லிதாகி ஒல்கித்துவண்டு, பணிந்துநிற்குமியல்பினால் இது தமயந்திக்கு உவமையாயிற்று. மன்னற்கும், வஞ்சிக்கும் என்பவற்றிலுள்ள உம்மைகள் எண்ணுப்பொருளன. வாயடங்க, தீயடங்க என்பன வினையெச்சங்கள் இவற்றில எண்ணும்மைகள் தொக்கன.

### தமயந்திக்கு மணவலங்காரஞ் செய்தல்.

164. இன்னுயிர்க்கு நேரே இளமுறுவ லென்கின்ற
பொன்னழகைத் தாமேபுதைப்பார்போல்--மென்மலரும்
சூட்டினார் சூட்டித் துடிசே ரிடையாளைப்
பூட்டினார் மின்னிமைக்கும் பூண்.

(இ-ள்.) (வண்ணமகளிர்) இளமுறுவல்-இவளுடையபுன்சிரிப்பொன்றே, இன் உயிர்க்கு-ஆடவர்களின் இனிய உயிர்க்கு, நேர்-சமமானதாகும், (அதாவது ஆடவர்கள் உயிரைப்போல விரும்பத் தக்கதாகும்) என்கின்ற-என்று எதிர்ப்பட்டோர் கூறுதற்குத் தகுதியான (அப்புன்முறுவல் முதலிய அழகுகளைப் பெற்ற) பொன்-இலக்குமி போன்ற தமயந்தியினது, அழகை-வனப்

பினை, தாமே-(அவளை அலங்கரித்தற் கேற்பட்ட) தாங்களே, புதைப்பார் போல்-மறைப்பவர்களைப்போன்று, துடிசேர்-உடுக்கையின் வடிவம் பொருந்தியிருக்கின்ற, இடையாளை-இடையினை யுடையவளாகிய அத்தமயந்திக்கு, மெல்மலரும்-மெல்லிய மலர்மாலைகளையும், சூட்டினர்-அணிவித்தார்கள், சூட்டி-அங்ஙனம்அணிவித்து,'(மேலும்)மின்இமைக்கும்-பிரகாசத்தை வீசுகின்ற, பூண்-ஆபரணங்களையும், பூட்டினர்-பூணுவித்தார்கள்; [எ-று.]

தமயந்தியின் புன்சிரிப்பொன்றே ஆடவர்கள் உயிரைப்போலநினைத்து ஆவல் கொள்ளத்தக்கதாகு மென்றதனால், மற்ற அவயவங்களில் அவர்களுக் கேற்படும் ஆவலுக்கு அளவேயில்லை யென்பதாயிற்று. ஆகவே, அத்தமயந்தியினுடைய அவயவங்களெல்லாம் ஆடவர்க்கு மிகுந்த ஆவலை யுண்டாக்குமென்றும், அந்த ஆவலால் அவர்கள் அவ்வவயவங்களை மிகுதியாக நோக்குவார்களென்றும், அங்ஙனம் நோக்குவதால் தமயந்திக்குத் திருஷ்டி தோஷமுண்டாகுமென்றுங்கருதி, அலங்காரஞ் செய்தற் கேற்பட்ட வண்ணமகளிர் தாங்களே அவ்வாறுசெய்யாமல், மலர்களாலும் ஆபரணங்களாலும் அவளுடைய அழகை மறைத்தார்கள். அவர்கள் தமயந்திக்கு மலர்களையும் ஆபரணங்களையும் சூட்டி அலங்காரஞ் செய்ததையே இங்ஙனம் அழகை மறைத்ததாக ஆசிரியர் கூறினர். இங்ஙனம் கூறியது ஏதுத் தற்குறிப்பேற்றவணியெனப்படும். இதனால் தமயந்தியின் பேரழகு தொனிக்கும். 'பொன்னழகைத் தாமே, புதைப்பார்போல் மலரும் பூணும் சூட்டினர் பூட்டினர்' என்றதனால், இயற்கை யழகுள்ள அவளுக்கு மலரும்பூணும் அவசியமில்லையென்பதும், அங்ஙனமிருப்ப அவர்கள் இவற்றைச் சூட்டியது மங்கலத்தின் பொருட்டென்பதும், அவ்வாறு செய்ததும் அழகுக்கழகு செய்தது போலாகு மென்பதும் பெறப்படும். ஆசிரியர் இங்குக் கூறியவாறே கம்பரும்,

"அமிழ்நிமைத் துணைகள் கண்ணுக் கணியென வமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்கள் நங்கை யுருவினை மறைப்ப தோரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன வழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞால மேழைமை யுடைத்து மாதோ"

எனக்கூறியிருத்தல் காண்க. இனி,'இளமுறுவல் இன்னுயிர்க்கு நேர்' என்பதற்கு,'புன்னகையொன்றே ஆடவரின் உயிரைக் கொள்வதற்குப் பொருந்தியதாகும்' எனப்பொருள்கொண்டு, இதுவே இத்தன்மை யுடையதாயிருக்கும்போது மற்ற அவயவங்கள்ஆடவரைஎன்னபாடுபடுத்தமாட்டாவென்று சிந்தித்து ஆடவர்க்கிரங்கி அவர்களின் உயிரைக் கொள்ளை கொள்ளா திருக்கும்பொருட்டு அவ்வண்ணமகளிர் அவற்றை மறைத்தனர் எனினும் அமையும். இளமுறுவல் என்பதை அன்மொழித் தொகையாகக்கொண்டு 'புன்சிரிப்பையுடைய தமயந்தி யொருத்தியே ஆடவருயிரைக் கொள்ளை கொள்ளுதற் கேற்றவள்' எனப் பொருள் கோடலு மொன்று.

'வண்ணமகளிர்' என்ற எழுவாய் வருவித்துரைக்கப் பட்டது. வண்ண மகளிர்-அலங்காரஞ் செய்கின்ற பெண்கள்; வண்ணம்-அலங்காரம். நேரே என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலைப்பொருளது; இந்த ஏகாரத்தை முறுவலோடுங்கூட்டலாம்; அங்ஙனங் கூட்டியுரைக்குமிடத்து இதனை இழிவு சிறப்புப் பொருளதெனினும் அமையும். பொன்-உவமையாகுபெயர். தாமே என்பதிலுள்ள ஏகாரம் உயர்வு சிறப்புப் பொருளது போல், தற்குறிப்பேற்றத்தின் உருபாகிய இடைச்சொல். மலரும் எனபதிலுள்ள உம்மை எதிரதுதழுவியது. பூண் என்பதில் இறந்தது தழுவிய எச்சஉம்மை தொக்கது. இடையாளை-உருபுமயக்கம்.

தமயந்திக்கும் நளனுக்கும் திருமணம்.

165. கணிமொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தார்
அணிமொழிக்கு மண்ண லவற்கும்—பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றெவரு மொவ்வார் மகிழ்ந்து

[இ-ள்.] கணி சோதிட சாஸ்திரி, மொழிந்த-சொல்லிய, நாளில்-அந்த நல்லநாளிலே, அணி மொழிக்கும்-அழகிய சொல்லையுடைய தமயந்திக்கும், [வீமராஜன் முதலியோர்] கடிமணமும் செய்தார்-சிறந்த கலியாணத்தைச செய்தார்கள், மற்றெவரும் ஒவ்வார் [தங்களுக்குத் தாங்களே ஒப்பவதன்றி] வேறே எவரும் நிகராகாத சிறப்பினையுடைய அவ்விருவரும், பணிமொழியார்-வணக்கமான சொற்களையுடைய சேடிமார், குற்றேவல் செய்ய-சிறிய ஏவற்றொழில்களைச செய்துவர, மகிழ்ந்து-சந்தோஷித்து, கொழும்பொன் அறை-[தங்கட்குத் தங்குமிடமாக அமைக்கப்பட்டிருந்த] உயர்ந்த பொன்னாலாகிய அறையில், புக்கார்-சேர்ந்தார்கள்; [எ-று.]

சோதிடன் கூறிய அந்நாளிலே-நளனுக்கும் தமயந்திக்கும் வீமன் முதலியோர் கலியாணஞ் செய்துவைக்க அவ்விருவரும் மகிழ்ச்சியடைந்து பணிவிடைக்காரிகள் குற்றேவல் செய்ய, தாஙகள் வசிப்பதற்கென் றேற்பட்டிருந்த பொன்னறையிற் சேர்ந்திருந்தார்கள் என்பது இதன் கருத்து. மேற்கூறியபடி தமயந்திக்கு அலங்காரஞ் செய்த நாளே சோதிடன் கூறிய நன்னாளாக அமைந்திருந்தபடியினாலே அந்நாளிலேயே மணம் நிறைவேறியது. கலியாணம் முடிந்தபின் தம்பதிகள் தனித்துச் சந்தோஷமாக வசிப்பதற்குத் தனியான அலங்கார மாளிகையை அவர்க்குரியார் சமைத்து அதில் வேண்டிய சௌகரியங்களையும் ஏற்படுத்துவது வழக்கம்; ஆதலின் தமயந்திக்கும், நளனுக்கும் அவ்வாறே பணிவிடைக் காரிகள் அமைந்த தனிமாளிகை ஏற்படுத்தப்பட்டிருந்த தென்க.

கணி-கணிப்பவன்; கணித்தல்-கிரகசஞ்சாரத்தைக் கொண்டு காலத்தைக் கணக்கிடுதல். மணமுஞ் செய்தார் என்பது சுயம்வரம் நடத்தியதன்

றிக்கலியாணமுஞ் செய்தார் என்று பொருளாவதால் மணமுஞ் செய்தார் என்பதிலுள்ள உம்மை, இறந்தது தழுவியதாம். அணிமொழி-பண்புத்தொகையன்மொழி: குறுமை × ஏவல்=குற்றேவல்; பண்புப் பெயர் ஈறுபோய்த் தன்னொற்றிரட்டியது. கொழும் பொன் என்பதில் கொழுமை உயர்வை உணர்த்திற்று. அறை-வரையறுக்கப்பட்ட இடம். ஏவர்-ஏ என்னும் வினைடியாகப் பிறந்த பலர்பாற் பெயர். அண்ணல்-பெருந்தன்மை; பெருமையிற் சிறந்தவன் எனினுமாம்.

நளன் மீதும், தமயந்திமீதும் மன்மதன்
பாணங்களை ஏவினுனென்பது இதிற்
கூறப்படுகின்றது.

166. செந்திருவின் கொங்கையினுந் தேர்வேந்த னாகத்தும்
வந்துருவ வார்சிலையைக் கால்வளைத்து—வெந்தீயும்
நஞ்சுந் தொடுத்தனைய நாம மலர்வாளி
அஞ்சுந் தொடுத்தா னவன்.

[இ-ள்.] செம்திருவின்-செம்மையான இலக்குமியை நிகர்த்த தமயந்தியின், கொங்கையினும்-தனங்களிலும், தேர்வேந்தன்-இரதத்தையுடைய அரசனுகிய நளனது, ஆகத்தும்-மார்பிலும், வந்து உருவ-வந்து பாய்ந்து ஊடுருவிச்செல்லும்படி, வார்சிலையை-நீண்ட கருப்புவில்லை, கால்வளைத்து-காலால் வளைத்து நாணேறிட்டு, வெம்தீயும் வெப்பமான நெருப்பையும், நஞ்சும்-விஷத்தையும், தொடுத்தனைய-தொடுத்தாற் போன்றிருக்கிற, நாமம்-அச்சத்தைச் செய்யும், மலர்வாளி-புஷ்ப பாணங்கள், அஞ்சும்-ஐந்தையும், அவன்-அப்பாணங்களையுடைய மன்மதன், தொடுத்தான் எய்தான்; [எ-று]

தமயந்தியும், நளனும் மணஞ்செய்து தனியறையைச் சேர்ந்தவுடனே அவர்களுக்குக் காதலை யுண்டாக்கும் பொருட்டு மன்மதன் இதுதான்தருணமென்றுணர்ந்து அவர்கள் மீது மலர்ப் பாணங்களை யேவினுனென்பது இதன் கருத்து. இவர்கள் தனியறையிற் சேர்ந்த மாத்திரத்தில் இவர்களிடத்தே ஆசை அதிகரிக்கும்; அதனுல் தமயந்திக்குத் தனம் விம்மும்; நளனுக்கு மார்பு பூரிக்கும்; இச்செய்கைகள் மன்மத பாணத்தால் நிகழ்ந்தனவாகக் கூறப்படுதல் இயற்கை. மன்மதன் இச்செய்கைகளுக்குரிய தேவனுதலின் இவற்றை அவன்மேலேற்றியே கூறுவர் ஆன்றோர் ஆதலின், ஆசிரியரும் ஈண்டு இங்ஙனம் கூறினர்.

"நெஞ்சி லரவிந்த நீள்குதங் கொங்கையிலே
துஞ்சும் விழியி லசோகமாம்—வஞ்சியர்தம்
சென்னியிலே முல்லை திகழ்நீல மல்குலிலே
அன்னவே ளெய்யுமியல் பாம்"

என்று இரத்தினச் சுருக்கத்தில் மதன் கணையெய்யு மியல்பு கூறப்பட்டிருத்தலின், இங்கு தமயந்தி கொங்கையில் மாமலர்க் கணையையும், நளன் மார்பில் தாமரை மலர்ப் பாணத்தையும் மன்மதன் எய்தானெனக் கொள்ளல் வேண்டும். மன்மத பாணங்கள் ஐந்தும் முன் ஓரிடத்திற் கூறப்பட்டுள்ளன. முழங்காலை வில் நடுவில் தாக்கி அதன் நுனியைக் கையாற் பிடித்திழுத்து வளைத்தல் இயல்பு ஆதலின், கால் வளைத்து என்பதற்குக் காலால் வளைத்து எனப்பொருள் கூறப்பட்டது; இனி, கால்என்பதை நுனியெனக் கொண்டு நுனியைப்பற்றி யிழுத்து வளைத்து எனப் பொருள் கூறினும் பொருந்தும். வெந்தியும் நஞ்சுப் தொடுத்தனைய என்பதற்குத் தீயையும் நஞ்சையும் சேர்த்துச் செய்தாற் போன்ற எனக்கூறினும் அமையும்.

செந்திரு-உவமையாகு பெயர். தொடுத்தது அனைய என்பதுதொடுத்தனைய எனத் தொகுத்தலாயிற்று. அஞ்சும் என்பதிலுள்ள உம்மை முற்று.

நளன், தமயந்தி இவர்களின் சேர்க்கை
இதிற் கூறப்படுகின்றது.

167. ஒருவ ருடலி லொருவ ரொதுங்கி
இருவ ரெனுந்தோற்ற மின்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானுங் காரிகையுஞ் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று.

[இ-ள்.] [மேற்கூறியபடி காதல் மிக்க காலத்தில்] பொரு-போர் செய்யத்தக்க, வெம்கனற்கு-வெவ்விய நெருப்போடு, ஏயும்-நிகர்த்திருக்கின்ற, வேலானும்-வேலாயுதத்தையுடைய நளனும், காரிகையும்-அழகிய பெண்ணாகிய தமயந்தியும், ஒருவர் உடலில் ஒருவருடைய தேகத்தில், ஒருவர் ஒதுங்கி-ஒருவர் ஒன்றித்து, இருவர்எனும்-இரண்டுபேர் என்கின்ற, தோற்றம் இன்றி-தோற்றமில்லாதபடி, புனற்கு-தண்ணீரில், புனல்கலந்தாற் போன்று-தண்ணீர் சேர்ந்ததை யொத்து, சேர்ந்தார்-கூடினார்கள்; [எ-று.]

தமயந்தியும், நளனும் மேற்கூறியபடி பொன்னறையிற் சேர்ந்திருந்தவுடன் காதல் மிகுந்து, நீரோடு நீர் கலந்தாற் போன்று, இருவரென்னும் பேதந்தோற்றாமல் ஈருடம்பும் ஓருடம்பாகும்படி கூடினார்கள் என்பது இதன் கருத்து. நீரோடு நீர் கலந்தாற் பேதமென்பதே தோற்றாது; அதேபோல் இவ்விருவரும் சேர்ந்தபோது பேதந்தோற்றா திருந்ததென்க-இதனால், அவ்விருவரின் மனமொத்த அன்புமிகுதி விளங்கும். இங்ஙனம் இருவரும் ஒன்றுபடுதலே இல்லற வின்பமாம்; "காதலிருவர் கருத்தொருமித்தாதரவுபட்டதே யின்பம்" என்றார் ஔவைப்பிராட்டியாரும்.

கனற்கு-உருபுமயக்கம்; மூன்றனுருபு நான்கனுருபாக மயங்கிவந்தது. காரிகை-அழகு: அஃதாகு பெயராய்ப் பெண்ணை யுணர்த்திற்று. புனற்கு-என்ப

து; எழனு நபு நான்கனுருபாக மயங்கி|வந்த உருபுமயக்கமேயாம். புனற்கே-என்றதில், ஏ-அசை. ஒதுங்கல்-பதுங்கல்; இஃதிங்கே ஒன்றித்தற் பொருளில் வந்தது. ஒருவருடல்-ஆறன்தொகை.

இதில், தமயந்தியின் சேர்க்கை கூறப்படுகின்றது.

168. குழைமேலுங் கோமா னுயிர்மேலுங் கூந்தன்
மழைமேலும் வாளோடி மீள—விழைமேலே
அல்லோடும் வேலா னகலத் தொடும்பொருதாள்
வல்லோடுங் கொங்கை மடுத்து.

[இ ள்.] [முன்னுரைத்தவாறு இருவர்க்கும் சேர்க்கை நிகழ்ந்த காலத்தில்] குழைமேலும்-[காதுகளில் அணியப்பட்டிருக்கும்] குண்டலங்களின் மீதும், கோமான்-நளமகாராஜனுடைய, உயிர்மேலும்-ஆவியின் மீதும், கூந்தல் மழைமேலும்-கூந்தலாகிய மேகத்தின் மீதும், வாள் ஓடிமீள-கண்ணாகிய வாளாயுதமானது ஓடி ஓடித் திரும்பும்படி, [அதனைச் சுழற்றி] விழைமேல் [சேர்க்கையில் இளைக்காமல் ஜெயம்பெற வேண்டுமென்னும்] ஆசைப் பெருக்கத்தினால், அல்ஓடும்-இருளானது ஓடிப்போகத்தக்க, [பிரகாசமுள்ள] வேலான்-வேலாயுதத்தையுடைய நளமகாராஜனது, அகலத்தொடு-மார்புடனே, வல்லோடும்-சொக்கட்டான் காயானது [நாம் உருவத்தில் இவற்றிற் கிணையாகமாட்டோம் என்றுநாணி] ஓடுகின்ற அழகுவாய்ந்த, கொங்கை-தனங்களை, மடுத்து-நெருக்கி, [அதாவது மோதவிட்டு] பொருதாள்-[தமயந்தி] யுத்தஞ் செய்தாள்; [எ-று.]

புணர்ச்சிவகைகளுள் இதில் பெண் புணர்ச்சி கூறப்பட்டது. தமயந்தி கூடலில் தான் இளைக்கா திருத்தலாகிய ஜெயத்தைப் பெற விரும்பியதனால், தன்னுடைய கண்கள், காதணிகளின் மேலும், நளனது பிராணன்மேலும், தனது கூந்தலின் மேலும் சென்று வரும்படி அவற்றை நாலாபக்கங்களிலும் சுழற்றி நளனது மார்பின் மேல் தன் கொங்கைகள் அழுந்தப் புல்லினாள் என்க. சேர்க்கைக் காலத்தில் காதல் மிகுதியால் கண்கள் பற்பல அவயவங்களையும், அணிகளையும் பார்த்தல் இயல்பு. அதனையே இங்கு ஆசிரியர் அவற்றின்மேல் ஓடி மீண்டதாகக் கூறினார். கண்கள் குழையின்மேற் செல்லுதலாவது அடிக்கடி அவற்றின் பக்கம் திரும்புதலாம். நளனின் உயிர்மேற் செல்லலாவது அடிக்கடி அவனைப் பார்த்து அவனுடைய ஆவியை ஆசையால் துடிக்கச் செய்தலாம். கூந்தல்மேற் செல்லுதலாவது, முன்பக்கமாகச் சோர்ந்து தொங்கும் கூந்தலில் அடிக்கடி பார்வை விழுதலாம். 'விழைமேலே' என்பதை, இழைமேலே' எனக்கொண்டு, 'ஆபரணங்களின் மீதும் ஓடிமீள' எனவும் பொருளுரைக்கலாம். இங்ஙனங் கொள்ளும்போது 'வாள்ஓடி இழைமேலே மீள' என மாற்றிக் கொள்ளவேண்டும். குழையைநோக்கியது போல ஆபரணங்களையும் அவள் நோக்கினாளென்க. இங்ஙனம் உண்டாகிய தமயந்தியின் சேர்க்கையை யுத்தஞ்செய்ததாக ஆசிரியர் உருவகஞ் செய்

தார். தமயந்தி கண்களாகிய வாளைக் குழையிலும், நளனுயிரிலும், தன் கூந்தலிலும் சென்று மீளும்படி சுழற்றி, யானைகளாகிய கொங்கைகளை நளன் மார்பில் மோதவிட்டு யுத்தஞ் செய்தாளென்க. வாளைச் சுற்றுங் காலத்தில் அது மேற்கூறிய இடங்களிலெல்லாம் சென்று மீளுதல் இயற்கை; உயிரின் மேற் செல்லுதலாவது அதனைக் கலக்கச் செய்தலாம். வீரர்கள் யுத்தஞ் செய்யுங்காலத்தில் வாளைச் சுழற்றி எதிரிகளின் மேல் யானைகளைப் பாயவிட்டுப் போர்புரிதல் வழக்கம்.

குழைமேல், உயிர்மேல், மழைமேல் இழைமேல், என்பவற்றிலுள்ள மேல் என்பது ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. இழைமேல் என்பதை, விழைமேல் எனக்கொள்ளும் போது மேல்-மூன்றாம் வேற்றுமையில் வந்த சொல்லுருபு; நோய்மேற் படுத்தான், கோபத்தின்மேற் போயினான் என்பன போல் இது வந்ததெனக் கொள்க; விழைவு என்பது ஈறுகெட்டு விழை என நின்றது. ஓமும் என்பதில் உம்- அசை.

தமயந்தி சேர்க்கையால் நிகழ்ந்த தொழி
இதிற் கூறப்படுகின்றது.

169. வீரனக லச்செறுவின் மீதோடிக் குங்குமத்தின்
ஈர விளவண்ட லிட்டதே—நேர்பொருத
காராரு மெல்லோதிக் கன்னியவள் காதலெனும்
ஓராறு பாய வுடைந்து.

(இ-ள்.) (அங்ஙனம் கலந்தகாலத்தில்) நேர்பொருத-நேரேசேர்ந்த, கார் ஆரும்-கருமைநிறம் பொருந்திய, மெல்ஓதி மென்மையான கூந்தலையுடைய, கன்னி அவள்-அழியாவியல்பை யுடையவளாகிய அத்தமயந்தியின், காதல் எனும்-ஆசை யென்கின்ற, ஓர் ஆறு-ஒருநதியானது, பாய-பாய்வதனால், உடைந்து-மடையுடைந்து, வீரன்-வீரத்தன்மையையுடையவனாகிய நளனது, அகலம்- மார்பாகிய, செறுவின்மீது-வயலில், ஓடி-அவ்வாற்றின் வெள்ளமானது விரைந்துசென்று, குங்குமத்தின்-குங்குமச்சாந்தின், ஈரம்-குளிர்ச்சிபொருந்திய, இளவண்டல்-மெல்லியவண்டலை, இட்டது-உண்டாக்கிற்று;[எ-று.]

தமயந்தி அதிகரித்த ஆசையுடனே சேர்ந்தபடியால் அவள் மார்பிலணியப்பட்டிருந்த குங்குமச் சாந்து வேர்வை யுடனே கலந்து இளகி நளன் மார்பிற் படிந்ததென்பது இதன்கருத்து. இதில் தமயந்தியின் காதல் ஆறாகவும், அக்காதன்மிகுதி வெள்ளமாகவும், குங்குமச்சேறு வண்டலாகவும், நளன் மார்பு கழனியாகவும் உருவகஞ் செய்யப்பட்டன. ஆற்றின் புதுவெள்ளம் வயல்களிற் பாயுங்காலத்தில் வண்டல் படிவது இயற்கை. வண்டல்-இளஞ்சேறு, ஆற்று வெள்ளம் உடைதலாவது அணையைக்கடந்து செல்லல்; இங்கே காதல் வெள்ளத்திற்கு காணம் அணையாயிருந்தது; அந்நாணத்தை மீறிச் சென்றது காதலென்க. இட்டதே என்பதில் ஏ-அசை.

இதில் நளன் சேர்க்கை கூறப்படுகின்றது.

270. கொங்கை முகங்குழையக் கூந்தன் மழைகுலையச்
செங்கயற்க ணோடிச் செவிதடவ—அங்கை
வளைபூச லாட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கொல்யானை வேந்து.

(இ-ள்) பூசல்விளை-யுத்தத்தை யுண்டாக்குகின்ற, கொல்-எதிரிகளைக் கொல்லும், யானை-யானையை யுடைய, வேந்து-நளமகாராஜன், (தமயந்தியின்) கொங்கை முகம்-தனங்களின்முகங்கள், குழைய-கட்டு விட்டிளகவும், மழை கூந்தல்-மேகத்தைநிகர்த்த கூந்தலானது, குலைய-அவிழ்ந்துசோரவும், செம்கயல்-சிவந்தசேற்கெண்டையை யொத்த, கண்-கண்கள், ஓடி-பக்கங்களிற் பாய்ந்து, செவிதடவ-காதுகளைத்தீண்டவும், அம்கை-அழகியகைகளி லணியப்பட்டுள்ள, வளை-வளையல்கள்,பூசல்ஆட-ஒன்றோடொன்றுதாக்கவும், மடந்தையுடன் அத்தமயந்தியாகியபெண்ணுடனே,சேர்ந்தான்-கூடினான்;

இதில் ஆண்புணர்ச்சி கூறப்பட்டது. மேற்கூறிய சேர்க்கைக்குப் பின் நளன், தமயந்தியின் கொங்கை முகங்குழைய, கூந்தல் சோர, கண்விசாலித்துச் செவிகளின் பக்கத்திற்பாய்ந்து புரள, கைவளைகள் ஒன்றோடொன்று மோதியொலிப்ப அவளோடுசேர்ந்தானென்க. சேர்க்கைக் காலத்தில் கண் மிக மலர்ச்சியடையும்; அங்ஙனமாகவே அதன் ஒளி பக்கங்களிற்பாயும்; அதனையே இங்கு, 'கண்ணோடிச் செவிதடவ' என்றார் ஆசிரியர்.

குழைய, குலைய, தடவ, ஆட என்பன வினையெச்சங்கள். அங்கைவளை-ஏழன் உருபும் பயனும் தொக்க தொகை. கூந்தல்மழை யென்பது மழை கூந்தல் எனவும், விளைபூசல் என்பது பூசல்விளை எனவும் மாற்றப்பட்டன.

நளன் தமயந்தியுடனே அந்த நெடுங்காலம்
தங்கியிருந்தமை இதில் கூறப்படுகின்றது.

171. தையற் றளிர்க்கரங்க டன்றடக்கை யாற்பற்றி
வையமுழு தும் மகிழ்தூங்கத்—துய்ய
மணந்தான் முடித்ததற்பின் வாணுதலுந் தானும்
புணர்ந்தா னெடுங்காலம் புக்கு.

(இ-ள்.)(நளன்)தையல்-தமயந்தியாகியபெண்ணினது, தளிர்-தளிரைப் போன்ற, கரங்கள்-கைகளை,தன்-தன்னுடைய,தடக்கையால்-விசாலம்பொருந்தியகைகளால், பற்றி-பிடித்து, வையம் முழுதும்-பூமியிலுள்ளவர்களெல்லோரிடத்திலும், மகிழ்தூங்க-சந்தோஷம் நிலைபெற்றிருக்க; துய்ய பரிசுத்தமான, மணம்-கலியாணத்தை,முடித்ததற்பின்-முடித்தபிறகு, வாணுதலும் தானும்-ஒளிபொருந்தியநெற்றியையுடையவளாகிய தமயந்தியும் தானுமாக, புக்கு-தனக்கென்றேற்பட்டிருந்த விடத்திற் புகுந்து, (மேற் கூறியபடி மன்

மொத்த சேர்க்கைகள் நிகழ) நெடுங்காலம்-நீண்டகாலம், புணர்ந்தான்-(அவ ளோடு) கூடியிருந்தான்; [எ-று.]

கலியாணம் முடிந்தபிறகு நளன், தமயந்தியுடனே தனக்கென்றமைக்கப் பட்டிருந்த மாளிகையில் நெடுங்காலம் கூடி யிருந்தா னென்பது இதன் கருத்து. நளன், தமயந்தியின் விருப்பால், மாமன் வீட்டில் இருக்க வேண் டிய தினங்களுக்கதிகமாகவே சில தினங்கள் தங்கியிருந்தான். அங்ஙனம் தங்கியிருந்த காலமே இங்கு நெடுங்காலமெனக் கூறப்பட்டது. இது காண்ட முடிவாதலின், இக் காண்டத்திலடங்கிய விஷயங்களை யெல்லாம் இதில் தொகுத்துக் கூறினர் ஆசிரியர்.

நளன் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. வையம்:இடவாகுபெயர், தூய்ய-குறிப்புப் பெயரெச்சம்; இதில் தூய்மை யென்னும் பண்படியின் மை யீறு கெட்ட தூய் பகுதி, அ-பெயரெச்ச விகுதி,யகரமிரட்டியது சந்தி;இனித் தூய்மை குறுகிற்றெனவுங் கொள்ளலாம், மணந்தான் என்பதில், தான்-அசை. வாணுதல் பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. நளன் வாணுதலும் தானும் புணர்ந்தான் என்பது, "திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும், மிகவினு மிழிபினு மொருமுடி பினவே" என்னும் (நன் பொ உ எ ஆம். சூ) விதிப்படி ஆண்பாலும் பெண்பாலும் விரவி ஒரு முடி பேற்றதெனக் கொள்க; "தானுந்தேரும் பாகனும் வந்தென் னல லுண்டான்" என்பது இதற்குதாரணமாம்.

சுயம்வர காண்டம் முற்றுப் பெற்றது.

---



இரண்டாவது

# கலிதொடர் காண்டம்.

---

கலிதொடர் காண்டம்-கலிபுருஷன் நளனைத் தொடர்ந்த செய்தியைக் கூறும் பாகம்; காண்டம் என்பது கூட்டமாம்; அஃதிங்கே சரித்திரத்தின் ஒருபாகத்தை உணர்த்திற்று. இதற்குச் சரித்திரத்தின் ஒரு பாகத்தைவிளக்கும் செய்யுட்களின் கூட்டம் என்று பொருள் கொள்ளவேண்டும். காண்டம் வடசொல். கலிதொடர் எழுவாய்த்தொடர் (புணர்ச்சிவிதி-நன் உயிர்-அ.) தொடர் காண்டம் - வினைத்தொகை: (புணர்ச்சிவிதி-நன்-உயிர்-கூக) கலி-வடமொழி உயர்திணைப் பெயர்.

## காப்பு.

### விஷ்ணு துதி.

1. முந்தை மறைநூன் முடியெனலாந் தண்குருகூர்ச்
செந்தமிழ் வேத சிரமெனலாம்—நந்தும்
புழைக்கைக்கு நேயப் பொதுவர்மக ளிர்க்கும்
அழைக்கைக்கு முன்செல் லடி.

(இ-ள்) நந்தும்-துன்பத்தையடைந்து கொண்டிருந்த, புழைக்கைக்கும்-யானைக்கும், நேயம்-அன்புள்ள, பொதுவர் மகளிர்க்கும் இடையருடைய பெண்களுக்கும், அழைக்கைக்கு முன்-கூப்பிடுவதற்கு முன்னுகவே, செல் அடி-சென்ற (விஷ்ணுவின்) பாதத்தை, முந்தை-முதன்மையான, மறைநூல்-வேதமாகிய நூலின், முடி எனலாம்-கிரீடம் என்று சொல்லலாம், தண்-குளிர்ச்சி பொருந்திய, குருகூர்-திருக் குருகூரில் உண்டாகிய, செந்தமிழ்-செவ்விய தமிழ்வடிவமாகிய, வேதம்-வேதத்தினது, சிரம்-சிரசு, எனலாம்-என்று சொல்லலாம், (அப்பேர்ப்பட்ட திருவடி எமக்குக் காவலாகும்;) [எ-று.]

இக்காண்டம் இனிது முடிதற்பொருட்டு ஆசிரியர் கடவுள் வணக்கங் கூறினார். விஷ்ணு காத்தற்கடவுளாதலின் அவனுடைய துதி முதலிற் கூறப்பட்டது. புழைக்கை-கஜேந்திரனென்னும் யானை; இது முதலையினிடம் அகப்பட்டு வருந்தி ஆதிமூலமே யென்றழைத்தபோது விஷ்ணு வந்து இதனைக் காப்பாற்றினார்; இக்கதை பிரசித்தம். ஆயமாதர்களோடு விஷ்ணு கிருஷ்ணவதாரகாலத்தில் திருவிளையாடல்களை நடத்தியதும் உலகறிந்த விஷயம். ஆகவே, இச்செய்யுளில்,"புழைக்கைக்கும் நேயப்பொதுவர்மகளிர்க்கும் அழைக்கைக்கு முன் செல்அடி" என்றதனால்இங்குக்கூறியதெய்வம் அவ்விஷ்ணுவே என்பது பெறப்பட்டது. வேதத்தில் விஷ்ணுவினுடைய பாதப் பெருமை

மிருதியும் சொல்லப்படுவதனால் அவ்வாறு சொல்வதன் மூலம் அதில் விளங்கும் அப்பாதம், அதற்கு முடியாகக் கூறப்பட்டது. தமிழ் வேதத்திற்கும் இங்ஙனமே கொள்க. குருகூர்ச் செந்தமிழ் வேதமாவது:—குருகூரில் சடகோப முனிவரால் இயற்றப்பட்ட திருவாய்மொழி முதலிய பிரபந்தங்களாம்.

மறை-மறைவாயிருக்கத் தக்கது, இரகசியப் பொருள்க ளடங்கியது. மறைநூல்-இருபெயரொட்டு. புழைக்கை-துவாரம் பொருந்திய கை; அதாவது தும்பிக்கை; இஃதாகு பெயராய் இதனையுடைய யானையை உணர்த்திற்று. பொதுவர்-எவர்க்கும் பொதுவானவர் இழிகுலத்தார் முதல் உயர் குலத்தார் வரையிலுமுள்ள யாவர்க்கும் பால் நெய் முதலியவற்றை உதவிப் பொது உபகாரிகளா யிருத்தலினாலே இப்பெயர் பெற்றனர். அழைக்கை-தொழிற் பெயர் ஈற்றில், 'அப்பேர்ப்பட்ட திருவடி எமக்குக் காவலாகும்' என்பது இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது.

சிவன் துதி.

2. செக்கர் நெடுவானிற் றிங்க ணிலாத்துளும்பி
உக்க தெனச்சடைமே லும்பர்நீர் — மிக்கொழுகும்
வெள்ளத்தான் வெள்ளி நெடுங்கிரியான் மெய்யன்பர்
உள்ளத்தா னெங்கட் குளன்.

[இ-ள்] செக்கர்-சிவப்பான, நெடுவானில் நீண்ட ஆகாயத்தில், திங்கள்-சந்திரனுடைய, நிலா-சந்திரிகையானது, துளும்பி-ததும்பி, உக்கது என உதிர்ந்து வழிந்தோடியது போல, சடைமேல்-சிவந்தசடையின் மேலே உம்பர் நீர்-உயர்ந்த நீரானது, மிக்கு ஒழுகும்-மிகுந்து பாய்ந்து கொண்டிருக்கின்ற, வெள்ளத்தான்-கங்கா வெள்ளத்தை யுடையவனும், வெள்ளி நெடும் கிரியான்-நீண்ட வெள்ளிமலையை யுடையவனும், மெய் அன்பர்-உண்மையான அன்பர்களுடைய, உள்ளத்தான்-மனத்தின் கண் எழுந்தருளி யிருப்பவனும் (ஆகிய சிவபெருமான்) எங்கட்கு-எங்களுக்கு, உளன் (இரக்ஷக கர்த்தாவாக) இருக்கின்றான்; [எ-று.]

இதில் சிவனை வணங்கினார் ஆசிரியர், இங்ஙனம் விஷ்ணுவையும் சிவனையும் சமத்துவமாகக் கருதி வணங்கியமையின், ஆசிரியர் மதவிகற்பமில்லாதவரென்பது பெறப்படும். செவ்வானத்தில் சந்திரனுடைய காந்தியானது சிதறியதுபோலச் சிவபெருமானுடைய செஞ்சடையின் மீது கங்கை வெள்ளம் பாயுமென்க. உம்பர் நீர்-உயர்ந்தநீர்; உம்பர்-உயர்வு; ஆகவே ஆகாய கங்கையென்பது பெறப்படும். 'இரக்ஷக கர்த்தாவாக' என்பது இசை யெச்சம்.

நளன் தமயந்தியினுடனே தனது நாட்டிற்குத்
தேரேறிப் புறப்பட்டுப் போதல்.

172. தவளத் தனிக்குடையின் வெண்ணிழலுந் தையல்
குவளைக் கருநிழலுங் கொள்ளப் — பவ்ளக்

கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்கு நாடன்
செழுந்தேரி லேறினான் சென்று.

[இ-ள்.] பவளம் கொழுந்து-பவளக்கொடியின் கொழுந்துகள், ஏறி-மேலேறி, செந்நெற்குலை-செம்மையான நெற்கதிரின்குலையை, சாய்க்கும்-சாயச்செய்கிற, நாடன்-நிடதநாட்டை யுடையவனான நளன், தவளம்-வெண்ணிறமான, தனி-ஒப்பற்ற, குடையின்-தன்னுடைய குடையினது; வெள்நிழலும்-வெண்மையான நிழலும், தையல்-தமயந்தி யென்னும் பெண்ணினது, குவளை-நீலோற்பல மலர்போன்ற கண்களின், கருநிழலும்-கருமையான ஒளியும் கொள்ள-தன்னை உள்ளாக்கிக் கொண்டிருக்க, செழும் தேரில்-வேலைப்பாட்டின் வளமுள்ள இரதத்தின் மீது, ஏறினான்-ஏறித் தன் நாட்டிற்குப் புறப்பட்டுப் போனான்; [எ-று.]

நளன், முன்னே கூறியபடி கலியாண முடிந்தபின் சில தினங்கள்வரை குண்டினபுரத்தில் தமயந்தியுடனே தங்கி யிருந்து அதன்மேல் தன்னுடைய நகரமாகிய மாவிந்த நகரம் போய்ச் சேர்தற்கு, மாமன் முதலியோரிடம் விடைபெற்று மனைவியையும் அழைத்துக் கொண்டு தேரிலேறிப் புறப்பட்டுப் போயினான் என்பது இதன் கருத்து. 'தவளத் தனிக்குடையின் வெண்ணிழலும் தையல் குவளைக் கருநிழலும் கொள்ள, நாடன் தேரிலேறினான்' என்றதனால், 'நளன், ஒற்றை வெண் கொற்றக்குடை நிழலில், தமயந்தி மகிழ்ச்சியுடனே கண் திறந்து தன்னை நோக்கிக் கொண்டு வரப்புறப்பட்டா' னென்பது பெறப்படும். குடையொளியும், தமயந்தியின் கண்ணொளியும் நளனைச் சூழ்ந்து கொண்டிருந்தன. இதனாலேயே, 'வெண்ணிழலுங்கருநிழலுங்கொள்ள' என்றார் ஆசிரியர். தமயந்தியின் கண்ணிழலும் நளன்மேற் பாய்ந்தது என்று சொன்னதனால் தமயந்தி உடன் செல்லும் விருப்ப மிகுதியால் கண்மலர்ந்து காதலனைப் பார்த்துக் கொண்டே சென்றாளென்பதும், அங்ஙனம் செல்வது கொண்டு பிறந்தகத்துச் சிறிதும் தனக்குப் பற்றிலாத் தன்மையைக் குறிப்பித்தா ளென்பதும் பெறப்படும்.

பவளக் கொழுந்துகள், கடல்நீர் ஆற்றில் எதிரேறிப் பாயுங்காலத்தில் அதனால் ஒதுக்கப்பட்டவை யென்க. குவளை-கண்ணுக்கு உவமையாகுபெயர். இது, நிறத்தாலும், வடிவாலும், மென்மையாலும், அழகாலும் உவமையாயிற்று. பவளம்-ப்ரவாளம் என்ற வடமொழித்திரிபு தவளம்-வடசொல். சாய்க்கும் செய்யுமென் வாய்பாட்டுப் பிறவினைப் பெயரெச்சம்; சாய்-பகுதி; இதுவே தன் வினைக்கும் பகுதியாம். ஏறினான் என்றதனால் புறப்பட்டுப் போயினமை தானே பெறப்படும்.

**இது முதல் சில செய்யுட்களால் நளன் தமயந்திக்கு வழியிலுள்ள விநோதங்களைக் காட்டல் கூறப்படுகின்றது.**

173. மங்கையர்கள் வாச மலர்கொய்வான் வந்தடையப்
பொங்கி யெழுந்த பொறிவண்டு—கொங்கை

எதிர்கொண் டணைவனபோ லேங்குவன முத்தின்
கதிர்கொண்ட பூண்முலையாய் காண்.

[இ-ள்] [மேற்கூறியவாறு புறப்பட்டுப் போகும்போது அங்கே மலர் கொய்த பெண்களையும் அவர்க்கெதிரே பறந்தொலித்த வண்டுகளையும் இன்னும் சிலவற்றையும் தமயந்திக்குச் சுட்டிக்காட்டி] முத்தின்-முத்துமாலையினுடைய, கதிர்கொண்ட-பிரகாசத்தைக் கொண்டிருக்கின்ற, பூண்-ஆபரணங்களை யணிந்த, முலையாய்-தனங்களையுடைய தமயந்தியே!, மங்கையர்கள்-பெண்கள், வாசமலர்-வாசனை தங்கிய மலர்களை, கொய்வான் பறிக்கும் பொருட்டு, வந்து அடைய-இங்கே வந்துசேர, (அவர்களைக் கண்டு) பொங்கியெழுந்த-உயர்ந்து (அவர்களுக்கு முன்னே) எழுந்து பறந்த, பொறிவண்டு-புள்ளிகளையுடைய வண்டுகள், கொங்கோடு-தேனோடு, எதிர்கொண்டு-எதிரிட்டு. அணைவனபோல்-சேர்கின்றவை போல, ஏங்குவன-ஒலிக்கின்றவைகளை, காண்-பார்ப்பாயாக; [எ-று]

நளனும், தமயந்தியும் செல்லும் வழியிலுள்ள சோலைகளில் ஸ்திரீகள் மலர்கொய்யச்செல்ல அவர்களைக்கண்டு முகத்துக்கெதிரில் வாயிற்கொண்டதேனோடு பறந்த வண்டுகள், தேனைக் காணிக்கையாகக் கொண்டு எதிரே சென்றழைப்பன போன்றிருந்தன வென்க. மேலானவர் தம்மிடத்திற்கு வருங்காலத்தில் தாழ்ந்தோர் காணிக்கை கொண்டு எதிர் வந்து அவர்களை வரவேற்றல் இயல்பு. ஆதலின், சோலையிலுள்ள வண்டுகள் தங்களிடத்திற்கு வந்த, மேம்பட்டவர்களாகிய ஸ்திரீகளை மரியாதையுடன் வரவேற்றன வென்க. 'கொங்கொடெதிர் கொண்டணைவன போல்' என்பதற்கு, 'அந்த ஸ்திரீகளின தனங்களாகிய கொங்கு மலர்களோடு எதிரிட்டுச் சேர்வன போல்' எனப்பொருள் கொண்டு, அவ்வண்டுகள் அவர்களுடைய தனங்களுக்கெதிரில் பறந்தொலித்தன எனினும் பொருந்தும். இப்பாட்டும் அடுத்த செய்யுளும் குளகமாதலின், இதிலுள்ள விஷயங்கள் அடுத்த செய்யுளில் "மின்னெடு வேற்கையான் காண் என்றான்." என முடியும்.

கொய்வான்-வினையெச்சம். 'வண்டுகள் எதிர் கொண்டணைவனபோல் ஏங்குவன காண்' என இயைக்க. 'முத்தின் கதிர் கொண்ட பூண்' என்பதை, 'கதிர்கொண்ட முத்தின் பூண்,' எனவும் மாற்றிப் பொருளுரைக்கலாம்.

பெண்களுக்கு மரம் தாழ்தல் கூறப்படுகின்றது.

174. பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே
பூவையர்கை தீண்டலுமப் பூங்கொம்பு — மேவியவர்
பொன்னடியிற் றாழ்ந்தனவே பூங்குழலாய் காணென்றான்
மின்னெடுவேற் கையான் விரைந்து.

[இ-ள்.] [இன்னும்] பாவையர்-பெண்களினுடைய, கைதீண்ட-கரம் பட்டமாத்திரத்தில் [உலகத்தில்] பணியாதார்-வணங்காதவர்கள், யாவரே-

எவர்கள்? பூவையர்-நாகணவாய்ப் பறவைகளுக்கு நிகராகிய பெண்கள் கை தீண்டலும்-கரங்களால் தொட்டவுடனே, அப்பூங்கொம்பு-அந்தமரத்திலுள் ள மலர்கள் நிறைந்த கிளைகள், மேவி-பொருந்தி [விரும்பி], அவர் பொன்ன டியில்-அந்தப் பெண்களுடைய அழகிய பாதங்களில், தாழ்ந்தன-வணங்கின, பூங்குழலாய்-மலர் சேர்ந்த கூந்தலையுடைய தமயந்தியே! விரைந்து சீக்கிர மாக, காண்-பார்க்கக் கடவாய், என்றான்-என்று கூறினான், மின்-ஒளிபொ ருந்திய, நெடுவேல்-நீண்ட வேலாயுதத்தைத் தாங்கிய, கையான்-கையை யுடைய நளமகாராஜன்; [எ-று.]

சில-மரங்கள் உத்தமஸ்திரீகளுக்குத் தாழ்ந்து மலர் கொடுத்தல் இயற் கை; அங்ஙனமே இங்குள்ள மரத்திலுள்ள கொம்பும் பெண்களுக்கு வணங்கி மலர் கொடுத்தது. இது மிகவும் அருமையான செய்கை யாதலின், நளன் இதனைத்தமயந்திக்கு முக்கியமானதாகக் காட்டினான். மலர்கொய்து தீர்ந்த வுடன் கிளைநிமிர்ந்து விடுமாதலின், அங்ஙனம் நிமிர்வதற்குள் அதனை அவ ளுக்குக் காட்ட நினைத்து 'விரைந்து காண்' எனக் கூறினான் என்பதாம்.

யாவரே என்பதிலுள்ள ஏகாரம் எதிர்மறைப் பொருளது; எல்லோ ரும் பணிவார் என்று பொருள்படும். தாழ்ந்தனவே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது.

வண்டோச்சி வேர்த்தவளைக் காட்டல்.

175 மங்கை ஒருத்தி மலர்கொய்வாள் வாண்முகத்தைப்
பங்கயமென் றெண்ணிப் படிவண்டைச்—செங்கையால்
காத்தாளக் கைம்மலரைக் காந்தளெனப் பாய்தலுமே
வேர்த்தாளைக் காணென்றான் வேந்து.

[இ-ள்.] [பின்னும் வண்டோச்சிமயங்கிய ஒருத்தியைக்காட்டி] வேந்து-நளமகாராஜன், மலர் கொய்வாள்-பூப்பறிப்பவளாகிய, மங்கை ஒருத்தி-ஒரு பெண், வாள்முகத்தை பிரகாசம் பொருந்தியதன்முகத்தை, பங்கயமென்று எண்ணி-தாமரை மலரென்று நினைத்து, படி [அம்முகத்தில்] மொய்க்கின்ற, வண்டை-வண்டினை, செங்கையால்-சிவந்தகையினால், காத்தாள்-படியவொட் டாமல் துரத்திக் காவல் செய்தாள், [அப்போது] அக்கைமலரை-அந்த மலரையொத்த கரத்தை, காந்தளென-காந்தள் மலரென்று நினைத்து, [அவ் வண்டு அதிற் பாய்ந்தது] பாய்தலுமே-[அவ்வாறு] பாய்ந்தவுடனே, [அச்சங் கடத்தினால் அவள் வேர்த்தாள்] வேர்த்தாளை-[அங்ஙிதம்] வியர்த்த பெண் ணை, காண் என்றான்-பார்ப்பாயாக என்று கூறினான்; [எ-று]

ஒரு பெண் மலர் கொய்யும்போது வண்டானது அவளுடைய முகத் தைத் தாமரை மலரென்று நினைத்து அதிற் பாய்ந்தது; அவள் உடனே சங் கடப்பட்டுத் தன் கையால் அதைத் துரத்தினாள்; அப்போது அவ்வண்டு அக்கரத்தைக் காந்தள் மலரென்று நினைத்து அதில் மொய்த்தது. அவ்வா

றாகவே அவள் ஒன்றும் செய்ய வியலாமல் மயங்கி முகம் வியர்த்தாள். இவ் விநோதத்தை நளன் தமயந்திக்குக் காட்டினனென்க. பெண்களின் முகம் தாமரை மலர்போலவும், கை காந்தள் மலர் போலவும் இருத்தல் இயல்பாத லின், இங்ஙனம் வண்டு மயங்குதற் கேதுவாயிற்று.

'அவ்வண்டு அதிற் பாய்ந்தது' என்ற தொடரும், 'அச்சங்கடத்திறல் வேர்த்தாள்' என்பதும்இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன. வேந்து-அரசு; அஃதாகுபெயராய் அதனையுடையானை உணர்த்திற்று. வேர்த்தாள் என்பது வினையாலணையும் பெயர்.

ஒருத்தி தளிர் கொய்தலைக் காட்டல்.

176 புல்லும் வரிவண்டைக் கண்டு புனமயில்போல்
செல்லு மடந்தை சிலம்பவித்து—மெல்லப்போய்
அம்மலரைக் கொய்யா தருந்தளிரைக் கொய்வாளைச்
செம்மலரிற் றேனே தெளி.

[இ-ள்] [பின்னும் அங்குத் தளிர் கொய்வா ளொருத்தியைக் காட்டி] செம்மலரில் தேனே-சிவந்த மலரிலுள்ள தேன்போன்ற இனிமை பொருந்திய தமயந்தியே! புல்லும்-தன் துணையோடு சேர்ந்திருக்கின்ற, வரி-இரேகைகளையுடைய, வண்டை-வண்டினை, பார்த்து-கண்டு, புனம்-காட்டிலுள்ள, மயில்போல்-மயிலைப்போல, செல்லும்-மலர் கொய்தற்கு நடந்து செல்கின்ற, மடந்தை-பெண்ணொருத்தி, [நாம் செல்வதாலுண்டாம் அரவம் அவ்வண்டின் செவியுறுமேல் அதன் சேர்க்கைக் கிடையூறு மென்று கருதி அதன் சேர்க்கை கெடாதிருக்கும் பொருட்டு] சிலம்பு அவித்து-தன்னுடையபாதச் சிலம்பின் ஒலியையும் அடக்கிக் கொண்டு, மெல்லப் போய்-மிருதுவாகச் சென்று, அம்மலரைக் கொய்யாது-வண்டு சேர்ந்திருந்ததாகிய அம்மலரையும் பறிக்காமல், அரும் தளிரை மற்றொரு பக்கத்திலிருந்த அருமையான தளிர்களை, [கொய்தாள்] கொய்வாளை-அப்படிக் கொய்பவளை, தெளி-நீ பார்த்துத் தெரிந்து கொள்வாயாக; [எ-று.]

மலர் கொய்யச் சென்ற ஒருத்தி, தான் விரும்பிய மலரில் வண்டு துணையுடன் கூடியிருக்கக் கண்டு, அதன் கூட்டத்தைக் கலைத்தல் தோஷமென்று கருதிச சந்தடி செய்யாமல்போய் அம்மலரைப் பறிக்காமல் பக்கத்திலிருந்த தளிரைப் பறித்தாள் அதனை நளன் தமயந்திக்குக் காட்டினனென்க. இதனால் கூட்டத்தைப் பிரித்தல் மகா தோஷமென்பது விளக்கப்பட்டது.

இச்செய்யுளி லிருந்து விஷயங்கள் தொடர்ந்து 184-ஞ் செய்யுளில் 'சேய் பாரென்றான்' என்று முடியும். இது முதல் அது வரை குளகமாம். 'செம்மலரில் தேன்' என்பதற்குச் 'சிவந்த தாமரை மலரில் வீற்றிருக்கின்ற இலக்குமி' யெனினும் பொருந்தும். சிலம்பு-ஆகுபெயராய் ஒலிக்காயிற்று

ஓர் ஆடவன், பெண்ணொருத்திக்கு மலர் சூட்டிய
விதம் இதிற் கூறப்படுகின்றது.

177. கொய்த மலரைக் கொடுங்கையி னாலணைத்து
மொய்குழலிற் சூட்டுவான் முன்வந்து—தையலாள்
பாதார விந்தத்தே சூட்டினான் பாவையிடைக்
காதார மில்லா தறிந்து.

[இ-ள்.] [பின்னும் பெண்ணுக்கு மலர்சூடும் ஒருவனைக்காட்டி] கொய்தமலரை-பறித்தபூவை, கொடுங்கையினால்-உட்புறம் வளைவானகையினாலே; அணைத்து-சேர்த்துக் கொண்டு வந்து, [தனக்குரியவளுடைய] மொய்குழல்-நெருங்கிய கூந்தல் முடியில், சூட்டுவான்-சூட்டும் பொருட்டு, முன் வந்து-அவளுக்கெதிரில் வந்து, பாவை இடைக்கு-அப்பெண்ணினுடைய இடுப்பிற்கு, ஆதாரம் இல்லாது-ஆதரவில்லாதிருப்பதை, அறிந்து-உணர்ந்து, [நாம் கூந்தலில் இம்மலரைச் சூட்டினால் இதன் பாரத்தைச் சுமக்கலாற்றாது இடைமுறிந்து போகுமென்று நிச்சயித்து] தையலாள்-அப் பெண்ணினுடைய, பாத அரவிந்தத்தே-தாமரை மலர்போன்ற பாதங்களினிடையே, சூட்டினான்-சேர்த்தான் ஒருவன்; [எ-று.]

ஒருவன் மலர் கொய்து தன் பிரிய நாயகியின் கூந்தலிற் சூட்டமுன்னாலேசென்றான். அப்போது அவளுடைய தனங்களின் பாரமும், கூந்தலின் சுமையும் இத்தன்மையன வென்பது அவன் புத்தியிற்பட்டது. அங்ஙனம் பட்ட மாத்திரத்தில் அவன், "ஐயோ! இவற்றின் பாரமே அதிகம்; இப்பொழுதே இவற்றைத் தாங்க முடியாமல் இவளுடைய இடை தத்தளித்துக் கொண்டிருக்கின்றது; இத்தருணத்தில் நாம் மலர்ச் சுமையையும் கூந்தலில் ஏற்றிவிடுவோமானால் இடை நசித்தே போய்விடும்" என்றிரக்கங் கொண்டு அம்மலரைக் கூந்தலிற் சூட்டாமல் அவளுடைய பாதங்களிற் சூட்டினானென்க. அவன் இக்கருத்துக் கொண்டு இதனை இவ்விதம் சூட்டியதோடு, 'இம்மலர்கள் இவளுடைய பாதங்களில் வீழ்ந்து கிடக்கத் தக்கவை' எனக் கருதியும் சூட்டினானெனினும் அமையும்.

கொய்த-பெயரெச்சம். கொடுங்கை-வளைந்தகை; 'கொடுங்கையினாலணைத்து' என்றதனாலேயே அதிகசுமையான மலரை அவன் கொண்டு வந்தானென்பது பெறப்படும். சூட்டுவான்-வினையெச்சம்; இதனை வினையாலணையும் பெயராகக் கொண்டு, 'மொய் குழலிற் சூட்டுவான் பாதார விந்தத்தே சூட்டினான்' எனக்கூறினும் அமையும். பாதம், அரவிந்தம்-வடமொழிகள். பாவை-உவமை யாகு பெயர். 'இல்லாதது அறிந்து' என்பது 'இல்லாதறிந்து' எனத் தொகுத்த லாயிற்று. இதில் மொய் குழல் என்றது, மூன்புறமாக வளைத்து முடியப்பட்டிருக்கும் ஒரு வகை மயிர்முடி என்க.

மணல் எக்கரின் விதம் கூறுதல்.

178 ஏற்ற முலையார்க் கிளைஞ ரிடும்புலவித்
தோற்ற வமளியெனத் தோற்றுமால்—காற்றசைப்ப
உக்க மலரோ டுகுத்தவளை முத்தமே
லெக்கர் மணல்மே லிசைந்து.

[இ-ள்.] (ஒருமணல் எக்கரைக் காட்டி) காற்று அசைப்ப-வாயுவானது அசையச் செய்வதனாலே, உக்க-உதிர்ந்த, மலரோடு-மலர்களுடனே, வளை உகுத்த-சங்குகள் ஈன்ற, முத்தம்-முத்துக்கள், மேல் இசைந்து-மேலே பொருந்தி, எக்கர்-எக்கலான, மணல்-இம்மணற் பரப்பானது, ஏற்ற-தாங்கிய, முலையார்க்கு-தனங்களையுடைய பெண்களுக்கு, இளைஞர்-அவர்க்கேற்ற வாலிபர்கள், இடும்-உண்டாக்குகின்ற, புலவித்தோற்றம்-பிணக்கின் தோற்றத்தை விளக்கிக் காட்டுகின்ற, அமளிஎன-சயனத்தைப்போல, தோற்றும்-விளங்கும்; [எ-று.]

ஆங்குள்ள மணற்பரப்பிலே, முன் நீர்பாய்ந்த காலத்தில் சங்குகள் ஈன்றமுத்துக்கள் பரவிக்கிடந்தன அவற்றுடனே அவ்விடத்தில் நிற்கும் மரங்களின் மேலிருந்து காற்றினால் உதிர்ந்த மலர்கள் கலந்து சிதறிக் கிடந்தன. இந்தத் தோற்றமானது, இளைஞராகிய ஆடவரோடு பிணங்கிய பெண்கள் அணிந்திருந்த மலர்களையும் ஆபரணங்களையும் கோபத்தால் சிதறிய படுக்கையிடத்தைப் போன்றிருந்த தென்க. ஆடவர்களே, ஸ்திரீகளுக்குப் பிணக்கு வரும்படி செய்பவர்களாதலின், 'இளைஞரிடும்புலவி' என்றார் ஆசிரியர். புலவித்தோற்ற அமளியாவது அப்பிணக்கின் செய்கைகளைக் காட்டிக் கொண்டிருக்கும் சயனம் எனப் பொருள் கொள்ளவேண்டும்.

ஆல், ஏ-அசைகள். எக்கர்-வெள்ளம் பாயுங்காலத்தில் நீரால் ஒதுக்கப்படும் மணல்மேடு. 'உகுத்தவளை' என்பது, 'வளை உகுத்த' என மாற்றுக.

சோலை அழகு சொல்லல்.

179. அலர்ந்த மலர்சிந்தி யம்மலர்மேற் கொம்பு
புலர்ந்தசைந்து பூவணைமேற் புல்லிக்—கலந்தொசிந்த
புல்லென்ற கோலத்துப் பூவையரைப் போன்றதே
அல்லென்ற சோலை அழகு.

[இ-ள்.] (சோலையைக் காட்டி) அல் என்ற-சூரிய வெப்பமில்லாமல் நெருங்கியிருக்கின்ற காரணத்தால்இது) இருளேஎன்று பார்த்தோர்கூறிய, (சிறப்புவாய்ந்த) சோலை அழகு-இந்தத் தோப்பின் அழகானது, அம்மலர்-அழகிய மலர்களையுடைய, மேற் கொம்பு-மரங்களின் மேற்கிளையானது, அலர்ந்த-தன்னிடத்தே மலர்ந்த, மலர்சிந்தி-புஷ்பங்களைக்கீழே உதிர்த்துச்

சிதறி, புலர்ந்து அசைந்து-வாடியசைய, பூ அணைமேல்-மலர்ச்சயனத்தின் மீது, புல்லிக்கலந்து-தழுவிப் புணர்ந்து, ஒசிந்த-இடை முதலியன தளர்ந்த, புல் என்ற-அற்பமான (அதாவது அழகு கெட்ட,) கோலத்து-வடிவத்தை யுடைய, பூவையரைப் போன்றது-பெண்களை நிகர்த்திருக்கின்றது; [எ-று.]

புஷ்ப சயனத்தில் பெண்கள் புருஷர்களுடனே கலந்து நீங்கியசமயத்தில் கூந்தலிலும், கழுத்திலும் அணியப்பட்டிருந்த மலர்மாலைகள் சிதைந்து கீழேவிழக் கூந்தல் சோர, இடை முதலியன மெலிந்து மேனியழகுகெட்டு நிற்பர். இவர்களைப் போலவே, சோலை, தன்னிடத்திலுள்ள மரக்கிளைகள் மலரை உதிர்த்து வாட்டமுற்றசைய அம்மலர்ப் பரப்பின்மேல் விளங்கியது. இதனால், இதற்கு அப்பெண்கள் உவமையாகக் கூறப்பட்டார்கள். கீழே உதிர்ந்து கிடந்த மலர்களின் பரப்பு மலர்ச்சயனம் போன்றிருந்தது. மலர்களை உதிர்த்து விட்டு வாடியசைந்த மரக்கிளைகள் பெண்களின் அவயவங்களைப்போன்றிருந்தன. அவற்றையுடைய சோலை ஸ்திரீகளைப் போன்றது.

அசைய என்னும் செயவெனெச்சம் அசைந்து எனச்செய்தெனெச்சமாகத்திரிந்து வந்தது புல்-அற்பம்; புல்லெனல்-அற்பமா யிருத்தல்; இஃதிங்கேசேர்க்கையினால் அலங்காரம் சிதைந்து நிற்கும் நிலையை உணர்த்தும். புல் என்ற என்பதற்கு அற்பமான எனப்பொருள் கொண்டது போல, அல் என்ற என்பதற்கு இருண்ட எனப்பொருள் கொள்ளலாம்.

ஆம்பற் பூமலர்ச்சி கூறப்படுகின்றது.

180. கொங்கை முகத்தணையக் கூட்டிக் கொடுங்கையால்
அங்கணைக்க வாய்நெகிழ்ந்த வாம்பற்பூ—கொங்கவிழ்தேன்
வார்க்கின்ற கூந்தன் முகத்தை மதியென்று
பார்க்கின்ற தென்னலாம் பார்.

[இ-ள்] (மார்பில் அல்லிமலரைக் கையாற் சேர்த்தணைத்துக் கொண்டிருந்த ஒரு பெண்ணைச் சுட்டிக்காட்டி) கொங்கை முகத்து-தனங்களின் முன்பக்கத்திலே, அணைய-சேரும்படி, கூட்டி-சேர்த்து, கொடுங்கையால்-வளைந்த கையினாலே, அங்கு-அத்தடாகத்தினிடத்தே, அணைக்க-ஒருபெண் அணைத்துக் கொள்ள, (அப்போது) வாய்நெகிழ்ந்த-முகம்மலர்ந்த, ஆம்பல் பூ-அல்லி மலரானது, (இருக்கும் நிலைமையை) கொங்குஅவிழ்-வாசனை வீசப்பெற்ற, தேன்-தேனை, வார்க்கின்ற-சிந்துகின்ற, கூந்தல்-கூந்தலையுடைய அப்பெண்ணின், முகத்தை-சந்திரன் போன்ற வதனத்தை, மதியென்று-தனக்கு நேயமான சந்திரனென்று நினைத்து, பார்க்கின்றது என்னலாம்-அது நோக்குகின்றது என்றுரைக்கலாம், பார்-நீ பார்ப்பாயாக; [எ-று.]

தடாகத்திற் குளித்த ஒரு பெண் அல்லிமலரைக் கையாலணைத்து மார்போடு சேர்த்துக் கொண்டிருந்தாள்: அம்மலர் அவளுடைய முகத்துக்கு

நேரே மலர்ந்து விளங்கிற்று. அப்படி அம்மலர் முகத்துக்கு நேரே யிருந்தது, அம்முகத்தைத் தனக்குச சிநேகிதமாகிய சந்திரனென்று நினைத்துப் பார்ப்பது போன்றிருந்தது. அல்லி, சந்திரனைக் கண்டவுடன் செழித்து மலர்தல் இயற்கையாகவே இங்ஙனம் உவமித்துக் கூறப்பட்டது.

வளைத்தணைக்கும் கையைக் கொடுங்கை எனல் மரபு; இன்னும் இது, குடங்கை யெனவும் வழங்குகின்றது; இதற்கு, இவ்வளைந்த கை குடத்தை யணைக்கக் கூடியதா யிருத்தலின் குடங்கையெனப் பெயர் பெற்றதென்க. தேன் வார்க்கின்ற கூந்தல்-இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. அங்கு-அசை யெனலு மொன்று.

ஒரு பெண்ணைச் சிவனோடு உவமித்தல்.

181. கொய்த குவளை கிழித்துக் குறுநுதன்மேல்
எய்தத் தனிவைத்த வேந்திழையாள்—வையத்தார்
உண்ணாக் கடுவிடத்தை யுண்ட வொருமூன்று
கண்ணானைப் போன்றனளே காண்.

[இ-ள்] (குவளை மலரைக் கிழித்து நெற்றியிற் சேர்த்த ஒருபெண்ணைக் காட்டி) கொய்த-தன்னாற் பறிக்கப்பட்ட, குவளை-நீலோற்பலமலரை, கிழித்து-சிறிதாகக் கிழித்தெடுத்து, குறுநுதல் மேல்-சிறிய நெற்றியின் மேல், எய்த-சேர்ந்திருக்கும்படி, தனி-தனியாக, வைத்த-சேர்த்த, ஏந்திழையாள்-தரித்த ஆபரணங்களையுடையவளான அப்பெண், வையத்தார்-உலகத்திலுள்ளவர்கள், உண்ணா - உட்கொள்ள முடியாத, கடு விடத்தை - கடுமையான விஷத்தை, உண்ட-முற்காலத்திலே உட்கொண்ட, ஒரு-ஒப்பற்ற, மூன்று கண்ணானை-மூன்று கண்களையுடைய சிவபெருமானை, போன்றனள்-நிகர்த்தனள், காண்-நீபார்ப்பாயாக; [எ-று.]

நீரில் விளையாடிய ஒரு பெண் கருங்குவளை மலரைக் கிழித்து நெற்றியில் ஒட்ட வைத்தாள். அஃதொருகண்ணைப்போ லமைந்திருந்தது. ஆகவே அவள் நெற்றியில் கண்ணையுடைய சிவபெருமானைப் போன்று விளங்கினாள். இப்பாட்டிலும், முற்பாட்டிலும் நீர்ப்பூக் கொய்தல் சொல்லப்பட்டமையால் நீர விளையாட்டுச் சொல்லியதாகும். வையம் என்பது எல்லா வுலகங்களையும் குறிக்கும். 'வையத்தார்உண்ணாக் கடுவிடத்தையுண்ட' என்றுசொன்னதால் சிவபெருமான் எல்லோரினு மேற்பட்டவ ரென்பது விளங்கும். இப்பெண் அவரைப் போன்றனள் என்றதனால் இவளும் பெண்களிற் சிறந்தாளென்ப.

ஏந்திழை-வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழி; இது ஈங்குப் பெண்பால் விகுதியோடு கூடி வந்தது

நீர் விளையாடும் ஒரு பெண் செய்கை கூறப்படுகின்றது.

182. கொழுநன் கொழுந்தாரை நீர்வீசக் கூசிச்
செழுமுகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள்—கெழுமியவக்

கோமகற்குத் தானினைந்த குற்றங்க ளத்தனையும்
பூமகட்குச் சொல்லுவாள் போல்.

[இ-ள்.] (அங்கே தாமரை மலரோடு முகத்தைச சேர்த்த ஒரு பெண்ணைக்காட்டி இந்தப் பெண்) கொழுநன்-தன் நாயகன், கொழும்-கொழுமையான, தாரைநீர்-ஒழுக்காகப் பாய்கின்ற துருத்திநீரை, வீச (மேலே) சிதற, கூசி-(அதனாலே) கூச்சமுற்று, கெழுமிய-தன்னோடுகூடிய, அக்கோமகற்கு-அந்த மேன்மை யன புருஷனிடத்தில், தான் நினைந்த-தான் எண்ணின, குற்றங்கள் அத்தனையும்-குற்றங்களெல்லா வற்றையும், பூமகட்கு-தாமரை மலரில் வாசஞ் செய்பவளாகிய இலக்குமிக்கு, சொல்லுவாள் போல்-கூறுகின்றவளைப்போல, செழுமுகத்தை-தன்னுடைய செழித்த முகத்தை, தாமரைக்கே-அந்த இலக்குமி குடியிருக்கும் தாமரை மலரினிடத்தே, சேர்த்தாள்-திருப்பி ஒட்டினாள்; [எ-று.]

நீர்விளையாடுங்காலத்தில் ஸ்திரீகளும் புருஷர்களும் துருத்தியில் வாசனைநீரை நிரப்பி ஒருவர்மீதொருவர் பீச்சி விளையாடுவது வழக்கம். அப்படி விளையாடுங்காலத்தில் தன் புருஷன் முகத்தில்வீசிய நீரைத்தாங்கமாட்டாது ஒரு பெண் ஒதுங்கித் தாமரை மலரின் ஓரத்தில் தன்முகத்தைச் சாய்த்துச சேர்த்தாள். அவள் அப்படி சசேர்த்த விதமானது, தன்புருஷனிடத்தில்தான் கண்ட குறைகளை அத்தாமரை மலரில் இருக்கின்ற இலக்குமி யிடம் முகத்தோடு முகம் வைத்துக் கூறுவது போன்றிருந்தது. தாமரை மலர் ஸ்திரீகளின் முகம் போன்றிருக்குமாதலாலும், இலக்குமிக்குரிய தாதலாலும், அஃதிங்கே இலக்குமியின் முகத்தைப் போலக் குறிக்கப் பட்டது ஸ்திரிகள், தங்களுடைய கணவர்கள் தங்களுக்குச் செய்யும் குறைகளை உயிர்த் துணைவிகளிடம் சொல்லி மனதை ஆற்றிக்கொள்வது வழக்கம். இது, பிணக்குக் காலத்தில் புருஷர்மீது தோஷமல்லாத தோஷங் கற்பித்துக் கூறுவது, ஆதலின்; இவளும் அங்ஙனம் கூறினளென்க.

தாரை-நீரொழுக்கு. தாமரைக்கு, கோமகற்கு என்பன உருபு மயக்கங்கள், 'இந்தப்பெண்' என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது.

நீர்விளையாட்டில் மனைவியைக் காணாது
மயங்குவானைக் காட்டல்.

183. பொன்னுடைய வாசப் பொகுட்டு மலரலையத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த—மின்னுடைய
பூணு டிருமுகத்தைப் புண்டரிக மென்றயிர்த்துக்
காணு தயர்வானைக் காண்.

*(இ-ள்.) (தன்மனைவியை நீரில் காணாமல் மயங்குமொருவனைக்காட்டி) பொன்-இலக்குமியை, உடைய-தமக்குச் சொந்தமாக வுடைய, வாசம்-வா

சனை பொருந்திய, பொகுட்டு கொட்டை பொருந்திய, மலர் - தாமரைமலர்கள், அலைய-அசைந்தாடும்படி, தன்னுடனே மூழ்கி-தன்னுடனே சேர்ந்து நீரில் அமிழ்ந்து, (பின்னர்) தனித்து எழுந்த-தனியாக நீரினின்றும் வெளியேறிய, மின்உடைய-பிரகாசமுள்ள, பூணாள்-ஆபரணங்களை யணிந்த தன் நாயகியின், திருமுகத்தை-அழகியமுகத்தை, புண்டரிகம் என்று-தாமரை மலர் என்று, அயிர்த்து-சந்தேகங் கொண்டு, காணாது-அவளைக் காணாமல், அயர்வானை-வருந்துகின்ற இவனை, காண்-பார்ப்பாயாக; [எ-று ]

ஒருவன் நீர்விளையாடுங்காலத்தில், பக்கத்திலுள்ள தாமரை மலர்களெல்லாம் அசையும்படி தன் நாயகியோடு சேர்ந்து நீருக்குள்ளே மூழ்கினான். பின்னர் அந்நீரினின்றும் வெளியேறும்போது அவன் அவளை விட்டுப் பிரிந்து ஒரு பக்கத்தில் வெளியேறினான்; அப்பெண் மற்றொரு பக்கத்தில் தாமரைமலர்களுக்கிடையிலே தலையை நீட்டினாள். அப்போது அவளுடைய முகம் தாமரைமலர்போலவேயிருந்தது. அதனால் அவன் அதனைத் தாமரைப்பூ வென்றே நிச்சயித்துக்கொண்டு, தன்னுடைய மனைவி நீரைவிட்டு வெளியேற வில்லையெனக்கருதி, 'நம் மனைவி ஏன் இன்னும் வெளிவரவில்லை' என்று மயங்கி வருந்தினான் என்பதாம்.

கூந்தலை முறுக்கும் ஒருத்தி நிலைமை
உரைக்கப் படுகின்றது.

184 சிறுக்கின்ற வாண்முகமுஞ் செங்காந்தட் கையான்
முறுக்குநெடு மூரிக் குழலும்—குறிக்கின்
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட காட்சி
அரும்பாய பணைமுலையா யாம்.

(இ-ள்.) (நீரில் மூழ்கி யெழுந்து கூந்தலிலுள்ள நீர் வடியும் பொருட்டு அதனைச் சேர்த்து முறுக்கிக் கொண்டு நின்ற ஒருத்தியைக் காட்டி) அரும்பு ஆம்-உருவத்தில் தாமரை யரும்பேயாகின்ற, பணை-பருத்த, முலையாய்-தனங்களை யுடையவளே!' (இந்தப் பெண்ணினுடைய) சிறுக்கின்ற-சிறுத்து வருகின்ற, வாள்-ஒளிபொருந்திய, முகமும்-முகத்தையும், செங்காந்தள்-சிவந்த காந்தள் மலர்போன்ற, கையால்-கரத்தினாலே, முறுக்கும் (இப்போது) முறுக்கப்பட்ட, நெடு நீட்சியான, மூரி-பெருமை பொருந்திய, குழலும்-கூந்தலையும், குறிக்கின்-குறித்து நோக்கினால், (இவ்விரண்டுஞ் சேர்ந்த தோற்றமானது) கரும்பாம்பு- இராகு வென்னும் கரிய பாம்பு, வெண்மதியை வெண்மையான சந்திரனை கைக்கொண்ட காட்சியாம்-பற்றிய தோற்றமாகும்; [எ-று.]

ஒரு பெண் நீர் விளையாடி வெளியேறிய வுடன் நீர் வடியும் பொருட்டுக் கூந்தலை முறுக்கிப் பிழிந்தாள். அப்போது முறுக்கப்பட்டுத் திரண்டு கயிறு போலத் தொங்கிய கூந்தலின் பின்பாகமும், வட்டமாகப் பரவி முகத்தைச் சூழ்ந்திருக்கும் மேற்பாகமும் கரும்பாம்பாகிய இராகுவைப்போன்றிருந்தன

மேற்பாகம் பாம்பின் படம், கீழ்ப்பாகம் உடல்; அக்கூந்தலால் சூழப்பட்டிருக்கும்முகம் சந்திரனை நிகர்த்திருந்தது. ஆகவே இவ்விரண்டுங் கூடிய தோற்றம் இராகு, சந்திரனை ஒரு பக்கத்தில் பற்றிக்கொண்டிருந்ததுபோல் விளங்கிற்று. கூந்தல் அதிகமாக வளர்ந்திருப்போர்க்கு முகம் சிறத்திருப்பது இயற்கை. ஆதலின், 'நெடுமூரிக் குழலும்' என்றதற்கேற்பச், 'சிறக்கின்ற வாண்முகமும்' என்று கூறினார் ஆசிரியர்.

குறித்தலாவது: இஃதின்னதாயிருக்குமென்று யூகித்தல். அரும்பாம் என்பதற்கு, அரும்புதலாம் அதாவது உண்டாகி வளர்கின்ற என்றும் பொருளுரைக்கலாம். சிறக்கின்ற, முறுக்கும் என்பன பெயரெச்சங்கள். முகமும், குழலும் என்பவற்றிலுள்ள உம்மைகள் எண்ணுப் பொருளன.

நீரில் மூழ்கிவரும் நற்றெருத்தியைக் காட்டல்.

185. சோர்புனலின் மூழ்கி யெழுவாள் சுடர்நுதன்மேல்
வார்குழலை நீக்கி வருந்தோற்றம்—பாராய்
விரைகொண் டெழுந்தபிறை மேகத் திடையே
புரைகின்ற தென்னலாம் பொற்பு.

(இ-ள்,) (புனலில் மூழ்கி யெழுந்து நெற்றியை மறைத்த கூந்தலைக் கையாலொதுக்கிக் கொண்டுவந்த பெண்ணொருத்தியைக்காட்டி) சோர்புனலில்-ஓடுகின்ற தண்ணீரில், மூழ்கி-குளித்து, எழுவாள்-எழுந்து வருகின்ற இப்பெண், சுடர் பிரகாசம் பொருந்திய, நுதல்மேல் - நெற்றியின்மேல், (படிந்திருந்த)வார்-நீண்ட, குழலை கூந்தலை, நீக்கி கையால் ஒதுக்கிக் கொண்டு, வருந் தோற்றம் வருகின்ற தோற்றமானது, விரைகொண்டு-விரும்புதலுற்று, எழுந்த-உதித்த பிறை-இளஞ்சந்திரனானது, மேகத்திடை-மேகத்தின் நடுவில் புரைகின்றது-வெளிப்படுகின்றதாகிய, பொற்பு என்னலாம்-அழகு என்று சொல்லலாம்; [எ-று]

ஒரு பெண் நீரில் மூழ்கி யெழுந்த போது கூந்தல் நீரொழுக்கால் முன்பக்கமாகப் படிந்து முகத்தை மறைத்தது. அப்போதவள், நெற்றி தெரியும்படி கொஞ்சம் கூந்தலை ஒதுக்கித் தள்ளினாள்; அவ்வாறு தள்ளினமாத்திரத்தில் அக்கூந்தலுக்கு நடுவில் நெற்றியின் சிறிதுபாகந் தெரிந்தது. அப்படி விளங்கியதோற்றம் சந்திரப்பிறை, மேகத்திலிருந்து வெளிப்படுவது போன்றிருந்தது என்பது இதன் கருத்து.

சோர்தல்-பாய்தல். எழுவாள்-வினையாலணையும் பெயர். விரைதல்-வேண்டுதல்; அஃதிங்கே விரும்புதற் பொருளில் வந்தது. புரைதல்-வெளிப்படுதல். 'என்னலாம்' பொற்பு' என்பதை, 'பொற்பென்னலாம்' எனமாற்றுக.

மற்றொருத்தியின் விநோதச் செய்கை

கூறல்.

186. பொய்தற் கமலத்தின் போதிரண்டைக் காதிரண்டிற்
பெய்து முகமூன்று பெற்றாள் போல்—எய்த
வருவாளைப் பாரென்றான் மாற்றாரை வென்று
செருவாளைப் பார்த்துவக்குஞ் சேய்.

(இ-ள்.)(இரண்டு தாமரை மலர்களைக் காதுகளிற்சேர்த்த ஒருத்தியைக் காட்டி) பொய்தல்-விளையாட்டிலே, கமலத்தின் போது இரண்டை-இரண்டு தாமரைப் புஷ்பங்களை, காது இரண்டில்-இரண்டு செவிகளில், பெய்து-அணிந்து கொண்டு, முகம் மூன்று-மூன்று முகங்களை, பெற்றாள் போல்-அடைந்தவளைப் போல, எய்த-நம்மோடு சேர்ந்து, வருவாளை - வருகின்ற இந்தப் பெண்ணை, பார்-பார்க்கக் கடவாய், என்றான்-என்று கூறினான், (யாரெனின்) மாற்றாரை-பகைவர்களை, வென்று-(வாள் வல்லமையினாலே) ஜயித்து, (அங்ஙனம் ஜயத்தை உண்டாக்கிய) செருவாளை-போருக்குரிய வாளாயுதத்தை, பார்த்து - நோக்கி, உவக்கும் - சந்தோஷிக்கின்ற, சேய்-இராஜ குமாரனாகிய அந்நளன்; [எ-று.]

176-ஆம் பாட்டிலிருந்து வந்த விஷயங்களைக் கூட்டி, இச்செய்யுளில் 'சேய் பார் என்றான்' என்பதனோடு முடிக்க.

ஒரு பெண், விளையாட்டின் பொருட்டு இரண்டு தாமரைமலர்களைப் பறித்து இரண்டுசெவிகளிலும் தரித்துக்கொள்ள அவை அவளுடைய முகத்தின் இருமருங்கினும் வேறு இரண்டுமுகங்கள்போன்றுவிளங்கின. அதனால் அவள் மூன்று முகங்களைப் பெற்றாள் போன்று விளங்கினாள். வீரர்கள் யுத்தத்தில் ஜெயம் பெற்றபோது சந்தோஷித்து அவ்வெற்றிக்குக் காரணமாயிருந்த ஆயுதத்தை நோக்குதல் இயல்பு; ஆதலின், நளனையும், "மாற்றாரை வென்று செருவாளைப் பார்த்துவக்குஞ் சேய்" என்றார் ஆசிரியர்.

எய்தி என்னும் செய்தெனெச்சம், எய்த எனச் செயவெனெச்சமாகத் திரிந்து வந்தது. இச்செய்யுள் 183. வதாக முன் அச்சுப்புத்தகங்களிற் சேர்க்கப்பட்டிருந்தது. எனினும் பொருண்முடிபு நாடி இதனை இங்குச்சேர்த்துக் கொள்ளப் பட்டது.

நீர்ப்பூ கொய்யும் ஒருத்தியைக் காட்டல்.

187. செழுநீல நோக்கெறிப்பச் செங்குவளை கொய்வாள்
முழுநீல மென்றயிர்த்து முன்னர்க்—கழுநீரைக்
கொய்யாது போவாளைக் கோல்வளைக்குக் காட்டினான்
வையாரும் வேற்றடக்கை மன்

(இ-ள்.)(மேலும் செங்குவளை கொய்யப்போன ஒருத்தி அதனைக் கொய்யாமற் சென்றதைப்பார்த்து)வை ஆரும்-கூர்மைபொருந்திய, வேல்-வேலாயுதத்தைத் தரித்த, தடக்கை-விசாலமான கையையுடைய, மன்-நளமகாராஜன்,(அவ்வாறு)செங்குவளை-செங்கழுநீர் மலரை, கொய்வாள்-பறிப்பாளாய், (தனக்கெதிரே யிருந்த அப்புஷ்பத்தின் மேல்) நோக்கு-தன்னுடைய கண்கள், செழுநீலம்-செழித்தநீலநிறத்தை, எறிப்ப-வீச, (அவ்வொளி பாய்ந்து அம்மலரும் நீலமலராகத் தோற்றியபடியினாலே அதனை) முழுநீலம் என்று-நிறைந்த நீலோற்பலமலரேயென்று, அயிர்த்து-சந்தேகித்து, முன்னர்-தனக்கெதிரி லிருந்த, கழுநீரை-அந்தச்செங்குவளை மலரை, கொய்யாது-(இதுநாம் விரும்பிய செங்குவளை மலரன்று ஆதலால், இதனை நாம் பறிக்கக் கூடாது என்று)கொய்யாமல், போவாளை-போகின்ற அப்பெண்ணை, கோல்வளைக்கு-புள்ளிகளையுடைய வளையலை யணிந்த தமயந்திக்கு, காட்டினான் - நளமகாராஜன் காண்பித்தான்; [எ-று.]

ஒருமாது, செங்கழுநீர்மலரைப் பறிக்க விரும்பி அதனிடத்தே சென்றாள். அப்போது அவளுடைய கருவிழிகளின் ஒளி அம்மலரின் மீதுபாய அந்நிறத்தால் அம்மலர் கருங்குவளை மலரைப் போல விளங்கிற்று. அதனால் அவள், அதனைக் கருங்குவளை மலரென்றே நினைத்து 'இது நாம் விரும்பிய செங்கழுநீர்ப்புஷ்பம் அன்று' எனப்பறிக்காமல் சென்றாள். இவ்விநோதத்தை நளன், தமயந்திக்குக் காட்டினான் என்க.

கொய்வாள்-முற்றெச்சம்;கொய்வாளாய்ப்போவாளை எனக்கூட்டவேண்டும். கோல்வளை-இரண்டாம்வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. கோல்-புள்ளி; இது வளையல்களின்மேல் அழகு செய்யும் பொருட்டு இடப்படும். நீலம்-குணவாகு பெயர்; நீலம் என்னும் நிறக்குணப் பெயர் அதனையுடைய மலருக்காயிற்று.

நளனும்,தமயந்தியும் கங்கையில்
நீராடுதல்.

188. காவி பொருநெடுங்கட் காதலியுங் காதலனும்
வாவியு மாறுங் குடைந்தாடித்—தேவின்
கழியாத சிந்தையுடன் கங்கைநதி யாடி
ஒழியா துறைந்தா ருவந்து.

[இ-ள்.] காவிபொரு-நீலோற்பலத்தை நிகர்த்த,நெடும்கண்-நீண்டகண்களையுடைய, காதலியும் நாயகியாகிய தமயந்தியும், காதலனும்-நாயகனாகிய நளனும், (மேற்கூறியபடி விநோதங்களைப் பார்த்துக்கொண்டே போய்ப்பூக்கொய்து) வாவியும் - குளங்களிலும், ஆறும்-நதிகளிலும், குடைந்து-நீரை அளைத்து, ஆடி-நீரில் மூழ்கி விளையாடி, (பின்பு) கழியாத நீங்காத, தேவின் சிந்தையுடன்-கடவுள் தியானத்தோடு, கங்கைநதி ஆடி-கங்கா வெள்ளத்தில்

மூழ்கி, (அதனருகிலிருந்த வோர் சோலையில்) உவந்து-சந்தோஷித்து, ஒழியாது-நீங்காமல்; உறைந்தார்-தங்கினார்கள்; [எ-று.]

தமயந்தியும் நளனும் மேற்கூறியபடி பல விநோதங்களையும் பார்த்துக்கொண்டேபோய்ப்பூக்கொய்தல், நீர்விளையாடல் முதலியவற்றை யெல்லாம் செய்து முடிவாகக் கங்கையை அடைந்து அதில் ஸ்நானஞ் செய்து அதனருகிலுள்ள ஒரு சோலையில் தங்கினார்களென்பது இதன் கருத்து. வாவியும் ஆறும் வழியி லெதிர்ப்பட்டவைகள்; கங்காநதி மாவிந்த நகரத்தின் சமீபத்திலுள்ளது. 'தேவின் கழியாத சிந்தையுடன் கங்கை நதியாடி' என்றதனால், மற்றைய வாவிநதி முதலியவற்றில் நீராடியது விளையாட்டின் பொருட்டென்பதும் கங்கையிலாடியது பக்தியின் பொருட்டெனபதும் பெறப்படும்.

வாவியுஂ, ஆறும் ஏழாம் வேற்றுமைத் தொகைகள். நதியாடி-என்பதும் அதுவே. உறைந்தார்-உயர்திணைப் பலர்பால் வினைமுற்று. பொரு உவமவுருபு காதல்-ஆசை; அதனை யுடையவன் காதலன்; அதன் பெண்பால் காதலி. தேவின் என்பதில் இன் ஐந்தனுருபு; நீக்கப் பொருளது. தே-தெய்வத்தை யுணர்த்தும்ஓரெழுத் தொருமொழியாகிய பெயர்ச்சொல். சிந்தா, நதீ என்ற வடமொழிகள், ஆவீறு ஐயும், ஈ ஈறு இகரமும் ஆகி சிந்தை, நதி எனவந்தன.

பொழிற் சிறப்புக் கூறல்.

189. 'நறையொழுக வண்டுறையு நன்னகர்வாய் நாங்கள்
உறையு மிளமரக்கா வொக்கும்—இறைவளைக்கைச்
சிற்றிடையாய் பேரல்குற் றேமொழியாய் மென்முறுவற்
பொற்றொடியாய் மற்றிப் பொழில்.

[இ-ள்.] (மேற்கூறியபடி சோலையில் தங்கியவுடன் நளன் அச்சோலையைத்தமயந்திக்குக் காட்டி) இறை-பெருமை பொருந்திய, வளை-சங்குவளையல்களை யணிந்த, கை-கரங்களையும், சிற்றிடையாய்-சிறிய இடையினையுமுடையவளே!, பேர் அல்குல்-பெரிய அல்குலையும், தே மொழியாய்-இனிமையான வசனங்களையும் உடையவளே!, மென்முறுவல்-புன்சிரிப்பையும், பொற்றொடியாய்-பொன்னாலாகிய வளையலையுமணிந்தவளே!, இப்பொழில்-இந்தச், சோலையானது, நல் நகர் வாய்-நல்ல நகரத்திலே, நாங்கள்-நானும் என்னைச் சார்ந்தவர்களும், உறையும்-வசிப்பதாகிய, நறை ஒழுக-தேனொழுகுவதுவடிய, வண்டு உறையும்-வண்டுகள் தங்குகின்ற, இளமரக்கா-இளமரங்கள் பொருந்திய சோலையை, ஒக்கும்-நிகர்க்கும். (என்று சொன்னான்); [எ-று.]

நளன் அந்தச் சோலையில் தங்கியவுடன், அது, தான் நகரத்தில் தன்னைச் சார்ந்தவர்களோடு விளையாடும் சோலை போன்றிருந்தபடியால் அதனை அதைப்போலவே இருக்கிறதென்று தமயந்திக்குக் காட்டினானென்க.

இப்பாட்டில் முடியில்லா விடினும்சரித்திரத் தொடர்பைநோக்கி எழுவாயும் பயனிலையும் வருவித்துரைக்கப்பட்டன. நகர்வாய்-இதில் வாய் ஏழனுருபு. வண்டு உறையும், நாங்கள் உறையும் என்பவற்றை இளமரக்கா என்பதனோடு கூட்டி முடிக்க. மற்று-அசை.

தமயந்தி பிணங்குதல்.

190. கன்னியர்தம் வேட்கையே போலுங் களிமழலை
தன்மணிவா யுள்ளே தடுமாற—மன்னவனே
இக்கடிகா நீங்க ளுறையு மிளமரக்கா
ஒக்குமதோ வென்றா ளுயிர்த்து.

[இ ள்] (நளன் அவ்வாறு கூறக்கேட்டவுடனே) கன்னியர் தம்-மாதர்களினிடத் துண்டாகின்ற, வேட்கையே போலும் ஆசையையே நிகர்த்திருக்கின்ற, களி-களிப்பான, மழலை-குதலைச்சொற்கள், தன்-தன்னுடைய, மணி-அழகிய, வாயுள்ளே-வாயினிடமாக, தடுமாற-(பிணக்கினால்) தடுமாற்றமடைய, உயிர்த்து-பெருமூச்சு விட்டு (நளனை நோக்கி) மன்னவனே-அரசனே!, இக்கடிகா-இந்த வாசனை நிறைந்த சோலை, நீங்கள் உறையும்-நீங்கள் தங்கியிருக்கின்ற, இளமரக்கா-இளமரச்சோலையை, ஒக்குமதோ என்றாள்-ஒத்திருக்கக் கூடியதோ என்று, (தமயந்தி) கூறினாள்; [எ று.]

நளன், "இது, நாஙகள் நகரத்தில் விளையாடுகின்றஇளமரக்கா போன்றிருக்கின்றது" என்று கூறியமாத்திரத்தில் 'அவனுக்கு அங்கே பல ஆசைநாயகிகளிருப்பார்களென்றும், அவன் அவர்களோடுசேர்ந்து அச்சோலையில் விளையாடுவானென்றும் தமயந்தி நினைத்தாள்; அதனால் அவளுக்குப் பிணக்குண்டாயிற்று; பெருமூச்சு நிகழ்ந்தது. இப்பிணக்கினால் அவள் கோபித்து 'இக்கடிகா நீங்களுறையு மிளமரக்கா ஒக்குமதோ" என்றாள். இனிக் கன்னியரின் வேட்கை மிகுதியே பிணக்காதலின், "கன்னியர் தம் வேட்கையே போலும்...ஒக்குமதோ வென்றாள்" என்பதற்கு, "பெண்களின் காதல் மிகுதியாலேற்பட்ட பிணக்கே போலும்.........ஒத்திருக்கக் கூடியதோவென்றுகூறினாள்" எனப்பொருளுரைத்தலு மொன்று.

வாயுள்ளே என்பதில், உள்ளே-ஏழாம் வேற்றுமைச ்சொல்லுருபு. ஒக்குமதோ என்பதில், ஓகாரம் வியப்பும் கோபமும் தோன்ற நின்றது.

இதுவுமது.

191. தொண்டைக் கனிவாய் துடிப்பச் சுடர்நுதன்மேல்
வெண்டரள மென்ன வியர்வரும்பக்—கெண்டைக்
கடைசிவப்ப நின்றாள் கழன்மன்னர் வெள்ளைக்
குடைசிவப்ப நின்றான் கொடி.

[இ-ள்.] கழல்-வீரகண்டையைத் தரித்த, மன்னர்-அரசர்களுடைய, வெள்ளைக்குடை-வெள்ளை நிறமுள்ள குடையானது, சிவப்ப-(உதிரப்பெருக்கினால்) சிவப்பாகும்படி, நின்றான்-(யுத்தபூமியில்) நின்றவனாகிய வீமராஜனுடைய, கொடி-கொடிபோன்ற பெண்ணாகிய தமயந்தி, (மேற் கூறியபடி பிணங்கிக் கோபமொழி கூறியபின்பு) தொண்டைக்கனி-கொவ்வைக்கனி போன்ற, வாய் வாயிலுள்ள உதடுகள், துடிப்ப-துடிக்கவும், சுடர்-பிரகாசம் பொருந்திய, நுதல்மேல்-நெற்றியின் மீது, வெண்தாளமென்ன-வெண்மை நிறமுற்ற முத்தைப்போன்ற, வியர்வு-வேர்வையானது, அரும்ப-உண்டாகவும், கெண்டை-கெண்டை மீனைப்போன்ற கண்களின், கடை-கடைப்பாகங்கள், சிவப்ப-சிவந்து போகவும், நின்றாள்-(கோபக்குறிப்போடு) நின்றாள்

தமயந்தி, பிணங்கிக் கோபமொழி கூறியபின்பு இதழ் துடிக்கவும், நெற்றியில் வியர்வரும்பவும், கடைக்கண் சிவப்பவும் கோபக்குறி காட்டி நின்றாளென்க. தமயந்தி, 'நளனுக்கு வேறு பெண்களின் சேர்க்கையிருக்கும்' என்று கருதியதால் அவளிடத்தே இத்தகைய கோபக்குறி உண்டாயிற்று. வீமராஜன் போர்க்களத்தில் நின்று யுத்தஞ் செய்யுங் காலத்தில் எதிரிகளுடைய குடைகளிலெல்லாம் இரத்தம் தெறித்துச் சிவப்புநிற முண்டாகும்படி செய்வான்; அது பற்றியே ஆசிரியர், 'கழன் மன்னர் வெள்ளைக் குடை சிவப்ப நின்றான்' என்றார். இதனானே வீமராஜனது போர்த்திறம் விளங்கும்.

வாய்-இங்கு இதழ்களை யுணர்த்திற்று. கெண்டை-உவமையாகுபெயர். நின்றான் கொடி-ஆறும் வேற்றுமைத் தொகை. கொடி-உவமையாகுபெயர். சிவப்ப-சிவ-பகுதி, செம்மை யென்னும் பண்படியின் விகாரமாம் சிவ-என்னும் பகுதியில் குச்சாரியை சேர்ந்து சிவக்க எனவும் வரும்; இப்பகுதி விகாரப்பட்டுச் செய்ய எனவும் வரும்.

இதுவுமது.

192. தங்கள் புலவித் தலையிற் றனித்திருந்த
மங்கை வதன மணியரங்கில்—அங்கண்
வடிவாள்மேற் கால்வளைத்து வார்புருவ மென்னுங்
கொடியாடக் கண்டானோர் கூத்து.

[இ-ள்.] (மேலும்) தங்கள்-(தமயந்தியும் நளனுமாகிய) தங்களுடைய (அதாவது தங்களுக் கிடையில் நேர்ந்த), புலவித் தலையில்-ஊடலினால், தனித்து இருந்த-தனிப்பட்டிருந்த, மங்கை-தமயந்தியின், வதனம்-முகமாகிய, மணி அரங்கில்-அழகிய சபையில், அம்-அழகிய, கண்-கண்ணாகிய, வடி-கூர்மையுள்ள, வாள்மேல்-வாளாயுதத்தின் மேல், கால்வளைத்து-கால்களை வளைத்து, வார்புருவம் என்னும்-நீண்ட புருவமென்கின்ற, கொடி—, ஓர் கூத்து-ஒரு கூத்தினை, ஆடக்கண்டான்-ஆடப்பார்த்தான். (நளன்); [எ-று]

நளன், புலவியினால் தனித்திருந்த தமயந்தியின் முகமாகிய அரங்கில், கண்ணாகியவாளின்மேலேறிப் புருவமாகியகொடி ஒருகூத்தாடக்கண்டானென்க.

கழைக்கூத்தாடும் பெண்கள் வாளின் மேலேறி யாடுதல் ஒருவகை ஆட்டம். இக்கூத்தாட்டத்தை இங்குப் புருவத்தின் மேலேற்றிக் கூறினார் ஆசிரியர். முகம் நாடக மேடையாகவும், கண் வாளாகவும், புருவம் பெண்ணாகவும் உருவகஞ் செய்யப்பட்டன. மேலும் தமயந்தி, கோபத்தினால் புருவத்தை நெறித்தாள். அச்செய்கையே இங்கு உருவகஞ் செய்து கூறப்பட்டது. பிணக்கு வந்தவுடன் தமயந்தி நளனை விட்டுச் சற்று விலகி இருந்தாள். அது பற்றியே ஆசிரியர், "புலவித்தலையிற் றனித்திருந்த" என்றார். மணி அரங்கில் என்பதற்கு இரத்தினங்களினாற் கட்டப்பட்ட சபையெனினும் பொருந்தும். தலை ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு; இது மூன்றனுருபு வருமிடத்து மயங்கி வந்தது. கொடி-இது கொடியையும், சிலேடை வகையால் பெண்ணையும் உணர்த்தும்.

## நளன், தமயந்தியின் பிணக்கைத் தீர்த்தல்.

193. சில்லரிக் கிண்கிணிமென் றெய்வமலர்ச் சீறடியைத்
தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்—வல்லை
முழுநீலக் கோதை முகத்தே மலர்ந்த
செழுநீல மாறாச் சிவப்பு.

(இ-ள்.) (இவ்வாறு தமயந்தி கோபித்தவுடனே) சில்-ஒலியையும், அரி-பருக்கைக் கற்களையும், (உடைய) கிண்கிணி சதங்கைகளை அணிந்த, மெல்-மெல்லிய, தெய்வமலர்-தாமரை மலரை நிகர்த்த, சீறடியை-சிறிய அவளுடைய பாதங்களை, தொல்லை-பழமையான, மணிமுடிமேல்-(தனது) இரத்தின கிரீடத்தின் மீது, சூட்டினான் (அவளுடைய பிணக்குத்தீரும்படி நளன்) அணிந்தான், (அவ்வாறணிந்ததனால்) முழு-நிறைந்த, நீலம்-கரியநிறத்தை யுடைய, கோதை-கூந்தலையுடைய தமயந்தியின், முகத்தே-முகத்தினிடமாக, (உள்ள) செழுநீலம்-செழிப்பான குவளை மலர்களைப்போன்ற கண்கள், வல்லை சீக்கிரமாக, சிவப்பு-(கோபத்தாலுண்டான) சிவப்பு நிறமானது, மாறா - மாறி, மலர்ந்த-மலர்ந்தன; [எ-று.]

தமயந்தி பிணக்கால் கோபித்தது கண்ட நளன், அக்கோபத்தைத் தணிக்கும்பொருட்டு உடனே அவளுடைய சிற்றடிகளை எடுத்துத் தன் கிரீடமீது சூட்டிப் பணிவைக்காட்டி, அவளிடத்தே, தான் அவ்வாறு கூறிய குற்றத்தை மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டான். அதனால் அவளுக்கேற்பட்ட கோபம் உடனே நீங்கிற்று. அவ்வாறு கோபம் நீங்கவே அதனாலேற்பட்டிருந்த கண் சிவப்பும் மாறிற்று இங்ஙனம் குலமகனும் குலமகளும் கூடுங்காலத்தில் பெண்ணுக்குப் பிணக்குண்டாமாயின் அதனைத் தணித்தற்கு நாயகன் இத்தகைய செய்கைகளையும் செய்து அப்பிணக்கைத் தீர்த்துச் சேர்தல் இயல்பு. ஈதன்பின் மேலீட்டால் நிகழும் செய்கை என்க.

சில்-ஒலிக்குறிப்பு. தாமரை-இலக்குமி வாசஞ் செய்வதாதலின் தெய்வ மலர் எனப்பட்டது. சிறுமை அடி, சீறடி யென்றாயது. நீலக்கோதை-பண் புத்தொகை யன்மொழி. செழுநீலம் என்பதில்-நீலம்-கண்ணுக்கு உவமை யாகு பெயராய் வந்தது.

தமயந்தி ஊடல் தீர்ந்து நளனுடன்
கூடியது கூறப்படுகின்றது.

194. அங்கைவேன் மன்ன னகல மெனுஞ்செறுவில்
கொங்கையேர் பூட்டிச் சிறுவியர்நீர்—அங்கடைத்துக்
காதல் வரம்பொழுக்கிக் காமப் பயிர்விளைத்தாள்
கோதையரின் மேலான கொம்பு.

(இ-ள்.)மேற்கூறியபடி பிணக்குத் தீர்ந்தவுடன்) கோதையரின்-எல்லாப் பெண்களினும், மேலான-சிறந்த, கொம்பு-பூங்கொம்புக் கொப்பாகிய தம யந்தி, அம் அழகிய, கை-கரத்திலே (தாங்கிய)வேல் வேலாயுதத்தையுடைய, மன்னன்-நளமகாராஜனுடைய, அகலம் எனும்-மார்பு என்கின்ற, செறுவில்-வயலில், கொங்கை-தனங்களென்கின்ற, ஏர்பூட்டி-ஏரைக்கட்டி ஓட்டி,குறு வியர்-சிறிய வியர்வையாகிய, நீர்-நீரை, அங்கு-அவ்விடத்தில், அடைத்து-அடைத்துத் திருப்பிப் பாய்ச்சி, காதல்-ஆசையாகிய, வரம்பு-வரப்பை, ஒழுக்கி-ஒழுங்குசெய்து, காமம்-காமமாகிய, பயிர்-பயிரை, விளைத்தாள்-விளையும்படி செய்தனள்; [எ-று.]

தமயந்தி, நளனுடைய மார்பென்னும் வயலிலே, தன் கொங்கையாகிய ஏரைநடத்தி, சிறுவியர்வையாகிய நீரைப்பாய்ச்சி, காதலாகிய வரப்பைத் திருத்திக் காமமாகிய பயிரை விளையச் செய்தாளென்க. தமயந்தி, தன்னு டைய கொங்கைகள் நளனுடைய மார்பிலே அழுந்தக் குறுவியர்வையுண் டாக ,ஆசைமிகுந்து கூடிஇன்பத்தையுண்டாக்கினளென்பதுஇதன்கருத்து.

மார்பு வயலாகவும், கொங்கை ஏராகவும், வியர்வை நீர் தண்ணீராகவும், காதல் வரம்பாகவும், காமம் பயிராகவும் உருவகஞ் செய்யப்பட்டன. குறு மை, மையீறுகெட்டுக் குறு என நின்றது. அடைத்தல் வேறொருபக்கம் செல்லும் நீரை அணையிட்டுத் திருப்பிக் குறித்த விடத்திற் பாய்ச்சுதல். கொம்பு-தமயந்திக்கு உவமையாகு பெயர்.

நளனும், தமயந்தியும் கங்கையின்
அக்கரை சேர்தல்.

195. வேரி மழைத்துளிக்கு மேகக் கருங்கூந்தல்
காரிகையுந் தானும்போய்க் கண்ணுற்றான்—மூரித்
திரையேற மென்கிடங்கிற் சேலேற வாளை
கரையேறுங் கங்கைக் கரை.

(இ-ள்.) (அதன்மேல்) மூரி பெரிய, திரை-தன்னுடைய அலைகள், மெல்கிடங்கில்-(மாவிந்த நகரத்திற் கருகிலுள்ள) மென்மையான அகழியில், ஏற-ஏறிப்பாய, (அப்போது) சேல் ஏற (அதிலுள்ள) சேல் மீன்கள் சிறிய நீரப்பரப்பில்பாய்ந்துதிரிய, வாளை-வாளைமீன்கள், கரை யேறும்-(நிலைக்கொள்ள முடியாமல்) கரையில் பாய்கின்ற, கங்கைக்கரை-கங்கையாற்றின் அக்கரையை, (நளன்) வேரிமழை-தேன்மாரியை, துளிக்கும் - சொரிகின்ற, மேகம்-மேகத்தைப் போன்ற, கருங்கூந்தல்-கரிய கூந்தலையுடைய, காரிகையும்-அழகுள்ள தமயந்தியும், தானும் - தானுமாக, போய் - (அக்கங்கையைக் கடந்து) சென்று, கண் உற்றான்-கண்டான்; [எ று]

நளன் தமயந்தியுடனே கங்கையைத் தாண்டி அக்கரைபோய் மாவிந்த நகரத்தின் அருகில் சேர்ந்தான் என்பது இதன்கருத்து. முன்,'கங்கைநீராடி' என்றது கங்கையின் இக்கரையில் நீராடியதை; இப்போது சொன்னகரை கங்கையின் அக்கரை; இது, மாவிந்த நகரத்தின் அருகிலுள்ளது "மூரித் திரை யேற மென்கிடங்கிற் சேலேற" என்றதனால் மாவிந்த நகரத்திலுள்ள அகழியில் கங்கை நீர் ஏறிப்பாயு மென்பதாயிற்று. அகழி, கங்கையினும் சிறிதாதலின், 'மென்கிடங்கு' என்பதில் மென்மை சிறுமையை உணர்த்தும் மென்கிடங்கு-சிறிய நீரைக்கொள்ளும் அகழி. கங்கை வெள்ளத்தின் பெருமையை நோக்கி இது சிறிதெனப்பட்டது. சேல்-ஒருவகைக் கெண்டை மீன்; கண்ணுக்குவமை கூறப்படுவது. வாளை-வாள் போல் நீண்டிருக்கும் ஒருவகை மீன். சேல் சிறிது ஆதலின், சிறிது நீருள்ள விடத்திலேயே சஞ்சரிக்கும்; வாளை பெரிதாதலின் ஆழமான நீரிலேயே சஞ்சரிக்கும். ஆதலின் கங்கை நீர் அகழியிற் பாய்ந்த போது சேல்கள் சிறிய நீர்ப்பரப்பில் ஏறிச் சென்றன; வாளைகள் ஆழ்ந்த நீரிலிருந்தபடியால் நிலைக்கொள்ள முடியாமல் தாவிக் கரையிற் பாய்ந்தன.

கூந்தலுக்குத் தேன் சூடியமலர்களிலிருந்துவடிவதென்க. கூந்தலுக்கு மேகம் உவமை கூறப்பட்டதற் கேற்ப, மழை துளித்தல் கூறப்பட்டது. காரிகை-அழகு; அது பண்பாகுபெயராய் மாதை விளக்கிற்று. "நளன், தானும், காரிகையும் கண்ணுற்றான்" என்றது, ஆண்பாலும் பெண்பாலும் அடுக்கிச் சிறப்பினால் ஆண்பால் முடிபுகொண்டது. மேகம்-வடசொல்.

நளன், கங்கையின் அக்கரை சேர்ந்த பின்
தமயந்தியுடன், மாவிந்தநகரத்தருகுள்ள
ஒரு சோலையில் தங்குதல்.

196 சூதக் கனியூற லேற்ற சுருள்வாழை
கோதி னறவேற்றுங் குப்பியென—மாதரார்
ஐயுற்று நோக்குமகன்பொழில்சென் றெய்தினான்
வையுற்ற வேற்றானை மன்.

(இ-ள்.) மேற்கூறியபடி கங்கையின் அக்கரை போய்ச் சேர்ந்தவுடன்) வை உற்ற-கூர்மைபொருந்திய, வேல்-வேலாயுதத்தைத் தாங்கிய, தானை-சேனையையுடைய, மன்-நளமகாராஜன், சூதக்கனி மாம்பழங்களின், ஊறல்-ரசத்தினை, ஏற்ற-ஏந்திய, சுருள் வாழை-சுருண்டவாழையின் குருத்திலைகளை, கோது இல்-குற்றமில்லாத, நறவு ஏற்கும்-மதுவை ஏந்திக் கொண்டிருக்கின்ற, குப்பி என-குப்பிகளென்று, மாதரார்-பெண்கள், ஐயுற்று-சந்தேகங் கொண்டு, நோக்கும்-பார்க்கின்ற, அகன் பொழில் விசாலமான சோலையில், சென்று எய்தினன்-(தமயந்தியுடனே) போய்ச் சேர்ந்தான்; [எ-று.]

நளன் அதன்மேல், மாவிந்த நகரத்தருகிலுள்ள ஒருவிசாலமானசோலையிற் போய்ச் சேர்ந்தான் என்பது இதன் கருத்து. வாழைக் குருத்துக்கள் மலர்ந்து தலைப்பக்கம் விரிந்திருக்கும்; அதற்குமேலே வளர்ந்திருக்கும் மாமரங்களின்கனிரசங்கள் வடிந்து அக்குருத்துக்களில் நிரம்பும், அப்படிக்கனிரசம் நிறைந்த அக்குருத்துக்கள் மது நிரப்பப்பட்ட குப்பிகள் போன்றிருக்கும், குப்பியாவது: தலைப்பக்கம் அகன்று மற்றப்பாகம் நீண்டிருக்கும் ஒருவகைக் கலம் இது மண்ணாலும் செம்பாலும் செய்யப்பட்டு வைத்திய முறைகளில் உபயோகப்படுவதுண்டு. இதில்மதுமுதலியவற்றைநிரப்பி வைத்தலு முண்டு.

ஊறல் ஊறுவது. ஏற்ற-பெயரெச்சம். அகல் என்பது அகன் என வந்தது ஒருவகைப் போலி யெனக் கொள்ளப்படும்.

நளன் தமயந்திக்குத் தன் நகரத்தைக் காட்டுதல்.

197. வான்றோய நீண்டுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்றோன்று மற்றித் தடம்பதிதான்—வான்றோன்றி
வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநா டாளுடையான்
நல்விளக்கே யெங்கள் நகர்.

(இ-ள்.) (அங்ஙனம் சோலையிற் றங்கிய அந்நளன், தன் நகரத்தைச் சுட்டிக்காட்டித் தமயந்தியினிடத்தில்) வான்-சிறந்த, தோன்றி-செங்காந்தள் மலர்கள், வில் ஒளி பொருந்திய, விளக்கே பூக்கும்-விளக்கினது தன்மையையே உண்டாக்குகின்ற,(அதாவது காந்தள் மலர்கள், விளக்கைப் போல மலர்ந்திருக்கும் சிறப்பினையுடைய) விதர்ப்பநாடு விதர்ப்பதேசத்தை, ஆள் உடையான்-ஆட்சிபுரிகின்றவனான வீமராஜனது, நல் - நல்ல, விளக்கே-விளக்கைப்போலப் பிரகாசிக்கின்ற பெண்ணே, வான்தோய-ஆகாயத்தை அளாவும்படி, நீண்டு உயர்ந்த-நீட்சியாகி உயர்ந்திருக்கின்ற, மாடம்-மாளிகைகளிற் கட்டப்பட்டிருக்கும், கொடி-சீலைக்கொடிகள், நுடங்க-அசைந்தாட, தோன்றும்-காணப்படுகின்ற, இ தடம்பதி-இந்த விசாலமாகிய நகரம், எங்கள் நகர்-எங்களுடைய மாவிந்தமென்னும் பதியாம் (என்று கூறினான்.) [எ-று.]

நளன் தமயந்தியுடன் சென்று மேற்கூறியபடி சோலையிற் றங்கியவுடனே, பக்கத்தில் காணப்பட்ட மாவிந்த நகரத்தைத் தன்பதி யென்று தம

யந்திக்குக் காட்டினனென்பது இதன் கருத்து. விதர்ப்ப நாட்டில் செங்காந்தள் மலர்கள் எவ்விடத்தும் மலர்ந்து விளக்குகளைப்போலப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அதனையே ஒரு சிறந்தவளமாக அந்நாட்டிற்கு ஆசிரியர் கூறினரென்க. இனி, "வான்தோன்றி வில் விளக்கே பூக்கும்" என்பதற்கு, "ஆகாயத்தில் விளங்கிப் பிரகாசம் பொருந்திய விளக்குகள் காணப்படும்" என்று பொருள் கூறி 'அந்நாடு ஆகாயம் வரை உயர்ந்து பிரகாசிக்கும் விளக்குகளின் சிறப்பை யுடையதெனக் குறிப்பிடினும் அமையும்.

நீளல்-நீட்டளவில் அதிகப்படல்;உயர்தல் மேலோங்குதல். மாடக்கொடி-ஆறும் வேற்றுமைத் தொகை. தான் இரண்டும் அசைகள். மற்று-அசை- தோன்றி-முதலாகு பெயர். விளக்கு-(பொருள்களை) விளங்கச் செய்வது; இது, தமயந்திக்கு உவமையாகு பெயர். எங்கள்-என்றது தனது முன்னோரைஉளப்படுத்திய தன்மைப் பன்மை. ஆள்தை விகுதி கெட்டு, ஆள்-ஆனது.

### நளன், தமயந்தியுடன் சுகமாகப் பன்னிரண்டு வருடங்கள் வரை வாழ்தல்.

198. பொய்கையும் வாசப் பொழிலு மெழிலருவிச்
செய்குன்று மாறுந் திரிந்தாடித்—தையலுடன்
ஆறிரண்டாண் டெல்லை கழித்தா னடையலரைக்,
கூறிரண்டாக் கொல்யானைக் கோ.

[இ-ள்.] (மேற்கூறியபடி சோலையிலிருந்து பின்பு தமயந்தியுடன் அரண்மனைக்கேகிச் சுகமாக வசித்து) அடையலரை-சத்துருக்களை, கூறு இரண்டா-(உடல் வேறு உயிர்வேறாகி) இரண்டு துண்டுகளாகும்படி,கொல்-கொல்லுகின்ற, யானை-யானையையுடைய, கோ-நளமகாராஜன், தையலுடன்-தமயந்தி யென்னும் பெண்ணுடனே, பொய்கையும் - குளங்களிலும், வாசம்-வாசனை பொருந்திய பொழிலும் தோட்டங்களிலும், எழில்-அழகுள்ள, அருவிச் செய்குன்றும்-அருவிகள் பொருந்தி யிருக்கின்ற கற்பித மலைகளிலும், ஆறும்-நதிகளிலும், திரிந்து-சஞ்சாரஞ் செய்து, ஆடி-விளையாடி, ஆறிரண்டு ஆண்டு எல்லை-பன்னிரண்டு வருஷகாலத்தை, கழித்தான்-(சந்தோஷமாகப்) போக்கினான்; [எ-று.]

நளன் தன் அரண்மனையிற் சேர்ந்து தமயந்தி யுடனே வசித்துத் தினந்தோறும் பொய்கைகளிலும், சோலைகளிலும், செய்குன்றுகளிலும், ஆறுகளிலும் திரிந்து விளையாடிப் பன்னிரண்டு வருஷகாலம் வரை மிக்க சந்தோஷமாக வாழ்ந்திருந்தானென்க.

"கூறு இரண்டா" என்பதற்கு "உடல் இருபிளவாகச் செய்து" எனப் பொருள் கூறினும் பொருந்தும். பொய்கையும், பொழிலும், செய்குன்றும், ஆறும் என்பவற்றில் 'இல்' என்னும் ஏழனுருபு தொக்கன. செய்குன்று-

செய்யப்பட்டமலை; இது விளையாட்டின் பொருட்டு மனிதரால், மலையைப் போற் செய்யப்படுவது; இதில் அருவியும் ஏற்படுத்துவதுண்டு; அதனால், 'அருவிச் செய்குன்று' என்றார் ஆசிரியர் ஆறு-யாறு என்பதன் மரூஉ. ஆடி-என்பதற்கு, நீராடி எனப் பொருள் கொண்டால் அதைப் பொய்கைக்கும் ஆற்றுக்கும், திரிந்து என்பதைப் பொழிலுக்கும் செய்குன்றுக்கும் கொள்ள வேண்டும். ஆறிரண்டு ஆண்டு எல்லை-பண்புத் தொகைப் பன்மொழித்தொடர். அடையலர்-சேராதவர்; இது எதிர்மறை வினையாலணையும் பெயர்; இதில் அல்-எதிர்மறை யிடைநிலை.

தமயந்தி சந்ததியினைப் பெறுதல்

199. கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கா னின்றெறிப்ப—நூலென்னத்
தோன்றாத நுண்மருங்கு றோன்றச் சுரிகுழலாள்
ஈன்றாள் குழவி இரண்டு.

[இ-ள்.] (அப்படி வாழ்ந்திருக்குங் காலத்தில் மேற்கூறிய பன்னிரண்டு வருடங்களுக்குப்பின்) கோலநிறம் - அழகிய வண்ணமானது, விளர்ப்ப-வெளுப்படையவும், கொங்கை முகம்-தனக்காம்புகள், கருக-கருப்பாகவும், மயிர்க்கால்-உரோமங்களின் அடிகளில், நீலநிறம்-நீலநிறமானது, நின்று-நிலைபெற்று எறிப்ப-வீசவும், நூல் என்ன நூலைப்போல, தோன்றாத (மெல்லிதாகிப் பார்ப்பவர் கண்களுக்கு) காணப்படாத, நுண்மருங்குல் - நுட்பம் பொருந்திய இடையானது, தோன்ற-(சற்றுப் பெரிதாகிப் பார்ப்பவர் கண்களுக்கு) வெளிப்படவும், (கருக்கொண்டிருந்து) சுரிகுழலாள்-சுருண்ட கூந்தலையுடைய தமயந்தியானவள், இரண்டு குழவி - இரண்டு குழந்தைகளை, ஈன்றாள்-பெற்றாள்; [எ-று]

கலியாணமாகிப் பன்னிரண்டு வருடங்கள் சென்ற பின்பு தமயந்தி இரண்டு குழந்தைகளைப் பெற்றாள் என்பது இதன் கருத்து. ஸ்திரீகள்கருக் கொண்டவுடன், நிறம் வெளுத்தலும், தனக்காம்புகள் மிகக் கறுத்தலும், மயிர்க்கால்கள் நீலநிறமடைதலும், இடை பருத்தலும் இயல்பு.

தோன்றாத நுண்மருங்குல் என்பது இடையின் மென்மையை விளக்கும். விளர்ப்ப, கருக, எறிப்ப, தோன்ற என்பன வினையெச்சங்கள்; இவற்றுள் எண்ணும்மைகள் தொக்கன. கோலம், நீலம் என்பன பண்புரிச் சொற்கள். நூலென்ன என்பதில், என்ன-உவமை யுருபு.

பன்னிரண்டு வருடமளவும் கலி, நளனைத் தொடர்வதற்குச்
சமயம் பார்த்திருந்தமை இதிற் கூறப்படுகின்றது.

200. ஆண்டிரண்டா றெல்லை யளவுந் திரிந்தேயும்
காண்டகைய வெங்கலியுங் காண்கிலான்—நீண்டபுகழ்ச்

செந்நெறியாற் பார்காத்த செங்கோ னிலவேந்தன்
தன்னெறியால் வேறோர் தவறு.

[இ-ள்.] வெம்-கொடுமையே, காண்தகைய - தன்னிடத்திற் காணத் தக்க, கலியும்-கலிபுருஷனும், (முன்னே கூறியபடி நளனைத் தொடர்ந்து வருத்துதற்குச் சென்று நளனும் தமயந்தியும் சுகமாக வாழ்ந்து குழந்தைக ளைப் பெற்றிருந்த அந்த) இரண்டு ஆறு ஆண்டு எல்லைஅளவும்-பன்னிரண்டு வருடகாலம் வரையிலும், திரிந்தேயும்-(அந்நளன் சென்ற விடங்களுக்கெல் லாம் சென்று) அலைந்து கொண்டிருந்தும், (அவனைப் பற்றுவதற்கு) நீண்ட புகழ்-அதிகரித்த கீர்த்தியையுடைய, செம் நெறியால்-செம்மையான ஒழுக் கத்தினால், பார்காத்த, பூமியைக்காப்பாற்றி அரசுசெய்து வந்த, செங்கோல்- சாயாத கோலையுடைய, நிலவேந்தன் தன்-பூமிக்குரியவனாகிய நளமகாராஜ னுடைய, நெறியால்-ஒழுங்கான நடக்கையினாலே, வேறு ஓர் தவறு-வேறே யாதொரு குற்றத்தையும், காண்கிலான்-காணமுடியாதவனாயினான் (அதா வது காணாமலிருந்தான்); [எ-று.]

முன்னே. 'நளனையும் தமயந்தியையும் வருத்துவேன்' என்று தேவர்க ளிடம் சபதங்கூறிச் சென்ற கலிபுருஷன் உடனேநளனுடன் மாவிந்தநகரத் திற் புகுந்து பன்னிரண்டு வருஷகாலம் வரையிலும் அவனைப் பற்றுதற்குச் சமயம் பார்த்திருந்தும், நளன் ஒழுக்கத்திற் சிறிதும் தவறாதிருந்தபடியால் அவனைப் பற்றுவதற்கு இடமில்லாமற் போயிற்று; அதனால்அக்கலிபுருஷன் அச்சமயத்தைக் காணுதவனாய் அங்கே காத்திருந்தான் என்பதுஇதன் கருத் து. கலி, ஒழுக்கந் தவறுவோரிடத்திற்றான் சேரமுடியும்; மற்றையரிடத் தில் அணுகல் முடியாது என்பது பெறப்பட்டது.

எல்லையளவும் என்பதிலுள்ள உம்மை முற்றும்மை. மற்றிரண்டும் சிறப் பும்மைகள். திரிந்தேயும் என்பதில் ஏகாரமும் சிறப்புப் பொருளதே; இதை அசை யெனினுமாம். தவறு முதனிலைத் தொழிற்பெயர் வேந்தன் தன் என் பதில்; தன்-அசை. தவறும்-தவறு; இறிவு சிறப்பும்மை தொக்கது.

**கலி, நளனிடத்தில் சேர்தல்.**

201. சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்துகலி—சிந்தையெல்லாம்
தன்வயமே யாக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து.

[இ-ள்.] (இவ்வாறு கலிபுருஷன் காத்திருந்த காலத்தில்) சந்தி செய- சந்தியா வந்தனம் செய்யும் பொருட்டு, (ஒருநாள் நளன்) தாள்-பாதங்களை, விளக்க-நீரைவிட்டுக் கழுவிச்) சுத்திசெய்ய, (அப்போது) தாளில்-ஒருபாதத் தில், (ஜலம்படாமல்) மறு-மாசு, (ஏற்பட) கண்டு-அதனைப் பார்த்து, புந்தி மகிழ-(தனக்குச் சமயம் வாய்த்ததென்று) சிந்தை சந்தோஷமடைய,புகுந்து-

(அதன்வழியாக அரசனிடத்தில்) பிரவேசித்து, கலி-கலிபுருஷன், சிந்தை எல்லாம்-அரசனுடைய புத்தியை யெல்லாம், தன்வயமே ஆக்கி-தன் சுவாதீனத்தி லிருக்கும்படி செய்து, பொன் அசலம் பொன்மலையை நிகர்த்த, மார்பன்-மார்பகத்தையுடைய நளனை, புகைந்து-கோபித்து, தமையனுடன்-(நளனுக்குத்) தமையன் முறைகொண்டவனு யிருந்த சிற்றரசனுகிய புஷ்கரன் என்பவனோடு, இருந்தான்-அவனுக்கு உதவி செய்பவனுயிருந்தான்; [எ-று]

மேற் கூறியபடி கலிபுருஷன், தான் தொட்ரும் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்க அவனுடைய எண்ணத்திற்கனுகூலமாக ஒருநாள் நளன் சந்தியாவந்தனம் செய்யும் பொருட்டு நீரைவிட்டுக் கழுவிப் பாதங்களைச் சுத்தி செய்தான்; அப்போது ஒரு பாதத்தின் ஓரிடத்தில் ஜலம் படாமல் போய்விட்டது. அவ்விடம் புள்ளியாய் மாசுற்றிருந்தது. இங்ஙனம் நேர்வது ஒழுக்கங்கெட்ட செய்கையாதலால், இத்தோஷத்தைக் கண்டவுடனே கலி புருஷன் சந்தோஷித்து நளனிடத்தே பிரவேசித்து, அவனுககுத்தமையன் முறை பூண்டிருந்த புஷ்கரன் என்னும் ஒரு சிற்றரசனுக்கு அவனுடைய ஐசுவரியங்களை யெல்லாம் பறித்துக் கொடுக்க நாடி அவனோடு சேர்ந்திருந்தான் என்க. கலி புகுதலாவது ஒருவனிடத்திற் சேர்ந்து அவனுடைய புத்தியைத் தன் நோக்கம்போற் செல்லும்படி வசப்படுத்திக் கொள்ளுதலாம். இங்கே நளனிடத்திலும் அங்ஙனமே பிரவேசித்து அவனுடைய புத்தி முழுவதையும் வசஞ் செய்து கொண்டான். பின்னர்ப் புஷ்கரனைத் தனக்குத் துணைக்கருவியாகக் கொண்டு நளனைக் கெடுத்தற்கு அவனிடம் சேர்ந்தான்.

சந்தி-பகலும் இரவும் சந்திக்கும் காலம்; இது காலைக்கும் மாலைக்குமாகும். இக்காலத்திற் செய்யப்படும் மந்திரம் சந்தியெனப்படும். தண்ணீர் படாத விடம் மாசுடையதாதலின் மறு எனப்பட்டது. தான்- அசை. "இயல்பின் விகாரமும் விகாரத்தியல்பும், உயர்திணை யிடத்து விரிந்துந்தொக்கும் விரவுப் பெயரின் விரிந்து நின்றும், அன்னபிறவு மாகுமையுருபே" என்னும் (நன். உரு-பு-கசு. ஆம்-சூ) விதிப்படி, மார்பற் புகைந்து இதில் மார்பன் என்னும் உயர்திணைப்பெயர் இரண்டன் தொகையில் ஈறு திரிந்து வந்தது. பொன்மலை-மேருகிரி. செய என்னும் எச்சம் பின்னிகழும் பயனைக் குறித்தமையால் எதிர்காலத்ததாம். விளக்க என்னும் எச்சம் பின் வினைக்குக் காலக் குறியானதால் நிகழ்காலத்ததாம்.

### நளனிடத்தில் கலி சேர்ந்த விதம்.

202. நாராயண் ணய நமவென் றவனடிபிற்
சேராரை வெந்துயரஞ் சேர்ந்தாற்போல்—பாராளும்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி.

[இ-ள்.] நாராயணாயநம என்று-நாராயணனுக்கு நமஸ்காரம் என்று சொல்லி, அவன் அடியில்-அந்த நாராயணனுடைய பாதங்களில், சேராரை-சேர்ந்து அவனைப் பூஜியாதவர்களை, வெம்துயரம்-கொடிய துன்பமானது, சேர்ந்தால்போல்-அடைந்தது போல, பார் ஆளும்-பூமியை ஆளுகின்ற, கொற்றவனை-வெற்றியை யுடைய அரசனை, பார்மடந்தை-பூமிதேவியின், கோமானை-நாயகனாகிய விஷ்ணு வெனனும் தன்மையுடையவனை, வாய்மை நெறி சத்தியம் பொருந்திய வழிகளை, கற்றவனை படித்தறிந்திருப்பவனாகிய நளனை, கலி-கலிபுருஷன், (அந்நளன் காலைச் சரியாகப் பரிசுத்தம் செய்யாமையினாலே) சேர்ந்தான்-அடைந்தான்; [எ-று.]

நாராயணனைப் பூஜியாதவர்களைச் சம்சாரபந்த துன்பஞ் சேர்ந்து வருத்துவதுபோல, நளன் மகா உத்தமனா யிருந்தும் சந்தியாவந்தன காலத்தில் காலைச் சரியாகச சுத்தி செய்யாத காரணத்தினாலே கலி அவனைச் சேர்ந்தான் என்பது இதன் கருத்து. நாராயணன் இரக்ஷகக் கர்த்தாவாதலினாலே அவனைப் பூஜிப்பவர்க்கு நன்மையே உண்டாகும்; இது போல் நல்லொழுக்கந்தவறாதவரிடத்திற் கலி சேரமாட்டான். 'நாராயணாயநம' என்பது விஷ்ணுவுக் குரிய மந்திரம்; இது, 'நாராயணனுக்கு நமஸ்காரம்' என்னும் பொருள் தரத்தக்க வடமொழித் தொடர் வாக்கியம்.

சேரார்-வினையாலணையும் பெயர். கொற்றவனை, கோமானை, கற்றவனை என்பன ஒரு பொருள் குறித்த பல பெயர்கள்; எல்லாம் நளனையே குறிப்பனவாம்; இவை, "ஒரு பொருண் மேற்பல பெயர்வரி னிறுதி ஒரு வினை கொடுப்ப தனியுமொரோவழி" என்னும் (நன். பொது-சக. ஆம் சூ) விதியால் ஒருவினை கொண்டு முடிந்தன. பார்மடந்தை கோமான் என்பது நளனுக்கு உவமை யாகுபெயர்.

நளனுடைய அரசைக் கபடத்தால் வாங்கித் தருவதாகக் கூறிக் கலி, புஷ்கரனை அழைத்தல்.

203. நன்னெறியில் சூதா னளனைக் களவியற்றித்
தன்னரசு வாங்கித் தருகின்றேன்—மன்னவனே
போதுவா யென்னுடனே யென்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து.

[இ-ள்.] (மேற்கூறியபடி சேர்ந்த பின்பு புஷ்கரனிடம்) புலை-நீசத்துவமுள்ள, நரகுக்கு-நரகினுக்கு, ஏதுவாய்-காரணமாகி, நின்றான்-நின்றவனாகிய கலி, எடுத்து-குரலை உயர்த்தி, நல்நெறி இல்-நல்லவழி யில்லாத, சூதால்-சூது விளையாட்டினாலே, நளனை-நளனுக்கு, களவு இயற்றி-வஞ்சனையைச் செய்து, தன் அரசு-அவனது அரசாட்சியை, வாங்கித் தருகின்றேன்-நான் பறித்துக் கொடுக்கிறேன், மன்னவனே - புஷ்கரராஜனே!, என்னுடனே போதுவாய்-என்னோடு வருவாயாக, என்றான்-என்று சொன்னான்; [எ-று.]

கலி, நளனிடத்திற் புகுந்து அவனுடைய புத்தியைத் தன் வசப்படுத்திக் கொண்ட பிறகு, அவனைக் கெடுக்கும் நோக்கமுடையவனும் புஷ்கரனிடம் சென்று, அவனை நோக்கி, "மன்னனே! நீஎன்னுடன் வருவாயானால் சூதாட்டத்தினாலே நளனுடைய அரசாட்சியைப் பிடுங்கி உனக்குக் கொடுத்துவிடுவேன்" என்று அழைத்தான் என்பது இதன் கருத்து. தன் வசப்பட்டோர் தீ நெறியிற்புக்கு நரகத்தை யடைவராதலின், அவர்களை அங்ஙனம் நரகத்திற்சேர்ப்பதற்குக் காரணமாகி நின்றவன் அவனே யாவன்; ஆதலின், அவன், 'புலைநரகுக் கேதுவாய் நின்றான்' என்று பெயர் கூறப்பட்டான். இவன் அங்ஙனம் அக்காரியத்தை நிச்சயமாக முடிக்கக் கூடியவனாதலின் வார்த்தையை உயர்த்திக் கூறினான் இதுபற்றியே ஆசிரியர், 'எடுத்து என்னுடனே போதுவா யென்றான்' என்றார்.

"இல்லெனின்மைச் சொற்கையடைய வன்மைவிகற்பமு மாகாரத் தொடு, வன்மையாகலு மியல்புமாகும்" என்னும் (நன்-மெ-பு-சூ 0 ஆம். சூ) விதிப்படி 'இல் சூது' என்பது இயல்பாயிற்று. நளனை-உருபுமயக்கம் தன்-என்பது இங்கு ஆறும் வேற்றுமை உடைமைப் பொருளில் வந்தது. தருகின்றேன்-தெளிவு பற்றி எதிர்காலம் நிகழ்காலமாயிற்று.

புஷ்கரன், நளனோடு சூதாடச் செல்லல்.

204. புன்னை நறுமலரின் பூந்தா திடை யொதுங்குங்
கன்னி யிளமேதிக் காற்குளம்பு—பொன்னுரைத்த
கல்லேய்க்கு நாடன் கவறாடப் போயினான்
கொல்லேற்றின் மேலேறிக் கொண்டு.

[இ-ள்.] (கலி அவ்வாறுகூறியவுடனே அதற்கிசைந்து) நறு-நல்ல, புன்னை மலரின்-புன்னைப் புஷ்பங்களினுடைய, பூந்தாது இடை-அழகிய மகரந்தங்களின் நடுவில், ஒதுங்கும்-நடந்து செல்கின்ற, கன்னி-கன்றை ஈனாதனவாகிய, இளமேதி - இளமையான எருமைகளின், கால் குளம்பு - பாதங்களின் குளம்புகள், (அம்மகரந்தங்கள் படிவதனாலே) பொன் உரைத்த பொன்னை உரைக்கப்பட்ட, கல்-உரைகல்லை, ஏய்க்கும்-நிகர்த்திருக்கின்ற, நாடன்-நாட்டையுடையவனாகிய புஷ்கரன், கொல்-(எதிர்த்தாரைக்) கொல்கின்ற, ஏற்றின் மேல் எருதின்மேல், ஏறிக்கொண்டு-ஆரோகணித்துக்கொண்டு, கவறு ஆட-(நளனோடு) சொக்கட்டான் ஆடுதற்கு, போயினான்-போனான்; [எ-று.]

புன்னைமரக் கா யிருந்த நாட்டையுடைய புட்கரன்; நளனோடு சூதாடுவதற்கு, எருதின்மேலேறிக் கொண்டு புறப்பட்டான் என்பது இதன் கருத்து. இது, தகாத செய்கை எனினும், புஷ்கரன், பேராசைக் குணத்தினால் இதற்கிசைந்தான். புன்னைமரங்களின் அடியில் அவற்றின் மலர்களிலிருந்து உதிர்ந்த மகரந்தம் பரவிக் கிடக்கும்; அவற்றினிடையில் எருமைகள் செல்லும்போது அவற்றின் குளம்பில் அம்மகரந்தம் பொன்னிறமாக

இடைவிட்டு ஆங்காங்கே கீற்றுக்களாகப்படியும். அப்படி வரிவரியாக மகரந்தம் படியவே அக்குளம்பு, பொன்னைக் கோடு கோடாக உரைத்துப் பார்க்கும் உரைகல் போன்றிருந்ததென்க. புன்னைக்காடு கடற்கரைச் சார்பாயுள்ளது; இங்கு புஷ்கரன் நாட்டை, அப்புன்னை மிகுந்தநாடெனக் கூறியதால், அந்தப்புஷ்கரன், கடற்கரையைச் சார்ந்த ஒரு சிறிய நாட்டிலுள்ள சிற்றரசன் என்பது பெறப்படும். இவன், கொல்லேற்றின் மேலேறினான் என்று கூறியதனால் இப்புஷ்கரனும் மிகக் கொடியன் என்பது விளங்கும். கலிபுருஷனே எருதாகிப் புஷ்கரனைச் சுமந்துவந்தானென்று பாரதம்கூறுகின்றது.

கன்னி-ஈனாத எருமை. கன்னி, இள என்பவைகளை ஒரு பொருட்பன்மொழியாகக் கொண்டு, கன்னி என்பதற்கு இளமை யெனப் பொருள் கூறினும் அமையும். கன்னி என்பது-இளமை, அழகு முதலியவற்றை உணர்த்தும் போது உரிச்சொல்; பெண்ணை உணர்த்துங்கால் பெயர்ச்சொல்.

இதுவுமது.

205. வெங்கட் சினவிடையின் மேலேறிக் காலேறிக்
கங்கைத் திரைநீர் கரையேறிச்—செங்கதிர்ப்பைம்
பொன்னொழியப் போதும் புறம்பணைசூழ் நன்னாடு
பின்னொழியப் போந்தான் பெயர்ந்து.

[இ-ள்.] (இன்னும் அவ்வாறு புறப்பட்டுச் சென்ற அந்தப் புஷ்கரன்) வெம் கண்-வெவ்விய கண்களையும், சினம்-கோபத்தையுமுடைய, விடையின் மேல் ஏறி-அந்த இடபத்தின் மீது (மேலே சொல்லியபடி) ஏறி, கங்கை-கங்காநதியின், திரைநீர்-அலைகளோடு கூடிய ஜலமானது, கால் ஏறி-வாய்க்கால்களிற் பாய்ந்து, கரை ஏறி-கரையிலும் ஏறிப்புரண்டு, செம்கதிர்-சிவந்தகதிர்களிலுள்ள, பைம்பொன்-பசும்பொன் போன்ற நெற்கள், ஒழிய மறைய, போதும்-செல்கின்ற, புறம்-பக்கத்திலுள்ள, பணைசூழ்-மருதநிலம் சூழ்ந்த, நல்நாடு-நல்லதேசமானது, பின் ஒழிய-தனக்குப் பின்னே நீங்கி யிருக்கும்படி, (அதாவது நகரம் பின்புறமாகத் தான் முன்னே) பெயர்ந்து-அதை விட்டுத் தாண்டி, போந்தான்-சென்றான்; [எ-று.]

மேற்கூறியபடி சென்ற புஷ்கரன் அந்த எருதின் மேலேறித் தன் நாடு பின்னொழிய அதை விட்டு நீங்கிச் சென்றான் என்பது இதன் கருத்து. முன் பாட்டிற் கூறிய பிரயாணத்தையே இதிலும் ஆசிரியர்வேறொரு வகையாகக்கூறினார். இவ்வாறு கூறுவதும் ஒருவகைக் கவிவழக்காம். கங்கை வெள்ளமானது கால்வாய்களிலேறிக் கரைபுரண்டு பெருகி மருத நிலத்திலுள்ள செந்நெற்கதிர்கள் தனக்குள் மூழ்கப் பாயுமென்க. இங்கே ஒழிய என்பது, மறைய என்னும் பொருளில் வந்தது. கதிர்கள் வெள்ளத்தில் மூழ்கினும், அவ்வெள்ளங் குறைந்தபின் மீண்டும் தலையெடுக்கும்; அதனால்

மிகுந்த சேதமின்றாம். ஆதலின், இங்ஙனம் பாயும் வெள்ளத்தைச் சிறப்பாகவே கூறுவது வழக்கம். இனி, வெள்ளத்தால் பயிர்கள் சேதமாயினும் அதனையும் ஒரு வெள்ளச் சிறப்பாகவே கூறுவது இயற்கையாதலின் ஒழிய- என்பதற்கு, நெற்கள் அழியஎனப்பொருள் கூறினும்இழுக்காகாது. 'பொனனொழியப் போதும்' என்பதற்குப் 'பொன் போன்ற நெல் அல்லது பொன் தவிர மற்றவைகளை அடித்துக் கொண்டு போகும்' எனப் பொருள் கூறுவாருமுளர். வெள்ளம் கேடு செய்யுங்கால் நெல் முதலியமெல்லிய வஸ்துக்களை விட்டுச் செல்லுதல் என்றுமில்லையாதலின் அதுபொருந்தாதென்க. காலேறி என்பதற்குக் காற்று மோதுவதினால் எனப்பொருள் கூறினும் அமையும். 'நன்னாடு பின்னொழிய' என்பதற்குத்'தன்னுடைய நல்ல நாடானது பின்னே தன்னை விட்டு நீங்கும்படி' எனவும் பொருள் விரிக்கலாம்; பின்னே இவனுடைய நாட்டையும் நளன் கைப்பற்றிக் கொள்வதால் இதுபொருந்துமென்க.

பொன்-நெல்லுக்கு உவமையாகு பெயர்.

நளனிடம் புட்கான் சேர்தலும், அவன் வரவைப்பற்றி நளன் விசாரித்தலும்.

206. அடற்கதிர்வேன் மன்ன னவனேற்றின் முன்போய்
எடுத்தகொடி யென்னகொடி யென்ன—மிடற்சூது
வெல்லுங் கொடியென்றான் வெங்கலியா லங்கவன்மேல்
செல்லுங் கொடியோன் தெரிந்து.

[இ-ள்.] (அவ்வாறு புறப்பட்டுப் போன புஷ்கரன் மாவிந்த நகரம் போய்ச் சேர்ந்து நளனுக் கெதிரில் சூதுக்கொடி பிடித்து நிற்க) அடல்-பகைவரைக் கொல்லுகின்ற, கதிர்-பிரகாசம் பொருந்திய, வேல் வேலாயுதத்தைத் தாங்கிய, மன்னன்-அரசனாகிய நளன், அவன்-அந்தப் புஷ்கரனுடைய, ஏற்றின் முன்போய்-எருதினெதிரிற் சென்று, (அவனை நோக்கி) எடுத்த கொடி-நீ உயர்த்திப் பிடித்த துவஜமானது. என்னகொடி-எவ்வித காரணத்தா லேற்பட்ட துவஜம், என்ன-என்று வினவ, வெம்கலியால்-கொடியகலி புருஷனுடைய தூண்டுதலால், அங்கு-அவ்விடத்தில், அவன் மேல் செல்லும்-அந்த நளனிடம் சூதாடச் செல்கின்ற, கொடியோன்-தீயோனாகிய புஷ்கரன், தெரிந்து-(நளனுடைய உள்ளக் கருத்தை) உணர்ந்து, (அதாவது அவன் பிரியத்தோடு வினவிய குறிப்பால் அவனுக்கும் சூதாட்டத்தில் விருப்பமுண்டென்பதைத் தெரிந்து அவனுக்கு மேலும் விருப்பமுண்டாகும்படி) மிடல்-பலமான, சூது சூதாட்டத்தில், வெல்லும்-பிறரை வெல்லுகின்ற, (அதாவது வெல்லுதற் கறிகுறியான) கொடி என்றான். கொடி இதுவாகும் என்று கூறினான்; [எ-று.]

புஷ்கரன் தன் நாட்டை விட்டுப்புறப்பட்டுப்போய் நளனுக்குமுன்னே நின்றான்; அப்போது நளன்; அவனிடமுள்ள சில குறிப்புக்களால், 'இவன்

சூதாடவந்தவனே' என்று மனதில் நிச்சயித்துக்கொண்டு, தானும் சூதாட்டத்தில் விருப்பமுடையவனாய், அவன் பிடித்துவந்திருந்த சூதாட்டக் கொடியைச் சுட்டிக்காட்டி, அவனிடத்தில், 'இக்கொடி எதன் பொருட்டாக ஏற்பட்டது' என்று வினவினான். அதற்கந்தப் புஷ்கரன், 'கவறாட்டத்தில் என்னை வெல்வாரெவருமிலர் என்பதற்கறிகுறியாக இக் கொடி எடுக்கப்பட்டதாகும்' என்று கூறினான் என்க. புஷ்கரன் செல்லும்போதே சூதாட்டத்தின் வெற்றிக் கறிகுறியாகிய கொடியைப் பிடித்துக் கொண்டே போயிருந்தான். அதனாலேயே நளன் கொடியின் காரணத்தை வினவினான். இக்கொடியின் குறிப்பால் முன்னரே நளனுக்குப் புஷ்கரன் கவறாடவந்தவனென்பது தெரியும்; எனினும் தனக்கு அதன்மேலுள்ள விருப்பால் அவன் தெரியாதவன் போன்று வினவினான். ஒரு பொருளின்மேல் விருப்புடையார் அதனைக்கண்டவுடன் அதன் இயற்கை தமக்குத்தெரியுமெனினும் தெரியாதவர் போல், 'இஃதென்ன' வென்று அதனை வைத்திருப்போரிடம் வினவுதல் உலக இயற்கை. இங்கே நளனுக்குக் கவறாட்டத்தில் விருப்ப மேற்பட்டது கலியின் செய்கையா லென்க. நளனுக்குக் கவறாட்டத்தில் விருப்ப மிருந்ததென்பது, "கொடியோன் தெரிந்து மிடற்சூதுவெல்லுங்கொடி என்றான்" என்பதால் உணரப்படும்.

அடல்-தொழிற் பெயர். கதிர்வேல்-இரண்டாம் வேற்றுமைத் தொகை. வேலீ மன்னன்-என்பது மஃதே. எடுத்த-பெயரெச்சம், அவன் மேல் என்பதில், மேல் ஏழாம வேற்றுமைச் சொல்லுருபு. செல்லும்-பெயரெச்சம். தெரிந்து-வினையெச்சம்.

### நளன், புஷ்கரனைச் சூதாட்டத்திற்கு அழைத்தல்.

297. என்றோ மிதுவாயின் மெய்ம்மையே எம்மோடு
வான்றோய் மடற்றெங்கின் வான்றேறல்—தான்றேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கு நன்னாடன்
சூதாட வென்றான் துணிந்து.

(இ-ள்.) (புஷ்கரன் அவ்வாறு சொன்னவுடனே) வான்தோய்-ஆகாயத்திற் படியும், மடல்-மடல்களையுடைய, தெங்கின் தென்ன மரங்களினின்று வடியும், வான்-சிறந்த, தேறல்-மதுவை, வாளை-வாளைமீன், தான் தேக்கி-தான் குடித்து வயிற்றில் நிரப்பி, மீது ஆடி-மேலேகுதித்து ஆடி, வயல் வீழ்ந்து-மீண்டும்வயலிலே வீழ்ந்து, உழக்கும் சேற்றைக்கலக்குகின்ற (மருத நிலச் சிறப்பையுடைய), நல்நாடன்-நல்ல நாட்டையுடையவனாகிய நளன், துணிந்து-தானும் சூதாடுதற்கு உறுதிகொண்டு, இது மெய்ம்மையே ஆயின்-இஃதுண்மையாயிருக்குமானால், என்றோம்-(நாம் இச்சூது விளையாட்டைச்

செய்வதற்கு) இசைந்தோம், (ஆதலின்); எம்மோடு-எம்முடனே, சூதாட-நீ கவறாடுவாயாக, என்றான்-என்று கூறினான்; [எ-று.]

புஷ்கரன் அவ்வாறு இறுமாப்புக் கொண்டு, 'என்னைச் சூதில் வெல்வார் எவருமில்லை என்பதற்கறிகுறியாகும் இந்தக் கொடி' என்று கூறியவுடனே, நளன், 'இவனைக் கவறாட்டத்தில் வென்று தோல்வியடையச் செய்து இவனுடைய அகங்காரத்தை அடக்கவேண்டும்' என்று கருதி அவனை நோக்கி, "அப்படியாயின் நீ எம்மோடு சூதாட வருவாயாக" என்று அழைத்தானென்க. நளன் இவ்வாறுதானே ஆத்திரங்கொண்டு அழைக்கும்படி செய்யக்கருதியே புஷ்கரன் அவ்வாறு அகங்கரிப்பான வார்த்தையைக் கூறினான். மருதநிலத்தின் வயலோரங்களிலுள்ள தென்னைமரங்கள் விண்ணுற வோங்கி வளர்ந்திருக்கும்; அவற்றினின்றும் வடியும் மது கீழே ஒழுகும். அதனை, வயல்களிலுள்ள வாளைமீன் பருகும்; அங்ஙனம் பருகவே அதற்குக் களிப்புண்டாம்; அக்களிப்பினால் அது மேலே துள்ளி விளையாடி மீண்டும் கீழே பாய்ந்து சேற்றைக் கலக்குமென்க. இதில், நிடதநாட்டின் வளத்தை விளக்கினர் ஆசிரியர்.

என்றோம் என்பதில், என்-பகுதி, இதனீற்றுலகரம் றகரமாகி என்றோம் என்றாய் மெலித்தல் விகாரம் பெற்று என்றோம் என வந்தது. இதுவாயின் மெய்ம்மையே' என்பது, 'இது மெய்ம்மையே ஆயின்' என மாற்றுக.

மந்திரி முதலானோர் சூதாடக் கூடாதென்று
நளனைத் தடுத்தல்.

208. காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதல் மறுத்த லிவைகண்டாய்—போதில்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி.

(இ-ள்.) (நளன் இவ்வாறு புஷ்கரனைச் சூதாடக் கூப்பிட்டவுடனே, அது கூடாத செய்கையெனத்தெரிந்த மந்திரி முதலியோர், அதனைத்தடுக்கத் துணிந்தவர்களாய் அந்நளனை நோக்கி) போதில்-தாமரைமலரில், சினை ஆமை-கருக்கொண்ட ஆமைகள், வைகும்-தங்கியிருக்கின்ற, (மருதநிலச் சிறப்பையுடைய) திருநாடா-அழகிய நிடதநாட்டையுடையவனே!, காதல்-பெண்ணாசை, கவறு ஆடல்-கவறாடுதல், கள் உண்டல்-மதுவைப்பருகுதல், பொய்மொழிதல்-பொய்கூறுதல், ஈதல்-(பிறர் யாசகர்க்கோ மற்றையர்க்கோ) கொடுத்தலை, மறுத்தல்-தடுத்தல், (ஆகிய) இவை-இக்காரியங்களே, செம்மை-நீதியை, நினையாமை-கருதாமையை, பூண்டார்-தமக்குரிய குணமாகக் கொண்டவர்களுடைய, நெறி-ஒழுக்கமாம்.

நளனுடையமந்திரி முதலியோர், 'காதல் கவறாடல் முதலியன நீதியைக் கைவிட்டவர்களுக்குண்டாய ஒழுக்கமாம்' என்றுரைரென்க. இதுவும் அடுத்த

மூன்று செய்யுட்களும் குளகமாதலின், ஈற்றுச் செய்யுளில் எடுத்துக் கொண்ட விஷயங்கள் கொண்டு முடிக்கப் படும்.

காதல், கவருடல், கள்ளுண்டல், பொய்ம்மொழிதல், ஈதல் மறுத்தல் என்பவற்றின் எண்ணும்மைகள் தொக்கன. செவ்வெண்ணின் தொகைவிகாரத்தால் தொக்கது. 'இவை செம்மை நினையாமை பூண்டார் நெறி' என்றமையால் "நின்னைப்போன்ற உத்தமனுக்கு ஆகாதனவாம்" என்பது பெறப் படும். இவ்வாறு கூறியதனால், மந்திரி முதலியோர், 'நீ கவருடாதே' என்று குறிப்பித்தார் என்பது பெறப்படும்.

இதுவுமது.

209. உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானஞ் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும் மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து

(இ ள்.) சூது-கவருட்டமானது, உரு-மனிதரின் அழகை, அழிக்கும்-கெடுக்கும், உண்மை சத்தியத்தின், உயர்வு-மேம்பாட்டை, அழிக்கும்-போக்கிவிடும், வண்மை-ஈகையையுடைய, திரு-செல்வத்தை, அழிக்கும்-கெடுக்கும், மானம்-கௌரவத்தை, சிதைக்கும்-அழிக்கும், மருவும் - கூடுகின்ற, ஒருவரோடு ஒருவரிடத்தே, (ஏற்படும்) அன்பு-பிரியத்தை, அழிக்கும்-கெடுத்துவிடும், (இந்தச் சூதினாலே வருங்கேடு) ஒன்று அல்ல-ஒன்றுமாத்திரமன்று, (இவ்வாறு பலஉண்டாகும்; ஆதலின்) தக்கோர் - மேலோர்கள், புரிந்து-விரும்பி, பொருவரோ - (இத்தகைய சூதாட்டத்தில்) எதிர்ப்பார்களோ, (எதிர்க்க மாட்டார்கள் என்றபடி;) [எ-று.]

சூதாடுவோன், தன்னிடமுள்ள ஆடையாபரணங்களையும் பந்தயமாக வைத்தாடித் தோற்று விடுவானாதலின் அவனுடைய அழகு போய்விடும். அந்த ஆட்டத்தில் அவன் ஜெயம் பெற வேண்டி அநேகம் பொய்களைக் கூறுவானாதலின் அவனிடம் சத்தியம் நிலைக்க மாட்டாது. "ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கு முண்டாங்கொல் நன்றெய்தி வாழ்வதோராறு" என்ற திருக்குறளின்படி கவருடுவோன் ஒன்றை ஜெயித்து அடுத்த நிமிஷத்திலேயே ஜெயித்ததற்கு நூறுபங்கு அதிகமான பொருளை இழப்பானாதலின் அவனிடம் எவ்வளவு ஐசுவரியங்களிருந்தாலும் அழிந்து போகும். சூதாட்டத்தில் வெற்றி தோல்வியின் பொருட்டு அவ்விளையாட்டை யுடையார், ஒருவரையொருவர் மரியாதை கெடப்பேசியும், அடித்தும் கலகஞ்செய்துகொள்வது இயற்கையாதலின், கவருடுவோனிடத்தில் கௌரவமென்பதேயிராது. சூது, சிநேகிதனுக்கும் வஞ்சனை செய்யச்சொல்லுமாதலின், அதனை யுடையாரிடத்தே சிநேகிதமென்பதேயிராது. இவை தவிர இன்னும் இச்சூதினால் வருங்கேடுகள் பலவுள. அதனாலேயே ஆசிரியர், "'ஒன்றல்ல' என்றார்.

பொருள் பெரும் பான்மையும் கொடைக்கே உரியதாதலின், வண்மைத் திரு' என்று அதனைச் சிறப்பித்தார் ஆசிரியர்.

உருவழிக்கும், உயர்வழிக்கும், திருவழிக்கும், மானஞ் சிதைக்கும், அன்பழிக்கும் என்பன இரண்டாம்வேற்றுமையுருபு தொக்க தொகைகள். ஒருவரோடு என்பதில், 'இடத்தில்' என்னும் ஏழாம்வேற்றுமைச் சொல்லுருபு வரவேண்டிய இடத்தில் 'ஓடு' என்னும் மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு மயங்கிவந்தது; இங்ஙனம் வருவது உருபுமயக்கமெனப்படும். ஒன்றல்ல எதிர்மறை யெச்சம். 'பொருவரோ' என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

இதுவுமது.

210. ஆயம் பிடித்தாரு மல்லற் பொதுமகளிர்
நேயம் பிடித்தாரு நெஞ்சிடையே—மாயம்
பிடித்தாரின் வேறல்ல ரென்றுரைப்ப தன்றே
வடித்தாரின் னூலோர் வழக்கு.

(இ-ள்.) ஆயம்-(சூதாடு கருவியாகிய) பாச்சிகையை, பிடித்தாரும்-(சூது விளையாடும் பொருட்டுக் கையில்) பிடித்தவர்களும், அல்லல் துன்பத்தை யுடைய, பொதுமகளிர்-தாசிகளுடைய, நேயம் - உறவை, பிடித்தாரும்-பற்றினவர்களும், நெஞ்சிடை-மனதில், மாயம் - வஞ்சகத்தை, பிடித்தாரின்-கொண்டவர்களினின்றும், வேறு அல்லர்-வேறாக மாட்டார்கள், என்று-என்பதாக விளக்கி, வடித்தார்-(நன்மை தீமைகளை ஆராய்ந்து தீமையைத் தள்ளி நன்மையைத்) தேர்ந்தெடுத்த மேலோர்களுடைய, இன்-இனிமையான, நூலோர்-சாஸ்திரங்களைக் கற்றவர்களின், வழக்கு - பேச்சானது, உரைப்பது அன்றே-சொல்லுகிறதல்லவா? (ஆதலின் சூது கூடாது;) [எ-று.]

மனதில் வஞ்சனையுள்ளவர்கள், பிறரைமோசத்திற்குள்ளாக்கி அவர்களுடைய பொருளைக் கவர்தல் முதலிய பாதகங்களைக் கூசாது செய்வர்; இவர்களைப் போலவே கவருட்டத்தில் விருப்ப முடையவர்களும், தாசிகளின் நேயம் பற்றினவர்களும் அவ்வாட்டத்தை நடத்தும் பொருட்டும், தாசிகளை மகிழ்விக்கும் பொருட்டும் பொருள் தேடவேண்டிப் பாதகங்களைச்செய்வர், ஆதலின், இவர் அவருக்கு உவமை கூறப்பட்டார். தாசிகளிடம் சேர்வார்க்குத் துன்பமே விளைதல் இயற்கை யாதலின், 'அல்லற் பொது மகளிர்' என்றார் ஆசிரியர். இதற்கு 'அல்லலுக்குக் காரணமாகிய பொதுமகளிர்' என்று பொருள் விரிக்கவேண்டும். "வடித்தாரின் நூலோர்வழக்கு, ஆயம்பிடித்தாரும் 'அல்லற் பொது மகளிர் நேயம் பிடித்தாரும் நெஞ்சிடையே மாயம் பிடித்தாரின் வேறல்லர் என்றுரைப்பது ஆதலின், சூதை விரும்பலாகாது" என்பது இச்செய்யுட் பொருளாம்.

ஆயம்-சூதாடுகருவி. நெஞ்சிடையே என்பதில், ஏ-அசை, 'மாயம் பிடித்தாரின் வேறல்லர்' என்றதனால் 'அவர்களோடு சேர்ந்தவர்களே' என்பது

பெறப்படும். பிடித்தாரின் என்பதில், இன்-ஐந்தாம் வேற்றுமை நீக்கப்பொருளது. அன்றே வினைப்பொருளைத் தரும் ஒரு வகை இடைச்சொல்.

இதுவுமது.

211. அறத்தைவேர் கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து.

[இ-ள்.] (இன்னும் அந்தச் சூதானது) அறத்தை-தர்மத்தை, வேர் கல்லும்-வேரைப்பெயர்க்கும், அருநரகில் - சேர்தற் கருமையான நரகத்தில், சேர்க்கும்-(தன்னை ஆடுவோரைக் கொண்டுபோய்ச்) சேர்த்து விடும், திறத்தையே கொண்டு-வலிமையையே அடைந்து, அருளை-(தன்னை விரும்புவோரிடத்திலிருக்கும்) கிருபையை, தேய்க்கும்-நாசப்படுத்திவிடும், மறத்தையே-கோபத்தையே, பூண்டு-பெற்று, விரோதம்-பகையை, செய்யும்-(தன்னைக் கொள்வோரிடத்தே) உண்டாக்கி விடும், (இத்தகைய) பொய்சசூதை-பொய் நிறைந்த சூதாட்டத்தை, மிக்கோர்கள்-உயர்ந்தவர்கள், தெரிந்து-அறிந்திருந்தும், தீண்டுவரோ-தொடுவார்களோ? (தொடமாட்டார்கள்) என்றார்-என்று சொன்னார்கள்; [எ-று]

'காதல் கவறாடல் என்ற 208-ஆம் செய்யுளிலிருந்து, 'மந்திரி முதலானோர் என்னும் தோன்றா எழுவாய் கூட்டி' இச்செய்யுளிற் கொண்டு வந்து 'தீண்டுவரோ என்றார்' என்பதனோடு முடித்துக் கொள்ள வேண்டும். இச்செய்யுள் முன் அச்சுப் புத்தகங்களில் 200-ஆம் செய்யுளாகச் சேர்க்கப்பட்டிருந்த தெனினும், பொருண் முடிபிற்குத் தக்கபடி அதனை இங்கு மாற்றிச் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

சூதாடுவோரிடத்தில் தரும சிந்தனையே இராது; அதற்குப் பொருள் தேடும் பொருட்டுப் பொய், களவு, கொலை, முதலிய பாதகத் தொழில்களையெல்லாம் அவர்கள் செய்வார்கள்; அதனால் அவர்களுக்கு நரகஞ்சித்திக்கும். இன்னும் சூதாடுவோர்க்குக் கிருபை யென்பதே இராது; ஏனெனில் தோற்றுப்போனவர், கையிலொன்று மில்லாமற் கலங்கினாலும் அவர்களிடம் ஜெயங்கொண்டோர், தாம் ஜெயித்த பணத்தை வாங்குதற்கு அவர்களைப் பலவாறு துன்பப்படுத்தும் சுபாவம் இவர்களுக்குண் டென்க. இங்ஙனம் அருளில்லாமற் போகவே இவர்க்குப் பலபேரிடத்திலும் விரோதமே அதிகரித்திருக்கும். ஆதலால், இத்தகைய சூதைத்தக்கோர் விரும்பார் என்க. சூதில் பொய்யே அதிகரித்திருக்குமாதலின், அதனை, "பொய்ச்சூது' என்றார், ஆசிரியர். இன்னும் அதனைக் கையினாலும் தொடக்கூடா தென்பது தோன்ற அதன் இயற்கையை விளக்க, 'தீண்டுவரோ' என்றுங் கூறினார்.

'அறத்தை வேர்கல்லும்' என்ற தொடர் இரண்டாம் வேற்றுமை ஈருரு பேற்று வந்தது, 'பசுவைப் பாலைக்கறந்தான்' என்பதுபோல், 'அருநாகு' என்பதில் அருமை-சேராத்தகாத என்னும் பொருளில்நின்றது. நீண்டுவரோ என்பதில் ஓகாரம்-எதிர்மறைப் பொருளது.

நளன் மந்திரிகளின் சொல்லைத்
தடுத்துரைத்தல்.

212. தீது வருக நலம்வருக சிந்தையாற்
சூது பொரவிசைந்து சொல்லினேம்—யாதும்
விலக்கலிர்நீ ரென்றான் வராலேற மேதி
கலிக்கலைநீர் நாடன் கனன்று.

[இ-ள்.] (மேற்கூறியபடி மந்திரி முதலியோர் சொல்லக் கேட்டு) வரால் வரால்மீன்களை, ஏற மேலேறிப் பாய்வதனாலே, மேதி-எருமைகள், (பயந்தெழுந்து) கலக்கு-கலக்குகின்ற, அலை-அலைகளையுடைய, நீர்-நீர்வளம் மிகுந்த, நாடன் நிடதநாட்டையுடைய நளமகாராஜன், கனன்று-(அவர்களைக்) கோபித்து, தீதுவருக (சூதினால்) தீமையே வரட்டும், (அல்லது) நலம் வருக-நன்மையே வரட்டும், (இனி என்ன வந்தாலும் எனக்கது சம்மதமே) சிந்தையால்-மனதினால், சூது-சூதில், பொர-(அவனுடன்) எதிர்ப்பதற்கு, இசைந்து-(நாம்) சம்மதித்து, சொல்லினேம்-(சூது விளையாட வருவதாக) உரைத்தோம், (ஆதலின், நாம்அந்த வார்த்தையினின்றும்பிசகமாட்டோம்; இனி) நீர்-நீங்கள், யாதும்-(என்னுடைய வார்த்தைகளில்) எதையும், விலக்கலீர்-தடுக்காதீர்கள், என்றான்-என்று கூறினான்; [எ-று.]

மந்திரி முதலியோர், சூதாடக் கூடாதென்று தடுத்துரைக்கக் கேட்ட நளன், தன்னுடைய கெட்ட காலத்தால் அவர்களின் சொல்லைக் கேளாமல் அவர்களைக் கோபித்து நோக்கி, 'இதனால் நன்மைவரினும் சரி, தீமைவரினும் சரி; நான் முன்னே இவனுடன் சூதாட வருவதாக ஒப்புக்கொண்டுவிட்டேன்; ஆதலின், இனி, வாக்குத் தவறி அதனைத் தவிர்க்க மாட்டேன்; நீங்கள் இப்போது நான் செய்யும் எதையும் தடுக்க வேண்டாம்" என்று கூறினான் என்பது இதன் கருத்து. இனி, நளன், சத்தியந்தவறாத உத்தமனாதலின், தான் சொன்ன வாக்குத் தவறக் கூடாதென்று இங்ஙனம் தடுத்துரைத்தான் எனினுமாம். சத்திய முடையார் எதுவரினும் சொன்ன வாக்கை நிறைவேற்றுவதில் நோக்கமுடையவர்களா யிருத்தல் இயற்கை. அதனால் நளன், 'தீது வருக, நலம் வருக' என்று கூறினான்.

சொல்லினேம்-தன்மைப் பன்மை வினைமுற்று. யாதும்-என்பது சிறிதும் என்னும் பொருளில் நின்றது. விலக்கலீர்-எதிர்மறை ஏவற் பன்மை வினைமுற்று; விலக்கு பகுதி, அல்- (எதிர்மறை) இடைநிலை, இர்-விகுதி.

புஷ்கரன் சூதாட்டத்திற்குப் பந்தயங் கேட்டல்.

213. நிறையில் கவறாட நினைந்தா யாகில்
திறையிற் கதிர்முத்தஞ் சிந்தும்—துறையில்
கரும்பொடிய மள்ளர் கடாவடிக்கு நாடா
பொரும்படியா தென்றானிப் போது.

[இ-ள்] (அங்ஙனம், நளன், மந்திரிகளின் சொல்லைத் தடுத்துச் சூதாட்டத்திற்குத் துணியவே புட்கரன் அவனை நோக்கி) திறைஇல்-விலையில்லாத, கதிர்-பிரகாசம் பொருந்திய, முத்தம்-முத்துக்களை, சிந்தும்-சிதறுகிற துறையில்-நீர்த்துறையிலே, மள்ளர்-உழவர்கள், கரும்பு-கரும்பை, ஒடியா-ஒடித்து கடா-எருமைக் கடாக்களை, அடிக்கும்-அடித்து ஓட்டுகிற, நாடா-நாட்டையுடைய நளமகாராஜனே! நிறை இல் எல்லையில்லாத, கவறு ஆடல்-சூதாடுவதை, நீ நினைத்தாயாகில்-நீ அப்படிஎண்ணினையாயின், இப்போது இத்தருணத்தில், பொரும்படி சூதாட்டத்தில் எதிர்க்கும்படியான பணயம், யாது என்றான்- எது என்று வினவினான்; [எ-று.]

மந்திரிகளின் சொல்லை நளன் அவ்வாறு தடுத்துக் கூறிச் சூதாட்டத்தில் துணிவுடையவனா யிருக்கவே, புஷ்கரன் அவனுடைய நோக்கத்தை யுணர்ந்து அவனைப் பார்த்து, "அப்படி நீ கவறாட நினைந்தாயாகில் அதற்கு வைக்கும் பந்தயம் யாது" என்று வினவினான் என்பது இதன் கருத்து. சூதாட்டத்தில் பொய்யே மிகுந்திருக்குமாதலின் 'நிறையில் சவறு' என்று இருபொருள்தரக் கூறினார். நீர்த்துறையில் சங்கீன்ற முத்துக்கள் முதலியவை சிதறுமாதலின் அங்கே முத்துச்சிதறுதல் கூறப்பட்டது. பெரும்பாலும் எருமைக் கடாக்கள் நீரிலேயே சஞ்சரிக்கும்; உழவின் பொருட்டுஅவற்றை ஓட்டும் மள்ளர்கள், பக்கத்துவயல்களிலுள்ள கரும்புகளை யொடித்து அவற்றாலடித்து நீர்த்துறைகளின் வழியாக ஓட்டுவார்கள். உயர்ந்த கரும்பையும் ஒடித்து அவற்றால் எருமைக் கடாக்களை அடித்தோட்டுவார் மள்ளர் என்றமையால் அந்நாட்டின் மருதநிலவளம் மிக்கதென்பது தானே போதரும்.

ஒடியா-செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். படி யென்பது விதத்திற்குரிய பொருளின் மேல் நின்றது இலக்கணை.

நளனும் புஷ்கரனும் பந்தயம் வைத்தல்.

214. விட்டொளிர்வில் வீசி விளங்குமணிப் பூணாரம்
ஒட்டினே னுன்பணைய மோதென்ன—மட்டவிழ்தார்
மல்லேற்ற தோளானும் வான்பணைய மாகத்தன்
கொல்லேற்றை வைத்தான் குறித்து.

[இ-ள்.] (அவ்வாறு கேட்டவுடனே நளன் புஷ்கரனை நோக்கி) விட்டு-இடைவிட்டு, ஒளிர்-பிரகாசிக்கின்ற, வில்-ஒளியை, வீசி-பரப்பி, விளங்கும்-

தெரிகின்ற மணி-இரத்தினங்களா லாகிய, பூண் ஆரம்-ஆபரணமாகிய மாலையை, ஒட்டினேன்-பந்தயமாகச் சேர்த்தேன், உன்பணையம்-உன்னுடைய பந்தயத்தை, ஓது-நீ சொல்வாயாக, என்ன-என்று கூற, மட்டு அவிழ்-தேன் சொரிகின்ற, தார்-மாலையை யணிந்தவைகளும், மல் ஏற்ற-மல் யுத்தத்தைப் பொருந்தியவைகளுமான, தோளானும்-தோள்களையுடைய புஷ்கரனும், தன்-தன்னுடைய, கொல் ஏற்றை-பகைவரைக் கொல்லுந் திறமுள்ள எருதை, வான்-சிறந்த, பணையம் ஆக-பந்தயமாக, குறித்து-குறிப்பிட்டு (அதாவது காட்டி) வைத்தான்-முன்னே சேர்த்தான்; [எ-று.]

புஷ்கரன் அவ்வாறு கேட்டவுடனே நளன் தன்னுடைய இரத்தின ஹாரத்தைப் பந்தயமாக வைத்து, 'என்பணையத்திற்கு நான் இதனை வைத்தேன்; உன்னுடைய பந்தயம் யாது?' என்று வினவ, அவன் தன்னுடைய எருதைப் பந்தயமாக வைத்தான் என்பது இதன் கருத்து. உயர்ந்த பிரகாசம் அடிக்கடி அதிகரித்தும் குறைந்தும் ஒளிக்கும்; அதுவே இடை விட்டுப் பிரகாசித்தலாம். 'பூணாரம்' என்பதற்கு, 'பூணத்தக்க ஆரம்' எனவும் பொருள் கூறலாம். ஒட்டுதலாவது பொருந்த வைத்தல், 'மட்டவிழ்' என்பதற்கு, 'வாசனை விரிந்த' எனவும் பொருள் கூறலாம். அரசர் முதலிய வீரர்களுடைய தோள், மல்யுத்தஞ் செய்வதற்குரிய தாதலின், இங்குப் புஷ்கரனை, 'மல்லேற்றதோளான்' என்றார் ஆசிரியர். "மல்லேற்ற தோளான் வான்பணைய மாகத்தன், கொல்லேற்றை வைத்தான் குறித்து" என்றதனால் நளன் வைத்த பந்தயத்தினும் புஷ்கரன் வைத்த பந்தயம் மேலான தென்பது பெறப்படும். நளன் தான் வைக்கும் அதிகப் பந்தயத்தைப் பார்த்து ஆத்திரங்கொண்டு அடுத்த முறைகளில் அளவற்ற பொருள்களைப் பந்தயம்வைக்கும்பொருட்டே புஷ்கரன் இவ்வாறு முதலிலேயே உயர்ந்த பணையம் வைத்தானென்க. எவ்வளவு பந்தயம் வைத்தாலும் கலியின் உதவியால் தனக்கே ஜெயங்கிடைக்குமென்னும் உறுதி புஷ்கரனுக் கேற்பட்டிருந்தமையின் அவன் இவ்வாறு பெரிய பந்தயம் வைத்தா னெனினும் பொருந்தும்.

விட்டு-வினையெச்சம், ஒளிர்-பெயரெச்சம். வீசி-வினையெச்சம், விளங்கும் பெயரெச்சம். ஒட்டினேன்-தன்மையொருமை வினைமுற்று. அவிழ்தார்-வினைத்தொகை. தோளானும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியஎச்சப்பொருளது. குறித்தல்-சுட்டிக் காட்டுதல்.

### கலியின் உதவியால் பாச்சிகை, புஷ்கரனுக்கு ஜெயமாகப் புரளுதல்.

215\. காரேயுங் கூந்தலார் காரிகைமேற் காதலித்த
தாரேயுந் தோளான் தனிமனம்போல்—நேரே
தவறாய்ப் புரண்ட தமயனொடுங் கூடிக்
கவறாய்ப் புரண்டான் கலி.

(இ-ள்.) (இவ்வாறு பந்தயம் வைத்து இருவரும் சொக்கட்டான் ஆடிய போது) கார்எயும்-மேகத்தை நிகர்த்த, கூந்தல், ஆர்-குழல் பொருந்திய காரிகைமேல்-அழகு பொருந்திய தமயந்தியின்மேல், காதலித்த-ஆசைகொண்ட, தார் எயும் - மாலைபொருந்திய, தோளான் - புயங்களையுடைய நளனது, தனிமனம்போல்-ஒன்றியான மனதைப் போல, நேரே - எல்லோருக்கும் முன்னிலையில், தவறாய்-தப்பாக, புரண்ட-நீதியைவிட்டுப் பிசகிய, (அதாவது நீதியைவிட்டுத் தவறிச் சூதாட்டத்தில் ஒழுங்கீனமான காரியத்தைச் செய்த) தமையனோடும்-(நளனுக்குத்) தமையன் முறைக்காரனாகிய புட்கரனுடனே, கூடி-சேர்ந்துகொண்டு, கலி - கலிபுருஷனானவன், (அவன் புரட்டுக்குத் தகுந்த) தவறாய் - பாச்சிகையாகி, புரண்டான் - அவனுக்கு ஜெயமுண்டாகும்படியே) உருண்டு ஜெயத்தை உண்டாக்கினான், எ-று.

நளனுடைய மனம், இப்போது சூதாடக்கூடாதென்ற நீதியை விட்டுப் புரண்டபடியால், அது புஷ்கரனுடைய புரட்டான செய்கைக்கு உவமை கூறப்பட்டது. நளன் மனம், மந்திரி முதலியவர்களின் சொல்லைக் கேளாமல் தன் இச்சைபோலச் சென்றபடியால் அது, 'தனிமனம்' என்று சொல்லப் பட்டது. பொய்நிறைந்த சூதாட்டத்திற்குத் தகுந்தபடி புஷ்கரன், எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவர்கட்கு முன்னிலையிலேயே, விருத்தம் (பாச்சிகைப்புரட்டில் காணப்படும் தொகை) ஒன்றுவீழ அதனை வேறொன்றாகக் கூறுதல், கட்டங்களை மாற்றுதல் முதலிய புரட்டுக்களைச் செய்தவனாதலின், 'நேரே தவறாய்ப் புரண்ட தமையன்' என்றார் ஆசிரியர். இப்படி அவன் தவறு செய்பவனாயிருந்தும் மேலும் அவனுக்கு ஜெயமாகவே பாச்சிகை புரளும்படி கலிபுருஷன்தானும் அதிலேறிப் புரட்டிவிட்டான். இதுபற்றியே ஆசிரியர், 'தவறாய்ப்புரண்டான் கலி' என்றுங் கூறினார். இங்ஙனம் கலி புரண்டான் எனவே நளன் வைத்த பந்தயத்தைப் புஷ்கரன் ஜெயித்துக் கொண்டான் என்பது பெறும்.

'நேரே தவறாய்' என்பதற்கு, 'நேர் மாறாக' என்றும் பொருள் கூறலாம். தவறாய்-என்பதில் ஆகவென்னும் செயவனெச்சம், ஆகியென்னும் செய்தனெச்சமாய்த் திரிந்து வந்தது. தமையனோடும் என்பதிலுள்ள உம்மை-அசைநிறைப் பொருளது. காரேயும் என்பதற்கு, கரிய நிறம் பொருந்திய எனப் பொருள் கூறினும் அமையும்.

### நளன் வேறு பொருள்களைப் பந்தயமாக வைத்துத் தோற்றல்.

216. வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்
கொத்த பணைய மூரையென்ன—வைத்தநிதி
நூறா யிரத்திரட்டி நூறுநூ றாயிரமும்
வேறாகத் தோற்றானவ் வேந்து.

(இ-ள்.) மேற் கூறியபடி புஷ்கரன் நளனிடத்தே முதற்பந்தயப் பொருளை ஜெயித்துக் கொண்டபின் நளனைப்பார்த்து) வைத்த ‡ பந்தயமாகச் சேர்த்த, மணிஆரம்-இரத்தினமாலையை, வென்றேன் - (நான்) ஜெயித்துக் கொண்டேன், (ஆதலின், இனி) மறுபலகைக்கு-பலகையிலாடப்படும் மற்றொரு விளையாட்டிற்கு, ஒத்த-பொருத்தமான, (அதாவது வைக்கத்தக்க) பணயம்-பந்தயப்பொருளை, உரை-சொல்லுவாயாக, என்ன-என்றுசொல்ல, அவ்வேந்து-அந்நள மகாராஜன், வேறாக முன்வைத்த பொருளினின்றும் வேறாக, (சிற்சில திரவியங்களை வைத்தான்; அப்படி) வைத்தநிதி-பந்தயமாகச் சேர்த்த பொருள், நூறாயிரத்து இரட்டி-இரண்டு நூறாயிரத்தையும், நூறுநூறாயிரமும்-கோடியையும் (அதாவது நூறு இலட்சத்தையும்) தோற்றான்-பந்தயம் வைத்து ஆடித் தோற்று விட்டான்; [எ-று.]

முன்னே வைத்த இரதநின ஹாரத்தைத் தோற்றபின், புஷ்கரன் பந்தயங்கேட்டதற் கிசைந்து நளன் மேலும் வேறாக இரண்டு விதமான தொகைப் பொருள்களைப் பந்தயம் வைத்துத்தோற்றானென்பது இதன் கருத்து. நூறாயிரம்-இலட்சம்; நூறாயிரத்து இரட்டி-இரண்டு இலட்சம். நூறு நூறாயிரம்-நூறு இலட்சம்; அதாவது ஒரு கோடி. முன்வைத்த பொருளினின்றும் வேறாக இரண்டு லட்சம் பொன்னையும், ஒரு கோடிப் பொன்னையும் இரண்டு விதப் பந்தயமாக வைத்தாடி நளன் தோற்று விட்டானென்க.

பலகை-சொக்கட்டாளுடுங் கோடுகள் எழுதப் பட்ட பலகை. இஃது ஆகுபெயராய் அதிலாடப்படும் விளையாட்டை யுணர்த்திற்று 'சிற்சில திரவியங்களை வைத்தான்' என்பது இசை யெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. நூறாயிரத் திரட்டி என்பதில் எண்ணும்மை தொக்கது.

இதுவுமது.

217. பல்லா யிரம்பரியும் பத்துநூ றாயிரத்துச்
சொல்லார் மணித்தேருந் தோற்றதற்பின்—வில்லாட்கள்
முன்றோற்று வானின் முகிறோற்கு மால்யானை
பின்றோற்றுத் தோற்றான் பிடி.

(இ-ள்.) பின்னும் அந்நளன்) பல்லாயிரம்-அனேகம் ஆயிரமாகிய, பரியும் குதிரைகளையும், பத்துநூறாயிரம்-பத்துலட்சம், சொல்ஆர்-புகழ் பொருந்திய, மணித்தேரும்-அழகிய இரதங்களையும், தோற்றதன்பின்-தோற்றபிறகு, வில்-வில்லைக் கரத்திற் பிடித்தவர்களாகிய, ஆட்கள் - காலாட்களையும். முன்தோற்று-முன்னேதோற்று, வானில்-ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற, முகில்-மேகங்கள், தோற்கும்-(நிறத்தால்) தோல்வி யடையும்படியான; (கரியநிறத்தையுடைய,) மால்-பெரிய, யானை-ஆண் யானைகளை, பின்தோற்று-அதற்குப் பின்தோற்றுவிட்டு, (அதன் மேல்) பிடி-பெட்டை யானைகளை, தோற்றான்-பந்தயமாக வைத்து ஆடித் தோற்றுவிட்டான்; [எ-று.]

மூன் பாட்டிற் கூறியபடி நளன் பல்வேறு வகையாக வைத்த நிதிகளை யெல்லாம் தோற்றபின், 'மேலும் பல்லாயிரக் கணக்கான குதிரைகளையும், பத்தி லட்சம் இரதங்களையும் தோற்றுப் பின்னர் காலாட்களையும் தோற்று, அதன்மேல் ஆண்யானைகளைத் தோற்றுப் பின்பு பெட்டை யானைகளையும் தோற்றான் என்பது இதன் கருத்து. இதனால், இரதம், கஜம், துரகம், பதாதி என்னும் நால்வகைச் சேனைகளையும் நளன் தோற்றானென்பது பெறப்படும். இவற்றை நளன் ஒன்றன்பின் ஒன்றாக ஒவ்வொரு ஆட்டத்திலும் பந்தயம் வைத்துத் தோற்றான் என்க. இவ்வாறு தோற்பதற்குப்பல ஆட்டங்கள் நிகழ்ந்தன வென்க. மணித்தேர்-என்பதற்கு இரத்தினத்தினால் செதுக்கப் பட்ட தேர் எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

சொல்-வார்த்தை; அஃதிங்குப் புகழ்மேனின்றது. மால்-கருமையெனினுமாம். மூன் பாட்டிலுள்ள வேந்து என்பதே இதற்கும் எழுவாயாம்.

## நளன் பணிப்பெண்களைத் தோற்றல்.

218. சாதுரங்கம் வென்றேன் தரும்பணைய மேதென்ன
மாதுரங்கம் பூணு மணித்தேரான்—சூதரங்கில் [குழற்
பாவையரைச் செவ்வழியாழ்ப் பண்ணின்மொழிப் பின்னு
பூவையரைத் தோற்றான் பொருது.

[இ-ள்.] (மேற்கூறியபடி நளன் நால்வகைச் சேனைகளையும் தோற்ற பின்னர் புஷ்கரன் அவனை நோக்கி) சாதுரங்கம்-நான்கு பகுப்புக்களாகிய சேனைகளையும், வென்றேன்-நான் ஜயித்துக் கொண்டேன், (இனி அடுத்த ஆட்டத்திற்கு) தரும் கொடுக்கத்தக்க, பணையம்-பந்தயப் பொருள், எது என்ன-யாதென்று வினவ, மா சிறந்த, துரங்கம் குதிரைகளை, பூணும்-பூட்டிச் செலுத்தத் தக்க, மணி-இரத்தினங்கள் பதித்த, தேரான் - தேரையுடைய நளன், சூது அரங்கில்-கவறாடுகின்றசபையில், பொருது-மேலும் புஷ்கரனோடு கவறாட்டத்தில்) எதிர்த்து, (பந்தயமாக வைத்து) பாவையரை-சித்திரப்பதுமை போன்றவராகிய பெண்களை, செவ்வழி-நெய்தனிலத்திராகத்தையுடைய, யாழ்-வீணையிலுண்டாகின்ற, பண்ணின்-பாட்டை நிகர்த்த, மொழி-வார்த்தைகளையும், பின்னுகுழல்-பின்னிவிடப் பட்டிருக்கும் கூந்தலையும் (உடைய), பூவையரை-நாகணவாய்ப் புள்போன்ற பெண்களை, தோற்றான்-தோற்றுவிட்டான்; [எ-று.]

மேற் கூறியபடி நளன் சதுரங்க சேனைகளையும் தோற்றபின்பு, புஷ்கரன் மேலும் அவனை நோக்கி, அடுத்த ஆட்டத்திற்குப் பந்தயமேது' என்ன, அந்நளன், இனிமையான குரலையுடைய அடிமைப் பெண்களைப் பந்தயமாக வைத்தாடித்தோற்றானென்பது இதன் கருத்து. "பண்ணின் மொழிப்பின்னு குழல் பூவையர்" என்றதனால் இங்குக் கூறிய பெண்கள் கீதசாஸ்திரமுறைப் படி இனிய பாடல்களைப் பாடும் பணிப்பெண்க ளென்பது பெறப்படும்.

சதுரங்கம் என்பது சாதுரங்கம் என முதல் நீண்டது. சதுரங்கம்-நான்குவகை; இஃதாகு பெயராய் நான்கு பகுப்பான சேனைகளை யுணர்த்திற்று. நால்வகைச் சேனைகளாவன:—யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை காலாட்படை என்பனவாம்; காலாள்-வாகனத்திலேறாமல் காலால் நடந்து யுத்தஞ் செய்யக் கூடியவீரர்கள். பணயம்-பந்தயம்; அஃதாகு பெயராய்ப் பந்தயத்திற் குரிய பொருளை யுணர்த்தும். பாவையரை, பூவையரை என்பன ஒருபொருள் குறித்த பல பெயர்கள்; இரண்டும் பெண்களைக்குறித்தே வந்தன. பாவை-வடிவம் பற்றிவந்த உவமை பூவை-சொல்லோசை குறித்து வந்த உவமை. செவ்வழி-நெய்தனிலத்திராகம்; அது மற்றப் பண்களினும் மிக இனிமையுடையதாதலின், மிக்க இனிய குரலையுடைய பெண்களின் மொழிக்குவமை கூறப்பட்டது; இதனானே அப்பெண்கள் இனிய குரலாரென்பது பெறப்படும். பாவையரை பூவையரை என்ற தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகையுமாம்; பாவையராகிய பூவையரை என விரியும். ஏது-என்பதில் ஏ-முதலில் விகாரமாயிற்று, "ஏ யிருவழியும்" என்றதனால். பின்னுகுழல்-வினைத்தொகை. 'தோற்றான் பொருது' என்பது, 'பொருது தோற்றான்' என மாற்றிக்கொள்ளப் பட்டது. தோற்றான் படர்க்கையொருமைவினைமுற்று, பண்ணின் என்பதில் இன்-உவமையுருபு.

இதில் நளனுடைய செல்வமெல்லாம் புஷ்கரனைச்
சேர்ந்தமை கூறப்படுகின்றது.

219. கற்பின் மகளிர்பா னின்றுந் தமைக்கவட்டின்
விற்கு மகளிர்பான் மீண்டாற்போல்—நிற்கும்
நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தாள் திரு.

[இ-ள்.] (மேற்கூறிய விதமாக நளன் எல்லாவற்றையும் தோற்றபின்பு) கற்பின்-பதிவிரதா தருமத்தையுடைய, மகளிர்பால் நின்றும்-பெண்களினிடத்தி லிருந்தும், (அதாவது அவர்களை விட்டு) தமை-தங்களை, கவட்டின்-வஞ்சனையினாலே, விற்கும் (பணங்கொடுப்பார்க்குப் பொய்யாக) விலைப்படுத்துகின்ற, மகளிர்பால்-விலைமாதர்களிடத்தில், மீண்டாற் போல்-(அப்பதிவிரதைகளின் நாயகர்கள்) திரும்பிப் போய்ச் சேர்ந்தாற் போல, நிற்கும்-நிலைபெற்ற, நெறியானை-நல்லொழுக்க முடையவனை, மெய்ம்மை வாய்-சத்தியத்தினிடத்தே, நின்றானை-நிலை பெற்றிருந்தவனாகிய நளனை, நீங்கி - விட்டுப் பிரிந்து, திரு-இலக்குமியானவள், சிறியானை-அற்பனாகிய புஷ்கரனை, சேர்ந்தாள்-அடைந்தாள்; [எ-று.]

நளன் தன்னிடமிருந்த பொருள்களை யெல்லாம் தோற்றபின், அவனிட மிருந்த செல்வமானது, ஒரு பதிவிரதையினிடத்தே சேர்ந்திருந்த நாயகன் அவளை விட்டுப் பரத்தையிடம் சேர்ந்ததுபோல மிகுந்த சத்திய சீலனாகிய அந்நளனை விட்டு அற்பனாகிய புஷ்கரனிடம் சேர்ந்ததென்பது இதன் கருத்து. 'மீண்டாற் போல்' என்றதால் அந்நாயகன் முன்னே பரத்

தையிடம் சேர்ந்திருந்து அவள் சேர்க்கை கெட்டதென வுணர்ந்து அதன் காரணமாக அவளை விட்டுப் பதிவிரதையினிடம் சேர்ந்திருந்தவன், முன்னே பரத்தை கெட்டவளென உணர்ந்திருந்தும் அதனை மறந்து பதிவிரதையைப் பிரிந்து மீண்டும் அவளிடத்தே சேர்ந்தா னென்பதும் பெறப்படும். இதனானே அந்நாயகனிடத்தே ஓரிழிவைக் கற்பித்ததாம். "அருட் செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட் செல்வம், பூரியார் கண்ணு முள" என்றபடி ஐசுவரியம் கீழ்மக்க ளிடத்தும் சேர்ந்திருக்கத்தக்கது. அப்படியிருக்கும் அது, உத்தமனாகிய நளனிடத்துச சேர்ந்திருந்தும் அவ்வயர்வைக் கருதாமல் மீண்டும் அற்பனாகிய புஷ்கரனிடத்திற் சேர்ந்தது. ஆதவின், இது மேற்கூறிய படி பதிவிரதையை விட்டுப் பரத்தையிடம் சேர்ந்த நாயகனுக்கு உவமை கூறப்பட்டது. இதனானே ஐசுவரியம் நிலையற்றதென்பதும், உயர்வு தாழ்வு அறியாத தென்பதும் ஆதலின், அதனை அறிஞர் உலகத்தில் பெரிதாகக் கருதலாகா தென்பதும் பெறப்படும். இனி, "கற்பின் மகளிர்பா னின்றுந் தமைக்கவட்டின் விற்கு மகளிர்பான் மீண்டாற்போல்" என்பதற்குச் 'செல்வமானது பதிவிரதைகளை விட்டுப் பரத்தையரைச் சேர்ந்தாற்போல்' என்று பொருள் கூறினும் அமையும்; பெரும்பாலும் பரத்தையர்போல் ஒழுக்கங் கெட்டவரிடத்தே பொருள் மிகுந்து சேரலும், பதிவிரதைகள் போன்ற ஒழுக்கமுள்ளவ ரிடத்தே வறுமை அதிகரித்தலும் உலகவியற்கை யாதலின், இஃதொரு வகையிற் பொருந்து மென்க. எனினும், இது அச்செல்வத்திற்கு இழிகுணமே யாதலின், இசசெய்கை இங்கு தாழ்ந்த குணத்திற்கே உவமை கூறப்பட்டது. பரத்தையர் ஒரு நாளைக்கு ஒருவரிடத்தே பணம் வாங்கித் தேகத்தை விற்றாலும் மெய்யன்போடு அதனை அவர்க்கு உரிமையாகச செய்யமாட்டார்; உரிமை செய்வது போல் நடித்து அவர்களிடம் பொருள் கவர்வார்; ஆதலின், அவரைக் 'கவட்டின் விற்கும் மகளிர்' என்றார் ஆசிரியர்.

கற்பின் மகளிர் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் றொக்கதொகை. பால்-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. நின்று-ஐந்தாம் வேற்றுமைநீக்கப் பொருளில் வந்த சொல்லுருபு. நின்றும் என்பதிலுள்ள உம்மை-அசை. கவடு கவர், அதாவது இருபிரிவானது; ஆதலின் அஃதிங்கே அதைப் போல ஒரு நிலையின்றிப் பல விகற்பமாம் செயலுக்கு வந்தது; தாசிகள் மனம் ஒரே நிலையில் நில்லாதது. விற்கும்-பெயரெச்சம். நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை-இருபெயரொட்டுப் பண்பு; 'நெறியானாகிய மெய்ம்மை வாய் நின்றவனை' என விரியும். வாய்-ஏழனுருபு நெறியான், சிறியான் என்பன பண்புப் பெயர்கள் நின்றான்-வினையாலணையும் பெயர். நெறியானை, நின்றானை, சிறியானை என்பன இரண்டாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்கள். நீங்கி-வினையெச்சம். சேர்ந்தாள் - உயர்திணைப் பெண்பா லொருமை வினைமுற்று. இலக்குமியே பொருளுக்கு அதி தேவதையாதலின் இங்கே திருவென்னுஞ் சொல் ஐசுவரியத்தை யுணர்த்தும். ஐசுவரியத்தின் செய்கையை இலக்குமியின் செயலாகவே கூறுதல் இயல்பு.

புஷ்கரன், நளனிடத்தில், தமயந்தியைப் பந்தய
மாக வைக்கச் சொல்லல்.

220. மனைக்குரியா ரன்றே வருந்துயரந் தீர்ப்பார்
சினைச்சங்கின் வெண்டலையைத் தேனால்—நனைக்கும்
குவளைப் பணைப்பைந்தாட் குண்டுநீர் நாடா
இவளைப் பணயந்தா வின்று.

[இ-ள்.] (இவ்வாறு நளனுடைய ஐசுவரிய முழுதும் புஷ்கரனிடத்திற் சேர்ந்தபின் அவன் நளனை அவமானப் படுத்தக்கருதி அவனை நோக்கி) சினைச்சங்கின்-கருக்கொண்ட சங்குகளின், வெண்தலையை-வெண்மையாகிய தலையை, தேனால்-(தன்னிடத்திலிருந்து வடியும்) தேனினாலே, நனைக்கும்-நனைக்கின்ற, குவளை-நீலோற் பலங்களின், பணை-பருத்த, பைந்தாள் பசியதாள்களையுடைய, குண்டு-சிறு குளங்களின், நீர்-நீரையுடைய, நாடா-நிடதநாட்டிற்கதிபதியா யிருந்த நளனே!, (நீ எல்லாவற்றையும் தோற்று விட்டதால் பந்தயத்திற்கு வேறு பொருளில்லை யென்று சஞ்சலப்படுகின்றாய்; உன் கவலையை நீக்கக்கூடிய சிறந்த பொருளொன்று உன்னிடமிருக்கின்றது; அங்ஙன மிருப்ப நீ ஏன் சஞ்சலப்பட வேண்டும்) மனைக்கு - ஒரு புருஷனின் வீட்டிற்கு, உரியார் அன்றே-உரியாராகிய மனைவிய ரல்லவா, (அக்கணவனுக்கு) வரும் துயரம்-வரக்கூடிய துன்பத்தை தீர்ப்பார்-தீர்க்கத் தக்கவர், (ஆதலின்) இன்று-இப்பொழுது, (தமயந்தியைச் சுட்டிக் காட்டி) இவளை-(அப்பேர்ப்பட்ட உன் மனைவியாகிய) இத்தமயந்தியை, பணயம்தா-பந்தயமாக வைத்துக் கொடு, (என்று கூறினான்); [எ-று.]

நளன், எல்லாவற்றையும் தோற்றுவலிமையற்று நின்றானாதலின், 'இனி எதை வேண்டுமானாலும பயமின்றிச் சொல்லலா' மென்று தைரியங்கொண்டு, புஷ்கரன், அவனுக்கு அவமான முண்டாகும்படி இதஞ் சொல்வான் போல பரிகாசமாக அவனை நோக்கி, "எல்லாவற்றினுஞ் சிறந்த பொருளாகிய உன் மனைவியிருக்க நீ ஏன் விசாரப்படுகின்றாய்? ஒரு புருஷனுக்குத் துன்பம் வந்த காலத்தில் அதனை நீக்கத் தகுந்தவள் மனைவியே ஆவள்; ஆதலின், இச்சமயத்தில் அவளைப் பந்தயமாக வை" என்று கூறினானென்க. சூதாடுவோர்க்கு எந்த இழுக்கான வார்த்தையையும் வாய் கூசாமல் பேசுவது இயற்கை யாதலின், இங்ஙனம் புஷ்கரன் நளனிடத்தில் மனைவியைப் பந்தயம் வைக்கும்படி சொல்லத் தகாத வார்த்தையைச் சொன்னான்: அவ்வாறு கூறியதிலும் அவளைப் பந்தயம் வைத்தாடினால் தான் ஜெயித்துக் கொள்வது நிச்சயமாயிருந்தபடியால் 'இவளைப் பணயந்தா' என்றும் கேட்டான். இது 'எல்லாவற்றையும் தோற்ற உனக்கு மனைவி எதற்கு? அவளையும் எனக்குக் கொடுத்து விடு' என்னுங் கருத்தைக் குறிப்பால் உணர்த்தி நின்றது. இந்நிலையில் எவ்வித இழிவான வார்த்தையைக் கூறினும் நளனால் தன்னை ஒன்றுஞ் செய்தல் இயலாதென்பது புஷ்கரனுடைய அபிப்பி

ராயம், சூதாட்டத்தில் புகுவோர் இதினும் கேவலமான நிலைமையை அடைவார்களென்பது இதனால்உணரப்படும். புஷ்கரன் இங்ஙனம்இழிவாகக் கூறினன் எனினும்' 'மனைக்குரியா ரன்றே வருந்துயரந் தீர்ப்பார்' என்றதினால் 'மனைவியர் புருஷரின் இன்பதுன்பங்களைப் பங்கிட்டனுபவிக்கக் கூடியவர்கள்' என்பதும், பதிவிரதைகளின் இலக்ஷணம் இன்னதென்பதும் விளங்கும். இன்னும் புஷ்கரன், நாம் இச்சமயத்தில் குரோதமுண்டாகும் வார்த்தைகளைப் பேசினால் நளன் ஆத்திரங்கொண்டு மனைவியையும் பந்தயம்வைத்தாடுவான்; அப்படியானால் அவளையும்சொந்தமாக்கிக் கொள்ளலாம்" என்று பேராசை கொண்டு இங்ஙனம் உரைத்தானெனினும் அமையும்; சூதாடுவோர் தோற்றகாலத்தில் மனைவியையுங் கூடப் பந்தயம் வைத்தாடுவார்களென்பது உலகறிந்த விஷயம்; அதனால், 'ஒருசமயம் நளன் தமயந்தியையும் வைத்தாடினும் ஆடுவான்' என்னும் நினைப்பும் புஷ்கரன் மனத்தில் உதித்ததனாலும் இங்ஙனம் உரைத்தானென்க. தருமர் சூதாட்டத்தில் திரௌபதியைப் பந்தயமாக வைத்தாடியது உலகப்பிரசித்தம்; ஆதலின், இந்த உறுதி புஷ்கரனுக் கேற்பட்டது என்பது பெறப்படும்.

குவளைகளுக்குப் பக்கத்தில்சினைச்சங்குகள் சஞ்சரிக்கும்போது அக்குவளைகளின் தேன் சிதறி அவற்றின் தலையில் வடியும். பணை-பருமை; இங்கே குவளைத்தாளின் செழிப்பை யுணர்த்த வந்தது. நளன் அசசமயம் நாட்டைத் தோற்றிருந்தா னெனினும் முன் ஆண்டிருந்தமை பற்றிப் புஷ்கரன் இங்ஙனம் அவனைக் 'குண்டு நீர் நாடா' என்று பெயரிட்டுக் கூறினன். அன்றே ஒருவகை வினாவிடைச்சொல்; இவ்வினா உறுதியை விளக்கும். பைந்தாள்-பண்புத்தொகை, இன்று - காலப்பெயர். புஷ்கரன் என்னும் எழுவாயும், என்று சொன்னான் என்னும் பயனிலையும், பிறசொற்களும், பொருண்முடிபுக்குத் தக இதில் இசை யெச்சமாக வருவித்துரைக்கப் பட்டன.

**நளன் சூதாட்டொழிந்து நகரத்தை விட்டு வெளி யேறத்துணிந்து தமயந்தியை அழைத்தல்.**

221. இனிச்சூ தொழிந்தோ மினவண்டு கிண்டிக்
கனிச்சூத வார்பொழிலின் கண்ணே—பனிச்சூதப்
பூப்போ தவிழ்க்கும் புனலுடன் பொன்மகளை
நாம்போது மென்றா னளன்.

(இ-ள்) (புஷ்கரன் இவ்வாறு கூறியவுடனே) நளன் - நளமகாராஜன், (இனிச்சூதாடினால் மிக்க அவமானம் நேரும்' எனக் கருதிச சூதாட்டத்தை விட்டு நீங்கிப் புஷ்கரனோடு ஒன்றும் மறுமொழி சொல்லாமல் தமயந்தியிடம் சென்று அவளை நோக்கி) கனி பழங்களையுடைய,சூதம்-மாமரங்கள்நிறைந்த, வார்-நீண்ட, பொழிலின் கண்ணே-சோலையினிடத்தே,இனம் கூட்டமாகிய வண்டு-வண்டுகள், கிண்டி-குடைந்து கிளறி,பனிச்சு-அசைந்து, ஊத-ஊதுவதனால்,பூ-புஷ்பங்களின், போது-மலரும் பருவத்தரும்புகளை, அவிழ்க்கும்.

கட்டு விட்டுமலரச்செய்கிற, புனல் - நீர்வளம்பொருந்திய, நாடன்-விதர்ப்ப நாட்டுக்கதிபனாகிய வீமராஜனது, பொன்-பொன்னாகிய, மகளே-குமாரத்தியே!, (நாம் கெட்டகாலத்தால் புஷ்கரனோடு சூதாடி எல்லாவற்றையும் தோற்றோம்; மேலே பந்தயம்வைக்கப் பொருளில்லாமையால்) சூது-சூதாட்டத்தை, ஒழிந்தோம்-விட்டு நீங்கினோம், (ஆதலின்) இனி-இனிமேல், (நகரத்திலிருப்பது தகாதாதலின் வேறே எங்கேனும் சேர்வதற்கு) நாம் போதும்-நாம் செல்லுவோம், என்றான்-என்று கூறினான்; [எ-று.]

புஷ்கரன் அவ்வாறு கூறத்தகாத வார்த்தையைக் கூறியவுடனே நளன், மிகவும் வருந்தி, "நாம் மந்திரிகளின் சொல்லையும் தடுத்துச சூதாட்டத்தில் பிரவேசித்ததனால் நமக்கு இக்கதி நேர்ந்தது; புஷ்கரனும் உரைக்கத் தகாத மாற்ற முரைத்தான்; இதற்காக அவனை வெறுப்பதில் பயனில்லை; நம்முடைய கெட்ட விதியானது இந்நிலைமையை நமக்குண்டாக்கி விட்டது; இனி நாம் இசசூதாட்டத்தை விட்டு மனைவி மக்களுடன் இந்நகரத்தைவிட்டு வெளியேறிப் போதலே நன்று" என்று உடனே அந்தப்புரத்திற்குப் போய்த் தமயந்தியைக்கண்டு அவளிடத்தில், நடந்தது கூறி, "இனி நாம் வெளியேறி வேறெங்கேனும் போய்விட வேண்டும்; நீ என்னுடன் வருவாயாக" என்று அவளை அழைத்தானென்க. நளன் புஷ்கரனோடு சூதாடுவதையும், ஐசுவரியங்களையெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக அவனிடம் தோற்பதையும் தமயந்தி அப்போதைக்கப்போது பணியாளர்களால் கேள்விப்பட்டுக் கொண்டிருந்தாளெனினும், மகாபதிவிரதையாதலின், கணவன் செய்கையைத் தடுக்கலாகாதென மௌனமுற்றிருந்தாள். அத்தருணத்தில் நளன் சென்று சூதாட்டத்தின் முடிவைக் கூறி அவளை அவவாறு அழைக்கவே அவள் மறுமொழி கூறாமல் அவன் மொழிக் கிசைந்தாள்.

விதர்ப்பநாட்டில் கனிகள் மிகுந்தமாமரச்சோலையில் வண்டுகள்நெருங்கி மலரும் பருவத் தரும்புகளைக் குடைந்து ஊதும்; அதனால் அவ்வரும்புகள் கட்டுவிட்டு மலரும் இதனால் விதர்ப்ப நாட்டின்சிறப்புக்கூறப்பட்டது இனி-மேல்வரும் காலத்தை புணர்த்தும் பெயர்ச்சொல். ஒழிந்தோம்-தன்மைப் பன்மை வினைமுற்று. "மவ்வீறொற்றழிந் துயிர்மெய்யேறப்பவும், வன்மைக்கின மாத்திரியவுமாகும்" என்ற (நன்-மெ-பு கசு-ஆம் சூ)விதிப்படி சூதம் என்பது மவ்வீறு கெட்டுச சூத-எனநின்றது. பனித்து-என்னும் வினையெச்சம் பனிச்சு எனப்போலியாய் வந்தது. போதும்-உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று, 'அம் ஆம் என்பன முன்னிலையாரையும், எம் ஏம் ஓம் இவை படர்க்கையாரையும், உம் ஊர் கடதற இருபாலாரையும், தன்னொடு படுக்குந் தன்மைப்பன்மை" என்பது (நன்-வினை-கரு-ஆம்) சூத்திரம்; தும் விகுதியையுடைய இம்மொழி, முன்னிலையிடத்தலாகிய தமயந்தியைக் கூட்டித் தன்மைப்பன்மைவினைமுற்றாயிற்று 'பூப்பெயர்முன்னின மென்மையுந் தோன்றும்" என்ற (நன்-உயி பு ருO-ஆம்-சூ) விதியால் 'பூபோது' என்பது, மெலி தோன்றப், 'பூம்போது' எனவந்தது. கண்ணே-என்பதில் ஏ-அசை.

பொன்மகள்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை; தமயந்தி வீமனுக்குப் பொன் போலச் சிறப்புடையவளாதலின் பொன் எனப்பட்டாள். மகளே-என்பதில் ஏ-விளிவேற்றுமைச் சொல்லுருபு.

இதில், நளன் நகரத்தை விட்டுப் புறப்படல் கூறப்படுகின்றது.

222. மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகங் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினா னன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து

[இ-ள்] (அவ்வாறு கூறித்தமயந்தியும் அதற்கிசைந்த பின் நளன்)மெல்-மெல்லிய, கால்-பாதங்களையும், சிறை-சிறகுகளையும், (உடைய) அன்னம்-அன்னப் பறவையானது, வீற்றிருந்த-தங்கியிருந்த, மென்மலரை-மிருதுவாகிய தாமரைப் புஷ்பத்தை, புன் அற்பமாகிய, காகம் காகமானது, கொள்ள (தனக்கிருப்பிடமாகப்) பற்றிக்கொள்ள, தான்-அவ்வன்னந்தான், போனால் போல்-(அதைவிட்டு நீங்கிச்) சென்றுவிட்டாற்போல, கொடியானுக்கு-தீயோனாகிய புஷ்கரனுக்கு, அப்பார்-(தன்னுடைய) அந்தப் பூமியாளுகையை, கொடுத்து-அளித்துவிட்டு, தன்கால்-தன்னுடைய பாதங்களிலே, பொடி ஆட-புழுதிபடியும்படி, (பாதசாரியாய் நிலத்தில் நடந்து) தேவியொடும்-மனைவியாகிய தமயந்தியுடனே, போயினான். (நகரைவிட்டு நீங்கிப் புறப்பட்டுச்) சென்றான்; [எ-று]

ஒரு அன்னமானது தானிருந்ததாமரைமலரை, அற்பமாகிய ஒருகாகம் கைக்கொள்ள அதனை விட்டுச்சென்றாற்போல, நளன், தன்னுடைய ஆளுகையைத் தாழ்ந்தவனாகிய புஷ்கரன் கொள்ளும்படி விட்டு மனைவியுடனே நகரத்தை விட்டு வெளியேறிப் புறப்பட்டான் என்பது இதன் கருத்து. இங்ஙனம் உவமை கூறியதால், தாமரைமலருக்கு அன்னமே பொருத்தமுடையதாதல்போல நிடத நாட்டாளுகைக்கு நளனே பொருத்தமுடையவனென்பதும், காகம் அம்மலருக்குப் பொருத்தமுடையதாகாதது போலப் புஷ்கரன் அவ்வாளுகைக்குப் பொருத்தமுடையனாகான் என்பதும் பெறப்படும். இதனால்,நளன்நீங்கப்புஷ்கரன்செய்யும் அரசு சிறப்படையாதென்பதுவிளங்கும். அன்னத்தின் உயர்வுக்கேற்ப அதனை 'மென்காற் சிறையன்னம்' என்றும், காகத்தின் இழிவுக்கேற்ப அதனைப், 'புன்காகம்' என்றும் கூறினார் புலவர். அன்னமிருப்பது தாமரைமலரேயாதலின், 'அன்னம்வீற்றிருந்த' என்றகுறிப்பினால், 'மென்மலர்' என்பது தாமரை மலரெனக் கொள்ளப்பட்டது. புஷ்கரனுடைய இழிதன்மைக்கேற்ப அவன், 'கொடியான்' என்று பெயர்கூறப்பட்டான். நளன் எல்லாவற்றையும் இழந்து ஏறிச்செல்ல வாகனமின்றிக் காலாலே தரையில் சென்றானாதலின் அவனுடைய காலிற் புழுதி படிந்ததென்க. இதனால் அவன் மனைவியோடு நகரத்தைவிட்டு வெளியேறிச்சிறிது

ஆரம் சென்றான் என்பது கூறப்பட்டது. நளன் மனைவியொடு சென்றான் எனவே அவனுடைய பிள்ளைகளும் உடன் சென்றார்க ளென்பது கூறாமலே அமையுமாதலின், அவர்களும் போயினார்களெனக் கொள்க.

தான்-என்பது மூவிடத்துப் பெயர்களோடும் சேர்ந்து நிற்குங்கால் அசை யெனப்படும்; அது படர்க்கைப்பெயரோடு மாத்திரம், அசைச் சார்ந்ததாய்ப் பிரிந்து தனியே வேறோரிடத்திலும் வரும்; அங்ஙனம் வருமிடத்து அது அப்படர்க்கைப் பெயராகவே கொள்ளப்படும்; ஆதலின், இங்கு வந்த தான்-என்பதும் அங்ஙனம் வந்ததாதலின் படர்க்கையை உணர்த்தும் பெயரேயாம். தன்-என்பதும் வேற்றுமையில் இவ்வாறேவரும், 'கால்பொடியாட' என்பதை எழுவாய்த் தொடராகக் கொண்டு 'காலானது புழுதியிற் படிய' எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். ஒடும்-உம்மை-அன்றே-அசை.

இதில் நளனது விதியின் வலி கூறப்படுகின்றது

223. கடப்பா ரெவரே கடுவினையை வீமன்
மடப்பாவை தன்னுடனே மன்னன்—நடப்பான்
வனத்தே செலப்பணித்து மாயத்தாற் சூழ்ந்த
தனைத்தே விதியின் வலி.

[இ-ள்] கடுவினையை-கடுமையான பழவினையை, (அதாவது முன்ஜன்மத்திற்செய்த தீவினையாலேற்பட்ட விதியை) கடப்பார்-தாண்டிச் செல்பவர், எவர்-யாவர்?, (ஒருவரு மில்லை ஆதலின் தலைவிதிப்படியே நளன் இக் கதியை அடைந்தான்; இவ்வாறடைந்த தானது) விதியின்வலி-அவனுடைய தலைவிதியின் வல்லமையானது, மாயத்தால் - வஞ்சனையினாலே, மன்னன்-அந்நளமகாராஜன், வீமன்-வீமராஜனது, மடம்-இளமைபொருந்திய, பாவை தன்னுடனே-சித்திரப்பதுமை போன்ற குமாரத்தியாகிய தமயந்தியுடனே, வனத்தே செல-காட்டிற்செல்லும்படி, நடப்பான்-காலாலே தரையில் நடக்குமாறு, பணித்து-அவனை ஏவி, சூழ்ந்தது அனைத்து-சுற்றிக் கொண்டதை நிகர்த்ததாயிற்று; [எ-று]

பழவினையாலேற்பட்ட விதியைக் கடப்பவரெவரு மில்லை யாதலின், நளன், அவ்விதிப்படியே இவ்வித நிலைமையை அடைந்தான்; அவன் இவ்வாறானது. அவ்விதி, வஞ்சனையால் அவனை இப்படி நடக்கும்படி செய்து சுற்றிக்கொண்டது போன்றிருந்தது என்பது இதன் கருத்து. இவ்வாறு கூறியதனால், 'உலகத்தில் விதியைக் கடப்பாரெவருமில்லை; எனினும், நளன் புத்தி சாதுரியத்தால் அதனை நீக்கிக் கொள்ளும் ஆற்றலுடையவன்; அப்படி யிருந்தும் இவ்வாறு விதிவயத்த னாயினான்; இதை ஆலோசிக்குமிடத்து இத்தகைய மதிநுட்பமுடையானை அவ்விதியே வஞ்சனையால் சிக்கலைத் துக்கொண்டது போன்றிருந்தது' என்பது பெறப்படும். விதி வலிதாதலின்

அவனுடைய புத்தியை ஏமாற்றிவிட்டதென்க. இங்ஙனம் விதி வலிதென்பது, 'கடப்பரெவரோ கடு வினையை' என்பதா லுணரப்படும்.

கடுவினை-முற்பவத்திற் செய்த தீவினை; அவ்வினைக்குத் தக்கபடி இப்பிறப்பில் அனுபவ முண்டாகும்; அவ்வனுபவம் கடவுளால் ஏற்படுத்தப்படும்; அதுவே விதியெனப்படும்; விதி என்பதற்குத் தேவகட்டளை யென்பது பொருள்; விதி அவ்வினையால் ஏற்படுவதாதலின், வினை யென்பதற்கு விதி யென்று பொருள் கூறப்பட்டது. வினை காரணவாகு பெயராய் அதனாலுண்டாம் செய்கையாகிய விதிக்காயிற் றென்க. எவர் என்னும் வினா எதிர்மறுத்தற் பொருளில் நின்றது; இதனீற்றேகாரம்-அசை. நடப்பான்-வினையெச்சம். முற்றெச்சமாகக் கொண்டு நடப்பவனாகிச் செல்ல' என விரிப்பினும் அமையும். மடம்-அறியாமை; இளமைப் பருவம் அவ்வறியாமையையுடையதாதலின், அஃதிங்கே இளமை யென்னும் பொருளை விளக்கி நின்றது. பாவை உவமையாகுபெயர். பாவை தன்னுடனே என்பதில் தன்-ஏ அசைகள். பணித்து - வினையெசசம். சூழ்ந்தது-தொழிற் பெயர்.

நளன் வெளியேறிப் போவதைக் கண்டு நகரமாந்தர் இரங்குதல்.

221. ஆருயிரின் றாயே அறத்தின் பெருந்தவமே
பேரருளின் கண்ணே பெருமானே—பாரிடத்தை
யார்காக்கப் போவதுநீ யாங்கென்றார் தங்கண்ணின்
நீர்வார்த்துக் கால்கழுவா நின்று.

[இ-ள்.] (மேற்கூறியபடி நளன், மனைவி மக்களுடனே வெளியேறிச செல்லுங் காலத்தில், அம்மன்னனுக் குற்றதை நகரமாந்தர் உணர்ந்து மனங்கலங்கி அவனை நோக்கி) தம் கண்ணின்-தம்முடைய கண்களின், நீர் வார்த்து-நீரைச் சொரிந்து, கால்-தங்களுடைய பாதங்களை, கழுவா நின்று-அலம்பிக் கொண்டு,(அதாவது குனிந்தபடியே கண்ணீர் பாதங்களில் வடிய நின்று), ஆர்உயிரின்-(எங்களுடைய) அரிய உயிர்களின், தாயே-தாயாயிருப்பவனே!, அறத்தின்-தருமத்தினது, பெருந்தவமே-பெரிய தவ வடிவமானவனே!, பேர் அருளின்-பெரிய இரக்கத்தினது, கண்ணே நேத்திரம் போன்றவனே!, பெருமானே-(எங்கள்) தலைவனே!, பார் இடத்தை-இந்தப்பூமியினிடத்தை, (அதாவது; இந்நாட்டின் ஆளுகையை) யார்காக்க-எவன் காக்கும்படி, (விட்டு), நீ யாஙகுப்போவது - நீ எங்கே செல்வது, என்றார்-என்று சொல்லி வருந்தினார்கள்; [எ-று.]

நகரமாந்தர்க்கு நளன் உயிர்க்குயிரா யிருந்தவ னாதலின் அவர்கள் பிரிவுக்கு வருந்திக் கண்ணீர் வடித்து அவனைநோக்கி," எங்களுயிர்க்குத் தாயானவனே! தருமத்தின் தவவடிவமானவனே! அருட் கண்ணே! எம்மிறை

வனே! நீ இந்தப் பூமியை அற்பனாகிய புஷ்கரன் ஆளும்படி விட்டு எங்கே செல்கின்றாய்?" என்று கூறினார்கள் என்பது இதன் கருத்து. நளன் குடிகளுக்குத் தாயைப்போன்றிருந்து அவர்களை ஆதரித்தானாதலின், அவர்கள் அவனை, "ஆருயிரின் தாயே" என்றார்கள். நளனாலேயே தருமம் விளங்கக் கூடியதாயிருந் ததனாலே, அஃது இவனை யடைதற்குத் தவஞ் செய்ததாகவும், அத்தவமே ஓருரு வெடுத்து வந்ததுபோல இவனுதித்ததாகவும் பொருளாகும்படி இவன் 'அறத்தின் பெருந்தவமே' என்று கூறப்பட்டான். இனி 'அறத்தின் பெருந்தவமே' என்பதற்குத் 'தாய் தந்தையர் செய்த தர்மத்தினாலேற்பட்ட பெரிய தவத்தினா லுதித்தவனே' எனப்பொருள் கூறினும் அமையும். கண்ணாலேயே மனிதர் சிறப்புறுவர்; அதுபோல அருள் நளனாலேயே சிறப்படையும்; ஆதலின் அம்மாந்தர்கள் இவனைப் 'பேரருளின் கண்ணே' என்றுங் கூறினார்கள்; இங்ஙனம் கூறியவற்றால் நளன், மாந்தர்க்குத் தாய்போன்றவ னென்பதும், தவவடிவமானவ னென்பதும், மிக்க கிருபையுடையவ னென்பதும் பெறப்படும். "பாரிடத்தை யார் காக்கப் போவது நீ யாங்கென்றார்" என்பதனால், 'இத்தகைய நற்குணங்கள் பொருந்திய நீ எவனைப் பூமியாளும்படி செய்து விட்டு எங்கே போகின்றாய்? நாங்கள் உன் பிரிவை ஆற்றுவோமோ! இந்த அற்பன் ஆளுகைக் கீழிருந்து வாழ்வோமோ' என்ற கருத்துக்கள் விளங்கும். 'யார் காக்கப்போவது நீ யாங்கு' என்பது ஓர் அதிசயவினா; இது, 'இந்த அற்பனைக் காக்க விட்டு நீ செல்வதெங்கே' என்று பொருள் தரும். 'யார்' என்னும் வினா 'அற்பன்' என்னும் பொருளை விளக்கி நின்றது. 'யார்காக்க' என்பது இவன் காக்கத்தகாத அற்பன் என்னும் பொருளைத் தருதலால் எதிர்மறை யெச்சமெனப்படும். மாந்தர்கள் கண்ணீர் விட்டபடியே தலைவணங்கி நின்றார்கள்; அப்போது கண்ணீர் பாதத்தில் வடிந்தது; அவ்வாறு கண்ணீர்விட்டு நின்றதை அவர்கள் கண்ணீர் வார்த்துக் கால் கழுவியதாகக் கூறினார் ஆசிரியர்.

போவது-தொழிற்பெயர் கழுவாநின்று-வினையெச்சம்; கழுவாநில்-பகுதி.

225. வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞால முழுது நடுவிழந்தால்—சீலம்
ஒழிவரோ செம்மை யுரைதிறம்பாச் செய்கை
அழிவரோ செங்கோ லவர்.

[இ-ள்] (மேலும் அவர்கள் நளனை நோக்கி இறைவ!) வேலை-சமுத்திரமானது, கரை இழந்தால்-எல்லையைத் தாண்டினாலும், வேதம்-வேதமானது நெறி-சத்தியமார்க்கத்தினின்று, பிறழ்ந்தால்-பிசகினாலும், ஞாலம்-முழுதும்-பூமிமுழுதும், நடு இழந்தால்-நடு நிலைமையைக் கைவிட்டாலும், செங்கோலவர்-சாயாதகோலை (அதாவது ஒழுங்குதவறாத அரசாட்சியை) உடையமன்னர்கள், சீலம்-நல்லொழுக்கத்தினின்றும், ஒழிவரோ-தவறுவார்களோ, செம்மை

உரை-உண்மை வார்த்தைகளினின்றும், திறம்பா-வேறுபடாத, செய்கை-செய்கைகள், அழிவரோ-கெடப்பெறுவார்களோ, (அதாவது சத்தியந் தப்புவார்களோ; ஒரு போதும் இவற்றைக் கைவிடமாட்டார்கள்; ஆதலின் நீ ஒழுக்கந்தவறுதவனாதலின் தன்னைவிட்டு நீங்கி அன்னியனிடம்சேர்ந்த நகரத்தில் இருக்கக் கூடாதென்று செல்கின்றாய்; [எ-று.]

சமுத்திரம் கரை புரண்டாலும், வேதம் சன்மார்க்கத்தைவிட்டு நீங்கினாலும், உலகத்தவரெல்லோரும் நடுநிலைமையை இழந்து விட்டாலும் செங்கோன்மன்னர் ஒழுக்கத்தையும் சத்தியத்தையும் கைவிட மாட்டார்கள்: ஆதலின், நீ தருமந் தவறாத செங்கோன் மன்னனாதலின், உன்னிடம் எத்தகையரையும் யுத்தத்தில் ஜயிக்கும் வன்மையிருந்தும், நீயே மனம்வைத்து சூதாடி எல்லாவற்றையும் தோற்று விட்டபடியால் யுத்தஞ்செய்து அவற்றைக் கைப்பற்றுதலும், இந்நகரத்திலிருப்பதும் நீதிக்கு விரோதமாமென்று கருதி இப்போது வெளியேறிச் செல்கின்றாய் என்பது இதன் கருத்து. சமுத்திரம் எல்லை கடவாது; வேதம் ஒழுங்கான மார்க்கங்களைக் கூறுவதன்றிக் கெட்ட மார்க்கங்களைக் கூறாது; செங்கோன்மன்னன் ஆட்சிக்குட்பட்ட உலகம் நடுநிலைமை தவறமாட்டாது; எனினும் ஒருசமயம் இவைகள் தங்கள் இயற்கையை விட்டு நீங்கினும் நீங்கும், செங்கோன் மன்னர் மாத்திரம் எப்பொழுதும் சத்தியந் தவற மாட்டார்கள் என்க.

கரை இழந்தால், நெறிபிறழ்ந்தால், நடுவிழந்தால் என்பவற்றில் உயர்வு சிறப்பும்மைகள் தொக்கன, சீலம் ஒழிவரோ-ஐந்தாம் வேற்றுமைத்தொகை; நீக்கப் பொருளது. ஒழிவரோ அழிவரோ என்பன எதிர்மறைப்பொருளன; ஒழிய மாட்டார்கள் அழிய மாட்டார்கள் என்னும் பொருளில் நின்றன. 'செய்கை அழிவரோ' என்பதில் சினைவினை முதலொடு முடிந்தது. இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாதலின் இதிலுள்ள விஷயங்கள் அடுத்த செய்யுளில் 'என்றுரைத்தார்' எனவருவதனோடு சேர்ந்து முடியும்

**இதுவுமது.**

226. வடியேறு கூரிலைவேன் மன்னாவோ உன்றன்
அடியேங்கட் காதரவு தீரக்—கொடிநகரில்
இன்றிருந்து நாளை எழுந்தருள்க வென்றுரைத்தார்
வென்றிருந்த தோளான்றாள் வீழ்ந்து

(இ-ள்.) (ஆயினும்) வடிஏறு-கூர்மைதங்கிய, கூர்-நுனி பொருந்திய! இலை-வெற்றிலைவடிவமான, வேல்-வேலாயுதத்தையுடைய, மன்னா-அரசனே, ஓ-ஐயோ!, உன்றன்-உன்னுடைய, அடியேங்கட்கு-அடியார்களாகிய எங்களுக்கு; ஆதரவுதீர-(நின்மீதுள்ள) ஆசை பூர்த்தியடையும்படி, கொடி-துவஜங்கள் விளங்காநின்ற, நகரில்-இந்தப்பட்டணத்தில், இன்று இருந்து-இன்றைக்குத் தங்கி, நாளை-நாளைக்கு, எழுந்தருள்க-புறப்பட்டுச் செல்வாயாக

என்று-என்பதாய், வென்று-பகைவர்களை ஜயித்து, இருந்த-இப்போது வாளாவிருந்த, தோளான்-புயங்களையுடைய நளனது, தாள் வீழ்ந்து பாதங்களில் வீழ்ந்து பணிந்து, உரைத்தார்-கூறினார்கள்; [எ-று.]

நகரமாந்தர்கள் நளன்மீது மிக்க விசுவாசமுடையவர்களாதலின் அவன் பிரிவுக்கிரங்கி மேற் கூறியபடி 'சொன்னதோடு மீண்டும் அரசனை நோக்கி, "மன்னனே! ஐயோ! எங்களுக்கு உன்னைவிட்டுப் பிரிய இஷ்டமில்லை; எனினும் நீ அவசியம் வெளியேறியே தீரவேண்டும்; என்றாலும் நீ இன்று இங்கேயிருந்து நாளைக்குப்போகும்படி விரும்புகின்றோம்; ஆதலின் எங்கள் விருப்பப்படி இன்றைக்கு இந்நகரிலிருந்து நாளைக்குச் செல்வாயாக" என்று அவனுடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கிக் கூறினார்கள் என்க.

வேல் வெற்றிலை வடிவமாக இருத்தலின் அதனை இலைவேல் என்று கூறுதல் மரபு. மன்னாவோ என்பதில் ஓ-இரங்குதற்பொருளில் வந்தது. அடியார்-பாதத்தைச் சார்ந்தவர்கள்; அதாவது பாதத்தை வணங்கக்கூடியவர்கள்; ஆதலின், 'அடியேங்கள்' என்பது, 'பாதத்தைச்சார்ந்தவர்கள்' என்று பொருள்படும். 'கொடி நகரில்' என்பதை, கொடு இ-நகரில்எனப் பிரித்துக் 'கொடிதாகிய இந்த நகரில்' எனப்பொருள் கூறினும் அமையும்; மன்னனையிழந்த படியால் அவர்கள் அதனைக் கொடிய நகர் என்றாரென்க. எழுந்தருள்க என்பதற்கு எழுந்து கிருபை செய்க என்பது நேர் பொருள்; அஃதிங்கே எழுந்து செல்கஎன்னும்பொருள் பயந்துநின்றது; பெரியோர்செயலை உரைக்குங்கால் அதனோடு அருள் என்னும் பதஞ்சேர்த்துரைத்தல் இயல்பு; உயர்வு குறித்து அவ்வாக்கியம் சேர்க்கப்படும். அருள்க வியங்கோள். நளன் தோள் முன்னே பகைவரை ஜயித்து அரசாட்சியைப் பெற்று விளங்கிற்று; இப்பொழுது சூதாட்டத்தில் அரசிழந்து போனபடியால் அத்தோள் யுத்தஞ் செய்தற்கியலாமலிருந்ததுபற்றி "வென்றிருந்த தோளான்" என்றாராசிரியர்.

நளன், நகரில் ஒருநாளிருக்கலாமா வெனத்
தமயந்தியிடம் வினவுதல்.

227. மன்றலிளங் கோதை முகநோக்கி மாநகர்வாய்
நின்றுருகு வார்கண்ணி னீர்நோக்கி—இன்றிங்
கிருத்துமோ வென்றா னிளங்குதலை வாயாள்
வருத்தமோ தன்மனதில் வைத்து.

(இ-ள்.) (நகர மாந்தர்கள் அவ்வாறு கூறவே தமயந்தியும் மனம்வருந்தினாள்; அப்போது நளன்) மாநகர்வாய்-சிறந்த நகரத்தினிடமாக, நின்று-மேற் கூறியபடி தனக்கு முன்னே) நின்று, உருகுவார்-மனங்கலங்குகின்ற நகரமாந்தர்களுடைய, கண்ணின் நீர் நோக்கி-கண்களிலிருந்து வடியும் நீரைப்பார்த்தும், இளம்குதலை-இளமையான மழலைச் சொற்களையுடைய, வாயாள்-வாய்

பொருந்தியவளாகிய தமயந்தியினது, வருத்தம் வருத்தத்தை, தன் மனதில் வைத்து-தன்னுடைய மனத்திலிருத்திச் சிந்தித்தும், (அவர்க்குச் சிறிது தேறுதலுண்டாக்கவேண்டு மென்ற எண்ணம் தனக்கேற்பட்ட படியால் அவர்களுடைய விருப்பப்படியே அங்கு ஒருநாள் இருந்து போகலாமெனக் கருதி) மன்றல்- வாசனை பொருந்திய, இளங்கோதை-இளமையான கூந்தலையுடைய தமயந்தியினது, முகம் நோக்கி-முகத்தைப்பார்த்து, இன்று-இன்றைக்கு, இங்கு - இவ்விடத்திலே, இருத்துமோ - இருப்போமா, என்றான் - என்று தமயந்தி திருமுகத்தை நோக்கி வினவினான்; [எ று.]

நகரமாந்தர் ஒருநாள் அங்கே யிருந்து போகவேண்டு மென்று நளனைக் கேட்டுக்கொண்டபோது, தமயந்தி அவர்களுடைய பரிதாபநிலைமையையும் தனக்கும் தன்நாதனுக்கும் நேர்ந்த துன்பத்தையும் எண்ணி மனம் வருந்தினாள். அப்போது நளன் அவள் அவ்வாறு வருந்துவதையும், நகரமாந்தர்கள் கண் கலங்குவதையும் பார்த்து அவர்களுக்குச்சற்றுத்தேறுதலுண்டாகும்படி அங்கே ஒருதினம் இருந்து செல்லலாமெனக்கருதித் தமயந்தியின் முகத்தை நோக்கி, 'இவர்களின் விருப்பப்படி இங்கே இருப்போமா?' என்று வினவினான். என்பது இதன் கருத்து. அந்நகரத்திலிருப்பது நீதியன்றெனத் தெரிந்திருந்தும் நளனுக்கு அம்மனிதரைக் கலங்கவிட்டுச்செல்ல மனமிசையவில்லையாதலின், அவன் இவ்வாறு ஒருநாள் தங்கக்கருதி வினவினான் என்க.

இளங்கோதை-பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. நகர்வயின்-ஏழாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர். உருகுவார்-வினையாலணையும் பெயர். இருத்தும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. இதில், தும்-எதிர்காலங்காட்டும் விகுதி; ஈற்றோகாரம் வினாப்பொருளில் வந்தது வருத்தமோ என்பதிலுள்ள ஓகாரம்-அசை.

**நகரமாந்தர்கள் நளனைக்கொண்டாடக் கூடாதென்று முரசறையும்படி புஷ்கரன் கட்டளையிடல்.**

228 வண்டாடுந் தார்நளனை மாநகரில் யாரேனுங்
கொண்டாடி னார்தம்மைக் கொல்லென்று—தண்டா
முரசறைவா யாங்கென்றான் முன்னே முனிந்தாங்
கரசறியா வேந்த னழன்று.

(இ-ள்.) நளன் செய்கை அப்படியிருக்கும்போது அவனை நகரமாந்தர்கள் கொண்டாடுகிறார்களென்பதை யுணர்ந்து) அரசு அறியா-அரசாட்சி முறைமையைத் தெரிந்துகொள்ளாத, வேந்தன்-மன்னனாகிய புஷ்கரன், முன்னே-முன்பு சூதாடுங்காலத்தில், முனிந்தாங்கு நளனிடத்தே கோபித்துக்கொண்டதுபோல, அழன்று-இப்பொழுதும் கோபித்து, (உடனே முரசறைவோனை

விளித்து அவனிடத்தில்) மாநகரில்-இந்தச் சிறந்தநகரத்தில், வண்டு ஆடும்-வண்டுகள் மகரந்தமுண்ணும் பொருட்டு நெருங்கி ஆடிக்கொண்டிருக்கின்ற, தார்-பூமாலையையணிந்த, நளனை-நளன் என்பவனை, கொண்டாடினார் தம்மை உபசரித்தவர்களை, யாரேனும்-அவர்கள் எத்தகையரா யிருந்தாலும், கொல் என்று- கொல்லக்கடவாயென்று (ஒரு கொலையாளிக்குக் கட்டளையிட்டு அவ்விஷயம் நகரத்தில் எல்லோருக்கும் தெரியும்படி) தண்டா-தடைப்படாத, முரசு-பேரிகையை, அறைவாய்-முழக்கக்கடவாய், என்றான்-என்று சொன்னான்; [எ-று] (கொல்கவெனவென்பதும் பாடம்)

நளனை மேற் கூறியவாறு நகரமாந்தர்கள் உபசரிக்க அவன் அவர்களுக்குத் தேறுதல் சொல்லி ஒருநாள் அங்கே இருக்க நினைத்துத் தமயந்தியிடம் அப்படி யிருக்கலாமா வென்று வினவிக் கொண்டிருக்குஞ் சமயத்தில், அம்மணம் நகரமாந்தர் அவன் பொருட்டிரங்குவதைப் புஷ்கரன் உணர்ந்து அதற்காகப் பொறாமைகொண்டு, 'அவனைக்கொண்டாடுகிறவர்கள் எவர்களாயிருந்தாலும் அவர்களைக் கொல்லும்படி கொலையாளிக்குத் தெரிவித்து அதனை நகரத்தார் உணர்ந்துகொள்ளுமாறு எங்கும் பறையறைய வேண்டும்' என்று முரசறைவோனுக்குக் கட்டளை யிட்டான் என்பது இதன் கருத்து. அந்தப் புஷ்கரன் ஆட்சி முறை தெரியாதவனாதலின், இங்ஙனம் அநியாயமான கட்டளையைப்பிறப்பித்தான்; அது குறித்தே ஆசிரியர் அவனை,'அரசறியா வேந்தன்' என்றார். ஒருவருமே நளனை உபசரிக்கக் கூடாதென்பது தோன்ற அவன், "யாரேனும் கொல் என்று முரசறைவாய்" என்றான். புஷ்கரன் முன்னே சூதாட்டத்தில் அடிக்கடி நளனிடத்தே கோபஞ் செலுத்தி வந்தான், எனினும், அந்நளன் யாவற்றையுந்தோற்று வறிஞனானபோது இரக்கங்காட்டவேண்டும், அப்படி யிருந்தும் அவன் இரங்காமல் அத்தருணத்திலும் முன்போலவே கோபித்தான்; இது குறித்தே "முன்னே முனிந்தாங்கு அழன்று" என்றார் ஆசிரியர், இக்குணங்களால் புஷ்கரனது கொடுங்கோன்மை விளங்கும் 'வண்டாடுந்தார்' என்றவிசேஷணம் நளனுக்குக் கூறியது அவன் முன் இருந்த நிலைபற்றி யென்க; இவ்வாறு கூறுதல் உபசார வழக்கெனப்படும். எவர்தடுத்தாலும் கேளாமல் இக்கட்டளையை நிறைவேற்ற வேண்டுமென்பது தோன்றப் புஷ்கரன் முரசை,'தண்டாமுரசு' என்று கூறினான்.

இச்செய்யுளில் பொருண் முடிபுக் கேற்ப, 'உடனே முரசறைவோனை விளித்து அவனிடத்தில்' என்பது முதலிய சில வாக்கியத் தொடர்கள் இசையெச்சமாக வருவித் துரைக்கப் பட்டன. ஆங்கு-அசை; இதற்கு அவ்விடம் எனப் பொருள் கொண்டு, 'மனிதர் கொண்டாடும் அவ்விடத்தில்' என உரைப்பினும் பொருந்தும். இதில், 'முரசறைவாய்' என்று புஷ்கரன் முரசறைவோனுக்குக் கட்டளையிட்டான் எனவே அவன் அங்ஙனமே அரச கட்டளைப்படி முரசறைந்தான் என்பதும் பெறப்படும்,

மேற்கூறியபடி பறையறைந்ததைக் கேட்ட
நளன் சொல்லுதல்.

229 அறையும் பறையரவங் கேட்டழிந்து நைந்து
பிறைநுதலாள் பேதைமையை நோக்கி—முறுவலியா
இந்நகர்க்கீ தென்பொருட்டா வந்த தெனவுரைத்தான்
மன்னகற்றுங் கூரிலைவேன் மன்.

[இ-ள்] (அவ்வாறு முரசறைவோன் பறை முழக்கியதைக் கேட்டுத் தமயந்தி தன் பேதைமைக் குணத்தினால் 'நமக்கும் புஷ்கரனால் இக்கதி நேர்ந்ததே' என்று வருந்தினாள்; அசசமயத்தில் மேலும் அவன் பறை யறைந்து கொண்டே வந்தான்; அங்ஙனம்), அறையும்-அடிக்கப் படுகின்ற, பறை முரசென்னும் வாத்தியத்தின், அரவம்-ஒலியை, கேட்டு-செவிக் கொண்டு, மன்-பகையரசர்களை, அகற்றும்-போரில் நிலைக்கொள்ளாமல் பாய்ந்து நீக்குகின்ற கூர்-கூர்மையுள்ள, இலை-வெற்றிலை போன்ற, வேல் வேலாயுதத்தையுடைய மன்-நளமகாராஜன், (விஷயத்தை யுணராமல் புஷ்கரன் மீது மேற்கூறியபடி வெறுப்புற்று வருந்திய) பிறை நுதலாள் இளஞ் சந்திரனைப் போன்ற நெற்றியையுடைய தமயந்தியினது, பேதைமையை-அறியாமையை,நோக்கி-பார்த்து, அழிந்து-மனங்கலங்கி, நைந்து வருந்தி, முறுவலியா - புன்னகை புரிந்து, இந்நகர்க்கு-இந்த நகரத்திற்கு, (ஏற்பட்ட) ஈது-இத்துன்பமானது என் பொருட்டா-என் நிமித்தமாக, (அதாவது என்னுடைய செய்கை காரணமாகவே) வந்தது-வந்து சேர்ந்தது, (ஆதலின் நீ அறியாமையால் புஷ்கரன்மீது வெறுப்புற்று வருந்தாதே) என உரைத்தான்-என்று சொன்னான்.

மேற்கூறியவாறு பறையறைவோன் முரசறைந்ததைக் கேட்டுத் தமயந்தி இதன் உண்மையான காரணத்தை உணராமல், "இந்தப் புஷ்கரன் மகா கொடியன்; இப்படியும் முரசறைவித்தானே" என்று அவன்மீது வெறுப்புற்று வருந்தினாள்; அப்போது நளன் அம்முரசொலியைக் கேட்டதோடு அத்தமயந்தியின் உள்ளக் குறிப்பையும் உணர்ந்து அவள் பேதைமையினால், உண்மைக் காரணத்தை யுணராமல் அவ்வாறு கருதி வருந்துகின்றாளென்று நினைத்து அதன் பொருட்டுத் தானும் வருந்தி, அக்கஷ்டத்திற் கேற்பட்ட உண்மைக் காரணத்தை அவளுக்குணர்த்தத் தொடங்கிப் புன் சிரிப்புடன் அவளை நோக்கி, "காதலி! நீ புஷ்கரன் மீது வெறுப்புற்று வருந்துவது அறியாமையாகும்; இக்கஷ்டத்திற்குக் காரணம் நானே; நான் சூதாடப் போனதனாலேயே நமக்கும் நகர்க்கும் இத்துன்பம் நேர்ந்தது; இதுவும் நம் தலைவிதியால் ஏற்பட்டதாகும்; ஆதலின் நீ வருத்த மொழிவாயாக" என்று கூறினான் என்க. நளன் புன் சிரிப்புக் கொண்டது தமயந்தியின் பேதைமை குறித்தாம்; அழிந்து நைந்தது அவள் வருத்தத்திற்கும், நகரத்தார் வருத்தத்திற்குமாகவெனக் கூட்டிப் பொருள் கொள்ளலாம்.

அழிதல்-உறுதிகெடல்; அது கலக்கத்தை யுணர்த்தி நின்றது. நைதல்-நசிதல்; அது வருந்துதலே யுணர்த்தி நின்றது; வருந்துதலாவது மனவேதனை யடைதலாம். வேல், மன்னரை அகற்றுதலாவது: அவர் மேற் பாய்ந்து யுத்தஞ்செய்ய வொட்டாது துரத்துதலாம். பறை-வாத்தியப் பொதுப் பெயர்; அஃதிங்கே முரசை யுணர்த்தி நின்றது 'அறையும் பறை' என்பதில் செயப்பாட்டு வினை, செய்வினையாக மாறி வந்தது; "செய்ப்படு பொருளைச் செய்ததுபோலத், தொழிற்படக்கிளத்தலும் வழக்கினுளுரித்தே" என்பது சூத்திரம். முறுவலியா-செய்யா என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். முறுவலி-பகுதி; ய்-சந்தி; ஆ-வினையெச்ச விகுதி.

### நளன், மனைவி மக்களோடு நகரை விட்டு வெளியேறிப் போதல்.

250. தன்வாயின் மென்மொழியே தாங்கினு னோங்குநகர்ப்
பொன்வாயில் பின்னுகப் போயினுன்—முன்னுளில்
பூமகளைப் பாரினெடும் புல்லினுன் றன்மகனைக்
கோமகளைத் தேவியொடுங் கொண்டு.

[இ-ள்.] (அவ்வாறு கூறியபின்பு இனி நகரத்தி லிருப்பது தகாதென்று) முன்னாளில்-இதற்கு முந்திய நாட்களில், பூமகளை-தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கின்ற இலக்குமியை, பாரினெடும்-பூமி தேவியுடனே, புல்லினுன்-சேர்ந்திருந்தவனுகிய நளன், தன்மகனை-தன்னுடைய புத்திரனையும், கோமகளை-இராஜ குமாரத்தியாகிய தன் புத்திரியையும், தேவியொடு-தன் மனைவியான தமயந்தியுடனே, கொண்டு-அழைத்துக் கொண்டு, தன் வாயில்-தன்னுடைய வாயிலே, மெல்மொழியே மிருதுவான வார்த்தையையே, தாங்கினுன்-கொண்டு கூறியவனுகி, ஓங்கும் நகர்-உயர்ந்த அந்நகரத்தின், பொன் வாயில்-பொன்னுலியற்றப்பட்ட கோட்டை வாயிலானது, பின் ஆக-தனக்குப்பின்னே இருக்கும்படி, (அதாவது கோட்டை வாயிலைக் கடந்து) போயினுன்-அந்நகரை விட்டு நீங்கிப் போனுன்; [எ-று.]

அதன்மேல் நளன், தன்பிரிவு குறித்து இரங்கினவர்க ளிடத்து மிருது வார்த்தைகளையே கூறி அவர்களைச் சமாதானப் படுத்தித் தன் மனைவி மக்களுடனே கோட்டை வாயிலைக் கடந்து திரும்பிப் பாராமல் போயினுனென்பது இதன் கருத்து. தான் அங்கே தங்கினுல் குடிகள் தன்னை உபசரிப்பார்க ளென்றும், அதை யுணர்ந்தால் புஷ்கரன் அவர்களை வருத்துவான் என்றும், தன்னுல் குடிகளுக்கு வீண்கஷ்ட முண்டாகக் கூடாதென்றும் கருதியே நளன் சிறிது நேரங்கூட அங்கே தங்காமல் விரைந்து வெளியே நிசசென்றுனென்க. புஷ்கரன் பறையறைவித்ததே இவனை இவ்வாறுபுறப்படும்படி செய்தது. துக்கமுடையவர் தொனி குறைந்தே பேசுவர்; ஆதலின் நளனும் துக்கமேலீட்டால் மெல்லிய வார்த்தைகளையே பேசி நகரமாந்தர்க்

குத் தேறுதல்கூறிச் சென்றான். 'பொன் வாயில் பின்னாகப் போயினான்' என்றதனால், 'பொற்கோட்டை வாயிலானது தன் பின்பக்கத்திலிருக்கும்படி அதற்கப்பால் வெளியேறிப் போயினான்' என்பது பெறப்படும். "முன் னாளில் பூமகளைப் பாரினொடும். புல்லினான்" என்பதை விஷ்ணு வெனக் கொண்டு, 'அந்த விஷ்ணுவே யென்னும் நளன், அவன் இராமாவதாரகாலத்தில் காட்டிற்குப்புறப்பட்டுப்போனது போலப்போயினான்' எனவும் உரைக்கலாம். 'இராமாவதார காலத்திற் காட்டிற்குப் புறப்பட்டதுபோல்' என்பது குறிப்பாற்கொள்ளப்படும். பூமகளுக்கும் பார்மகளுக்கும் நாயகன் விஷ்ணு; அரசர்களை இங்ஙனம் விஷ்ணு அம்சமாகக் கூறுவதும் ஒரு மரபு.

தாங்கினான்-முற்றெச்சம். மகனை மகளை என்பவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. ஓங்குநகர்-வினைத்தொகை நிலைத்தொடர்.

நளன் போயின பின் நகரமிருந்த நிலைமை.

231. கொற்றவன்பாற் செல்வாரைக் கொல்வான் முரசறைந்து
வெற்றியொடு புட்கரனும் வீற்றிருப்ப—முற்றும்
இழவு படுமாபோ லில்லங்க டோறும்
குழவிபா லுண்டிலவே கொண்டு.

[இ-ள்] (நளன் அவ்வாறு சென்ற பிறகு மேற்கூறியபடி), புட்கரன்-புஷ்கர மன்னன், கொற்றவன் பால்-நளமகாராஜனிடத்தில், செல்வாரை-உபசாரம் புரியப் போகின்றவர்களை, கொல்வான்-கொலை செய்யுமாறு, முரசு அறைந்து-பேரிகையை நகரத்தில் முழக்குவித்து, வெற்றியொடு-சூதாட்டத்தில் அடைந்தஜயத்துடனே, வீற்றிருப்ப-சிம்மாசனத்தில் பெருமையுடனே தங்கியிருக்க, (அக்காலத்தில் அப்பட்டணம்) முற்றும்-முழுதும், இழவுபடும் ஆறுபோல இழவுண்டான விதத்தைப் போல, (ஆகி) இல்லங்கள் தோறும்-வீடுகள் ஒவ்வொன்றிலும், குழவி-இளம் பிள்ளைகளும், பால்-பாலை, கொண்டு-வாயிற் கொண்டு, உண்டில-உட்கொண்டில; [எ-று.]

நளன்பாற் சென்றவரைக் கொல்லுமாறு முரசறைவித்துப் புஷ்கரன் வெற்றியுடன் சிம்மாசனத்தில் ஏறியிருக்க, அந்நளன் சென்ற பிறகு, அவன் பிரிந்த வருத்தத்தால் அந்நகரத்தில் இழவுபட்ட பாடாகக் குழந்தைகளும் பாலுண்ணாமலிருந்தன வென்பது இதன் கருத்து. துன்பம் நேர்ந்த காலத்தில் மனிதர் வருந்தும் போது குழந்தைகளும் முகவ்வாடி ஆகாரங் கொள்ளாமல் கிடத்தல் இயல்பு. குழந்தைகள் தாங்களிருக்குமிடத்திலுள்ள மனிதர்கள் எவ்வித நிலைமையை அடைகிறார்களோ அவ்வித நிலைமையையே (அதாவது சந்தோஷத்தை யடைந்தால் சந்தோஷத்தையும், விசாரத்தை யடைந்தால் விசாரத்தையும்) அடைவது உலக அனுபவம்; ஆதலின் வீடுகள் தோறும் இழவுபட்ட பாடாக மனிதர் வருந்தும்போது, குழந்தைகளும்

முகம்வாடிப் பாலுண்ணுமற் கிடந்தனவென்க. இதனால், நகரமாந்தர் நளன் பிரிவு குறித்து வருந்தினமை கூறப்பட்டது.

கொல்வான்-வினையெச்சம். முரசறைந்து-பிறவினை தன்வினையாகமாறி வந்தது. வீறு-பெருமை; இதனோடு ஏழாம் வேற்றுமை இல் உருபு புணரும் போது இது வீற்றில் என்றாகும்; இது வருமொழியோடு புணருங்கால் இல் லுருபு கெட்டோ தொகுத்தலாகியோ வீற்று என நிற்கும்; இங்ஙனம் நின்ற தனோடு இருந்தான் என்னும் வருமொழி புணர வீற்றிருந்தான் என்றாயது; ஆகவே வீற்றிருந்தான் என்பது பெருமையான நிலையில் இருந்தான் என்று பொருள்படும். இழவு-தொழிற் பெயர்; அதாவது சாக்காடு என்பதாம்; இறந்தவரை மற்றையர் இழந்து விடுதலால் இது பெரும்பான்மையும் சாக் காட்டை யுணர்த்தியே நிற்கும். இங்கே நளனையும் அம்மனிதர் இழந்துவிட் டதால் இச்செய்கைக்கு அவ்விழவு உவமை கூறப்பட்டது. படுமாறு என் பது, படுமா என ஈறு தொக்கி நின்றது. தோறும்-பன்மையில் ஒருமையை விதந்து காட்டும் ஒருவகை இடைச்சொல்; இங்ஙனம் விதந்து காட்டிப் பன் மைப் பொருளையே உணர்த்தி நிற்கும். புட்காரனும் என்பதில் உம்மை-அசை குழவி-சாதியொருமை; இதில் சிறப்பும்மை தொக்கது. உண்டிலவே என்ப தில் ஏகாரம் தேற்றம். உண்டில-உடன்பாட்டெதிர்மறை வினைமுற்று.

நளன் செல்லும்போது வழியில்
குழந்தைகள் கூறியது.

232. சந்தக் கழற்று மரையுஞ் சதங்கையணி
பைந்தளிரும் நோவப் பதைத்துருகி—எந்தாய்
வடந்தோய் களிற்றாய் வழியான தெல்லாங்
கடந்தோமோ வென்றார் கலுழ்ந்து.

[இ-ள்.] (அவ்வாறு நகரத்தார் வருந்த நளன் மனைவி மக்களுடனே சென்றபோது அவனுடைய பிள்ளைகள் நடக்க முடியாமல் அந்நளனை நோக்கி) சந்தம்-அழகு பொருந்திய, கழல்-வீரகண்டையை அணிந்த, தாம ரை-தாமரைமலர்போன்ற பாதங்களும், சதங்கை-பாதகிண்கிணியை, அணி-அணிந்த, பைந்தளிரும்-பசுமையான தளிர்போன்ற பாதங்களும், நோவ-வருந்தியதனால், பதைத்து-உடல் துடித்து, உருகி-நெஞ்சங்கலங்கி, கலுழ்ந் து-அழுது, எந்தாய் எமது தந்தையே!, வடந்தோய்-கச்சைக்கயிறு கழுத்திற் சேர்ந்திருக்கின்ற, (அதாவது கழுத்தில் கச்சைக் கயிற்றை அணிந்த) களிற் றாய் யானையையுடையவனே!, வழியானதெல்லாம்-வழி முழுவதையும், கடந்தோமோ-நாம் தாண்டி வந்து விட்டோமோ?, என்றார்-என்று வருத்தம் பொறுக்கமுடியாமல் வினவினார்கள்; [எ-று.]

பிள்ளைகள் அரண்மனையில் மிக்க சௌக்கியத்துட னிருந்தவர்களாத லின் நெடுந்தூரம் நடக்க முடியாமல் நொந்து அழுது தந்தையிடம் இங்ங

னம் உரைத்தார்கள். ஒருகாரியத்தால்வருந்துவோர்அக்காரியம்தீர்ந்துவிட்ட தோஇல்லையோ என்றசந்தேகத்தால் அதன்முடிவையேசிந்தித்துக்கொண்டு 'அஃதாகிவிட்டதா? இவ்வளவுதானோ?' என்று அடிக்கடி வினவுதல் மனிதர் இயற்கை யாதலின், நடத்தற்கஞ்சியகுழந்தைகளும், 'இன்னும்நெடுந்தூரம் நடக்கவேண்டுமோ' என்ற அச்சத்தால்,'வழியானதெல்லாம் கடந்தோமோ' என்று கேட்டார்கள். 'என்தாய்' என்பதற்கு,'எமது தாயே' என்றும், களிற்றாய் என்பதற்கு,'யானையையுடைய தந்தையே' என்றும் பொருள்கொண்டு, அப்பிள்ளைகள் தாயையும் தந்தையையும் விளித்து அங்ஙனம் கூறினார்கள் எனினும் அமையும். பயங்கரமாகிய காட்டு மார்க்கஞ் செல்லுங் காலத்தில் அவ்விடத்தின் விசேஷங்களைப்பற்றி வெளிவர்த்தமானங்களை அறிந்த ஆண் மக்களிடமே வினவுதல் கிரமமாதலின், இரண்டு விளிகளையும் தந்தைக்கே ஏற்றி அப்பிள்ளைகள் அவனிடமே வினவினார்கள் என்பதே சிறப்புடைத்தாம்; இனிப் பெண்குழந்தை தாயை விளித்துரைத்த தென்றும், ஆண் குழந்தை தந்தையை விளித்துச் சொன்னதென்றும் கொள்ளலுமொன்று; அங்ஙனங் கொள்ளுமிடத்து இருவர் வினாக்களும் ஒரு தன்மையனவாய் 'என்றார்' என்னும் பயனிலையோடு முடிந்தவென்க. 'களிற்றாய்',என்றதனால், 'நீ யானையையுடையவனா யிருந்தும் எங்களை இவ்வாறு நடக்கும்படி செய்தனையே' என்ற வினாக்குறிப்பும் ஈண்டு தொனிக்கும்.

கழல் ஆண்குழந்தை பாதத்திற்கும், சதங்கை பெண் குழந்தைபாதத்திற்குமாம். தாமரை, தளிர் இரண்டும் பாதங்கட்கு உவமையாகு பெயர்கள்; இவற்றுள்ளும் தாமரை ஆண்குழந்தை பாதத்திற்கும், தளிர் பெண்குழந்தை பாதத்திற்குமாம். எந்தாய்-என்னும் விளி, தந்தைக்குக் கொள்ளும் போது எந்தை ஈற்றைகாரம் ஆய் எனத் திரிந்து வந்த தெனவும், தாய்க்குக் கொள்ளும்போது ஈறு இயல்பாய் வந்த தெனவும் கொள்ளவேண்டும்; 'இம் முப்பெயர்க் கண் இயல்பும் ஏயும், இகர நீட்சியும் உருபாமன்னே". "ஐயிறு பொதுப் பெயர்க்கு ஆயும் ஆவும், உருபாம் அல்லவற்றாயுமாகும்" என்பன (நன்-பெ-௩௪-௩௯-ஆம்) சூத்திரங்கள். களிற்றான் என்பது இறுதி யவ்வாய்க் களிற்றாய் என விளியாயிற்று; (நன்-மெ-௰-ஆம்) சூத்திரம் பார்க்க. வழியானது என்பதில், ஆனது முதல் வேற்றுமைச் சொல்லுருபு. வழியானதெல்லாம் என்பது இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலின் வழியென்னும் பெயர் செயப்படு பொருளாயிற்று "ஒருமையிற் பன்மையும் பன்மையினொருமையும், ஓரிடம் பிறவிடம் தழுவலு முளவே" என்னும் (நன்-பொ-௨௬-ஆம்) சூத்திரவிதி பற்றி 'வழியானதெல்லாம்' என்பதில் ஒருமையிற் பன்மைவந்தது; இது வழுவமைதியின்பாற்படும்.

**மக்கள் கூறியதைக் கேட்டு நளன் வருந்துதல்.**

233. தூயதன் மக்க டுயர் நோக்கிச் சூழ்கின்ற
மாய விதியின் வலிநோக்கி—யாதுந்

தெரியாது சித்திரம்போ னின்றிட்டான் செம்மை
புரிவான் துயராற் புலர்ந்து.

(இ-ள்.) (அங்ஙனம் அவர்கள் கூறியவுடனே) செம்மை-நன்மையையே, புரிவான்-செய்பவனாகிய நளமகாராஜன், தூய-பரிசுத்தமுள்ள, தன்-தன்னுடைய, மக்கள்-அந்தப்பிள்ளைகளின், துயர் துன்பத்தை, நோக்கி-பார்த்தும், சூழ்கின்ற வளைகின்ற, மாயவிதியின்-வஞ்சனையாகிய விதியினது வலிநோக்கி-வல்லமையை எண்ணியும், (அவற்றாலேற்பட்ட) துயரால்-மன வியாகுலத்தினாலே, புலர்ந்து-நெஞ்சுலர்ந்து, யாதும் (அச்சமயத்தில் செய்வது) எதுவும், தெரியாது-தோன்றாமல், சித்திரம்போல்-(எழுதப்பட்ட) உருவத்தைப் போல, நின்றிட்டான்- நின்றான்; [எ-று.]

மக்கள் கஷ்டத்தையும், அக்கஷ்டத்தை உண்டாக்கிய தலைவிதி வலிமையையும்நோக்கி நளன் துயரமுற்று ஒன்றுந்தோன்றாமல் சித்திரம்போல் அசைவற்றுநின்றான் என்பது இதன் கருத்து. தூய தன் மக்கள் என்றதனால் அவர்கள் அத் துன்பத்தை அடையக் கூடாதவர்கள் என்பது பெறப்படும். ஆதலின், நளன், "இப்பேர்ப்பட்ட பிள்ளைகளும் துன்பத்தை அடைகின்றார்களே; இது விதி வலியினாலேயே ஏற்பட்டது; அதனால் இதனை நீக்குதல் அரிதாம்" என்று இருதன்மைகளையும் நோக்கி வருந்தி ஒன்றுஞ் சொல்லவியலாது நின்றானென்க. விதி மனிதர்க்குத்தெரியாமல் வஞ்சனையாக வந்து அவர்களைப்பற்றி வருத்தக் கூடியதாதலின், அதனை "சூழ்கின்ற மாயவிதி" என்றார் ஆசிரியர். சித்திரம் படத்தில் வரையும் உருவம்; அஃதசையாமலிருப்பது போல நளனும் வாய்பேசாமலும், அவயவங்களை அசைக்காமலும் நின்றதனால் அதனை அவனுக்குவமை கூறினார் புலவர்; மிகுந்த துக்கத்தால் மனிதர் அசைவற்று நின்று விடுதல் உலக இயற்கை.

விதியின் வலிநோக்கி என்பதில் நோக்குதல் எண்ணுதற் பொருளில் வந்தது; இத்தகைய இடங்களில் உபயோகிக்கப்படும் நோக்கம் நோக்னேக்கம் என்னபபடும் யாதும்-என்பதில் உள்ள உம்மை இழிவு சிறப்புப் பொருளது. நின்றிட்டான் என்பதில் இடு துணைவினை யெனப்படும்; இதனை அசைநிலையெனவுங் கூறுவர் பண்டைய விலக்கண நூலார்.

தமயந்தி தன் பிள்ளைகளை அழைத்துக்கொண்டு தந்தை
வீட்டிற் கேகுமாறு நளன் அவளிடம்
கூறுதல்.

234. காத லிருவரையுங் கொண்டு கடுஞ்சுரம்போக்
கேத முடைத்திவரைக் கொண்டுநீ—மாதராய்
வீமன் றிருநகர்க்கே மீளென்றான் விண்ணவர்முன்
தாமம் புனைவானைத் தான்.

(இ-ள்.) (மேற்கூறியபடி ஒன்றுந் தோன்றாமல் நின்ற அந்நளன் அச்சமயத்தில் தனக்கோரெண்ணம் உதித்தமையால்) விண்ணவர்முன்-தேவர்களுக்கெதிரில் (முன்னே) தமம்-மணமாலையை புனைவாளை (தனக்குச்) சூட்டியவளாகிய தமயந்தியை, (நோக்கி) மாதராய்-அழகுள்ளவளே!, காதல்-அன்புள்ள, இருவரையும்-நம்முடைய இரண்டு பிள்ளைகளையும், கொண்டு-நாம் அழைத்துக் கொண்டு, கடும்-கடுமையாகிய, சுரம்-(இனிமேல் எதிர்ப்படும்) பாலைநிலத்தில், போக்கு-போதல், ஏதம் உடைத்து-குற்றமுடையதாம், (ஆதலின்) இவரைக்கொண்டு இப்பிள்ளைகளை அழைத்துக்கொண்டு, வீமன்-உன் தந்தையாகிய வீமராஜனது, திரு-அழகிய, நகர்க்கே நகரத்துக்கே, நீ மீள் என்றான்-நீ திரும்பிச்செல்வாயாக என்று கூறினான், [எ-று]

நளன் பிள்ளைகள் படுங்கஷ்டத்தைப் பார்த்து, "இனி இவர்கள் பாலைநிலங்களிலும் காடுகளிலும் நடந்து வந்தால் இன்னும் அளவில்லாத கஷ்டங்களை அடைவார்கள். அவர்களோடு தமயந்தியும் பெண்பாலாகையால் மிக வருந்துவாள்; ஆதலின் இவர்களை வீமராஜனுடைய நகர்க்கனுப்பி விட்டால் இர்வகள் சௌக்கியமாயிருப்பார்கள்; நாம் எங்கேனும் செல்லலாம்" என்று கருதி அவளை நோக்கி 'நீ குழந்தைகளை அழைத்துக் கொண்டு உன் தந்தை வீட்டிற்கேகுவாயாக' என்று இவ்வாறு கூறினான் என்க. மாமனில்லஞ் சேர்ந்திருத்தல் அறிவுடையோர்க் கழகன்றாதலின், அவன் தானும் அங்குச் செல்வதற்கு விரும்பவில்லை. மனைவி மக்களை மாத்திரம் எப்படியேனும் அங்கே அனுப்பிவிட யோசித்தான். அதனாலேயே அவர்களுக்குப் பிரயாணத்தில் அச்சமுண்டாகும்படி மேலே பாலைநிலம் வருவதாகக்குறித்து "இனிமேல்வரும் பாலைநிலத்திற்போதல் குற்றமுடைத்து" என்று கூறினான்; இதனால் அவர்கள் பயந்தேனும் சென்றுவிடுவார்கள் என்பது அவன் கருத்து.

போக்கு-தொழிற்பெயர்; போ-பகுதி, கு-தொழிற்பெயர்விகுதி. மாதர்-அழகு, அதனையுடையாள்-மாதரான், இது, ஈற்றுளகரம் யகரமாய் விளியாயிற்று. நகர்க்கே என்பதில் ஏகாரம் பிரிநிலை; வேறெங்கும் செல்லலாகாது என்பது இதனால் விளங்கும். மீளல்-தாங்கள் அப்போது செல்லும் மார்க்கத்தைவிட்டு வீமன் பதிக்கேகும் மார்க்கத்திற் றிரும்புதல். 'விண்ணவர் முன் தனக்குத் தாமம் புனைவாள்' என்றதனால் அவள் தேவரையும் விரும்பாமல் தன்னையே விரும்பித் தனக்கு மாலையிட்டதால் தன்னுயிரனையாள் என்பது குறிப்பால் அமையும்; இப்பேர்ப்பட்டவளையும், கஷ்டத்தால் அவன் பிரியநினைத்தான் என்பது தோற்றவே அங்ஙனம், "விண்ணவர்முன் தாமம் புனைவாளை மீள் என்றான்" என்றார் ஆசிரியர் தான்-அசை. புனைவாள்-இறந்தகாலம் எதிர்காலமாக மாறி வந்த காலவழுவமைதி.

தமயந்தி நளனைப்பிரிய மனமிசையாது கூறல்.

235. குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே

கோக்கா தலனைக் குலமகளுக் கென்றுரைத்தாள்
நோக்கான் மழைபொழியா நொந்து.

(இ - ள்.) (நான் அவ்வாறு கூறியவுடனே தமயந்தி அதற்கிசையாமல்) நோக்கால் - நேத்திரங்களால், மழை - மாரியைப் போன்ற கண்ணீரை, பொழியா-சொரிந்து, நொந்து-வருந்தி, (அந்நளனை நோக்கி) கொற்றவனே - அரசனே!, குலமகளுக்கு நல்லவமிசத்திற் பிறந்த பெண்ணுக்கு, குற்றம் இல்-குறைவில்லாத, காட்சி-தோற்றத்தையும், குதலை மழலைச் சொற்கள் பொருந்திய, வாய்-வாயையுமுடைய, மைந்தரையும் புத்திரர்களையும், பெற்றுக் கொளலாம்-பெற்றுக் கொள்ளுதல் ஆகும், கோ-சிறந்த, காதலனை, ஆசைக்குரியவனாகிய கணவனை, பெறலாமோ-(இறந்துவிட்டால் பின்பு) அடையலாகுமோ, (முடியாது; ஆதலின், நான் உன்னை விட்டு நீங்கிச் செல்லமாட்டேன்) என்று உரைத்தாள்-என்று சொன்னாள்; [எ-று.]

நளன் அவ்வாறு தமயந்தியை நோக்கி, "நீ குழந்தைகளை அழைத்துக் கொண்டு உன் தந்தை வீட்டிற்குச் செல்வாயாக" என்று சொன்னவுடனே, அவள் குலமகளாதலாலும், கணவனைத்தவிரத் தனக்குச் சிறந்த பொருள் வேறில்லை யென்று கருதும் இயற்கை யுடையளாதலாலும், "பிள்ளைகள் கஷ்டம் சகிக்காமல் அழிந்தாலும் அழியட்டும்; நாம் அவர்கள் பொருட்டுக் கணவனைவிட்டு நீங்குதல் கூடாது" என்று உறுதி கொண்டு அந்நளனை நோக்கி "மன்னனே! பிள்ளைகள் தவறிப்போய் விட்டாலும் அவர்களை மீண்டும் பெற்றுக்கொள்ளலாகும்; கணவனை யிழந்தால் பெறமுடியாது; ஆதலின் நான், இப்பிள்ளைகளின் சௌக்கியத்தை உத்தேசித்து உன்னைவிட்டு நீங்க மாட்டேன்" என்று கூறினாள் என்க. குலமகளிர் பிள்ளைகளை யிழந்துவிட்டாலும் கணவனுடனிருந்தால் அத்தகைய பிள்ளைகளை மீண்டும் பெற்றுக் கொள்ளுதற் கேதுவுண்டு; அக்கணவனை யிழந்தாலோ அப்பிள்ளைகளையும் பெறுதல்முடியாது; கணவனையும் அடைதல் முடியாது; இருவகை நஷ்டமும் ஆம்; மேலும் பதிவிரதைகள் கணவனைத் தவிர வேறெதையும் தங்கட்குச் சிறந்த பொருளாகக் கருதாத இயற்கையுடையவர்கள் ஆதலின், அவ்வியற்கையின்படியே தமயந்தி இவ்வாறு கூறினாள்.

மைந்தரையும் என்பதிலுள்ள உம்மை - உயர்வு சிறப்புப் பொருளது. பெறலாமோ என்பதில் ஓ-எதிர்மறைப்பொருளது. காதலன்-காதலுக்குரியவன். குலமகளுக்கு என்பதில், நான்காம் வேற்றுமைக் குவ்வுருபு கர்த்தாப் பொருளில் வந்தது. மழை-கண்ணீர்க்கு உவமையாகுபெயர்.

**நளன் பிள்ளைகளின் உயர்வைத் தமயந்திக்குக் கூறல்.**

236. கைதவந்தா னீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா னெத்தனையுஞ் செய்தாலும்—மைதீர்
மகப்பெறா மானிடர்கள் வானவர்தம் மூர்க்குப்
புகப்பெறார் மன்னராய்ப் போந்து.

[இ-ள்] (தமயந்தி அவ்வாறு சொல்லக் கேட்ட நளன் அவளை நோக்கி) மாதராய்-அழகுடையவளாகிய தமயந்தியே!, (நீ இவ்வாறு குழந்தைகளை ஒரு பொருளாக மதியாமல் உரைப்பது தகாது; மனிதர்க்குப் பிள்ளைகளே சிறந்த பொருளாவார்) கைதவம்-வஞ்சனையை, நீக்கி-அகற்றி, கருத்தில்-மனதில், கறை-குற்றத்தை, அகற்றி-(சேராமல்) விலக்கி, செய் (மனிதர் நற்கதியடைதற்குச) செய்யக்கூடிய, தவம்-தவத்தினை, எத்தனை-எவ்வளவு, செய்தாலும் இயற்றினாலும், மைதீர்-குற்றம் நீங்குவதற் கேதுவாகிய, மக-மக்களை, பெறா-பெறாத, மானிடர்கள்-மனிதர்கள், வானவர்தம்-தேவர்களுடைய, ஊர்க்கு-ஊராகிய சுவர்க்க பதவியில், போந்து சென்று, புக-நுழைய, பெறார்-எதுவை அடையமாட்டார்கள்; [எ-று.]

மக்களைப் பெறாதவர்கள் எத்தகைய தவத்தைச் செய்தாலும் தெய்வலோக பதவியை அடையமாட்டார்கள் என்பது இதன் கருத்தாம். புத்திரரைப் பெறாதவர்க்குப் 'புத்' என்ற ஒரு நரகம் ஏற்படுமென்பதும், பெற்றார்க்கு அஃதின்றி நற்பதவி கிடைக்குமென்பதும் நூற்களின் துணிபு; "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப், பண்புடை மக்கட் பெறின்" என்றதிருக் குறளால் இஃதுணரப்படும் நடிப்பின்றி மனதூய்மையோடு செய்யுந்தவமே சிறந்ததாம்; ஆகலின், நளன், "கைதவந்தான் நீக்கிக் கருத்திற்கறை அகற்றிச் செய்தவம்" என்றான். மக்களே தாய்தந்தையரின் துன்பங்களை எவ்வகையினும் அகற்றக் கூடியவர்களாவர்; இது பற்றியே "மைதீர் மக" என்றும் கூறினான்; இவற்றால் அவன், "இல்லறத்தார்க்கு மக்களே சிறந்த பொருளாவர்; ஆதலின் பிள்ளைகளைக் காப்பாற்றுதலே சிறப்புடைத்தாம்" என்பதை விளக்கிக் காட்டினான்.

கைதவந்தான், செய்தவந்தான் என்பவற்றிலுள்ள தான் இரண்டும் அசைகள். செய்தவம்-வினைத்தொகை. தனை-எல்லை யளவைக் குறிக்கும் பெயர். எத்தனையும் என்பதிலுள்ள உம்மை-அசை. செய்தாலும் என்பதன் உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. மக-என்பது ஆண், பெண் ஆகிய இரு வகுப்புக்கும் பொதுவாம். வானவர்தம் என்பதில் தம்-அசை. புகப்பெறார் என்ற தொடர் ஒரு சொன்னீர்மைத்தாய் நுழையார், என்ற பொருள் தந்து நிற்கும். மைதீர்மக-என்பதற்குக் 'குற்றமற்ற பிள்ளைகள்' எனவும் பொருளுரைக்கலாம். இச் செய்யுளும், அடுத்த இரண்டு பாட்டுக்களும் குளகம்; ஆதலின், 238, ஆம் செய்யுளில் முடிபு கூறப்படும்.

இதுவுமது.

237. பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்.

[இ-ள்.] இன் அடிசில்-(தாய்தந்தையர் உண்ணும்) இனிய சோற்றில், புக்கு-புகுந்து, அளையும்-கலந்து அதனைக் குழப்புகின்ற, தாமரைக்கை-தாமரைமலர் போன்ற கரங்களையும், பூநாறும்-மலர் மணம் பரிமளிக்கின்ற, செய்யவாய்-சிவந்த வாயையும், (உடைய) மக்களை-பிள்ளைகளை, இங்கு-இவ்வுலகத்தில், இல்லாதவர் அடையப் பெறாதவர், பொன் உடையரேனும்-பொன்னையுடையவர்களா யிருந்தாலும், புகழ் உடையரேனும் கீர்த்தியை உடையவர்களா யிருந்தாலும், மற்று-பின்னும், என் உடையரேனும்-எதையுடையவர்களா யிருந்தாலும், உடையரோ-(அவற்றை) உடையவர்களாவார்களோ, (ஒரு காலத்திலும் ஆகமாட்டார்கள்): [எ-று]

பிள்ளைகளில்லாதவர் பொருளுள்ளவர்களா யிருந்தாலும், கீர்த்தியுடையவரா யிருந்தாலும், வேறு எவ்வகைச் சிறப்புடையவர்களா யிருந்தாலும் அவற்றை உடையவர்களாக மாட்டார்கள் என்பதாம். ஏனெனில், பொருள், கீர்த்தி முதலிய சிறப்புக்களெல்லாம் பிள்ளைகளினாலேயே சிறப்படையும்; பிள்ளைகளில்லாவிடில் மேற்கூறிய சிறப்புக்களெல்லாம் அமையப் பெற்றவர்களையும், 'பிள்ளையில்லாப் பாவிகள்' என்று பலர் பழிப்பர்; இஃதொன்றினாலேயே அத்தனை சிறப்புக்களும் மங்கிவிடும். தாய் தந்தையர் உண்ணும் உணவில் குழந்தைகள் கையிட்டுக் குழப்புவார்கள்; அங்ஙனம் குழப்பிய உணவை யுண்ணுதல் அப்பெற்றோர்களுக்குத் தேவாமிர்தத்தையுண்பதிலேற்படும் இனிமையைக் காட்டினும் மேலான இனிமையைத் தருவதாகும், ஆதலின், அஃதிவ்வாறு இனிமையுடைய தென்பதை யுணர்ந்து தற்கேற்றான், "இன்னடிசில் புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய் மக்கள்" என்றான். திருவள்ளுவரும் இதனை விளக்கி, "அமிழ்தினு மாற்ற வினிதே தம் மக்கள், சிறுகை யளாவிய கூழ்" என்றார். அளைதல்-கலத்தல்; அஃதிங்கு கலந்து பிசைதற் பொருளில் வந்தது குழந்தைகளின் வாய்-தாமரைமலர், சண்பகப்பூ ஆகியவற்றின் வாசனையை யுடைத்தாயிருத்தல் இயல்பு; ஆதலின், அது, 'பூநாறும் செய்யவாய்' என்னப்பட்டது.

உம்மைகள் மூன்றும் உயர்வு சிறப்புப் பொருளன. மற்று-பிறிதென்னும் பொருளில் வந்தது, "வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே" என்பது (நன்-இடை-கஉ-ஆம் சூத்திரம் உடையரோ என்பதில் ஓகாரம் எதிர்மறுத்தற்பொருளில் வந்தது. இல்லாமை அடையப் பெறாமை யென்னும் பொருள்பயமாதலின், இங்கு மக்களைச் செயப்படு பொருளாக்கி இரண்டனுருபு விரிக்கப் பெற்றமையால் 'இல்லாதவர்' என்பதற்கு 'அடையப் பெறாதவர்' என்று பொருளுரைக்கப் பட்டது.

238. சொன்ன கலையின் துறையனைத்துந் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னங்
குறுகுதலைக் கிங்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாத செவி.

[இ-ள்] முன்னம் முன்பக்கத்திலே, குறுகுதலை குறுகிய தலையையுடைய, கிங்கிணி-சதங்கைகளை யணிந்த, கால்-பாதங்களை யுடைய, கோ-சிறந்த, மக்கள்-பிள்ளைகளின், இன்முகத்து-இனிமையான முகத்தினிடமாகவுள்ள, பால்வாய்-பாலருந்தும் வாயின்கண் உண்டாகிய, சிறு-மெல்லிய, குதலை-மழலைச்சொற்களை, கேளா-கேளாத, செவி-காதுகள், சொன்ன (உயாவாசக்) கூறிய, கலையின சாஸ்திரங்களின், துறை அனைத்தும் நல்ல மார்க்கங்களெல்லாவற்றிலும், தோய்ந்தாலும் படிந்தாலும், (அதாவது அம்மார்க்கங்களை யெல்லாம் கேட்டாலும் அது), என்னபயன் என்ன பிரயோசனத்தை, உடைத்து ஆம் உடையது ஆகும், (அதனால் ஒரு பயனுமில்லை ஆதலின் மக்களே எல்லாவற்றினும் சிறந்த பொருளாவர்; நான் சொன்னபடி நீ இவர்களைக் காப்பாற்றும் பொருட்டு அழைத்துச் செல்வாயாக என்று கூறினான்)

மக்களுடைய மழலை வார்த்தைகளைக்கேளாத செவிகள், பல உயர்ந்த சாஸ்திரக் கேள்விகளைக் கேட்டாலும் ஒரு பயனுமில்லை யென்பது இதன் கருத்து. மக்களில்லாதவர் எவ்வளவு சாஸ்திரங்களைக் கற்றிருந்தாலும் சிறப்படைய மாட்டார்கள். எனவே, சாஸ்திரக் கேள்விகளைக் கேட்டினும், மக்கள் குதலைச்சொற்களைக் கேட்டலே மனிதர்க்குச் சிறப்புடைத்தா மென்பது பெறப்படும். இதனை, "குழலினிது யாழினி தென்பதம் மக்கள், மழலைச் சொற் கேளாதவர்" என்னும் திருக்குறள் செய்யுளா லுணர்க. இதனால், சாஸ்திரஞான மில்லாதவனு யிருந்தாலும் பிள்ளைகளை யுடையவனே உலகத்திற் சிறந்தவ னென்பது விளங்கும்.

236 ஆம் செய்யுளில் வருவித்துரைத்த நளன் என்னும் எழுவாயுடனே இச்செய்யுளினீற்றில் கூறினான் என்ற பயனிலை கூட்டி முடித்துக்கொள்க. இடையில் பல சொற்றொடர்கள் பொருண் முடிபுக்குத்தக இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன. தோய்ந்தாலும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்புப் பொருளது. என்ன பயனுடைத்தாம்-எதிர்மறையெச்சம்; பயனில்லை என்ற பொருள் பயந்து நின்றது. சதங்கையின் முன் பக்கத்தின் நுனியில் சிறிய கடுகுபோன்ற உருவம் செய்யப்பட்டிருக்கும்; அதுவே இங்கு, 'குறுகியதலை' என்று கூறப்பட்டது. கிங்கிணி-திரியாமல் வந்த வடசொல்; கிண்கிணி-திரிந்து வந்ததாம். 'இன் முகத்து' என்பதைப் 'பால் வாய்' என்பதனோடு கூட்டிக்கொள்க. குதலைக் குச் சிறுமையாவது மென்மை.

மக்களைச் சிறப்பித்துக் கூறிய நளனுக்குத்
தமயந்தி கூறுதல்.

239. போற்றரிய செல்வம் புனைநட் டொடும்போகத்
தோற்றமையும் யாவர்க்குந் தோற்றுதே—ஆற்றலாய்
எப்பதிக்கே போந்தருளு கென்றா ளெழிற்கமலச்
செம்பதிக்கே வீற்றிருந்த தேன்.

[இ-ள்.] (மேற்கூறியபடி நளன் சொல்லக் கேட்டு) எழில்-அழகுபொருந்திய, கமலம்-தாமரை மலராகிய, செம்பதிக்கு-செம்மையான இடத்தில், வீற்றிருந்த-பெருமையோடு தங்கியிருந்த, தேன்-தேன்போலும் இனிமைவாய்ந்த இலக்குமியை நிகர்த்த தமயந்தி, (அந்நளனை நோக்கி) ஆற்றலாய்-(பகைவரை ஜயிக்கும்) வல்லமையுடையவனே!, (நீ சொல்கிறபடி பிள்ளைகளைச் சிறந்த பொருளைப்போலக் காப்பாற்றுதல் எனக்குச் சிறந்த கடமையாயினும், அவர்கள் பொருட்டு உன்னை விட்டு நீங்க எனக்கிஷ்டமில்லை; முதலில் நான் உன்னைப் பிரியாமலிருந்து கொண்டே பின்னர் அவர்களைக் காப்பாற்ற வேண்டும்; இவ்வாறு செய்தற்கு என்மனத்தில் ஒரு யோசனை உதிக்கின்றது; அதன்படி செய்தால் உன்னுடைய விருப்பமும் என்னுடைய விருப்பமும் நிறைவேறும்; ஆதலின், அதனைக் கூறுகின்றேன் கேட்பாயாக; நீ என்னையும் பிள்ளைகளையும் பிரிந்து வேறெங்கேனும் செல்லாமல்) எம்பதிக்கே-எங்களுடைய நகரத்திற்கே, (எங்களுடன்) போந்தருளுக-வரக்கடவாயாக; (அப்படி வருவாயாயின் நம்மனவியாகூலம் தீர்வதோடு) போற்றரிய (எப்பொழுதும் ஒரே நிலையில் நிற்கும்படி) காப்பாற்ற முடியாத, செல்வம்-நம் ஐசுவரியமானது, புனல்-நீர்வளம் மிகுந்த, நாட்டொடு-தேசத்துடனே, போக-நம்மை விட்டு நீங்கும்படி, தோற்றமையும்-(நீ சூதாடி அவற்றைத்) தோற்று விட்டதும், யாவர்க்கும்-(அங்கே) எவர்க்கும், தோற்றாது-தெரியமாட்டாது. என்றாள்-என்றுரைத்தாள்; [எ-று.]

நளன் அவ்வாறு கூறியதைக்கேட்ட தமயந்தி அவனை நோக்கி, 'புத்திரரைக் காப்பாற்றுவது எனக்கு முக்கியமானதாயிருந்தாலும் நான் உன்னைவிட்டுப் பிரியமாட்டேன்; ஆதலின் நீயும் எங்களுடன் எம்மூர்க்கு வரவேண்டும்; அப்படி வந்தால் நமக்குள் ஏற்பட்டிருக்கிற எண்ணங்கள் நிறைவேறித் திருப்தியே உண்டாகும்; அதுவுமன்றி நீ சூதாட்டத்தால் நாடிழந்த இழிவும் அங்கேஎவர்க்கும் தெரியாமலிருக்கும்" என்றுகூறினாள் என்பது இதன் கருத்து. நளன் வேறெங்கேனும் பிரிந்து சென்றால் அப்பிரிவால் தனக்கு மிக்க துயருண்டாவதோடு, அவன் சூதாட்டத்தால் ஐசுவரியங்களை யிழந்தசெய்கை-தன் தந்தைநகரில் வெளிப்பட்டு அவனுக்கும் இழிவுண்டாகுமென்று கருதித் தமயந்தி இவ்வாறு உரைத்தாளென்க. நளன் தாழ்வு வேறிடங்களில் வெளியானாலும் பாதகமில்லை, மாமன்வீட்டில்வெளியானால் அதுமிக இழிவாம்; ஆதலின், அதைக் குறிப்பிட்டுக் காட்டினால், அதைச் சிந்தித்தாயினும் தன் இழிவு அங்கே தோன்றா திருத்தற்பொருட்டு அவன் இசைந்து அங்கே வருவானென்று கருதியே அவள் அதனையும் அவன் மனத்திற் படும்படி விளக்கிக் காட்டினாள்.

செல்வம் ஒரு நிலையில் நில்லாததாதலின் தமயந்தி அதனைப் 'போற்றறிய செல்வம்' என்றாள். போற்று-தல்விகுதி கெட்ட முதனிலைத்தொழிற்பெயர்; 'போற்றரிய' என்பது 'போற்றுதல் அரிய' என விரியும். நாட்டொடும் என்பதிலுள்ள உம்மை அசை. தோற்றமையும் என்பதிலுள்ள உம்மை-எதிரது

தழுவிய எச்சப் பொருளது; 'இனிமேல் நமக்கு மனவியாகூலம் தீர்வதோடு, முன்னே ஐசுவரியத்தைத் தோற்றமையும் யாவர்க்கும் தோற்றாது' என்று பொருள்தரும்; இதனை இழிவு சிறப்புப் பொருளதாகவுங் கொள்ளலாம். 'தோற்றாதே' என்பதின் ஏகாரம்-அசை. 'எம்பதிக்கே' என்பதின் ஏகாரம்-பிரிநிலை அருளு கென்றான் என்பதில் அகரந் தொக்கது. செம்பதிக்கே என்பதன் ஏகாரம்-அசை; பிரிநிலை யெனலுமாம்; இதிலுள்ள குவ்வுருபு மயங்கி ஏழாம்வேற்றுமை இடப் பொருளில் வந்தது. தேன்-இருமடியாகு பெயர்; இஃது இலக்குமிக்காய், அது தமயந்திக் காயிற்று. இச்செய்யுளில் பல சொற்றொடர்கள், பொருள் முடிபுக்குத்தக இசை யெச்சமாய் வந்தன

நளன் மாமன் வீட்டிற்குத் தான் செல்லல்
தாழ்வென்றுரைத்தல்.

240 சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வர்பாற் சென்றீ
எனக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய
தானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோர் வாள்.

[இ-ள்.] (தமயந்தி அவ்வாறு கூறியதைக் கேட்டு நளன் அதற்கிசையாமல் அவளை நோக்கி) சினம் கதிர் கோபத்தையும் பிரகாசத்தையுமுடைய, வேல்-வேலாயுதம் போன்ற, கண் கண்களையுடைய, மடவாய் இளம்பெண்ணே!, (ஒருமனிதன்) செல்வர்பால்-ஐசுவரிய முள்ளவரிடத்தே, சென்று-போய், எனக்கு ஈ என்னும்-எனக்கு ஏதாவது பொருள் கொடு என்றுரைக்கின்ற, இம்மாற்றம் - இந்தச்சொல்லானது, தனக்கு உரிய - அவனுக்குரிமையான, தானம் - தானத்தை, துடைத்து-கெடுத்து, தருமத்தை - அறத்தை, வேர்பறித்து-வேரைத்தோண்டி யெடுத்து, (அதாவது வேரோடு பிடுங்கி யெறிந்து) மானம் கௌரவத்தை, துடைப்பது அழிப்பதாகிய, ஓர் வாள்-ஒரு வாளாயுதமாகும், கண்டாய்-நீ அறிந்தனையா? [எ-று]

ஒருவன், செல்வரிடத்தே சென்று, "எனக்கு ஏதாவது பொருள் கொடு" என்று கேட்பானாயின் அவ்வாறு கேட்குந் தன்மையானது அவனுடைய தானதருமங்களை யெல்லாங் கெடுத்துக் கௌரவத்தையும் அழித்துவிடு மென்பது இதன் கருத்தாம்; இங்ஙனம் இரப்பதால் இழிவுண்டா மென்பதை "ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற், கிரவி னிளிவந்த தில்" என்னும் திருக்குறளா லுணர்க. இவ்வாறு கூறியதனால் நளன், தன்மாமன் வீட்டிற் சேகி அவன் கொடுப்பதை வாங்கி யுண்டு ஜீவித்தல் இழிவா மென்பதைக் குறித்தா னென்க. வீரர், சினங்கொண்டே யதனைத் தான் அடைதலால் வேலானது சினம் என்னும் அடைமொழி பெற்றது. மடம் என்னும் சொல் மவ்வீறு கெட்டு ஆய் விகுதியோடு புணர்ந்து மடவாய் என வந்தது. தானம்-பிறர் வேண்டாது அவர்க்குப் பொருளை யீதல்; தருமம் - இரப்போர்க்கீதல்

முதலிய குணங்கள் பொருந்திய செய்கை. யாசிப்போர் வேறு தொழில் செய்து பொருள் தேடாமல் அந்தயாசகத்தையே மேற்கொண்டு இரிவர்; அதனால் அவர்களிடம் பொருள் சேராது; பொருளில்லாமற்போகவே தானம், தருமம், சௌரம் எல்லாம் போய்விடும் தானம் என்பதை இடமெனக் கொண்டு அதற்கு நற்பதவியெனப் பொருளுரைப்பினும் பொருந்தும்.

கண்டாய்-என்பது தொனியின் பேதத்தால் வினைப் பொருளைத் தந்து நிற்றது; இது அசைசயெனினும் பொருந்தும். துடைப்பது வினையாலணையும் பெயர். இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகம்; ஆதலின் அடுத்த செய்யுளில் இதன முடிவு கூறப்படும்

இதுவுமது

241. மன்னராய் மன்னர் தமையடைந்து வாழ்வெய்தி
இன்னமுதந் தேக்கி யிருப்பாரேல்—சொன்ன
பெரும்பே டிகளலரேற் பித்தரே யன்றோ
வரும்பேடை மானே யவர்.

[இ-ள்.] அரும் அருமையாகிய பேடை பெட்டையாகிய, மானே-மான் போன்றவளே! (மனிதர்) மன்னராய் அரசராயிருந்தும், (தங்கள் ஐசுவரியம் குன்றிய காலத்தில்) மன்னர்தமை அடைந்து - வேறு தம்மைப் போன்ற அரசர்களிடத்தே சேர்ந்து, வாழ்வு எய்தி வாழ்தலைப் பொருந்தி, இன் அமுதம்- இனிமையான உணவை, தேக்கி-வயிற்றில் நிரப்பிக்கொண்டு, இருப்பாரேல் இருப்பார்களேயானால், அவர் அப்படியிருப்பவர், சொன்ன-(அறிவுடையவர்களால் இழந்தவராக) கூறப்பட்ட, பெரும்பேடிகள் - பெரிய அலிகளாவார்கள், அலரேல் அப்படிப்பட்டவர்க ளல்லாதவரானால், பித்தரே-பைத்தியம் பிடித்தவரே, (ஆதலின், நான் உன்னுடைய தந்தையிடம் வரமாட்டேன் என்று கூறினேன்; [எ-று.]

"மனிதர் அரசராயிருந்தும், வறுமையுற்ற காலத்தில், தங்களைப்போன்ற வேறு அரசர்களிடத்திற்சேர்ந்து ஜீவிப்பார்களேயானால் அவர்கள் பேடிகளாகவேண்டும், அல்லது பைத்தியம்பிடித்தவராகவேண்டும்; ஆதலின், நான் இவ்விழிவு சேருமாறு, ஒரு மன்னனாயிருந்தும் நின் தந்தையாகிய அரசனிடத்தில் வரமாட்டேன்" என்று நளன் தமயந்தியிடம் கூறினான் என்பது இதன் கருத்து பேடி ஆணுருப்பிலும் பெண்ணுருப்பிலும் சேராத மானிடஜன்மம்; இவ்வடிவமுடையார் ஆணிலும்சாராது பெண்ணிலும் சாராது பலராலும் இகழப்படுவர்; அவ்வாறு இகழப்படும் தங்கள் இழிவைக் கருதாது மானமின்றி எங்கும் சஞ்சரிப்பர்; பைத்தியம் பிடித்தவர்களும் மான அவமானம் தெரியாமல் உலகில் சஞ்சரிப்பர்; ஆதலின், இவ்விருவகையாரும் இழிவு கருதாமல் மன்னரைச் சார்ந்து வாழும் மன்னர்க்கு உவமை கூறப்பட்டார்.

மன்னராய் என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. பித்தரே என்பதில் ஏகாரம் தேற்றப்பொருளது. அன்றோ அசை. மான்-உவமையாகுபெயர். முன்பாட்டில் எழுவாயும், இப்பாட்டில் பயனிலையும் இசையெச்சங்களாகக் கூட்டி முடிக்கப்பட்டன.

தமயந்தி தன் பிள்ளைகளை மாத்திரம் வீமனிடம் அனுப்புமாறு நளனிடம் கூறுதல்.

242. செங்கோலா யுன்றன் றிருவுள்ள மீதாயின்
எங்கோன் விதர்ப்ப னெழிநகர்க்கே—நங்கோலக்
காதலரைப் போக்கி யருளென்றாள் காதலருக்
கேதிலரைப் போல எடுத்து.

(இ-ள்.) (நளன் அவ்வாறு கூறக்கேட்ட தமயந்தி) காதலருக்கு-அன்புள்ள பிள்ளைகளுக்கு, ஏதிலரைப் போல - பகைவரைப்போல, (அமைந்து அவர் பிரிவுக்கு வருந்தாமல் அந்நளனை நோக்கி) எடுத்து-தொனியை உயர்த்தி, செங்கோலாய்-செம்மையாகிய கோலையுடைய (அதாவது நீதி தவறாத அரசாட்சியையுடைய) மன்னனே!, உன்தன்-உன்னுடைய, திரு உள்ளம்-அழகியகருத்து, ஈது ஆயின்-இதுவானால், நம்-நம்முடைய, கோலம்-அழகு பொருந்திய, காதலரை-அன்புடைய மக்களை மாத்திரம், எம்-எங்களுடைய, கோன்-மன்னனாகிய, விதர்ப்பன்-விதர்ப்பதேசாதிபதியினது, எழில்-அழகு பொருந்திய, நகர்க்கே - பட்டினத்துக்கே, போக்கி அருள்-அனுப்பியருள்வாயாக, என்றாள்-என்று கூறினாள்; [எ-று.]

நளன், விதர்ப்பன் நகர்க்கேக இசையாமற் போகவே தமயந்தி அவனை நோக்கிப் "பிள்ளைகளை மாத்திரம அங்கே அனுப்புவீராக" என்று கூறினாள் என்பது இதன் கருத்து. தமயந்தி தன் நாயகனை விட்டு நீங்காதிருத்தற்பொருட்டுப் பிள்ளைகளைப் பிரியும் விஷயத்தில் சிறிதும் மனங் கலங்காது தைரியமாய்ப் "பிள்ளைகளை யனுப்பு" என்றதை உரத்த தொனியுடன் கூறினாள்; ஆதலின், ஆசிரியர், "ஏதிலரைப்போல எடுத்துக் காதலரைப்போக்கி அருள் என்றாள்" என்று கூறினார். ஒருவர்க்கு விரோதிகள் தாம் அவர் மீது அன்பில்லா திருப்பர்; அவர்களைப் போலவே இந்தத் தமயந்தியும் தன் பிள்ளைகள் மீது அன்பில்லாமல் அவர்களைப்பிரிய நினைந்தாள்; இவ்வாறு கூறினால் நளன் தன்னைப்பிரியானென்பது அவளுடைய எண்ணம்.

நகர்க்கே என்பதில் ஏ-பிரிநிலைப் பொருளது. உள்ளம் மனம்; அஃதிடவாகு பெயராய் அதிலுண்டாம் எண்ணத்தை யுணர்த்திற்று.

நளன் தன் பிள்ளைகளை வீமன் நகர்க்கழைத்துச் செல்லுமாறு ஒரு வேதியனிடம் கூறல்.

243. பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதலிதன்—தாதைக்குக்

காட்டுநீ யென்றான் கலங்காத உள்ளத்தை
வாட்டுநீர் கண்ணிலே வைத்து.

(இ-ள்.) தமயந்தி அவ்வாறு கூறியவுடனே நளன் அவள் சொற்படி தன் மக்களை அனுப்பத் துணிந்து அவர் பிரிவு குறித்துத் தனக்கு மிக்கவிசன முண்டானதால்) கலங்காத (எத்தகைய துன்பத்திற்கும்) கலக்கத்தை யடையாத (வலிமையுள்ள,) உள்ளத்தை-மனத்தை, வாட்டும் வாடச்செய்கிற, நீர்-ஜலத்தை, கண்ணிலே நேத்திரங்களிலே, வைத்து - தங்கச் செய்து, (அதாவது கண்ணீர் வடித்து) பேதை-பேதமையையுடைய பெண்ணாகிய தமயந்தி, பிரிய-நீங்கும்படி, பிரியாத-எப்பொழுதும் நீங்காத, பேர் அன்பின் - பெரிய அன்பினையுடைய, காதலரை-ஆசை பொருந்திய மக்களை, கொண்டு போய்-அழைத்துக் கொண்டு சென்று, காதலின்-என் விருப்பத்திற் குரியவளாகிய அத்தமயந்தியின், தந்தைக்கு - தந்தையாகிய வீமராஜனுக்கு, நீ காட்டு - நீ காண்பிப்பாய், என்றான்-என்று கூறினான்; [எ-று]

தமயந்தி சொல்லியதைக் கேட்டவுடன் நளன் ஒரு பிராமணனை அழைத்து அவனிடத்தே தன் பிள்ளைகளை ஒப்பித்து, "நீ இவர்களை அழைத்துக்கொண்டு போய் வீமராஜனுக்குக் காட்டு" என்றான் என்பது இதன் கருத்து. பிள்ளைகளைக் காட்டின மாத்திரத்திலேயே தன் மாமன் அவர்களின் நிலைமையை நோக்கி அதன் மூலம் தன்னுடைய நிலைமையை உணர்ந்து கொள்வான் என்று கருதியே நளன், வேறொன்றுஞ் சொல்லாமல், 'காதலரைக்கொண்டு போய் வீமராஜனுக்குக் காட்டு' என்று மாத்திரம் கூறினான். இனி, அந்த வேதியன் போய்த் தன் மாமனிடத்தில் தன்னுடைய விஷயங்களை யெல்லாம் கூறினால் தனக்கு இழிவுண்டாகு மென்று கருதி நளன் இவ்வாறு அவனிடத்தில், "நீ வீமராஜனுக்கு வேறொன்றும் சொல்லாதே; பிள்ளைகளை மாத்திரம் காட்டு" என்று சொன்னானெனினும் பொருந்தும்

நளனுடைய பிள்ளைகள் பிரிவுக்கு வருந்துதல்.

244. தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தாள்
இந்து முகத்தை யெதிர்நோக்கி—எந்தம்மை
வேறாகப் போக்குதிரோ வென்றார் விழிவழியே
ஆறாகக் கண்ணீ ரழுது.

(இ-ள்.) (நளன் இவ்வாறு சொன்னவுடனே அந்தப் பிள்ளைகள் தாய் தந்தையரைப் பிரிவதற்கு வருந்தி) தந்தை-தகப்பனாகிய நளனுடைய, திருமுகத்தை-அழகிய முகத்தை, நோக்கி-பார்த்தும், தமை-தங்களை, பயந்தாள்-பெற்றவளாகிய தமயந்தியினுடைய, இந்து-சந்திரன் போன்ற, முகத்தை-முகத்தினை, எதிர் நோக்கி-நேரில் பார்த்தும், விழிவழியே-கண்களினிடத்தில், கண்ணீர் ஆறாக-கண்ணீரானது ஆற்றைப்போல ஒழுக, அழுது-அழுதுகொண்டு, எம்தம்மை எங்களை, வேறாக-வேறாகும்படி, போக்குதிரோ-அனுப்புகிறீர்களோ, 'என்றார்- என்று சொன்னார்கள்; [எ-று.]

நளன் அவ்வாறுகூறியவுடனே பிள்ளைகள் அவனையும், தமயந்தியையும் பிரிவதற்கு வருந்தி அழுது அவர்களை நோக்கி, "எங்களை வேறாக அனுப்பி விடப் போகின்றீர்களோ?" என்று வினவினார்கள் என்பது இதன் கருத்து.

முகத்தைநோக்கி, எதிர்நோக்கி என்பவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. போக்குதிரோ என்பதில் ஓகாரம் இரக்கப் பொருளதாம்; வினாப் பொருள தெனினுமாம். போக்குதிர் - நிகழ்கால முன்னிலைப் பன்மைவினைமுற்று; இதில், போக்கு-பிறவினைப்பகுதி, திர்-முன்னிலைப் பன்மை விகுதி; இர்-விகுதி யென்றும், த்-எழுத்துப் பேறென்றும் கூறுவது முண்டு.

தமயந்தி பிள்ளைகளைத் தழுவி அனுப்புதல்.

245. அஞ்சனந்தோய் கண்ணி லருவிநீ ராங்கவர்க்கு
மஞ்சனநீ ராக வழிந்தோட—நெஞ்சுருகி
வல்லிவிடா மெல்லிடையாள் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்றாள் புலர்ந்து.

[இ-ள்.] (அவ்வாறு பிள்ளைகள் வருந்திச்சொன்னபோது) வல்லி-கொடியினது தன்மையை, விடா-கைவிடாத, (அதாவது கொடியினது தன்மை பொருந்திய) மெல்-மெல்லிய, இடையாள்-இடையினை யுடைய தமயந்தி, (அவர்களை நோக்கி, 'மக்களே! நீங்கள் என் தந்தை வீட்டிற்குப் போதலே நலம்; நல்லகாலம் வந்தபின் நாமெல்லோரும் ஒன்று சேருவோம்; ஆதலின், நீங்கள் மனங்கலங்காமற் போய்வருவீராக' என்று தேறுதல் கூறித்தனக்கு அவர்களைப்பிரிவதால் மிக்க வருத்த முண்டானபடியால்) அஞ்சனம் தோய் - மைபடிந்திருக்கின்ற, கண்ணில் கண்களில், அருவிநீர்-மலையாறுபோல் வடிகின்ற, கண்ணீரானது, ஆங்கு - அவ்விடத்தில், அவர்க்கு - அந்தப்பிள்ளைகளுக்கு, மஞ்சனநீராக-குளிப்பாட்டும் தண்ணீராய், வழிந்து ஓட - ஒழுகிப் பாயும்படி, நெஞ்சு உருகி - மனம் கலங்கி, புலர்ந்து - மேனிவாடி, மக்களை-தன்பிள்ளைகளாகிய அவர்களை, தன் மார்போடு-தனது நெஞ்சுடனே, (சேர்த்து) புல்லி-அணைத்து; விடா-விட்டு, நின்றாள்-பிரிந்து நின்றாள், (வழிவிட்டு நின்றாள், அதாவது: வழிக்கூட்டி அனுப்பி நின்றாள்; [எ-று.]

பிள்ளைகள் அவ்வாறு கூறி வருந்தியபோது தமயந்தி அவர்களுக்குத் தேறுதல் கூறி வருத்தத்தோடு அவர்களைத் தழுவிக் கொண்டு அனுப்பினாளென்பது இதன் கருத்து. இங்ஙனம் அவர்களைத் தமயந்தி அனுப்பினாளெனவே நளனும் அவ்வாறு கூறி யனுப்பினானென்பதும் அமையும். எனினும், தாயே பிள்ளைகள் பிரிவில் மிக்க துக்கமடையக் கூடியவளாதலின், இங்கு அவளை மட்டும் கூறினார் ஆசிரியர். தமயந்தி பிள்ளைகளை மார்போடணைத்துக்கொண்டழுத போது அவளுடைய கண்ணீர் அவர்களின் உடல் முழுதிலும் வடிந்து ஈரமாக்கியது; ஆதலின் ஆசிரியர், "கண்ணில் அருவி நீர் ஆங்கவர்க்கு மஞ்சன நீராக" என்றார்; மஞ்சனநீர் ஸ்நானஞ் செய்யும்

ஜலம். அவள் அவர்களுக்குத் தேறுதல் கூறியனுப்பினும் துக்கம் சகிக்க முடியாமையால் அங்ஙனம் அழுதாளென்பது பெறப்படும்.

ஆய்-என்னும் எச்சம், ஆக-என வந்தது-போல என்பினுமாம். மார் போடும் என்பதிலுள்ள உம்மை-அசை. ஆங்கு-அசை யெனினுமாம்.

வேதியன், தமயந்தியின் குழந்தைகளை
வீமன் நகர்க்கழைத்துச் செல்லல்.

246. இருவ ருயிரு மிருகையால் வாங்கி
ஒருவன்கொண் டேகுவா னொத்து—வருமறையோன்
கோமைந்த னோடிளைய கோதையைக்கொண் டேகினான்
வீம னகர்க்கே விரைந்து.

[இ-ள்.] (அதன் மேல் அந்த) வரும்-(பரம்பரையாக ஓதப்பட்டு) வருகின்ற, மறையோன்-வேதத்தையுடையவனாகிய (அதாவது வேதத்தையுணர்ந்த) பிராமணன், இருவர் உயிரும்-(நளன் தமயந்தி ஆகிய) இரண்டு பேர்களின் பிராணன்களையும், இருகையால்-இரண்டுகைகளினாலும், வாங்கி பற்றி, கொண்டு ஏகுவான்-கொண்டு செல்பவனாகிய, ஒருவன் ஒத்து - ஒருவனை நிகர்த்து, கோமைந்தனோடு - இராஜகுமாரனையும், இளையகோதை யை இளமையாகிய இராஜகுமாரத்தியையும், வீமன் நகர்க்கே-வீமராஜன் நகரமாகிய குண்டினபுரத்திற்கே, விரைந்து கொண்டு ஏகினான் விரைவாக அழைத்துக்கொண்டு சென்றான்; [எ-று.]

அதன்மேல் வேதியன், தமயந்தி நளன் ஆகிய இருவருடைய உயிர்களையும் ஒருவன் பிரித்துக்கொண்டு போவதுபோல், அவர்களின் குழந்தைகள் இருவரையும் குண்டினபுரத்திற்கு அழைத்துக்கொண்டு போனான் என்பது இதன் கருத்து. 'இருவர் உயிரும் இருகையால் வாங்கி' என்றதனால், அப்பிள்ளைகள் தமயந்தி நளன் ஆகிய இருவருக்கும் உயிரைப் போன்றவர்களென்பதும், அவர்களை அவ்வேதியன் இரண்டுகைகளாலும், கரத்திற்கொருவராகப் பற்றி அழைத்துக் கொண்டு போனானென்பதும் பெறப்படும். ஆடவர்க்கு ஆண்மகவின்பேரிலும் பெண்களுக்குப் பெண்மகவின்பேரிலும் பிரியம் அதிகமாயிருத்தல் உலகவியற்கை யாதலின், இங்கே ஆண்குழந்தையை நளனுடையஉயிரென்றும், பெண் குழந்தையைத்தமயந்தியின் உயிரென்றும் கொள்ள வேண்டும். 'வருமறையோன்' என்பதற்கு 'அங்கேவந்த வேதியன்' எனப் பொருள்கூறினும் அமையும்.

உயிரும் என்பதிலுள்ள உம்மை முற்றுப் பொருளது. ஒருவன் கொண்டேகுவான்' என்பதை, 'கொண்டேகுவான் ஒருவன்' என மாற்றுக; ஏகுவான ஒருவன் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஓடு எண்ணும்மைப் பொருளில் வந்தது. கோதையை என்பதில் எண்ணும்மை தொக்கது இனி ஓடு என்பதை உடனிகழ்ச்சிப் பொருளதாகக்கொண்டு, கொண்டென்னும்

வினையிற் சம்பந்தப் பட்டதெனினும் பொருந்தும்; இங்ஙனங் கொள்ளு மிடத்துக் கோதையை என்பதில் உம்மை விரித்தல் அவசிய மின்று.

**பிள்ளைகள் பிரிந்தபின் நளன் இருந்த நிலைமை.**

247. காத லவர்மேலே கண்ணோட விண்ணோடும்
ஊதை யெனநின் றுயிர்ப்போட—யாதும்
உரையாடா துள்ள மொடுங்கினான் வண்டு
விரையாடுந் தாரான் மெலிந்து.

(இ-ள்) (வேதியன், நளனுடைய பிள்ளைகளை அவ்வாறு அழைத்துக் கொண்டு போனபின்) வண்டு-வண்டுகள், விரை-தேனில், ஆடும்-(நெருங்கி உண்பதற்கு) ஆடுகின்ற, தாரான்-மாலையை அணிந்தவனாகிய நளன், காத லவர்மேலே-பிரியத்தை யுடையவர்களான பிள்ளைகளின் மீது, கண் ஓட-பார்வையானது சென்று கொண்டிருக்கவும், விண் ஓடும் - ஆகாயத்தில் ஓடுகின்ற, ஊதைஎன-காற்றைப்போல, நின்று-நிலைபெற்று, உயிர்ப்பு - பெருமூச்சானது, ஓட-நாசியில் ஓடிக்கொண்டிருக்கவும், மெலிந்து - தேகம் இளைத்து, உரையாதும் ஆடாது-வார்த்தை யொன்றும் பேசாமல், உள்ளம் ஒடுங்கினான் மனம் அடங்கினான், [எ-று.]

வேதியன், அந்தப்பிள்ளைகளை அழைத்துக்கொண்டு போனபிறகு நளன் அவர்களைப்பிரிந்த வருத்தத்தால் பெருமூச்சுவிட்டு மேனியிளைத்து, மனமொடுங்கி வருந்தினான் என்பது இதன்கருத்து. பிள்ளைகள்செல்லுங் காலத்தில் நளன், 'அந்தோ! இவர்கள் நம்மைப் பிரிந்து செல்கின்றார்களே' என்று கலங்கி அவர்களையே நோக்கிக் கொண்டு நின்றான்; அப்போது அக்கவலையால் பெருமூச்சுண்டாயிற்று; மனமும்ஒடுங்கி வார்த்தையும் அடங்கிப்போயிற்று. பெருந்துக்க முடையார்க்கு மனம் அசைவற்று நிற்றலும், பேச்சொடுங்கலும், பெருமூச்சு நிகழ்தலும், இயற்கை. ஆகாயத்தில் சஞ்சரிக்கும் காற்று, எதுவும் தனக்குத் தடையில்லாதபடியால் வேகமாகச்செல்லும்; ஆதலின், அதைப் போல வேகமாக வெளிப்படும் பெருமூசசுக்கு அது உவமை கூறப்பட்டது. மிகுந்த துக்கத்தால் பெருமூச்சு விடுகின்றவர்களுக்கு அசசுவாசம் இடையில் நின்று நின்று வெளிப்படுமாதலின் 'நின்றுயிர்ப் போட' என்பதற்கு, இடையில் நின்று நின்று சுவாசம் வெளிப்பட, எனவும் பொருள் கூறலாம். நின்று என்பதை அசையெனக் கோடலுமொன்று. விரைஆடும்-ஏழாம் வேற்றுமைத் தொகை; விரையில் என வரும்.

**நளன் தேவியோடும் சென்று பாலை நிலத்தைக் காணல்.**

248. சேலுற்ற வாவித் திருநாடு பின்னொழியக்
காவிற்போய்த் தேவியொடுங் கண்ணுற்றான்-ஞாலஞ்சேர்

கள்ளிவே கத்தரவின் கண்மணிக டாம்பொடியாய்த்
துள்ளிவே கின்ற சுரம்.

(இ-ள்) (அவ்வாறு வருந்தி நின்ற நளன் பின்னர் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு) சேல்-கெண்டைமீன்கள், உற்ற-பொருந்தி யிருக்கின்ற, வாவி - தடாகங்களையுடைய, திரு-அழகிய, நாடு-நிடததேசமானது, பின் ஒழிய-தனக்குப் பின்புறத்தே நீங்கும்படி, (அதனைக்கடந்து) தேவியொடும் மனையாளுடனே, காலின்-பாதங்களாலே, போய் நடந்துசென்று, ஞாலம் சேர்-பூமியில் சேர்த்திருக்கின்ற, கள்ளிவேகத்து-கள்ளிமரங்களின் கடுமையினாலே, அரவின் கண்-அம்மரங்களினடியில் வசிக்கின்ற சர்ப்பங்களினிடத்துள்ள, மணிகள் - சிரோரத்தினங்கள், துள்ளி - வெடிப்புற்றுக் குதித்து வீழ்ந்து, பொடியாய்-சாம்பலாகி, வேகின்ற-எரிகின்ற, (அவ்வளவு வெப்பந்தங்கிய) சுரம்-பாலைநிலத்தை, கண்உற்றான்-பார்த்தான், [எ-று]

பிள்ளைகள் செல்வதைக்கண்டு வருந்தி நின்ற நளன், அவர்கள் போன பின்பு தமயந்தியுடனே அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு நிடத நாட்டைக் கடந்து பாலைவனத்தை அணுகிப் பார்த்தான் என்பது இதன் கருத்து. பாலைநிலத்தில் சூரிய வெப்பம் அதிகரித்திருக்கும்; அதனால் அந்நிலத்திலுள்ள பொருள்களெல்லாம் நெருப்புமயமாகவே இருக்கும்; ஆதலின் அங்கே இயற்கையில் வெம்மையுடையதா யிருக்கும் கள்ளி மேலும் அதிகரித்த சூடுள்ளதாயிருக்கும்; அந்த உஷ்ணத்தினால் அதனடியிற் றங்கியிருக்கும் அரவங்களின் சிரோரத்தினங்கள் வெடித்து வீழ்ந்து சாம்பலாயெரியுமென்க. இனி 'பொடியாய்' என்னும் செய்தெனெச்சத்தை, 'பொடியாக' என்னும் செயவெனெச்சம் திரிந்து வந்ததாகக்கொண்டு, "கள்ளிவேகத்து அரவின் கண்மணிகள் தாம் பொடியாய்த் துள்ளிவேகின்ற" தொடருக்கு "கள்ளியின் கடுமையாலே அரவினிடத்தே யுள்ள இரத்தினங்கள் வெந்து பொடியாக (அந்தச சர்ப்பங்கள்) துள்ளி வீழ்ந்து எரிகின்ற" கள்ளி' யினிடத்தே வசிக்கின்ற வேகம் பொருந்திய சர்ப்பங்கள், இனிய கண்ணின் மணிகள் வெந்து பொடியாகத் துள்ளி வீழ்ந்து எரிகின்ற" எனவும் இருவகைப் பொருளுரைக்கலாம்; இவ்விருவகைகளுள் முன்னதில் 'சர்ப்பங்கள்' என்னும் எழுவாய் வருவித்துரைக்க வேண்டி யிருத்தலானும், பின்னதில் எழுவாய் தானே அமைந்திருத்தலானும், பின்னது சற்றுச்சிறந்ததாகக் கொள்ளப்படும்; பின்னதில் சொன்ன கண்ணின்மணியானது கண்ணின் கருவிழிக்குள்ளிருக்கும் உருண்டை வடிவமான கருமணியாம். இதுவே கண்ணிற்குப் பிரதான அங்கம்; இங்ஙனம் கண்ணிற் குள்ளிருக்கும் மணியும் தெறித்து வீழ்ந்தெரியு மென்றதனால் பாலைநில வெப்பத்தின மிகுதிப்பாடு விளங்கும். எனினும் பாலை நிலத்தில் தங்கும் பிராணிகள் இயற்கையில் அதன் வெம்மையைச் சகித்து அவ்விடத்திலேயே தங்குவனவாதலின் அவற்றிற்கு அவ்வெம்மையால் சாக்காடுண்டெனக் கூறுதல் பொருந்தாது;

ஆதலின், சர்ப்பங்கள் வெந்தன வெனக் கூறியதில் பொருத்த மின்மையும், அவற்றின் மணிகளே வெந்தனவெனக் கூறியதில் பொருத்த முண்மையும் உளவாம். ஆகவே இங்குக் கூறிய இருவகை உரைகளும் அத்துணை சிறப்புடையனவல்ல வென்க. பதவுரையில் காட்டிய பொருளினும், வெம்மையைப் பாலை நிலத்தின் மேலேற்றி "கள்ளிவேகத் தாவின் கண்மணிகள் தாம் பொடியாய்த் துள்ளி வேகின்ற சுரம்" என்பதற்கு, "கள்ளியில் தங்குகின்ற வேகமுள்ள அரவினிடத்தே பொருந்திய இரத்தினங்கள் துள்ளி வீழ்ந்து பொடியாகி வேகின்ற (வெப்பத்தை யுடைய) பாலைநிலம்" எனப் பொருள் கூறினும் அமையும்.

தேவியொடும் என்பதில் ஒடு-உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது; உம்-அசை. கண் உறல்-கண்ணிற் பொருந்துதல், அதாவது பார்த்தல். ஞாலல்-தூங்குதல்; ஞாலம்-தூங்குதலை யுடையது; பிராணிகள் உணவுண்டு களித்துத் தூங்குதற்கிடமா யிருத்தலின் பூமி இப்பெயர் பெற்றதென்க. தாம்-அசை. சுரம்-வெம்மை; அஃது ஆகுபெயராய் அதனையுடைய நிலத்துக்காயிற்று.

**கலிபுருஷன், நளனையும் தமயந்தியையும் வஞ்சிப்பதற்குப் அப்பாலை வனத்தில் பக்ஷிவடிவமாக வந்திருத்தல்.**

249. கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப்
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான் - நன்னெ
அஞ்சிப்பா ரீந்த வரசனையுந் தேவியையும் றிக்கே
வஞ்சிப்பான் வேண்டி வனத்து.

[இ-ள்.] நல்நெறிக்கே-நன்மை பொருந்திய நீதி மார்க்கத்துக்கே, அஞ்சி-பயந்து, பார்-பூமியை, ஈந்த-(பகைவனாகிய புஷ்கரனுக்குக்) கொடுத்துவிட்ட, அரசனையும்-மன்னனாகிய நளனையும், தேவியையும் - அவனுடைய மனைவியாகிய தமயந்தியையும், வஞ்சிப்பான்-ஏமாற்றுதற்கு, வேண்டி-விரும்பி, வனத்து-அப்பாலை வனத்தில், கல்நிறத்த-கல்லின் குணமுடைய, (அதாவது கல்லைப்போன்று கடினமான) சிந்தை-மனதையுடைய, கலியும்-கலிபுருடனும், அவன் முன்பாக-அந்நளனுக்கு எதிரில், பொன்நிறத்த-பொன்னின் வர்ணத்தையுடைய, புள்வடிவு ஆய்-பறவையின் வடிவமாகி, போந்து இருந்தான்-போய் ஆங்குத் தங்கியிருந்தான்; [எ-று]

மேற்கூறியபடி நளனும் தமயந்தியும் பாலை வனத்திற் சேர்ந்தபோது கலிபுருஷன் அவர்களை வஞ்சித்து நளனுடைய வஸ்திரத்தையும் பறித்துச் செல்லக் கருதி ஓர் அரிய பறவை வடிவமாய் அந்நளனுக்கு முன்னே போயிருந்தான் என்பது இதன் கருத்து. நளனுடைய ஐசுவரியங்களை யெல்லாம் புஷ்கரனிடத்தே சேரும்படி செய்து அந்நளனை மனைவிமக்களோடு வெளியேற்றி வருத்திய கலிபுருஷன்மேலும் துன்பத்திற்குள்ளாக்கி அவனுடைய ஆடையையும் அபகரித்துச் செல்லக் கருதி அங்கே மாயப்பறவையாய் வந்

திருந்தான். இவ்வாறு வஸ்திரத்தை அபகரித்துச் செல்லுதல் மேல்வருஞ் செய்யுட்களால் உணரப்படும். இச்செய்கையைக் கலி, சிறிதும் இரங்காமல் செய்யத்துணிந்தா னாதலின், அவனை, 'கல்நிறத்த சிந்தைக்கலி' என்றார்ஆசிரியர். உலகத்தி லில்லாத நூதனப்பிராணி யொன்றைக் காணின் அதனைப் பிடித்துப்பார்க்க விரும்புதல் மனிதரின் இயற்கை. ஆதலின், கலியும், "நாம் ஓர் அதிசயப் பிராணியாகச் சென்றால் மாத்திரந்தான் அவர்கள் நம்மை விரும்பிப் பிடிக்க ஆரம்பித்து நமது மாயவலைக்குட் சிக்குவார்கள்; அதிலும் பெண்கள் விரும்பத்தக்க வடிவத்தையே எடுத்துச்செல்லவேண்டும்; ஏனெனில் பெண்கள் தாம் வேடிக்கைப் பிராணிகளில் மிக விருப்ப முடையவர்கள்; அதனால் அவர்கள் விரும்பித் தூண்டுதல் செய்த பின்னரே ஆடவர் அவற்றைப் பிடிக்கச் செல்வார்கள்; ஆபத்திலும் சிக்கிக் கொள்வார்கள்" என்று தமயந்தி விரும்பத் தக்க பொன்னிறப் பறவையாய்ச் சென்றான். இதுபற்றியே ஆசிரியர், 'பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்' எனவுங் கூறினார் நளன் சூதாட்டத்தில் தோல்வியடைந்தாலும், பின்னர் புஷ்கரனோடு போர்செய்து, அரசைக் கைப்பற்றிக் கொள்ளும் ஆற்றலுடையவன்; அப்படி யிருந்தும் அவன், நாமே மனமொப்பிச சூதாடித் தோற்றுவிட்ட அரசை, வேறு வகையாற் கைப்பற்றுதலும் நீதிக்கு விரோதமென்று கருதியே அதனை அவனிடம் விட்டு வந்து விட்டான்; இது பற்றியே அந்நளனை 'நன்னெறிக்கே அஞ்சிப்பாரீந்த அரசன்' என்றார் ஆசிரியர்.

கலியும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியது; 'நளன் முன்னே சென்றதோடு கலியும் இவ்வாறு சென்றிருந்தான்' என்ற பொருளைத் தரும். முன்பாக என்பதில், ஆக-என்பது ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபாகக் கொள்ளப்படும்; இது (நன்-பெ-சூ-ம்) சூத்திரத்தில் 'ஆதி' என்றதிலடங்கும்; இங்ஙனமே, நேராக, பின்னாக, பக்கமாக என்பன போன்றவைகளில் வருதல் காண்க; இனி, 'முன்பாக' என்பதற்கு, 'முன்னே தான் செய்யும் அச்செய்கை நிகழ' எனவும் பொருள் விரிக்கலாம். போந்து என்பது புகுந்து என்பதன் திரிபெனவும், போ என்பதன் புடைபெயர்ச்சி யெனவும்கொள்ளப்படும். நெறிக்கே என்பதன் ஏகாரம் பிரிநிலை; இதனால், நளன் நீதிக்கே அஞ்சினானென்றும். மற்றவற்றிற்கு அஞ்சவில்லை யென்றும் கொள்ளப்படும். அரசனையும் தேவியையும் என்பவற்றி லுள்ள உம்மைகள் எண்ணுப்பொருளன; சிறப்புப் பொருளன வெனக் கோடலு மொன்று; உயர்வாவது நன்னெறிக்கஞ்சிப் பாரீந்ததாம்; இங்ஙனங் கொள்ளுமிடத்து 'இத்தகைய நற்குணமுள்ள அரசனையும் தேவியையும் கூட வஞ்சிப்பான் வேண்டிப் போந்திருந்தான்' எனப்பொருள் விரிக்கப்படும்; இதனால் நளன், தமயந்தி ஆகியவர்களின் உயர்வும், கலியின் கடின சித்தத்தின் இழிவும் விளங்கும்.

**பறவையைப் பிடித்துத் தருமாறு தமயந்தி நளனை வேண்டல்.**

250. தேன்பிடிக்கும் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்-தான்பிடிக்க

பொற்புள்ளைப் பற்றித்தா வென்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயாள் தொழுது.

[இ-ள்] (கலிபுருஷன் அவ்வாறு பறவை யுருக்கொண்டு போயிருந்த போது) புது-புதுமையான (அதாவது: ஆச்சரியம் பொருந்திய), மழலைச் சொல்-மழலை வார்த்தைகளைப்பேசுகின்ற, கிள்ளை-கிளியின் மொழிபோன்ற வாயாள்-வாய்ச் சொற்களை யுடையவளாகிய தமயந்தி, (அப்பறவையைக் கண்டு விரும்பித் தன் கணவனை நோக்கி) தொழுது-வணங்கி, (முற்காலத்திலே) தேன்-வண்டுகள், பிடிக்கும்-(மதுவுண்ணும் பொருட்டுப்) பற்றியிருக்கின்ற, தண்-குளிர்ச்சி பொருந்திய, துழாய்-துளபமாலையை அணிந்த, செம்கண்-சிவந்த கண்களையுடைய, கருமுகிலை கரிய மேகம்போன்ற நிறம்பொருந்திய இராமபிரானை, மான் பிடிக்கச சொன்ன- மாயமானைப் பிடித்துத் தரச் சொல்லிய, மயிலேபோல்-மயிற்சாயலுள்ள பெண்ணாகிய சீதாபிராட்டியைப்போல, தான் பிடிக்க-தான் கையிற்பற்றி அழகுபார்க்கும்படி பொன் புள்ளை-பொன்னிறம் பொருந்திய அப்பறவையை, பற்றித்தா பிடித்துத்தருவாயாக, என்றாள்-என்று கூறினாள்; [எ-று.]

கலிபுருஷன் மேற் கூறியபடி நளனையும் தமயந்தியையும் ஏமாற்றுதற்குப் பொன்னிறப் பறவையாகப் போயிருந்த போது தமயந்தி அதனைப் பார்த்துக் கையிற்பற்றி அதன் அழகை நோக்க விரும்பி, நளனிடம் வணங்கிப் பிடித்துத் தருமாறு கூறினாள் என்பது இதன் கருத்து. இத்தகைய தொழில் ஆடவர்க்கே உரியதாதலின் அவள், தான் அதனைப் பிடிக்கத் துணியாமல் நளனையே பிடித்துத் தருமாறு வேண்டினாள்; அதனோடு தன் சொற்படி அவன் தட்டாமல் அதனைச் செய்தற் பொருட்டு அவனுக்கு வணக்கமுஞ் செய்தாள். இராமபிரான் சீதையுடனே வனத்திலிருக்குங்காலத்தில் அவளைக் கவர நினைந்த இராவணன் தன் செய்கைக் கனுகூலமாக இராமரையும் இலக்குமணனையும் அவளை விட்டு நீங்கும்படி உபாயஞ் செய்ய மாரீசனை அனுப்பினான்; அவன் உலகத்திலில்லா அழகு பொருந்திய மாய மானாகி அவர்களுக்குமுன் வந்துலாவினான். அப்போது சீதை அம்மானைப் பிடித்துத் தனக்குத் தருமாறு இராமரிடம் வேண்டினாள்; அவர் அவ்வாறே அதனைப் பிடிக்கத் துரத்திச் சென்று அஃது அகப்படாமற் போனபடியால் அதன்மீது பாணத்தையேவி அதனுயிரைப் போக்கினார்; உயிர் போகுங் காலத்தில் அம்மானாயிருந்த மாரீசன் தானிட்ட கூதான தொனியால் இலக்குமணனையும் சீதையைவிட்டு நீங்கச் செய்தான்: அத்தருணம் இராவணன் வந்து சீதையை அபகரித்துச சென்றான்; பின் இராமரும் இலக்குமணனும் வருந்தினார்கள். அந்தச் சீதைபோலவே தமயந்தி பறவையைப் பிடித்துத் தரும்படி நளனிடம் வேண்ட, அவன் அவ்வாறே பிடிக்கப் போய்த் தன் வஸ்திரத்தை இழந்து தன் மனைவியுடன் துன்பத்தை யடைந்தான்; ஆதலின் இசசெய்கைக்கு, "தேன் பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை, மான்பிடிக்கச் சொன்ன மயிலே போல்" என்று அக்கதையை உவமை கூறி

ஞர் ஆசிரியர். இதனால், "பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்" என்றபடி ஸ்திரீகள் பின்வரும் நன்மை தீமைகளைப்பகுத்தறிய முடியாதஇயற்கை வாய்ந்த பேதையரென்பதும் அவர்கள் மடமையால் விரும்பும் எதையும் யோசியாமல் செய்பவர்க்குத் துன்பம் வருமென்பதும் உணரப்படும். இவர்கள் மிக்க துயரடைந்த இக்காலத்தில் தமயந்தி இங்ஙனம் பறவையைப் பிடித்து விளையாடக் கருதியது தீய ஊழாலும் நேர்ந்ததென்க.

'தேன் பிடிக்கும்' என்பதற்கு 'மதுசேர்ந்த' எனினும்அமையும். முகில் மயில் என்பன உவமையாகு பெயர்கள் கிளவி, வாய் என்பன ஆகு பெயர்களாய் அவற்றினிடமாக உண்டாம் வார்த்தைகளை யுணர்த்தும்.

நளன் பறவையைப் பிடிக்கப் போதலும், அது
அவனிடமகப்படாமல் அவனை ஏமாற்றுதலும்.

251. பொற்புள் ளதனைப் பிடிப்பா னளன்புகுதக்
கைக்குள்வரு மாபோற் கழன்றோடி—எய்க்கும்
இளைக்குமா போல விருந்தது கண் டன்றே
வளைக்குமா றெண்ணினான் மன்.

[இ-ள்] (தமயந்திஅவ்வாறுகூறியவுடனே) மன்-அரசனாகிய நளனென்பான், பொன்புள் அதனை-பொன்னிறப் பறவையாகிய அதை, பிடிப்பான்-பிடிக்கும் பொருட்டு, புகுத-(அதன் சமீபத்திற்) போக, (அது) கைக்குள் வரும் ஆறுபோல்-கைக்குள்ளே அகப்பட்டுக் கொள்வதைப்போல, (நளன் கிட்டும் வரை பேசாமலிருந்து பாவனை காட்டி அவன் நெருங்கிய வுடன்) கழன்று ஓடி-(அவ்விடத்தைவிட்டுப்) பெயர்ந்துஓடிப்போய், (வருந்தியிளைப்பது போன்றிருந்தது; அவ்வாறு அது) எய்க்கும் ஆறுபோல - நடை ஓயும் விதத்தைப் போலவும், இளைக்கும் ஆறுபோல-தளரும் விதத்தைப்போலவும், இருந்தது கண்டு-இருந்ததைப் பார்த்து, அன்றே-அப்பொழுதே, (அதனை) வளைக்கும் ஆறு-வளைத்துப் பிடிக்கும் விதத்தை, எண்ணினான்-நினைத்தான்

தமயந்தி கூறியதைக் கேட்டவுடனே நளன் அந்தப் பொன்னிறப் புள்ளைப் பிடிக்கப் போனான்; அப்போது அது அவனது கைக்குள் அகப்படுவதைப் போல் பாவனை காட்டி யிருந்து அவன் நெருங்கியவுடன் அவனைவிட்டோடி மீண்டும் நடை ஓய்ந்து தளர்ந்து போனது போன்றிருந்தது. அங்ஙனமிருக்கவே அந்நளன், 'இது ஓடும் சத்தி யற்று நின்றுவிட்டது; இனி இதனை எளிதாகப் பிடித்துக் கொள்ளலாம்' என்று துணிந்தான் என்பதுஇதன் கருத்து. அது மாயப்பறவை யாதலால் இவ்வாறு நளனுக்கு ஆசையை யுண்டாக்கி, அவன் கைக்கு அகப்படுவது போல் நடித்தது. நளன் தன்னுடைய கெட்ட காலத்தால் அதன் வஞ்சனையை உணராமற் போயினான்; ஒரு தீங்குமடையாமல் சாதாரணமாக விருக்கும் ஒரு பறவை இவ்வாறு தளர்ந்து பிடிபடும் நிலைமையில் இருக்குமா வென்று அவன் சிறிதும் சிந்திக்கவில்லை

புள் அதனை-இருபெயரொட்டுப் பண்புத் தொகை; இதனை 'புள்ளை' என்று ஒரு பெயராகவுங் கொள்ளலாம்; அங்ஙனங்கொள்ளு மிடத்து, 'அதனை' என்பதில் அது, அன் என்பவற்றைச் சாரியைகளாகக் கொள்ளவேண்டும். புக-என்னும் வினையெச்சம் புகுத என வந்தது; இதில் த்-சாரியை வருமாபோல், இளைக்குமாபோல் என்பவற்றில் ஆறு என்பது ஈறு குறைந்து ஆ என நின்றது. பின்னுள்ள 'ஆறுபோல' என்பது தீபகமாக்கி, எய்க்கும், இளைக்கும் என்னும் இரண்டு வாக்கியங்களிலும் கூட்டப்பட்டது. எய்க்குமா போல, இளைக்குமா போல என்பவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. இனி எய்க்கும் என்பதை வினைமுற்றாகக் கொண்டு, 'எய்க்கும் இளைக்குமா போல விருந்தது கண்டு' என்ற தொடருக்கு, 'அது இளைத்திருக்கும்; அவ்வாறு இளைப்பது போல இருந்ததைப் பார்த்து' எனவும் பொருள் விரிக்கலாம்; இங்ஙனங் கொள்ளு மிடத்து, 'எய்க்கும்' என்பதை இறந்தகாலம் எதிர்காலமாக மாறி வந்த காலவழுவமைதியாகக் கொள்ளவேண்டும் அன்றே என்பதை அசை யெனவும் கொள்ளலாம். வளைத்தல்-ஒரு பொருளைத் தனக்குள்ளடங்கச் செய்தல்.

நளன் வஸ்திரத்தால் அப்பறவையைப் பிடிக்கலா
மென்று தமயந்தியிடம் கூறுதல்

252. கொற்றக் கயற்கட் கொடியே இருவோரும்
ஒற்றைத் துகிலா லுடைபுனைந்து—மற்றிந்தப்
பொற்றுகிலாற் புள்வளைக்கப் போதுவோ மென்றுரைத்
பற்றகலா உள்ளம் பரிந்து. தான்

[இ-ள்] (அவவாறு அப்பறவையைப் பிடிக்கக் கருதிய நளன் வஸ்திரத்தால் பிடிக்கலாமென்று துணிவுகொண்டு) பற்று-(தமயந்தியினிடத்தில்) ஆசையானது, அகலா-நீங்காத, உள்ளம்-மனத்தில், பரிந்து-அன்பு மிகுந்து, (அத்தமயந்தியை நோக்கி) கொற்றம்-வெற்றி பொருந்திய, கயல்-சேற்கெண்டைமீன்போன்ற, கண்-கண்களையுடைய; கொடியே-கொடிபோன்ற பெண்ணே!, (இத்தப் பறவையோ மிக இளைத்துப் பறக்க முடியாம லிருக்கின்றது; அதனால் எளிதில் அகப்படும்; எனினும், இதைக் கையினாற் பிடிப்பது அருமையாகும்; ஏனெனில், நான் நெருங்க நெருங்க இது சற்றுவிலகி விலகிச்சென்று கொண்டேயிருக்கும்; இதன்மேல் ஒரு வஸ்திரத்தை விரித்தெறிந்தால் இது அதற்குட் சிக்கி எளிதாக நம்மிடம் அகப்பட்டுக் கொள்ளும்; ஆதலின்,) இருவோரும்-நாம் இருவரும், ஒன்றைத் துகிலால்-ஒருவஸ்திரத்தினால், உடைபுனைந்து-ஆடை கட்டிக் கொண்டு, (நான் கட்டியிருக்கும்) இந்தப் பொன் துகிலால்-இந்த அழகிய வஸ்திரத்தினால், (அதாவது; இந்த அழகியவஸ்திரத்தை விரித்தெறிந்து) புள்-இந்தப் பறவையை, வளைக்க-வளைத்துப் பிடிப்பதற்கு, போதுவோம்-செல்வோம், என்று உரைத்தான்;

அந்த மாயப்பறவை அவ்வாறு அகப்படுவது போலவும், ஓடுவதுபோலவும் நடிக்கக் கண்ட நளன், 'இது ஓடச் சக்தியற்று அகப்படுவதுபோ லிருந்தாலும் இதனைக் கையினாற் பிடிப்பது அருமையாகும்; ஆதலின், இதன்மேல் வஸ்திரத்தை விரித்துப் போட்டால் இஃதெளிதில் அகப்பட்டுக்கொள்ளும்' என்று கருதித் தமயந்தியை நோக்கிப் 'பெண்ணே! நீ கட்டி யிருக்கும் ஒரு வஸ்திரத்தை இருவரும் புனைந்து கொண்டு, நான் கட்டி யிருக்கும் வஸ்திரத்தால் இதனை நாம் பிடிப்போம் வா' என்று கூறினான் என்பது இதன் கருத்து. அப்பறவை ஓட முடியாததுபோ லிருப்பினும், நளன் நெருங்கிய போது அகப்படாமல் ஓடிக்கொண்டிருந்த படியால் அவன் இவ்வாறு வஸ்திரத்தாலாவது பிடிக்கலாமென்று கருதிக் கூறினான். இவ்வாறு அந்நளன் கூறவே தமயந்தியும் அதற்கிசைந்தாள்; அதன்மேல் நளன் தமயந்தியின் மேல் வஸ்திரத்தைத் தான் உடுத்துக் கொண்டு தன் வஸ்திரத்தை அவிழ்த்துக் கையில் வைத்துக்கொண்டு புட் பிடிக்க ஆரம்பித்தான். இங்கே தமயந்தியின் மேலாடையை நளனும் புனைந்து கொண்டான் என்றதனால், அவ்வஸ்திரத்தை இரண்டாகத் துண்டித்து அவ்விரண்டிலொருதுண்டை நளன் உடுத்திக் கொண்டானெனக் கொள்ளலாகாது; ஒரே வஸ்திரத்தைத் துண்டியாமல் நளன் பாதியும், தமயந்தி பாதியுமாக அணிந்துகொண்டார்களென்று கொள்ளவேண்டும். நளனுக்கும் தமயந்திக்கும் எப்படியேனும் பறவையைப் பிடிக்க வேண்டு மென்னும் விருப்பம் அதிகரித்திருந்தமை யானும், தமயந்தி நளன் விருப்பப்படியே எதையும் தட்டின்றி முடிக்கத் தக்கவளாதலானும், 'நளன், புள்வலைக்கப் போதுவோ மென்றுரைத்தான்' என்றதனாலேயே அவள் இதற்கிசைந்தா ளென்பதும், நளன் கூறியபடியேசெய்கை நிகழ்ந்த தென்பதும் சொல்லாமலே அமையும்.

கொற்றம் என்பதைக் கண்ணுக்கேற்றுக; கண்ணுக்கு வெற்றியாவது ஆடவரை மயக்கி வெல்லுதலாம். கொடி உவமையாகு பெயர். 'இருவேமும்' எனத்தன்மைப் பன்மையில் வருதற்பாலது, 'இருவோரும்' எனப்படர்க்கையில் வந்தது இடவழுவமைதி யெனப்படும்; "ஒருமையிற் பன்மையும் பன்மையிலொருமையும், ஓரிடம் பிறவிடந்தழுவலுமுளவே" என்பது (நன்-பொ உ-கூ) ஆம் சூத்திரம். 'உள்ளம் பரிந்து' என்னும் சினைவினை, 'நளன்' என்னும் முதலொடு சேர்ந்து முடிந்தது.

### நளன் ஆடையை எறிந்து பறவையைப் பிடித்தல்.

253. எற்றித் திரைபொரநொந் தேறி யிளமணலிற்
பற்றிப் பவளம் படர்நிழற்கீழ்—முத்தீன்று
வெள்வளைத்தா யோடுநீர் வேலைத் திருநாடன்
புள்வலைத்தா னுடையாற் போந்து.

[இ-ள்] திரை-அலைகள், எற்றி-(தங்களை மேலாக) வீசி, பொர-தங்கள் மேல் மோத, நொந்து-வருந்தி, இளமணலில்-(கரை யோரத்தி லிருக்கும்) மென்மையான குறுமணலிலே, ஏறி - ஊர்ந்து சென்று, பற்றி - பூமியைச சார்ந்து, பவளம்-பவளக்கொடிகள், படர்-படர்ந்ததனு லேற்பட்ட, நிழல் கீழ்-நிழனினிடத்தே, முத்து ஈன்று-முத்துக்களைப் பெற்று, வெள்வளை-வெண்மை நிறம் பொருந்திய சங்குகளாகிய. தாய்-தாய்கள், ஓடும்-மீண்டும் நீருக்குள் ஓடுகின்ற, வேலை சமுத்திரஞ் சூழ்ந்த, திரு-அழகிய, நாடன்-நிடத நாட்டையுடையநளன், (மேற்கூறியபடியே தமயந்தியின் ஆடையைப் புனைந்து கொண்டு தன் வஸ்திரத்தை அவிழ்த்துக் கையில் வைத்துக் கொண்ட பின்) போந்து-முன்னே போய், ஆடையால் - அவ்வஸ்திரத்தினலே, புள்-அந்தப் பறவையை, வளைத்தான்-(ஓடாமல்) தடுத்தான், (அதாவது அவ்வஸ்திரத்தை மேலே எறிந்து அப்பறவை அதற்குட் சிக்கும்படி செய்தான்.

மேற்கூறியபடி தமயந்தியின் வஸ்திரத்தைப் புனைந்து கொண்டு தன் ஆடையை அவிழ்த்து வைத்துக்கொண்ட நளன் அதை விரித்து அப்பறவை மேலெறிந்து அதனை அவ்வஸ்திரத்தால் வளைத்தானென்பது இதன்கருத்து சமுத்திரத்தின் அலைகள் சங்குகளை மோதிக் கரையிலெறியும்; அசசங்குகள் கருப்ப முதிர்ந்தன வாதலின், அதனல் வருந்தி அசசமுத்திரக் கரையின் இளமணலிலிருக்கும் பவளக்கொடிகளின் நிழலில் முத்துக்களை யீன்றுமீண்டும் அக்கடல் நீரில் ஓடும். அலை மோதியதா லேற்பட்ட உடலசைவு குற் கொண்ட சங்குகள் முத்தை யீனுதற் கேதுவாயிற்று. இங்ஙனம் கூறியதனல் நிடதநாடு கடல்வளமுடைய தென்பது பெறப்படும். நிடதநாடு மத்திய இந்துஸ்தானத்தின் கிழ்ப்புறமாக வங்காள விரிகுடாவை அடுத்துள்ளது; ஆதலின் அதற்குக் கடல்எல்லையுமுண்டெனக.

எற்றுதல்-வீசுதல், அடித்தல். "அல்வழி இஐமுன்னராயின், இயல்புமிகலும்விகற்பமுமாகும்" என்ற(நன்-உயி-பு-௩௯-ஆம்)சூத்திரவிதிப்படி வளைத் தாய் என்னும் பண்புத்தொகையில் வலிமிக்கது. வேலை-வேலா; வடசொல்.

**நளனுடைய வஸ்திரத்தைப் பறவை அபகரித்துச் செல்லல்.**

254. கூந்த லிளங்குயிலுங் கோமானுங் கொண்டணைத்த
பூந்துகில்கொண் டந்தரத்தே போய்நின்று—வேந்தனே
நன்றுடு தோற்பித்தோ னனேகா ணென்றதே
பொன்றுடு மானிறத்த புள்

[இ-ள்.] (அவ்வாறு நளன் வஸ்திரத்தை அப்பறவையின் மேற்போட்டவுடன்) கூந்தல்-குழலையுடைய, இளம்-இளமைபொருந்திய, குயிலும்-குயிலை ஒத்த தமயந்தியும், கோமானும்-அந்நள மகாராஜனும், கொண்டு - கைக் கொண்டு, அணைத்த-(பின் நளன் அப்பறவையின் மேலெறிந்து அதனை)

வளைத்த, பூ-அழகிய, துகில்-வஸ்திரத்தை, கொண்டு-தூக்கிக்கொண்டு, அந்தரத்தே-விண்ணிலே, போய்நின்று-பறந்து சென்றுநின்றுகொண்டு, பொன்-பொன்னும், நாடு-அதனை யடைதற்கு எண்ணுகின்ற, மால்-பெருமை தங்கிய நிறத்த-நிறத்தினையுடைய, புள்-அந்தப்பறவையானது (நளனை நோக்கி) வேந்தனே-அரசனே!, நல்நாடு-உன்னுடைய நல்ல நாட்டை தோற்பித்தோன்-(உன்னைத்) தோற்கும்படி செய்தவன், நானே-நானே யாவன், காண் - நீ அறிந்து கொள்வாய், என்றது. என்று கூறிற்று; [எ-று.]

நளன் அவ்வாறு வஸ்திரத்தை மேலே யெறிந்தவுடன் அந்தப் பறவையானது அதனைத் தூக்கிக் கொண்டு மேலே பறந்து போய் நின்று நளனை நோக்கி, 'மன்னனே! உன்னை நாட்டை விட்டு வெளியேறும்படி செய்தவன் நானே' என்று கூறிற்று என்பது இதன் கருத்து. கலிபுருஷனே இவ்வாறு பறவை வடிவாக வந்து நளனை ஏமாற்றினு னாதலின், 'நன்னாடு தோற்பித்தோன் நானே காண்'' என்று அப்பறவை கூறியதை உயர்திணை யாண்பால் முடிபாகக் கூறினர் புலவர். "நன்னாடு தோற்பித்தோன் நானே காண்" என்றதனால், 'அவ்வாறு நாட்டை யிழக்கச் செய்தது மன்றி இப்போதுஉன்னுடைய ஆடையையும் கவர்ந்து செல்ல வந்தேன்' என்பது வெளிப்படும்.

இது கலிபுருஷன் செருக்காற் கூறியதாம். நளன் முதலில் தன் ஆடையைக்களைந்து தமயந்தியின் கையிற்கொடுத்து விட்டுப்பின்னர் அவளுடைய ஆடையின் ஒருபாகத்தைக் கட்டிக் கொண்டான். அவன் அவ்வாறு கட்டிக் கொள்ளும்வரை தமயந்தி அவனுடைய ஆடையை வைத்துக் கொண்டிருந்தாள்; அதன்மேல் நளன் அவள் கையி லிருந்த அவ்வஸ்திரத்தை வாங்கிப் பறவையின் மேல் விரித்தெறிந்தான். ஆகவே நளனுடைய ஆடையை இருவரும் கைக்கொண்டவராகிறார்கள்; அங்ஙனம் கைக் கொண்டாலும் பின்னர் நளன் ஒருவனே வஸ்திரத்தை அப்பறவையின் மீது எறிந்தவனாகிறான்; ஆதலின், "குயிலுங்கோ மானுங் கொண்டணைத்த பூந்துகில்" என்ற தொடருக்குத் "தமயந்தியும் நளனும முதலிற் கைக்கொண்டு பின்னர் நளன் அப்பறவையின் மேலெறிந்து அதனை வளைத்த துகில்'' என்று பொருள் விரிக்கப் பட்டது. இங்ஙனங் கொள்ளாமல் இருவருமே அவ்வஸ்திரத்தைக் கொண்டு பறவையை அணைத்தார்களெனின், மேலைச் செய்யுளில், "திருநாடன் புள் வளைத்தான் ஆடையாற் போந்து" என்றுரைத்ததற்கு மாறுபடுமென்க.

குயில்-தமயந்திக்கு உவமையாகு பெயர். அணைத்த - பெயரெச்சம். பொன்நாடு மால்நிறம்'' என்றதனால், அப்பறவையின் நிறம் பொன்னிறத்தினும் உயர்ந்ததென்பது பெறப்படும். 'பொன்நாடு' என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. இனி, "பொன்னாடுமாணிறத்த" என்பதை, "ஆடுபொன் மால் நிறத்த''எனமாற்றி 'மேலே பறந்து நின்று ஆடுகின்ற பொன்போன்ற பெருமைதங்கிய நிறத்தினையுடைய'' எனப் பொருள்விரிப்பினும் அமையும் பறவைகள் மேலேபறந்தபடியே நிற்கும்போது சிறகுகளை அசைத்தாடுவது.

இயற்கை. அந்தரத்தே-என்பதில் ஏகாரம் பிரிநிலை; என்றதே-என்பதில் ஏ-அசை. காண்-என்பதை அசை யெனக் கோடலு மொன்று.

நளனுடைய ஆடையைப் பறவை அபகரித்துச்
சென்றபின் அந்நளனும் தமயந்தியும் இருந்த
நிலைமை.

255 காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கும்
ஆவிபோ லாடையுமொன் றானதே—பூவிரியக்
கள்வேட்டு வண்டுழலுங் கானத் திடைக்கனகப்
புள்வேட்டை யாதரித்த போது.

(இ-ள்) பூ-மலர்கள், விரிய-மலர, கள்-அவற்றிலுள்ள தேனை; வேட்டு-(பருக) விரும்பி, வண்டு-வண்டுகள், உழலும்-(அங்கு மிங்கும்) திரிகின்ற, கானத்திடை-அக்காட்டினிடத்திலே, கனகம் - பொன்னிறமாகிய, புள்-பறவையின், வேட்டை-வேட்டையை, (அதாவது: அந்தப் பறவையைப் பிடிப்பதை) ஆதரித்த போது-(நளனும் தமயந்தியும்) விரும்பிய காலத்தில், (அப்பறவை மேற்கூறியபடி நளனது வஸ்திரத்தை அபகரித்துச செல்ல) காவி போல்-நீலோற்பலம் போன்ற, கண்ணிக்கும்-கண்களையுடையஅத்தமயந்திக்கும், கண்ணி-மாலையைத் தரித்த, அம்-அழகிய, தோள் புயங்களையுடைய, காளைக்கும்-காளைபோன்ற குமாரனாகிய அந்நளனுக்கும், ஆவிபோல்-(ஒன்றாயிருக்கும்) உயிரைப்போல, ஆடையும்-வஸ்திரமும், ஒன்று ஆனது-

நளனும் தமயந்தியும் அம்மாயப் பறவையைப் பிடிக்க விரும்பி நளன் அதன் மீது வஸ்திரத்தை யெறிய அஃ்சதனைக் கொண்டு சென்ற போது அவ்விருவருக்கும் ஆவி ஒன்றாயிருப்பது போல ஆடையும் ஒன்றாய் விட்டது என்பது இதன் கருத்து. வேட்டை பறவை, மிருகம்முதலியவற்றைப் பிடித்தற்கும், கொல்லுதற்கும் உள்ள பெயர்; இத்தொழில் வேடர்களால் செய்யப்படுவது ஆதலின், இதற்கிப்பெயர் ஏற்பட்டது; இது வேடர் தொழிலெனினும், தேசக்ஷேமத்தின் பொருட்டும், வேறுகாரணமாகவும் அரசர்களும் இதனைச் செய்வது இயல்பு; ஆதலின், நளனும் இங்கு இதனைச் செய்தான் என்க நளன் தமயந்தியாகிய இருவரும் ஒருவர்மீ தொருவர் மிக்க அன்புடையவர்; ஆதலின், அவ்விருவரில் ஒருவருடைய உயிர் போனால் மற்றவருடைய உயிரும் போய் விடும். ஒருவருடைய உயிர் நிலைத்தால் மற்றவருடையஉயிரும் நிலைக்கும்; இதுபற்றி அவ்விருவரின் உயிரும் ஒருதன்மைத்தாம். இவ்வாறு இருவர்க்கும் உயிர் ஒன்றாயிருப்பதுபோல அத்தருணத்தில் வஸ்திரமும் ஒன்றாய் விட்டது; அதாவது இருவரும் ஒரே ஆடையை அணிந்து கொண்டிருந்தாகள். அதனால், ஆசிரியர், "காவிபோற் கண்ணிக்கும் கண்ணியந்தோட் காளைக்கும் ஆவிபோல் ஆடையுமொன்றானதே" என்றார்

ஆடையும் என்பதிலுள்ள உம்மை-இறந்தது தழுவிய எச்சவும்மை; முன்னே ஒன்றாயிருக்கும் ஆவிபோல இப்போது ஆடையும் ஒன்றானது என்று பொருள் விரிக்கப்படும். கண்ணிக்கும் காளைக்கும் என்பவற்றின் உம்மைகள் எண்ணுப் பொருளன. காளை-நளனுக்கு உவமையாகு பெயர். ஆனதே-என்பதில் ஏ-அசை. விரிய-வினையெச்சம். இடம்-ஏழாம் வேற்றுமைச்சொல்லுருபு, சோலையில் மலர்கள் பற்பல விடங்களில் மலர்ந்திருக்கு மாதலானும் வண்டுகள் தேனை விரும்பி ஒவ்வொரு மலரிடத்தும் போய்ப் போய் மொய்த்துக் கொண்டிருக்குமாதலானும், "பூவிரியக்கள்வேட்டு வண்டுழலுங்கானத்திடை" என்று சிறப்பித்துக் கூறினார் ஆசிரியர்.

### தமயந்தி கலியை நிந்தித்தல்.

256. அறம்பிழைத்தார் பொய்த்தா ரருள்சிதைத்தார் மானத்
திறம்பிழைத்தார் தெய்வ மிகழ்ந்தார்—புறங்கடையில்
சென்றார் புகுநரகஞ் சேர்வாய்கொ லென்றழியா
நின்றாள் விதியை நினைந்து.

[இ-ள்] (அத்தருணத்தில் தமயந்தி அவ்வாறு ஆகாயத்தில் பறவைவடிவமாய்ப் பறந்து நின்று சொன்ன கலிபுருஷனை நோக்கி, 'நீ எங்கட்கு இத்தகைய தீங்கைச் செய்தபடியினாலே உலகத்தில்) அறம்-தருமத்தினின்றும், பிழைத்தார்-தவறினவர்களும், பொய்த்தார்-பொய்பேசினவர்களும், அருள்-கிருபையை, சிதைத்தார்-கெடுத்தவர்களும், மானத்திறம்-கௌரவத்தின் உயர்வினின்றும், பிழைத்தார்-தப்பினவர்களும், தெய்வம்-தெய்வத்தை, இகழ்ந்தார்-நிந்தித்தவர்களும், புறங்கடையில்-ஒருவருடைய வீட்டின் வெளிவாயிலில், சென்றார் யாசிக்கும் பொருட்டுச் சென்றவர்களும், (ஆகிய இவர்கள்) புகு-சேர்கின்ற, நரகம்-நரகத்தில், சேர்வாய்-அடைவாய், என்று-என்று நிந்தித்துச்சொல்லி, விதியைநினைந்து-(தனக்கும் தன் நாயகனுக்கும் நேர்ந்த கெட்ட)விதியைஎண்ணி, அழியா-மனங்கலங்கி, நின்றாள் வருந்திநின்றனள்

கலிபுருஷன் அவ்வாறு இறுமாந்து கூறியதைக் கேட்டவுடனே, "ஒரு பகையுமில்லாத நமக்கு இவன் ஏன் இத்தீங்கினை இயற்ற வேண்டும்; இவ்வாறு நல்லோர்க்குத் தீமை செய்தபடியால் இவன் மகா பாதகனே" என்று தமயந்தி அவன்மீது வெறுப்புற்றாள்; அதனால் அவனை, "நீ, அறம்பிழைத்தார் முதலியவர்கள் சேரும் நரகத்தை அடைவாய்" என்று நிந்தித்துப் பேசினாள்; அவ்வாறு பேசிய அவளுக்கு "எல்லாம் தலை விதிப்படியே நடக்கும்; ஆதலின், அவ்விதியால் நமக்கேற்பட்ட துன்பத்திற்கு அவனை பழிப்பதிற் பயனில்லை" என்னும் அறிவு தோன்றிற்று. அதனால் அவள், பின்னர் அவனை நிந்தித்ததை நிறுத்தி விட்டு விதியை நினைந்து மனங்கலங்கி நின்றாள் என்பது பெறப்படும். அறம்பிழைத்தல், பொய்த்தல், அருள் சிதைத்தல், மானங்கெடல், முதலியன போலவே பிறர்க்குத் தீங்கு செய்தலும்

மகா பாதகச் செயலாதலின், 'அவற்றைச் செய்வார் அடையும் நரகத்தை எமக்கு இத்தகைய தீங்கு செய்த நீயும் சேர்வாய்' என்றாள்.

அறம் பிழைத்தார், திறம் பிழைத்தார் என்பன நீக்கப்பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமைத்தொகைகள். பிழைத்தல்-தவறுதல். அறம், மானத் திறம் இவற்றினின்றும் பிழைத்தலாவது இவற்றை விட்டு நீங்குதலாம்; அதாவது இவற்றைச் செய்யாதிருத்தலாம். பிழைத்தார், பொய்த்தார், சிதைத்தார், இகழ்ந்தார், சென்றார் என்பவற்றில் எண்ணும்மைகள் தொக்கன புறம்-வெளி; கடை-வீட்டின் கடைப்பாகம், அதாவது வாயில்; இவ்விடம் வெளியிலிருந்து உட்செல்வார்க்கு முதற்பாகமாயினும் வீட்டினுள்ளிருந்து வெளிச்செல்வார்க்குக் கடைப்பாகமாம். வெளியிலிருப்பாரினும் உள்ளிருப்பாரே சிறந்தாரும் வீட்டிற்குரியாரு மாதலின் அவர் பொருட்டேற்பட்ட கடையென்பதே சிறந்ததாம்; இக்காரணம் பற்றியே வாயிலுக்குக் கடையென்னும் பெயர் வழங்கலாயிற்று; ஆகவே 'புறக்கடை' என்பது 'வெளிவாயில்' எனப் பொருள்பட்டு நின்றது; வீட்டின் பிற்பக்க வயிலுக்கும் இப்பெயரே வழங்கும்; அதற்கும் இதுவே காரணமாகக் கொள்ளப்படும். யாசகத்தின் பொருட்டுச் செல்வோரே தங்கள் இழிவுகுறித்து உட்புக அஞ்சி வெளியில் நிற்பர்; மற்றையர் உட்புகும் உரிமை பூண்டவராவார்; இக்காரணத்தால் 'புறங்கடையில் சென்றார்' என்பது யாசகரையே குறிக்கும்; ஆதலின் இத்தொடரோடு; 'யாசிக்கும் பொருட்டு' என்னுஞ் சொற்கள் இசையெச்சமாகக் கூட்டியுரைக்கப்பட்டன. புகு-வினையெச்சம்; சொல-அசை. அழியா செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

தமயந்தி நளனுக்குத் தேறுதல் கூறி அவ்விடத்தை
விட்டுச் செல்லுதற்கு அவனை அழைத்தல்.

257. வையந் துயருழப்ப மாயம் பலசூழ்ந்து
தெய்வங் கெடுத்தாற் செயலுண்டோ—மெய்வகையே
சேர்ந்தருளி நின்றதனிச் செங்கோலா யிங்கொழியப்
போந்தருளு கென்றாள் புலர்ந்து.

(இ-ள்.) (அவ்வாறு கலிபுருஷனை நிந்தித்துக் கூறிய தமயந்தி நளனை நோக்கி) புலர்ந்து-துக்கத்தால் மேனி வெதும்பி, மெய்வகையே-உண்மையின் விதத்தையே; சேர்ந்து-அடைந்து, அருளி-எவர்க்கும் கிருபையைச் செய்து, நின்ற நிலைபெற்ற, தனி-ஒப்பற்ற, செங்கோலாய்-செங்கோலையுடைய மன்னனே, (இத்துன்பம் நமக்குத் தெய்வ கட்டளைப்படியே நேர்ந்தது; ஆதலின் பிறரை நோவதில் பலனில்லை; இதற்கு நம்மாற் செய்வதியாது?) வையம் இப்பூமியிலுள்ளவர்கள்; துயர்-உழப்ப-துன்பத்தால் வருந்தும்படி, பலமாயம்-பலவஞ்சனைகளை, சூழ்ந்து-எண்ணிசெய்து, தெய்வம்-தெய்வமே, கெடுத்தால்-(இவ்வாறு நம்மைக்) கெடுக்குமானால், (அச்செய்

க்கைக்கு) செயல்-நம்மால் செய்யத்தக்க எதிர்ச்செய்கை, உண்டோ-உளதோ, (இல்லை; இனி) இங்கு-இவ்விடம், ஒழிய-நம்மைவிட்டு நீங்கும்படி, போந்தருளுக-வருவீராக, என்றாள்-என்று கூறினாள்; [எ-று.]

மேற்கூறியபடி கலியை சிந்தித்துப் பேசிய தமயந்தி, 'இது நம்முடைய பழைய தீவினைக்கீடாகத் தெய்வ கட்டளையால் நேர்ந்ததாகும்; இதற்காக அக்கலியை நோவதிற் பயனில்லை' என்று கருதி அச்சமயத்தில் வருந்தி நின்ற நளனை நோக்கி, "நாதா! நீர் இப்பிறப்பில் நீதியோடு அரசு புரிந்து வந்திருப்பினும் முற்பிறப்பில தீவினை செய்திருக்கக்கூடும்; அதற்காகவே தெய்வ கட்டளையால் இத்துன்பங்கள் நேர்கின்றன; இவ்வாறு தெய்வமே நம்மைப் பார்த்துக் கெடுக்கும்போது அச்செய்கைக் கெதிராக நம்மால் என்ன செய்யவியலும்; ஆதலால் நீர் வருந்தாமல் இவ்விடத்தை விட்டு வருவீராக" என்று அழைத்தாளென்பது கருத்து. நளன் கெட்டதற்கு உலகத்தார் மிகுதியும் வருந்தினார்களாதலின், தமயந்தி, 'வையந்துயருழப்ப மாயம் பலசூழ்ந்து தெய்வம் கெடுத்தால்" என்றாள், மனிதர்க்குத் தெரியாமலே தெய்வம் விதிப்பயனை அவரிடம் சேர்ப்பதாற் அஃதொரு மாயச்செயலாம்; அதுபற்றியே 'மாயம்பல சூழ்ந்து' என்றாள். தெய்வங் கெடுத்தலை வையத்தின் மேலேற்றித் 'தெய்வம் உலகத்தாரைக் கெடுத்தால் அவர்களால் என்ன செய்ய முடியும்' எனப் பொருளுரைப்பினும் அமையும்.

வையம் இடவாகுபெயர். துயர் உழப்ப-மூன்றும் வேற்றுமைத் தொகை. வகை-பகுப்பு, விதம்; மெய்யின் விதமாவது உண்மை வகுப்பைச் சேர்ந்த காரியமாம் வகை என்பதில் ஏகாரம் பிரிநிலை. அருளுக என்றாள் என்பது அகரந் தொகுத்து அருளுகென்றாள் என வந்தது.

சூரியன் அஸ்தமித்தல்.

258. அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக வாங்கழலும்
வெந்தழலை யாற்றுவான் மேல்கடற்கே—எந்தை
குளிப்பான்போற் சென்றடைந்தான் கூரிருளாற் பாரை
யொளிப்பான் போற் பொற்றே ருடன்.

(இ-ள்) (தமயந்தி அவ்வாறு கூறியபின்பு அவளும் நளனும் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்; அவவாறு அவர்கள்) அந்த நெடுஞ்சுரத்தின் மீது-அந்த நீண்ட பாலைவனத்தின் மேல், ஏக-போக, (அத்தருணத்தில்) ஆங்கு ஆவ்விடத்திலே, அழலும்-தகிக்கின்ற, வெம்தழலை-வெப்பமான அக்கினியின் சூட்டை, ஆற்றுவான்-தணித்துக் கொள்வதற்கு, மேல்கடற்கு-மேற்குச் சமுத்திரத்தில், குளிப்பான்போல்-மூழ்குகின்றவனைப் போலவும், (இந்தப்பூமி ஒளிப்படையாகத் தோற்றிக்கொண்டிருப்பதனால், நளனுக்குத் துன்பத்தையே விளைவித்துக் கொண்டிருக்கின்றது; இதனை மறைத்து விட்டால் அவனுக்கு இத்தகைய துன்பம் விளையாது) ஆதலால்,

இப்பூமியை மறைத்துவிடவேண்டும் என்று நளன்மீது இரக்கங்கொண்டு) கூர்இருளால்-மிகுந்த இருட்டினாலே பாரை-இப்பூமியை, ஒளிப்பான்போல்-மறைப்பவனைப்போலவும், எந்தை-என் தந்தையாகிய சூரியன், பொன்தேருடன்-அழகிய இரதத்துடனே, சென்று-(மேற்குச சமுத்திரத்தில்) போய், அடைந்தான்-சேர்ந்தான்; [எ-று]

தமயந்தியும் நளனும் அவ்விடத்தை விட்டு அப்பாலை வனத்தில் புறப்பட்டுப்போகுங் காலத்தில், சூரியன் அப்பாலை வனத்தின் வெம்மையால் தனக்கேற்பட்ட உஷ்ணத்தைத் தணித்துக்கொள்ள மேற்குக் கடலிற் போய்க் குளிப்பவன் போலவும், நளனுக்குத் துன்பஞ் செய்யும் பூமியை அவனுக் கிரங்கி இருட்டால் மறைப்பவன் போலவும் மேற்றிசைக் கடலிற் போய் மறைந்தான் என்பது இதன் கருத்து இங்குச சூரியன் அஸ்தமித்ததை, பாலைநிலத்தாலேற்பட்ட வெம்மையை ஆற்றிக்கொள்ள மேற்குக் கடலிற் குளிக்கப்போனது போலவும், நளனுக்கிரங்கிப் பூமியை இருட்டால் மறைத்தது போலவும் கூறினார் ஆசிரியர். சூரியன் மறைந்தவுடன் உலகத்தில் இருள் சூழ்வது இயற்கையாதலின், அவ்விருள் பூமியை மறைக்கும் பொருட்டுச சூரியனால் ஏற்படுத்தப் பட்டதாகக் கூறப்பட்டது. பகற்காலத்தில் உலக காரியங்கள் நடைபெறும்; இராக்காலத்தில் ஒடுங்கும்; ஆகலின், உலகத்தில் இருள் பரவும்படி செய்துவிட்டால் நளனுக்குத் துன்பமில்லாதிருக்குமென்று சூரியன் நளன் பொருட்டிரங்கினானென்க. சூரிய வெப்பத்தால் உடல் வியர்த்தவர்கள் நீரில் குளித்தல் இயல்பு. ஆதலின் இங்குச் சூரியனும் குளிக்கச் சென்றானென்க. சூரியன் உலகத்தை ஆதரிக்கும் முக்கிய கர்த்தாவாதலின் அவனை, 'எந்தை' என்றார் ஆசிரியர்.

மீது-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. அந்த-அகரச் சுட்டின் விகாரம். நெடு-மையீறு கெட்ட பண்புச் சொல்லடி. எக-வினையெச்சம். ஆற்றுவான்-வினையெசசம். கடற்கே-ஏழாம் வேற்றுமை நான்காம் வேற்றுமையாக மயங்கிவந்த உருபு மயக்கம். எந்தை என் தந்தை என்பதன்மரூஉ.

நளன் தமயந்தியுடனே இருளில் செல்லல்.

259. பானு நெடுந்தேர் படுகடலிற் பாய்ந்ததற்பின்
கான மடம்பின் கவட்டிலைகள்—மானின்
குளம்பேய்க்கு நன்னுடன் கேதையொடுஞ் சென்றான்
இளம்பேய்க்குந் தோன்றா விருள்.

(இ-ள்.) (மேற்கூறியபடி) பானு சூரியனுடைய, நெடும் தேர்-உயர்ந்த தேரானது, படு-(தினந்தோறும் தான்) மறைகின்ற, கடலில்-மேற்குக் கடலிலே, பாய்ந்ததன்பின்-புகுந்த பிறகு, கானம்-காட்டில், அடம்பின், அடம்பங்கொடிகளின், கவடு-இருபிளவாகிய, இலைகள் இலைகளானவை-மானின்-மானினது, குளம்புஏய்க்கும்-குளம்புகளை நிகர்த்திருக்கின்ற, நல்

நாடன்-நல்ல நாட்டையுடையவனாகிய நளன், கோதையொடும்-கூந்தலையுடைய பெண்ணாகிய தமயந்தியுடனே, (மேற்கூறியபடி நடந்து) இளம்பேய்க்கும்-இளமையான பைசாசங்கட்கும், தோன்றா-ஒன்றுந் தெரியாத, (அதாவது ஒன்றுந் தோன்றாதிருப்பதற் கேதுவாய்ச சூழ்ந்திருந்த) இருள்-இருட்டிலே, சென்றான்-போனான்; [எ-று.]

சூரியன் மறைந்தவுடன் நளன் தமயந்தியுடனே இருட்டில் நடந்து சென்றான் என்பது இதன் கருத்து. பந்தல்-கெடல், அஃது இங்கே மறைதற்பொருளில் வந்தது. சூரியன் மேற்குக் கடலுக்கப்பாற் செல்லுதல், இங்கு அதற்குள் மறைந்ததாகக் கூறப்பட்டது. அடம்பு-ஒருவகைக்கொடி; இதன் இலை இருபிளவாய் மான் குளம்பைப் போன்றிருக்கும். குளம்பு-மான் முதலிய மிருகங்களின் பாதத்தினடிப்பாகம் 'காட்டில் அடம்பிலை மான் குளம்பை நிகர்க்கும் நாடு' என்றதன் மூலம் நிடத தேசத்தின் உயர்வை விளக்கினார் ஆசிரியர். 'இளம் பேய்க்குந் தோன்றா இருள்' என்றதனால் இருளின் மிகுதிப்பாடு விளங்கும்; முதிர்ந்த பேயினும் இளம்பேய் வன்மையுடையதாம்; 'அதற்கும் தோன்றா இருள்' எனவே மேலும் விசேஷமாம்.

படுகடல் வினைத்தொகை. 'பாய்ந்ததன் பின்' என்பது 'பாய்ந்ததற் பின்' என னகரம் றகரமாய் விகாரப்பட்டு வந்தது; இதில், தன்-சாரியை. கானம் அடம்பின் ஏழாம் வேற்றுமைத்தொகை. "நெடிலோடுயிர்த் தொடர்க் குற்றுகரங்களுட், ட ற வொற்றிரட்டும் வேற்றுமை மிகவே" என்னும் (நன்-உயி-பு .கூ௩ ஆம்) சூத்திர விதிப்படி 'கவடு இலை'என்பது கவட்டிலை என டகர வொற்றிரட்டி வந்தது. கோதை-ஆகுபெயர். ஒடும் என்பதிலுள்ள உம்மை-அசை. பேய்க்கும் என்பதிலுள்ள உம்மை-உயர்வு சிறப்புப் பொருளது; பேய்க்கு உயர்வாவது இருளில் மயக்கமின்றிச்சஞ்சரித்தலாம்.

நளன் ஒரு பாழ்மண்டபத்தைக் காணல்.

270. எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிபோல்
வெங்கா னகந்திரியும் வேலைதனில்—அங்கேயோர்
பாழ்மண் டபங்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபங்கண்டான் வந்து.

(இ-ள்.) (அவ்வாறு நளன் செல்லுங்காலத்தில் ஏதேனுமோரிடமகப்பட்டால் அங்குத் தங்கிச் செல்லலாமென்று தங்குமிடத்தைத் தேடிக்கொண்டே போயினான்; அங்ஙனம்) எங்கு-எவ்விடத்தில், புகல்இடம்-புகுந்து தங்கும்படியான இடம், ஆம்-கிடைப்பதாகும், என்று எண்ணி என்று நினைத்து, இருள் வழி-அவ்விருள் சூழ்ந்த மார்க்கத்திலேயே, போய்-சென்று, வெம் கானம்-வெப்பமான அக்காட்டிலே, திரியும் வேலைதனில்-அலையுங்காலத்தில், வந்து இப்பூமியிற்பிறந்து, பால்-பால்போன்ற, வெண் குடை நிழற்கீழ்-வெள்ளைக்குடையின் நிழலடியிலே, (இருந்து அரசாட்சி

புரிந்து) வாழ்-வாழ்கின்ற, மண்டபம்—சிறந்த கொலுமண்டபத்தை, கண்டான்-முன்னே மகிழ்ச்சியோடு பார்த்திருந்தவனாகிய அந்நளன்,(இப்போது கெட்டகாலம் வந்தபடியால், அதனை இழந்து தனக்குத் தங்குமிடமாக) அங்கே-தான் தேடிச்சென்ற அவ்விடத்திலே, ஓர் பாழ் மண்டபம்-ஒரு பாழான (அதாவது மனித சஞ்சாரமில்லாது கெட்ட) மண்டபத்தை, கண்டான் பார்த்தான்; [எ-று.]

முன் கூறியபடி தமயந்தியுடனே இருட்டில் நடந்து சென்ற நளன் அவ்விரவில் தங்குவதற்கு ஓரிடத்தைத் தேடிக்கொண்டேபோய் ஒரு பாழ் மண்டபத்தைக் கண்டான் என்பது இ-ன் கருத்து. இருட்டில் தமயந்தியை அழைத்துக்கொண்டு போவது நளனுக்குக் கஷ்டமாயிருந்தபடியால், தங்கியிருந்து அவ்விரவைக் கழிப்பதற்கு ஓரிடத்தைத் தேடினன். அப்போது அப்பாழ் மண்டபம் அகப்பட்டது. ஓர் சிறந்த கொலுமண்டபத்திற் குடை நிழற்கீழிருந்து அரசு புரிந்த மன்னன் கெட்டகாலத்தால் அப்பதவியை இழந்து ஓர் பாழ்மண்டபஞ் சேர்தல் எவரும் இரங்கத்தக்க விஷயமாதலின், ஆசிரியர் அவன்பொருட்டிரங்கி, "பால் வெண்குடை நிழற் கீழ் வாழ் மண்டபங் கண்டான் பாழ்மண்டபங் கண்டான் வந்து" என்று கூறினார். இதனால், "எத்தகைய ஐசுவரியத்திலிருந்தவர்களும் கெட்டகாலத்தால் அந்நிலைமை மாறித் தாழ்ந்த நிலைமையை அடைதல் இயற்கை; ஆதலின் உலக வாழ்வைச் சதமென நினைக்கலாகாது" என்னும் உலக நிலையாமை உணரப்படும். இனிப் "பால் வெண்குடை நிழற்கீழ் வாழ் மண்டபங் கண்டான்" என்பதற்கு, பால் போலும் வெள்ளிய குடை நிழற்கீழ் வாழும்படியான பூமியின் தவப்பயனைக் கண்டவன்" எனப் பொருளுரைத்தலுமொன்று; இங்ஙனம் பொருள் கொள்ளுமிடத்து 'மண்டபம்' என்பதை மண்-தபம் எனப் பிரிக்கவேண்டும்; தபம்-தவம், இது தவப்பயனை உணர்த்தும்; பூமியின் தவப்பயனாவது பூமியை அடைதற்குரிய தவத்தின் பயனாகிய அரசாட்சியாம் இஃதன்றி, எத்தகைய தவத்தையும் செய்தற்குப் பூமியே உரியவிடமாதலின், மண்தபம் என்பதற்குப் பூமியிற் செய்யத்தக்க தவப்பயன் எனக்கூறினும் பொருந்தும். ஆகவே இப் பொருள்களானும் அரசாட்சியை அடைந்திருந்தவன்' என்பதே பெறப்படும்; ஆதலின், இதற்கும், முன்னுரைத்த பொருளுக்கும் வேறுபாடின்றாம்; எனினும், பாழ் மண்டபம் என்றதற்குத் தக, கொலுமண்டபம் எனக் கோடலே சிறப்பு.

ஆம்-என்பது கிடைத்தற் பொருளில் நின்றது. கீழ் ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. கானகம்-கான் × அகம்; இருபெயரொட்டுப் பண்பு

நளன் பாழ்மண்டபத்தில் தங்குமாறு தமயந்தியை அழைத்தல்.

261, மூரி யிரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
சாரு மிடமற்றுத் தானில்லை— சோர்கூந்தல்

மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்டுயிலப்
போதரா யென்றான் புலர்ந்து.

[இ-ள்.] (அவ்வாறு நளன் அப்பாழ் மண்டபத்தைக் கண்டபின் தமயந்தியை நோக்கி) புலர்ந்து-வாடி, சோர்-அவிழ்ந்து தொங்குகின்ற, கூந்தல்-கூந்தலையுடைய; மாதராய்-அழகுள்ள தமயந்தியே, மூரி இரவும்போய்-மந்தமான முன்னிரவும் கழிந்து, முற்று இருள் ஆய்-நிறைந்த இருளுண்டாகி, மூண்டதால்-கூடியபடியால், (இனி இந்த இருளில் நடந்து செல்லுதல் நம்மால் இயலாது; எங்கேனும் நாம் ஓரிடத்தில் தங்க வேண்டும்; (எதிரே கண்ட மண்டபத்தைக் காட்டி இது தவிர இங்கே) மற்று வேறே, சாரும் இடம் இல்லை-தங்கும் இடம் இல்லை, (நாம் இதிற்றான் தங்க வேண்டும்; ஆதலின்) நாம்—,இந்த மண்டபத்தே-இந்தப்பாழ் மண்டபத்தில், கண் துயில-நித்திரைசெய்ய, போதராய்-வருவாயாக, என்றான்-என்று கூறினான்.

நளன் அப்பாழ் மண்டபத்தைக் கண்டவுடன், அதனைத் தமயந்திக்குக் காட்டி, அவளை நோக்கி, 'பெண்ணே! இருள் அதிகமாயிருப்பதால் இதில் நாம் செல்லுதல் முடியாது; எங்கேனும் தங்கித்தான் செல்ல வேண்டும்; அவ்வாறு தங்குதற்கு இங்கே இந்தப் பாழ் மண்டபத்தைத் தவிர வேறே இடமில்லை; ஆதலின், இதில் நாம் நித்திரை செய்து விடிந்தபின் செல்வோம்; வருவாயாக" என்று அழைத்தான் என்பது இதன் கருத்து. முன்னிரவு கழிந்து நள்ளிரவு வந்தது; அப்போது இருள் மிகுந்தது; எப்பொழுதும் முன்னிரவு நேரத்தில் இருள் குறைவா யிருத்தலும், நள்ளிரவு நேரத்தில் இருள் அதிகரித்தலும் இயற்கை; அதனாலேயே நளன், "மூரியிரவும் போய் முற்றிருளாய் மூண்டதால்" என்றான். அந்தப் பாழ்மண்டபம் அவர்கள் தங்குவதற்குச் சிறிதும் பொருந்தாததா யிருந்தது; எனினும்; அது தவிர அங்கே வேற்றிடமின்மையால் அதிலேயே தங்கவேண்டியதாயிற்று; ஆதலின், "சாருமிடமற்றுத்தானில்லை; சோர்கூந்தல்மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்டுயிலப்போதராய்" என்றுங்கூறினான். நளன் எவ்வகையிருளினும் செல்லும் வல்லமையுடையவனெனினும், தமயந்திவருந்துவாளென்பதைக்கருதியே அம்மண்டபத்தில் தங்கக் கருதினான். அவன் அச்சமயத்தில் வாடியதும் அவள் பொருட்டேயாம். இவ்வாறு நளன் கூறினன எனவே, அவள் இசைதலும், இருவரும் ஆங்குப் படுத்தலும் அமையும். ஆகவே இருவரும் அம்மண்டபத்திற் படுத்தார்கள் என்க.

மூரி-சோம்பல்; இது மந்தத்தைக் குறிக்குமாதலின், 'மூரி இரவு' என்பதற்கு 'மந்தமான முன்னிரவு' என்று பொருள் கூறப்பட்டது; மந்தஇரவாவது குறைந்த இருளுள்ள இரவாம்; மந்தம் குறைவைக் குறிக்கும். இரவும் என்பதிலுள்ள உம்மை-அசை. தான்-அசை. மாதர்-அழகு; அதனையுடையவள் மாதராள் போதராய்-ஏவல் வினைமுற்று; இதில், போ என்பதனோடு தா என்பது துணைவினையாகச் சேர்ந்து போதா-எனப்பகுதியாயிற்று.

நளன் அம்மண்டபத்திற் படுத்திருக்கும் நிலைமையை
நோக்கித் தமயந்தி வருந்திக் கூறுதல்.

262. வையமுடையான் மகரயாழ் கேட்டருளுந்
தெய்வச் செவிகொதுகின் சில்பாடல்—இவ்விரவில்
கேட்டவா வென்றழுதாள் கெண்டையங்க ணீர்சோரத்
தோட்டவார் கோதையாள் சோர்ந்து.

[இ-ள்.] (மேற் கூறியபடி தமயந்தியும் நளனும் அப்பாழ் மண்டபத்தில் படுத்தபின்) தோட்ட பூவிதழ்களையுடைய, வார்-நீண்ட, கோதையாள்-மாலையையணிந்தவளாகிய தமயந்தி, (அங்கே கொசுகுகள் பறந்தொலிக்கக்கேட்டுத்தன் நாயகனுக்கு அவ்வொலி துயரைச் செய்யுமென்று கருதி) வையம் உடையான்-பூமியை (அதாவது பூமியாளுகையை) உடையவனாகிய மன்னனது, மகரயாழ் மகர வீணையின் நாதத்தை, கேட்டருளும்-இராக்காலத்தில் கேட்டருளுகின்ற, தெய்வச் செவி-தெய்வத்தன்மை பொருந்திய காதுகள், இரவில்-இந்த இராத்திரியில், கொதுகின் கொசுகுகளினுடைய, சில்-அற்பமான, பாடல்-பாடலை, கேட்ட-கேட்டன, ஆ-ஐயோ!, என்று-என்று சொல்லி, சோர்ந்து-தளர்ந்து, கெண்டை-சேல் மீனைநிகர்த்த, அம்-அழகிய, கண்-கண்களிலே, நீர் சோர-நீர்வடிய, அழுதாள்-புலம்பினாள்; [எ-று.]

அந்தப் பாழ்மண்டபத்திற் படுத்தவுடன் அங்கே கொசுகுகள் பறந்தொலிக்கக் கேட்ட தமயந்தி, அவ்வொலி தன் நாயகனுக்குத் துயரத்தைச்செய்யுமென்றுகருதி, "மகரயாழின் நாதத்தைக்கேட்ட இம்மன்னனுடையசெவிகள் இந்த அற்பமான கொசுகுகளின் பாடலைக் கேட்க இசைந்தனவே" என்று சோர்ந்து கண்ணீர் விட்டழுதாளென்பது இதன் கருத்து. அக்கொசுகுகளின் உபத்திரவம் தமயந்திக்கு அதிகமாயிருந்தது; அதனால் அவள். மன்னனுக்கும் இவ்விதமே கஷ்டமேற் பட்டிருக்கு மென்றுணர்ந்தாள், அவள் பதிவிரதை யாதலின், தனக்கும் கஷ்டமிருந்த அச்சமயத்திலும் தன் துன்பத்தைப் பெரிதாகக் கருதாமல் கணவன் துன்பத்திற்கே இரங்கினாள்.

மகரயாழ்-பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ் என்னும் நால்வகை வீணைகளிலொன்று; இசைஞானம் தெய்விகத்தன்மை வாய்ந்தவர்க்கே அமையுமாதலின், இந்த வீணை நாதத்தைக் கேட்டற்குரிய நளன் செவிகளைத் தமயந்தி, 'தெய்வச்செவி' என்றாள்.

கொதுகு-கொசுகு என்பதன் போலி. கேட்டவா என்பதில், ஆ-இரக்கக் குறிப்பிடைச் சொல். தோட்டது என்பது, துவ்விகுதி குறைந்து,தோட்ட-என வந்தது; இது, தோடு என்பதிற் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்.

மேற்கூறியபடி வருந்திய தமயந்தியை நோக்கி நளன் கூறுதல்.

263. பண்டை வினைப்பயனைப் பாரிடத்தி லார்கடப்பார்
கொண்ட னிழலிற் குழைதடவுங்—கெண்டை

வழியனீ ரென்றான் மனநடுங்கி வெய்துற்
றழியனீ யென்றா னரசு.

[இ-ள்] (அவ்வாறு வருந்திய தமயந்தியை நோக்கி) அரசு - நளமகாராஜன், பண்டை-பழமையான, வினைப்பயனை-தீவினையின் விளைவை, பாரிடத்தில்-இப்பூமியில், ஆர்கடப்பார்-எவர் விலகிச் செல்பவர், (ஒருவருமில்லை ஆதலின்) கொண்டல்-கூந்தலாகிய மேகத்தின், நிழலில்-சாயையிலே (தங்கி) குழை-(காதுகளில் அணியப்பட்டிருக்கும்) குண்டலங்களை, நடவும்-தடவுகின்ற, கெண்டை-கண்களாகிய சேல்மீன்களி லிருந்து, நீர்வழியல் - நீரை வடிக்காதே (அதாவது கண்ணீரை வடிக்காதே) என்றான்-என்றுகூறினான், (மேலும்) மனம்நடுங்கி-மனம் நடுக்கமுற்று, வெய்துஉற்று-மேனி வெதும்பி நீ அழியல்-நீ வருந்தாதே, என்றான்-என்றும் கூறினான்; [எ-று]

நளன் மேற்கூறியபடி வருந்திய தமயந்தியை நோக்கிப் "பெண்ணே! இது நம்பழவினைப் பயனால் நேர்ந்தது; இதனைக் கடத்தல் உலகத்தில் எவராலும் முடியாது; ஆதலின்; நீ இதன் பொருட்டு வருந்திக் கண்ணீர் வடிக்காதே' என்றுகூறினான் என்பது இதன்கருத்து. பழவினைப்பயனால்நேர்ந்த துன்பத்தை மனிதர் அனுபவித்தே தீரவேண்டுமாதலின் நளன் அவளிடத்தில் 'இதனை விலக்குதல் அரிதாம்; ஆதலின் இதற்காக வருந்துவதிற் பயனில்லை' என்று இவவாறுகூறினான். பெண்களின்முகத்தில் கூந்தல் மேலும் அதனடியிற் கண்களும் இருப்பனவாம்; அக்கண்கள் புரளும்போது அவற்றின் சாயல் பக்கத்திலுள்ள செவிகளில் அணியப்பட்டிருக்கும் காதணிகளின் மீது பாயும்; ஆதலின், 'கொண்ட னிழலிற் குழைதடவுங் கெண்டை' என்று விழியைச் சிறப்பித்துக் கூறினார் ஆசிரியர்

'பாரிடத்தில் ஆர் கடப்பார்' என்பது எதிர்மறை யெச்சம்; ஒருவரும் கடக்க மாட்டார் என்ற பொருளைத்தரும். கொண்டல்-கூந்தலுக்கு உவமையாகு பெயர். கெண்டை-கண்ணுக்கு உமமையாகு பெயர். 'வழியல் நீர் என்றான்' என்பதை நீர்வழியல் என்றான்' என்றும், 'அழியல் நீ' என்றான்' என்பதை, 'நீ அழியல் என்றான்' என்றும் மாற்றிக் கொள்ளவேண்டும் 'கெண்டைவழியல் நீர்' என்பதில், கண்ணீர் வடித்தலாகிய சினைவினை முதலொடு முடிந்தது. வழியல், அழியல் என்பன எதிர்மறையேவல் ஒருமைவினை முற்றுக்கள். அரசு என்னும் எழுவாய், வழியல் என்றான் அழியல் என்றான் என்னும் இரண்டு பயனிலைகளைக் கொண்டன.

### தமயந்தி மேலும் வருந்துதல்

264. விரைமலர்ப்பூ மெல்லணையு மெய்காவல் பூண்ட
பரிசனமும் பள்ளி யறையும்—அரசேநான்
காணேனிங் கென்னுக் கலங்கினாள் கண்பனிப்பப்
பூணோர் முலையாள் புலர்ந்து

[இ-ள்] (மேற்கூறியபடி நளன் தேறுதல் கூறியும் மனந்தேறாமல் மீண்டும்) பூண்-ஆபரணங்களை யணிந்த, ஏர்-அழகுபொருந்திய, முலையாள்-தனங்களையுடைய தமயந்தி, (நளனை நோக்கி) அரசே அரசனே!, (நாம் அரண்மனையில் எவ்வளவோ சௌகரியங்களோடு நித்திரைசெய்வோம்; அத்தகைய நமக்கு இப்போது) விரை-வாசனை தங்கிய, மலர்-புஷ்பங்களினாலாகிய, பூ-அழகிய, மெல்-மெல்லிய, அணையும்-மெத்தையையும், மெய்காவல் - நமது தேகத்தைக் காக்குந் தொழிலை, பூண்ட-கொண்ட, பரிசனமும்-ஏவலாளர்களையும், பள்ளி அறையும்-படுக்கை அறையையும், இங்கு - இவ்விடத்தில், நான் காணேன்-நான் பார்க்கின்றிலேன், என்று-என்று சொல்லி, கண்பனிப்ப-கண்ணீர்வடிய, புலர்ந்து-மேனி வாடி, கலங்கினாள்-மனந்தளர்ந்தாள்.

நளன் முன்னுரைத்தபடி தேறுதல் கூறியும் தமயந்திக்கு வருத்தம் நீங்காமையால், அவள், அவவாறு தானும் நளனும் அப்பாழ்மண்டபத்தில்படுத்திருந்த பரிதாப நிலைமையை நோக்கி, "அந்தோ! அந்தப் புரத்தில் அழகிய பள்ளியறையில் மலர்ச்சயனத்தின் மீது, மெய் காப்பாளர் காவலுககுள் படுத்துச் சுகமாக நித்திரை செய்யும் நமக்கும் இக்கதி நேர்ந்ததே" என்று சிந்தித்து அரசனை நோக்கி, "நாத! நமக்கு முன்னே ஏற்பட்டிருந்தமலரணையும், மெய்காப்பாளரும், பள்ளியறையும் இப்போது காணப்படவில்லை; நாம் இப்பாழ்மண்டபத்தில் தரையில் படுத்திருக்கிறோம்" என்று கூறி மீண்டும் கண்ணீர் வடித்துக் கலங்கினாள் என்பது இதன் கருத்து. மிகுந்த துக்கமுடையார் விரைவில் மனந்தேறாமல் அடிக்கடி தங்கள் நிலைமையை நோக்கி வருந்துதல் இயற்கை; ஆதலின் தமயந்தியும் இவ்வாறு மனந் தேறாமல்மீண்டுங்கலங்கி அழுது கூறினாளென்க.

மெய்காவல் தேகப்பாதுகாப்பு; அரசர்களிடத்தில் விசுவாசமுள்ள சில பணியாட்கள் எப்பொழுதும் அகலாதிருந்து அவர்களின் தேகத்திற்கு எத்தீங்கும் நேராதபடி பாது காப்புச் செய்வது வழக்கம்; வெளியில் ஆடவரும் அந்தப் புரத்தில்பெண்களும் இத்தொழிலை இயற்றுவார்கள்; இவர்கள் மெய்காப்பாளர் எனப்படுவார்; மெய்காப்பாளர் என்பதற்குத் தேகத்தைக் காக்கும் ஆட்கள் என்று பொருள். பரிசனம்-காவல்புரியும் ஜனங்கள்; பரித்தல்-காத்தல். அரசு-உலகத்தை ஆளுந்தன்மை; அஃதாகுபெயராய்அத்தொழிற்குரிய மன்னனையுணர்த்திற்று. (நபத-௩௪-ஆம்.) சூத்திரத்தில், "எதிர்மறை மும்மையும் ஏற்கும்" என்றபடி எதிர்மறை ஆகாரவிகுதி முக்காலங்களையும் ஏற்கக்கூடியதாதலின், 'காணேன்' என்பதில் இடம் நோக்கி நிகழ்காலங் கொள்ளப்பட்டது; இதில் எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது. பனித்தல்-துளித்தல்; அஃதிங்கே கண்ணீர் வடித்தற் பொருளில் வந்தது. 'பூணேர்' என்பதை, பூண்-நேர் எனவும் பிரிக்கலாம்; இங்ஙனம் கொள்ளுமிடத்து, 'பூண் நேர்' என்பதற்கு 'ஆபரணம் இசைந்திருக்கின்ற' எனப் பொருளுரைத்தல் வேண்டும். பூண் ஏர்; இதில் அணிந்த-இசை யெச்சம்.

**நளன் தமயந்தியை நித்திரை செய்யுமாறு வேண்டல்.**

265. தீய வனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாமம்—நீயுமினிக்
கண்மேற் றுயில்கை கடனென்றான் கைகொடுத்து
மண்மேற் றிருமேனி வைத்து.

[இ ள்.] (தமயந்தி அவ்வாறு வருந்தியபோது நளன், மேலும் அவளுக்குத்தேறுதலான பலவார்த்தைகளைக் கூறி) மண்மேல்-பூமியின் மீது, திருமேனி-அழகியதேகத்தை, வைத்து-சேர்த்துப் படுத்துக் கொண்டு, (அவ்விருளில் மிகவும் பயமடைவாளென்று தமயந்திக்கு) கைகொடுத்து-தன்கையைத் துணையாகக் கொடுத்து, (அவளை நோக்கி, பெண்ணே! இவ்விரவில் நீ மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டு நித்திரை கொள்ளாம லிருப்பது அழகன்று; ஆதலால்) பேர்யாமம் இந்தப் பெரியஇராத்திரியில் (அதாவதுஇந்த நடுராத்திரியில்), தீய-கொடுமையாகிய, வனமும்-காடும், துயின்று-உறங்கி திசையும்-மற்றதிக்குகளும், துயின்று-தூங்கி, பேயும்-இராக்காலத்தில் உறக்கமின்றிச் சஞ்சரிக்கும்) பைசாசமும், துயின்றது-உறங்கிற்று, (ஆதலின்) இனி-இனிமேல், நீயும்-கண்மேல்-கண்ணால், துயில்கை-நித்திரை செய்வது, கடன் உன்னுடைய கடமையாகும், என்றான்-என்று சொன்னான்; [எ-று]

மேற்கூறியவாறு தமயந்தி ஓயாமல் துக்கப்பட்டு அழுதுகொண்டிருப்பதை நளன்பார்த்து, "இவள் இப்படியே விடியும் வரையிலும் தூங்காமல் துயரமான வார்த்தைகளையே சொல்லிக் கொண்டிருப்பாள்; ஆதலின் இவளுக்குத் தேறுதல் கூறி இவளைத் தூங்கச் செய்ய வேண்டும்' என்று கருதி அவளை நோக்கி, 'கண்மணி! நீ இவ்வாறு ஓயாமல் துயரமடைந்து அழுது கொண்டிருப்பது அழகன்று; எல்லாம் பழவினைப்படியே நடக்கும் என்று மனதைத் தேற்றிக்கொள்ள வேண்டும்; இப்பொழுதோ நடுசசாமமாய் விட்டது; இந்த நள்ளிரவில் வனமும் துயின்றது; திக்குகளும் துயின்றன; ஆதலின் இனிநீயும் நித்திரைசெய்யவேண்டும்" என்று கூறினான் என்பது இதன் கருத்து. உலகத்தில் எப்பேர்ப்பட்டவர்களும் நடுச்சாமத்தில் சிறிது நேரமாவது நித்திரை செய்யவேண்டுமென்பது விதி; ஆதலின், "யாவும் உறங்கும் இந்நள்ளிரவில் நீ மாத்திரம் நித்திரை கொள்ளாதிருப்பது தகுதியன்று" என்று இங்ஙனம் நளன் தமயந்திக்குக் கூறினான். கீழே விரித்துக் கொள்வதற்குக் கூடத் துணியில்லாமல் தமயந்தியின் மேல் வஸ்திரத்தை அரையிற்சுற்றிக் கொண்டிருந்தபடியால் நளன், மண்மேல் தேகத்தைவைத்துப் படுத்திருந்தான்; அதனாலேயே ஆசிரியர், "மண்மேற் றிருமேனி வைத்து" என்றார். இராக்காலத்தில் பயந்த ஸ்திரீகள் புருஷன் கரத்தைப் பற்றிக் கொள்வது இயற்கை; இதன்படியே தமயந்தியும் இங்கே நளன் கரத்தைப் பற்றிக் கொண்டு படுத்திருந்தாள்; ஆதலின், "கைகொடுத்து" என்றார் புலவர். அந்தவனம் தமயந்திக்கும் நளனுக்கும் துன்பத்தைச் செய்ததாதலின்,

அதனைத் 'தீயவனம்' என்றும் இருளின்கொடுமை விளங்கப்பேர்யாமம் என்றும் கூறினார் ஆசிரியர். நளன், உறங்கும்படி தமயந்தியை வேண்டினான் என்றதனால் அவள் அவ்வாறே இசைந்து நித்திரைகொண்டாளென்பதாம்

வனம், திசை என்பன இடவாகு பெயர்களாய் அவற்றிலுள்ள ஜீவவர்க்கங்களை புணர்த்தும். வனமும்பேயும் என்பவற்றிலுள்ள உம்மைகள் எண்ணுப்பொருளன. திசை என்பதில் எண்ணும்மை தொக்கது. துயின்று என்பதைச் செயவெ னெச்சமாகக் கொண்டு 'துயில' எனப் பொருளுரைப்பினும் பொருந்தும்; இவ்வினை யெச்சம் 'பேயுந்துயின்றது' என்பதனோடுமுடியும். இரவில் பெரிது நள்ளிரவே யாதலின், 'பேர்யாமம்' என்பதற்கு, 'நடுச்சாமம்' எனப் பொருளுரைக்கப்பட்டது. 'துயின்றதால்' என்பதில், ஆல்-அசை. நீயும் என்பதிலுள்ள உம்மை-இறந்தது தழுவிய எச்சப் பொருளது கண்ணால் என வருதற்பாலது, 'கண்மேல்' என வந்தது உருபு மயக்கம். துயில்கை-தொழிற்பெயர். என்றான்-சொல்லெச்சம். கொடுசெது, வைத்து என்பன வினையெச்சங்கள்; இவை, 'கடனென்றான்' என்ற முற்றோடு முடிவனவாம். 'மண்மேல்' என்பதில் மேல் ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு

மண்மேற் படுத்து நித்திரை செய்த தமயந்தியைப்
பார்த்து நளன் வருந்திக் கூறுதல்.

266 புன்கண்கூர் யாமத்துப் பூமிமேற் றான்படுத்துத்
தன்கண் டுயில்வாளைத் தான்கண்டு—மென்கண்
பொடியாதா லுள்ளாவி போகாதா னெஞ்சம்
வெடியாதா லென்றான் விழுந்து.

[இ-ள்.] (நளன் கூறியபடியே தமயந்தி நித்திரை செய்ய அவ்வாறு) புன் கண் கூர்-துன்பமிகுந்த, யாமத்து - நடுசசாமத்திலே, பூமிமேல் - மண்ணின் மேலே, படுத்து-சயனித்து, தன் கண் தன்னுடைய கண்களினால், துயில்வாளை-தூங்குகின்ற அத்தமயந்தியை, தான் கண்டு-(நளன்) தான் பார்த்து, விழுந்து-மனம் இற்று, (அந்தோ! இவ்வாறு படுத்திருக்கின்ற இவளுடைய நிலைமையைக் காணும்) என்கண்-என்னுடையகண், பொடியாது-சாம்பலாகாம லிருக்கின்றது, உள்ஆவி-எனக்குள்ளே யிருக்கின்ற உயிரானது, போகாது-போகாமலிருக்கின்றது' நெஞ்சம்-என்னுடையமனமானது வெடியாது-வெடித்துப் போகாம லிருக்கின்றது, என்றான்-என்று கூறிப் பலபல நினைந்து வருந்தினான்; [எ-று.]

நளன் கூறியபடியே மண்ணிற் படுத்துறங்கின தமயந்தியை அவன் பார்த்து, "அந்தோ! அந்தப் பூரத்தில் மெல்லிய மலரணையிற் படுத்திருந்த இவள் இப்போது இவ்வாறு மண்மேற்படுத்திருக்கின்றனளே; இவளுடைய இந்தப் பரிதாபமான நிலையைக் கண்டும் என்கண் பொடியாகாம லிருக்கின்றதே; உயிர் போகாமலிருக்கின்றதே; நெஞ்சம் வெடியாம லிருக்கின்றதே"

என்று வருந்தினான் என்பது இதன் கருத்து. நளன் முன்னே கூறியபடி தமயந்தி இசைந்து சிறிது அயர்ந்து நித்திரை செய்தாள்; அத்தருணத்தில் நளன் விழித்திருந்தபடியால் அவளுடைய நிலைமையைப் பார்த்து இவ்வாறு வருந்தினனென்க இவன் இவ்வாறு கூறியதனால், இந்தப்பரிதாபமான நிலைமையைப் பார்ப்பதிலும் இறந்து போதல் நலமென்று அவன் கருதினன்.

தான்படுத்து என்பதில், தான்-அசை. நித்திரை செய்தலுக்குக் கண் கருவியாதலால், 'கண்துயில்வாளை' என்பதை கருவிப்பொருளில் வந்தமூன்றும்வேற்றுமைத் தொகையாகக் கொண்டு. 'கண்ணால் துயில்வாளை' என்று பொருளுரைக்கப்பட்டது; கண் நித்திரைக்கு முதற்கருவி. தான் என்னும் அசை யிடைச்சொல் நளனை யுணர்த்தி எழுவாயாய் நின்றது; முன்னே ஒரு பெயர் வந்து பின்னே தனித்துத் தானுவது தாமாவதுவரின் அப்பெயரையே யுணர்த்தும்; அப்பெயரோடு சேர்ந்து வரும்போது அசை யெனக்கொள்ளப் படும். உம்-அசை. பொடியாது, போகாது, வெடியாது என்பவற்றில் நிகழ் காலம் எதிர்காலமாக மாறி வந்தது இங்ஙனம் வருதல் கால வழுவமைதி யெனப்படும். ஆல் மூன்றும் அசைகள். விழுதல்-சாதல்; அஃது இங்கே மனமிறுதற் பொருளில் வந்தது. துயில்வாளை-வினையாலணையும் பெயர்.

நித்திரை செய்த தமயந்தி துயரத்தால் சிறிது நேரத்திற்குள் விழித்தெழுந்து மீண்டும் நளனைப் பார்த்து வருந்துதல்.

267. முன்றிறலின் மேற்படுக்க முன்றானையுமின்றி
இன்று துயில விறைவனுக்கே—என்றனது
கைபுகுந்த தென்னுடைய கால்புகுந்த தென்றழுதாள்
மைபுகுந்த கண்ணீர் வர.

(இ-ள்.) (நளன் மேற்கூறியபடி வருந்திப் பின்னர்ச் சிறிது நித்திரை கொண்டான்; அத்தருணத்தில் தமயந்தி துக்கத்தால் மீண்டும் விழித்துக் கொண்டு நளன் தரைமேற் படுத்திருப்பதை நோக்கி) இறைவனுக்கு நம் மன்னனுக்கு, இன்று-இப்பொழுது, துயில-தூங்குவதற்கு, முன்றில் தனில்-இந்தப் பாழ்மண்டபத்தின் முன்புறத்தில், மேல்படுக்க-தரையின் மேல் பாயலாக விரிப்பதற்கு, முன்தானையும் இன்றி முன் வஸ்திரமு மில்லாமல், என்தனது-என்னுடைய, கை புகுந்தது-காமே-விரிப்பாகப் பிரவேசித்தது, என்னுடைய கால் புகுந்தது எனது காலே பாயலாகப் பிரவேசித்தது, என்று-என்று சொல்லி, மைபுகுந்த-அஞ்சனம் பிரவேசித்த (அதாவது அஞ்சனம் திட்டப்பெற்ற), கண்-கண்ணிலே, நீர்வர-நீர் ஒழுக, அழுதாள்-அரற்றினாள்.

மேற் கூறியபடி நளன் வருந்தச் சிறிது நித்திரை கொண்ட தமயந்தி சிறிது நேரத்திற்குள் விழித்து, அச்சமயத்தில் சிறிது கண்மூடிப் படுத்திருந்த நளனை நோக்கி, 'அந்தோ! மன்னனுக்கு விரிப்பதற்கு முன்றானை கூட

இல்லாமல் என் கையும் காலுமே பாயலாயின' என்று வருந்தினாள் என்பது இதன் கருத்து. இருவரும் ஒரு துகிலை அணிந்து கொண்டிருந்தபடியால் கீழே விரிப்பதற்கு மூன்றானை கூட இல்லாமற்போயிற்று. அதனால் தமயந்தி நளனுடைய தேகம் சிறு கற்களால் உறுத்தப்பட்டு வருந்துமென்று கருதி அவனது உடம்பின் பாகத்தில் தன்னுடைய கையையும், காற்புறத்தில் தன் காலையும் பரப்பி அவனுக்குச் சிறிது சிரமபரிகாரஞ் செய்து கொண்டு சயனித்திருந்தாள்; ஆதலின்; 'இன்று துயில இறைவனுக்கே என்றனது கை புகுந்தது என்னுடைய கால் புகுந்தது" என்றாள்.

இல்முன் என்பது-முன்றில் எனவும், தானை முன் என்பது-முன்றானை எனவும் வந்தது இலக்கணப் போலி. இறைவனுக்கே என்பதில், ஏ-அசை, மூன்றானையும் என்பதிலுள்ள உம்மை-இழிவு சிறப்புப் பொருளது. என்றனது என்பதில், தன்-அசை. இப்பாட்டில் சொன்னபடி அழுது பின் தமயந்தி நித்திரை போய் விட்டாள் என்பது பெறப்படும்.

### மேற் கூறியபடி நித்திரை செய்த தமயந்தியை நோக்கி நளன் வருந்திக் கூறல்.

268. வீமன் றிருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத்
தாம மெனக்களித்த தையலாள்—யாமத்துப்
பாரே யணையாப் படைக்கண் டுயின்றாள்மற்
றாரே துயரடையா ராங்கு.

(இ-ள்) (முன்பாட்டிலுரைத்தபடி தமயந்தி நளன் பாயலின்றிப் படுத்திருப்பதைப் பார்த்து வருந்தியழுது பின்னர் அசசோபத்துடனேயே நித்திரை போய் விட்டாள், அச்சமயத்தில் நளன் விழித்துக்கொண்டு அவளை நோக்கிச் சொன்னதாவது:) "வீமன்-வீமராஜனுடைய, திரு-இலக்குமியே என்னும், மடந்தை-பெண்ணும், விண்ணவரும்-தேவர்களும், பெற்றிலா-பெறாத, தாமம்-மணமாலையை, எனக்கு அளித்த-எனக்குத் தந்த, (அதாவது என் கழுத்திற் சூட்டிய), தையலாள்-அழகினை யுடையவளுமாகிய தமயந்தி, யாமத்து-இந்த நள்ளிரவில், பாரே பூமியே, அணையா-பஞ்சணையாக, (அதன் மேற் படுத்து), படை-வேலாயுதத்தை நிகர்த்த, கண்துயின்றாள்-கண் உறங்கினாள், (அதாவது நித்திரை செய்தாள். எவ்வளவோ உயர்ந்த அந்தஸ்திலிருந்த இவளே இவ்வாறு துன்பத்திற்குள்ளாகிப் படுத்தாளென்னின்) மற்று-பின்னர், (இவ்வுலகத்தில்) ஆரே-எவர்தாம், துயர் அடையார்-துன்பத்தை அடையார்கள்?, (சகலரும் ஒருகாலத்தில் துன்பத்தை அடைவர்); [எ-று]

*தமயந்தி முன்னுரைத்தபடி நளனை நோக்கி வருந்தியழுது தூங்கிய பின், நளன் விழித்துக்கொண்டு அவளை நோக்கி, "இராணியாய் உயர்ந்த

பூதலியிலிருந்தவளும், மகா பதிவிரதா சிரோன்மணியுமாகிய தமயந்தியே இவ்வாறு வறுமையுற்று மண்மேற் படுத்திருக்கும் போது வேறு எவர்கள் தாம் உலகத்தில் துன்பத்தை அடையாமலிருப்பவர்கள்? எல்லோருமே இவ்வித நிலைமையை அடையத்தக்கவர்கள்தாம்'' என்று உலக இயற்கையைக் கூறித் தானே தன் மனதைத் தேற்றிக்கொண்டானென்பது இதன் கருத்து, இவ்வாறு கூறியதனால், ''உலகத்தில் இன்ப துன்பங்கள் நிலையானவையல்ல'' என்பதை விளக்கிக்காட்டினனென்க. தமயந்தி பிறந்தவிடத்தும் புகுந்தவிடத்தும் சிறந்தவளென்பதும், கணவனைக் குறித்தவனையன்றி மற்றையர் எத்தகைச் சிறப்புவாய்ந்தவரெனினும் அவரை நோக்காத மகா உத்தமி என்பதும் தோன்ற, ''வீமன் திருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத் தாமமெனக்களித்த தையலாள்'' என்று கூறினன்.

திரு தமயந்திக்கு உவமையாகுபெயர் திருமடந்தை தையலாள்-இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. விண்ணவரும் என்பதிலுள்ள உம்மை-உயர்வு சிறப்புப் பொருளது. தையல்-அழகு; அதனையுடையவள் தையலாள், மற்று-அசை யெனினுமாம். ஆரே என்பதிலுள்ள ஏகாரம் வினாப்பொருளைச் சிறப்பிக்க வந்தது; அசை யெனினுமாம். 'ஆரே துயரடையார்' என்பது எதிர்மறை யெச்சம்; 'எவருமில்லை' என்ற பொருளைத்தரும். ஆங்கு-அசை. இச்செய்யுள் பொருண்முடிபின்றி நிற்பினும் கதைத் தொடர்ச்சி நோக்கி முன்பின் முடிக்குஞ் சொற்களும், எழுவாய், பயனிலைகளும் சேர்த்து இதற்குப் பொருண் முடிபு கூறப்பட்டது.

நளன் தமயந்தியைப் பிரிப்பதற்குக் கலி
அவனுடைய மனத்தைக் கலக்குதல்.

269 பெய்ம்மலர்ப்பூங் கோதை பிரியப் பிரியாத
செம்மை யுடைமனத்தன் செங்கோலான் —பொய்ம்மை
விலக்கினா னெஞ்சத்தை வேறாக்கி நின்று
கலக்கினான் வஞ்சக் கலி.

(இ-ள்) (நளன் அவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கும் சமயத்தில், பெய்-சூட்டப்பெற்ற, மலர் மலர்களையுடைய, பூ-அழகிய, கோதை-கூந்தல் பொருந்திய தமயந்தி, பிரிய-நளனை விட்டு நீங்கும்படி, பிரியாத-எப்பொழுதும் அகலாத, செம்மை உடை-செவ்விய குணமுடைய; மனத்தன்-மனமுள்ளவனும், செங்கோலான்-அரசாட்சியை உடையவனும், பொய்ம்மை-பொய்யை, விலக்கினான்-நீக்கினவனுமாகிய அந்நளனுடைய, நெஞ்சத்தை-மனத்தை. வஞ்சம் வஞ்சனை பொருந்திய, கலி-கலிபுருஷன், வேறுஆக்கி-(இருந்த நிலைமையினின்றும்) வேறாகச் செய்து, நின்று-(அவன் மனத்திற் புகுந்து) நின்று, கலக்கினான்-கலங்குமாறு செய்தான்; [எ-று.]

மேற்கூறியபடி தமயந்தியின் பொருட்டு வருந்திக்கொண்டிருந்த நளனைக் கலிபுருஷன் அவளைவிட்டுப் பிரிக்கக் கருதி நளனுக்கு அவள் மீதேற்

பட்டிருந்த பற்று நீங்கும்படி அவனுடைய மனத்தைக் கலக்கினனென்பது இதன் கருத்து. நளன் எப்பொழுதும் தமயந்தியை விட்டுப் பிரியாதவன் என்பதும் சத்தியவந்தனென்பதும் தோன்ற; "பிரியாத செம்மையுடை மனத்தன் செங்கோலன் பொய்ம்மை விலக்கினன்" என்று ஆசிரியர் அவனைச் சிறப்பித்துக் கூறினர். இப்பேர்ப்பட்டவனுடைய மனத்தையும் கலி கலக்கினன் என்றதனால் அவனுடைய வஞ்சகத்தின் வன்மை தெள்ளிதிற் புலப்படும். நளனுடைய உறுதிபெற்ற மனத்தை வஞ்சனையினால் வேறாக் கவேயன்றி மற்றெவ்வகையினாலும் அசைத்தியலாதாதலின் கலி புருஷன் அவ்வஞ்சனையினாலேயே வேறாக்கினனென்பது தோன்ற அவனை 'வஞ்சகக் கலி' என்று இழிவு படுத்திக் கூறினர் ஆசிரியர்.

வேறாக்குதல்-தமயந்தியின்மீது பற்றியிருக்கும் நளனுடைய மனத்தை வேறுபடுத்தல். மனத்தன், கோலான், விலக்கினன் என்பன் ஒருபொருள் குறித் ததன்மேல் நின்ற பல பெயர்கள். நின்று வினையெச்சம்.

கலிபுருஷனுடைய வஞ்சனையால் நளன் மனத்தில் தமயந்தியைப் பிரியும் எண்ணம் உதித்தல்.

270. வஞ்சக் கலிவலியான் மாகத் தராவளைக்குஞ்
செஞ்சுடரின் வந்த கருஞ்சுடர்போல்—விஞ்ச
மதித்ததேர்த் தானை வயவேந்த னெஞ்சந்
துதித்ததே வேறோ ருணர்வு

(இ-ள்) (நளன் மனத்தை அவ்வாறு கலிபுருஷன் கலைத்தவுடனே) வஞ்சம் சூது பொருந்திய. அக்கலி-அந்தக் கலிபுருஷனுடைய, வலியால்-வல்லமையினாலே, மாகத்து-ஆகாயத்தில்; அரா-இராகு வென்னும் பாம்பினால், வளைக்கும்-சூழ்ந்து பற்றப்படுகிற, செஞ்சுடரின்-சிவந்த பிரகாசத்தையுடைய சூரியனிடத்தில், வந்து-வந்து சேர்ந்த, கருஞ்சுடர் போல்-கருமையான பிரகாசத்தைப் போல, விஞ்ச அதிகமாக, மதித்த-நினைக்கப்பட்ட, தேர்த்தானை-தேர்ப்படையினையாகிய, வயம்-வெற்றி பொருந்திய, வேந்தன்-நளமகராஜனுடைய, நெஞ்சத்து மனத்தில், வேறு-தன் நிலைமையிலிருந்தும் வேறாகிய, ஓர் உணர்வு-ஒருஎண்ணம்; உதித்தது-தோன்றியது; [எ-று.]

மேற்கூறியபடி கலிபுருஷன் நளனுடைய மனத்தைக் கலக்கியவுடனே அவ்வஞ்சனையால் அந்நளனுக்குத் தமயந்தியைப் பிரிந்து விட வேண்டுமென்ற ஒரு எண்ணம் உண்டாயிற்றென்பது இதன் கருத்து. சிவந்த பிரகாசத்தையுடைய சூரியனை இராகு பற்றியவுடனே அதனுடைய பிரகாசம் மறைந்து கரிய பிரகாசம் தோன்றுவது இயற்கை. அதேபோல் நளனுடைய களங்கமற்ற இருதயத்தில் கலிபுருஷனுடைய வஞ்சனை புகுந்தவுடனே தமயந்தியைப் பிரிய வேண்டுமென்ற கெட்ட எண்ணம் உதித்தது. இவற்றை

யே ஆசிரியர், "மாகத்தரா வளைக்கும் செஞ்சுடரின் வந்த கருஞ்சுடர் போல் வஞ்சக் கலிவலியான் வேந்தன் நெஞ்சத்து வேறோருணர்வு உதித்தது" என்று உதாரணங் காட்டிக் கூறினார்.

அராவளைக்கும்-மூன்றாம் வேற்றுமைத்தொகை வளைக்கப்படும் என்னும் செயப்பாட்டு வினை, வளைக்கும் எனச் செய்வினையாக மாறி வந்தது. வளைக்கும்-பெயரெச்சம். சுடரின் என்பதில் இன்-ஏழாம் உருபு வந்த-பெயரெச்சம். உதித்ததே என்பதில் ஏ அசை. உதித்தது என்பதில் உதி-பகுதி; இது உத் என்னும் வடமொழித்தாதுவின் வழியாகப் பிறந்தது. வடமொழியில் எந்த ஈற்றையுடையதாயினும் தமிழில் வினைப் பகுதியாம் பொழுது இகர வீறு பெற்றே வரும்; அதுபற்றியே உத என்பது இகரவீறு பெற்று உதியென வந்தது; பட-படி, கடாக்ஷ-காட்சி என்பன உதாரணம்.

நளன் தமயந்தியைப் பிரிந்து போவதற்குத் தனக்கும் அவளுக்கும் ஒன்றாயமைந்திருக்கும் ஆடையை அரிய நினைத்தல்.

271. காரிகைதன் வெந்துயரங் காணாமை நீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கு மோருயிர்போ லெய்தியதோ ராடை
அரிதற் கவனினைந்தா னங்கு.

(இ-ள்.) (மேற்கூறியபடி நளனுடைய மனதில் அந்த எண்ணம் உதித்தவுடன்) காரிகை தன் அழகையுடைய தமயந்தியினது, வெம் துயரம்-கொடிதாகிய துன்பத்தை, காணாமை-பார்க்காமல்(இருக்கும்படி); நீத்து-அவளை விட்டு நீங்கி, அந்தக் கூர் இருளில் அந்த மிகுந்த இருட்டிலே, போவான்-போவதற்கு, குறித்து எழுந்து-எண்ணி எழுந்திருந்து, (தான் செல்வதற்குத் தடையாக) நேரே-நேராக, இருவர்க்கும்-தான் தமயந்தி ஆகிய இருவர்களுக்கும், ஓர்உயிர்போல்-ஒரேஉயிரைப்போல, எய்தியது சேர்ந்திருப்பதாகிய, ஓர் ஆடை-ஒற்றை வஸ்திரத்தை, அவன்-அந்த நளமகாராஜன், ஆங்கு-அவ்விடத்தில், அரிதற்கு-நடுவில் அறுப்பதற்கு, நினைந்தான்-எண்ணினான்.

கலியின் வஞ்சனையினாலே நளனுக்குத் தமயந்தியைப் பிரிந்து போக வேண்டுமென்ற எண்ணம் உதித்த மாத்திரத்தில் அவன், "இவள் நம்முடனேயே பிரியாதிருப்பாளாயின் பல துன்பங்களை அடைவாள்; அத்துன்பத்தைப் பார்த்துச் சகித்தல் நம்மாலியலாது; ஆகலின் நாம் நினைத்தபடியே இவளை விட்டு நீங்கிச் செல்வதே நலம்" என்று உறுதிகொண்டு எழுந்து அவ்வாறு போவதற்குத் தடையாய்த் தனக்கும் தமயந்திக்கும் ஒன்றாக அமைந்திருக்க ஆடையை அறுத்து விடுவதற்கு நினைத்தான் என்பது இதன் கருத்து. ஒரு பெண்ணை நடுக்காட்டில் மிக்க இருளில் விட்டுச் செல்லுதல்

மகா கொடிய காரியமெனினும் கலியின் வஞ்சனையால் நளனுக்கு அது தோன்றாமல் நாம் இவளுடைய துன்பத்தைக் காணாமலிருக்கும்படி இவளை விட்டு நீங்கிப் போதலே தகுதி என்ற எண்ணம் உதித்து அது நலம்போல் தோன்றிற்று. அதனாலேயே அவன் ஆடையை அரிதற்கு நினைத்தான்.

நீத்து வினையெச்சம்; இது, போவான் என்னும் வினையடியோடு முடியும், இதில் நீ-பகுதி. போவான்-வினையெச்சம்; எழுந்து-வினையெச்சம்; இது நினைந்தான் என்பதனோடு முடியும். ஆங்கு-அசை எனினுமாம்

**நளன் எண்ணியதற்குத் தக்கபடி கலி வாளாய் வந்து எதிரில் கிடத்தல்.**

272. எண்ணிய வெண்ண முடிப்ப விகல்வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும்—பண்ணினுந்துக்
கேளான தேமொழியை நீக்கக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து.

(இ-ள்.) இகல்-போர் செய்தலில் வலிமையையுடைய, வேந்தன் நளமகாராஜன், எண்ணிய-ஆடையை அறுப்பதற்கு நினைத்த, எண்ணம் நினைவை முடிப்ப-முடிப்பதற்கு, கண்ணியதை-நினைத்ததை, காய்-தனக்கு ஆகாதவரைக் கோபிக்கின்ற, கலியும்-கலிபுருஷனும், அறிந்து-தெரிந்து, பண்ணினுக்கு-இசைப்பாடலுக்கு, கேளான-உறவாகிய, தேம்மொழியை இனிய வார்த்தைகள் பொருந்திய தமயந்தியை, நீக்க-நளன் ஆடை அரிந்து நீக்கிவிடும் பொருட்டு, கிளர், விளங்காநின்ற, ஒளிசேர்-பிரகாசம் பொருந்திய, வாளாய்-வாளாயுதமாக, வந்து-அங்கு வந்து சேர்ந்து, மருங்கு - பக்கத்தில், இருந்தான்-தங்கினான்; [எ று]

ஆடையை அரிவதற்கு நினைத்த நளனுடைய குறிப்பை உணர்ந்த கலிபுருஷன் அவ்வாறே அவன் ஆடையை அரிந்துகொண்டு தமயந்தியைவிட்டு நீங்குதற்கு உதவியாயிருக்கும் பொருட்டு அவனுக்குப் பக்கத்தில் ஒருவாள் வடிவமாக வந்திருந்தானென்பது இதன் கருத்து. எப்படியாவது தமயந்தியைவிட்டு நளனைப் பிரித்துவிட வேண்டுமென்று கலிபுருஷன் கருதினனாதலின் அங்ஙனம் வாளாய் வந்திருந்தானென்க. கத்தியில்லாவிடில் நளன் ஆடையை அரிதற்கு இயலாமல் வாளாவிருந்து விடுவான். ஆதலின் நாம் ஒரு கத்திவடிவமாகச் சேர்ந்தால் அதைக் கொண்டு ஆடையை அரிந்து தமயந்தியைவிட்டு நீங்கிப்போய் விடுவான் என்று கருதியே கலி இவ்வாறு செய்தான். ஆடையை அரிதலே நளன் தமயந்தியை விட்டு நீங்குதற்கு முக்கிய ஏதுவாதலின் ஆடை அறுக்க என்பதை, தேமொழியை நீக்க என்று கூறினார் ஆசிரியர். மருங்கிருந்தான் என்பதற்கு நளனுடைய இடுப்பில் வந்திருந்தான் என்று பொருள் கூறுவாருமுளர். நளன் இடுப்பில் வாள்வைக்காதிருக்கும்போது அஃதங்கே இருக்குமானால் சந்தேகப்பட்டு இதுகலியின் சூதோ

வென்று ஆக்காரியத்தைச் செய்வதற்கு அஞ்சுவா னாதலின் அவ்வுரை பொருந்தாமை யுணர்க. காய்கலி என்பதற்கு, "அறிஞர் கோபிக்கும்படியான கலி" என்று பொருள் கோடலு மொன்று. பண்ணினுக்குக் கேளாதலாவது வார்த்தை அந்தப் பண்ணை நிகர்த்திருத்தலாம்.

கலியும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளது. நளன் அவ்வாறு நினைத்திருந்த தன்றிக் கலியும் வாளாய் வந்திருந்தான் என்று இவ்வும்மையின் பொருள் விரிக்கப்படும். இதனை அசையெனக் கோடலுமாம். தேமொழி-தமயந்திக்கு ஆகுபெயர் இனி, வாள் அங்குதானே கிடந்ததென்க் கொண்டு அது கலியின் செய்கைக்கு உரித்தா யிருந்த படியால் அதனையே கலிபுருஷன் வந்திருந்ததாகக் கூறினாரெனினும் அமையும்.

இதில் நளன் ஆடையை அரிந்து தமயந்தியின் நிலைமை
குறித்துத் திகைத்திருந்தமை கூறப்படுகின்றது.

273. ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
முற்றுந்தன் னன்பை முதலோடும்—பற்றி
அரிந்தா னரிந்திட் டவணிலைமை நெஞ்சில்
தெரிந்தா னிருந்தான் திகைத்து.

(இ-ள்) (அவ்வாறு வாள் கிடக்கவே நளன் அதனை எடுத்துக் கொண்டு) ஒற்றைத் துகிலும்-(தானும் தமயந்தியும் சேர்த்துக் கட்டிக் கொள்ளும்படியாக அமைந்திருந்த) ஒற்றை வஸ்திரமும், உயிரும்-(இருவருக்கும் ஒன்றாய் அமைந்திருந்த) பிராணனும், இரண்டாக-இரண்டிரண்டாகும்படி, தன் அன்பை, தன்னுடைய ஆசையை, முதலோடும்-வேருடனே, பற்றி-பிடித்து, முற்றும்-முழுதும், அரிந்தான்-அறுத்தவனாகி, அரிந்திட்டு-ஆடையை அறுத்துவிட்டு (தமயந்தியினின்றும் வேறாகி) அவள் நிலைமை-அந்தத் தமயந்தியினுடையநிலைமையை, நெஞ்சில்-மனதில், தெரிந்தான் சிந்தித்து அறிந்தவனாய், (இவளை எப்படி விட்டுப் பிரிந்து போவதென்று) திகைத்து இருந்தான்-பிரமித்து ஒன்றுஞ்செய்யாமலிருந்தான்; [எ-று.]

கத்தியையெடுத்து ஆடையை அறுத்துத் தனிப்பட்டிருந்தநளன் தமயந்திநிலைமையை நோக்கி இவளை நாம் எப்படி விட்டுப்பிரிந்து போவதென்று திகைத்திருந்தானென்பது இதன் கருத்து. முன் 255 ஆம் செய்யுளில் "காவி போற் கண்ணிக்கும் கண்ணியர்தோட்காளைக்கும் ஆவிபோலாடையுமொன்றானதே" என்றுகூறியதற்கேற்ப ஆசிரியர் இக்கவியில் "ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக" என்றார். உயிர் ஒன்றாயிருப்பதற்கு அன்பு காரணமாயிருந்தது; ஆடை ஒன்றாயிருப்பதற்குத் துண்டுபடாமை காரணமா யிருந்தது. இவ்விரண்டுவகைச் சேர்க்கைகளையும் வேறுபிரித்தற்கு நளன் அன்பையும் ஆடையையும் அறுத்தான். ஆதலின் 'ஒற்றைத்துகிலு முயிரு மிரண்டாகத்தன்

அன்பை முதலோடும் பற்றி முற்றும் அறிந்தவனாய் அறிந்திட்டு" என்று கூறினார் ஆசிரியர். துகில் ஒன்றாயிருத்தற்கும் உயிர் ஒன்றாயிருத்தற்கும் அன்பே காரணமாதலின் அதனை முதலில் அறிந்தான் என்றார் ஆசிரியர். அன்பை அறுத்தல்கூறவே அவ்விரண்டும் வேறுபட்டனவென்பது தானே போதரும். அவள் நிலைமையாவது. இராஜ்ஜியத்தையும் மக்களையும் பிரிந்து வருந்தியிருந்ததும், அவ்வாறு வருந்தியிருப்பினும் தன்கணவனுக்கு நேர்ந்த துன்பத்திற்கே கலங்கி அவனைவிட்டுப் பிரியாதிருந்தலே தனக்குப் பெரும்பேறென்று எண்ணியிருந்ததும், நளன் அவளைவிட்டுப் போய்விட்டால் பலவிதமான ஆபத்துக்களையும் பயத்தையும் அடையக் கூடியவளாயிருந்ததுமாம். ஆடையை அறுத்துக் கொண்டு பிரிந்து போக நினைத்த அவனுக்குத் தமயந்தியினுடைய இந்நிலைமைகளையெல்லாம் நோக்கியவுடனே இவளை எவ்வாறு பிரிந்துபோவதென்ற கலக்கமுண்டாயிற்று; அதனால் ஒன்றுஞ் செய்யாமல் சற்றே நின்றபடியே நின்று திகைத்திருந்தான்.

முதலோடும் என்பதில் உம்மை-அசை. அறிந்தான், தெரிந்தான் என்பன முற்றெச்சங்கள். அறிந்திட்டு என்பதில் இடு-பகுதிப்பொருள் விகுதி; துணிபுப்பொருள் பற்றி வந்த துணைவினை எனினுமாம்.

நளன் தமயந்தியை விட்டுப் பிரியமுடியாமல் கலங்குதல்.

274. போயொருகால் மீளும் புகுந்தொருகால் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின்—தோயல்
கடைவார்தங் கைபோலு மாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம்.

[இ-ள்.] (அப்படியிருந்த) காலன் வடிவு ஆய-எமனுடைய உருவமான வேலான்-வேலாயுதத்தையுடைய நளன், ஒருகால்-ஒருமுறை, போய் (தமயந்தியை விட்டுப் பிரிந்து சிறிது தூரம்) சென்று, மீளும்-(அவளைப் பிரியத் தன்மனம் இசையாததனால்) திரும்பி அவளிடத்தே வருவான், புகுந்து-(அவ்வாறு அவள் சமீபத்தில் வந்து) சேர்ந்து, (தன்மனத்தில் நாம் பிரிந்து போதலே நலம் என்று துணிவுண்டாவதால்) ஒருகால் மற்றொரு முறை, மீண்டு ஏகும்-திரும்பிச்செல்லுவான், (இப்படி அவன் போவதும்வருவதுமாயிருக்க) மனம்-அவனுடைய மனமானது, ஆயர்-இடையரால், கொணர்ந்த-கொண்டு வரப்பட்டதும், அடு-காய்ச்சப் பட்டதுமாகிய, பாலின்-பாலினது, தோயல்-தோய்வாகிய தயிரை, கடைவார்தம்-கடைகின்ற ஆய்ச்சியர்களுடைய, கைபோல் கரங்களைப்போல, ஆயிற்று-(அவனுடைய போவதும் வருவதுமாகிய செய்கைக்குப் பொருத்தமாய் அங்கு மிங்கும்) அலையப்பெற்றது; [எ-று.]

முன்னுரைத்தபடி தமயந்தியின் நிலைமை குறித்து அவளை விட்டு எப்படிப்பிரிவதென்று கலங்கியிருந்த நளன் பின்னர்த் துணிந்து புறப்பட்டு அப்

பொழுதும்போக முடியாமல் போவதும் வருவதுமாய் அலைந்து கொண்டிருக்க அவன் மனமும் அவ்வாறே அலைந்து கொண்டிருந்ததென்பது இதன் கருத்து. அவன், தனக்கேற்பட்டிருக்கும் கஷ்டத்தை உத்தேசித்துப்போகத் துணிந்தாலும் அவள் மீது அவனுக் குண்டாயிருக்கும் அன்பானது அவனைப் போகவொட்டாது தடுத்துக்கொண்டிருந்தபடியால் இவ்வாறு போவதும் வருவதுமாய் அலைவுற்றான். போதல்-மீளுதல் ஆகிய செய்கைகளை மனத்திற் கேற்றினும் அமையும். ஆயர்-இங்கு இடையரில் ஆடவரைக் குறித்து நின்றது. தோயல்-செட்டியாதல்; அது தொழிலாகுபெயராய்த்தயிரைஉணர்த்தி நின்றது. உம் ஏ-அசைகள். தயிர்கடைவார் கைகள் போதலும் வருதலுமாயிருக்கும்; ஆதலின் இவை போக்கு வரவான மனத்திற்குவமையாயின.

**தமயந்தியைப் பிரிவதற்கு முடியாமல் அலைந்து கொண்டிருந்த நளன் மனம் கலி வஞ்சனையால் பிரிவதற்குத் துணிதல்.**

275. சிந்துரத்தாற் றெய்வ முனிவர் தெரிந்துரைத்த
மந்திரத்தாற் றம்பித்த மாநீர்போல்—முந்த
ஒலித்ததேர்த் தானை உயர்வேந்த னெஞ்சம்
வலித்ததே தீக்கலியால் வந்து.

(இ-ள்.)(மேற்கூறியபடி நளன் அலைச்சற்பட்டுக் கொண்டிருக்கும்போது) சிந்துரத்தால்-ஐராவத மென்னும் தெய்வயானையால், தெய்வமுனிவர்-தெய்வத்தன்மையுள்ள நாரதமுனிவர், தெரிந்து-(கங்கையின் அகங்காரச் செய்கையை) உணர்ந்து, உரைத்த-சொல்லிய, மந்திரத்தால்- மந்திரத்தின் மகிமையினாலே, தம்பித்த-(வேகமொடுங்கி) அசையாமல் நின்றுவிட்ட, மா-சிறந்த, நீர்போல்- கங்காஜலப் பெருக்கைப்போல, முந்த - முதன்மையாக, ஒலித்த-சப்தித்த, தேர்த்தானை-தேர்ச்சேனையையுடைய, உயர் - மேன்மையான, வேந்தன், அந்நளமகாராஜனுடைய, நெஞ்சம்-மனமானது, தீக்கலியால்-தீமையுள்ள கலிபுருஷனுடைய வஞ்சனையால், வந்து-அவன் வயமாய் வந்து, வலித்தது-(தமயந்தியின் மேலிருந்த அன்பு முதலியவற்றை யெல்லாமிழந்து) கடினமுடையதாயிற்று; [எ-று]

முன்னுரைத்தபடி தமயந்தி மீதேற்பட்ட அன்பினால் அவளை விட்டு நீங்குதற்கியலாமல் கலங்கிக் கொண்டிருந்த நளனுடைய மனமானது, கலிபுருஷனுடைய வஞ்சனையால் அவ்வன்பு நீங்கிக் கடின முடையதாகி அவளைப் பிரிதற்குத் துணிவுகொண்டது என்பது இதன் கருத்து. தமயந்தியைப் பிரியமுடியாமல் நளன் அன்பினால் தயங்குவதைப் பார்த்துக் கலிபுருஷன், அது தன்னுடைய எண்ணத்திற்கு விரோதமாயிருந்தபடியால் அதனை நீக்கி விரைவில் அவனைத் தமயந்தியினிடமிருந்து பிரித்தற்கு அவனுடைய மனத்தைக்கடினமாக்கினான்; மனம் கடினமாதலாவது இரக்கக் குணத்தை இழத்தல். அவ்வாறு மனம் கடினமாகவே நளனுக்குத் தமயந்தியை விட்டுப்பிரிந்

துபோய்விடலாமென்று துணிவு பிறந்தது. கெட்டிப்பட்ட மனம் அசையாதிருக்குமாதலின், அதற்கு அசைவற்று நின்ற கங்கை நீரை உவமைகூறினார் ஆசிரியர். "நாரதர் ஒருகாலத்தில் முனிவர் கூட்டத்துடனே சென்று கங்கைக் கரை சார்ந்து அக்கங்கையைப் பணியாமல் நிஷ்டை கூடியிருந்தனர். கங்கை அப்போது அவர் தன்னைப் பணியவில்லையென்ற கோபத்தால், அவரையும் முனிவர் கூட்டத்தையும் அழித்துவிடத் துணிவு கொண்டு பெருவெள்ளமாய்ப் புரண்டு வந்தனள். அசசெய்கையை நாரதர் உணராதிருந்தார். அப்போது ஐராவதம் என்னும் யானை கங்கையின் செய்கையையும், முனிவர் அதனை அறியாதிருப்பதையும் உணர்ந்து, நாரதருக்கு அவ்வபாயத்தைத் தெரிவிக்கக் கருதித் தண்ணீர் பருகும் பாவனையாகத் தும்பிக்கையினால் ஜலத்தைவாரி அம்முனிவர் மீதிறைத்தது; அதனால் முனிவர், நிஷ்டைகலைந்து கங்கையின் அடாசசெய்கையையுணர்ந்து அவளுடைய வீறு டுங்கும்படி ஒரு மந்திரத்தை ஜபிக்க, அக்கங்கை வலியொடுங்கி ஸ்தம்பித்து முனிவரை வணங்கி அவரிடம் மன்னிப்புப் பெற்றுத் தன் இயற்கைப்படியாயினள்" என்று ஒரு கதை, ஜைமினி பாரதத்தி லிருப்பதாகப் பௌராணிகர்கள் கூறுவர்; இதுபற்றியே ஆசிரியர், 'சிந்துரத்தாற் றெய்வமுனிவர் தெரிந்துரைத்த, மந்திரத்தாற் றம்பித்த மாநீர்போல்" என்றார்.

இனி, 'சிந்துரத்தாற் றெய்வமுனிவர்' என்ற பாடத்தை, 'சிந்துரத்தாட் டெய்வ முனிவர்' எனமாற்றி 'சிவந்த பாதங்களையுடைய தெய்வத் தன்மை பொருந்திய முனிவர்' எனப்பொருள்கொண்டு இதற்கு, 'வசிஷ்டர் சிலவுணவுகளை விசுவாமித்திரர்க்குச் சேர்ப்பிக்கும் பொருட்டுத் தம் சீஷர்களிடம் கொடுத்தனுப்ப, அவர்கள் செல்லுங்காலத்தில் இடையில்வந்த ஆற்றுவெள்ளத்தைத்தாண்ட முடியாமல் கலங்கியபோது அத்தண்ணீர் தம்பித்து நிற்கும்படி அவ்வசிஷ்டர் ஓர் மந்திர முரைக்க அது தம்பித்தது' என்று கதை கூறுவது முண்டு. இக்கதைக்குத் தக்க ஆதாரமின்மையால் இவ்வகையாகப் பொருளுரைத்தல் அத்துணை சிறப்பின்றாம். நாரதர் மற்ற முனிவர்களினும் சிறந்தவராதலின் அவரை, 'தெய்வமுனி' என்றார் புலவர். சிறப்புநோக்கிக் கங்கை நீரை, 'மாநீர்' என்றார். நளனுக்குத் தேர்த்தானை இருந்தது முன்பேயாதலின் அதனை யுணர்த்தற்கு 'ஒலித்த' என இறந்த காலத்தாற் கூறினார். வலித்ததே என்பதிலுள்ள ஏகாரம்-இரக்கக் குறிப்பில் வந்தது; அசை யெனினுமாம். வருதல்-இசைந்து ஒரு வழியிற் புகுதல்; ஆதலின், வந்து என்பதற்கு 'அவன் வயமாய் வந்து' எனப்பொருளுரைக்கப்பட்டது. வந்து என்பதையும் அசையென உரைத்தலு முண்டு.

### நளன் தமயந்தியை விட்டு நீங்கிப் போதும் போது கூறுவது.

276. நீக்கா னகத்துறையுந் தெய்வங்கா ளீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின் — நீக்காத

காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் போகின்றேன் யான்.

(இ-ள்.) (அவ்வாறு துணிந்த நளன் வனதேவதைகளை நோக்கி) தீக்கானகத்து-தீமை பொருந்திய வனத்திலே, உறையும்-தங்கியிருக்கின்ற, தெய்வங்காள்-தெய்வங்களே!, நீக்காத-விலக்கமுடியாத, காதல்-ஆசையும், அன்பு-பக்தியும், மிக்காளை-மிகுந்தவளாகிய என் மனைவியை, கார்-கருமையாகிய, இருளில் இவ்விருளிலே, கைவிட்டு-இழந்து, இன்று-இப்பொழுது, யான் நான், ஏதிலன்போல்-இவளுக்குச சத்துருவைப் போல, போகின்றேன்-செல்கின்றேன், (இவளுக்கு வேறெவரும் ஆதரவானவர் இங்கில்லை ஆதலின்) வீமன் தன்-வீமராஜனுடைய, சேர-சிறந்த, காதலியை குமாரத்தியாகிய இவளை, குறிக்கொண்மின்- (இரக்ஷிப்பதற்கு உங்களுடைய) கருத்தில் வைத்துக் கொள்ளுங்கள் (என்று கூறினான்); [எ று.]

நளன் தான் பிரிந்து போகின்ற காலத்தில் வனதேவதைகளை நோக்கி "நான் இத்தமயந்திக்குப் பகைவனைப்போல் இவளை இழந்து செல்கின்றேன்; இவளோ இந்தக் காரிருளில் தனிப்பட்டாள்; இவளுக்கோ ஆதரவானவர் இங்கெவருமிலர்; ஆதலின், நீங்களே இவளைக் காத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறினான் என்பது இதன் கருத்து அவன் துணிந்து பிரிந்து செல்லினும், "அந்தோ! இவளை நாம் தீமை மிகுந்த காட்டில் இவ்விருளில் விட்டுச் செல்கின்றோமே; நாம் சென்றபிறகு இவளுக்கென்ன தீங்குநேருமோ! இவள் என்னபாடுபடுவாளோ" என்று வருத்தமுண்டாயிற்று: அதனாலேயே 'வனதேவதைகளாயினும் இவளைக் காத்துக் கொள்ளட்டும், என்று இவ்வாறு கூறினான். காடு, மிருகங்கள் முதலியவற்றால் தீங்குண்டாகக்கூடிய விடமாதலின் அதனை, 'தீக்கானகம்' என்றான் நளன். ஒருவர்மீது அன்பில்லாத பகைவரே அவர்க்குத் தீங்கு செய்து செல்வர்; உறவோர் அவ்வாறு செய்யார்; அந்தப் பகைவரைப் போல இங்கு நளன், தன்மீது அன்புடைய தமயந்தியைவிட்டு நீங்கி, அவளுக்குத் தீங்குசெய்து செல்வதால் 'ஏதிலன்போல் செல்கின்றேன்' என்றான். இவன் பிரிந்தவுடனே அவளுக்கு மிக்க துன்பமுண்டாகுமாதலின், அங்ஙனம் பிரியும் இவனே துன்பத்திற்குக் காரணமாகின்றான் அது பற்றி இவன் தீங்கு செய்தவனாகவும் குறிப்பிடப்பட்டான். காதல்-ஆசை; அதுபிரதிபலன் குறித்தோ, அனுபவத்தைக் குறித்தோ ஏற்படுவது. அன்பு-அருள், பக்தி; இது பிரதி பலன் கருதாது ஏற்படுவது. "நீக்காத காதலன்பு மிக்காளைக் காரிருளிற்கை விட்டின்றேதிலன்போல் போகின்றேன்" என்றதனால் அவன் தன்னை வன்னெஞ்சுடையவனென்று விளக்கினான் என ஆசிரியர் குறிப்பிட்டார்.

குறி-கருத்து; அன்றிக்காத்தற்கு இலக்ஷியமான விடமெனவும் கொள்ளலாம். கைவிடல் கையினின்றும் போக்கி விடுதல்; பெண்கள் ஆடவர்க்குப் பொருள்போன்றவர்களாதலின், இங்குத் தமயந்தியை நளன் கையிலுள்ள

பொருளாகக் குறித்து அதினின்றும் நழுவவிட்டதாகக் குறித்தான்; இனி, கை-என்பதைப் பக்கமெனக் கொண்டு 'இவள் பக்கத்தி லிருப்பதை விட்டேன் (அதாவது, இவளைப் பிரிந்தேன்) என்று பொருளுரைப்பினுமாம். ஈற்றில் 'என்று சொன்னான்' என்பது இசையெச்சமாக வருவிக்கப்பட்டது.

இதில், நளன் தமயந்தியை விட்டுப் பிரிந்து போயினமை கூறப்படுகின்றது.

277. ஏந்து மிளமுலையா ளின்னுயிருந் தன்னருளும்
பூந்துகிலும் வேறாகப் போயினான்—தீந்தேன்
தொடைவிரவு நாண்மாலை சூட்டினா டன்னை
இடையிருளிற் கானகத்தே இட்டு.

(இ-ள்.) (அவ்வாறு கூறிய நளன் அதன்மேல்) தீந்தேன்-மதுரமாகிய தேனினது, தொடை-பற்றுதல் (அதாவது: சேர்ந்திருக்குந் தன்மை) விரவு-கலந்திருக்கின்ற, நாள்மாலை-புதியமாலையை, சூட்டினாள் தன்னை-(தனக்குச்) சூட்டிய தமயந்தியை, இடை இருளில்-நள்ளிரவில், (அதாவது: நடுச்சாமத்தில்), கானகத்தே காட்டில், இட்டு போட்டுவிட்டு, ஏந்தும்-மார்பினிடமாகத்தாங்கும் படியான, இளமுலையாள் இளமையான தனங்களையுடையவளாகிய அத்தமயந்தியின், இன் உயிரும் இனிமையான ஆவியும், தன் அருளும்-தன்னுடைய கிருபையும், பூந்துகிலும்-(தானும் தமயந்தியும் அணிந்திருந்த) அழகிய வஸ்திரமும், வேறாக முன்னே சொன்னவாறு வெவ்வேறாகும்படி, போயினான் (அவ்விடத்தை விட்டு நீங்கிப்) போனான்; [எ-று.]

வனதேவதைகளை நோக்கி 'தங்கள் தமயந்தியைக் காத்துக்கொள்ளுங்கள்' என்று கூறிய நளன் அவளை அப்பாழ் மண்டபத்திலேயே போட்டுவிட்டு அவ்விடத்தை நீங்கிப் போயினான் என்பது இதன் கருத்து நளன் இவ்வாறு போதற்குத் துணியவே அவனுக்கும் தமயந்திக்கும் ஒன்றாயிருந்த உயிரும் ஆடையும் இரண்டாகப் பிரிந்தன; நளன் தமயந்தியின்மீது வைத்திருந்த அன்பும் அவளை விட்டு நீங்கி வேறாயிற்று; இவை குறித்தே ஆசிரியர், "இளமுலையாள் இன்னுயிரும் தன்னருளும் பூந்துகிலும் வேறாகப் போயினான்" என்றார்; 273 ஆம் செய்யுளில், 'ஒற்றைத்துகிலு முயிரு மிரண்டாக" என்றது போல் இச்செய்யுளிலும் அக்கருத்தே அமைந்தது.

தொடை-தொடுதல் எனப் பொருள்படும் தொழிற்பெயர்; இஃது இங்கே பற்றுதல் என்னும் பொருளில் நின்றது. நாள் மாலை அன்றலர்ந்த மலரினால் தொடுக்கப்பட்ட புதிய மாலை

இதில், அவ்வாறு சென்ற நளன் காட்டிற்போயினமை கூறப்படுகின்றது.

278. தாருவெனப் பார்மேற் றருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போல்—கூரிருளில்,

செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினன்
வெங்கா னகந்தனிலே வேந்து.

(இ-ள்) (அவ்வாறு சென்று,) வேந்து நளமகாராஜன், தாருஎன-கற்பக விருக்ஷத்தைப்போல, பார்மேல்-இப்பூமியில், (உள்ள மனிதர்க்கு விரும்பிய வற்றை யெல்லாம்) தரு கொடுக்கின்ற, மேருவரை மேருமலையை நிகர்த்த, தோளான்-புஜங்களையுடையவனாகிய, சந்திரன் சுவர்க்கி-சந்திரன் சுவர்க்கி யென்னும் அரசனுடைய, விரவார்போல்-பகைவர்களைப்போல, கூர்-மிகுதி யாகிய, இருளில்-இருளுள்ள இராத்திரியில், தேவியை தன் நாயகியாகிய தமயந்தியை, விட்டு-தனியாகப் பாழ்மண்டபத்தில் விட்டு, வெங்கானகந்த னிலே-வெவ்விதாகிய காட்டிலே, செம்கால்-சிவந்த காலிலுள்ள, நகம்சிதை ய-நகமானது சிதையும்படி, ஏகினன்-போனான்; [எ-று.]

மேற்கூறியபடி தமயந்தியைப் பிரிந்து நளன், சந்திரன் சுவர்க்கியென் னும் அரசனுடைய பகைவர்களைப் போல் மிகுந்த இருளுள்ள அவ்விரவில் காட்டிலே போயினான் என்பது இதன் கருத்து. வீரம் பொருந்திய அரசர்க ளுடைய பகைவர்கள் அபஜெயப்பட்டு எல்லாவற்றையும் இழந்து தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு இருள் சூழ்ந்த கானகத்தில் மறைந்தோடுவது இயற்கை. ஆதலின், இங்கே யாவற்றையும் இழந்ததோடு மனைவியையும் இழந்து நள்ளிரவில் காட்டில் தனித்துச் சென்ற நளனுக்கு அவர்களை உவமையாகக் கூறினார் ஆசிரியர். சந்திரன் சுவர்க்கி என்பவன் இந்நூலாசிரியரை ஆதரித்து இந்நூல் செய்வித்த ஓர் அரசன்; ஆதலின், அவனை இங்குச் சிறப்பித்துக் கூறினார் ஆசிரியர்; இவ்வாறு நூலாசிரியர்கள் தங்களை ஆதரித்த பிரபுக்களைத் தாங்கள் செய்யும் நூற்களினிடை யிடை யில் புகழ்ந்து எடுத்துக் காட்டாகக் கூறிக் கொள்ளுதல் இயற்கை. அது பற்றியே புலவரும் இங்ஙனம் கூறினார்; இவ்வாறே கம்பரும் சடையப்பவள் ளலைத் தமது இராமாயணத்தில் புகழ்ந்து கூறியிருத்தல் காண்க. கற்பகத் தரு இந்திரனுக்குச் சொந்தமாய்த் தேவலோகத்தி லிருக்கும் ஒருவகைத் தேவவிருக்ஷம்; இது, தன்னிடம் வருவார் விரும்பியவற்றை யெல்லாம் தரு வது. நளன் மிகுந்த இருளில் சென்றதனால் பூமியிற் கிடக்கும் கல், முள் முதலியவை தெரியாமல் காலால் அவற்றை இடறிக் கொண்டே போனான்; அவற்றால் அவனுடைய கால் நகங்கள் மோதுண்டு சிதைந்தன.

தரு என்னும் வடசொல் தாரு என முதல் நீண்டது. தரு வென்பது மரங்களுக்கெல்லாம் பொதுப்பெயராயினும், "பூவெனப்படுவது பொறி வாழ் பூவே" என்பது போலச் சிறப்பு நோக்கி எல்லாவற்றினும் சிறந்த கற் பகத்தை உணர்த்தி நின்றது. மேல்-ஏழனுருபு. வரைத்தோளான்-உவமைத் தொகை. விரவுதல் கலத்தல்; அதாவது: உறவாதல்; அஃதில்லாதார் விர வார்; பகைவர்க்கு உறவில்லை யாதலின் அவர் இப்பெயர் பெற்றார். கூர் இருள்-அன்மொழித் தொகையாய் இரவை உணர்த்தி நின்றது; இதற்கு

யிருந்த இருளில் எனப்பொருள் கொள்ளினும் அமையும்; அங்ஙனங்கொள் ளுமிடத்து இது வினைத்தொகையின் பாற்படும்.

## தமயந்தி விழித்து நளனைத் தேடுதல்.

279. நீல மளவே நெகிழ நிரைமுத்தின்
கோல மலரின் கொடியிடையாள்—வேல்வேந்தே
எங்குற்றா யென்னா வினவளைக்கை நீட்டினாள்
அங்குத்தான் காணா தயர்ந்து.

(இ-ள்) (மேற்கூறியபடி நளன் சென்ற பிறகு) மலரின்-மலரையுடைய கொடி-கொடியை நிகர்த்த, இடையாள்-இடையினையுடைய தமயந்தி,(தனக் கேற்பட்டிருந்த கலக்கத்தால் நித்திரை கொள்ளாமல் திடுமென விழித்துக் கொண்டு) அங்கு-அவ்விடத்தில், தான் காணாது-தான் அரசனைக் காணாமல், (திகிற்பட்டுக் கண்கலங்கி) நிரை-வரிசையாகிய, முத்தின் கோலம்-முத்துக் களின் வடிவம், (அதாவது: முத்துக்களின் வடிவம்போன்ற கண்ணீர்த்துளி கள்) நீலம்-நீலோற்பல மலர்போன்ற கண்களின், அளவே-அளவாக, (அதா வது: கண்கள் முழுதும் நிறைந்து) நெகிழ-கலங்கிச சொரிய, அயர்ந்து-அயர்ச்சியுற்று, வேல் வேந்தே-வேலாயுதத்தைத் தரித்த அரசனே!, எங்குற் றாய்-எங்கே சென்றாய்?, என்னா என்று பதறிக் கூறி, இனம்-கூட்டமாகிய வளை-வளையல்களை யணிந்த, கை-கரங்களை, நீட்டினாள் - எட்டின மட்டில் நீட்டி அங்குமிங்கும் தடவிப் பார்த்தாள்; [எ-று.]

நளன், மேற்கூறியபடி போய்விட்டவுடனே நித்திரை செய்துகொண் டிருந்ததமயந்தி விழித்து அவனைக்காணாமல் வருந்திக் கண்கலக்கத்துடனே கையை நீட்டி 'மன்னனே! எங்குச் சென்றாய்?' என்று தடவிப் பார்த்தாள் என்பது இதன் கருத்து. தமயந்தி சிறிது அயர்ந்து நித்திரை செய்தாலும் தனக்கேற்பட்டிருந்த மனத்துயரத்தால் அதிக நேரம் உறங்காமல் சீக்கிரம் விழித்துப் பார்த்துப் பக்கத்தில் நளனைக் காணாதபடியால் திடுக்கிட்டுக்கண் ணீர்விட்டுக் கலங்கி, இருட்டாதலால் கையை நீட்டி எட்டின மட்டில் அவ னைத் தடவிப்பார்த்தாள். திடுமெனத்தனக்குண்டாகிய கலக்கத்தால் அவள் தன் வஸ்திரம் துண்டாக அரியப்பட்டிருப்பதை அத்தருணம் கவனித்திலள். நளன் தன்னைவிட்டுப் பிரியமாட்டா னென்னும் நம்பிக்கை அவளுக்கேற் பட்டிருந்தாலும் அச்சமயம் பக்கத்தி லில்லாமலிருந்ததற்குக் கலக்க முண் டாயிற்று. அவ்வாறு கலங்கிய அவள்; அவன் ஏதேனும் காரியத்தைக்கருதி எழுந்து வெளியிற் சென்றிருக்கக் கூடுமென்று நினைத்தாள்; அதனாலேயே "வேந்தே எங்குற்றாய்" என்று கையை நீட்டித் தடவிப் பார்த்தாள்.

நீலம்-கண்ணுக்கு உவமையாகு பெயர். கண்நிறைய நீர்கலங்கிற்று; அத னால் 'நீலமளவே நெகிழ' என்றார் ஆசிரியர். முத்தின் கோலம்-அன்மொழித் தொகையாய்க் கண்ணீரை யுணர்த்திற்று. காணாது-எதிர்மறை வினையெச் சம். தான்-அசை. தான்காணாது-இதில் அரசனை என்பது இசை எச்சம்.

தமயந்தி நளனைக் காணாமல் வருந்துதல்.

280. வெய்ய தரையென்னு மெல்லமளி யைத்தடவிக்
கையரிக்கொண் டெவ்விடத்துங் காணாமல்—ஐயகோ
என்னப்போய் வீழ்ந்தா ளினமேதி மென்கரும்பைத்
தின்னப்போ நாடன் திரு.

(இ-ள்) இனம்கூட்டமாகிய, மேதி-எருமைகள், மெல்-மெல்லிய, கரும்பை-கரும்புகளை, தின்ன-தின்னுதற்கு, போம்-செல்கின்ற, (மருதநிலவளம் பொருந்திய) நாடன்-நாட்டையுடையவீமராஜனது, (மகளாகிய) திரு-இலக்குமியே யென்னுந் தமயந்தியானவள், (அவ்வாறு) வெய்ய-வெவ்வியதாகிய, தரை யென்னும்-நிலமென்கின்ற, மெல் அமளி-மெல்லிய படுக்கையை, தடவி-தடவிப் பார்த்து, கையரிக் கொண்டு-தேடி, எவ்விடத்தும்-எந்தவிடத்திலும், காணாமல்-நளனைப் பார்க்காமல், ஐயகோ ஐயோ, என்ன-என்றுகூவிக் கொண்டு, போய் ஒரு பக்கமாகச் சென்று, வீழ்ந்தாள் நிலத்தில் வீழ்ந்தாள்.

மேற்கூறியபடி கையை நீட்டித் தடவிப்பார்த்த தமயந்தி மேலும் பற்பல விடங்களிலும் தேடிப்பார்த்து அவனைக் காணாததால் ஐயோ வென மயங்கி வீழ்ந்தாளென்பது இதன் கருத்து. அவள் முதலில் நளன் எழுந்து ஏதேனும் ஒரு காரியார்த்தமாகப் பக்கத்திற் போயிருப்பானென்று நினைத்தாள். பின்னர் எங்குந் தடவிப்பார்த்தாள்; ஓரிடத்திலும் அவன் அகப்படாமல் போகவே தன்னை விட்டு நீங்கியே போய்விட்டானென்று உறுதி கொண்டு இவ்வாறு மயங்கிவிழுந்தாளென்க. 'நாடன்' என்பதை நளனுக்கேற்றி 'நாடன் திரு' என்பதற்கு 'நாட்டையுடையவனாகிய நளனது இலக்குமிபோன்ற மனைவி' எனவும் பொருள் கொள்ளுதல் பொருந்தும்.

வெய்ய-குறிப்புப் பெயரெச்சம்; இது வெம்மை யென்னும் பண்படி விகாரம்; வெம்மையின் மை விகுதி கெட்டு மகரம் யகரமாகி அகர விகுதி பெற்று இங்ஙனம் வந்தது. கையரிக் கொள்ளல் கையினால் சில வஸ்துக்களை வாரியெடுத்துக் கெட்டவற்றைத் தள்ளி நல்லவற்றை ஆராய்ந்தெடுத்தல்; இஃதிங்கே தேடுதற் பொருளில் வந்தது; அரித்தல்-கொழித்தல்; கொழித்தலாவது பல வஸ்துக்களில் சிலவற்றை ஒருபக்கமாகவும் வேறு சிலவற்றை மற்றொரு பக்கமாகவும் ஒதுக்குதல். ஐய, கோ இரண்டும் இரக்கக் குறிப்பிடைச்சொற்கள்; ஒரு சொன்னீர்மைத்தாய் வந்தன; இவற்றில் 'ஐய' என்பதை நளனுக்கு விளியாக வந்ததெனக்கொண்டு 'கோ' என்பதைமட்டும் இரக்கக் குறிப்பிடைச்சொல்லாகக் கொள்ளினும் அமையும் 'என்று' என்பது 'என்ன' எனத்திரிந்துவந்தது. திரு-தமயந்திக்கு உவமையாகுபெயர்.

இதுவுமது.

281. அழல்வெஞ் சிலைவேட னம்புருவ வாற்றா
தழலுங் களிமயில்போ லோடிக்—குழல்வண்

டெழுந்தோட வீழ்ந்தா ளிருகுழைமேற் கண்ணீர்க்
கொழுந்தோட வீமன் கொடி.

(இ-ள்.) அப்படி வீழ்ந்து உடனே (எழுந்து) வீமன்-வீமராஜனுடைய, கொடி-பூங்கொடி போன்ற குமாரத்தியாகிய தமயந்தி, அழல்-அக்கினியை நிகர்த்த, வெம்-வெவ்விய, சிலை-வில்லையுடைய, வேடன்-வேடனது, அம்பு-பாணமானது, உருவ-தேகத்திற் பாய்ந்து ஊடுருவிச் செல்ல, (அதனால் ஏற்பட்ட துன்பத்தை) ஆற்றாது-சகிக்கமுடியாமல், உழலும்-வருந்தி அங்கு மிங்கும் ஓடித்திரிகின்ற, களிமயில்போல்-முன்னே களிப்புடனிருந்த மயிலை போல, குழல்-தன்னுடைய கூந்தலில், (மலர்த்தேனை யுண்ண விரும்பித்தங்கியிருக்கின்ற,) வண்டு-வண்டுகள், எழுந்தோட-அதிர்ச்சியினால் பயந்து எழுந்து ஓடவும், இருகுழைமேல்-காதுகளில் அணியப்பட்டிருக்கும் இரண்டு காதணிகள் மீதும், கண்ணீர் கொழுந்து-கண்ணீர் ஒழுக்கின் நுனிகள், ஓட-பாய்ந்தோடவும், ஓடி-அங்கும் மிங்கும் ஓடி, வீழ்ந்தாள்-மீண்டும் நிலத்தின் மேல் மூர்ச்சையடைந்து விழுந்தாள்; [எ-று]

மேலைச்செய்யுளில் கூறியபடி நிலத்தில் விழுந்த தமயந்தி உடனே எழுந்து வேடனம்புபாய வருந்தி அங்கு மிங்கும் ஓடும் மயிலைப்போல் தனக்கேற்பட்டதுயரத்தைச் சகிக்கமுடியாமல் கண்ணீர் விட்டழுது கொண்டு அங்கு மிங்கும் ஓடி மோதி மீண்டும் தரையில் வீழ்ந்தாளென்பது இதன் கருத்து. தமயந்திமிகுந்த துக்கத்தால் மனச்சார்பி யடையாமல் பைத்தியம்பிடித்தவள் போல் ஆய்விட்டபடியால் இவ்வாறு ஒருநிலைக்கொள்ளாமல் கண்ணீர் வடித்துப் புலம்பி நிலத்தில் வீழ்வதும் எழுந்திருப்பதும் தலையால் தரையில் முட்டுவதும் மோதுவதுமாயிருந்தாளென்க. கொடி-உவமையாகு பெயர்.

இதுவுமது.

282. வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்—ஏனம்
குளம்பான் மணிகிளைக்குங் குண்டுநீர் நாடன்
இளம்பாவை கைதலைமே லிட்டு.

[இ-ள்] அவ்வாறு வீழ்ந்து மீண்டும் எழுந்து பலவிதமாகப் புலம்பி) ஏனம்-பன்றிகள், குளம்பால்-பாதக்குளம்புகளால், மணி-இரத்தினங்களை, கிளைக்கும்-கிண்டுகின்ற, (சிறப்பினையுடைய) நீர்-நீர்நிறைந்த, குண்டு-குளங்களையுடைய, நாடன்-நாட்டிற்கதிபனாகிய வீமனது, இளம்பாவை இளமை பொருந்திய பதுமைபோன்ற குமாரத்தியாகிய அத்தமயந்தி, தனி-ஒன்றியாய், கை-தன்னுடைய கரங்களை, தலைமேல்-சிரசின்மேல், இட்டு-வைத்துக் கொண்டு, வான்-சிறந்த, முகிலும்-மேகமும், மின்னும்-மின்னலும், வறுநிலத்தில்-வெறுந்தரையில், வீழ்ந்ததுபோல் வீழ்ந்துகிடப்பதுபோல, தானுங்குழ

லும்-தானும்தன் கூந்தலுமாக, வீழ்ந்தாள்-மீண்டும் வீழ்ந்து சோப முற்றுக் கிடந்தாள்; [எ-று.]

முன் கவியிற் கூறியமாறு நிலத்தில் வீழ்ந்த தமயந்தி பின்னரும் எழுந்து கைகளால் தலையிலடித்துக்கொண்டு அக்கரங்களைக் கூந்தலிற் சேர்த்தபடியே மீண்டும் வெறுந்தரையில் வீழ்ந்து சோபமுற்றுக் கிடந்தா ளென்பது இதன் கருத்து அவள் பன்முறை வீழ்ந்து வீழ்ந்து எழுந்து புலம்பிக்கொண்டிருந்தபடியால் தளர்ச்சியுற்று முடிவில் தலையில் கரங்களை வைத்தபடியே வெறுந்தரையில் வீழ்ந்து சோபமுற்றுக் கிடந்தாளென்க. முகில் தமயந்தியின் கூந்தலுக்கும் மின்னல் அவளுடைய தேகத்திற்கும் உவமைகளாம். அவள் கூந்தல் சோரத் தரையிற் படுத்திருந்த தோற்றமானது ஒரு மேகம் மின்னலோடுவந்து கிடந்தது போன்றிருந்தது. 'வான்முகிலும் மின்னும் வறு நிலத்து வீழ்ந்தது போல் தானும் குழலும் தனி வீழ்ந்தாள்' என்பது எதிர் நிரனிறைப் பொருள்கோள்: "களிறுங் கந்தும்போல நளிகடற் கூம்புங் கலனுந்தோன்றும்" என்பது போலக் கொள்க. (நன்-பொ-கூஅ.) ஆம் சூத்திரம்பார்க்க. (நன்-பொ-உஎ,) ஆம் சூத்திரவிதிப்படி "தானும் குழலும்" என்பன 'வீழ்ந்தாள்' என்னும் ஒரு முடிபைக் கொண்டன.

இதில் இரவு நீங்கி விடிந்தமை கூறப்படுகின்றது.

283. தையல் துயர்க்குத் தரியாது தஞ்சிறகாங்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோற்
கூவினவே கோழிக் குலம்.

[இ-ள்.] (அத்தருணத்தில்) தையல்-தமயந்தியாகிய பெண்ணினது, துயர்க்கு-துன்பத்திற்கு, தரியாது-சகியாமல், தம்-தங்களுடைய, சிறகு ஆம்-இறகுகளாகிய, கையால்-கரங்களினால், வயிறு அலைத்து-வயிற்றிலடித்துப் பிசைந்து கொண்டு, கார்-கரிய, இருள்வாய்-இருட்டில், (அவள் துயரத்தை விரைவில்வந்து தீர்க்கும் பொருட்டு) வெய்யோனை - சூரியனை, வாவு-தாவுகின்ற, பரி-குதிரைகள் பூட்டப்பெற்ற, தேர் தேரில், ஏறி - ஆரோகணித்து, வா என்று-விரைந்துவரக்கடவாயென்று, அழைப்பனபோல்-கூப்பிடுகின்றவைகளைப்போல, கோழிக்குலம் - கோழிச்சேவலின் கூட்டங்கள், கூவின-பலமுறை கூச்சலிட்டன; [எ-று.]

மேற்கூறியபடி தமயந்தி தரையில் வீழ்ந்து வருந்திக் கொண்டிருக்குஞ் சமயத்தில் இரவு நீங்கி விடியற்காலநேரம் வந்துவிட்டபடியால், கோழிச்சேவல்கள், தமயந்தியின் துயர்க்காற்றாது விரைந்துவந்து அதனைத் தீர்க்கும் பொருட்டுச் சூரியனைக் கூப்பிடுகின்றவைகளைப் போலக் கூவின வென்பது இதன் கருத்து கோழிச்சேவல்கள் கூவின எனவே விடியற்காலம் வந்ததென்பது தானே அமையும். கோழிச்சேவல்கள் கூவும்போது சிறகுகளால்

வயிற்றில் அடித்துக்கொண்டு கூவுவது இயற்கை. அங்ஙனம் கூவியதை, சூரியனை அழைத்ததாகக் குறித்தார் ஆசிரியர். கோழிச்சேவல் கூவியபின்னர் சூரியன் உதிப்பது இயற்கை ஆதலின் இங்கு அவை அவனை அழைத்ததாக ஆசிரியர் கூறியது மிகவும் பொருத்த முடைத்தே. இக்கருத்தை அனுசரித்துச் சூரிய உதயமும் இவைகளின் அழைப்புக்காக ஏற்பட்டதெனக் கொள்ளப்படும். ஒருவர் கேட்டுக்கு இரங்குவோர் கைகளால் வயற்றிலடித்துக்கொண்டு புலம்புதல் இயற்கை. ஆதலின் இங்குத் தமயந்தியின் துயருக்கு இரங்கின கோழிச்சேவல்களும்வயிற்றிலடித்துக் கொண்டதாகக் குறித்தார் ஆசிரியர். ஒரு அபாயத்தை நீக்குவதற்கு மற்றொருவரை அழைப்பவர் விரைந்து வருமாறு கூப்பிடுதல் இயற்கையாதலின் இங்கே கோழிகள்விரைந்தழைத்ததாகக் குறித்ததற்கேற்ப "வாவுபரித்தேரேறி வாவென்றழைப்பன போல்" என்றும் ஆசிரியர் அமைத்துக் கூறினார்.

வெம்மையோன் என்பது வெய்யோன் எனத்திரிந்து வந்தது. கூவினவே என்பதில் ஏ-அசை. கோழியென்பது கோழிக்குலத்தில் ஆண் பெண் ஆகிய இரண்டிற்கும் பொதுப் பெயர். அவற்றுள் கூவுவது சேவலே ஆதலின் கோழி யென்பதற்குக் கோழிச் சேவல் என்று பொருள் கூறப்பட்டது.

இதில் சூரியோதயம் கூறப்படுகின்றது.

284. வான நெடுவீதி செல்லு மணித்தேரோன்
தான மடந்தைக்குத் தார்வேந்தன்—போனநெறி
காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்கக் கானூடே
நீட்டுவான் செங்கரத்தை நின்று.

[இ-ள்.] (அவ்வாறு கோழிச் சேவல்கள் கூவியபின்பு) வானம்-ஆகாயமாகிய, நெடுவீதி-நீண்டதெருவில், செல்லும்-போகின்ற, மணி-இரத்தினங்களினாலாகிய, தேரோன் தேரையுடையவனாகிய சூரியன், அம்மடந்தைக்கு-துன்பப்பட்டுக்கொண்டிருந்த பெண்பாலாகிய அத்தமயந்திக்கு, தார்-மாலையையணிந்த, வேந்தன் நளமகாராஜன், போனநெறி சென்ற மார்க்கத்தை, காட்டுவான்போல் சுட்டிக் காட்டித் தெரிவிப்பான் போல, இருள்போய்-இருளானது புகுந்து, கைவாங்கு-இருக்க இடம்பெற்றுக்கொள்கின்ற, (அதாவது இடம்பெற்றுக் குடியாயிருக்கின்ற) அக்கான் ஊடே-அந்தக் காட்டின் நடுவிலே, செங்கரத்தை - தன்னுடைய சிவந்த கிரணங்களாகிய கரங்களை, நின்று-உதயகிரியின்மேல்நின்று, நீட்டுவான் நீட்டினான்; [எ-று.]

முன்னுரைத்தபடி கோழிச்சேவல்கள் கூப்பிட்டவுடன் சூரியன் அவ்வழைத்தலுக்காகவே தோன்றி நளன் சென்ற மார்க்கத்தைத் தமயந்திக்குச் சுட்டிக்காண்பிப்பவன் போல இருள் மிகுந்த அக்காட்டினூடே கிரணங்களாகிய கைகளை நீட்டினானென்பது இதன் கருத்து. இங்ஙனங் கூறியதனால் சூரியன் உதயமாகிக் கிரணங்களை எங்கும் பரப்பினானென்பது பெறப்படும்.

அக்காட்டிற்குள் பரவிய சூரிய கிரணங்களை அவன் தமயந்திக்கு அரசன் சென்றவழியைச் சுட்டிக்காட்டிய கைகளாகக் குறித்தார் ஆசிரியர். கரம் என்ற-வடசொல் கையையும் கிரணத்தையும் உணர்த்து மாதலின் அதற்குக் கிரணமாகிய கைகள் என்றுபொருள் விரிக்கப்பட்டது இது சிலேடைபற்றிய உருவகமெனப்படும் கை-இடம்; இருள்போய் கை வாங்குசான் என்பதனால் அக்காடு எப்பொழுதும் இருள் சூழ்ந்திருப்பதென்பது பெறப்படும். அதனால் அது எவர்க்கும் எப்பொழுதும் வழியறிய முடியாத இயல்பினையுடையதாம். ஆதலின் அத்தகைய காட்டிற்குள் அந்த இருள் நீங்கித் தமயந்திக்கு வழிதெரியும் பொருட்டுச் சூரியன் கிரணங்களாகிய கைகளை அதற்குள் நீட்டினனென்க. அம்மடந்தை யென்பது இடையே மகரந் தொகுத்தலாய் நின்றது. தான் அசை நின்று என்பதையும் அசையெனக் கோடலும் ஒன்று. மனித்தேரென்பதை அழகிய தேரெனவுங் கொள்ளலாம். நீட்டினான் என இறந்தகாலத்தில் வந்ததற்பாலது நீட்டுவான் என எதிர்காலத்தால் வந்தது இயல்பினால் வந்த காலவழுவமைதி யெனப்படும்.

விடிந்தபின் தமயந்தி நளனை நினைத்துப் புலம்புதல்.

185 செய்தபிழை யேதென்னுந் தேர்வேந்தே என்றழைக்கும்
எய்து துயரக் கரைகாணேனென்னும் — வையவே
என்னென்னு மென்னென்னு மிக்கானில் விட்டேகு
மன்னென்று வாடு மயர்ந்து.

(இ-ள்.) அருணனம் சூரிய உதயமான பின்பு முன்னுரைத்தபடி நீங்கி விடப்பட்ட தமயந்தி எழுந்து) செய்தபிழை (அரசன் இவ்வாறு என்னை விட்டுப் பிரிந்து போவதற்கு நான்) இயற்றிய குற்றம், ஏது என்னும் யாது என்று சொல்லுவள், தேர்வேந்தே-தேரையுடைய அரசனே, என்று அழைக்கும்-என்று கூப்பிடுவாள், எய்து-என்னிடத்தே சேர்ந்திருக்கின்ற, துயரக்கரை துக்கத்தின் எல்லையை, காணேன்-நான் காண்கிலேன், என்னும்-என்று உரைப்பாள், (இவ்வாறு வருந்துகின்ற என்னிடத்தில்) வைய-பிருதுவாக, என் உனக்கு வந்த துயரம் யாது, என்றது-என்று வினவாத என் என்னும்-என்ன காரணம் என்று சொல்வாள், இக்கானில் இந்தக்காட்டிலே, விட்டு என்னைத் தனியாக விட்டு, ஏகும்-செல்கின்ற, மன்-அரசனே!, என்றே-என்று கூவியழைத்து, அயர்ந்து-தளர்ச்சியடைந்து, வாடும்-வாடுவாள்

சூரிய உதயமான பின்பு தமயந்திக்கு தன் நிச்சயமாகத் தன்னைவிட்டு நீங்கிப்போனானென்பது விளங்கியபடியால் அவள் 'என் நாயகர் இவ்வாறு பிரிந்து போவதற்கு நான் என்னபிழை செய்தேன்' என்பதுமுதலிய வார்த்தைகளைக் கூறிப்புலம்புவாளாயினாள் என்பது இதன் கருத்து. துயரககரை காணலாவது துன்பத்தின் எல்லையைக்கடந்து சுகத்தை அடைதலாம்; அதாவது இவ்வளவென்று ஏற்பட்ட துன்பத்தை அனுபவித்து விட்டுப் பிறகு

சௌக்கியத்தையடைதலாம்; அதன் கரை காணுததாவது அதன் எல்லையை எப்பொழுதும்கடக்க முடியாதிருத்தலாம்; அதாவது இவ்வளவென்றுவரைய றுக்கப்படாது எப்பொழுதும் விலகாதிருக்கும் துன்பத்தைஎந்நாளும் அனு பவித்துக் கொண்டிருத்தலாம்; இங்குத் தமயந்திக்கு ஏற்பட்டதுன்பம் இத் தன்மையதாதலின் அவள் "துயரக்கரை காணேன்" என்றாள் என்க "என் ணுதது" என்பது தகரம் தொகுத்தலாய் 'என்ணுது' என வந்தது. இச்செய் யுளில் என்பாள், என்பாள், வாடுவாள், என எதிர்காலத்தால் வந்த முற்றுக் களை யெல்லாம் இறந்தகால வழுவமைதியாய் வந்தனவாகக் கொள்ள வேண்டும்.

### தமயந்தி நளனுடைய அடிச்சுவட்டைக் கண்டு வருந்திப் புலம்புதல்.

286 அல்லியந்தார் மார்ப னடித்தா மரையவடன்
நல்லுயிரு மாசையும்போ னறுதலும்—மல்லுருதோள்
வேந்தனே யென்று வீழ்ந்தாள் விழிவேலை
சாய்ந்தநீர் வெள்ளத்தே தான்.

(இ-ள்) (மேற்கூறியபடி பலவாறு புலம்பிய தமயந்தி விடிந்த பின்னர் வெளியிற் சென்று நளனைத்தேடிப் பார்க்கலாமென் றெண்ணத்துடன் அம் மண்டபத்தை விட்டுச் சிறிது தூரம் நடந்துபோயினள். அப்போது நளன் சென்றவழியில் அவனுடைய பாதச்சுவடு தோற்றிற்று. இவ்வாறு) அல்லி-அல்லியலரினால் தொடுக்கப்பட்ட, அம்-அழகிய, தார் மாலையை அணிந்த மார்பன்-மார்பை யுடையவனாகிய நளனது, அடித்தாமரை-பாதங்களாகிய தாமரை மலர்கள், அவள் தன்-அத்தமயந்தியினுடைய, நல் உயிரும்-நல்லபி ராணனும், ஆசையும்-விருப்பமும், போல்-போல, நாறுதலும் - தோன்றின மாத்திரத்திலே, மல் உறு-மல் யுத்தம்பொருந்திய, தோள் புயங்களையுடைய வேந்தனே-அரசனே, என்று-என்றுகதறி, விழிவேலை-கண்ணாகிய சமுத் திரத்தி னின்றும், சாய்ந்த-பெருகி வந்த, நீர் வெள்ளத்தே - ஜலப் பெருக் கிலே, வீழ்ந்தாள் சுழன்று வீழ்ந்தாள். [எ-று.]

நளனைத்தேடிக்கொண்டு அம்மண்டபத்தைவிட்டு வெளியேறிப்போன தமயந்தி வழியில் அவனுடைய அடிச்சுவடு தோற்றக் கண்டு அவன் மீதேற் பட்ட ஞாபகமும், துக்கமும் அதிகரித்ததனால், ஐயோ! அரசனே! என்று கதறிக் கண்ணீர்விட்டு அழுது கொண்டு கண்ணீர் வடிந்த இடத்திலேயே வீழ்ந்தாளென்பது இதன் கருத்து. நளனுடைய பாதச்சுவட்டைப் பார்த்த வுடனே தமயந்திக்கு அவனுடைய ஞாபகமும் அதனால் ஏற்பட்டதுக்கமும் அதிகரித்ததனால் இவவாறு புலம்பி வீழ்ந்தாள். அந்த அடிச்சுவடானது அவ னுக்குத் தன்னுடைய உயிரைப் போலவும் ஆசையே உருவெடுத்தாற் போல வும் தோற்றிற்றாதலின் ஆசிரியர் "நல்லுயிரும் ஆசையும் போல்நாறுதலும்" என்றார்.

நளன் எதற்கும் அஞ்சாத தோள் வல்லமை பெற்றவனாயிருந்தும் இந்தத் துயரத்தை சகிக்க முடியாமல் தமயந்தியைப்பிரிந்து சென்றது ஆகாதென்பது தோன்ற அவள் அவனை "மல்லுறுதோள் வேந்தனே" என்று கூவிக் கதறினாள் அல்லியந்தார் என்பதற்கு அகவிதழ்களையுடைய மலர்களினால் தொடுக்கப்பட்ட மாலையெனப் பொருள் கோடலும் அமையும். நாறுதல்என்பதற்குப் பரிமளித்தல் என்ற பொருளே விசேஷித்து நிற்கும். ஆதலின் அடித்தாமரை யென்பதற்கேற்ப நாறுதலும் என்றார் ஆசிரியர். தாமரைபரிமளித்தல் இயல்பு. வேலை-கண்ணுக்கு உபமானம். அவள்மிகுதியாக அழவே கண்ணீர் நிலத்தில் வடிந்து ஈரமாகி இருந்தது; அதன்மீதே வீழ்ந்தாள் அவள்; அதனால் "சாய்ந்தநீர் வெள்ளத்தே வீழ்ந்தாள்" என்றார் ஆசிரியர். நாறுதலும், என்று என்பன வினையெச்சங்கள்.

அவ்வாறு வீழ்ந்த தமயந்தி எழுந்து
புலம்புதல்.

287 வெறித்த விளமான்காள் மென்மயில்கா ளிந்த
நெறிக்க ணெடிதூழி வாழ்வீர்—பிறித்தெம்மைப்
போனாரைக் காட்டுதிரோ வென்றுப் புலம்பினாள்
வானாடர் பெற்றிலா மான்.

(இ-ள்.) (அங்ஙனம் வீழ்ந்து உடனே எழுந்து) வான் நாடர்-தேவர் நாட்டிலுள்ள தேவர்கள், பெற்றிலா-பெறாத, மான்-மானை நிகர்த்தவளாகிய தமயந்தி (அங்கு நின்ற மான்மயில் முதலியவற்றை நோக்கி), வெறித்த என்னைக்கண்டு பயந்து நிற்கின்ற, இளமான்காள்-இளமை பொருந்திய மான்களே! மென்மயில்காள்-மென்மைத் தன்மையையுடைய மயில்களே!, எம்மை-எங்களை, (அதாவது: என்னையும் என் மக்களையும்) பிறித்து-வேறாக்கி, போனாரை-சென்ற அரசரை, (நீங்கள் அறிந்திருப்பீர்க ளாதலின்) காட்டுதிர் எனக்குக் காட்டுங்கள், (அவ்வாறு காட்டுவீர்களானால்) இந்த நெறிக்கண்-இந்தவழியிலேயே, ஊழி-யுகமுடிவு வரையிலும், நெடிது - நீட்சியாக, வாழ்வீர்-வாழக்கடவீர், ஓ-ஐயோ!, என்று என்று புலம்பினாள்-; [எ-று.]

முன்னுரைத்தபடி நிலத்தில் வீழ்ந்தெழுந்த தமயந்தி துக்க மிகுதியினால் மனமருண்டு அங்கு நின்ற மான் மயில் முதலியவற்றை நோக்கி என்னைப் பிரிந்து சென்ற அரசனை நீங்கள் காட்டுவீர்களானால் இங்கே நெடுங்காலம் வாழ்வீர்கள் என்று கூறிப்புலம்பினாளென்பது இதன்கருத்து அவைகள் அவ்வழியில் சஞ்சரிக்கக் கூடியனவாதலின் அங்குச் சென்று நளனை அறிந்திருக்கக் கூடுமென்று நினைத்து அவைகளிடம் தமயந்தி இவ்வாறு கூறினாளென்க. துக்க மிகுதியுடையவர்கள் தங்களுக் கேற்பட்ட மருட்சியால் இன்னதைச சொல்லலாம், இன்னதைச் செய்யலாம் என்ற நியதியின்றிச சில காரியங்களைச் செய்தலும் பேசலும் இயற்கையாதலின் துக்க

யிருந்த தமயந்தியும் இவ்வாறு ஒன்றையும் அறியாத மிருகம் பட்சி முதலியவைகளிடத்தில் கூறினாள். "வானோடர் பெற்றிலாமான்" என்றது இந்திரன் முதலிய தேவர்களும் மனைவியாக அடைய முடியாதவள் என்ற பொருளில் நின்றது. காட்டில் வாழும் மிருகம் பட்சி முதலியவைகள் மனிதரைக்கண்ட மாத்திரத்தில் பயந்து மருள்வது இயற்கையாதலின் அப்போது தமயந்தியைக்கண்ட அம்மான் முதலியவைகள் அச்சங்கொண்டு மருண்ட பார்வையோடு நின்றன; அது பற்றியே அவள் "வெறித்த இளமான்காள் மென்மயில்காள்" என்று அவற்றை அழைத்தனள்.

நெடிது-நெடுமை என்னும் பண்படி விகாரம்; இதில் நெடு-பகுதி, து-விகுதி, இடையுகரம் இ ஆயிற்று ஊழி-நாசஞ் செய்தலை யுடையது இக்காலம் எல்லாவற்றையும் நாசஞ்செய்து உலகத்தை அழித்துவிடக் கூடியதாதலின் இப்பெயர் பெற்றது. இதில் ஊழ்-பகுதி, இ-கர்த்தாப் பொருள்விகுதி ஊழ் என்பதற்கு, நாசஞ் செய்தல் என்பது பொருளாம். காட்டுதிர்-நிகழ்கால முன்னிலைப்பன்மை வினைமுற்று; இதில் காட்டு பிறவினைப்பகுதி; இர்-முன்னிலைப் பன்மை விகுதி, த்-எழுத்துப் பேறு; காட்டு என்பதில் காண்-பகுதி, டு-பிறவினை விகுதி. ஓ-இரங்குதற் பொருளில் வந்தது.

## தமயந்தி ஓர் பாம்பினிடம் சேர்தல்.

288. வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியால்
மோட்டு வயிற்றரவு முன்றோன்ற—மீட்டதனை
ஓரா தருகணைந்தா ளுண்டே னறற்கூந்தற்
போரார் விழியாள் புலர்ந்து.

(இ-ள்) (அவ்வாறு புலம்பி நடந்து கொண்டே போய்ப்பின்னர்) உண்தேன்-(மலர்மாலையிலிருக்கின்ற மதுவை) உண்ணுகின்ற வண்டுகள் மொய்க்கப்பெற்ற, அறல்-கருமணலை நிகர்த்த, கூந்தல்-குழலையும், போர் ஆர்-(காதணிகளோடு மோதிச் செய்யும்படியான) போர்பொருந்திய, விழியாள்-கண்களையு முடையவளாகிய அத்தமயந்தி, புலர்ந்து-வாட்டமுற்று, பெரும் பசியால்-பெரிய பசியினால், வேட்ட-தான் விரும்பின, கரியை ஒரு யானையை, விழுங்கி-உட்கொண்டு, மோட்டு வயிறு-பொருமி யிருக்கின்ற வயிற்றினையுடைய, அரவு-ஒரு மலைப் பாம்பானது, முன்தோன்ற அவளுக் கெதிரில் வர, மீட்டு-திரும்பிப் பார்த்து, அதனை ஓராமல்-அதை அறியாமல், அருகு-அதன் பக்கத்தில், இணைந்தாள்-அவள் சேர்ந்தாள்; [எ-று]

மேற்கூறியவாறு வருத்தத்தோடு தளர்ந்து சென்ற தமயந்தி தனக்கு முன்னே பசியினால் ஒரு யானையை விழுங்கி விட்டு வந்து கிடந்த ஒருமலைப் பாம்பை யறியாதவளாய் அதன் சமீபத்திற் போய்ச சேர்ந்தாள் என்பது இதன் கருத்து. அவள் தன்னிடம் அதிகரித்த துயரத்தால் புத்தி கலங்கியிருந்தபடியால் அந்தப்பாம்பு தனக்கு முன்னே கிடந்தும் அதனைத் திரும்

பிப்பார்த்து உணரக் கூடாதவளாயினள். பாம்பு அவள் செல்லும் வழியில் அவளுக்கு முன்னே ஒரு பக்கமாகக் கிடந்தது; அவள் புத்தி மயக்கத்தால் அந்தப்பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை. அது குறித்தே ஆசிரியர், "மீட்ட தனை ஓராதரு கணைந்தாள்" என்றார். "மோட்டு வயிற்றரவு கரியை விழுங்கி முன் தோன்ற" என்று அப்பாம்பின் பெரிய உருவத்தை விளக்கிக்காட்டி 'அதனையும் ஓராது சென்றாள் தமயந்தி" என்றதனால் அவளுடைய அறிவு அதிகமாகக் கலங்கிப் போயிருந்த தென்பது தானே அமையும்.

'உண்' என்பதற்கு முன், 'மலர்மாலையிலிருக்கின்ற மதுவை' என்னுஞ் சொற்கள் இசை யெச்சமாக வருவித்துரைக்கப் பட்டன. 'உண் தேன்'என் பதற்கு 'அணியப்பட்ட மலரில் உள்ள வண்டுகள் உண்ணக்கூடிய மதுவை யுடைய', என்று பொருள் கொண்டு, 'அத்தகைய தேன் தங்கி யிருக்கின்ற கூந்தல்' எனினும் பொருந்தும். 'தேன் அறற் கூந்தல்' என்பதற்கு, 'வண் டையும் கருமணலையும் நிகர்த்த கூந்தல்' எனவும் பொருளுரைக்கலாம்; கூந் தலின் உவமைப் பொருள்களுள் நிறம் பற்றி வண்டும் ஒன்றாம். கண்கள், காதணிகளுக்கு நேராகப் புரண்டு பாய்தல்இயல்பு; அதனையே இங்குக்கண் களுக்குப் போராகக் குறித்தார் புலவர்; இனி, 'போரார்விழி' என்பதற்கு, 'ஆடவரோடு போர்புரியுங் கண்கள்' எனவும் பொருளுரைக்கலாம். ஆடவ ரோடு போர் செய்தலாவது தங்கள் பார்வையின் விதத்தால் அவர்களைக் கலங்கச் செய்தலாம், பெண்களின் பார்வையால் ஆடவர் காதல் கொண்டு மனக்கலக்க மடைதல் இயல்பு. வேட்ட-பெயரெச்சம்; இதில், வேள்-பகுதி அ பெயரெச்ச விகுதி, ட்-இடைநிலை, ளகரம் டகரமானது சந்தி. மீண்டு என்பது வலித்தல் விகாரத்தால் மீட்டு என வந்தது; இதில், மீள்-பகுதி, உ- விகுதி, ட்-இடைநிலை, ளகரம் டகரமானதுசந்தி. விழுங்கி, தோன்ற, ஓராது என்பன வினை யெச்சங்கள்; அததன் முற்றுக்களைத் தழுவின.

இதில் தமயந்தியை மலைப்பாம்பு விழுங்கியது
கூறப்படுகின்றது.

289. அங்கண் விசும்பி னவிர்மதிமேற் சென்றடையும்
வெங்க ணரவுபோன் மெல்லியலைக்—கொங்கைக்கு
மேலெல்லாந் தோன்ற விழுங்கியதே வெங்கானின்
பாலெல்லாந் தீயுமிழும் பாம்பு.

[இ-ள்.] (அவ்வாறு தமயந்தி அப்பாம்பின் அருகிற்சேரவே) அம் அழ கிய, கண்-இடமகன்ற, விசும்பின்-ஆகாயத்தில், அவிர்-பிரகாசத்தால் விளங் குகின்ற, மதிமேல்-சந்திரன்மீது, சென்று அடையும்-போய்ச் சேர்ந்துஅதனை விழுங்குகின்ற, வெம்-வெவவிதாகிய, கண்-கண்களையுடைய, அரவுபோல்- இராகுவென்னும் பாம்பைப்போல, வெம்கானில்-வெப்பம்பொருந்திய அக் காட்டிலே, பால் எல்லாம்-தான் செல்லும் பக்கங்களிலெல்லாம், தீ உமிழும்- விஷாக்கினியைக் கக்குகின்ற, பாம்பு-அந்த மலைப்பாம்பானது, மெல் இயலை-

மெல்லிய தன்மையையுடைய அத்தமயந்தியை, கொங்கைக்குமேல் எல்லாம்-தனங்களுக்கு மேற்பட்ட பாகங்களெல்லாம், தோன்ற-வெளியில் தெரியும்படி, விழுங்கியது-உட்கொண்டது; [எ-று.]

தமயந்தி முன்னே கிடந்த மலைப்பாம்பை அறியாமல் அதன்சமீபத்திற் சேரவே அது, அவளுடைய தனங்களுக்கு மேற்பட்ட அவயவங்களெல்லாம் தெரியவும் அவற்றிற்குக் கீழ்ப்பட்ட பாகங்களெல்லாம் உட்செல்லவும் அவளை விழுங்கிற்றென்பது இதன் கருத்து. பாம்பு முதலிய பிராணிகள் மற்ற பிராணிகளைப் பிடித்து விழுங்கும் போது அவற்றின்பாதிப் பாகத்தை மாத்திரம் முதலிற் பற்றிக்கொண்டு பின்பு சிறிது சிறிதாக அவற்றின் வலியொடுங்கியபின் மற்றப் பாகத்தையும் உட்கொள்ளுதல் இயற்கை. பிடிக்கும்பொழுதே அவற்றின் முழுப்பாகத்தையும் விழுங்கிவிட்டால் அவைகள் உயிருடன் தம் வயிற்றிற்குட் செல்வதால் அவற்றின்மூலம் தமக்கு உபத்திரவமுண்டாகுமென்பது இத்தகையபிராணிகட்குத் தெரியும். ஆதலின், இப்பாம்பும் தமயந்தியை அவ்வாறு பற்றியது. இராகு சிலசமயங்களில் சந்திரனுடைய முழுப்பாகத்தையும் விழுங்குவதா யிருந்தாலும் பெரும் பான்மையும் அரைப்பாகத்தையோ அதற்குக் குறைந்த பாகங்களையோ தான் விழுங்கும்; ஆதலின், அது போலவே இங்குத் தமயந்தியின் பாதிப்பாகத்தை விழுங்கிய மலைப்பாம்பின் செய்கையை அந்த இராகுவினுடைய செய்கைக்கு இணையாகக் கூறினர் புலவர். இராகு மலைப்பாம்பிற்கும், சந்திரன் தமயந்திக்கும் உவமைகளாம்; தமயந்தியின் தேகநிறம் சந்திரனைப்போன்று பிரகாசிப்பதாதலின் அவளை அதற்குவமையாகக் கூறியது மிகவும் பொருத்த முடைத்தென்க.

அவிர்மதி வினைத்தொகை. மெல்லியல்-பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. விழுங்கியது-அஃறிணை யொன்றன்பாற்படர்க்கை வினைமுற்று; இதில், விழுங்கு-பகுதி, இன் இடைநிலை; இதன் ஈற்றுனகரம் கெட்டது, அ சாரியை, து-விகுதி, ய்-உடம்படுமெய்; இடைநிலை ஈறுகெடாத போது அச்சாரியை வராது; உதாரணம்: விழுங்கிற்று; இவ்விடைநிலை முதல் கெட்டு வருதலுமுண்டு; உதாரணம்: போனான். பால்-எழாம் வேற்றுமை யிடப்பொருளில் வந்த சொல்லுருபாகவும் கொள்ளப்படும்.

பாம்பு விழுங்கியவுடன் தமயந்தி நளனைக் கூவிப் புலம்புதல்.

290. வாளரவின் வாய்ப்பட்டு மாயாமுன் மன்னவநின்
தாளடைந்து வாழுந் தமியேனைத்—தோளால்
விலக்காயோ வென்றழுதாள் வெவ்வரவின் வாய்க்கிங்
கிலக்காகி நின்றா ளெடுத்து.

[இ-ள்.] (அவ்வாறு மலைப்பாம்பு விழுங்கிய வுடனே) இங்கு-இவ்வனத்தில், வெம் அரவின் வாய்க்கு-வெவ்விதாகிய அம்மலைப் பாம்பின் வாய்க்கு, இலக்கு ஆகிநின்றாள்-பற்றும் இலக்ஷியமாகி நின்றவளாகிய அத்தமயந்தி,

(அதாவது: பாம்பினால் விழுங்கப்பட்ட தமயந்தியானவள்,) மன்னவ-என் கணவனாகிய அரசனே!, (நான்) வாள் அரவின்-வாள்போல் என்னைச்சேதிக்கும்இப்பாம்பினுடைய, வாய்ப்பட்டு-வாயில் அகப்பட்டு, மாயாமுன்-இறவாததற்கு முன்னமே, நின்தாள் அடைந்து-உன்னுடைய பாதங்களைச்சேர்ந்து, வாழும்-ஜீவிக்கத்தக்க, தமியேனை துணையற்ற என்னை, (நீ வந்து) தோளால்-உன்னுடைய புயவல்லமையினாலே, விலக்காயோ-இப்பாம்பின் வாயினின்றும் நீக்கிக் காக்க மாட்டாயோ, என்று-என்று சொல்லி, எடுத்து-குரலை உயர்த்தி, அழுதாள்-அழுது புலம்புவளானாள்; [எ-று.]

பாம்பின் வாய்ப்பட்டவுடனே தமயந்தி தன்னைக் காப்பவர் அங்கெவருமில்லையாதலின், தன் கணவனாகிய நளனையே கூவியழைத்து நீ என்னை இவ்வாபத்தினின்றும் நீக்கிக் காக்கமாட்டாயா என்று அழுதாள் என்பது இதன் கருத்து. பெண்களை ஆபத்துக்காலத்தில் காப்பவர் புருஷரே ஆதலின், இங்குத்தமயந்தி இச்சமயத்தில் தன்னைக்காக்க வருமாறு தன் நாயகனையே கூவியழைத்தாள். பதிவிரதைகள் எந்த ஆபத்திலும் தம் கணவரையே நினைத்தல் முறைமையாதலின் நளன் தன்னை விட்டுப்பிரிந்து போயிருந்தும் இவள் அவனை நினைத்துக்கூவியழைத்தாள். ஆபத்துக் குள்ளானவர்கள் இன்னது கூறுவதென்றுணராமல் அச்சமயத்தில் ஆகாத காரியங்களையும் பதறிக்கூறுதல் இயற்கையாதலின், இவளும் கலக்கத்தால் சமீபத்திலில்லாத நளனைப் பக்கத்திலிருப்பதாக நினைத்து இவ்வாறு கூறினாள் எனினும் பொருந்தும். இவ்வாறு கூறுவதிலும் கணவனையே இவள் நினைத்துக் கூறினாளாதலின் இவளிடத்துக் கற்பிலக்கணம் அமைந்ததென்பது பெறப்படும். இப்பொழுது அரவு தன் பாதிப் பாகத்தை விழுங்கியிருப்பினும் முழுப்பாகமும் உட்சென்ற பிறகே உயிர்போகுமாதலின் அவ்வாறு மடிவதற்கு முன் வருவாயென்பது தோன்ற, இவள், "வாய்ப்பட்டுமாயாமுன்" என்றாள்; இவ்விடத்தில், 'வாய்ப்பட்டு' என்பதற்கு 'என்னுடைய முழுத்தேகமும் வாய்க்குளகப்பட்டு' என்று பொருள் கொள்ளவேண்டும். தமயந்தி எப்பொழுதும் நளன் பாதத்தைச்சேர்ந்து வாழக்கூடியவளாயிருந்தும் இப்பொழுது தனிப்பட்டுப் போயினாளாதலின், "நான் நின்பாதத்தைச்சார்ந்து வாழக்கூடியவளாயிருந்தும் இப்பொழுது தனிப்பட்டு வருந்துகின்றேன்; ஆதலின் இத்தருணத்தில் வந்து நீ என்னைக் காப்பாற்றவேண்டு"மென்பது தோன்ற, "நின்தாளடைந்து வாழும் தமியேனை" என்றாள். ஆடவர் தோள் வல்லமையினாலேயே எதையும் செய்யக்கூடியவர்களாதலின், 'தோளால் விலக்காயோ' எனவும் கூறினாள்.

'வாளரவு' என்பதற்குப் 'பிரகாசம் பொருந்திய பாம்பு' எனப்பொருள் கோடலுமொன்று; பாம்புகளின் உடம்பில் ஒருவகை மினுமினுப்புத்தோன்றுதல் இயற்கை. தமி தனிமை விலக்காயோ என்பதில் ஓ-வினாப்பொருளில் வந்தது, இரங்குதற் பொருளில் வந்ததெனலுமாம். வெவ்வரவு என்பதில் வெம்மை, மையீறு கெட்டு மகரவொற்று வகரவொற்றாகத்திரிந்து நின்றது. இலக்கு-குறியிடம்; அதாவது: ஒன்றைச சாரவைக்கும் இடம்; இங்குத்தமயந்

திபாம்பின் வாய்சேர்தற்கிடமாயினளாதலின் அவளை 'வாய்க்கு இலக்காகி நின்றாள்' என வாளரவின் வாய்ப்பட்டு என்றார் ஆசிரியர். வாய்ப்பட்டு-வாயிற்பட்டு; ஏழாம் வேற்றுமைத் தொகை. தமியேன் என்பதில் ஏன்-ஒருமைத் தன்மை விகுதி.

இதுவுமது.

291. வென்றிச் சினவரவின் வெவ்வா யிடைப்பட்டு
வன்றுயராற் போயாவி மாள்கின்றேன்—இன்றுன்
திருமுகநான் காண்கிலேன் தேர்வேந்தே என்றாள்
பொருமுகவேற் கண்ணாள் புலர்ந்து.

[இ ள்.] (மேலும்) பொரும்முகம்-போர்செய்கின்ற கூரியமுகமுள்ள, வேல் வேலாயுதத்தை நிகர்த்த, கண்ணாள்-கண்களையுடையவளாகிய தமயந்தி, புலர்ந்து-கலக்கத்தால்வாடி, தேர்வேந்தே - இரதத்தையுடைய அரசனே!, வென்றி-வெற்றியை உடைய, சினம்-கோபம் பொருந்திய, அரவின்-இந்தப் பாம்பினுடைய, வெவ்வாய் இடைப்பட்டு-வெவ்விய வாயினிடத்தே சிக்கி, வன்துயரால் வலிய துன்பத்தினாலே, ஆவிபோய் - பிராணன்நீங்கி, மாள்கின்றேன் - இறக்கின்றவளாகிய நான், இன்று-அப்படியிறக்கும் இப்பொழுது, உன்னுடைய, திருமுகம்-அழகியமுகத்தை, காண்கிலேன்-காணாதிருக்கின்றேன், என்றாள்-என்றுகூறியும் புலம்பினாள்; [எ-று]

தனக்கு உயிர்போகும் தருணமாயிருந்த படியால் தமயந்தி இச்சமயத்திலேனும் நமது நாயகர் வந்து அவருடைய முகதரிசனத்தை நமக்குக் காட்டமாட்டாரா என்று மிக ஆவலோடு நினைத்தபடியால், "போயாவி மாள்கின்றேன் இன்றுன் திருமுக நான் காண்கிலேன்" என்றாள். அவள் அச்சமயத்தில் இறவாதிருந்து சிறிதுநேரத்திற்குள் உயிர்போய்விடும் என்னுந் துணிவு பற்றி அப்பொழுதே இறப்பதாக 'மாள் கின்றேன்' என்று நிகழ் காலத்தாற் கூறினாள். தமயந்தி இவ்வாறு கூறியதனால், நளனை, "நீவந்து என்னைக்காவா விடினும் நின் திருமுக தரிசனமாவது காட்டமாட்டாயா?" என்று வினவினாளென்பது குறிப்பாலேற்படும். பாம்புக்கு வென்றியாவது தன்னைத்தடுப்பாரின்றித்தான் அச்சமயத்தில் தமயந்தியைப் பிடித்து விழுங்குதலாம்.

இடை-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. மாள்கின்றேன் - வினையாலணையும் பெயர்; வினைமுற்றெனினுமாம் நான்-தன்மை யொருமைப்பெயர். பொருமுகம்-வினைத்தொகை. காண்கிலேன் - தன்மை யொருமை வினைமுற்று: இதில் காண்-பகுதி, ஏன்-தன்மை யொருமைவிகுதி, கில-ஆற்றற் பொருண்மையை யுணர்த்தும் விகுதி, இதுமுதற்பகுதியோடு சேர்ந்து அனைத்துமொருபகுதியாய்; எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது, 'கில்' என்பதை கு-இல் எனப்பிரித்துக் கு-சாரியை என்றும், இல்-எதிர்மறையைக் குறிக்கும் பண்படி யென்றும்-கொள்ளலாம். என்றாள்-சொல்லெச்சம்.

**தமயந்தி தன்பிள்ளைகளை நினைத்து விளித்து அவரிடம் நீரேனும் நும் தந்தையைக் காண்பீரோ என்று வினவி வருந்துதல்.**

292. *மற்றொடுத்த தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்*
*பெற்றெடுத்த மக்காள் பிரிந்தேகும்—கொற்றவனை*
*நீரேனுங் காண்குதிரோ வென்றழுதாள் நீள்குழற்குக்*
*காரேனு மொவ்வாள் கலுழ்ந்து.*

[இ-ள்.] (பின்னரும் தன் மக்களை விளித்து) நீள் குழற்கு - தன்னுடைய நீட்சிபெற்ற கூந்தலின் நிறத்திற்கு, காரேனும்-மேகமாயிருந்தாலும், ஒவ்வாள்-சமத்துவமாகப் பெறாதவளாகிய தமயந்தி, கலுழ்ந்து-கலங்கி, மல் தொடுத்த தோள்-மல்யுத்தம்பொருந்திய நளமகாராஜனது தோளை; பிரிந்தும்-நீங்கியும், மாயாத-இறந்துபோகாமலிருக்கின்ற, வல்வினையேன் வலிமையாகிய பாவ வினையையுடைய நான், பெற்று எடுத்த-ஈன்று கையிலேந்திய, மக்காள்-பிள்ளைகளே! பிரிந்து ஏகும்-(என்னை இந்தஆபத்தில் சிக்கவைத்து விட்டு)நீங்கிச் செல்கின்ற, கொற்றவனை-மன்னனை, நீர் ஏனும் நீங்களாயினும், காண்குதிரோ-பார்ப்பீர்களோ, என்று அழுதாள்-என்று கூறிப் புலம்பினாள்; [எ-று]

தமயந்தி, சாகுந்தறுவாயி லிருந்ததால், "ஐயோ! நாம் இறந்துவிடப்போகின்றோமே, நாயகரும் எங்கோ சென்றனரே; இனி நம்மக்களை ஆதரிப்பாரெவர்? ஒருவாறு நம்நாதர் அவர்களிடம் சேர்ந்தால் அவர்களை ஆதரித்துக் கொள்வார்; அப்படி அவர் ஆதரிக்கும்படி நம் பிள்ளைகள் அவரைப் பார்த்தனரோ பார்க்க வில்லையோ" என்று மக்களைப் பற்றிய ஞாபகத்தையும் துயரத்தையும் அடைந்தபடியால் மக்களை மனத்தால் நோக்கி விளித்து "நீரேனும் காண்குதிரோ?" என்று வினவிப் புலம்பினாள். பதிவிரதைகளுக்குப் பதியே சிறந்தவனாகலின், தமயந்தி முதலில் நாயகனை நினைத்துப் புலம்பிப் பின்னர்ப் பிள்ளைகளை நினைத்து வருந்தினாள். கற்புடையமங்கையர் நாதனைப் பிரிந்த மாத்திரத்தில் அத்துயரத்தால் உயிர் துறக்க வேண்டும்; தமயந்தி அங்ஙனம் மாளாதிருந்தமையால், "தோள் பிரிந்தும்மாயாதவல்வினையேன்" என்று தன்னைத்தானே நிந்தித்துக் கூறிக்கொண்டாள். தமயந்தி நளனைப் பிரிந்தவுடனேயே இறக்கவேண்டியவளா யிருந்தாலும், ஏதேனும் நல்வினையிருந்தால் ஒரு சமயம் அவனைப்பார்த்தல் கூடுமென்றும், தன் பிள்ளைகளுக்குஆதரவில்லை யென்றும் நினைத்து மரணமடையாம லிருந்தாள்; அப்படியிருந்தும் இறத்தலே சிறப்பென்பது தோன்ற இங்ஙனம் கூறினாள்.

மக்காள் என்பதில் ஈற்றயல் ஆகாரம் விளியுருபு. ஏகும்-பெயரெச்சம். 'மறறொடுத்த தோள்' என்பதை அன்மொழித் தொகையாகக் கொண்டு அரசனுக்குக் கூறினும் பொருந்தும். ஏன்-ஒருவகை யிடைச் சொல்; இஃதும் உம்மையோடு கூடியேவரும். 'காரேனும்' என்பதிலுள்ள உம்மை-சிறப்புப்பொ

ருளது 'நீரேனும்' என்பதிலுள்ளது விகற்பப்பொருளது; இது பிரிநிலைப் பொருளில் வந்ததாகவுங் கொள்ளப்படும்; காண்குதிரோ-எதிர் கால வினை; இதில் கு-சாரியை; இது உகரச் சாரியை பெற்றுக் காணுதிர் எனவும் வரும். கொற்றவன்-வெற்றியை உடையவன்; கொற்றம்-வெற்றி.

## தமயந்தி, தான் இறந்துபோகப் போகிறதாக நிச்சயித்து நாயகனுக்கு வணக்கஞ் செய்தல்.

293. அடையுங் கடுங்கானி லாடரவின் வாய்ப்பட்
டுடையுமுயிர் நாயகனே ஓகோ—விடையெனக்குத்
தந்தருள்வா யென்னுத்தன் ருமரைக்கை கூப்பினாள்
செந்துவர்வாய் மென்மொழியாள் தேர்ந்து.

(இ-ள்) (அவ்வாறு கூறி அதன் மேலும்) செம்துவர்-சிவந்த பவளம் போன்ற, வாய்-வாயையும், மெல் மொழியாள் - மிருதுவான வசனங்களையு முடையவளாகிய அத்தமயந்தி, தேர்ந்து-தான் எவ்வகையிலும் மரணத்தி னின்றும் மீளமுடியாதென்பதை உணர்ந்து, (இனி நமக்கு நற்கதிகிடைக் கும் பொருட்டு நாயகரை வணங்கிக் கொள்வோம் என்று துணிந்து தன் கணவனை மனத்திற் றியானித்து) அடையும்-நான் சேர்ந்த, கடும் கானில்-கடுமை பொருந்திய காட்டில், ஆடு-ஆடுகின்ற, அரவின் வாய்ப்புட்டு-பாம் பின்வாயிற் சிக்க, உடையும்-சிதைந்து இப்பொழுது என் தேகத்தை விட்டு நீங்கிச் செல்கின்ற, உயிர்-எனதுயிர்க்கு, நாயகனே-நாதனே, ஓகோ-ஐயோ! எனக்கு விடைதந்து அருள்வாய்-நான் இவ்வுலகத்தை விட்டுச்செல்லுதற்கு எனக்கு உத்தரவு கொடுத்தருள்வாயாக, என்னு-என்று சொல்லி, தன்-தன் னுடைய, தாமரைக்கை-தாமரை மலர் போன்ற கரங்களை, கூப்பினாள்- குவித்து அவனுக்கு வணக்கஞ் செய்தாள்; [எ-று]

தான் தமயந்தி இறந்து போவதை நிச்சயமாகத் தெரிந்து கொண்டப டியால் தமயந்தி தன் நாயகனுக்கு வணக்கம் செய்துஅவனிடம் விடைபெற் றுக்கொள்ளக் கருதி இவ்வாறு கூறிக் கை கூப்பினாள். பதிவிரதைகள் உயிர் நீங்குங்காலத்திலும் நாயகனையே தெய்வமாகக் கருதி வணங்கிச்செல் லுதல் கற்பிலக்கண மாதலின் தமயந்தியும் இவ்வாறு செய்தாளென்க. அப் பொழுது அவளுடைய உயிர் பாம்பினால் மிக்க வாதனையடைந்து தேகத் தைவிட்டு நீங்கிச் செல்ல ஆயத்தமா யிருந்தது; ஆதலின், அவள், 'அரவின் வாய்ப்பட்டு உடையுமுயிர்' என்றும், அவ்வுயிரை எப்பொழுதும் காக்கக்கூ டியவன் நளனே யாதலின் அவனை உயிர் நாயகனே' என்றுங் கூறினாள்.

ஓகோ-இரங்கற் குறிப்பிடைச் சொல். தாமரை -, முதலாகு பெயராய் அதன் மலரை உணர்த்திற்று. கடுங்கான்-உரிச்சொற்றொடரென்பினுமாம்.

**பாம்பின் வாயிற்பட்டு வருந்தும்**
**தமயந்தியை ஒரு வேடன் பார்த்தான்.**

294 உண்டோ ரழுகுரலென் ஞெற்றி வருகின்ற
வெண்டோடன் செம்பங்கி வில்வேடன்—கண்டான்
கழுகுவாழ் கானகத்துக் காரரவின் வாயின்
முழுகுவா டெய்வ முகம்.

(இ-ள்) (அவ்வாறு தமயந்தி கை கூப்பிப் புலம்புந் தருணத்தில் அவளுடைய அழுகுரலைக் கேட்டு அவளிருக்கும் திசையை நோக்கி வந்தான்; அங்ஙனம்) ஓர் அழுகுரல்-(இவ்வனத்தில் ஒரு பெண் தனிப்பட்டு) அழுகின்ற ஒரு குரலோசையானது, உண்டு என்று - ஏற்பட்டிருக்கின்றதென்று, ஒற்றி-நெருங்கி, வருகின்ற-வருகின்றவனும், வெள் தோடன்-தந்தத்தாற் செய்யப்பட்ட வெண்மையாகிய குண்டலமென்னும் காதணியையுடையவனும், செம்பங்கி-செம்பட்ட மயிருள்ளவனும், வில்-கரத்தில் வில்லைத் தரித்தவனும்; (ஆகிய) வேடன்-அவ்வேடனானவன், கழுகுவாழ் - கழுகுகள் வாழுகின்ற, கானகத்து- அக்காட்டில், கார்-கரிய, அரவின் - பாம்பினுடைய, வாயின்-வாயிலே, முழுகுவாழ்-அமிழ்கின்ற அத்தமயந்தியின், தெய்வமுகம்-தெய்வத்தன்மை பொருந்திய முகத்தை, கண்டான்-பார்த்தான்; [எ-று.]

தமயந்தி மேற்கூறியபடி பாம்பின் வாயிலிருந்து புலம்பும் தருணத்தில் வேட்டையின் பொருட்டு அக்காட்டிற்குள் வந்த வேடன் ஒருவன் அவ்வழுகைக் குரலைக்கேட்டு 'இஃதேது இங்கே ஒற்றையழுகுரல் கேட்கின்றது, என்றதிசயித்து அக்குரல் வந்தவழியே சென்று தமயந்தியைக் கண்டான். நற்குணமுடையார்க்கு எத்தகைய ஆபத்தும் விலகுதல் இயற்கையாதலின். மகா உத்தமியாகிய தமயந்தியின் ஆபத்துநீங்குதற்கு ஆங்கு வேடன்வருகை ஏற்பட்டது. அவள் முன் ஜன்மத்திற் செய்த ஏதோசிறிது தீவினையால்அவளைப்பாம்பு விழுங்கிற்று; எனினும் இப்பிறப்பில் அவள் நன்மையையே புரிபவளாயிருந்தபடியால் அத்துன்பம் நீங்குதற் கேதுவுண்டாயிற்று. இனி அவளைப் பாம்பு விழுங்கியது கலியின் வஞ்சனையால் ஏற்பட்டதெனவுங் கூறலாம் அங்ஙனமாயின் அத்துன்பம் நீங்குதற் கேதுவுண்டாகாதேயெனின், கலிக்கு, நளனையும் தமயந்தியையும் உயிருடன் வைத்துக்கொண்டேவருத்தவேண்டுமென்னும் எண்ணம் ஏற்பட்டதாலும், அவர்களை அடியோடு அழித்துவிட வேண்டுமென்னும் எண்ணம் இல்லையாதலாலும் தமயந்திக்குத் துன்பத்தை ஏற்படுத்திய அவன் உடனேநிவிர்த்தி மார்க்கத்தையும் ஏற்படுத்தினன்; அதனுல் இவ்வேது உண்டாயிற் றென்க. இங்ஙனமே பின் நிகழும் ஒவ்வொன்றும் நடைபெறுவதால் இது துணியப்படும்

'ஒற்றிவருகின்ற'-என்பதற்கு, 'மறைந்து மறைந்து வருகின்ற' எனவும் பொருளுரைக்கலாம்; ஒன்றுதல்—மறைதல்; வேடர் மிருகங்களைக் கொல்வ

தற்குக் காட்டில் பதுங்கிப் பதுங்கி அவற்றினுறைவிடங்களைப் பார்த்துக் கொண்டு வருதல் இயல்பு. யானைத்தந்தம், வேறுவகை எலும்புகள் முதலியவற்றால் வேடர் ஆபரணங்களைச் செய்து அணிந்து கொள்வது இயற்கை; ஆதலின், அவனை, 'வெண்டோடன்' என்றார் புலவர். தமயந்தியின் முகத்திற்குத் தெய்வத்தன்மையாவது தேவரில் ஒருவனாகிய சந்திரனுடைய தேஜஸைப் பெற்றிருத்தலாம். தோடன்-குறிப்பு வினையாலணையும் பெயர்.

**தமயந்தி தன்னைப் பாம்பின் வாயினின்றும்
விடுவிக்கும்படி வேடனை வேண்டுதல்**

295. வெய்ய அரவின் விடவாயி னுட்பட்டேன்
ஐயன்மீ ருங்கட் கபயம்யான்—உய்ய
அருளீரோ வென்று வரற்றினா ளஞ்சி
இருளீரும் பூணா ளெடுத்து.

(இ-ள்) (அவ்வாறு வேடன் அங்கே வந்தவுடன் அவனைப் பார்த்து) இருள்-இருட்டை, ஈரும்-பிளந்துநீக்குகின்ற, பூணாள்-ஆபரணங்களை அணிந்தவளாகிய தமயந்தி, அஞ்சி- (தன் உயிர் நீங்குவதற்குப்) பயந்து, வெய்ய-வெவ்விதாகிய, அரவின்-பாம்பினுடைய, விடவாயினுள்-விஷம்பொருந்திய வாய்க்குள்ளே, பட்டேன்-சிக்கினேன், (இப்பொழுதென்னைக் காப்பாரெவருமில்லை; ஆதலின்) ஐயன்மீர்-ஐயன்மாரே!, யான் நான், உங்கட்கு-உங்களுக்கு, அபயம்-அடைக்கலமாகின்றேன், உய்ய-(இத்தகையவள்) பிழைக்கும்படி, அருளீரோ-கிருபைசெய்ய மாட்டீர்களா?, என்று-என்று, எடுத்து-குரலை உயர்த்தி, அரற்றினாள்-கதறினாள்; [எ-று.]

நிச்சயமாக உயிர்நீங்கிவிடப் போகின்றதென்று நினைத்து நாயகனுக்கு வணக்கஞ்செய்த தமயந்தி, வேடனைக் கண்டவுடன், 'நீ என்னைக் காப்பாற்று' என்று வேண்டினாள் என்பது இதன்கருத்து. பதிவிரதைகள் எத்தருணத்திலும் தம் நாயகரைத் தவிர மற்றவர் உதவியை விரும்பாதவர்களெனினும், ஏதேனும் ஓர் ஆபத்து நேர்ந்த சமயத்தில், தம் நாயகர் இல்லாவிடின், எதிர்ப்பட்டவரை அவ்வாபத்தை நீக்கும்படி வேண்டுதல் உலக வியற்கையாதலின், அவ்வியற்கைப்படி இங்குத் தமயந்தியும் வேடனை வேண்டினாள். பதிவிரதைகள் தம் நாயகரைப் பிரிந்தகாலத்தில் உயிரைப் பெரிதாக நினையாமல் இறக்கவேண்டியது நியாயமாயிருக்க, இவள் உயிர் போவதற்கஞ்சி இங்ஙனம்வேடனைத் துணை செய்யுமாறு வேண்டல்நியாயமாகுமோவெனின் நளன் உயிருடனேயே பிரிந்து சென்றானாதலினாலும், மீண்டும் அவனைக் காணுதல் கூடுமென்ற எண்ணம் இவளுக்கிருந்தமையாலும், நளன் பின்னொரு காலத்தில் தன்னைத் தேடிக்காணவரும் பக்ஷத்தில் தான் இறந்ததையுணர்ந்தால் அவனும் உயிர்விடுவானென்ற எண்ணம் உண்டானமையானும் அதனால் தான், உயிருடனிருந்து அவனைக் காணுதலே நலமென்று தோற்

றிய படியானும், 'நாம் இப்பொழுது எப்படியேனும் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும்; நாம் நாதனைக் காணுவிடில் பின்னர் வேண்டுமானால் உயிர்விடத் துணியலாம்' என்றுஇவ்வாறு தன்உயிர்போவதற்கஞ்சித் தனக் குத்துணை செய்யுமாறு வேடனை வேண்டினளென்க. எனினும் ஸ்திரீகள் தனிப்பட்ட சமயத்தில் அன்னியனுடைய உதவியை விரும்புவதில் நன்மை யுமுண்டு, தீமையுமுண்டு உதவிசெய்வோர் நல்லோராயின் நன்மையுண்டா கும், தீயோராயின் தீமையுண்டாகும். தமயந்தியால்வேண்டப்பட்ட வேடன் தீயோனாதலின் தீமையே செய்யத்துணிந்தான்; ஆயினும் தமயந்தியின் கற் பின் மகிமையால் அது உடனே நீங்கிற்று; அது பின்வரும். இதனால் ஸ்திரீ கள் தனிப்பட்ட சமயத்தில் அன்னிய ஆடவனுடைய உதவியை விரும்ப லாகாதென்பதும், அப்படி ஒருசமயம் விரும்பினாலும் நல்லோரென்றுதுணி யப்பட்டவரிடமே உதவி பெறவேண்டு மென்பதும் உணரப்படும்.

'ஐயன்' என்பது 'ஆர்யன்' என்னும் வடசொற்றிரிபு; 'ஆர்யன்' என்ப தற்கு, 'மரியாதை செய்யத்தக்கவன்' என்பது பொருள். வேடன் ஒருவனை 'ஐயன்மீர்' எனப் பன்மையாகக் கூறியது, உயர்வினால் ஒருமையிற் பன்மை வந்த பால்வழுவமைதி. "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணை யிழுக்கினு மியல்பே" என்பது (நன்-பொ-உ)ஆம் சூத்திரம் "அன் ஆள்" (நன்-பத-கஅ) என்னும் சூத்திரத்தில் கூறப்பட்ட விகுதிகளை, "பெயரினுஞ் சிலவே" என்று கூறியதனால் 'ஐயன்' என்னுஞ் சொல்லின்மேல் பலர்பாலுக்கு, மார்விகுதி வந்தது. "ரவ்வீற்றுயர்பெயர்க் களபெழல்" (நன்-பொ-ரு உ) என்னும்சூத்திரத்தில் "ஆண்டையா ஈஆதல்" என்றதால் ஈற்றயல் ஆகாரம் விளியில் ஈகாரமாயிற்று

**வேடன் தமயந்தியைப் பாம்பின் வாயினின்றும் வெளிப்படுத்துதல்.**

296. சங்கநிதிபோற் றருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய்நின் றுலக மீட்டாற்போல்—மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு.

(இ-ள்) (அவ்வாறு தமயந்தி வேண்டியவுடனே) சங்கநிதிபோல்-சங்க வடிவமாகிய குபேர நிதியைப்போல, தரு-கொடுக்கின்ற, சந்திரன் சுவர்க்கி-சந்திரன் சுவர்க்கி யென்பவன், உலகம்-உலகத்தை, வெம்கலிவாய் நின்று-வெப்பமான கேட்டினிடத்திலிருந்து, மீட்டாற் போல் - மீட்டதைப்போல பகைகடிந்த-சத்துருவைக் கோபித்து வருத்தி நீக்கிய, காம்பின் - மூங்கிலி னாலே, வாய்-அமைந்த, (அதாவது செய்யப்பட்ட) வில்-வில்லை யுடைய, வேடன்-வேடுவன் கண்டு-தமயந்தியைப் பார்த்து, மங்கையை-அத்தமயந்தி யாகிய பெண்ணை, வெம்-கொடுமையாகிய, பாம்பின் வாய் நின்று-பாம்பின் வாயினிடத்திலிருந்து, பறித்தான்-வெளிப்படுத்தினான்; [எ-று]

தமயந்தி மேற்கூறியவாறு வேண்டவே வேடன் அவளுடைய ஆபத்தான நிலைமையை யுணர்ந்து உடனே அவளை அப்பாம்பின் வாயினின்றும் மீட்டான், இங்ஙனம் கூறியதனால் அவன் அப்பாம்பைக் கொன்று அதன் வாயைப்பிளந்து தமயந்தியை அதனினின்றும் வெளிப்படுத்தினனென்பது வருவித்துப் பொருள்கொள்ளத் தக்கதாகப் பெறப்படும் இதனை,

"பொங்கழல்வெங் கானகத்துப் பூவை யழுங்குரல்கேட்
டங்கோர் சிலைக்கை யடல்வேடன் வந்தணுகி
வெங்க ணரவெறிந்து வெவ்வா யிடைநின்றுங்
கொங்கவிழு மென்கூந்தற் கோதைதனை நீக்கினனால்"

என்பதனால் உணர்க. பறித்தான் என்பதற்குப் 'பிடுங்கினான்' என்பது நேர் பொருள்; அதாவது ஒருவன் ஓரிடத்திலுள்ள பொருளைக் கையாற்பற்றி இழுத்துப் பற்றுதலாம்; எனினும் இஃதிங்கே வெளிப்படுத்துதலாகிய பொருளில் நின்றது; சிலர், பறித்தான் என்பதற்கு, வேடன் தமயந்தியைப் பாம்பின் வாயினின்றும் இழுத்து வெளியிற் போட்டான். என்று பொருள் கூறுவர்; ஒரு பெரிய மலைப்பாம்பு தனக்கு இரையாக வாயிற் பற்றிய ஒரு பொருளை அஃதுயிருடன் இருக்கும்போதே அதன் வாயினின்றும் பறித்து வெளிப்படுத்துதல் ஒரு மனிதனால் இயலாததாலாலும், பதிவிரதையாகிய ஓர் இராஜஸ்திரீயை, இழிந்த வேடன் தீண்டுதல் அசம்பாவித மாதலாலும் அவ்வுரை பொருந்தாமையை யுணர்க. ஆசிரியர் சந்திரன் சுவர்க்கியை இந்நூலில் பலவிடங்களில் புகழ்வது போலவே இதிலும் புகழ்ந்தார். சந்திரன் சுவர்க்கி யென்பவன் தன்னால் ஆளப்பட்ட நாட்டில் வந்த பஞ்சம் முதலிய துன்பங்களை நீக்கி அந்நாட்டிலுள்ளவர்களைப் பாதுகாத்தான் ஆதலின், அச்செய்கை இங்குப் பாம்பின் வாயினின்றும் தமயந்தியை மீட்ட வேடன் செய்கைக்கு உவமையாகக் கூறப்பட்டது.

சங்கநிதி-குபேரனுடைய இரு நிதிகளிலொன்று; சங்கவடிவமானது; தன்னிடம் வருவபர் விரும்பியவற்றை யெல்லாம் கொடுத்தக்கது. கலி-சனி; இவன் மிகுதியும் கெடுதியைச் செய்பவனாதலின் இவனுடைய இப்பெயர் ஆகுபெயராய் அக்கேட்டை யுணர்த்திற்று. வாய்-வாய்த்த வென்னும் பெயரெச்சந் திரிந்த வினைத்தொகை. வாய் நின்று-ஐந்தாம் வேற்றுமை விரி; இதில் இன் உருபு தொக்கிச் சொல்லுருபு மட்டும் விரிந்து நின்றது; நின்று என்னும் ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபு நீக்கப் பொருளில் வந்தது.

தமயந்தி வேடனுக்கு நன்றி கூறல்.

597. ஆருயிரு நானு மழியாம லையாவிப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்—தேரில்
இதற்குண்டோ கைம்மா றெனவுரைத்தாள் வென்றி
விதர்ப்பன்றன் பெற்ற விளக்கு.

(இ-ள்) (அவ்வாறுபாம்பின்வாயினின்றும் வெளிப்பட்டவுடனே தனக்குதவிசெய்த வேடன் மீது நன்றியுள்ளவளாய் அவனை நோக்கி) வென்றி-வெற்றி பொருந்திய, விதர்ப்பன்-விதர்ப்ப தேசத்துக் கதிபதியாகிய வீமராஜன், பெற்ற - புத்திரியாக அடைந்த, விளக்கு-தீபத்தைப்போல் புகழினால் பிரகாசிப்பவளாகிய தமயந்தியானவள், ஐயா-ஐயனே!, ஆர் உயிரும் நானும்-அருமையான பிராணனும் நானும், அழியாமல்-அழிந்து போகாமல், இப்பேரரவின் இந்தப்பெரியபாம்பினுடைய, வாயில்-வாயினின்றும்நீக்கி, பிழைப்பித்தாய்-என்னைப் பிழைக்கும்படி செய்தாய், தேரில்-ஆராயுமிடத்தில், இதற்கு-நீ செய்த இவ்வுதவிக்கு, கைம்மாறு பிரதியுபகாரம், உண்டோ-உளதோ, (இல்லை) என உரைத்தாள்-என்று சொன்னாள்; [எ-று.]

உலகத்தில் ஒரு நன்மையான காரியத்தைச் செய்தவர்களை எவருங் கொண்டாடுதல் இயற்கையாதலின் இங்குத்தன் 'உயிரைக் காப்பாற்றிப் பெரிய நன்மையைச் செய்த வேடனைத்தமயந்தி இவ்வாறு புகழ்ந்தாள்.

கைம்மாறுதல் என்னுந் தொழிற் பெயரானது தல்லீறு கெட்டுக் கைம்மாறு என நின்றது; கை-உபகாரம், மாறு மாறுதல், அதாவது உபகாரந்திரும்புதல் என்பதாம்; உபகாரம் திரும்புதலாவது ஒருவர் செய்த நன்றிக்குப் பிரதி நன்றி ஏற்படுவதாம் (நன்-உயி-பு-அ) ஆம் சூத்திரத்தில் "தனியைந்நொது முன்மெலி மிகலுமாம்" என்றதனால் கை—மாறு; கைம்மாறு என்பதாக மகரம் மிக்கது. தான்-அசை.

வேடன் தமயந்தியின் மீது கெட்ட சிந்தை வைத்துக் கூறுதல்.

298. இந்து நுதலி யெழினோக்கி யேதோதன்
சிந்தை கருதிச் சிலைவேடன்—பைந்தொடிநீ
போதுவா யென்னுடனே யென்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து.

(இ-ள்) (தமயந்தி அவ்வாறு வேடனைப் புகழ்ந்தவுடனே) இந்து-சந்திரன் போன்ற, நுதலி - நெற்றியை யுடையவளாகிய அத்தமயந்தியினது, எழில்-அழகை, நோக்கி-பார்த்து, புலை ஈனமாகிய, நரகுக்கு - நரகத்துக்கு, ஏதுவாய்-காரணமாக, (அதாவது: நரகத்தையடைவதற்கேதுவாகிய பாபச்செய்கை தன்னிடத்தில் உண்டாக), நின்றான்-நின்றவனாகிய, சிலை-வில்லைத்தாங்கிய, வேடன்-அவ்வேடனானவன், தன் சிந்தை-தன்மனதில், ஏதோ கருதி-ஏதோ ஒன்றைநினைத்து, எடுத்து-தொனியை உயர்த்தி, பைந்தொடி-பசுமையாகிய வளையல்களை அணிந்த பெண்ணே!, நீ-, என்னுடனே என்னோடு, போதுவாய்-வருவாயாக, என்றான்-என்று கூறினான்; [எ-று ]

தமயந்தி அவ்வாறு வேடனைப் புகழ்ந்து கூறினவுடனே அவன், தன் மீது அவள் அன்புடையவளா யிருக்கிறாளென்றும், அதனால் தான் விரும்பும் எதற்கும் இணங்குவாளென்றும் கருதினான். அக்கருத்துக் கொண்டதனால் அவளுடைய கற்பை அழிக்க விரும்பி அதன் பொருட்டு, 'நீ என்னுடன் வருவாயாக' என்று அவளை அழைத்தான். இதனால் அவன், தமயந்தியைப் பாம்பின் வாயினின்று மீட்டதும் இரக்கத்தால் ஏற்பட்ட தன்றென்பதும், மீட்டால் அவளை மணந்து கொள்ளலாமென்ற துர் எண்ணத்தாலேயே ஏற்பட்டதென்பதும் பெறப்படும். இவன் துராத்மாவாசையினாலேஇவ்வாறு கருதினான். 'உத்தமர்கள், தனிபட்டு ஓராபத்திற் சிக்கிய பெண்களைக் காப்பாற்றினாலும் மேலும் அவர்கட்கு நன்மையே புரிய நாடுவர்; தூர்த்தர்கள் அவ்வாறு காப்பாற்றும் போதும் கெட்ட எண்ணத்துடனேயே காப்பாற்றுவார்கள்; பின்னர் அவர்களைக் கற்பழிக்க நாடுவர். அப்பெண்களின் கற்பழித்தலே தாங்கள் செய்த உதவிக்குப் பிரதியுபகாரமென்பது இவர்கள் கருத்து; இத்தகையினர்க்கு நரகம் சித்திப்பது திண்ணம் இது பற்றியே ஆசிரியர் இவ்வேடனை, "புலை நரகுக் கேதுவாய் நின்றான்" என்றார். இவன் நினைத்த தீச்செயல் வாயினால் கூறத்தகாத தாதலின் அதனை, "ஏதோ தன் சிந்தைகருதி'என்றார்புலவர். இங்ஙனம்கூறுதல் இடக்கரடக்கல் எனப்படும்

பைந்தொடி-பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; இதில் பசுமையென்னும் பண்படி மையீறு கெட்டு, அடி அகரம் ஐ ஆகி, சு-கெட்டுப் பை-எனநின்று வருமெழுத்துக்கு இனவெழுத்தாகிய ந்-மிக்கு,வருமொழியாகிய தொடி என்பதோடு புணர்ந்தது. பைந்தொடி யென்பதுஅண்மைவிளி யாதலின், உருபேற்காமல் இயல்பாயிற்று. போதுவாய் என்பதில், -குது என்பது போது என்றாயிற்று;ஆய் ஏவலொருமை விகுதி சிந்தை-சிந்தித்தலுக்குக் கருவியாகவுள்ளது; இதில், சிந்தி-பகுதி, ஐ-கருவிப் பொருள் விகுதி, பகுதி யீற்றிகரக்கேடு சந்தி. ஏதுவாக என்பது ஏதுவாய் எனத்திரிந்து வந்தது. இங்கு ஏது-வேடனுடைய தூர்த்த எண்ணங்கள்.

### வேடனுடைய கெட்ட குறிப்புணர்ந்த தமயந்தி கலங்குதல்.

299. வேட னழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
ஆடன் மயில்போ லலமரா—ஓடினாள்
தூறெலா மாகச் சுரிகுழல்வேற் கண்ணினீர்
ஆறெலா மாக வழுது.

(இ-ள்) வேடன் - அவ்வேடுவன், அழைப்ப - அவ்வாறு கூப்பிட, சுரிகுழல் - சுருண்ட கூந்தலையுடைய தமயந்தி, 'அவனுடைய உள்ளத்தி லுண்டாகிய தீய குறிப்பை யுணர்ந்து அந்தோ! இக்கொடியவன் என்செய்வானோ என்று பயந்து), விழிபதைத்து - கண்கள் துடிக்க, வெய்து உயிரா-வெப்பமாகப் பெருமூச்சுவிட்டு, ஆடல் மயில்போல்-ஆடுதலையுடைய ஒருமயி

லைப்போல, அலமரா - சுழன்று, வேல் வேலாயுதத்தை நிகர்த்த, கண்ணின் நீர்-கண்களிலிருந்து வடியும் ஜலமானது, ஆறெல்லாம் ஆக-வழியெல்லாம் சொரிவதாக, அழுது-அரற்றி, தூறெல்லாம்-சிறுசெடிகளிளெல்லாம், ஓடினாள்-ஓடிமறைய முயன்றாள்; [எ-று.]

வேடனை, நல்லவனென்று கருதிப் புகழ்ந்த தமயந்தி, அவன் மேற் கூறியபடி தன்னை அழைத்தவுடனே. அவனுடைய கெட்ட எண்ணத்தையுணர்ந்து, "அந்தோ! நாம் இவனை உத்தமனென்று நினைத்தோமே; இவனோ தூர்த்தனாயிருக்கின்றானே; இவன் செய்யும் தீமைக்குள்ளாவதைக் காட்டினும் பாம்பின் வாய்க்கு இரையாவது நன்றாகுமே; இவனுடையகுணம் தெரியாதிவனை உதவிக்கழைத்தது தவறாய்முடிந்ததே;எத்தகையஆபத்துநேர்ந்த காலத்திலும், தனிப்பட்ட ஒரு ஸ்திரீ ஓர் ஆடவனைத் துணைக்கோடல் தீங்காய் முடியுமென்பதை இப்பொழுது நாம் உணர்ந்து கொண்டோம்; இனி இவன் நம்மை என் செய்வானோ" என்று பயந்து கதறியழுது தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுச் சிறு செடிகள் நிறைந்தவிடங்களில் ஓடினாள் ஆடுகின்ற மயில் வட்டமிட்டுச் சுழலும்; அதைப்போலத் தமயந்தியும் சுழன்றாளாதலின், 'ஆடல் மயில்போல் அலமர,' என்றார் ஆசிரியர். அவளுடைய கண்ணீர் அவள் ஓடிய வழியெல்லாம் வடிந்தது; ஆதலின், புலவர், 'கண்ணீர் ஆறெலாமாக அழுது' என்றுங் கூறினார்.

பதைக்க வென்பது பதைத்து எனத்திரிந்து வந்தது. உயிரா, அலமரா என்பன-செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். அலமரல்-சுழலல்; இதில் அலமரு-பகுதி. தூறு-சிறுபற்றை, அதாவது சிறு செடி. சுரிகுழல்-வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

தமயந்தி வேடனைக் கோபித் தெரித்தல்.

300. தீக்கட் புலிதொடரச் செல்லுஞ் சிறுமான்போல்
ஆக்கை தளர வலமந்து—போக்கற்றுச்
சீறா விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தா னிலத்து.

(இ-ள்.) (அவ்வாறு ஓடிய அத்தமயந்தி, வேடன் விடாமல் தொடர்ந்து தன்னைத்துரத்திக்கொண்டு வந்தபடியால்,) தீ-அக்கினியைப்போன்ற, கண்-கண்களையுடைய, புலி-புலியானது, தொடர-தன்னைப் பிடித்துக் கொல்லத் தொடர்ந்து வர, (அதற்குப் பயந்து) செல்லும்-ஓடுகின்ற, சிறுமான் போல்-சிறிய (அதாவது: இளமையான) மானைப்போல, ஆக்கை தேகமானது தளரா-பயத்தினால் தளர்ச்சியடைய, அலமந்து-அங்கு மிங்கும் சுழன்று, போக்கற்று-பின்னர் செல்லுதல் முடியாமல், சீறா-சீறி (அதாவது: வேடனைக் கோபித்து) விழித்தாள்-கண்களைத் திறந்து பார்த்தாள், அவ்வளவில்-அப்படிப் பார்த்த மாத்திரத்தில், சிலைவேடன்-வில்லைத்தரித்த அவ்வேடனானவன்

வன், நீறு ஆய்-எரிந்து சாம்பலாக வெந்து, நிலத்து-பூமியில், விழுந்தான்-அப்படியே வீழ்ந்து மடிந்தான், எ-று.

வேடன் துஷ்டச செய்கையை யுணர்ந்த தமயந்தி முதலில் அவன் கைக்கு அகப்படாமல் தவறி ஓடிவிட வேண்டுமென்று கருதிச் சிறு செடிகளுக்குள் ஓடினாள்; அவன் அவளைவிடாது தொடர்ந்து சென்றான்; அதன்மேல் தமயந்தி மிகவும் பயந்து புலிக்கஞ்சியோடும் மானைப்போல விரைந்தோடி அங்குமிங்குஞ் சுழன்றாள்; முடிவில் அவளுக்கு வேடன் தன்னைவிடமாட்டானென்பதும், தான் அவன் கையினின்றும் தவற முடியாதென்பதும் தோன்றின; அதனால் அவள் களைத்து ஓட முடியாமல் நின்று விட்டாள். அப்படி நின்ற சமயத்தில் அவள் மனதில், "நம்மிடத்தில் பதிவிரதா தர்மம் இருக்கும்போது நாம் ஏன் அஞ்சவேண்டும்; அது நம்மைக் காத்துக் கொள்ளும்; இவன் நம்மைத் தொட்டால் எரிந்து போவான்" என்று ஓர் தைரியம் பிறந்தது. அங்ஙனமாகவே அவள் வேடனைக் கோபித்துப் பார்த்தாள்; உடனே அவன் எரிந்து சாம்பராயினான். இத்தகைய மகிமை தன்னிடத்திலிருந்தும் அவள் ஏன் அஞ்சி ஓடினாளெனின், ஸ்திரீகளுக்கு இயற்கையாக ஏற்பட்ட பேதமையாலும் அச்சத்தாலும் ஓடினாளென்க. உலகத்தில் மனிதர்க்கு மிக்க ஆபத்து நெருங்கியகாலத்தில் துணிவு பிறப்பது இயற்கையாதலின், அவ்வாறு பயந்தோடிய தமயந்திக்குப் போக்கிட மற்றுப் போகவே வேடனை அழித்துவிடலாமென்ற துணிவு பிறந்தது; அத்துணிவினாலேயே பின்னர் அஞ்சாமல் அவள் கோபித்துப் பார்த்தாள்.

சிறுமான் என்பதில் சிறுமை இளமையை யுணர்த்தி நின்றது. அலமந்து என்பதில், அலமா-பகுதி; இது, நிகழ்கால எதிர்காலங்களில் அலமரு எனத் திரிந்துவரும்; அலமரு-பகுதியெனக் கொண்டால் இங்கு இறந்த காலப்புடை பெயர்ச்சி அமையாது. சீற-செய்யவென்னும் வாய் பாட்டு வினையெச்சம். போக்கு-தொழிற் பெயர்.

தமயந்தி முன்னிலைமையை யெண்ணி அழுதல்.

301 வண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்குடிபோற் றீத்தழன்மீ
மண்டு கொடுஞ்சுரத்தோர் மாடிருந்து—பண்டையுள
வாழ்வெல்லாந் தானினைந்து மற்றழுதாள் மன்னிழைத்த
தாழ்வெல்லாந் தன்றலைமேற் றந்து.

(இ-ள்.) (அவ்வாறு வேடன் எரிந்த பின்பு தமயந்தி சிறிது தூரஞ்சென்று) வள் தமிழ்-வளப்பம் பொருந்திய தமிழால், வாணர்-வாழ்கின்றவர்களாகிய வித்வான்களுக்கு, பிழைத்த-தவறு செய்த, வான்-சிறந்த, குடிபோல்-வமிசத்தைப்போல, தீத்தழல்-அக்கினியின் வெப்பமானது, மீ-மேலே, மண்டு-நெருங்கி யிருக்கின்ற, கொடும்-கொடுமையாகிய, சுரத்து-பாலைவனத்திலே, ஓர் மாடு இருந்து ஒரு பக்கத்தில் உட்கார்ந்து, பண்டை-முற்கா

லத்தில், உள-உள்ளனவாகிய, வாழ்வு எல்லாம்-வாழ்க்கைகளை யெல்லாம்-நினைந்து-எண்ணியும், மன் நளமகாராஜன், இழைத்த-செய்த, தாழ்வு எல்லாம் குறைவுகளையெல்லாம், தன் தலைமேல்-தன் தலைவிதியின்மேல், தந்து வைத்தும், (அதாவது: சேர்த்தும்) அழுதாள்-அழுபவளானாள், எ-று.

அவ்வாறு வேடன் எரிந்த பின்னர்த் தமயந்தி சிறிது தூரஞ் சென்று ஒரு பாலைவனத்தைச சேர்ந்து ஓரிடத்தில் களைத்து உட்கார்ந்தாள். அவ்வாறு இருக்கும்போது அத் தருணம் அவள் அடைந்திருந்த பரிதாபமான நிலைமையும், முன்னிலைமையும் அவளுடைய மனதிற் றோன்றி மிகவும் வேதனையைச் செய்தன. அதனால் அவள், "அந்தோ! நாம் முன்னே எவ்வளவோ சௌக்கியத்தோடிருந்தோமே; அப்படி இருந்தும் நம்மன்னனுடையசூதாட்டத்தால் தாழ்மையடைந்தோம்; மேலும் அவர் நம்மையும் வனத்தில் தனியே விட்டுப் பிரிந்து போயினர்; அதனால் இத்துன்பங்கள் நேர்ந்தன; ஆயினும், மன்னன்மேற் றவறில்லை; நம் தலைவிதிப்படியே இவை நடந்தன; எனினும் திக்கற்றிருக்கும் நாம் இனி என்செய்வோம்" என்று கண் கலங்கி அழுதாள். வித்வான்களுக்கு அபசாரம் செய்த வமிசமானது தீமைக்குட்பட்டதாய்த் தீப்பற்றி யெரிந்த வீடுபோல் எப்பொழுதும் நசித்துப்போயிருக்கும்; பாலைவனமும் எப்பொழுதும் நீங்காத வெப்பமுடையதாய்ப் பாழடைந்திருக்கும்; ஆதலின், அவ் வமிசம் பாலை நிலத்துக்குவமைகூறப்பட்டது; இதனால் தமிழ் வித்வான்களுக்குத் தீங்கு செய்பவர் நிசசயமாக அழிந்தே போவர் என்பதும், தமிழின் மகிமையும் உணரப்படும்; இங்கே வமிசமென்றது ஒருவனுடைய பரம்பரையில் வந்தவர்களை உணர்த்தும்; ஆகவே, தீங்கு செய்த ஒருவனும் அவன் வழி வந்தாரும் இதில் அடங்குவர்.

தமிழுக்கு வளப்பமானது:-சொன்னயம், பொருணயம், தொடை நயம் முதலியனவாம் தமிழ்வாணர்-தமிழினால் வாழக்கூடியவர்கள்; அதாவது: தமிழ்க் கவிபாடி அதனால் கிடைக்கும் பரிசைப்பெற்று வாழ்பவர்கள்; வாழ்நர்-வாணர் என்றாயது; இதனை, 'வாழ்நாள்' என்பது 'வாணாள்' என வந்தது போல வந்ததெனக் கொள்க; இனி, வாள்நர் வாணர் என்றாயது எனக் கோடலு மொன்று; இதற்குத், 'தமிழால் விளங்குவோர்' என்பது பொருளாம். வாள் ஒளி; இதில், வாள்-பகுதி, நர் - உடைமைப் பொருளில் வந்த பலர்பால் விகுதி, சந்தியால் ளகர நகரங்கள் ணகரமாகி முன்ணகரம் கெட்டது; முதலில் உரைத்ததற்கும் இங்ஙனமே பகுதி விகுதிபிரித்து 'வாழ்வை யுடையார்' எனப் பொருள் கூறுக. இவையன்றி, வட நூலார் 'கீர்வாணர்' என்பதற்கு 'வாக்கைப் பாணமாகவுடையவர்' என்று பொருளுரைத்தது போல் 'தமிழ் வாணர்' என்பதற்கு 'தமிழைப்பாணமாக உடையவர்' எனவும் மற்றொரு பொருளுரைக்கலாம். கீர்-வாக்கை, வாணர்-பாண மாகவுடையவர். தமிழ்-தமிழை, வாணர்-பாணமாக வுடையவர்; புலவர் தமிழைப் பாணமாகவுடைத்தா யிருத்தலாவது: தமிழ்க்கவிகளைப் பாணம் போலப் பிரயோகித்துத் தம்மை அவமதிப்போரை வெல்வதாம்; வித்வான்களை அவமதித்த

வர்களை அப்புலவர்களுடைய சொற்கள் பாணங்களைப் போன்று பாய்ந்து ழிப்பது உலகப் பிரசித்தம்; இதனைப் பண்டைத் தமிழ்ப் புலவர் சரிதைக ளால் நன்குணரலாம். வாணர்ப் பிழைத்த-நான்காம் வேற்றுமைத் தொகை. கெட்ட குடியை, 'வான்குடி' என்றது முன்னிருந்த நிலைமைநோக்கி யென்க. பண்டு என்னும் மென்றொடர்க் குற்றியலுகரம் ஐகாரச் சாரியை பெற்று, 'பண்டை' என வந்தது. வாழ்வு-போகங்களை யுணர்த்தி நின்றது. தான், மற்று-அசைகள். 'மன் இழைத்த தாழ்வெல்லாம் தன் தலைமேல் தந்து' என்பதற்கு, 'மன்னன் செய்து விட்டுப் போன தாழ்வுகளை யெல்லாம் தன் தலைமேல் சுமந்து' எனவும் பொருள் கூறலாம்; அத்துன்பங்களை யெல்லாம் இவள் தாங்கிக் கொண்டிருந்த படியால் இதுவும்பொருந்தும். தமிழை, திரமிடமென்பர் வடநூலார். 'வாணர்ப்பிழைத்த' என்பதை இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கொண்டு, 'வாணரை விட்டுநீங்கிய' எனவும்பொருள் கூறலாம்; அவர்களை விட்டு நீங்குதலாவது தம்மை அண்டி வந்த வித்வான் களை ஆதரியாமல் கடின மொழி கூறித் துரத்தி விடுதலாம்.

வழியில் வந்த ஒரு வணிகன் தமயந்தியைக்
காணுதல்.

302. அவ்வளவி லாதிப் பெருவழியி லாய்வணிகன்
இவ்வளவு தீவினையே னென்பாடல்—மெய்வடிவைக்
கண்டானை யுற்றான் கமலமயி லேயென்றான்
உண்டாய வெல்லா முணர்ந்து.

(இ-ள்) அவ்வளவில் - (தமயந்தி அவ்வாறு அழுதுகொண்டிருக்கும்) அத்தருணத்தில், ஆதி-முற்காலத்திலிருந்தே ஏற்பட்ட, பெருவழியில்-பெரி யமார்க்கத்தில் சென்ற, ஆய்-ஆராயுந் தன்மை யுடையவனான, வணிகன்-செட்டி யொருவன், இவ்வளவு தீவினையேன்-இவ்வளவு கெட்ட கர்மஞ்செய் தவளாயினேன் நான், என்பாள்-என்று சொல்லிப் புலம்பிக் கொண்டிருந்த அத்தமயந்தியினது, மெய்வடிவை-தேகத்தின் உருவத்தை, கண்டான்-பார்த் தான், (அங்ஙனம் பார்த்து இவ்வளவு அழகமைந்த இவள் யாரோ? தெய்வ மாதோ பூமடந்தையோ என்று) ஐயுற்றான் - சந்தேகித்தான், (பின்னர் தெளிந்து) கமலம்-தாமரை மலரில் வீற்றிருக்கின்ற, மயிலே-மயில்போன்ற சாயலையுடையஇலக்குமியே, என்றான்-என்று தனக்குத்தானே கூறிக்கொண் டான், (பின்னர்) உண்டாயவெல்லாம்- அவளுக்குண்டானகாரியங்களையெல் லாம், உணர்ந்து-தெரிந்து; [எ-று.]

தமயந்தி அவ்வாறு அழுது கொண்டிருக்கும்போது, அவ்வழியில்வந்த ஒரு வணிகன், அவளைக் கண்டு அவளுடைய உருவத்தை நோக்கினான்; அப் போது அவனுக்கு இவ்வளவு அழகோடு கூடியிருக்கும் இப்பெண் தெய்வ மாதோ பூவுலக மங்கையோ என்னும் ஐயம் நிகழ்ந்தது; பின்னர் இவள்

இலக்குமிதேவியே என்ற ஓர் துணிவு பிறந்தது; எனினும் அவளுக்கு அச் சமயத்தில் உண்டாகியிருந்த துன்பங்களையெல்லாம் அவன் தன் ஆராய்ச்சியாலுணர்ந்து, "இவள் இலக்குமியன்று; அப்படியாயின், இவள் 'இவ்வளவு தீவினையேன்' என்று சொல்லிப் புலம்பிக்கொண்டிருக்கக் காரணமில்லை; ஆதலின் இவள் மானிட மகளே" என்று துணிந்து அவளுடைய தன்மைகளை விசாரித்துணரத் தொடங்கினான். அவ்விவரம் அடுத்தசெய்யுளில் வரும். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்; ஆதலின், உணர்ந்து என்னும் வினையெச்சம் அடுத்த செய்யுளில், 'என்றான்' என்பதனோடு முடியும். குளகமாவது பலசெய்யுட்கள் ஒரு முடிபாக வருவது; தனித்தனியே முடிவது முத்தகமெனப்படும். தமயந்தி மிக்க அழகுடையவளாயும்; இராஜலட்சுமி பொருந்தியவளாயுமிருந்து 'இவ்வளவு தீவினையுடையவளாயினேன்' என்று புலம்பிக்கொண்டிருந்ததைப் பற்றி அவ்வணிகன், 'இவ்வளவு வடிவத்தோடு விளங்குகின்ற இவள் என் இவ்வாறு சொல்லிப் புலம்புகின்றாள்' என்று சந்தேகப்பட்டான் எனினும் பொருந்தும்.

அளவு-மாத்திரை; அஃதிங்குக் காலத்தையுணர்த்திற்று. அவ்வணிகன் சென்றவழி பண்டைக்காலத்திலிருந்தே ஏற்பட்டுப் பெரிய மார்க்கமாயிருந்தபடியால் அதனை 'ஆதிப்பெருவழி' என்றார் ஆசிரியர். தமயந்தியின் நிலைமைகளை அவ்வணிகன் எளிதில் உணர்ந்துகொள்ளக்கூடிய சூக்ஷுமபுத்தியுடையவனாயிருந்தபடியால் புலவர் அவனை, 'ஆய் வணிகன்' என்றார். தமயந்தியின் துன்பங்களுக்குக் காரணம் தீவினையேயாகுமாதலின், அதன் காரியங்களாகிய துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருந்த அவள் தன்னை, 'இவ்வளவு தீவினையேன்! என்று சொல்லிக் கொண்டாள். உண்டாயவெல்லாம்' என்றது அவளுக்கப்போதேற்பட்டிருந்த அழுகை, முகவாட்டம் முதலியவற்றை. ஆய்வணிகன்-வினைத்தொகை. ஐயம் என்பது ஈறு கெட்டு ஐ என நின்று வருமொழியோடு புணர்ந்து, 'ஐயுற்றான்' என்றாயது.

வணிகன் தமயந்தியை நீ யாரென்று
வினவல்.

303. எக்குலத்தாய் யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்பேர்
நெக்குருகி நீயழுதற் கென்னிமித்தம்—மைக்குழலாய்
கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு காந்தாரம்
விட்டுரைக்குந் தார்வணிகர் வேந்து.

(இ-ள்) கார் வண்டு-கரியவண்டுகள், காந்தாரம்-இசையை, விட்டு-வாயிலிருந்து வெளிப்படுத்தி, உரைக்கும்-சொல்கின்ற (அதாவது: பாடுகின்ற), தார்-மாலையை அணிந்த, வணிகர் வேந்து-செட்டிகளுக்குத் தலைவனாகிய அவன், (மேற்கூறியபடி உணர்ந்து, தமயந்தியின் வரலாற்றை விசாரிக்கத் தொடங்கி அவளை நோக்கி) மை-மேகத்தை நிகர்த்த, குழலாய்-கூந்தலையுடையவளே!, நீ—, எக்குலத்தாய்-எந்த வமிசத்தில் உதித்தவள்? யார்

மடந்தை-எவருடைய புத்திரி?, உன் ஊர் யாது-உன்னுடைய ஊர் எது? உன் பேர் யாது-உன்னுடைய பெயர் என்ன?, நெக்கு நெகிழ்ந்து, உருகி-மனங்கரைந்து, அழுதற்கு-நீ அழுவதற்கு, நிமித்தம்-என்-காரணம் யாது? கட்டு மெய்யானவற்றை, (அதாவது: உனக்கு நேர்ந்த உண்மையான விஷயங்களை), உரைதது-சொல்லி, காண்-(பிறகு என்னாலுண்டாகும் நன்மையை நீ) தெரிந்து கொள், என்றான்-என்று கூறினான், [எ-று.]

மேற்கூறியபடி தமயந்தியின் வரலாற்றை விசாரிக்கத் தொடங்கிய அவ்வணிகன், அவளிடத்தில் அவளுடைய குலம் ஊர் பெயர் முதலியவற்றை விசாரித்தான். தமயந்தியின் உருவமானது அவள் எவ்விதத் துன்பத்தையும் அடையக் கூடாதவளென்பதை விளக்கிக் கொண்டிருந்தது; அதனால் அவனுக்கு, இப்பேர்ப்பட்டவளுக்கும் ஏன் இத்தத்துன்பம் நிகழ்ந்தது என்னும் வியப்புண்டாயிற்று; அது பற்றியே அவன் "நெக்குருகி நீயழுதற்கென்னிமித்தம்" என்று அவளிடம் வினவினான். இன்னும் அவ்வணிகனுக்கு அவளுடைய வரலாற்றை விசாரித்து அவளுக் கேற்பட்ட துன்பங்களை நீக்கித் தன்னாலியன்ற உதவி செய்ய வேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று; அதனாலேயே அவன், தமயந்தி உண்மையைக் கூறினால் தன்னாலியன்ற உதவியை அவளுக்கு நிச்சயமாகச் செய்யக் கூடுமென்பது தோன்ற, "கட்டுரைத்துக் காண்" என்றான்; "உரைதுக் காண்" என்றதனால் அவன் தன்னுடைய உபகார குணத்தை விளக்கினான். ஒருவர் உண்மையைக் கூறினால் மாத்திரமே மற்றொருவர் அவர்க்கு உதவி செய்ய ஏதுவாமாதலின் அவன, 'நீ உண்மை கூறி அதன் பயனைப்பார்' என அவளிடம் சொன்னான்.

'மைக்குழல்' என்பதற்குக் 'கரிய கூந்தல்' எனினுமாம். கட்டு உறுதி; அஃதிங்கே மெய்யை உணர்த்தி நின்றது; அஃதாகுபெயராய் 'மெய்யான விஷயங்களின் மேனின்றது; 'உரைத்துக்காண்' என்பதற்குச் 'சொல்வாய்' எனப்பொருள் எழுதி அதிலுள்ள 'காண்' என்பதை அசை யென்பருமுளர்; 'காண்' என்பதை அசையாகத் தள்ளிவிடும்போது 'உரைத்து' என்பது மட்டுமே நிற்கும்; அங்ஙனம் நிற்பது வினையெச்சமாகுமேயன்றி ஏவலாகாது; இவ்விரண்டுமே சேர்ந்து ஏவற்பொருளை யுணர்த்தி நின்றன வெனக் கொள்ளலாமெனிலோ இத்தகைய வாக்கியங்களில் அசை நீங்கினும் நின்ற வாக்கியம் குறித்த பொருளை யுணர்த்தல் வேண்டும்; எங்ஙனமெனில், 'எவன் கொல்' என்ற சொற்கள் சேர்ந்து நிற்கும் போதும், கொல்-அசையாகத் தள்ளப்பட்டு எவன் என்பது மட்டும் தனித்து நிற்கும் போதும் இத்தொடர் வினாப்பொருளையே தந்து நிற்றல் போல. 'உரைத்துக் காண்' என்பது அங்ஙனமாகாமையின் அவ்வுரை பொருந்தாதென்க; இனி, இங்ஙனம் பொருள் கொள்ள வேண்டுமாயின், 'உரைத்திகாண்' என்றிருத்தல் வேண்டும்; அங்ஙனமிருப்பின் 'காண்' அசையாகும் போது 'உரைத்தி' ஏவலாகி விடும். ஆனால், புலவர் இவ்வாறே தான் அமைத்திருத்தல் கூடும். பிற்காலத்

தில் எழுதுவோர் பிழையால் சுவடிகளில் 'உரைத்துக் காண்' என மாறுபட்டிருத்தல் கூடும்; இந்த மாறுதலை வைத்துக்கொண்டே உரையாசிரியர்கள் மூலத்தைத் திருத்தாமல் இதற்குப் பற்பல விதங்களாக உரைகளை வரைந்திருக்கின்றனர் நாமும் அவற்றுள் ஒரு வகையைப் பின்பற்றியே உரை வரைந்திருக்கின்றோம்; எனினும், 'உரைத்திகாண்' என்பதே உண்மைப் பாடமாயிருத்தல் வேண்டுமென்பதே எமது துணிபு குழலாய் விளி; (நன்-பெய. ௫௪) ஆம் சூத்திர விதிபற்றி ஈற்றில் வரும் ள்-ய்-ஆயிற்று தனிக்குறிலணையாத யகரம், யகரம் வருமொழியாகவரக்கெடுமாதலின், எக்குலத்தாய் யார் என்பன யகரங் கெட்டு 'எக்குலத்தாயார்' எனப்புணர்ந்து நின்றன.

### தமயந்தி வணிகனிடம் தன் வரலாறு கூறல்.

304. *முன்னை வினையின் வலியால் முடிமன்னன்*
*என்னைப் பிரிய விருங்கானில்—அன்னவனைக்*
*காணா தழுகின்றே னென்றாள் கதிரிமைக்கும்*
*பூணாரம் பூண்டாள் புலர்ந்து.*

(இ-ள்) (அவ்வணிகன் அவ்வாறு வினவியவுடன்) கதிர்-கிரணங்கள், இமைக்கும்-பிரகாசியாநின்ற, பூண் ஆபரணமாகிய, ஆரம்-முத்துமாலையை, பூண்டாள்-அணிந்தவளாகிய தமயந்தி, புலர்ந்து - வாடி, (அவ்வணிகனை நோக்கி) முன்னை-முந்தின ஜென்மத்திலேற்பட்ட, வினையின்-கெட்ட கர்மத்தின், வலியால்-வல்லமையினாலே, முடி-கிரீடத்தைத் தரித்த, மன்னன்-அரசனாகிய என்நாயகன், இருங்-பெரிய, கானில்-இக்காட்டினிடத்தே, என்னைப்பிரிய என்னை விட்டு நீங்க, (நான்) அன்னவனை அப்பேர்ப்பட்ட நாயகனை, காணாது காணாமல், அழுகின்றேன்-தனியே பிரிந்து அழுது புலம்புகின்றேன், என்றாள்-என்று தமயந்தி கூறினாள்; [எ-று.]

வணிகன் அவ்வாறு வினவியவுடன் தமயந்தி நான் முன் ஜன்மத்தில் செய்த தீவினையால் எனது நாதனாகிய மன்னன் இக்காட்டில் என்னை விட்டுப் பிரிய, அவனைக் காணாமல் அழுகின்றேன் என்றுகூறினாள். இவள்வணிகன் வினாவிற்குத்தக, தான் இன்னாள் மனைவி, அல்லது இன்னான் மகள், அல்லது இன்னவூர் என்பனமுதலிய விவரங்களைக் குறிப்பாலுணர்த்தினாள்; அவற்றை ஆசிரியர் இங்ஙனச் சுருக்கிக் கூறினார். "கதிரிமைக்கும் பூணாரம் பூண்டாள்" என்றது தமயந்தியின் முன்னிலைமை குறித்தென்க. பூணாரம் என்பதற்கு அணியத்தக்க மாலைஎனப் பொருள் கூறினும்அமையும். "பூணார் முலையாள்" என்னும் பாடபேத முண்டு.

பிரிய, காணாது என்பன வினையெச்சங்கள். அழுகின்றேன் - நிகழ்காலத்தன்மை ஒருமை வினைமுற்று. இமைக்கும்-பெயரெச்சம். பூண்டாள் என்பது எழுவாயாகவும், என்றாள் என்பது பயனிலையாகவும் முடியும்.

### வணிகன் தமயந்தியைச் சேதி நகரில் சேர்த்துச் செல்லுதல்

305. சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டப்
போதிற் கொடைவணிகன் போயினான் —நீதி
கிடத்துவான் மன்னவர்தங் கீர்த்தியினைப் பார்மேல்
நடத்துவான் வட்டை நடந்து.

(இ-ள்) (தமயந்தி கூறியவற்றை யெல்லாம் கேட்ட பின்பு அவள்மீது இரக்கமுற்றுச் சேதிநகரத் தரசனது மனைவியை அவளுக்குச் சிற்றன்னை என்பதை யுணர்ந்து அந்நகர், தான் செல்லும் வழியிலிருந்ததால் அங்கே அவளைச் சேர்த்துவிட்டால் எவ்வகையிலாயினும் அவளுக்குத் துணை ஏற்படுமென்று துணிந்து) அப்போதில் அந்தக் காலத்தில், பார்மேல்-இப்பூமியின்மேல், நீதிகிடத்துவான்-நீதியை நிலைக்கச் செய்பவனும், மன்னவர்தம்-அரசர்களுடைய, கீர்த்தியினை-புகழை, நடத்துவான்-செல்லச் செய்பவனும், (ஆகிய) கொடை யாசிப்பவர்களுக்குப் பொருளைக் கொடுத்த லென்னும் ஈகைத்தன்மையுள்ள, வணிகன் - அந்தச்செட்டி, திருவை - இலக்குமியை நிகர்த்த தமயந்தியை, சேதிநகர்க்கு-சேதி தேசத்தைச் சார்ந்த பட்டணத்தில், செலவிட்டு-போகச்செய்து, (அதாவது: அங்கே அழைத்துக்கொண்டு போய்விட்டு) வட்டை-மேலேதான் செல்லும் வழியில், நடந்துபோயினான்-தான் போகவேண்டிய ஊருக்கு நடந்து சென்றான்; [எ-று.]

தமயந்தியைச் சேதி நகரத்திற் சேர்த்தால் அவளுக்குத் தேறுதல் உண்டாகுமென்று வணிகன் உணர்ந்தபடியால் இவ்வாறு செய்தான் அல்லது மேற்கூறிய விஷயங்களை உணராமலே இவளை எங்கேனும் ஒரு நகரத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டால் இவள் தீங்கின்றிப் பிழைத்துப் போவாள் என்னும் எண்ணம் அவனுக்கு உதித்தமையால் அவன் தான் செல்லும் மார்க்கத்திலிருந்த சேதி நகரத்தில் அவளைச்சேர்த்துச்சென்றான் எனினும் அமையும் "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப் பிறவும் தம்போற் செயின்" என்னும் நீதிப்படி இவ் வணிகன் சத்தியத்தோடு வியாபாரஞ் செய்பவனாதலின் இவனை "நீதி கிடத்துவான்" என்றும், இவன்பற்பல தேசங்களிலும் சென்று வியாபாரஞ் செய்பவனாதலின் இவனைப் பல நாட்டினரும் இன்ன அரசனுடைய நகரத்திலுள்ளவன் என்று கொண்டாடுவதன் மூலம் இவன் குடியிருக்கும் நகரத் தரசனது புகழ் எங்கும் வியாபிப்பதனால் இவனை "மன்னவர் தங்கீர்த்தியினை நடத்துவான்" என்றுங் கூறினார் ஆசிரியர்; நல்ல வணிகர் நாட்டிலிருப்பது அந்நாட்டரசர்க்குச் சிறப்பென்ப.

வட்டை யென்பது வாட்டை யெனவும், பாட்டை யெனவும் இக்காலத்தில் வழங்குகிறது. நகரில் என்பது நகர்க்கு என வந்தது உருபு மயக்கம். ஏ-அசை; பிரிநிலை என்பினுமாம் திரு-தமயந்திக்கு உவமையாகுபெயர்.

இவ்வாறு வணிகன் தமயந்தியைச் சேதி நகரில் சேர்த்துப் போயின பின்பு அவள் அந்நகரத் தெருக்களின் வழியாகப்போய்க்கொண்டிருந்தாள்.

சேதி மன்னனுடைய மனைவியின் பணிப் பெண்கள்
தமயந்தியைக் கண்டு போய் அவளிடங்
கூறுதல்.

306. அற்ற துகிலு மறுதொழுகு கண்ணீரும்
உற்ற துயரு முடையளாய்—மற்றொருத்தி
நின்றாளைக் கண்டேம் நிலவேந்தன் பொற்றேவி
என்றார் மடவா ரெடுத்து

(இ-ள்) (அவ்வாறு சென்ற தமயந்தியைச சேதி ராஜன் மனைவியினுடைய பணிப்பெண்கள் பார்த்து உடனே தங்கள் அரசியிடஞ் சென்று) மடவார்-அந்தப் பெண்கள், எடுத்து-குரலை யுயர்த்தி; நிலவேந்தன்-இப்பூமியை ஆளுகின்ற அரசனுடைய, பொன் தேவி-இலக்குமியை நிகர்த்த மனையாளே! அற்ற துகிலும்-பாதி அறுபட்ட ஆடையும், அறாது-நீங்காமல, ஒழுகு வடிகின்ற, கண்ணீரும்—, உற்ற-மிகுதியாகிய, துயரும்-துன்பமும், உடையளாய், நின்றாள்-நின்றவளாகிய, ஒருத்தியை-ஒரு பெண்ணை, கண்டேம் இந்நகரத் தெருக்களில் பார்த்தோம், என்றார்-என்று கூறினார்கள்; [எ-று]

இப்பெண்கள் இவ்வாறு தெரிவித்ததனால் "அப்பெண்ணோ மிகப்பரிதாபநிலைமையி லிருக்கின்றாள்; ஆதலின் அவளை ஆதரித்தால் மிக்க புண்ணிய முண்டாகும்" என்பதை அரசன் தேவிக்குக் குறிப்பாக உணர்த்தினார்கள்.

அற்ற, ஒழுகு, உற்ற என்டன பெயரெச்சங்கள். அறாது-வினையெச்சம் 'ஒருத்தி நின்றாளை' என்பதை 'நின்றாள் ஒருத்தியை' எனமாற்றுக. நின்றாள்-வினையாலணையும் பெயர். என்றார்-சொல்லெச்சம்

சேதிராஜன் மனைவி தமயந்தியை அழைத்து
வருமாறு ஒரு பெண்ணை
அனுப்புதல்.

307. போயகலா முன்னம் புனையிழையாய் பூங்குயிலை
ஆய மயிலை அறியவே—நீயேகிக்
கொண்டுவா வென்றுடன் கொவ்வைக் கனிதிறந்து
வண்டுவாழ் கூந்தன் மயில்

(இ-ள்) (அப்பெண்கள் அவ்வாறு கூறிடதைக் கேட்டவுடனே அவர்களுள் ஒருத்தியை நோக்கி), வண்டு-வண்டுகள், வாழ்-வாழ்கின்ற, கூந்தல்-குழலையுடைய, மயில்-மயிலை நிகர்த்தவளாகிய சேதிராஜன் மனைவி, தன்-தன்னுடைய, கொவ்வைக்கனி-கோவைப்பழத்தைநிகர்த்தவாயை, திறந்து-, புனை-அலங்காரமாகச செய்யப்பட்ட, இழையாய்-ஆபரணங்களை அணிந்த

வளே, போய் அவள் விரைந்து சென்று, அகலா முன்னம் - இந்நகரத்தை விட்டு நீங்காததற்கு முன்னே, பூங்குயிலை-அழகிய குயில் போன்ற அப் பெண்ணை, ஆய-இவ்வுலகத்தில் அவதரித்த, மயிலை-மயில்போன்ற சாயலை யுடைய அம்மடந்தையை, அறிய நான் பார்த்தறிந்து கொள்ளும்பொருட்டு நீஏகி-நீ போய், கொண்டுவா-அழைத்துக் கொண்டுவா, என்றாள்; [எ-று.]

பணிப்பெண்கள் கூறிய மாத்திரத்தில் அவர்களால் கூறப்பட்ட தம யந்தி மிகுந்த துயர்க்குட் பட்டவளாயும், அதனால் ஒருநிலைக் கொள்ளாமல் விரைந்து எங்கேனும் சென்று விடக்கூடியவளாயும் சேதிராஜன் மனைவியி னுடைய மனதில் விளங்கினாள். அதனால் உடனே அத்தமயந்தியை அழைத் துவந்து அவளுக்குத் துணைசெய்ய வேண்டுமென்ற எண்ணம் அவ்வரசியின் மனத்தில் உதித்தது. அதனாலேயே அவள் அப்பெண்ணை விரைவில்அழைத் துவா என்று தன் பணிப்பெண்ணுக்குக் கூறினாள்.

குயில், மயில் என்பன தமயந்திக்கு உவமையாகு பெயர். கொவ்வைக் கனி வாய்க்கு உவமையாகு பெயர். கூந்தலில் வண்டுகள் வாழ்தல் அதிலுள் ளமலர்த்தேனை உண்ணும் பொருட்டுச் சேர்வதால் நேருமென்க. 'ஆயம யிலை' என்பதை 'ஆய் அம்மயிலை' எனவும் பிரிக்கலாம்; அங்ஙனம் பிரிக்கு மிடத்து 'ஆராயக்கூடிய அந்த மயிலை' எனப்பொருள் விரிக்க வேண்டும். இவ்வாறு அரசி கட்டளையிட்ட மாத்திரத்தில் அப்பெண்சென்று தமயந்தி யை அழைத்து வந்து அவள் சமுகத்தில் விட்டாள்.

### சேதி அரசி தமயந்தியைக் கண்டு அவளிடம் அவளுடைய வரலாற்றை வினவுதல்.

308. அந்தா மரையி லவளேயென் றையுற்றுச்
சிந்தா குலமெனக்குத் தீராதால்—பைந்தொடியே
உள்ளவா றெல்லா முரையென்றா ளொண்மலரின்
கள்ளவார் கூந்தலாள் கண்டு.

(இ-ள்) (அவ்வாறு பணிப்பெண் தமயந்தியை அழைத்து வந்தபோது) ஒள் மலரின்-பிரகாசம் பொருந்திய புஷ்பங்களின், கள்ள-தேனையுடையதா கிய, வார்-நீட்சிபெற்ற, கூந்தலாள்-கூந்தலையுடைய சேதியரசி, கண்டு-அவ ளைப் பார்த்து, அம்-அழகிய, தாமரையிலவளே என்று-தாமரைமலரில் வீற் றிருக்கின்ற இலக்குமியே என்று, ஐயுற்று-சந்தேகங் கொண்டு, (இத்தகைய இவளுக்கு என் இத்துன்பம் வந்ததென்று வருந்தி) பைந்தொடியே-பசுமை யாகிய வளையல்களை யணிந்த பெண்ணே!, (உன்னுடைய நிலைமையைப் பார்த்ததும் எனக்கு மிக்க கவலை யுண்டாகிறது; உன் வரலாற்றை விசா ரித்து விரைவில் உனக்குதவி செய்யாவிடில் இப்போ தேற்பட்டிருக்கும்,

சிந்தாகுலம்-மனக்கவலையானது, எனக்குத் தீராது எனக்குத்தீரமாட்டாது (ஆகையினாலே) உள்ளவாறு-உள்ளபடியே, (அதாவது: நடந்தவிதமாகவே மெய்யாக) எல்லாம்-உனக்கு நேர்ந்தவற்றை யெல்லாம், உரை, என்றாள்-சொல்வாயாக வென்று கூறினாள்; [எ று.]

தமயந்தியைப் பார்த்தவுடனே அவளுடைய தோற்றத்தால் சேதிராஜன் மனைவி, முதலில் அவளை இலக்குமியே என்று சந்தேகங்கொண்டாள்; பின்னர் அவளுக்கு, 'பெண்ணென்றால் பேயும் இரங்கும்' என்பதற் கிணங்கப் பொதுவாக, 'இத்தகைய இப்பெண் மணிக்கு ஏன் இத்துயர முண்டாயிற்று, என்று அவள் விஷயத்தில் இரக்கமுண்டாயிற்று; அதனால் அவள் தமயந்தியினுடைய வரலாற்றை விசாரித்து விரைவில் அவளுக்குதவி செய்யவேண்டுமென்று நினைத்தாள். அதுபற்றியே அவ்வரசி, "சிந்தாகுலமெனக் குத் தீராது, உள்ளவாறெல்லா முரை" என்றாள். இனிச்சேதி யரசிக்குத் தமயந்தியைப் பார்த்தவுடன் மனக்கவலை ஏற்பட்டது உதிர சம்பந்தத்தால் உண்டான தெனினும் அமையும். உதிரக் கலப்புடையவர்கள் ஒருவரை யொருவர் அறியாதிருக்குங்காலத்திலும் அவர்க்குள் ஒருவர்மீ தொருவர்க்குத் தானே பாச முண்டாவது உலக இயற்கை.

சிந்தா ஆகுலம் சிந்தாகுலம்; இது வடமொழிப் புணர்ச்சியாகிய தீர்க்க சந்தியெனப்படும். ஆல் அசை. பைந்தொடி-பண்புத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. எல்லாம் என்பதில் தமயந்தியின் வரலாறும், துயரம் முதலானவைகளும் அடங்கும். கள்ளவார்-தேனை உடையதாகிய வார். கள்ளது என்பது துவ்விகுதி குறைந்து நின்றது.

**தமயந்தி சேதி யரசியிடம் தன் வரலாறு கூறல்.**

309. என்னைத் தனிவனத்திட் டெங்கோன் பிரிந்தேக
அன்னவனைக் காணா தலமருவேன்—இந்நகர்க்கே
வந்தே னிதுவென் வரவென்றாள் வாய்புலராச்
செந்தேன் மொழிபதறச் சேர்ந்து.

(இ-ள்) (அவள் அவ்வாறு வினவியவுடனே தமயந்தி அவளை நோக்கி) வாய்புலரா-வாயுலர்ந்து, செந்தேன்-சிவந்த தேன்போன்ற, மொழிபதற-சொல் தடுமாறி, சேர்ந்து-அவ்வரசியின் முன் அடைந்து, (அதாவது: முன்னே நின்று) என்னை-என்றனை, தனி தனியாக, வனத்து-காட்டில், இட்டு-தூங்குங் காலத்தில் படுக்க வைத்துவிட்டு, எம்கோன்-எம்முடைய தலைவன், பிரிந்து ஏக-நீங்கிச் செல்ல, அன்னவனை-அத்தகைய நாயகனை, காணாது-காணாமல், அலமருவேன்-வருந்தித்தேடி அங்கு மிங்குஞ் சுற்றுபவளாகி, இந்நகர்க்கு-இந்தப் பட்டணத்துக்கு, வந்தேன் - நான் வந்து சேர்ந்தேன், இது-என் வரவு-இது என்வரலாறாகும், என்றாள் என்று கூறினாள்; [எ று.]

அவ்வரசி அன்புடன் வினவியும் தமயந்திக்கு அவள் சிற்றன்னை யாதலின் அவளிடத்தே தன் தாய் தந்தையர் கணவன்முதலியவர்களை உரைக்க நாணி அத்தமயந்தி அவர்களைக் கூறாது தனக்குத் துன்பமுண்டான காரணத்தை மட்டும் ஒருவாறு சுருக்கிக் கூறினாள். உலகத்தாரில் மிகுந்த தாழ்மைக்குள்ளானவர்கள், தங்களுடைய இனத்தாரிடத்தில் தங்களை இன்னாரென்று காட்டிக் கொள்ள நாணுவது இயற்கை ஆதலின், தமயந்தியும் இங்குச் சேதியரசி தனக்குச் சிற்றன்னையா யிருந்தும் அவளிடத்தும், வறுமையடைந்த தன்னை இன்னவளெனக் காட்டிக் கொள்வதற்கு வெட்கினாள்.

நளன் தனக்கும் நிடத நாட்டிலுள்ள மற்றையர்க்கும் தலைவனாதலின் தன்னையும் மற்றவர்களையும் சேர்த்துப்பன்மையாக, 'எங்கோன்' என்று அவனைக் கூறினாள் தமயந்தி. இடுதல்-வைத்தல், போடுதல்; நளன் தமயந்தியைத் தூங்கப்போட்டுவிட்டுச் சென்றானாதலின், அதற்கேற்ப அவள், "என்னைத்தனிவனத்திட்டு" என்றாள். அலமருவேன்-முற்றெச்சம். நகர்க்கேஎன்பதில் ஏ-அசை. வரவு-தொழிற்பெயர். புலரா, பதறா என்பன செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள்; இவை சினைவினைகள்; என்றாள் என்னும் முதல் வினையோடு முடிந்தன; (நன்-வினை உகூ.) ஆம்சூத்திரம் பார்க்க. சேர்ந்து -செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

### சேதியரசி, தமயந்தியைத் தன்னுடன் இருக்கும்படி வேண்டல்.

310. உன்றலைவன் றன்னை யொருவகையா னாடியே
தந்து விடுமளவுந் தாழ்குழலாய்—என்றனுடன்
இங்கே இருக்க வினிதென்றா ளேந்திழையைக்
கொங்கேயுந் தாராள் குறித்து.

(இ-ள்.) (தமயந்தி கூறியதைக் கேட்டு) கொங்கு - வாசனையானது, ஏயும்-பொருந்தி யிருக்கின்ற, தாராள்-மாலையை அணிந்தவளாகிய சேதியரசி, ஏந்திழையை-தாங்கப்படும் ஆபரணங்களை யணிந்தவளாகிய தமயந்தியை, (அதாவது: அவளுடைய நிலைமைகளை) குறித்து-மனத்தி லெண்ணி, (அவளைத் தன்னிடத்திலேயே வைத்துக் கொள்ள நினைத்து அவள் முகத்தை நோக்கி) தாழ்குழலாய்-தொங்குகின்ற கூந்தலையுடையவளே!, உன்-உன்னுடைய, தலைவன் தன்னை-நாதனை, ஒருவகையால்-ஏதாவதோர் விதத்தினால், நாடி-தேடி, தந்துவிடும் அளவும்-(நானும் உன்னைச்சார்ந்தவர்களும் உன்னிடம்,) சேர்ப்பிக்கும் வரையிலும், இங்கே-இந்நகரத்திலேயே, என்றனுடன்-என்னுடனே, இனிது-இனிமையாக, இருக்க-இருக்கக் கடவாய், என்றாள்-என்றுரைத்தாள்; [எ-று]

தமயந்தியின் வார்த்தைகளைக் கேட்டவுடனே சேதியரசி, அவளுடைய நிலைமையை நன்றாக ஆலோசித்து, "இவளை நாம் இங்கேயே வைத்துக்

கொண்டு, தூதுவரைப் பற்பலவிடங்களுக்கும் அனுப்பி இவளுடைய நாயக னைத் தேடி அழைத்து வரும்படி செய்து இவளிடத்தே சேர்ப்பிக்கலாம்; இன்னும் இவளைச சார்ந்தவர்களும் அவனைத் தேடிக்கண்டு அழைத்துவரக் கூடும்; எவ்வகையினாலாவது இவளுடைய நாயகன் அகப்பட்ட பின்னர் இவ ளைத் தன் சொந்த நகர்க்குச் செல்லுமாறு அனுப்பலாம்" என்று கருதினாள். அதனாலேயே "உன்றலைவன் றன்னை யொருவகையால் நாடியே தந்து விடு மளவுந் தாழ்குழலாய், என்றனுடன் இங்கே யிருக்க வினிது" என்றாள். 'நாடித்தந்து விடுமளவும்' என்றதில் நளனைச் சேதியராசி தூதுவரால் தேடு விப்பதும், தமயந்தியைச சார்ந்தோர் தேடி யழைத்து வருதலும் அமையும் சேதியராசி இவ்வாறு கூறியதற் கிசைந்து தமயந்தி அவ்விடத்தி லிருந்தாள்.

நாடியே என்பதில், ஏ அசை. தாழ்குழல்-வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இனிது-குறிப்புமுற்று; இஃதிங்கே வினை யெச்சமாகி வினையுரியாய் நின்றது. ஏந்திழை-வினைத்தொகைப் புறத்ததாகி யஅன்மொழித் தொகை.

**தமயந்தியையும் நளனையும் தேடிக்காணுமாறு வீமனால் அனுப்பப்பட்ட ஓர்அந்தணன் சேதிநகரில் வந்து தமயந்தியைக் காணுதல்.**

311. ஓடும் புரவித்தேர் வெய்யோ னொளிசென்று
நாடு மிடமெல்லா நாடிப்போய்—கூடினான்
போதிற் றிருநாடும் பொய்கைத் திருநாடாஞ்
சேதித் திருநாடு சென்று.

(இ-ள்) (மேற்கூறியபடி தமயந்தி சேதி நகரத்திலிருக்கும்போது அவ ளுடைய குழந்தைகளை அழைத்துச் சென்ற வேதியனால், நளன், தமயந்தி ஆகியவர்களுடைய நிலைமையை யறிந்த வீமராஜன் அவர்களைத் தேடும்பொ ருட்டனுப்பிய ஒரு பிராமணன்) ஓடும்-விரைந்து செல்கின்ற, புரவி-குதிரை கள் பூட்டிய, தேர்-தேரையுடைய, வெய்யோன்-சூரியனது, ஒளி-பிரகாசமா னது, சென்று-போய், நாடும்-விரும்புகின்ற, (அதாவது: சூரியன்ஒளிசென்று வியாபிக்கின்ற) இடம் எல்லாம்-இடங்களி லெல்லாம், நாடிப்போய்-தேடிச் சென்று, போதில்-தாமரை மலரில்வீற்றிருக்கின்ற,திரு-இலக்குமியானவள், நாடும்-எப்பொழுதும் குடியிருக்க எண்ணும்,பொய்கை-தடாகங்களையுடைய, திருநாடாம்-அழகிய தேசமாகிய, திரு-செல்வம் பொருந்திய, சேதி நாடு சேதிநாட்டில், சென்று-போய், கூடினான் சேர்ந்தான்; [எ-று.]

தமயந்தியின் குழந்தைகளை அழைத்துச் சென்ற வேதியனால், வீமரா ஜன், நளன், தமயந்தி ஆகியவர்களுடைய பரிதாப நிலைமையை உணர்ந்து உடனே சென்று அவர்களைத் தேடி அழைத்து வரும்படி சிலமனிதர்களைப் பற்பல விடங்களுக்கும் அனுப்பி இருந்தான்; அம்மனிதருள் ஒருவனாகிய

வேதியன், தமயந்தி மேற்கூறியபடி சேதி நகரத்திற் சேர்ந்திருக்கும்போது பற்பல விடங்களிலும் சென்று தேடி முடிவாகச் சேதிநாட்டில் வந்து சேர்ந்தான். நாட்டில் சேர்ந்தான் என்றதனால் நகரத்திலும் புகுந்து அரண்மனையிற்பிரவேசித்துத் தமயந்தி இருக்குமிடத்தைச்சார்ந்தான் என்பது பெறும்.

பிராமணன் என்பது தோன்றா எழுவாயாக வருவித்துரைக்கப்பட்டது; அது அடுத்த செய்யுளில், 'அருமறையோன்'எனவருவதால் கொள்ளப்படும். 'வெய்யோன் ஒளிசென்று நாடுமிடமெல்லாம்' என்றதனால் அவன் பூமி முழுவதும் தேடினான் என்பது பெறப்படும்.

**தேடி வந்த வேதியன், தமயந்தியைக் கண்டு வருந்துதலும், தமயந்தி வருந்துதலும்.**

312. தாமஞ்சே ரோதித் தமயந்தி நின்றாளை
ஆமென் றறியா வருமறையோன்—வீமன்
கொடிமேல் விழுந்தழுவான் கொம்புமவன் செம்பொன்
அடிமேல் விழுந்தாள் அழுது.

(இ-ள்) (அவ்வாறு சேதிநகரத் தரண்மனையிற் சேர்ந்தபின்) அருமறையோன்-அருமையான வேதத்திற் குரியவனாகிய அந்தப் பிராமணன், நின்றாளை-அங்கு நின்றவளாகிய தமயந்தியை, தாமஞ்சேர் ஓதி-மாலைசேர்ந்தகூந்தலையுடைய, தமயந்தி ஆம் என்று-தமயந்தியே ஆவள்என்று, அறியா-அறிந்து, வீமன்-வீமராஜனது, கொடிமேல்-பூங்கொடி போன்ற பெண்ணாகியஅத்தமயந்தியின் முன்னே, விழுந்து அழுதான்-வீழ்ந்து புலம்பினான், கொம்பும்-பூங்கொம்பு போன்ற தமயந்தியும், அழுது-அழுதுகொண்டு, அவன்-அப்பிராமணனுடைய, செம்பொன் அடிமேல்-சிவந்த பொன்போன்ற பாதங்களின் முன்னே, விழுந்தாள்-வீழ்ந்தாள்; [எ-று.]

அந்தப் பிராமணன், தன்னை யாதரித்து வரும் வீமராஜன் குடும்பத்தின் மீது மிக்க விசுவாசமுடையவனாதலின், தமயந்தியைப் பார்த்த மாத்திரத்தில் அவளுடைய பரிதாப நிலைமை குறித்து அவ்வாறு வீழ்ந்தழுதான்; தமயந்தியும், தன்மீது அவன் விசுவாசமுடைய பிராமண னென்பதையும், தன் தந்தையிடமிருப்பவ னென்பதையும் அறிந்தா ளாதலின் அவனுக்கு முன்னே தன் குறையை வெளிப்படுத்துதற் கறிகுறியாக அங்ஙனம்வீழ்ந்து புலம்பினாள்; துக்கத்துக் குள்ளாகி யிருக்கும் ஒருவர், தமக்குரியாரைக் கண்டவுடன் அத்துயரத்தை வெளிப்படுத்தி யழுதல் உலகவியற்கை. தமயந்தி தன் வடிவம் வேறு பட்டிருந்தாலும், பிராமணன் அவளைக் குழந்தைப் பருவம் முதல் அறிந்தவனாதலின், நிதானித்துப் பார்த்து அவளே யென்று உணர்ந்து கொண்டான் என்பது பெறப்படும்

மறை மறைவா யிருப்பது; வேதம் இரகசியமாக வைக்கக்கூடிய தாதலின் இப்பெயர் பெற்றது; இஃதீறு கெட்ட தொழிற்பெயர்; ஆகுபெயராய்

வேதத்தை யுணர்த்திற்று. கொடி, கொம்பு என்பன தமயந்திக்கு ஆகுபெயர்கள். மேல்-ஏழனுருபு; இதற்கு முன்னிடம் என்று பொருள் கொள்ள வேண்டும்; இங்ஙனமின்றி மேல்விழுந்து என்பதற்கு ஒருவர் மீதொருவர் வீழ்ந்து எனப்பொருள் கூறுவாருமுளர்; இச்செய்கை இவர்க் கிடையில் நடப்பது ஒழுக்கத்திற்கு விரோதமாதலின் பொருந்தாதென்க. கொம்பும் என்பதிலுள்ள உம்மை-இறந்தது தழுவிய எச்சப் பொருளது.

சேதி அரசன் முதலியோர் தமயந்தியைத்
தெரிந்து கொள்ளுதல்.

313. மங்கை விழிநீர் மறையோன் கழல்கழுவ
அங்கவன்றன் கண்ணீ ரவளுடன்மேற்—பொங்கக்
கடல்போலுங் காதலார் கையற்றார் தங்கள்
உடல்போலு மொத்தா ருயிர்.

(இ-ள்) (மேற்கூறியபடி இருவரும் விழுந்தழும்போது) மங்கை-தமயந்தியினுடைய, விழிநீர்-கண்ணீரானது, மறையோன் - அவ்வேதியனுடைய, கழல்-பாதங்களை, கழுவ-அலம்ப, அங்கு-அவ்விடத்தில், அவன் தன்-அப்பிராமணனுடைய, கண்ணீர்-விழிநீரானது, அவள்-அத் தமயந்தியின், உடல் மேல்-தேகத்தின்மேல், பொங்க-அதிகரித்துச் சொரிய, (அவ்விருவர் செய்கைகளையும் பார்த்தவுடனே தமயந்தியை இன்னவளென உணர்ந்து) கடல் போலும்-சமுத்திரம் போல அதிகரித்த, காதலார்-ஆசையை யுடையவர்களாகிய சேதி அரசன் முதலான சுற்றத்தார்கள், கையற்றார் - துக்கத்தைத் தாங்கும் சாமார்த்திய மற்றவர்களாய், (அதாவது: தளர்ச்சி யுற்றவர்களாய்) தங்கள் உடல் உயிர்போல்-தங்களுடைய உடலையும் உயிரையும் போல, (அதாவது தங்கள் உடலும் உயிரும்ஒன்று சேர்ந்திருப்பதுபோல,) ஒத்தார்-தமயந்தியிடம் நேசம் பொருந்தி யிருந்தார்கள்; [எ-று.]

அந்தப் பிராமணன் வீமராஜனிடம் இருப்பவனென்பதைச் சேதி அரசன் முதலியோர் உணர்ந்திருந்தார்களாதலின் அவன் அவ்வாறு தமயந்தியைக் கண்டு அழுத மாத்திரத்தில் அவள் தமயந்தி யென்பதை யுணர்ந்து அவளுடைய நிலைமையைக் குறித்து உண்டான துக்கத்தால் தளர்ந்து பின் தெளிந்து அவள் மீது அன்புடையவர்களாய் அவளோடு பொருந்தி யிருந்தார்கள். தமயந்தி பிராமணனின் பாதத்திற்கு முன்னே விழுந்தழுததால் அவளுடைய கண்ணீர் அவனுடைய பாதங்களின்மேல் விழுந்து அவற்றைக் கழுவியது. பிராமணன் முதலில் தரையில் விழுந்து பின்னர் எழுந்துதமயந்திக்கு மேல் தலை குனிந்து நின்றழுதபடியால் அவனுடைய கண்ணீர் அவள் மீது சொரிந்தது. சேதி அரசன் முதலியோர் தமயந்திக்கு நெருங்கிய சுற்றத்தாராதலின் அவர்களை "கடல் போலுங்காதலார்" என்றார் ஆசிரியர். உடல் உயிர் ஆகியவற்றின் சேர்க்கை மிகவும் அன்புடையதாதலின் அந்தப்

பற்றுதலைப்போன்ற அன்பைத் தமயந்தியின் மேல் செலுத்தக்கூடிய அச் சுற்றத்தாரை "உடல் உயிர் போல் ஒத்தார்" என்றார் புலவர்.

அங்கு- அசை யெனினுமாம். தன்-அசை. "உடல் போலும் ஒத்தார்" என்பதை, 'உடல் உயிர்போலும் ஒத்தார்' எனமாற்றுக. போலும் என்பதில் உம்-அசை. முன்னே சேதி அரசி தமயந்தியைத் தன்னிடம் இருத்தி ஆதரித்து வந்தாளென்பதனால் அவ்வரசனும் அவள்போலவே தமயந்தியின் இருப்பை ஏற்று அவளை ஆதரித்து வந்தானென்பது தானே அமையும்.

பார்ப்பான் சேதியரசிக்குத் தமயந்தியின்
நிலைமையைச் சுட்டிக் காட்டிக் கூறுதல்

314. மாரி பொருகூந்தன் மாதராய் நீபயந்த
காரிகைதான் பட்டதுயர் கண்டாயோ—சோர்குழலும்
வேணியாய் வெண்டுகிலும் பாதியாய் வெந்துயருக்
காணியாய் நின்றா ளயர்ந்து.

(இ-ள்) (அவ்வாறு தமயந்தியை எல்லோரும் அறிந்து கொண்டபின்பு அவ்வேதியன் சேதி அரசியை நோக்கி அவளுக்குத் தமயந்தியைச் சுட்டிக் காட்டி) மாரி-மேகத்தை, பொரு-நிகர்த்திருக்கின்ற, கூந்தல் - அளகபாரத்தையுடைய, மாதராய்-அழகு பொருந்திய பெண்ணே!, நீ பயந்த-நீ பெற்ற, காரிகை-அழகுள்ள இப்பெண்ணாகிய தமயந்தி, பட்ட-கெட்டதற்கு ஏதுவாகிய, துயர்-துன்பத்தை, கண்டாயோ-அறிந்தனையா?, (இவள் அத்துயரத்தால்) சோர்-தொங்குகின்ற, குழலும்-கூந்தலும், வேணியாய் - சடையாகி, வெண்துகிலும்-சுத்தமான வெள்ளை வஸ்திரமும், பாதியாய் - இரண்டாக அறுபட்டதில் பாதியாகி, வெம்-வெம்மையாகிய, துயருக்கு-துன்பத்திற்கு, ஆணியாய்-எல்லையாய், (அதாவது: இருப்பிடமாய்) அயர்ந்து-சோர்ந்து, நின்றாள்-நின்றனள், (என்று கூறினான்); [எ று]

எல்லோரும் தமயந்தியை இன்னவளென்று உணர்ந்து கொண்டபிறகு அந்தப் பிராமணன் சேதி யரசிக்குத் தமயந்தியைச சுட்டிக்காட்டி "மாதே! நினது குமாரத்தி அடைந்திருக்கும் துன்பமான நிலைமையைப் பார்த்தனையா' குழலும் சடையாய்த் துகிலும் பாதியாய்த் துக்கத்திற் கிடமாய் நின்றாள் இவள்" என்று கூறினான். சேதி அரசி தமயந்திக்குச் சிற்றன்னை யாதலின் அவளை அவனிடத்தே 'நீ பயந்த காரிகை' எனவும் கூறினான். ஒருவர்க்குரிமையானவர்கள் அவரைப் பெறாதவர்களா யிருப்பினும் அவர்களைப் பெற்றோராகக் கூறுதல் மரபு.

பொருதல்-என்னுந் தொழிற் பெயர் தல்லீறு கெட்டுப் பொரு என நின்றது. பொருதல் நிகர்த்தல்; பொரு கூந்தல் என்பதற்குப் பொருதலையுடைய கூந்தல் என்று பொருள் விரிக்கவேண்டும் மாதர்-அழகு; அதனையுடையாள் மாதராள், காரிகை-அழகு; இது பண்பாகு பெயராய்த் தமயந்

தியை உணர்த்தி நின்றது. படுதல்-கெடுதல்; சிக்குதல் எனினுமாம்; சிக்குதல்-அகப்படுதல் கண்டாயோ என்பதில் ஓ வினாப் பொருளில் நின்றது; இரக்கப் பொருள தெனினுமாம். "குழலும் வேணியாய் துகிலும் பாதியாய் நின்றாள்" என்பதில் சினைவினைகள் முதலொடு முடிந்தன. உம்மைகள் எண்ணுப் பொருளன. "ஆணியாய்" என்பதற்கு அச்சாணிபோல் என்று பொருளுரைத்தலுமுண்டு; அச்சாணியானது தேர் முதலியவற்றைத் தாங்கிக் கொண்டிருப்பது போலத் தமயந்தியும் துன்பங்களைத் தாங்கிக் கொண்டிருப்பதால் இஃதவளுக்கு உவமையாயிற்று.

சேதி அரசி தமயந்தியை உணர்ந்த பின்
துக்கப்படுதல்.

315. தன்மக ளாவ தறியாத் தடுமாறிப்
பொன்வடிவின் மேலழுதுபோய்வீழ்ந்தாள்—மென்மலரைக்
கோதிப்போய் மேதி குருகெழுப்புந் தண்பணைசூழ்
சேதிக்கோன் றேவி திகைத்து.

(இ-ள்) (அவ்வாறு வேதியன் கூறிய மாத்திரத்தில்) மென்மலரை-(நீரிலிருக்கும்) மெல்லிய மலர்களை, கோதிப்போய் - கொம்புகளால் வகிர்ந்து கொண்டேபோய், மேதி-எருமைகள், குருகு-(அம்மலர்களின்மே லிருக்கும்) நாரைகளை, எழுப்பும்-எழுப்பி விடுகின்ற, தண்-குளிர்ச்சி பொருந்திய, பணை சூழ்-மருதநிலம் சூழ்ந்த, சேதி-சேதிநாட்டிற்கு, கோன்-அரசனது, தேவி-மனைவியானவள், (தமயந்தி) தன்மகளாவது-தன் புத்திரியா யிருப்பதை, அறியா அறிந்து, தடுமாறு-(வருத்தத்தால் மனங்கலங்கி, திகைத்து மயங்கி, போய்-(தமயந்தியின் சமீபத்தில்) சென்று, அழுது-அரற்றி, (அவளுடைய) பொன்வடிவின் மேல்-பொன்போன்ற வடிவத்தையுடைய தேகத்தினமேல் வீழ்ந்தாள்-வீழ்ந்தாள்; [எ-று.]

சேதி அரசன் மனைவி தமயந்தியைத் தன் மகளென்று அறிந்தவுடனே அவளுடைய பரிதாப நிலைமையைக் குறித்துண்டான துக்கத்தினால் மனங் கலங்கி அழுது அவள் மேல் விழுந்தாள். "மென்மலரைக் கோதிப் போய் மேதிகுரு கெழுப்பும் தண்பணை சூழ் சேதி" என்றதனால் அந்நாடு மருதநில வளம்மிக்க தென்பது புலப்படும்.

வடிவம் தேகத்தை யுணர்த்தி நின்றது. பொன்வடிவு என்பதை உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை யெனக் கொண்டு தமயந்திக் கேற்றினும் அமையும்.

சேதிமன்னன் தமயந்தியை அவள்
தந்தையிடம் அனுப்புதல்.

316. கந்தனையுங் கன்னியையுங் காண்டாயி னுஞ்சிறிது
தன்றுயரந் தீர்ந்து தனியாறத்—தந்தை

பதியிலே போக்கினான் சேதியர்கோன் பண்டை
விதியிலே போந்தாளை மீண்டு.

(இ-ள்.) (அதன்மேல்) சேதியர்கோன்-சேதி நாட்டாருடைய அரசன், பண்டை-பழமையான, விதியிலே-தலைவிதியினாலே, (அவ்வாறு வறுமைப் பட்டுத் தன்பதிக்கு) மீண்டு-திரும்பி, போந்தாளை-வந்தவளாகிய தமயந்தியை, கந்தனையும்-குமாரனையும், கன்னியையும் - மகளையும், கண்டாயினும்-பார்த்தாவது, சிறிது-கொஞ்சம், தன்துயரம்-தன்னுடைய துக்கம், தீர்ந்து-நீங்கி, தனி-தனியாக, ஆற-மனம் ஆறும்படி, தந்தை-அவளுடைய தகப்பனது, பதியிலே-நகரத்திற்கு, போக்கினான்-போகும்படி செய்தான், (அதாவது அந்நகரத்திற்கு அனுப்பினான்); [எ-று]

சேதி நகரத்தரசர், "இவளோ தன்நாயகனையும் பிள்ளைகளையும் பிரிந்த துக்கத்தால் மிகவும் மனங்கலங்கி யிருக்கிறாள்; ஆதலின் இவளை வீமன் பதிக்கனுப்பி விட்டால் தன் பிள்ளைகளைப் பார்த்தேனும் இவள் மனந்தேறி யிருப்பாள்; வேதியனும் இவளை அழைத்துச்செல்ல வந்திருக்கின்றான்; நாம் இப்பெண்ணை அங்கனுப்பி விடுதலே தகுதி" என்று துணிந்து தமயந்தியை வேதியனுடனே அந்நகரத்திற்கு அனுப்பி விட்டான்.

கந்தன்-கருணைக் குரியவன்; கந்தம்-கருணை, அதற்குரியவன்-கந்தன்; புத்திரன் கருணையைச் செலுத்தத் தக்கவனாதலின் இப்பெயர் பெற்றான்; இனி முருகனுடைய பெயர் உவமையாகு பெயராய் இப்புத்திரனுக்கு வந்ததெனினும் அமையும். இன்னும் இதனைத் தெலுங்கு மொழி யென்றும் இசைச்சொல்லாய்த் தமிழில்வந்த தெனவும் கூறுவதுமுண்டு. சிறிது குறிப்புமுற்று; வினையெச்சமாகி வினையுரியாய் நின்றது. பதியில்-உருபு மயக்கம்.

**தமயந்தியைக் கண்டு வீமன் நகரத்திலுள்ளார் அவளிடம் வந்து கூடுதல்.**

317. கோயிலு மந்தப் புரமுங் கொடிநுடங்கும்
வாயிலு நின்று மயங்கியவே—தீயகொடுங்
கானாள மக்களையுங் கைவிட்டுக் காதலன்பின்
போனாள் புகுந்த பொழுது.

(இ-ள்) (அவ்வாறு சேதி அரசன் தமயந்தியை வீமன் பதிக்கனுப்பிய பின்பு அவள் அங்குப்போய்ச்சேர்ந்தாள், அப்படி) தீய-தீமையாகிய, கொடும்-கொடுமை பொருந்திய, கான்-வனத்தை, ஆள-ஆளும்படி, (அதாவது காட்டில் நடந்து வருந்தும்படி), மக்களையும்-பிள்ளைகளையும், கைவிட்டு - தன்பக்கத்திலிருந்து நழுவவிட்டு, (அதாவது அவர்களை வேதியனுடன் அனுப்பி விட்டு) காதலன்பின்- ஆசைக்குரியவனாகிய நாயகன் பின்னே, போனாள்-(அவனே தனக்குரியவனென்று நினைத்து) சென்றவளாகிய தமயந்தி, புகுந்தபொழுது அந்நகரத்தில் நுழைந்த காலத்தில், (அவளைக் காணும்பொருட்

இ), கோயிலும்-வீமராஜனுடைய அரண்மனையி லுள்ளவர்களும், அந்தப் புரமும்-அந்தப் புரத்திலுள்ள இராஜ ஸ்திரீகளும், கொடி நுடங்கு-துவஜங்கள் அசைந்து கொண்டிருக்கின்ற, வாயிலும்-அரண்மனை வாயிலில் உள்ளவர்களும், நின்று-அவளிடத்தே வந்து நின்று, மயங்கிய-கூடி ஒன்றாகக் கலந்தார்கள், (அதாவது எல்லோரும் தமயந்தியினிடம் வந்து கூடினார்கள்; [எ-று.]

தமயந்தி அந்நகரத்திற் புகுந்தவுடனே அவள் வரவை உணர்ந்து அவளைப் பார்க்கவேண்டுமென்ற அவாவினால் அரண்மனையி லுள்ளவர்களும்அந்தப் புரஸ்திரீகளும் அரண்மனை வாயிலிலுள்ள ஜனங்களும் அவளிடத்தே வந்து கூடினார்கள் என்பது இதன் கருத்து. முன்னரே தமயந்தியின் பிள்ளைகள் அங்குப் போய்ச சேர்ந்ததன் மூலம் அவளுக்குற்ற துயரத்தை அந்நகரமாந்தர்கள் உணர்ந்திருந்தார்க ளாதலின் இப்பொழுது அவள் அங்குவந்ததை அறிந்தவுடனே அவளைக் கண்டு அவளுடைய துயரத்தை விசாரித்து அவளுக்குத் தேறுதல் கூறித் தங்கள் அன்பை வெளிப்படுத்தும் பொருட்டு அங்ஙனம் வந்து அவள் அருகே கூடினார்கள்.

கோயில், அந்தப்புரம் வாயில் என்பன இடவாகு பெயர்களாய் அவ்வவ் விடங்களிலுள்ள மனிதர்களை யுணர்த்தி நின்றன. கோயில் என்பது இராஜ மாளிகையில் அந்தப்புரம் நீங்கலாக மற்றைய விடங்களைக் குறித்து நின்றது. கோயில் அந்தப்புரம் வாயில் என்றதற்கேற்ப மயங்கிய என்ற அஃறிணை முடிபே வந்தது. மக்களையும் என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்புப்பொருளது. மற்றைய உம்மைகள் எண்ணுப் பொருளன. தமயந்தியை "மக்களை யுங்கைவிட்டுக் காதலன்பின் போனாள்" என்றது அவளின் கற்புயர்வை விளக்குதலின் பொருட்டென்க. ஏ-அசை.

### தமயந்தியைக் கண்டு வீமன் நகரத்திலுள்ள மாந்தர் வருந்துதல்.

318. அழுவார் விழுவா ரயிர்ப்பா ருயிர்ப்பார்
தொழுவார் தமரெங்குஞ் சூழ்வார்—வழுவாத
காமநீ ரோதக் கடல்கிளர்ந்தா லொத்ததே
நாமவேல் வீம னகர்.

(இ-ள்) (அவ்வாறு எல்லோரும் கூடியவுடனே) தமர்-அத்தமயந்தியின் சுற்றத்தார், அழுவார்-அழுகின்றவரும், விழுவார்-(துக்கத்தால் கீழே) விழுகின்றவரும், அயிர்ப்பார்-(தமயந்தியைப் பார்த்து இவள் தமயந்திதானோ அல்லது வேறுபெண்ணோ என்று) சந்தேகிப்பவர்களும், உயிர்ப்பார்-(தமயந்தியின் நிலைமையைப் பார்த்து) பெருமூச்சு விடுகின்றவரும், தொழுவார்-(தமயந்தியை) தொழுகின்றவரும், எங்கும் சூழ்வார்-அவளைச்சுற்றி எல்லாப் பக்கங்களிலும் சுற்றிக் கொள்பவரும், (ஆனார்கள் அவ்வாறானதனால்) நாம-

அச்சத்தைத்தருகின்ற, வேல்-வேலாயுதத்தையுடைய, வீமன் நகர்-வீமராஜனது பட்டணமானது, வழுவாத-நீங்காத, காமம்-விருப்பமென்னும், நீர்-ஜலம் நிறைந்த, ஓதம்-அலைகளையுடைய, கடல் ஒரு சமுத்திரமானது, கிளர்ந்தால் ஒத்தது பொங்கியதை நிகர்த்து ஆரவாரம் மிகுந்ததாயிற்று; [எ-று.]

தமயந்தி வந்ததை யுணர்ந்து ஜனங்கள் வந்து கூடியவுடனே அவளுடைய சுற்றத்தார்களில் சிலர் அவளைப் பார்த்து அழுவாராயினர்; சிலர்விழுவாராயினர்; சிலர் சந்தேகிப்பாராயினர்; சிலர் பெருமூச்சு விடுபவராயினர்; சிலர் தொழுவாராயினர்; சிலர் அவளைச் சுற்றிக் கொள்பவராயினர்; அவ்வாறு ஆனதனால் அந்நகரம் சமுத்திரம் பொங்கினாற் போன்று ஆரவாரம் மிகுந்ததாயிற்று. தமயந்தியின் இயற்கை உருவம் மாறுபட்டிருந்ததால் அவளைப்பார்த்த சிலர் இவள் தமயந்திதானோ இல்லையோ என்று சந்தேகித்தார்கள். அதனாலேயே ஆசிரியர், "அயிர்ப்பார்" என்றார்

தொழுவார் என்பதற்குத் தமயந்தி அங்குவந்து சேர்ந்ததற்காகத்தெய்வத்தை வணங்கினார்கள், என்று பொருள் உரைப்பினும் அமையும். இவர்களுக்குத் தமயந்தியின் மீதேற்பட்ட அன்பே இவர்களை இவ்வாறு கூடிப் பற்பலசெய்கைகளை இயற்றச் செய்ததாதலின் இவர்கள்கூடியதை "காமநீரோதக்கடல் கிளர்ந்தா லொத்ததே நாமவேல் வீமனகர்" என்று கூறினார் புலவர். இனி "காமநீரோதக்கடல்" என்பதற்கு விருப்பத்தையுடைய ஜலம் நிறைந்த அலைகள் பொருந்திய சமுத்திரம் எனவும் பொருளுரைக்கலாம். ஆனார்கள் என்பது இசை யெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது. அழுவார், விழுவார் முதலியவைகளை இறந்த காலம் எதிர்காலமாக மாறி இயல்பினால் வந்தகால வழுவமைதிகளாய் அமைந்தன எனினுமமையும்; அங்ஙனங்கொள்ளுமிடத்து அவற்றை அழுதார் விழுந்தார் என்று விரிக்க வேண்டும். "கிளர்ந்தா லொத்தது" என்பதில் ஆல்-அசை; கிளர்ந்தது என்பது துவ்விகுதி குறைந்து அகரந்தொகுத்தலாய் நின்றது. ஏ அசை. நாம்-அச்சம்; அகரச்சாரியை பெற்று நாம என நின்றது-தமர் என்பதில் தாம்-பகுதி, அர்-விகுதி, விகாரத்தால் பகுதி குறுகி நின்றது

தமயந்தி தந்தையைக் கண்டு
வருந்துதல்.

319 தந்தையைமுன் காண்டலுமே தாமரைக்கணீர்சொரியச்
சிந்தை கலங்கித் திகைத்தலமந்—தெந்தாயான்
பட்டதே யென்னப்போய் வீழ்ந்தாள் படைநெடுங்கண்
விட்டநீர் மேலே விழ.

(இ-ள்) (அவ்வாறு எல்லோருங் கூடி வருந்தி நிற்கும் போது தமயந்தி தன் தந்தையைக் கண்டாள்; அங்ஙனம்) தந்தையை - தன் பிதாவை, முன்-எதிரிலே, காண்டலும் - பார்த்த மாத்திரத்தில், தாமரை - தாமரை மலர்

போன்று, கண் கண்களில், நீர்சொரிய-நீரானது சிந்த, சிந்தைகலங்கி-மனக் கலக்கமுற்று, திகைத்து-மயங்கி, அலமந்து-துன்பமுற்றுச் சுழன்று, (அவ் வீமராஜனை நோக்கி), எந்தாய் எனது தந்தையே, யான் பட்டதே - நான் சிக்கிவருந்திய துன்பத்தை அந்தோ என்னென்றுசொல்வேன், என்ன என் றுசொல்லி, படை-வேலாயுதத்தை நிகர்த்த, நெடும்-நீண்ட, கண் - கண்கள், விட்டநீர்-சொரிந்த நீரானது, மேலே விழ அவன் மேலே விழும்படி, போய்- அவன் சமீபத்திற்சென்று, வீழ்ந்தாள்-அவன் அடியிலேவிழுந்தாள்; [எ-று]

தமயந்தி தந்தையைக் கண்ட மாத்திரத்தில் துக்கம் சகிக்காமையால் அழுது அவனடியில் விழுந்தாளென்பது இதன் கருத்து. காண்டலும்-வினை யெச்சம். எந்தை என்பது விளியுருபேற்று எந்தாய் என வந்தது. பட்டதே என்பதற்குப் பின் இசை யெச்சமாகச் சில வாக்கியங்கள் கூட்டி முடிக்கப் பட்டன. துக்கம், சந்தோஷம் முதலியவை அதிகரிக்கு மிடத்து இங்ஙனம் பயனிலையின்றிச் சில வாக்கியங்களைக் கூறி விட்டு விடுதல் தமிழ் வழக்குக் களுளொன்று. இவ்வகையாகக் கூறுமிடங்களில் குறைவுபட்டு நின்ற வாக் கியங்களே பின்வரும் வாக்கியங்களையும் பயனிலை முதலிய வற்றையும் உணர்த்தி நிற்கும். இங்ஙனம் வருவதை ஜீவகசிந்தாமணி முதலிய சங்ககா வியங்களுள் மிகுதியுங் காணலாம். பட்டதே என்பதிலுள்ள ஏ-அசை.

அழுது வீழ்ந்த தமயந்தியைப் பார்த்து அவளுடைய
தந்தையும் தாயும் சுற்றத்தாரும் வருந்துதல்.

320. செவ்வண்ண வாயாளுந் தேர்வேந் தனுமகளை
அவ்வண்ணங் கண்டக்கா லாற்றுவரோ—மெய்வண்ணம்
ஓய்ந்துநா நீர்போ யுலர்கின்ற தொத்ததமர்
நீந்தினார் கண்ணீரி னின்று.

(இ-ள்) செவ்வண்ணம்-சிவந்த நிறமுடைய, வாயாளும்-வாயையுடைய வளாகிய வீமன் தேவியும், தேர் வேந்தனும்-இரதத்தையுடைய அரசனாகிய வீமனும், மகளை-தம்புத்திரியாகிய தமயந்தியை, அவ்வண்ணம்-அவ்விதமாக, (பரிதாபமான நிலைமையில்) கண்டக்கால்-பார்த்தால், ஆற்றுவரோ- (அத னால் தங்களுக் கேற்படுந்துயரத்தைச்) சகிப்பார்களோ, (ஒருபோதும் சகிக் கமாட்டார்கள்; அவர்கள் மிகுதியும் துக்கத்தை யடைந்தார்கள்; அதனால் அவர்களுடைய) மெய்வண்ணம்-உடம்பின் தன்மை, (அதாவது உடலின் செய்கை), ஓய்ந்து-சோர்வுற்று, நா நாவானது, நீர்போய் - நீர்ப்பசை யற்று, உலர்கின்றது-அடிக்கடி உலர்கிறதாயிற்று, ஒத்த-(அவர்களுக் கனுகூலமா கப்) பொருந்திய, தமர் சுற்றத்தார்கள், கண்ணீரில்-தங்கள் கண்களிலிருந் தும் வடிந்த நீரிலே, நின்று நிலைபெற்று, நீந்தினார்-நீந்தினார்கள்; [எ-று.]

அவ்வாறு தமயந்தி அழுது தந்தையின் பாதத்தில் விழுந்த மாத்திரத் திலே அத்தந்தையும் அவன் மனைவியும் அங்ஙனம் வீழ்ந்த தங்கள் புத்திரி

யைப் பார்த்துத் துயரஞ் சகிக்காமையால் மிகவும் வருந்தினார்கள். அதனால் அவர்களுடைய தேகஞ் செயலற்றுப் போயிற்று. நாவறண்டு போயிற்று. அவர்களுடைய சுற்றத்தார்களும் அவளைக்கண்டு வருந்திக் கண்ணீர் விட்டழுதுகொண்டு அந்நீரின்மீது நீந்தி நின்றார்கள் என்பதாம்.

ஆற்றுவரோ என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப்பொருளது; ஆதலின் அதன்பின்னர் 'ஒருபோதுஞ் சகிக்கமாட்டார்கள்' என்பன முதலிய வாக்கியங்கள் இசை எச்சமாக வருவித்துரைக்கப் பட்டன. இனி ஆற்றுவரோ என்பதையே எதிர்மறை எச்சமெனக் கொண்டு இங்ஙனம் பொருள் வரைதலும் அமையும். துக்க மிகுந்தாருக்கு வெப்பம் அதிகரிக்கு மாதலின் நாவறண்டு போதலியற்கை. அதனாலேயே தமயந்தியின் தாய் தந்தையர்க்கு நாவறண்டதென்க. சுற்றத்தார்களின் கண்களில் நீர் அதிகரித்து ஒழுகித்தேக முழுவதையும் நனைத்துக் கொண்டிருந்தபடியால் அவரது அழுகையின் மிகுதி தோன்ற அவர்களைக் 'கண்ணீரில் நீந்தினார்'' என்றார் ஆசிரியர்.

தமயந்தியின் தாய் அவளை நோக்கிப்
புலம்புதல்

321. பனியிருளிற் பாழ்மண்ட பத்திலே உன்னை
நினையாது நீத்தகன்ற போது—தனியேநின்
றென்னினைந்தா யென்செய்தா யென்றுப் புலம்பினாள்
பொன்னினைத்தாய் நோக்கிப் புலர்ந்து.

(இ-ள்) (அப்படி எல்லோரும்வருந்திக் கொண்டிருக்கும்போது) தாய்-தமயந்தியின்தாயானவள், பொன்னினை-இலக்குமியை நிகர்த்ததமயந்தியை நோக்கி-பார்த்து, புலர்ந்து-(துயரத்தால்)வாடி, பனி-அஞ்சுகின்ற, இருளில்-இருட்டில், பாழ்மண்டபத்திலே பாழான மண்டபத்திலே, உன்னை - உன்றனை, நினையாது-சிந்தியாமல், நீத்து-விட்டு, அகன்றபோது (நின்கணவன்) நீங்கிச் சென்றகாலத்தில், தனியே நின்று-(நீ) தனிப்பட்டுநின்று, என் நினைந்தாய்-என்ன நினைத்தாயோ?, என்செய்தாய்-என்ன செய்தனையோ, என்று-என்று வினவி, புலம்பினாள்-கதறி அழுதாள்; [எ-று]

மேற்கூறியவாறு எல்லோரும் கூடிப் பற்பலவிதமாக வருந்தும்போது, தமயந்தியின் தாயானவள் தனியே அவளைத் தழுவிக்கொண்டு அவள்முகத்தை நோக்கி, "மகளே! நின்கணவன் உன்னை, அச்சமிகுந்த இருளில் அந்தக காட்டின் பாழ்மண்டபத்தில் தனியாக விட்டுச் சென்ற காலத்தில், நீஎன்ன நினைந்தாயோ! என்ன செய்தனையோ என்று புலம்பினாள் என்பது இதன் கருத்து. எல்லோரினும் தாய்மிக்க அன்புடையவ ளாதலின் தமயந்தி காட்டில் தனிப்பட்டபோது மிகவும் மனம் பதைத்து வாடியிருப்பா ளென்பதை நினைத்து இவ்வாறு அவளை அடிக்கடி கேட்டழுதாளென்க.

பனிஇருள்-வினைத் தொகை; பனிஇருள்' என்பதற்கு 'பனிமிகுந்த இருள்' எனவும் பொருளுரைக்கலாம். தமயந்தியை நளன் காட்டில் நினையாமற் சென்றதாவது: தான் பிரிந்து சென்றால் அவள் ஆபத்துக்குள்ளாகி வருந்துவாளென்பதை ஆலோசியாமற் சென்றதாம். நினையாது தமயந்தியை நீத்தகன்றது நளனேயாதலின், 'நின்கணவன்' என்ற சொல் குறிப்பால் வருவித்துரைக்கப்பட்டது நினைந்தாய், செய்தாய் என்பவற்றில் இரக்கப் பொருள் தரும் ஓகாரம் தொக்கி நின்றது. என்னு இது சொல்லெச்சம்; இதைச் செய்பா வென்னும் வாய்பாட்டு வினை யெச்சம்; என்பினுமாம்.

இவ்வாறு எல்லோரும் துக்கப்பட் பழுதபின்பு ஒருவாறு மனந்தேறித் தமயந்திக்கும் தேறுதலான மொழிகளைக் கூறினார்கள். அதனால் தமயந்தி சற்று விசனம் தணிந்தவளாய்த் தன்னுடைய நாயகனைக் காணவேண்டு மென்னும் சிந்தனையுடன் அங்குத் தங்கி யிருந்தாள்.

இரண்டாவது

கலிதொடர் காண்டம்

முற்றுப் பெற்றது.

---



மூன்றவது:

# கலிநீங்கு காண்டம்.

கலிநீங்கு காண்டம் என்பதற்குக் கலிபுருஷன் நளனை விட்டு நீங்கின சரித்திரங் கூறும் பாடல்களின் கூட்டம் என்பது பொருளாம் கலிதொடர் காண்டம் என்பதற்குக் கூறியதுபோலவே இதற்கும் சொற்றொடர் கூறுக.

## காப்பு.

### விஷ்ணுதுதி.

1. மூலப் பழமறைக்கு முன்னேயுங் காணலாம்
காலிக்குப் பின்னேயுங் காணலாம்—மால்யானை
முந்தருளும் வேத முதலே எனவழைப்ப
வந்தருளுஞ் செந்தா மரை.

(இ-ள்.) மால்-பெரிய, யானை-கஜேந்திர னென்னும் யானையானது, அருள்-கிருபையால், முந்தும்-முதன்மை பெற்றிருக்கின்ற, வேதமுதலே-வேதத்திற் கூறப்படும் முதற்பொருளே, என-என்று; அழைப்ப - கூப்பிட, வந்து அருளும்-அப்பொழுதே வந்து கிருபை செய்து அதனைக் காப்பாற்றிய, (ஆதிமூலக் கடவுளின்) செந்தாமரை சிவந்த தாமரை மலர் போன்ற பாதங்களை, மூலம்-எல்லாவற்றிற்கும் ஆதிகாரணமாகிய, பழமறைக்கு-பழமையான வேதத்துக்கு, முன்னேயும்-முதலில் உள்ளபிரணவத்திலும், காணலாம்-பார்க்கலாம், காலிக்கு-புவியில் ஜனித்துள்ள பசுக்கூட்டத்திற்கு, பின்னேயும்-பின்னாகவும், காணலாம்-பார்த்தல் கூடும்; [எ-று.]

கஜேந்திர னென்னும் யானையானது முதலையினிடம் அகப்பட்டுக் கொண்ட காலத்தில் "நாம் எல்லாவற்றிற்கும் முதன்மையாகிய கடவுளின் பெயரைச் சொல்லி அவனை அழைத்தால் அந்தப்பெயருடையவன் எவனோ அவனே வந்து நம்மைக் காப்பான்" என்று கருதி 'ஆதிகாரணப்பொருளே' என்று பொருள் படும் 'ஆதிமூலமே' என்ற பெயரைச்சொல்லி அக்கடவுளை அழைத்தது. அப்பொழுது விஷ்ணுவே ஓடோடியும் வந்து முதலையைச் சங்கரித்து அந்த யானையைக் காத்தருளினார். இந்த யானை பெயரிட்டவரை அழைத்ததற்கேற்ப இவரே வேதத்தின் முதற்பொருளாய் விளங்குபவராவர். பின்னர் இவர் கிருஷ்ணாவதார காலத்தில் லீலார்த்தமாகப் பசுக்கூட்டங்களை மேய்த்துக்கொண்டு அவற்றின் பின்னே திரிந்தனர். ஆதலின் இவருடைய பாதங்களைப் "பழமறைக்கு முன்னேயுங் காணலாம் காலிக்குப் பின்

னேயுங் காணலாம்'' என்றார் ஆசிரியர். யாவும் வேதஒழுங்கின்படியே நடை பெறுகின்ற வாதலின்; அதனை எல்லாவற்றிற்கும் முதன்மையாகக் கொண்டு "மூலப்பழமறை" என்றுங் கூறினார். வேதத்தின் முதலில் இருப்பது பிரணவம்; விஷ்ணு அந்தப் பிரணவ சொரூபியே யாதலின் யானை அவரை "வேதமுதலே'' என்று அழைத்தது. இந்த வேதத்தின் முதற்பொருளேமற்றைய எல்லாவற்றிற்கும் முதற்பொருளாம். அதனால் இதற்கு ஆதிமூலம் என்னும் பெயரும் ஏற்பட்டது என்ப.

முன்னேயும் பின்னேயும் என்பவற்றிலுள்ள ஏகாரங்கள் சாரியைகள். முன்னதிலுள்ள உம்மை-எதிரது தழுவிய எச்சப் பொருளது; பின்னதிலுள்ளது இறந்தது தழுவியதாம். "முந்தருளும்'' என்பதை "அருள் முந்தும்'' எனமாற்றிக் கொள்ளல் வேண்டும். விஷ்ணு அருளினால் முன்னுற்றதைக் கஜேந்திரன் சரிதையால் உணரலாம். தாமரை-பாதங்களுக்கு உவமையாகு பெயர். இதிற்கூறப்படும் சரித்திரங்கள் விஷ்ணுவைச் சார்ந்தவைகளேயாதலின் செந்தாமரை என்பது அவருடைய பாதங்களையே உணர்த்தி நின்றது. இவர் எல்லாமாய் நிற்பவராதலின் இவருடைய பாதங்களுக்குப் பெருமையுஞ் சிறுமையுங் கூறப்பட்டன; பெருமையாவது மறைக்கு முன் விளங்கியது; சிறுமையாவது காலிக்குப்பின் விளங்கியது. இச்செய்யுளால்இக்காண்டம் இனிது முடிதற்பொருட்டு ஆசிரியர் விஷ்ணுவைத் துதித்தா ரென்க

## சிவன் துதி.

2. போதுவார் நீறணிந்து பொய்யாத வைந்தெழுத்தை
ஓதுவா ருள்ள மெனவுரைப்பார்—நீதியார்
பெம்மா னமரர் பெருமா னொருமான்கை
அம்மானின் றாடு மரங்கு.

(இ-ள்) போது-உரிய காலங்களில், வார்-நுண்மையாகிய, நீறு அணிந்து-விபூதியை நெற்றி முதலிய அவயவங்களில் தரித்து, பொய்யாத-பொய்த்துப்போகாத, (அதாவது மெய்ப்பலனைத் தரக்கூடிய) ஐந்தெழுத்தை-பஞ்சாக்ஷரமாகிய மந்திரத்தை, ஓதுவார்-சொல்லுகின்றவர்களுடைய, உள்ளம்-நெஞ்சகமானது, நீதியார்-சத்தியம் பொருந்தியவர்களுடைய, பெம்மான்-தலைவனும், அமரர்-தேவர்களுடைய, பெருமான்-அரசனும், (ஆகிய) ஒரு மான்-ஒப்பற்ற மானைத்தாங்கிய, கை-கையையுடைய, அம்மான்-எவர்க்குந் தந்தை யென்னும் சிவபெருமான், நின்று - நிலைபெற்று, ஆடும் - ஆடுகின்ற, அரங்கு-நர்த்தனசாலை, என-என்று, உரைப்பார்-பெரியோர் சொல்லுவார்.

விபூதி அணிந்து பஞ்சாக்ஷரத்தை ஜெபிப்பவர்களுடைய உள்ளமே சிவபெருமான் நின்றாடும் நர்த்தனசாலை யென்பது இதன் கருத்து. இங்ஙனுங் கூறியதனால் சிவபெருமான் பஞ்சாக்ஷர மந்திரத்தால் அவரைத் துதிப்பவர்

னுடைய உள்ளத்தில் எப்பொழுதும் குடிகொண்டிருப்ப ரென்பதுபெறப் படும். போது என்பதற்கு மலர் எனப்பொருள் கொண்டு அக்கடவுளுக்கு அர்ச்சிக்கப்பட்ட புஷ்பங்களையும் நீற்றையும்அணிந்து எனப்பொருள்கொள் ளினும் அமையும். நீதியார் என்பதைச் சிவனுக் கடையாகக் கொண்டு நீதி பொருந்திய கடவுள் எனப் பொருளுரைப்பினும் அமையும், சிவபெருமான் நீதி பொருந்தியவர்க ளிடத்திலும் தேவர்களிடத்திலும் தரிசனந் தந்து அவர்க்குத் தலைவராய் விளங்குவா ராதலின் அவரை "நீதியார் பெம்மான் அமரர் பெருமான்" என்று கூறினர் ஆசிரியர். அம்மான் என்பதற்கு அந்தப் பெரியவன் எனப்பொருள் கோடலுமொன்று அங்ஙனங்கொள்ளுமிடத்து மஹா என்னும் வட சொல்மான் எனத்திரிந்து அகரச் சுட்டோடு வந்ததெ னக் கொள்க. இதனால் ஆசிரியர் தாம் எடுத்தகாரியம் இனிது முடிதற் பொருட்டுச் சிவனைத் துதித்தா ரென்க.

(முற்காண்டத்திற் கூறியபடி தமயந்தியின் செய்கை அங்ஙன மிருக்க இதுமுதல் அவளை விட்டு நீங்கிச சென்ற நளன் செய்கை கூறப்படுகின்றது)

காட்டுத் தீயிற் சிக்கி வருந்திய கார்க்கோடகன்
அபயமிட் டழைக்க நளன் அவனிடஞ்
செல்லுதல்.

322 மன்னு உனக்கபய மென்னு வனத்தீயிற்
பன்னக வேந்தன் பதைத்துருகிச்—சொன்ன
மொழிவழியே சென்றான் முரட்கலியின் வஞ்சப்
பழிவழியே செல்கின்றான் பார்த்து.

(இ-ள்) (தமயந்தி மேற்கூறியபடி தந்தை நகரத்தில் சேர்ந்திருக்க அவளைப் பாழ்மண்டபத்தில்விட்டு நீங்கிச்சென்ற நளன், காட்டுவழியாகப் போய்க்கொண்டிருக்கும்போது (முரண் பகைமையுடைய, கலியின், கலி புருஷனுடைய, வஞ்சம்-சூதினாலாகிய, பழிவழியே பழிபொருந்திய வழியி லே, செல்கின்றான்-அவ்வாறு நடக்கின்றவனான அந்நளன், பன்னக வேந் தன்-சர்ப்பராஜனாகிய கார்க்கோடகனென்பவன், வனத்தீயில்-காட்டுத்தீயி லே, (நடுவில் அகப்பட்டு, பதைத்து- உடல் துடித்து, உருகி-மனங்கலங்கி, (அத்தருணத்தில் தன்னை நோக்கி) மன்னு-அரசனே!, உனக்கு அபயம் - உனக்கு நான் அடைக்கலம், என்னு-என்று, சொன்ன-உரைத்த, மொழி வழியே வார்த்தையின் வழியிலே, பார்த்து - அவனுடைய நிலைமையை நோக்கி, சென்றான்-அந்த ஸர்ப்பராஜன் இருக்கு மிடத்துக்குப்போனான்.

"நள்ளிரவில் நடுக்காட்டிலுள்ள மண்டபத்தில் தமயந்தி தூங்கும் போது அவளைத் தனியே விட்டுச் சென்ற நளன், வழியில் கார்க்கோடக னென்கிற நாகம் காட்டுத்தீயிலகப்பட்டு வருந்தித் தன்னை நோக்கி,, 'அர

சனே! உனக்கு நான் அடைக்கம்' என்று கூவ, அக்குரலைச் செவியிலேற்று அக்குரல் உண்டான விடத்தை நோக்கிச் சென்றனன்' என்பது இதன் கருத்து. நளன் நீதிதவறாதவனாயிருந்தும், கலி புருஷன் தன் மனதைக் கெடுத்துவிட்டபடியால் அவனுடைய மாயையிற் சிக்கி அவன் எண்ணப் படியே சூதாடி அரசிழந்து தயை தாக்ஷிண்யங்களை விட்டு மனைவியையும் பாழ்மண்டபத்திற் போட்டுச் சென்றனனாதலின் அவனை, 'கலியின் வஞ்சப் பழிவழியே செல்கின்றான்' என்றார் ஆசிரியர்; இது போலவே கலி தொடர் காண்டத்திலும், "பொய்மலர்ப் பூங்கோதை பிரியப் பிரியாத, செம்மையுடை மனத்தன் செங்கோலான் பொய்மை, விலக்கினான் னெஞ்சத்தை வேறாக நின்று, கலக்கினான் வஞ்சக்கலி" என்றும், "வஞ்சக்கலி வலியால் வயவேந்த னெஞ்சத்து, உதித்ததே வேறோருணர்வு" என்றும் "உயர்வேந்த னெஞ்சம், வலித்ததே தீக்கலியால் வந்து" என்றும் கூறினார். இப்படியெல்லாம் நளனையும் தமயந்தியையும் கலி வருத்தியதற்குக் காரணம் அவனைத் தமயந்தி மணஞ்செய்து கொள்ளவில்லை என்ற எண்ணத்தாலேற்பட்ட பகைமையே ஆதலின், அப்பகையையுடைய கலியை 'முரண் கலி' என்றும் கூறினார்; கலிதொடர் காண்டத்திலும் 'காய்கலி' எனக் கூறியிருத்தல் காண்க. இனி, நளன் அந்நாகத்தினிடம் சென்றதும் உரு மாறிப் போகின்றபடியால், இவ்வாறதற்கு நளனை அங்குப் போகும்படி செய்தவன் கலிபுருஷனே என்பது தோன்ற இங்ஙனம் ஆசிரியர், "கலியின் வஞ்சப் பழிவழியே செல்கின்றான்' எனக் கூறினாரெனினும் அமையும்; இங்ஙனங் கொள்ளுமிடத்து "செல்கின்றான்" என்பதை முற்றெச்சமாகக் கொண்டு, "செல்கின்றவனாய்ச் சென்றான்" என முடிக்கவேண்டும். கார்க்கோடகன் என்பான், வாசுகி, அநந்தன், தக்ஷகன் சங்கபாலன், குளிகன், பதுமன் மகாபதுமன், கார்க்கோடகன் என்ற எட்டு மகாநாகங்களில் ஒருவனாதலின், 'பன்னக வேந்தன்,' எனப்பட்டான்.

அ + பயம் = அபயம்; இது பயமின்மையென்று பொருள் படும்; பயமின்மை இங்கு அதனுடைய பொருளின் மேனின்றது; 'நான் உனக்கு அபயம்' என்றதனால், 'நான் உனக்குப் பயமற்ற பொருள்' அதாவது: நின்னிடத்தே நிர்ப்பயமாயிருக்கக் கூடிய பொருள் என்பது போதரும்; இதன் உட்பொருள்கள் என்பயத்தை நீக்கி என்னை நீ ஆதரித்து நின் சொந்தப் பொருளாக்கிக்கொள் என்பதாம். அபயம் வடசொல். வநம், வஞ்சநம் என்ற ஆரியமொழிகள் வனம், வஞ்சம் எனத் திரிந்து வந்தன. பன்னகம்-பந்நகமென்ற வடமொழித்திரிபு; பந்நகம் என்பது பத்நகம் எனப் பிரிந்து 'கால்களால் நடவாது' என்று காரணப் பொருள்படும்; 'கால்களின்றி மார்பால் ஊர்ந்து செல்வது' இதன் கருத்து. இனிப் 'பன்னகம்' என்பதை, 'பல் நாகம்' எனப் பிரித்து 'நச்சுப்பற்களையுடைய நாகம்' எனப்பொருள் கோடலுமொன்று. மன்னா-மன்னன் என்பதன் ஈற்றயல் திரிந்தவிளி. என்னா-உடன்பாட்டு இறந்தகால வினையெச்சம். சொன்ன-பெயரெச்சம்; இதில்

இன் இறந்தகால விடைநிலை; முதல் தொக்கது. பழிவழி வினைத்தொகை, செயப்பாட்டுவினைப்பொருளது; இனி இரண்டனுருபும் பயனும் தொக்க தொகையாய்ப், 'பழியையுடைய வழி' எனவும் விரிக்கப்படும்- ஏ இரண்டும் அசைகள்; பிரிநிலைப்பொருளன எனலுமாம். செல்கின்றான் தெரிநிலைவினை யாலணையும் பெயர்- பார்த்து என்பது எண்ணி என்னும் பொருளில் நின்றது. மன்னு என்று என வந்தது, ப்ராஸம் என்னும் சொல்லணியாம்.

காட்டுத்தீயில் அகப்பட்ட கார்க்கோடகனை
நளன் காணுதல்.

323. ஆருந் திரியா வரையிருளி னங்ஙனே
சோர்குழலை நீத்த துயரோடும்—வீரன்
திரிவானத் தீக்கானிற் செந்தீயின் வாய்ப்பட்
டெரிவானைக் கண்டா னெதிர்.

(இ-ள்.) (அங்ஙனம் போய்) ஆரும்-எவரும், திரியா-சஞ்சரிக்கக்கூடாத அரை இருளின்-பாதி இரவில், அங்ஙனே-முற்கூறிய அந்த விதமாகவே, (அதாவது: பாதித்துணியோடு பாழ்மண்டபத்திலிருந்து வந்தபடியே), சோர்குழலை-சோர்கின்ற கூந்தலையுடைய தமயந்தியை, நீத்த-பிரிந்ததனால் வேற்பட்ட துயரோடும்-துக்கத்துடனே, திரிவான்-அலைந்துகொண்டிருப்பவனாகிய, வீரன்-வீரபுருஷனான நளன், அத்தீக்கானில்-அந்தத் தீயவனத்தில், செம்தீயின் வாய்ப்பட்டு சிவந்த அக்கினியின்நடுவில் அகப்பட்டு, எரிவானை-எரியத்தொடங்கினவனை கார்க்கோடகனை, எதிர் நேரில், கண்டான்-பார்த்தான்; [எ-று.]

மனைவியாகிய தமயந்தியைப் பிரிந்ததனால் ஏற்பட்டு அக்கினியைப் போல மனத்தை வெதுப்பிக்கொண்டிருந்த துயரத்துடனே கொடிய கானகத்தில் அலைந்து இரிந்த வீரனாகிய நளன் மேற்கூறியபடி சென்று, காட்டுத் தீயில் அகப்பட்டு எரியுந்தருணத்திலிருந்த கார்க்கோடகனை எதிரில் கண்டான் என்பது இதன் கருத்து. மனத்துயரம் நெருப்பைப் போன்று சுடுவதாதலின், அதனைச் செய்யுளில் நெருப்பனையதெனக் கூறாவிடினும் உரையில் அதுபோன்றதெனக் கூறப்பட்டது. தீக்கானில் மனைவியைப் பிரிந்த துயரமாகிய நெருப்பானது மனத்திற்பற்றி எரிய அதனிடைப்பட்டு வருந்திய நளன், காட்டுத்தீயிலகப்பட்டு வருந்திய கார்க்கோடகனைக் கண்டான் என ஒரு சமத்காரக்கருத்து இதில் காண்க. அகத்தீயுட் சிக்கியவன் புறத்தீயுட்பட்டவனைக் கண்டானென்க. நளன், தன்மனதில் பற்றியெரிகின்ற துயரத்தையும் அத்தருணம் கருதாது நெருப்பிடைப் பட்டவனைக் காத்தற்கு விரைந்து சென்றான் என்றதனால் அவனுடைய அருட் பெருமை விளங்கும்; அவன் இங்ஙனம் தன் துயரைச் சகித்துப் பிறன் துயர்க் கிரங்கினமையால், வீரன் எனப்படுவானாதலின், அவனை, 'வீரன்' என்றார் புலவர்; இங்குக்குறித்தது தயாவீரமெனப்படும். 'வீரன் திரிவான்' என்றதனால்,

இயற்கையில் வீரனாகவுள்ளவன் விதிவசத்தால் இவ்விதநிலைமையை அடைந்தான் எனக் கவி இரங்கியதும் ஒருவகையில் தோன்றும்.

ஆர்-யார் என்பதன் மரூஉ; இதில் யாவினா எஞ்சாமைப் பொருளது; இதனீற்றும்மை-முற்றுப் பொருளது; உயர்வு சிறப்புப் பொருளதெனினுமாம். திரியா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இருள் ஆகுபெயராய் அதனையுடைய இரவை யுணர்த்திற்று. இன்-ஏழாம் வேற்றுமைச்சொல்லுருபு. "ஆருந்திரியா அரையிருள்" என்றதனால் நள்ளிரவின் வன்மை விளங்கும்; இங்ஙனமே, "நீயவனமுந் துயின்று திசைதுயின்று, பேயுந்துயின்றதாற் பேர்யாமம்" என்று கலிதொடர் காண்டத்திலும் கூறினார் ஆசிரியர். 'அங்ஙனே' எனச் சுட்டினது, முன் நடந்த கதையைக் குறித்தது; இச்சுட்டு சகித்தற்கருமையையும் விளக்கும். அங்ஙன்-அங்ஙனம் என்றதன் விகாரம்; இதனீற்றேகாரம் இரக்கப்பொருளது. சோர்குழல்-வினைத்தொகைக்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; இங்குக்கூந்தலுக்குச் சோர்வு, மயிர்க்கற்றை மிகுதியாலேற்பட்ட இயற்கைச் சோர்வும், நாடிழந்து வனம் புகுந்து வருந்தியதால் அவிழ்ந்ததுமாம். நீத்த-பெயரெச்சம் (இது காரணப் பொருளது; 'சங்குசுட்ட சுண்ணும்பு, ஓடிவந்த இளைப்பு, வீழ்ந்தகாயம் என்பவற்றிற் போலக்கொள்க. துயரோடும்என்பதில் உம்-இசை நிறைப் பொருளில் வந்தது. திரிவான், எரிவான் தெரிநிலை வினையாலணையும் பெயர்கள். கான்-கானகம் என்ற வடமொழித்திரிபு. செந்தீ என்பதில் தீக்குச் செம்மை இயற்கையடை; இனம்விலக்க வந்ததன்று; (நன்-பொது-௰) ஆம் சூத்திரம் பார்க்க-வாய் ஏழனுருபு இன்-சாரியை.

### நளன் அருகிற் செல்ல, வர பலத்தால் தீ அடங்குதல்.

324. தீக்கடவுள் தந்த வரத்தைத் திருமனத்தில்
ஆக்கி யருளா லரவரசை—நோக்கி
அடைந்தா னடைதலுமே யாரழலோ னஞ்சி
யுடைந்தான்போய்ப் புக்கா னுவந்து.

(இ-ள்) (அவ்வாறு பார்த்த நளன்) தீக்கடவுள்-அக்கினிதேவன், தந்த-தனக்குக் கொடுத்த, வரத்தை-வரத்தினை, திரு-சிறப்புற்ற, மனதில் ஆக்கி-மனதிலே கொண்டு, அருளால்-கிருபையுடனே, அரவு அரசை-அந்தச்சர்ப்பராஜனை, நோக்கி-(மேற்கூறியவாறு நோக்கியதோடு மேலும் அவனுடல் குளிரும்படி) பார்த்து, அடைந்தான்-அவனருகிற் போய்ச்சேர்ந்தான், அடைதலுமே-அவ்வாறு சேர்ந்த மாத்திரத்திலே, ஆர்-நிறைந்த, அழலோன்-அக்கினி வடிவமாகிய தீக்கடவுள், அஞ்சி-பயந்து, உடைந்தான்-மன வுறுதி கெட்டவனாய், உவந்து-(நளனது மனவுறுதிக்கும் அருட்டிறததுக்கும்) மகிழ்ந்து, போய்-அவ்விடத்தைவிட்டு அப்புறஞ் சென்று, புக்கான்-சேர்ந்தான், (அதாவது; அவ்வரசனைவிட்டு விலகிப்போய் விட்டான்; [எ-று.]

நளன் தன்பொருட்டுத் தமயந்தியிடம் தூது சென்றதற்கு மகிழ்ந்து அக்கினி முன்னே அவனுக்கு வரங்கொடுத்திருந்தானாதலின்; அவன், பாம்பை அக்கினியினின்றும் விலக்கிக் காக்கக் கருதிச் சென்றதற்கு மாறாகத் தான் நடக்கலாகாதெனக் கருதி இங்ஙனம் அந்நளன் சமீபத்திற் சென்ற மாத்திரத்தில் விலகிவிட்டான். அக்கினி அஞ்சியதாவது: தான் கொடுத்த வரத்தைக் கருதாமல் விரோதஞ் செய்தால் பாவம் வருமென்று பயந்தான். மனத்திற்குத் திரு ஆபத்துக் காலத்திலும் நல்ல சிந்தனை நீங்காதிருத்தல்.

ஆக்குதல்-உண்டுபண்ணல்; அஃது இங்கே கொள்ளுதற் பொருளில் நின்றது. உடைந்தான்-முற்றெச்சம்; இனி இதனை வினைமுற்றாகக் கொண்டு, "அழலோன் அஞ்சி உடைந்தான் போய்ப்புக்கான் உவந்து" என்ற தொடருக்கு, "அக்கினிதேவன் பயந்து மனந்தளர்ந்து விலகினான்; அது கண்டு நளன் சந்தோஷித்து அருகிற்போய்ச் சேர்ந்தான்" எனப்பொருள் விரிப்பினும் அமையும். நளன் முதலில் அரவரசைச் சாதாரணமாகப் பார்த்தான், பின்னர் அக்கினியில்தகிக்கப்படும் அவன் குளிர்ச்சியடையவேண்டுமென்று அவ்வக்கினி கொடுத்த வரத்தைச்சிந்தித்து நோக்கினான் அடைதலும்-உம்மீற்று இறந்தகாலவினையெச்சம்; இதில் து, அல்-சாரியைகள்; இதனீற்றில் வந்த ஏகாரம் விரைவுப்பொருளது. ஆர்அழலோன்-வினைத்தொகை; இதனை, 'தணிதற்கரிய அழலோன்' எனப்பொருள் விரிப்பின் இது பண்புத்தொகையாம்; அங்ஙனங்கொள்ளுமிடத்து, அருமை யென்னும் பண்புப் பெயர், மையீறுகெட்டு, ஆதிநீண்டு, இடைஉகரங்கெட்டு, ஆர் என நின்றதென்க. புக்கான் என்பதில், 'புகு' என்ற குறிலிணைப்பகுதி ஒற்றிரட்டி இறந்த காலங் காட்டிற்று. இனி 'தீக்கடவுள் தந்த வரத்தை' என்பதிலுள்ள அத்துச்சாரியைத்தள்ளி இதனை, 'வரந்தந்த தீக்கடவுளை' எனமாற்றி, "தீக்கடவுள் தந்த வரத்தைத் திருமனத்தில்ஆக்கி அருளால் அரவரசைநோக்கி அடைந்தான்" என்ற தொடருக்கு, "முன்னே தனக்கு வரமளித்த அக்கினிதேவனை மனத்தில்சிந்தித்து அவனருளால் சர்ப்பராஜனிடம் சேர்ந்தான்" எனப்பொருள் கோடலுமொன்று. இங்ஙனங்கொண்டு மற்றவற்றைச்சேர்த்து முடிக்கலாம். "முன்பொருகாலத்தில் தனக்கு வரங்கொடுத்தருளிய பழைய சிநேகத்தைப் பாராட்டி நளன் அக்கினியின் சமீபத்திற்சேர, அத்தீக்கடவுள், தனக்கவன் தூது சென்றது குறித்தும், தான் அவனுக்கு வரங்கொடுத்தது கருதியும் அவன் விஷயத்தில் தாக்ஷிணியங்கொண்டு தணிந்தான்" என்பது இவ்வுரையிற் பொதிந்துள்ள தெளிந்த கருத்தாம்.

இங்குக் கூறியபடி நளன் அருகில் வந்தவுடன் தான் தணிந்து போவதாக அக்கினி, வரங்கொடுத்தானென்பது சரித்திரத்தில் கூறப்படவில்லை;

"அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
யெங்குநீ வேண்டினை மற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றா யெனவருணனுகண்ட லன்தருமன்
மற்றோனு மீந்தார் வரம்."

என்று கூறிய சுயம்வரகாண்டப் பாடலால், நளன்வேண்டியபோது நெருப்பைப் பெறும்படி அக்கினி தேவன் வரங்கொடுத்தா னென்பது மட்டுமே விளங்குகிறது. பாரதத்திலும் நளன் நினைத்தபோது நெருப்பைப் பெறும்படியாகவும் ஜ்யோதிர்லோகம் அடையும்படியாகவும் இருவரங்களை அக்கினி அவனுக்குக் கொடுத்தன னென்னும் விவரமே கூறியுளது. நைடதத்திலும்,

"மிடல்கெழு மேழக மேற்கொளு மோலோன்
உடைதிரை வேலையி னின்னமு தொப்ப
மடிதலில் வெங்கன லின்றியும் வாளா
அடிசி லடுந்தொழில் விஞ்சை யளித்தான்"

என்று அந்நூலாசிரியர், "நளனுக்கு நெருப்பின்றிச் சமயல் செய்யும்வித்தையினை அக்கினி கொடுத்தான் என்னும் விவரத்தை விளக்கி யிருக்கின்றார். இவை இங்ஙன மிருப்பினும் இந்நூலாசிரியர் இங்கு, "தீக்கடவுள் தந்தவரத்தைத் திருமனத்தி லாக்கியடைந்தான் அடைதலுமே, ஆரழலோன் அந்தியுடைந்தான்" என்றதனாலும், நைடத நூலாசிரியர், "தழலருள் வரத்தால், எழுவினீள் கரத்தா லெடுத்தழற் புறத்திட்டான்" என்று பின்னர் கூறியிருத்தலானும், அக்கினி மேற்கூறியபடி வரங்கொடுத்த காலத்தில், நளன் அருகில் வந்தவுடன் தான் தணிவதாகவும் வரமளித்தான் என்றும்; இவ்விஷயத்தை இவ்வாசிரியர்கள் முன்னே சுருங்கச் சொல்லல் என்னும் அழகு பற்றிச் சுருக்கிக்கூறிப் பின்னர், 'விளங்கவைத்தல்' என்னும் அழகு பற்றி விளங்கவைத்தாரென்றும் கொள்ளவேண்டும். இனி இதனை, 'உரைத்துமென்றல்' என்ற தந்திர வுத்தியின் பாற்படுத்தி, முன்னே சொல்ல வேண்டியவிடத்துச் சொல்லாமல் சுருக்கி இவ்விடத்திற் சொல்லி இதனால் அவ்விஷயத்தை ஆசிரியர் பெறவைத்தாரெனக் கோடலு மொன்று; இங்ஙனம் ஆசிரியர்கள் நூல்களில்கூறும் மரபுண்டு. இஃதன்றியும், "அங்கியமுதநீர்.." என்ற பாடலில், "நீ வேண்டிய விடத்தில் நெருப்பைப் பெறுவாய் என்று வரமளித்தான்" என்றதில் அருத்தாபத்தியால், "நீ வேண்டாத விடத்து நெருப்பு நீங்கப் பெறுவாய்" என்பது தானே அமையும். ஆதலின், இதுபற்றியும் அக்கினி வேண்டாதபோது தணிவதாகவும் வரங்கொடுத்தா னென்பது அமையும் பாரதத்திலும் நைடதத்திலும் உள்ளவற்றிற்கும் இக்கருத்தே.

கார்க்கோடகன் தன்னைக் காக்கும்படி நளனை வேண்டல்.

325. வேத முனியொருவன் சாபத்தால் வெங்கானில்
ஆதபத்தின் வாய்ப்பட் டழிகின்றேன்—காதலால்

வந்தெடுத்துக் காவென்றான் மாலை மணிவண்டு
சந்தெடுத்த தோளானைத் தான்.

(இ-ள்) (அவ்வாறு நளன் பார்த்ததும் அக்கினி தேவன் நீங்கின தருணத்தில் அந்த நாகராஜன்) மாலை-மலர்மாலையிலே, மணி-அழகிய, வண்டு-வண்டுகள், சந்து-இசையை, எடுத்த-உயர்த்திப் பாடிய, தோளானை-புயங்களையுடைய நளனை, (நோக்கி) ஒருவேத முனிவன்-வேதத்தை யுணர்ந்த ஒரு முனிவன், (இட்ட) சாபத்தால்-சாபத்தினால், வெம்-வெவ்விய, கானில்-இக் காட்டில், ஆதபத்தின்-அக்கினியின், வாயப்பட்டு-இடத்திலகப்பட்டு, அழிகின்றேன்-நான் கெடுகின்றேன், (ஆதலால் நீ) காதலால்-அன்போடு, வந்து-என் சமீபத்தில் வந்து, எடுத்து-என்னைத் தூக்கி, கா என்றான்-காப்பாற்றக் கடவாயாக என்று சொன்னான்; [எ-று.]

நளனைச் சமீபத்திற் கண்டவுடனே கார்க்கோடகன், தனக்குற்றத்தைக்கூறித் தன்னைக் காப்பாற்றும்படி வேண்டினான். அந்தச் சர்ப்பராஜனுக்கு ஒரு முனிவனிட்ட சாபத்தால் இத்தீங்கு நேர்ந்தது.

சாபம்-பெரியோர் சீற்றமொழி. வெம்-மையீறுகெட்ட பண்புப்பெயர்; பெயரெச்சமுமாம். ஆதபம்-வடசொல்; ஆதபம் என்பதற்குச் சூடு என்பது நேர் பொருள்; இஃதாகு பெயராய் இதனையுடைய நெருப்பை யுணர்த்திநின்றது. தோளில் மாலை அணியப்பட்டிருக்கும்; அதில் தேனையுண்ணற்கு வண்டுசேர்ந்து பாடும்; 'வண்டு சந்தெடுத்ததோள்' என்பதிலுள்ள, 'எடுத்த' என்னும் பெயரெச்சம் காரணப் பொருளது; 'சந்தெடுத்ததோள்' என்பது, 'சங்கு சுட்ட சுண்ணாம்பு' என்பதுபோல அமைந்தது. தான்-அசை. "மாதர் முலைக்குவட்டின் சந்தெடுத்த தோளான்" எனவும் பாடபேதமுண்டு.

தன்னை அக்கினியி னின்று மெடுத்து வெளியில்
விடும்படி கார்க்கோடகன் நளனை வேண்டல்.

326. சீரியாய் நீயெடுப்பத் தீமை கெடுகின்றேன்
கூறுந் தழலவித்துக் கொண்டுபோய்ப்—பாரில்
விடுகென்றான் மற்றந்த வெந்தழலால் வெம்மைப்
படுகின்றான் வேல்வேந்தைப் பார்த்து.

(இ-ள்) (மேலும்) அந்த வெந்தழலால்-அந்த வெவ்விதாகிய அக்கினியினால், வெம்மைப்படுகின்றான்-வெப்பத்தை யடைந்து கொண்டிருக்கின்றவனான கார்க்கோடகன், வேல்-வேலாயுதத்தைத் தரித்த, வேந்தை-நளமகாராஜனை, பார்த்து-நோக்கி, சீரியாய்-சிறப்புள்ளவனே!, நீ யெடுப்ப-நீஎன்னை இந்த அக்கினி யின்றும் எடுப்பதனால், தீமை கெடுகின்றேன்-ஏற்பட்டதுன்பம் நீங்கப்பெறுவேன், (ஆதலால்) உறும்-மிகுதியாகின்ற, தழல்-நெருப்பை அவித்து-தணித்து, கொண்டு போய்-என்னை எடுத்துக் கொண்டு போய்,

பாரில்-வெற்றிடமாகிய வேறுபூமியில், விடுக என்றான்-விடுவாயாகவென்று சொல்லி வேண்டினான்; [எ-று.]

முன்னே நளனை நோக்கி என்னைக் காப்பாயாக என்ற நாகராஜன் மீண்டும் நீ அக்கினியினின்றும் எடுப்பாயானால் என்னுடைய துன்பம் நீங்கும்; ஆதலால் நீ இந்த அக்கினியை அவித்து என்னை இவ்விடத்தினின்றும் எடுத்துக் கொண்டு போய் வேற்று இடத்தில் விடுவாயாக என்று கூறினான் என்பது இதன்கருத்து "நீ யெடுப்பத்தீமை கெடுகின்றேன்" என்றதுஇரட்டுற மொழிதல் என்னும் யுக்தியால் எனது கொடிய சாபம் நீங்கப் பெறுவேன் என்ற பொருளையும், இக்காட்டுத் தழலால் உண்டான தீமை நீங்கப் பெறுவேன் என்னும் பொருளையும் ஒருங்கே உணர்த்தி நின்றது; நாகராஜன் ஒரு முனிவனிட்ட சாபத்தால் இத்தீமைக் குள்ளாயினான் என்பது இந்நூல் 325-ம் செய்யுளால் உணரப்படும்.

கெடுகின்றேன்-இது தெளிவினால் எதிர்காலம் நிகழ்காலமாக மாறி வந்த காலவழுவமைதி. சீரியாய்-சீரியான் என்பதன் ஈறுதிரிந்தவிளி; இதில் இ-சாரியை. 'தீமைகெடுகின்றேன்' என்றதில் தீமை என்ற அஃறிணைச் சொல் 'கெடுகின்றேன்' என்ற உயர்திணைத் தன்மை ஒருமை முற்றைக் கொண்டது; இது தொடர்புபற்றிச்சார்த்தி முடிக்கப்பட்டதனாலாகிய திணை வழுவமைதி; "உயர்திணை தொடர்ந்த பொருள முதலாறும் அதனொடுசார்த்தினத்திணை முடிபின" (நன்-பொ-உகூ) என்பது விதி. கூறும் என்ற தெரிநிலைப்பெயரெச்சத்தில் பிருதியை யுணர்த்தும் உரிச்சொல்லாகிய கூர்-பகுதி, விடுகென்றான்-என்பதில் அகரம் தொக்கது. அந்த-அகரசுட்டின்மருஉ படுகின்றான்-வினையாலணையும் பெயர். வேல்-வெல்வது; இது காரணக்குறி. வேந்து-உயர்திணைப் பொருள் தரும் அஃறிணைச் சொல்; அரசு, அமைச்சு, தூது, ஒற்று என்பனவும் இதுபோன்றனவே யாம் பார்த்து-வினையெச்சம்.

நளன் கார்க்கோடகனை எடுத்துச்
செல்லுதல்.

327\. என்றுரைத்த வவ்வளவி லேழுலகுஞ் சூழ்கடலும்
குன்றுஞ் சுமந்த குலப்புயத்தான்—வென்றி
அரவரசைக் கொண்டகன்றா ணரணியந் தன்னில்
இரவரசை வென்றா னெடுத்து.

(இ-ள்) என்று உரைத்த-என்று கார்க்கோடகன் சொன்ன, அளவில்-அந்தக் காலத்தில், எழு உலகும்-சப்த தீவுகளையும், சூழ்-அவற்றைச் சூழ்ந்த கடலும்-சப்த சமுத்திரங்களையும், குன்றும்-மலைகளையும், சுமந்த - தாங்கிய, குலம்-மேன்மையாகிய, புயத்தான்-புஜங்களையுடையவனும், இரவு அரசை இராத்திரிக்கு அரசனான சந்திரனை, வென்றான்-(தன் முககாந்தியினாலும்

எல்லோரையும் மகிழ்வித்தலாலும்) ஜெயித்தவனுமான நளன், வென்றி-வெற்றிபெற்ற, அரவு அரசை அந்த சர்ப்பராஜனை, எடுத்துக்கொண்டு தூக்கிக்கொண்டு, ஆரணியந்தன்னில்-அந்தக் காட்டில், அகன்றான் - அவ்விடத்தைவிட்டு நீங்கிப்போயினான்; [எ-று]

அவ்வளவில் எடுத்துக் கொண்டு அகன்றான் என இயைக்க. நளன் சப்ததீவுகளையும் கடல்களையும் மலைகளையும் தோள்களால் சுமத்தலாவது அவற்றிலுள்ள உயிர்களை யெல்லாம் தன்தோள் வல்லமையால் பகைகடிந்து பாதுகாத்தலாம்; இங்ஙனமே "பன்னகஞ் சுமந்த வைப்போர் தோளினிற் பரிக்குமன்னர் மன்னன்" என்று நைடத ஆசிரியருங் கூறினார். சப்த தீவுகளாவன—ஜம்பு, பிலக்ஷம், சால்மலி, குசம், கிரௌஞ்சம், சாகம், புஷ்கரம், என்பனவாம்; இவை முறையே, உப்பு, கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், சுத்தஜலம் என்பவற்றின் மயமான எழு கடல்களாற் சூழப்பட்டன என்று புராணங்கூறும். ஏழ் என்பதைக் குன்றுக்கும் கூட்டலாம்; எழு பர்வதங்களாவன: கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏமகூடம், நீலகிரி என்பனவாம்; இவைகள் சப்தகுல பர்வதங்களென்றுஞ் சிறப்பித்துக்கூறப்படும். "ஏழுலகம் சூழ்கடலும் குன்றுஞ் சுமந்த குலப்புயத்தான்" என்பது நளன் உலகமுழுவதிலும் தனியரசாட்சி செலுத்திய சக்கரவர்த்திஎன்பதை விளக்கும். குலம் என்பது இலக்கணையால் உயர்வுக்கு ஆயிற்று. சந்திரன் இராக்காலத்தில் மிகுந்து பிரகாசிப்பவனாதலால் "இளவரசு" எனப்பட்டான். நளன் துன்பங்களை யடைந்த அக்காலத்தும் சந்திரனுக்குமேற்பட்ட அவனுடைய முகதேஜஸானது குறையாமல் விளங்கிற்று; அது குறித்தே ஆசிரியர் அவனை 'சந்திரனை வென்றான்' என்றுரைத்தனர்.

லோகம், புஜம், இராஜா, அரண்யம், ராத்ரி என்ற ஆரிய மொழிகள் உலகு, புயம், அரசு, ஆரணியம், இரா என விகாரப்பட்டு வந்தன. வென்றி-தொழிற் பெயர்; வெல்-பகுதி, றி-விகுதி, லகரம் னகரமானது - சந்தி விகாரம். அகன்றான் என்ற முற்றில் அகல்-பகுதி. ஆரணியந்தன்னில் என்பதில் தன்-சாரியை. வென்றான்-வினையாலணையும் பெயர்.

**பின்னரும் கார்க்கோடகன் நளனை
வேண்டியது.**

328. மண்ணின்மீ தென்றனைநின் வன்றாளா லொன்றுமுதல்
எண்ணித் தசவென் றிடுகென்றான்—நண்ணிப்போர்
மாவலான் செய்த உதவிக்கு மாறாக
ஏவலாற் றீங்கிழைப்பே னென்று.

(இ-ள்.) (அவ்வாறு நளன் கார்க்கோடகனை எடுத்துச் சென்றபோது அவன்) போர்-யுத்தத்தில், மா-யானையைப்போல, வலான்-வல்லமை யுடையவனான நளன், நண்ணி-சமீபத்தில் சேர்ந்து, (என்னிடத்தே அன்பு

கொண்டு) செய்த-இயற்றிய, உதவிக்கு-உபகாரத்திற்கு, மாறாக-எதிராக ஏவலால்-அவனுடைய கட்டளையினால், தீங்கு-தீமையை, இழைப்பேன் அவனுக்குச்செய்வேன், என்றேன்-என்றுநினைத்து, (நளனைநோக்கி), நின்-உன்னுடைய, வல் தாளால் வலிமையான பாதங்களினால், (அதாவது அடிகளை எடுத்து வைப்பதனால்). ஒன்று முதல்-ஒன்றுமுதலாக, எண்ணி-அடி எண்ணிச்சொல்லி, (பத்தாவது அடிவந்தவுடன்) தசஎன்று தசஎன்று சொல்லி, மண்ணின்மீது பூமியின்மேல், என்தனை-என்னை, இடுக என்றான்-போடுவாயாக வென்று வேண்டினான்; [எ-று.]

நளனால் காட்டுத்தீயினின்றும் எடுத்துக்காப்பாற்றப்பட்ட கார்க்கோடகன், அவனுக்குப் பிரதிஉபகாரஞ் செய்ய விரும்பி, "இந் நளனோ தன் இயல்பு குன்றி எங்கேனும் தங்கி ஜீவிக்கும் பொருட்டுப் பரதேசி போலச் செல்கின்றானாதலின், இவன் இந்த இராஜ வடிவத்தோடு சென்றால் பகையரசரால் இவனுக்குத் தீங்குண்டாகும்; மேலும் இவனை எவரும் அடிமையாளாகச் சேர்க்கமாட்டார்கள்; அதனால் இவனுடைய ஜீவனத்துக்குங் கஷ்டமுண்டாகும்; ஆதலின் இவனைக் கடித்து நம்முடைய விஷத்தால் இவனுடைய உருவத்தை மாற்றிவிட்டால் அது இவனுக்கு இக்காலத்தில் எதற்கும் அனுகூலஞ் செய்வதாயிருக்கும்; பின்னர் இவனுக்கு இக் கஷ்டகாலம் நீங்கும்போது வேண்டுமானால் இப்போதேற்படும் விகாரரூபத்தை மாற்றிவிடலாம்" என்று கருதினான். அவன எண்ணப்படியே அது ஒருவகையில் நன்மையான காரியமாயிருந்தாலும் மற்றொரு வகையில் தீங்குடையது போல் தோற்றுவதால் அதை ஒருவகைத் தந்திரத்தால் நளனுடைய சம்மதத்தைப் பெற்றுக்கொண்டு செய்தால் தீங்காகாது என்று அக்கார்க்கோடகன் கருதினான். அதனாலேயே அவன் நளனிடத்தில் "ஒன்முதல் எண்ணித் தசவென்று இடுக" என்றான். 'தச' என்பது ஆரியத்தில் பத்து என்னும் எண்ணுப் பெயரும், 'கடி' என்னும் பொருளைத் தரும் ஏவல் ஒருமை வினைச்சொல்லுமாகும். ஆதலின் நளன் தச என்று சொன்னமாத்திரத்தில் கடி என்னும் பொருளை அனுசரித்து அவன் ஏவலைப்பெற்றதாகப்பாவித்து அவனைக் கடிக்கலாமென்பது கார்க்கோடகன் கருத்து. இவ்விருவருக்கும் கீர்வாண பாஷையிலேயே சம்பாஷணை நடந்ததாதலின் அப்பாஷையில் உள்ளபடியே ஒன்று முதல் பத்துவரையில் உள்ள எண்களை ஏக, த்வி, த்ரி, சது, பஞ்ச, ஷட், ஸப்த, அஷ்ட, நவ, தச என்று முறையே சொல்லி அடி எண்ணித் தச என்பது வந்தவுடன் தன்னைக் கீழே போட்டுவிடும்படி கார்க்கோடகன் வேண்டினானென்க. நளன் பாதத்திற்கு வன்மையாவது அதில் விழுந்து அடைக்கலம் புகுந்தவர்களைப் பாதுகாக்குந் திறனும்.

'போர் மாவலான்' என்பதற்கு போர்க்குரிய குதிரையை அல்லது யானையை நடத்துதலில் வல்லவனென்றும், போர்க்குரிய குதிரையை அல்லது யானையையுடைய வல்லமை பெற்றவன் என்றும் வேறுவகைப் பொ

ருள்களும் உரைக்கலாம்; நளன் அச்வஹ்ருதயம் என்கிற குதிரை வித்தையி லும் தேர்ந்தவனாதலின் அவனைக்குதிரையை நடத்துதலில் வல்லவன் என் றலே மிகவுஞ் சிறப்புடைத்து. 'மா' என்ற மிருகப் பொதுப்பெயர் இங்குச் சிறப்பினால் யானையையும் குதிரையையும் உணர்த்திநின்றது. 'யானையு டைய படை காண்டல் முன் இனிதே' "படைதனக் கினியானை வனப்பா கும்" என்றபடி யானை சேனைக்குச் சிறந்து நிற்றலால் அதனைப் 'போர்மா' என்றும், குதிரை நால்வகைச் சேனைகளுள்ளும் தான் ஓர் அங்கமாவதன்றி மற்றோர் அங்கமாகிய தேரினையும் நடத்தத்தக்க கருவியாயும் இருத்தலால் அதனையும் "போர்மா" என்றும் ஆசிரியர் கூறினார். என்தனை என்ப இல் தன் சாரியை. நண்ணி-இரட்டுற மொழிதல். பேர்-பொரு என்ற முத னிலை திரிந்த தொழிற் பெயர். உதவி-இகரவிகுதி பெற்ற தொழிற்பெயர். மாறு-எதிர்; அதாவது: ஈடு. நீங்கு-குவ்விகுதி பெற்ற பண்புப்பெயர் இடு கென்றான் என்பதில் அகரந் தொக்கது தொகுத்தல் விகாரம்.

### சர்ப்பராஜன் சொல்லியபடியே நளன் தசவென்று சொல்லுதலும் அவன் நளனைக் கடித்தலும்.

329. ஆங்கவன்றா னவ்வா றுரைப்ப வதுகேட்டுத்
தீங்கலியாற் செற்ற திருமனத்தான்—பூங்கழலை
மண்ணின்மேல் வைத்துத் தசவென்று வாய்மையால்
எண்ணினான் வைத்தான் எயிறு.

(இ-ள்.) ஆங்கு-அவ்விடத்தில், அவன்-அந்தக் கார்க்கோடகன், அவ் வாறு-அவ்விதமாக, உரைப்ப-சொல்ல, அது கேட்டு-அந்த வார்த்தையைக் கேட்டு, (அதன்படியே செய்யத்துணிந்தவனாய்) தீகலியால்-தீங்குள்ள கலி புருஷனால், செற்ற வெல்லப்பட்ட, திரு-சிறப்புள்ள, மனத்தான்-மனத்தையு டையவனாகிய நளன், பூகழலை-அழகிய தனது பாதங்களை, மண்ணின்மேல் வைத்து பூமியின்மேல் வைத்து அடி அளந்து, வாய்மையால் வாயினாலே, தச என்று எண்ணினான்-தச என்று கணக்கிட்டுச் சொன்னான்; (அவ்வாறு தசவென்று சொன்னவுடனே (கார்க்கோடகன்) எயிறு-தன்னுடைய பற் களை, வைத்தான்-நளனுடைய தேகத்தில்சேர்த்தான் (அதாவது) பற்களால் அந்த நளமகாராஜனைக் கடித்தான்; [எ-று.]

காட்டுத்தீயினிடைப்பட்டுத் துடித்து வருந்திய கார்க்கோடகனை அதி னின்றும் நீக்கி எடுத்து நளன் பூமியிலிடப் போகுந்தருணத்தில் அவன் தந் திரமாகத் 'தச என்று சொல்லி இடு' என்றதை நளன் ஆலோசித்து 'இவன் என் இப்படிச் சொல்லச் சொல்கின்றான்; இதில் ஏதோ சூது இருக்கின் றது' என்று அதிலுள்ள நுட்பத்தை அறியக்கூடியவனாயிருந்தும் கலி அவ னுடைய மனதைத் தன் வசப்படுத்தி மயக்கத்துக் குள்ளாக்கியிருந்தமை

யின் அறியாமற்போயினன். இதுபற்றியே ஆசிரியர் அவனை இங்குத் 'தீங் கலியாற் செற்ற திருமனத்தான்' என்று கூறினர்.

ஆங்கு-அங்கு என்றதின் நீட்டல். 'தீக்கலி' என்பது செய்யுள் விகாரம் பற்றி மெலித்தலாய்த் 'தீங்கலி' என வந்தது. இது எதுகைப் பொருத்தத்தை நோக்கி வந்ததென்க. செற்ற-பெயரெச்சம், இதில் செறு-பகுதி, ஒற்று இரட்டி இறந்தகாலங்காட்டிற்று. 'பூக்கழல்' என்பது அழகாகிய பாதம் எனப் பொருள் கொள்ளுமிடத்துப் பண்புத் தொகையும், அழகையுடைய பாதம் எனக்கொள்ளுமிடத்து இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகையும், மலர்களிற்சிறந்த தாமரைமலர்போன்ற பாதம் எனக்கொள்ளுமிடத்து உவமைத்தொகையும் ஆம். பூ+கழல்=பூங்கழல்; பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்" (நன்-உயி-பு-௫0) என்ற சூத்திர விதிப்படி பூப்பெயர் முன் என மெல்லெழுத்து தோன்றிற்று. "வாய்மை" என்பதில் மை பகுதிப்பொருள் விகுதி; இதற்கு வாய் என்று பொருள்; இனி வாய்மையால் என்பதற்குச சத்தியத்தினல் எனப்பொருள் கோடலுமுண்டு; சத்தியமாவது கபடமில்லாதிருத்தலாம். தான்-அசை.

பாம்பு கடித்தலால் நளனது உடம்பு விகாரப்படுதல்.

320. வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா
வாம நெடுந்தோள் வறியோருக்—கேமங்
கொடாதா ரகம்போற் குறுகிற்றே மெய்ம்மை
விடாதான் றிருமேனி வெந்து.

(இ-ள்) அவ்வாறுகார்க்கோடகன் நளனைக்கடிக்கவே) மெய்ம்மை-சத்தியத்தை, விடாதான்-கைவிடாதவனுகிய அந்நளனுடைய, திருமேனி-அழகிய தேகம், வெந்து எரிந்து, வீமன்-வீமராஜனுடைய, மடந்தை-பெண்ணாகிய தமயந்தியின், விழி-கண்கள், முடிய-பூரணமாக, கண்டு அறியா-பார்த்துஅறியாத, வாமம்-அழகினையுடைய, நெடுந் தோள்-அந்நளனது நீண்ட தோள்கள், வறியோருக்கு தரித்திரர்களுக்கு, ஏமம் பொன்னை, கொடாதார்-கொடுக்காதவர்களுடைய, அகம்போல் வீட்டைப்போல (அதாவது வறுமையடையும் ஏழைகளுக்கு இரங்காதவர்கள் வீட்டில் நடக்கும் இல்வாழ்க்கையைப்போல), குறுகிற்று-குறுகிப்போயின; [எ-று.]

கார்க்கோடகன் நளனைக் கடித்தவுடனே அவனுடைய விஷத்தால் நளனது தேகம் வெந்து தோள்கள் சுருங்கின என்பது இதன் கருத்து. நளன் தோள்களை வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியாமையாவது அவற்றின் அழகைப்பார்த்தும் அளவிடமுடியாமையாம். இத்தகைய அழகிய தோள்களும் கார்க்கோடகன் கடித்தமாத்திரத்தில் சுருங்கின வென்ற

மையால் அவனுடைய விஷக்கொடுமையின் மிகுதிப்பாடு நன்கு விளங்கும். தரித்திரர்களுக்குப் பொன்னைக் கொடாத உலோபிகளின் இல் வாழ்க்கை குறுகுதலாவது புண்ணியம் குறைந்து பாபம் மிகுதலால் செல்வங் கெட அது தாழ்ந்துபோதலாம். நளனை 'மெய்ம்மை விடாதான்' என்றது அவன் புஷ்கரனோடு சூதாடிக் கலியின் வஞ்சனையினால் தோல்வியடைந்து ஐஸ்வரியங்களை யெல்லாமிழந்து நகரத்தைவிட்டு வெளியேறியபோது அந்நகர மாந்தர்கள் 'நீ எங்களை விட்டுப்போதல் கூடாது' என்று மறுத்தும் கேளாமல் "வேலை கரையிழந்தால் வேதநெறி பிறழ்ந்தால், ஞாலமுழுது நடுவிழந்தால் சீலம், ஒழிவரே செம்மை யுரைதிறம்பாச செய்கை, அழிவரோ செங்கோலவர்" என்று சொல்லித் தன்வாக்குப் பிசகாமல் சத்தியத்தை நிலைநிறுத்தினவனாய் அரசாட்சியை விட்டு நீங்கினமை முதலியவற்றைப் பற்றிக் கூறியதாம் என்க. இங்ஙனமே ஆசிரியர் இவனைப் "பொய்யடையாச் சிந்தைப் புரவலன்" என்பர். "வறியோர்க்கு ஏமங்கொடாதாரகம்போல்நெடுந் தோள் குறுகிற்று" என்றது உவமையணியாம்; ஆசிரியர் தாம் இயற்றும் நூல்களில் எவ்விதத்தினாலாவது நீதிகளை விளக்கிச் செல்லுதல் இயல்பாதலின் இங்குப் புலவரும் நளனுடைய உடம்பு விகாரமடைந்ததற்கு உவமை கூறியதன் மூலம் தரித்திரர்களுக்குப் பொன் கொடாத உலோபிகளின் வாழ்வு குறையும் என்ற நீதியை விளக்கிக்காட்டினார்.

வீமன்-பீமன் என்ற வடசொற்றிரிபு; பகைவர்க்குப் பயத்தைத் தருபவன் என்று காரணப்பொருள் தரும். தோள்-ஜாதியொருமை; ஆதற்கேற்பக் குறுகிற்று என்னும் ஒருமை முற்றைக் கொண்டது; இனித் தோள் என்பதை ஒருமையாகக்கொண்டு 'வாம நெடுந்தோள்' என்பதற்கு இடப் பக்கத்துத் தோள்' என்றுபொருள் கூறுவாருமுளர். வறியோர்-வறுமையையுடையவர், இதிலுள்ள பண்புப்பெயர், மையீறு கெட்டு இடைஉகரம் இகரமாயிற்று. ஏமம்-ஹேமம் என்ற வடசொற்றிரிபு. இதற்கு இன்பமென்றும் பொருள் கூறலாம். அகம்என்பது ஆகுபெயராய் அதிலுள்ள வாழ்க்கையையுணர்த்திநின்றது. வேக எனவரும் எச்சம் இங்கு வெந்து எனத் திரிந்து நின்றது. ஏ-ஈற்றசை; இரக்கப் பொருளதெனினுமாம்.

நளன் கார்க்கோடகனை நோக்கி
'நீ என்னைக் கடித்தது எதன்பொருட்டு'
என்று வினவுதல்.

331. ஆற்ற லரவரசே யாங்கென் னுருவத்தைச்
சீற்றமொன் றின்றிச் சினவெயிற்றால்—மாற்றுதற்கின்
றென்கா ரணமென்று னேற்றமரிற் கூற்றழைக்கும்
மின்கா லயின்முகவேல் வேந்து.

(இ-ள்.) (அவ்வாறானவுடனே) ஏற்று-(பகைவர்களை) எதிர்த்து,அமரில்-போரில்,கூற்று-எமனை அழைக்கும்-(அவர்களின் உயிரைக்கொண்டுபோதற்

பொருட்டு) அழைக்கின்ற, மின்கால்-மின்னல் போன்ற ஒளியைக் கக்குகின்ற, அயில்முகம்-கூர்மையான நுதி பொருந்திய, வேல்-வேலாயுதத்தையுடைய, வேந்து-நளமகாராஜன் (கார்க்கோடகனை நோக்கி), ஆற்றல்-வல்லமையுடைய, அரவு அரசே-சர்ப்பராஜனே, சீற்றம்-(என்மேல் ஏற்படும்) கோபம், ஒன்று இன்றி-சிறிதும் இல்லாமல், (அதாவது என்மேல் பகைஒன்றுமில்லாமலிருக்கும்போதே) சினம் எயிற்றால்-கொடுமையுள்ள விஷப்பல்லினால், இன்று-இப்பொழுது (கடித்து), என் உருவத்தை- என்னுடைய வடிவத்தை, மாற்றுதற்கு வேறுபடுத்துவதற்கு; என் காரணம்-காரணம் யாது, என்றான்-என்று அதனை நோக்கி வினவினான்; [எ-று.]

எனக்கும் உனக்கும் ஒரு பகையுமில்லாதிருக்கப் பகைகாரனுக்குச் செய்வதுபோல் நீ என்னைக்கடித்து உன்னுடைய விஷத்தினால் எனது வடிவத்தை ஏன் இங்ஙனம் மாற்றினாய் என்று நளன் கார்க்கோடகனை வினவினான் என்பது இதன்கருத்து. தன்னைக் 'கடி' என்றுசொல்லும்படி செய்து அதன்படியே கார்க்கோடகன் கடித்த தந்திரத்தை எண்ணி நளன் அக்கார்க்கோடகனை நோக்கி 'ஆற்றல் அரவரசே' என்றழைத்தான் என்க. உயர்ந்தோர் தாம் பிறர்க்குச்செய்த உதவியைத்தாமே கூறுதல் பெருந்தன்மையன்றாதலால் நளன் கார்க்கோடகனிடத்தில், 'நான் உனக்கு உயிருதவி செய்திருந்தும் நீ எனக்கு ஏன் இத்தகைய கொடிய காரியத்தைச் செய்தாய்' என்று தன் உபகாரத்தைக் குறிப்பிட்டுக் காட்டாமல் "சீற்றமொன்றின்றி என் உருவத்தை மாற்றுதற்கின்றென் காரணம்" என்று வினவினான். இதனால் நளன் தற்புகழ்ச்சியை விரும்பாதவன் என்பதுபெறப்படும். நாகத்தினது இயற்கையான சிறப்பை அதன் பல்லின்மேலேற்றிச் 'சினவெயிறு' என்றார் ஆசிரியர்; இங்ஙனங் கூறுவது உடையவனது பண்பைஉடைமையின் மேல் ஏற்றிக்கூறும் உபசார வழக்கெனப்படும். யுத்தத்தில் எதிரிகளைத் தவறாது கொல்லும் வேலாயுதமுடையான் என்பதை 'ஏற்றமரில் கூற்றழைக்கும் மின்கால் அயில்முகவேல் வேந்து' என்றார் புலவர்; சொல்லவேண்டிய கருத்தை இங்ஙனம் வேறுவகையாகச் சொல்வது பிறிதினவிற்சியணி வகையின் பாற்று எனப்படும்.

ரூபம், சமரம் என்ற ஆரிய மொழிகள் உருவம், அமர் எனச் சிதைந்து வந்தன. சீற்றம்-தொழிற்பெயர். இதில் சீறு-பகுதி, அம்-விகுதி. றகர ஒற்று மிக்கது விரித்தல் விகாரம். சினம்-தொழிற்பெயர்; இதில் சின-பகுதி, அகரம்கெட்ட அம்-விகுதி; இது பகைக்கும் உக்கிரத்துக்கும் ஆகு பெயராம். இன்றி-எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம். இன்று நிகழ்காலம் உணர்த்தும் இடைச்சொல். எற்றுஎன்பதில் எல்-பகுதி. கூற்று-பிராணிகளின் உடலையும் உயிரையும் வெவ்வேறாக்குபவன். 'ஏற்றமரிற் கூற்றழைக்கும்' என்ற தொடர் பிராசம் என்னுஞ் சொல்லணியுடையதாம். கால்-வினைத்தொகை. என்-எவன் என்னுங் குறிப்புமுற்றின் திரிபு. ஆங்கு-அசை.

கார்க்கோடகன் நளனைக்
கடித்ததற்குத் தக்க காரணங்
கூறுதல்.

332. காயுங் கடகளிற்றாய் கார்க்கோ டகனென்பேர்
நீயிங்கு வந்தது யானினைந்து—காயத்தை
மாறாக்கிக் கொண்டு மறைந்துறைதல் காரணமா
வேறாக்கிற் றென்றான் விரைந்து.

(இ-ள்) (அவ்வாறு நளன் வினவியவுடன் கார்க்கோடகன் அவனை நோக்கி) காயும்-கோபிக்கின்ற, கடம்-மதம்பொருந்திய, களிற்றாய்-யானையுடையவனே, என்பேர்-என்னுடைய நாமமானது, கார்க்கோடகன்-கார்க்கோடகன் என்பதாகும், யான்-நான், நீ இங்குவந்தது-நீ இவ்விடத்திற்கு வந்த காரணத்தை, நினைந்து-எண்ணி, காயத்தை-உன்னுடைய தேகத்தை, மாறாக்கிக்கொண்டு-வேறாகமாற்றிக்கொண்டு, மறைந்து-ஒளிந்து, உறைதல் காரணம்ஆ-நீ வாசஞ்செய்யும் பொருட்டாக, விரைந்து-விரைவுகொண்டு, (நான் உன்னைக்கடித்து) வேறு ஆக்கிற்று-(உன்வடிவத்தை) வேறாக்கியது, என்றான்-என்று கார்க்கோடகன் கூறினான்; [எ-று.]

மேற்கூறியபடி வினவிய நளனுக்குக் கார்க்கோடகன் "நீ என்னுயிரைக் காப்பாற்றி எனக்கு மிக்க உபகாரமே செய்தாய்; அத்தகைய நினக்கு நான் அபகாரஞ் செய்யத்துணியேன்; நான் இவ்வாறு செய்ததற்குத் தக்க காரணமுண்டு இது என்றாற்செய்யப்பட்ட பிரதி உபகாரமேயாகும். எங்ஙனமெனில் பகைவரை ஜெயித்து சக்கரவர்த்தியாய் உலக முழுவதையும் ஆட்சிபுரிந்த நீ கெட்டகாலத்தால் ஐஸ்வரியத்தைக் கைவிட்டு இவ்வாறு திரியும்போது உனது உண்மை வடிவத்துடன் சஞ்சரிப்பாயானால், உனக்குப் பகைவர் தீங்கு செய்வர். மேலும் நீ எவ்விடத்திற்கும் செல்ல நாணுவாய். நீ உருவம் மாறித்திரிந்தால் நினக்கு அத்தீங்கும் நாணமும் ஏற்படமாட்டா. ஆதலின் உனக்கு அவ்விரண்டும் நேராதிருக்கும் பொருட்டே நான் இவவாறு உன்னைக் கடித்து, உன்னுடைய உருவத்தை மாற்றினேன் என்றான்" என்பது இதன் கருத்து. 'நீ இங்குவந்தது யான் நினைந்து' என்பதற்குப் 'உன் வரலாற்றை நான் அறிந்து' என்பது பொருளாம். இனி இதற்கு 'நீ என்னிடத்தே கருணைகொண்டு உதவி செய்ததை எண்ணி, எனவும் வேறொரு பொருளுரைக்கலாம்.

'யான்' என்னும் எழுவாய் 'வேறாக்கிற்று' என்னுந் தொழிற்பெயரைப் பயனிலையாகக் கொண்டது; இவ்வாறு வரும் முடிபை 'பாவேப்ரயோகம்' என்பர் வடநூலார்; அதாவது: கர்த்தாப்பெயர் தொழிற்பெயரால்முடிவது இனி 'வேறாக்கிற்று' என்பதை எழுவாயாகக்கொண்டு 'ஆம்' என்னும் பயனிலை வருவித்துரைத்து முடித்தலுமுண்டு. யான் நினைந்து வேறாக்கிற்று என இயையும். ஆக்கிற்று-பிறவினை இறந்தகாலத் தொழிற்பெயர்; இதில்

'று' விகுதி. "யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்ற நாலடிச் செய்யுளடியின்படிஅடங்காக் கோபமுடைத்தாய் உட்பகையை விடாதிருத்தல் யானையின் இயல்பாதலால் அதற்கு 'காயும்' என்ற அடைமொழி சேர்க்கப்பட்டது. கடம்-வடசொல்; இது யானைக் கன்னத்தின் பெயர், இடவாகு பெயராய் அதினின்றும் ஒழுகும் மதநீரை உணர்த்தி நின்றது. 'கடகளிறு' என்பதில் நிலைமொழி ஆரியசசொல்லாதலின் வருமொழிமுதல் மிகாது இயல்பாயிற்று. களிறு-யானையின் ஆண்பாற் பெயர்; பிடி. களி, மதக்களிப்பு, அதனை உடையது களிறு; இதிலுள்ள று-பெயர் விகுதி. நால்வகைப் படைகளுள்ளும் யானைப்படை சிறந்ததாதலின் அதனை உடைத்தாயிருத்தலையே சிரேஷ்டமாகப் பாவித்து நளனைக் 'களிற்றாய்' என விளித்தான் கார்க்கோடகன். இனிக் "காயுங்கடகளிற்றாய்"என்பதற்கு 'மறவாது கோபங்கொள்ளுகின்ற மதயானையை நிகர்த்தவனே" என்றும் பொருள் உரைக்கலாம். கோபத்தை மறைக்கவேண்டிய போது மறைத்து வெளிப்படுத்துதல் அரசரின் இயல்பு. ஆகலின் இங்கு அத்தகைய குணமுடைய மதமானை நளமகாராஜனுக்கு உவமை கூறப்பட்டதென்க; நைடதத்திலும் அந்நூலாசிரியர் "திருகுவெண்களிறனைய சீற்றத்தான்" என்றார். இங்ஙனம் யானையின் குணத்தைப் பொருந்தி யிருத்தல் அரசநீதிகளுள் ஒன்றாம் "பொள்ளென வாங்கேபுறம் வேரார் காலம்பார்த் துள்வேர்ப்ப ரொள்ளியவர்" என்ற திருக்குறள் செய்யுளால் இஃதுணரப்படும் இன்னும் களிற்றாய் என்பதற்கு வலிமையிலும் கம்பீரமான நடையிலும் யானை போன்றவனே என்றுரைத்தாலும் பொருந்தும். 'களிற்றான்' என்பதன் ஈறுதிரிந்து 'களிற்றாய்' என விளியாயிற்று. பேர்-பெயர் என்பதன் மரூஉ.'வந்தடியான்' என்பதிலுள்ள இகரம் குற்றியலிகரமெனப்படும் காயம், காரணம் என்பன தற்சம வடசொற்கள். ஆ-ஆக என்பதன் திரிபு.

**நளனுக்குக் கார்க்கோடகன் இரண்டு ஆடைகள் கொடுத்தல்.**

323. கூனிறால் பாயக் குவளை தவளைவாய்த்
தேனிறால் பாயுந் திருநாடா—கானில்
தணியாத வெங்கனலைத் தாங்கினா யிந்த
அணியாடை கொள்கென்றா னங்கு.

(இ-ள்) (அவ்வாறு கூறிப்பின்னரும் கார்க்கோடகன் இரண்டு வஸ்திரங்களை எடுத்துநீட்டி நளனை நோக்கி) கூன்-வளைவாகிய, இறால்-இறால், என்னும் நீர்ப்பிராணிகள், பாய-பாய்தலினாலே, குவளை-நீலோற்பல மலர்களினின்றும், தவளைவாய் (பக்கத்திலுள்ள) தவளைகளின் வாயிலே, தேன்-தேனானது; இறால் பாயும்-தேன்கூண்டுபோல (அதாவது தேன்கூட்டினின்றும் ஒழுகும் மதுவைப்போல) பாயப்பெற்ற, திருநாடா-அழகிய விடதநாட்டையுடையவனே, கானில்-காட்டில், தணியாத-அடங்காத, வெம் கனலை-

வெப்பமுள்ள நெருப்பை, தாங்கினாய்-சகித்து அதினின்றும் என்னை விடு வித்துப் பாதுகாத்தாய், (ஆதலின் அவ்வுபகாரத்துக்கீடாக), இந்த அணி ஆடை-இந்த அழகிய வஸ்திரங்களை, கொள்க என்றான்-பெற்றுக் கொள் வாயாக வென்று கூறினான்; [எ-று.]

கார்க்கோடகன் மேலும் இரண்டு வஸ்திரங்களை எடுத்து நளனுக்கு முன்னே நீட்டி அவனை நோக்கி "மன்னனே! நீ எனக்குச்செய்த உதவிக் கீடாக இவற்றைப் பெற்றுக்கொள்வாயாக" என்றான் என்பது இதன் கருத்து. மேல் 381-ம் செய்யுளில் "பூந்துகிலின் ஒரு துகிலை வாங்கியுடுத் தான், ஒரு துகிலைப் போர்த்தான்" எனவருதலால் இங்குக் கார்க்கோடக னால் கொடுக்கப்பட்டவை இரண்டு துகில்களே என்பது பெறப்படும்; ஆத லின் 'ஆடை' என்ற பால்பகா அஃறிணைப் பெயர்க்கு ஆடைகள் எனப் பன்மையாகப் பொருள் கொள்ளப்பட்டது. நளன் கார்க்கோடகனை நெ ருப்பினின்றும் எடுத்து வெளிப்படுத்திய காலத்தில்அத்தீயின்வன்மையைச் சகித்துக்கொண்டு அக்காரியத்தைச் செய்தானாகலின் அவனைத் "தணியாத வெங்கனலைத் தாங்கினாய்" என்றான். கார்க்கோடகன், தாங்கினான் என்ற தனாலேயே நளன் அவ்வெம்மையைச சகித்துக்கொண்டு கார்க்கோடகனை எடுத்துக் காப்பாற்றினான் என்பது தானே அமையும். கானில் தணியாத வெங்கனலைத் தாங்கிச்செய்த உபகாரத்திற்கு இந்த ஆடைகள் ஈடாதல் அடுத்த செய்யுளால் பெறப்படும். இச்செய்யுளின் முன்னிரண்டடிகள் நாட் டின் வளத்தை உணர்த்தி நின்றன. இறால் துள்ளிப்பாயுங் காலத்தில் குவ ளைப் புஷ்பத்தின்மேல் தாக்குதலால் அக்குவளை மலர் சிதைந்து அதில் நிரம்பியிருந்த தேன், தேன்கூட்டினின்றும் ஒழுகுவதுபோல் வழிந்துகீழே யிருக்கின்ற தவளைகளின் வாயிற் பெருகுமென்க. இவை செழித்தற்குக் காரணம் நீர்வளமேயாதலின் இங்ஙனங் கூறியதனால் நிடத தேசமானது மிக்க நீர்வளமுள்ளதென்பது பெறப்படும். இங்ஙனம் மழைவளத்தின் காரி யமும் நாட்டுவளத்தின் காரணமுமான நீர்வளத்தை விளக்கியதனால், "கொடி தொரீஇ நல்லவை செய்வானரசன்......பெய்யெனப் பெய்யுமழை" என்றபடி மழைவளத்துக்குக் காரணமாகிய அரசனது செங்கோற் சிறப்பு குறிப்பிக்கப்படுகின்றது "நீ தற்செயலாக வந்து என்னுயிரைக் காத்து எனக்குதவி செய்தாய்; இத்தகைய உனது நீதியால் 'மன்னனெப்படி மன் னுயிரப்படி' என்ற பழமொழிப்படி உனது தேசத்திலுள்ள அஃறிணை உயிர் களும் தற்செயலாக ஒன்றுக்கொன்று உதவுந் தன்மையனவாய்" என்ற குறிப்பு இதில் விளங்கும், இனி 'கூனிறால் பாயக்குவளை தவளைவாய்த் தே னி றல் பாயுந்திருநாடா" என்பதற்கு 'இறால் மீன்கள் நீரினின்றுந் துள்ளிக் கரையின்மேலிருக்கும் மரங்களின்மேல் உள்ள தேன்கூடுகளின் மேல் பாய் வதால் அவை உடைந்து சொரிகிற தேன் கீழுள்ள நீலோற்பல மலர்களின் வாயிலும் தவளைகளின் வாயிலும் பாயும் வளமுள்ள நாட்டையுடையவனே என்று பொருள் கோடலுமொன்று. பாயும்-பெயரெச்சம், இடப்பெயரைக்

கொண்டது இன்னும் 'கனலைத் தாங்கினாய்' என்பதற்கு உருவம் விகாரப்படும்படி என் விஷாக்கினியை யேற்றுக்கொண்டாய் எனப்பொருளுரைப்பினும் அமையும். இங்குக் கார்க்கோடகனால் கொடுக்கப்பட்ட வஸ்திரங்களினாலேயே நளனுடைய விகாரவடிவம் பிற்காலத்தில் நீங்குகின்றதாதலின் அதற்குப் பரிகாரமாக அவன் அவ்வஸ்திரங்களைக் கொடுத்தான் என்பது மிகவும் பொருத்தமுடைத்து: ஆங்கு-அசை.

**கார்க்கோடகன் தன்னால் கொடுக்கப்பட்ட ஆடைகளின் பயனைக் கூறுதல்.**

334. *சாதி மணித்துகில்நீ சாத்தினாற் றண்கழுநீர்ப்*
*போதின்கீழ் மேயும் புதுவரால்—தாதின்*
*துளிக்குநா நீட்டுந் துறைநாடர் கோவே*
*ஒளிக்குநா ணீங்கு முரு.*

(இ-ள்) (அவ்வாறு ஆடையை கொடுத்த கார்க்கோடகன் மேலும்) தண் குளிர்ச்சி பொருந்திய, கழுநீர்போதின் கீழ்-செங்கழுநீர் மலரின்கீழே, மேயும்-இரைதேடித் திரிந்து உண்டு கொண்டிருக்கின்ற, புதுவரால்-புதிய வரால் மீன்கள், தாதின்துளிக்கு - (அம்மலர்களி னின்றொழுகும்) தேன்துளிக்கு (அதாவது. அத்தேன் துளியைஉட்கொள்ளுதற்கு), நாநீட்டும்-நாவை நீட்டுகின்ற, துறை-நீர்த்துறைகளையுடைய, நாடர்-நிடததேசத்தார்களுடைய, கோவே அரசனே!, நீ ஒளிக்கும்நாள்-நீ(யதார்த்த வடிவத்துடன்வெளிப்பட்டுப்)பிரகாசிக்க வேண்டிய நாளில், சாதி மணித்துகில்- (இந்தச்) சிறந்த ஆடைகளை, சாத்தினால்-அணிந்துகொண்டால், உரு- (உனக்கிப்பொழுது ஏற்பட்டிருக்கும் இந்த) விகாரவடிவமானது, நீங்கும்-அகலும்; [எ-று.]

முன்னுரைத்தபடி ஆடைகளைக் கொடுத்த கார்க்கோடகன் நளனை நோக்கி, 'மன்னனே! நீ இந்த விகாரவடிவத்தை நீக்கி யதார்த்த சொரூபத்துடன் விளங்க வேண்டிய காலத்தில் இந்த ஆடைகளைத் தரித்துக்கொள்வாயானால் உன் விருப்பப்படியே இக்கோரரூபம் அகன்று நினதுண்மைவடிவம் வந்து விடும்' என்று கூறினான். அவன் இவ்வாறு கூறியதனால் தான் பிரதியுபகாரஞ் செய்ததை விளக்கினான். 'நீ ஒளிக்கும் நாள் சாதிமணித்துகில் சாத்தினால் உருநீங்கும்' என இயைக்க. ஜாதி-ஆரியமொழி; இஃதிலக்கணையால் சிறப்பை உணர்த்தி நின்றது; இலக்கணையாவது: உரியபொருளை விட்டு அப்பொருளின் சம்பந்தியை யுணர்த்துவது;இங்கே குலப்பெயராகிய ஜாதியென்பது அதன் பொருளை யுணர்த்தாமல் அதன் சம்பந்தியாகிய சிறப்பை விளக்கிற்று. 'சாதிமணித்துகில்', என்பதற்குச் 'சாதிமாணிக்கம் போல் அருமையான துகில்' எனவும்பொருளுரைக்கலாம் புதுவரால்-வேற்றுநாட்டிலிருந்து வெள்ளத்தின் வழியாக எதிரேறி இந்நாட்டிற்கு நூதனமாக வந்தவை; இவை அங்ஙனம் புதியனவாய் வந்தனவாதலின், அந்நாட்டின் தேனை உண்ணுதற்கு மிகவும் விருப்பங்கொண்டன. ஒரு நாட்டிற்கு

நூதனமாக வந்த வேற்று நாட்டார் அங்குள்ள வஸ்துக்களை மிக்க ஆவலுடன் விரும்புவது இயற்கை. இனி, 'இளமையானவரால்' எனவும் பொருளுரைக்கலாம். இளமைப் பருவமுடையவை மேய்ச்சலுக்குச் செல்வதில் புதியனவாதலின், இப்பெயர் பெறும். தாது-பூவிதழ் அல்லது பூந்துகள்; இஃது இலக்கணையாய்த் தேனை யுணர்த்தி நின்றது இனி, தாதிலிருந்து வடிவது தேனேயென்ப துறுதியாதலின், தேன் என்பதைக் குறிப்பால் வருவித்து, 'தாதின் துளி' என்பதற்கு, 'பூந்துகளிலிருந்து அல்லது பூவிதழ்களிலிருந்து வடியும் தேன் துளி' எனவும் பொருள் கொள்ளலாம்; இனி, தாது + இன் + துளி—எனப் பிரித்து, இனிமை யென்னும் பண்படியாகிய இன் என்பதைத் தேனிற்குக் குணவாகு பெயராகக் கொண்டு மேற்கூறியவா றுரைத்தலும் பொருந்தும். நாநீட்டுதல்-விருப்பத்தோடு வாயைத்திறத்தல். "தண்கமுநீர்ப்போதின்கீழ்மேயும் புதுவரால்-தாதின் துளிக்கு நாநீட்டுந் துறைநாடர் கோவே" என்றதனால், "நினக்குப் புதியவனான நான் உன் உதவியை விரும்பியதுபோலவே நின் நாட்டிலும் பிறநாட்டுப் பிராணிகள் அங்குள்ள வளத்தின் உதவியை விரும்பி நிற்கும்" என்ற கருத்தே தொனிக்கும். இவ்வருணனையால் நீர்வளம் குறிப்பிடப்பட்டது.

துளிக்கு-என்பதிலுள்ள நான்கனுருபு பொருட்டுப் பொருளது. ஒளித்தல்-இங்குப் பிரகாசித்தல் என்னும் பொருளில் நின்றது. இனி 'ஒளிக்கும் நாள்' என்பதற்கு, 'இவ்வேற்றுருவத்தை நீ மறைக்க வேண்டிய காலத்தில்' என ஒரு பொருளும், 'நீ இந்த ஆடைகளை அணியும் அந்நாளில் இவ்விகார வடிவம் மறையும்' என ஒருபொருளும் உரைக்கலாம். இதுவும் அடுத்த செய்யுளும் விரவி வருதலான் குளகமாய் முடியும்.

பெயரை மாற்றிக் கொண்டு நதுபர்ணனுக்குத் தேர்ப்பாகனுதம்படி நளனுக்குக் கார்க்கோடகன் சொல்லல்.

335. வாகு குறைந்தமையால் வாகுவனென் றுன்னாமம்
ஆக வயோத்தி நகரடைந்து—மாகனகத்
தேர்த்தொழிற்கு மிக்கானீ யாகென்றான் செம்மனத்தாற்
பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து.

(இ-ள்) வாகு குறைந்தமையால்-(உன்னுடைய) தோள் மெலிந்துகுறைவுபட்டதனால், உன் நாமம்-உனது பெயரானது, வாகுவனென்று ஆக-வாகுவனென்று பொருந்த, நீ—, அயோத்திநகர் அடைந்து-அயோத்தியாபுரியிற் சேர்ந்து, (அந்நகரத்தரசனான ருதுபர்ணனுக்கு) மா-சிறந்த, கனகம்-பொன்னாலாகிய, தேர்த்தொழிற்கு-தேரைச்செலுத்துந் தொழிலில், மிக்கான் ஆகு-மிகுந்தவனாகக் கடவாய் (அதாவது: சிறந்ததேர்ப்பாகனாகக் கடவாய்), என்றான்-என்று சொன்னான், செம்மனத்தால் - ஒழுங்கான உள்ளத்தினாலே, பார்த்தொழிற்கு-அரசியலில், மிக்கானை-மிகுந்த நளனை, பார்த்து-நோக்கி;

இதுவும் முன்செய்யுளும் குளகமாதலின் இதனீற்றடியிலுள்ள, "பார்த்தொழிற்கு மிக்கானைப்பார்த்து' என்பதை, முன்செய்யுளின் முதலிற்சேர்த்து, "கார்க்கோடகன் பார்த்தொழிற்கு மிக்கானைப்பார்த்து, 'சாதிமணித்து இல் நீசர்த்தினால் ......நீங்குமுரு,வாகுகுறைந்தமையால்......தேர்த்தொழிற்குமிக்கானீயா', கென்றான்" என்று முடித்துக் கொள்ள வேண்டும். நளன் அந்த விகார வடிவத்துடன் தன்பெயரைக் கூறினால் பிறர்நம்பாமல் அவனை அவமதித்து எளனஞ் செய்தலோடு அவனுக்கு ஒருவித இழிவும், ஜீவனோபாயத்திற் கிடையூறும் நேருமாதலின் கார்க்கோடகன், அவனை இவ்வாறு பெயர் கொண்டு இத்தொழிலி லமரும்படி கூறினான். நளன் அசுவவித்தையில் வல்லவனாயிருந்ததனாலும், அவனுடைய தோள் கார்க்கோடகனுடைய விஷத்தால் சுருங்கிப் போயிருந்தமையாலும் அவனுக்குத் தேரோட்டுந் தொழிலே தகுமென்று கருதி அதனையே செய்யும்படி கூறினான் என்ப.

வாகு-பாஹு என்ற வடசொற்றிரிபு. வாகுவன் - பாஹுகன் என்ற வடசொல்லின் விகாரம்; பாகு-தோள், க-சிறுமைப் பொருள்தரும் ப்ரத்யயம் என்னும் சமஸ்கிருதவிகுதி; ஆதலின், 'பாகுக' என்பது, 'சிறுத்ததோள்,' எனப்பொருள்பட்டு, அதனோடு அன்-விகுதிசேர்ந்த, 'பாகுகன்' என்பது, 'சிறுத்த தோளையுடையவன்' எனப்பொருள் தந்து நின்றது; தேர்ப்பாகர்க்குத்தோள் சுருங்கி யிருத்தல் இயல்பு; அவர்கள் குதிரையின்வாய் வடத்தை எப்பொழுதும் இழுத்துப் பிடித்துக் கையை மடக்கிக் கொண்டிருக்கும் பழக்கம் அதிகமாக உடையவர்களாதலின்; அவர்கட்கு அடிக்கடி நேரும் அப்பழக்கத்தால் தோள் சுருங்கு மென்க. ஆக-வியங்கோள் வினைமுற்று; செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சமுமாம். அயோத்யா, மஹா, கநகம் என்ற ஆரியமொழிகள் அயோத்தி, மா, கனகம் எனத்திரிந்து வந்தன. அயோத்யா-என்பது 'யுத்தமில்லாதது' என்று பொருள்படும்; அதாவது: பகைவராற் செய்யப்படும் போர் இல்லாதது என்பதாம்; ஆகவே, பகைவரால் போர் செய்து வெல்லற்கரியது என்பது பெறப்படும்; இதனால், அந்நகரம் பகைவர் அழித்தற்கரிய மதில் முதலிய அரண்களையும், வலியபடைகளையும், பலசாலிகளான வீரர்களையுமுடைய தென்பதுவிளங்கும். ஆகு-செய்யென்னேவற்பகுதி; ஆ-என்பது பகுதியாய், 'கு' சாரியை பெற்ற தெனவுமொன்று. செம்மை-மையீறு கெட்டு நின்றது. செம்மையாவது: நேர்மை; செம்மனம்-தருமகுணம் பொருந்திய உள்ளம். செம்மனம் பாராளுந்தொழிலில் மேன்மையாதற்கு ஏதுவாதலின், 'செம்மனத்தாற் பார்த்தொழிற்குமிக்கான்' என்றார் ஆசிரியர்; இதில் ஆல்உருபு ஏதுப்பொருளில் வந்தது. இரண்டிடங்களினுமுள்ள, 'தொழிற்கு' தொழிற்கு என்பனவற்றில் நான்கனுருபு ஏழனுருபின் பொருளில் மயங்கி வந்தன.

நளன் கார்க்கோடகனைப் பிரிந்து அப்பாற் செல்லுதல்.

336. இணையாரு மில்லா னிழைத்த உதவி
புணையாகச் சூழ்கானிற் போனான்—பணையாகத்
திண்ணாக மோரெட்டுந் தாங்குந் திசையனைத்தும்
எண்ணாக வேந்த னெழுந்து.

(இ-ள்) (கார்க்கோடகன் அவ்வாறு கூறியபின்பு) பணை ஆகம்-பருத்த் தேகத்தையுடைய, திண்-வலிமைபொருந்திய, ஓர்-ஒப்பற்ற, நாகம் எட்டும்-திசையானைகள் எட்டும், தாங்கும்-சுமக்கின்ற, திசை அனைத்தும் - எல்லாத் திக்குகளிலுள்ளவர்களும், எண்-சிந்திக்கும்படியான, ஆகம்-நல்ல இருதயத்தையுடைய, வேந்தன்-நளமகாராஜன், ஆரும்-எவரும், இணை இல்லான்-(தனக்கு) உவமையாக அடையாதவனாகிய (அதாவது: உயர்ச்சியில் ஒப்பற்றவனான) கார்க்கோடகன், இழைத்த-செய்த, உதவி உபகாரமானது, புணை ஆக-தெப்பமாக (அதாவது: ஆதரவாக), எழுந்து - அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு, சூழ்-சூழ்ந்த, கானில்-காட்டில், போனான்-போயினான்; [எ-று]

'இணையாருமில்லான்' என்றது, 'பிறர்க்குதவி செய்வதில் தனக்கொப்பாரெவரு மில்லாதவன்' என்னும் கருத்தை விளக்கி நின்றது. கார்க்கோடகன் நளனோடு சிநேக மில்லாதவனா யிருந்தும, அவனுடைய நிலைமையை உணர்ந்து அவனது ஜீவிப்பிற்கு அனுகூலமா யிருக்கும்பொருட்டு அவனைக் கடித்து அவனின் உருவத்தை மாற்றிப் பிற்காலத்தில் அம்மாற்றுருவம்நீங்க இரண்டு வஸ்திரங்களையும் அவனுக்கு நல்கினாதலின், இசெய்கை, செய்யாமற் செய்த உதவியாகும்; ஆதலின், இதுகுறித்தே அவனை 'இணையாருமில்லான்' என்றார் ஆசிரியர். இவ்வாறு கார்க்கோடகன், நளனுக்குச்செய்த உதவி, கடலைத்தாண்டுவதற்கு மரக்கலம் உதவியா யிருத்தல் போல், நளன் மறைந்துறைதல் என்னும் கடலைத் தாண்டுவதற்கு அனுகூலமா யிருந்தபடியால் 'உதவி புணையாக' என்றார் புலவர். இங்கே உதவி, புணையாக உருவகித்துக் கூறப்பட்டது; இங்ஙனங்கூறியது உருவகவணியின்பாற்படும். அஷ்டகஜங்கள் எட்டுத் திக்குக்களினும் நின்று பூமியைத்தாங்கக் கூடிய வல்லமை பெற்றனவாதலின் அவையிற்றை, "பணை ஆகத் திண் நாகம் ஓரெட்டும்," என்றார் ஆசிரியர். அஷ்டகஜங்களாவன:—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்ரதீகம் என்பனவாம்; இவை முறையே கிழக்கு முதலிய திசைகளிற் கீழ் நின்று உலகத்தைத்தாங்குவனவாம். இனி, 'நாகம் ஓரெட்டு' என்பதற்கு, 'அஷ்டமகா நாகங்கள்' எனவும் பொருளுரைக்கலாம் இவைகளும் எட்டுததிக்குக்களிலும் கீழ்நின்று பூமியைத் தாங்குவனவே யாம்; அவையாவன:—வாசுகி, அனந்தன், தக்கன் சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன், என்பனவாம்; இவைகளும் முறையே கிழக்கு முதல் நின்று தாங்குவனவெனக் கொள்க. நளன் அஷ்டதிக்குகளிலுமுள்ள எல்லோராலும்கொண்

டாடத்தக்க நல்ல உள்ளம் படைத்தவனாதலின், 'திசை அனைத்தும் எண் ஆகவேந்தன்' எனப்பட்டான்; 'தன் உள்ளச்சிறப்பால் எங்கும் புகழ்படைத்தவன்' என்பது இதன் தேர்ந்த கருத்து. இனி,

"நின்னைமெய்ப் பரதனை நிகரில் பார்த்தனை
முன்னினும் நினைத்தவை யனைத்தும் முற்றுமால்"

என்று நைடதத்தில், இந்திரன் நளனை நோக்கிச் சொன்னதாயுளதாலும்.

"தரை திருத்தியசீர் வயினியனென்னுந் தனிக்குடைப் பிருதுவேந்தினையும்
உரைசகுந்தலைபுத்திரனெனும் பரதனொடுநளனையுமொரு செயற்குப்

புரையறச செல்லும் பொழுதுமுன் னினரப்
பொருள்பெறீஇ விரைந்து மீள்குவரால்"

என்று, வடமொழி நைடத நூலுரை மேற்கோள் மொழிபெயர்ப்புச் செய்யுளிற் கூறியிருத்தலானும், பிருது சக்கரவர்த்தியையும், பரதனையும், கார்த்த வீரியார்ச்சுனனையும், நளனையும் சிந்தித்த மாத்திரத்தில் எத்தகைய காரியமும் சித்திக்கு மென்பது ஏற்பட்டிருத்தலால், 'திசை அனைத்தும் எண் ஆக வேந்தன்' என்பதற்கு, 'அஷ்டதிக்குக்களி லுள்ளவர்களும் தங்கள் தங்கள் காரியசித்தியின் பொருட்டு மனதில் தியானிக்கின்ற நளன்' என்றும்பொருளுரைக்கலாம்; இங்ஙனங் கொள்ளுமிடத்து 'எண் ஆகவேந்தன்' என்பதை 'ஆகம் எண் வேந்தன்' எனமாற்றி, அதற்கு,'மனதில் தியானிக்கும் அரசன்' எனப்பொருள் விரிக்க வேண்டும். இனி, 'திசை அனைத்தும் எண் ஆக வேந்தன்' என்பதற்கு, 'எல்லோம் கொண்டாடத்தக்க மார்பின் தோற்றத்தை யுடைய அரசன்' எனப்பொருள் விரிப்பினும் அமையும்.

இனி, இச்செய்யுள் இரட்டுற மொழிதலாக அமைந்து கார்க்கோடகன் அவ்விடத்தைவிட்டுக் கானகத்தில் அப்பாற் சென்றதையும் உணர்த்தியதெனக்கொள்ளலாம். அங்ஙனங் கொள்ளுமிடத்து, 'நாகவேந்தன்' என்பதையும், 'போனான்' என்பதையும் கார்க்கோடகனுக்கும், 'இணையாருமில்லான்' என்பதை நளனுக்கும் ஏற்றி, "அஷ்டதிக்குக்களி லுள்ளாரும் கருதுகின்ற ஸர்ப்ப ராஜனாகிய கார்க்கோடகன், இணையாருமில்லாதவனாகிய நளன் தன்னை அக்கினியினின்று மெடுத்துச செய்த உயிருதவி துணையாக அவ்விடத்தைவிட்டுக் காட்டிலே அப்பாற் சென்றான்" என அனுவயங் கொண்டு பொருளுரைக்க வேண்டும். இங்ஙனம் கொள்ளும் உரையில், 'திசையனைத்தும் எண்' என்ற அடைமொழி எதனால் கார்க்கோடகனுக்கு அமையுமெனின், "கார்க்கோடகன், தமயந்தி, நளன், ருதுபர்ணன் ஆகிய இவர்கள் பெயரைச் சொல்லுதல், கலியை யொழித்தற்குக்காரணமாம்" என்ற மேற்கோள்பற்றி அமைந்ததெனக் கொள்க. இனி, 'சூழ்கானில் இழைத்தஉதவி' எனவும், 'திசையனைத்தும் போனான்' எனவும் அனுவயித்து, "நளன், சூழ் கானில் இணையாரு மில்லான் இழைத்த உதவி கொண்டு புறப்பட்டு எல்

லாத்திக்குக்களிலும் சுற்றி வந்தான்” எனப் பொருள் கோடலு மொன்று இச்செய்யுள் இங்ஙனம் பலவகைப் பொருள்கட்கு இடந்தரினும் அடுத்த வெண்பாவில் 'வேகின்றான் வேலைக்கரை கண்டான்' எனவருதலால், நளனுக்குச செலவு கூறும் உரை:யொன்றே மிகப் பொருத்தமுடைத்தாம்.

நகம்-மலை; நிலைபெயராதது என்பது இதன் பொருள்; யானை இதில் வாழக்கூடியதாதலின் நாகம் எனப் பெயர் பெற்றது. நகம் என்பது வடசொல். திசா-என்ற ஆவீற்று வடசொல், ஐயீறு பெற்றுத்திசையென்றாயது; இஃதிடவாகு பெயராய்த் திக்குக்களிலுள்ள மனிதரை யுணர்த்தி நின்றது.

நளன் கடற்கரையைக் காணுதல்.

337. நினைப்பென்னுங் காற்றசைப்ப நெஞ்சிடையே மூளுங்
கனற்புகைய வேகின்றான் கண்டான்—பனிக்குருகு
தண்படா நீழற் றனிப்பேட்டைப் பார்த்திரவு
கண்படா வேலைக் கரை

(இ-ள்) (அவவாறு சென்று) நினைப்பு என்னும்-(தமயந்தியின் மீதேற்பட்ட) எண்ணமென்கின்ற, காற்று-காற்றானது, அசைப்ப-அலைப்பதனாலே, நெஞ்சிடை மனத்தினிடமாக, மூளும்-பற்றுகின்ற, கனல்-(விசனமென்கிற) நெருப்பானது, புகைய-புகைந்து கொண்டிருகக, வேகின்றான் - வெந்து கொண்டிருக்கின்றவனாகிய நளன், பனி-அச்சத்தையுடைய, குருகு-நாரையானது, தண்-குளிர்ச்சி பொருந்திய, படாம்-பெருங்கொடிகளின், நீழல்-நிழலிலே, தனி-ஒப்பற்ற, பேட்டை-பெட்டை நாரையை, பார்த்து - பார்த்துக் கொண்டு, இரவு-இராத்திரியில், கண்படா-கண்மூடி யுறங்காம லிருக்கின்ற, வேலைக்கரை-கடற்கரையை, கண்டான்-பார்த்தான்; [எ-று.]

நெருப்பு மூளுவதற்குக் காற்று சகாயமா யிருப்பது இயற்கை; இதுபற்றியே நெருப்புக்குக் 'காற்றின் சகாயன்' என ஒரு பெயரும் ஏற்பட்டிருக்கின்றது; ஏனெனில் காற்று வீசவீச நெருப்பு மூண்டெரியும்; ஆதலின் இங்கு ஆசிரியர் நளனுடைய விசனத்தை நெருப்பாகவும், தமயந்தியின் நினைவைக் காற்றாகவும் உருவகப்படுத்தி, “நினைப்பென்னுங் காற்றசைப்ப நெஞ்சிடையே மூளுங், கனற்புகைய வேகின்றான்” என்று நளனைக் கூறினார்; இதனால், நளனுடைய மனதில் தமயந்தியின் பிரிவாலேற்பட்ட விசனம அக்கினிபோல் வெதும்பிக் கொண்டிருந்த தென்பதும், தனியாகச் செல்லும் இச்சமயம் அவனுடைய எண்ணம் அதிகரித்தபடியால் அவ்விசனமும் அதிகரித்து நெருப்புப் புகைந்தெரிவதுபோல்எரியத் தலைப்பட்ட தென்பதும், அதனால் அவன் முன்னிலும் அதிகமாக விசாரத்தால் வெதும்பினான் என்பதும் பெறப்படும். சமுத்திரக்கரையில் பெருங்கொடியின் நிழற்கீழ் பெட்டைக் குருகு நித்திரை செய்து கொண்டிருக்கும்; ஆண் குருகு அதன் மீது அதிகமாக ஏற்பட்ட அன்பினால் அதன் பக்கத்தில் உட்கார்ந்து அதற்காபா

யம் உண்டாகாதபடி விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கும்; இது, பறவைகளின் அன்பின் மிகுதியாலேற்படுஞ் செய்கை. மேற்கூறியபடி தமயந்தியின் பிரிவால் வெதும்பிச் சென்ற நளன், நாரையின் இவ்வித செய்கையையுடைய சமுத்திரக் கரையைக் கண்டான். நாரை இவ்வாறு தன் பெட்டையினிடத்தில் அன்பு செலுத்துவதைக் கண்டவுடன் நளனுக்கு, 'அந்தோ! பறவையும் தன் பெட்டையினிடத்தில் இங்ஙனம் அன்பாயிருக்கும்போது நாம் நம் மனைவியினிடத்தில் அன்பற்று அவளைப்பிரிந்து வந்தோமே' என்று விசனம் முன்னிலும் அதிகரிக்குமாதலின், அவன் சமுத்திரக் கரையைப் பார்த்தது மிக்க துயர்க்கேதுவாம். ஆதலின், இதைக்குறிப்பால் விளக்குதற் பொருட்டே ஆசிரியர், "வேகின்றான்...... குருகு கண்படா வேலைக்கரை கண்டான்" என்றார். இதனால், "முன்னரே துயரத்தால் வெந்து கொண்டிருந்த நளன் மேலும் தன் விசனம் அதிகரிக்கச் சமுத்திரக் கரையைக் கண்டான்" என்று பொருள் கொள்ள வேண்டும்

பறவைகள் எப்பொழுதும், வேடர் முதலியவர்களால் தங்களுக்கு அபாயம் வருமோ என்ற அச்சத்துடனேயே இருக்கக்கூடியனவாதலின் இங்குக் குருகுக்கு, 'பனி' என்ற அடை கொடுக்கப்பட்டது; குருகு இவ்வித அச்சத்தினாலேயே பெடைக்குக் காவலிருந்ததென்க. பேடு, அன்பு செலுத்துவதில் ஒப்பற்றதாதலின், 'தனிப்பேடு' என்னப்பட்டது. வேகின்றான்-வினையாலணையும் பெயர். கனல்-புகைய எதுகை நோக்கி-ல்-ற் ஆனது.

நளன் கடற்கரையில் குருகைப் பார்த்துக் கூறுதல்.

338. கொம்பா ரிளங்குருகே கூறா திருத்தியால்
அம்புயத்தின் போதை யறுகாலால்—தும்பி
திறக்கத்தே னூறுந் திருநாடன் பொன்னை
உறக்கத்தே நீத்தேனுக் கொன்று.

(இ-ள்.) (அவ்வாறு கடற்கரையைக் கண்ட நளன் மேற்கூறியபடியிருந்த குருகைநோக்கி) கொம்பர்-மரக்கிளையின் மேலிருக்கத்தக்க, இளங்குருகே-இளமை பொருந்திய நாரையே!, அம்புயத்தின் போதை - தாமரைமலரை, தும்பி-வண்டுகள், அறுகாலால்-ஆறுகால்களினால், திறக்க கிண்டி இதழ்களைத் திறந்துவிட, (அதினின்றும்) தேன் ஊறும் - மதுவானது சுரந்தொழுகும்படியான. திரு-சிறப்பினையுடைய, நாடன்-விதர்ப்பதேசாதிபதியினது, பொன்னை-இலக்குமிபோன்ற குமாரத்தியை, உறக்கத்தே - தூக்கத்தில், (அதாவது: அவள் தூங்கும்போது) நீத்தேனுக்கு-விட்டு வந்தவனாகிய எனக்கு, ஒன்று-தேறுதலான ஒரு வார்த்தையை, கூறாது இருத்தி-நீ சொல்லாமல் இருக்கின்றாய், (இது தகுதியாமா என்று கூறினான்): [எ-று.]

மேற்கூறியபடி நளன் கடற்கரையிற் சேர்ந்தவுடன், பெட்டையின் மீது அன்புகொண்டிருந்த நாரையைக் கண்டு, 'இதற்குள்ள இத்தன்மை

நமக்கில்லாமற் போயிற்றே; சிறிதும் பற்றுதலின்றி மனைவியை நீத்துவந்து விட்டோமே' என்று வருந்தினான். ஆதலின், அவ்வருத்த மிகுதியால் அக்குருகை நோக்கி, "நாரையே உன்னைப்போல மனைவியினிடத்தில் அன்பு வைத்தலை அறியாதவனாய் அவளைப் பிரிந்து வந்து மிக்க துயர்க்குள்ளாகிக் கலங்குகின்றேன்; நீயோ இணைபிரியாத் தன்மையிற் சிறந்திருக்கின்றாய்; இத்தகையநீ, துயர்க்குள்ளாகி வருந்தும் என்னைப் போன்றவருடைய மனம் தேறும் மார்க்கத்தினையு முணர்ந்திருப்பாய்; அவ்வாறுணர்ந்திருந்தும் மனைவியைப் பிரிந்து வருந்தும் எனக்குத் தேறுதலான ஒரு வார்த்தையேனும் கூறாதிருக்கின்றாய்; இது நியாயமாகுமோ" என்று கூறினான். பறவை, மனிதரோடு சம்பாஷிக்கக் கூடிய பிராணியன்றெனினும், நளன் வருத்தமிகுதியால் இங்ஙனம் அதனிடம் பேசினான். விசனம், சந்தோஷம் முதலியன மிகுந்தகாலத்தில் மனிதர் இவ்வாறு பேசத்தகாத விடத்திலும் பேசுதல் இயற்கை; இது, வருத்தத்தாலுண்டாம் மதிமயக்கத்தால் ஏற்படும்செய்கை.

'கொம்பர் இளங்குருகே' என்றது அது, மற்றகாலங்களில் இருக்கும் இயற்கை நோக்கிக் கூறியது; முன்பாடலில் கொடியினிழலில் இருந்ததாகக்கூறியது குறித்துச் சொன்னதன்று. இப்பாடலில் கதைத்தொடர்ச்சி பற்றி எழுவாய், பயனிலை முதலியன இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன. 'கொம்பர்' என்பதில், குற்றியலுகரமாதலின் அர்-மொழியிறுதிப் போலி. ஆல்-அசை. பொன்-தமயந்திக்கு உவமையாகு பெயர்.

வண்டு, தன் பேட்டையினடத்தில் காட்டும் அன்பை நோக்கி, நளன், தான் அதுபோன்றில்லாததைப் பற்றி வருந்தல்.

339. புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு
கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்—இன்னருள்கண்
டஞ்சினா னாவி யழிந்தா னறவுயிர்த்து
நெஞ்சினா லெல்லா நினைந்து.

(இ-ள்) (நாரையைப் பார்த்து அவ்வாறு கூறிய நளன்மேலும்) புன்னை-புன்னைமலரிலுள்ள, நறும்தாது-நல்லமகரந்தத்தை, கோதி-காலினால்கிண்டி, பொறிவண்டு-புள்ளிகளையுடைய வண்டானது, கன்னி-இளமை கெடாத; பெடை-பெண்வண்டு, உண்ண—, (அதன் பக்கத்தில் தான் உண்ணாமல்) காத்திருக்கும்-அதனைக் காத்திருக்கின்ற, இன் அருள் கண்டு-இனிமையான கிருபையை நோக்கி, நெஞ்சினால்-தன்மனத்தினாலே, எல்லாம்-தான் செய்தவற்றை யெல்லாம், நினைந்து-சிந்தித்து, அஞ்சினான்-(தான் தமயந்தியைப் பிரிந்த செய்கையைக் குறித்துப்) பயந்தவனாய், அற உயிர்த்து-மிகவும் மூச்சுவிட்டு (அதாவது: பெருமூச்சு விட்டு), ஆவி அழிந்தான்-உயிர் குறையப் பெற்றான் (அதாவது யாதொரு செயலுமற்று மூர்ச்சித்தான்; [எ-று.]

நளன் முன்னுரைத்தபடி நாரையை நோக்கிக் கூறிவிட்டு மற்றொரு பக்கம் நோக்கினான்; அங்கே புன்னை விருக்ஷத்திலுள்ள மலரில் பொறி வண்டு சேர்ந்து அதன் மகரந்தத்தைக் கிண்டித்தன் பெட்டையை உண்ணும்படி அதில் விட்டுத்தான் உண்ணாமல் அதற்கபாயம் நேராதபடி பக்கத்தில் அதனைக் காத்துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்தவுடனே நளனுக்கு, "அந்தோ! இவ்வஃறிணைப் பிராணியினிடத்துள்ள பாரியாள் நேசம் நம்மிடத்திலில்லாமற் போயிற்றே; நாம் தமயந்தியை நீத்து வந்தது மகா பாதகமாமே" என்று திகிலுண்டாகிற்று; அதனாலேயே அவன் பெருமூச்சு விட்டுத் தான் செய்தவற்றை யெல்லாம் நினைந்து ஆவி சோர்ந்தான்.

'கன்னிப்பெடை புன்னை நறுந்தாது கோதியுண்ணப் பொறிவண்டு காத்திருக்கும்' எனமாற்றி, நறுந்தாது கோதிய தொழிலைப் பெட்டைக்கேற்றி, 'அஃது உண்ணும் வரை பொறி வண்டு காத்திருக்கும்' எனவும் பொருளுரைக்கலாம். கன்னி-அழியாவியல்பு; அஃதிங்கே இளமை கெடாத்தன்மையையுணர்த்தி நின்றது; ஆகவே, 'கன்னிப்பெடை' என்பது. 'இளம்பெடை' எனப்பொருள்படும். 'உண்ண' என்னும் எச்சத்தைப் பொருட்டுப் பொருளிலுங் கொள்ளலாம்; அப்போது 'உண்ணும் பொருட்டு' எனப்பொருள் விரிக்கவேண்டும். அஞ்சினான் - முற்றெச்சம். 'ஆவியழிந்தான்' என்பதில் ஆவி என்னும் சினைவினை முதலோடு முடிந்தது

**நளன் நண்டைப் பார்த்துக் கூறுதல்.**

340\. காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற வாழிவா யாங்கலவ ஓடி
ஒளிக்கின்ற தென்னோ உரை.

(இ-ள்) (அவ்வாறு ஆவி சோர்ந்த நளன் மேலும் அங்கே தன்னைக் கண்டோடி யொளித்த ஒரு நண்டைப்பார்த்து), அலவ-நண்டே!, நாதம் அளிக்கின்ற ஓசையைத் தருகின்ற, (அதாவது: ஒலிக்கின்ற), ஆழிவாய்-சமுத்திரத்தி னிடத்தில், ஓடி ஒளிக்கின்றது-நீ ஓடி ஒளித்துக்கொள்ளுகின்றது, என்-என்ன காரணத்தால்?, காதலியை-ஆசைக்குரியவ ளாகிய மனைவியை, கார்இருளில்-கரிய இருட்டில், கானகத்தே-காட்டிலே, கைவிட்ட-நீக்கிவிட்டு வந்த, பாதகனை-பாவியாகிய என்னை, பார்க்கப்படாதுஎன்றோ-பார்த்தல் கூடாது என்றோ?, உரை-சொல்வாயாக (என்று உரைத்தான்).

கடற்கரையிலுள்ள நண்டு, மனிதரைக் கண்டவுடன் அவர்களுக்குப் பயந்தோடி மறைதல் இயல்பு; அவ்வியற்கைப் படியே இங்கு நளனைக் கண்டபோதும் ஓடி மறைந்தது; அதனை, தன்னைப் பார்க்கப் படாதென்ற காரணத்தால் நிகழ்ந்த செய்கையாகக் கற்பித்துக் கூறி இரங்கினான் நளன். மனத்தில் ஒன்றை அதிகமாகச் சிந்தித்துக் கொண்டிருக்கும் மனிதர்க்கு

மாதலின் இங்குத் தமயந்தியின் பிரிவு குறித்து மிகவும் வருந்தி யிருந்த நள னுக்கு இங்ஙனம் நண்டின் செய்கை தன்னைக் குறித்தே நிகழ்ந்ததாகத் தோற்றிற்று. நளன் இவ்வாறு கற்பித்துக் கூறியது தற்குறிப் பேற்றவணி யின் பாற்படும். நளன் முதலில் நண்டை நோக்கி அஃதோடி மறைந்ததற் குக் காரணத்தை வினவிப் பின்னர், 'நம்மைப் பார்த்தல் கூடாதென்பது தான் காரணமாக விருக்கலாம்' என்று துணிந்து, 'என்னைப் பார்க்கப்படா தென்றோ மறைகின்றாய்?' என்று கூறினான்; ஆதலின், இச்செய்யுளை, "அல வ! நாதம் அளிக்கின்ற ஆழிவாய் ஓடி ஒளிக்கின்றது என்னோ, காதலியை .....,கைவிட்ட பாதகனைப் பார்க்கப்படாதென்றோ?, உரை" என்றுமாற்றி அனுவயங் கொள்ளவேண்டும். காவிய விலக்கணத்திற் சேர்ந்த கடற்கரைக் காட்சியும் பிரிவாற்றாது வருந்துதலும் இங்கமைந்தன; இக்கடற்கரைக்காட் சிமுதனூலிற் கூறப்படவில்லை. இங்கு நளன் நண்டை நோக்கிக் கூறியதாக ஆசிரியர் உரைத்தது போலவே நைடத நூலாசிரியரும்,

"ஆவி யன்னதோ ரணங்கினை யரையிருள் நீத்த
பாவி யேன்முக நோக்குறிற் பழிவரு மென்றோ
மேவு சேக்கையிற் குருகிளம் பேட்டினம் வெருவிச்
சேவ லோடகன் றேகுவ தெனமனந் திகைத்தான்."

என நளன் பறவையை நோக்கிக் கூறியதாக உரைத்தல் காண்க.

காதலி-அன்புடையவள்; காதல்-அன்பு, அதனையுடையாள் காதலி; இதற்கு ஆண்பால் பெயர்-காதலன்;இக்காரணப்பெயர் கணவனுக்கும் மனை விக்கும் வருதலோடு புத்திரனுக்கும் புத்திரிக்கும் வருதலுமுண்டு. கானகம்-காட்டிடம்; கான்-காடு, அகம்-இடம். கை-பக்கம்; ஆதலின், 'காதலியைக் கைவிட்ட என்பதற்கு,'மனைவியைப் பக்கத்தி லிருந்தும் நழுவவிட்ட' என் பது நேர்பொருளாம்; இது 'மனைவியை யிழந்த' என்னும், பொருளை விளக் கின்றது; இனி மனைவி கைப்பொருள் போன்றவளாதலின், 'காதலியைக் கைவிட்ட' என்பதற்கு, 'மனைவியைக் கையினின்றும் நழுவவிட்ட' எனப் பொருளுரைத்தலு மொன்று. கை-தமிழுபசர்க்கம். பாதகம், நாதம்என்பன வடசொற்கள் 'பார்க்கப்படாது' என்பதை ஒரு சொன்னீர் மைத்தாகக் கொண்டு திணைபால் இடங்களுக் கெல்லாம் செல்லும் எதிர்மறை வினைமுற் றென்றாயினும், 'பார்க்க-படாது' என்று பிரித்துப் பார்க்க என்னும் செய வெனெச்சம் பார்த்தல் என்னும் தொழிற் பெயர்ப் பொருளில் வந்ததாகக் கொண்டு பார்த்தல் செய்யப்படா தென்றாயினும் இலக்கணங் கூறுக; 'வஞ் சரையஞ்சப்படும்' 'கற்றறிந்தோரைத் தலை நிலத்து வைக்கப்படும்' 'கீழ்க ளைச் செய்தொழிலாற் காணப்படும்' என்று உடன் பாட்டு முடிபுகள் வருத லால் 'பாதகனைப் பார்க்கப்படாது' என்ற எதிர்மறை முடிபையும் இலக்க ணத்திற் கொத்ததாகக் கொள்க. என்றோ என்பதில் ஓ-வினாப்பொருளது. ஆழி-ஆழத்தையுடையது; இதில், இ-கருத்தாப் பொருள் விகுதி, வாய்-எழ

னுருபு. அலவன் என்ற அஃறிணைப் பெயர் இறுதி கெட்டு அலவ எனவிளி யாயிற்று; (நன். பெ. 55.) 'ஒளிக்கின்றது' என்ற தொழிற் பெயர் இங்கு வினைமுற்றுத் தன்மையடைந்து நின்றது. முதலடி முற்றுமோனை. என்றோ-ஓ-அசை. ஆங்கு-அசை எழுவாயும் பயனிலையும் கூட்டி முடிக்கப்பட்டன.

நளன் நீலோற்பலம் முதலியவற்றை நோக்கிக் கூறுதல்.

341. பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவுங்
கானலே வேலைக் கழிக்குருகே—யானுடைய
மின்னிமைக்கும் பூணாளவ் வீங்கிருள்வா யாங்குணர்ந்தால்
என்னினைக்குஞ் சொல்வீ ரெனக்கு.

(இ-ள்) (அவ்வாறு கூறியவன் பின்னரும்பானல் முதலியவற்றைநோக்கி) பானலே-நீலோற்பலமே!, சோலை-பொதிகை மலையின் சந்தன மரச்செறிவிலிருந் துண்டாகிவரும், பசுந்தென்றல்-பசுமையான (குளிர்ந்த அல்லது இளமையான) தென்றற்காற்றானது, வந்து உலவும்-வந்து வீசுகின்ற, கானலே-கடற்கரைச் சோலையே!, வேலை-கடலைச்சார்ந்த, கழி-உப்பாற்றிலுள்ள, குருகே-நாரையே!, யான் உடைய-நான் மனைவியாகக் கொண்ட, மின் இமைக்கும்-பிரகாசம் வீசுகின்ற, பூணாள்-ஆபரணங்களை யணிந்தவளான தமயந்தி, ஆங்கு-அவ்விடத்தில் (அதாவது: அந்தப் பாழ்மண்டபத்தில்), அ வீங்கு இருள்வாய்-அந்த மிகுந்தஇருட்பொழுதில் உணர்ந்தால்-(தனியே விழித்துக் கொண்டு நான் இல்லாததை) அறிந்தால், என்நினைக்கும்-என்ன நினைப்பாள்?, எனக்குச் சொல்வீர்-எனக்கு அதனைக் கூறுவீராக, (என்றான்.)

நீலோற்பல மலரும், கடற்கரைச சோலையும், தென்றலும், கழிக்கரை நாரையும் காதலையுண்டாக்கக் கூடியனவாதலின், நளன் அக்கடற்கரையிற் சேர்ந்தவுடன் அவற்றால் அவனுக்குத் தமயந்தியின் எண்ணமும், அவளைப் பிரிந்ததாலாய துன்பமும் அதிகரித்தமையால் அவன், "அந்தோ! தமயந்தி அந்தப்பாழ்மண்டபத்தில் விழித்துக்கொண்டவுடன் என்னநினைப்பாளோ" என்று கவலை கொண்டான். அதனாலேயே அவன் அவற்றினிடம் இவ்வாறு வினவினான். தென்றல் பொதிகைச் சோலையிலிருந்து வந்துலவக் கூடியதாதலின், 'சோலைப் பசுந்தென்றல்', என்னப்பட்டது. கழி-உப்பாறு; சமுத்திரச் சார்பாகவுள்ளது; நாரை இதன் கரையிலு மிருந்து வசித்துவருமாதலின், 'கழிக்குருகு' என்று விளிக்கப்பட்டது.

பச்சை ஜலம் என்றதில் பசுமை குளிர்ச்சியின் மேலும், பசுங்குழவிஎன்றதில் இளமையின் மேலும் நிற்றல் போல இங்குத் தென்றன் மேனின்றதால் 'பசுந்தென்றல்' என்பதற்குக் 'குளிர்ந்த தென்றல்' என்றேனும், 'இளந்தென்றல்' என்றேனும் பொருள் கொள்ளலாம். தென்றல்-தெற்கி லிருந்து

வருவது; இதில், தெற்கு-பகுதி, இதனீற்றுயிர் மெய்யாகிய 'கு' நீங்கி, றகரம் னகரமாயிற்று; (நன். உயி. ௩௫) அங்ஙனமானது பெயர் விகுதியாகிய 'அல்' சேர்ந்து, து-சாரியை பெற்று அது றகரமாய்ச் சந்தியால் உகரம்கெட 'தென்றல்' என்றாயிற்று. உடைய-உடைமை யென்னும் பண்படியிற் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். பூண்-பூணப்படுவது; இது செய்ப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்ட பெயர். 'பூணாள் நினைக்கும்' என்பதில் செய்யும் என்னும் முற்று பெண்பாலுக்கு வந்தது. ஆங்கு-அசை யெனலுமாம்; இச்செய்யுளிலும் எழுவாய், பயனிலை வருவித் துரைக்கப் பட்டன.

நளன் சமுத்திரத்தை நோக்கிக் கூறுதல்.

342. போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்று மென்போல வார்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று.

(இ-ள்) (அவ்வாறு வினவிய நளன் பின்னரும் சமுத்திரத்தை நோக்கி) ஆர்கலியே-சமுத்திரமே!, போவாய்வருவாய்-போகின்றாய் மறுபடியுந்திரும்பி வருகின்றாய், புரண்டு விழுந்து-உருண்டு வீழ்ந்து, இரங்கி - பரிதவித்து, (ஒலித்து), நாவாய்-நாவோடு கூடியவாய், (கப்பல்), குழற-தடுமாறிப்போக, (அலைய), நடுங்குறுவாய்,நீ நடுக்கங் கொள்கின்றாய், (ஆதலின்), தீவாய்-நெருப்பினிடத்தி லிருந்தும், அரவு-பாம்பை, அகற்றும்-நீக்கின, என்போல-என்னைப் போலவே, (நீயும்), மாதை-மனைவியாகிய பெண்ணை, இன்று-இன்றைக்கு, இரவு-இராத்திரியில், அகற்றி வந்தாய் கொல்-நீக்கிவிட்டு வந்தனை போலும்?, (என்றும் கூறினான்); [எ-று.]

நளன் மனைவியைப் பிரிந்ததனால் போதலும் வருதலுமாய்ப் பூமியில் வீழ்ந்து புரண்டு பேச்சுத்தடுமாறிப் புலம்பி நடுங்கி வருந்தினான். இச்செயல்களெல்லாம் கடலினிடத்தும் பொருந்தி யிருந்தன. ஆதலின், அவன், "இக்கடலும் நம்மைப்போலவே மனைவியைப் பிரிந்திருக்குமோ" என்று நினைத்து இங்ஙனம் அதனிடத்து வினவினான். நீர், அலையினால் கரையோரத்தில் போதலும் வருதலும், புரண்டு புரண்டு வீழ்தலும், கப்பல்கள் காற்றினால் அசைதலும், எவ்விடத்தும் நீர் ஆடிக் கொண்டிருத்தலும் சமுத்திரத்திற்குரிய செயல்களாம்; இவற்றைச் சிலேடை வகையால் மனிதர் செயல்களாகக் குறித்தான் நளன். இங்ஙனம் கூறிய நளன்கூற்றில் சிலேடையை அங்கமாகக் கொண்டதற்குறிப்பேற்றவணி அமைந்திருத்தல் காண்க. நளன் தமயந்தியைப் பிரியுங்காலத்தில் போதலும் வருதலுமா யிருந்தா னென்பதை, "போயொருகால் மீளும் புகுந்தொருகால் மீண்டேகும்" என்னும்இந்நூல்கலிதொடர் காண்டச்செய்யுளடியானும், "செல்லும் வெந்துயரோடுஞ் செல்லக் காலெழாது ஒல்லையில் மீளும்" என்ற நைடதச் செய்யுளடியா

னும் உணர்க. 'நாவாய்' என்பது கடலுக் காம்போது ஒருமொழி, நளனுக் காம்போது தொடர்மொழி கார்க்கோடகனை நளன் தீயினின்று மெடுத்த வுடன் அவன் நளனைக் கடிக்க அந்நளன் கரிய நிறத்தை அடைந்தபடியால் அந்நிறத்தையுங் குறிப்பிட்டு "நிறத்தாலும் என்னைப் போன்ற நீ" என்பதை விளக்குதற் பொருட்டே, "தீவாய் அரவகற்று மென்போல என்முன்.

புரண்டு என்பதில், புரள்-பகுதி. நடுங்குறுவாய் என்பதில் உறு-துணை வினை. 'தீவாய்' என்பதில், 'வாய்' என்னும் ஏழனுருபு ஐந்தாவதனீக்கப் பொருளில் வந்தது; இஃதுருபு மயக்கம்; இனி இது, 'தீவாய்ந்த அரவு' என வினைத்தொகையுமாம். 'அகற்றும்' என்பதில், அகல் என்பதன் பிறவினை யான அகற்று-பகுதி; அதில் று பிறவினை விகுதி. ஆர்கலி-நிறைந்த ஓசை; இது வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்க்கடலை யுணர்த்திற்று; நிறைந்த ஓசையையுடைய தெனவிரியும். கடலை 'ஆர்கலியே' என்று விளித்தது, அதன் இயல்பான ஓசையைப் பிரிவாற் கதறுவதாகக் குறித்தற் பொருட்டாம். மாது-விருப்பத்திற் கிடமானவள்; விருப்பத்தை யுணர்த்தும் 'மாதர்' என்ற உரிச்சொல், மாது என விகாரப்பட்டு ஆகுபெய ராய் விருப்பத்திற்கிடமான பெண்ணை யுணர்த்தி நின்றது. 'வந்தாய் கொல்' என்பதில் 'கொல்' என்னும் இடைச்சொல் வினாப்பொருளது; இது, தற்கு றிப்பேற்ற வுருவாய் வந்தது. போவாய், வருவாய், நடுங்குறுவாய் என்பவற் றில் வகரவிடைநிலை-கால முணர்த்தாது தன்மையுணர்த்தி நின்றது. போ வாய் வருவாய்-முரண்தொடை. இச்செய்யுட் கருத்து, பிரிவு காலத்தில் கட லைநோக்கி ஆண்பால் இரங்கியதாகும் இங்ஙனமே பெண்பால் இரங்குதலு முண்டு. இச்செய்யுட் கண்ணும் இசை யெச்சமாக எழுவாயும், பயனிலையும் கூட்டியுரைக்கப் பட்டன.

நளன் அயோத்தி நகரடைதல்.

343. முன்னீர் மடவார் முறுவற் றிரள்குவிப்ப
நன்னீ ரயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்மலரைத் தும்பி
அருகுடைக்கு நன்னாட் டரசு.

(இ-ள்) (அவ்வாறு கடற்கரையிற் புலம்பிய பின் பிரயாணஞ் செய்து) பொன் நீர்-பொன்னின் குணமாகிய, முருகு-அழகை, உடைக்கும்-சிதைந் துபோகச் செய்கின்ற, (அதாவது: பொன்னினும் அழகு மிக்க), தாமரை யின்-செந்தாமரையினது, மொய்மலரை-இதழ் நெருங்கிக் குவிந்த மலரை, (அதாவது: அரும்பை), தும்பி - வண்டுகள், அருகு - ஓரத்தில், (சென்று-குடைந்து, உடைக்கும்-இதழ்களை நெகிழ்த்திவிடுகின்ற, நல்நாடு - சிறந்த நிடததேசத்திற்கு, அரசு-அரசனாகிய நளன், முன் நீர்-பழமையான நீரையு டைய சமுத்திரமானது, மடவார்-பெண்களின், முறுவல் திரள் - பற்களைப்

போன்ற முத்துக்களின் தொகுதியை, குவிப்ப-அலைகளால் கொழித் தொதுக்கிக் கரையில் திரளாகச் சேர்க்க, (அதனைப்பார்த்து, 'இது தமயந்தியின் பல்வரிசைசையை ஒத்திருக்கின்றது' என்று சிந்தித்துக்கொண்டே போய்) நல்நீர்-நல்லநீர வளம்பொருந்திய, அயோத்தி நகர் - அயோத்தியா புரி என்னும் நகரத்தை, அடைந்தான்-சேர்ந்தான்; [எ-று.]

முன்னே கடற்கரையைச் சேர்ந்து மனைவியை நினைத்து வருந்திய நளன் கார்க்கோடகன் சொற்படி அதன் வழியாகவே சென்று அயோத்தி நகரத்தையடைந்தான் என்பது இதன் கருத்து. கடலில் முத்துக்கள் அதிகமாயிருக்குமாதலின் அவற்றைக் கடல் நீரானது திரள் திரளாகக் கரையில் ஒதுக்கிக் கொண்டிருக்கும்; அவ்வாறொதுக்குவதை கடலோரமாகவேசென்ற நளன் பார்த்து அம்முத்தின் திரள்கள் தமயந்தியின் பல் வரிசையை நிகர்த்திருந்தபடியால் அவளெண்ணம்மனத்திலுதிக்கஅவளைசசிந்தித்துக் கொண்டே போயினன். இனி "முன்னீர்மடவார் முறுவல் திரள்குவிப்ப" என்ற தொடருக்கு, "சமுத்திரக்கரையில் உலாவும் பட்டினப்பெண்கள் புன்சிரிப்பின் கூட்டத்தைச் சேர்க்க (அதாவது: மிகுதியாகப் புன்னகை புரிய)" என்று பொருள் விரித்துச் "சமுத்திரக்கரையில் உலாவும் பெண்கள் தன்னைப் பார்த்துப் புன்னகைபுரிய நளன் கடலோரமாகவே சென்று அயோத்திநகரத்திற் புகுந்தான்" என உரைத்தலுமொன்று இப்பெண்கள் நள்னைக் கண்டு சிரித்ததற்குக் காரணம், கார்க்கோடகனால் அவனுக் கேற்பட்ட விகாரவடிவமேயாம். இங்ஙனம் பொருள் கொள்வதிலும், 'முன்னீர் மடவார்' என்பதற்குச் 'சமுத்திரக்கரையில் வாழும் நெய்தனிலப் பெண்கள்' எனவும், 'எதிரில் ஜலமெடுத்துச் செல்லும் மாதர்' எனவும் பொருள் கொள்ளலாம். 'தண்ணீரெடுத்து எதிரிற் செல்லும் மாதர்' எனப் பொருள் கொள்ளும்போது, முன் + நீர் + மடவார் = எனப் பிரித்தல் வேண்டும். நகரங்களிலுள்ள மாதர்கள் திரள் திரளாகக் குளத்திற்குச் சென்று குடத்தில் நீரெடுத்து வருவார்கள்; அப்பொழுது ஏதேனும் அதிசயத்தைக் கண்டால் அவர்கள் ஒருவரோடொருவர் அதைப்பற்றிப் பேசிச சிரிப்பது இயற்கை; ஆதலின், இங்கு நளனையும் கண்டு சிரித்தார்களென்க.

'முன்னீர்' என்பது, 'பழமையான நீர்' அல்லது, 'முந்திப்படைத்தநீர்' எனப் பொருள்பட்டு ஆகுபெயராய் அதனையுடைய கடலையுணர்த்தும்; கடவுள் நீரையே முந்திப்படைத்தாரென்று புராணங் கூறும். இனி, 'மூந்நீர்' எனப் பாடமோதி அதற்கு, ஆக்கல், அளித்தல், காத்தல் என்னும் மூன்று தொழிலையும் செய்யும் நீர் எனவும், ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் என்னும் மூன்றுநீர் எனவும் பொருள் கூறலுமொன்று; சமுத்திர ஜலத்தில் இந்த மூன்று நீர்களும் அடங்கியிருத்தலின், அஃதிப்பெயர் பெற்றதென்க பதவுரையில் கூறிய பொருளின்படி முறுவல்-உவமையாகு பெயராய் முத்தையுணர்த்தி நின்றது; 'முறுவல்' என்பதற்குப் 'புன்னகை' எனப் பொருள் கூறி அஃதாகுபெயராய் முத்தையுணர்த்திற்றெனினுமாம். இச்செய்யுளில்,

'முன்னீர் மடவார் முறுவற்றிரள் குவிப்ப'' என்று பெண்களின் பற்க ளுக்கு முத்துக்களை உவமை கூறியிருத்தல்போல நைடதத்தில்,

'மதர்வை நோக்கிதன் வாள்நகை யெனவுயிர் வருத்தும்
கதிர்செய் நித்திலம் வரன்றெறி திரைக்கடல் கண்டான்''

என்ற செய்யுளடிகளிலும் கூறியிருத்தலையும், இப்பொருளே பெரும்பான் மையும் அதிலும் அடங்கியிருத்தலையும் காண்க. மடவார்-இளமையையுடை யவர்; மடமை-இளமை; மாதர்க்கணிகலமான பேதமை யெனினும் அமை யும். குவிப்ப-வினையெச்சம். 'பொன்னீர்' என்பதில், நீர்-நீர்மையென்ற பண்புப் பெயர் விகாரம்; மைவிகுதிகெட்டு நின்றது. 'மொய்ம்மலர்' என்பது அரும்பையுணர்த்தினின்றது. இதழ்கள் நெருங்கிக் குவிந்திருத்தலும், வண்டு ஓரத்தைக் குடைந்து மலர்வித்தலும் அரும்பினிடத்தே யுள்ளனவாதலின் 'மொய்ம்மலர்' அரும்பெனக் கொள்ளப்பட்டது; இனித் தாமரை யரும்பு பொன்னிறமுடையதாதலின் அதற்கேற்பப் 'பொன்னீர்' என்ற குறிப்பினு லும் அஃதரும்பெனக் கொள்ளப்படும்.

இனி, ''பொன்னீர் முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரை''என் பதற்குப் ''பொன்னீர்-பொன்னின் குணமான செம்மையழகுகளையும், முரு கு-தேனை அல்லது வாசனையையும், உடை-உடைய, குந்தா-குந்தியிராத, (அதாவது படிந்திருக்கின்ற), மரையின் மொய்மலரை-தாமரையின் வலிய அரும்பை,'' எனப் பொருளுரைத்தலு மொன்று; தாமரைக்கொடி படர்ந் திருப்பதாதலின், அதனைக் 'குந்தாமரை' எனல் பொருந்தும். இவ்வுரைக் குப் பின்னிரண்டடிகளும் திரிபு என்னுஞ் சொல்லணியுடையனவாம்.

''தாமரையின் மொய்ம்மலரைத் தும்பியருகுடைக்கும் நன்னாட்டரசு'' என்றதனால், 'நளன், வேண்டுவார்வேண்டியபடி தன்பொருளை வலியவந்து பெற்றுப்போம்படியான உதார குணமுள்ளவன்' என்ற குறிப்பும் விளங் கும். நளன், கார்க்கோடகனிடத்தினின்றும் புறப்பட்டுப் பத்தாவது நாளில் அயோத்தி நகரடைந்தானென்பது முத்நூலால் விளங்குகின்றது; நைடத நூலாசிரியரும், ''இன்ன தன்மையன் வைகலீரைந்துபோ யிறப்ப......அன் னங்கண்படுவெள்ளநீ ரயோத்தி நாட்டடைந்தான்'' என்று கூறியிருத்தல் காண்க, தாமரஸம்என்ற வடமொழி, தாமரையென விகாரப்பட்டு வந்தது.

நளன் ருதுபர்ணனுடைய வாயில் காப்போரிடம் சென்று
தன்வரவை அம்மன்னனுக் குணர்த்தும்படி வேண்டல்.

344. மான்றேர்த் தொழிற்கு மடைத்தொழிற்கு மிக்கோனென்
றான்றேய்க்கும் வேலா னுயர்நறவத்—தேன்றோய்க்குந்
தார்வேந்தற் கென்வரவு தானுரைமி னென்றுரைத்தான்
தேர்வேந்தன் வாகுவனுய்ச் சென்று.

(இ-ள்.) (அவ்வாறு அயோத்திக்குச் சென்றபின்னர்) தேர்வேந்தன்-தேரையுடைய அரசனான நளன், வாகுவன் ஆய்-பாகுகனென்னும் பெயருடையவனாகி, சென்று-(ருதுபர்ணனுடைய அரண்மனை வாயிலிற்) போய், (துவாரபாலகரை நோக்கி), மான்தேர் தொழிற்கும் - குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்துந் தொழிலிலும், மடை தொழிற்கும்-சோறு சமைக்கும் தொழிலிலும், மிக்கோன்-(யான்)சிறந்தவன், என்று என்றுசொல்லி,ஊன்-பகைவர்களுடைய உடம்பின் தசையை, தேய்க்கும் - உராய்ந்தழிக்கின்ற வேலான்-வேலாயுதத்தையுடையவனாகிய, உயர்-உயர்ந்த, நறவம்|- வாசனையுள்ள, தேன் தோய்க்கும்-தேனினால் நனைக்கப்பட்டிருக்கின்ற, தார்-மலர்மாலையையணிந்த, வேந்தற்கு-உங்கள் அரசனான ருதுபர்ணனுக்கு, என் வரவை எனது வருகையை, (அதாவது: நான் வந்திருக்கின்ற செய்தியை), உரைமின்-சொல்லுங்கள், என்று உரைத்தான்-என்றுசொன்னான்; [எ-று.]

ஒருமனிதன் ஒரு புதியவிடத்திற்குச்சென்றபோது தனக்குத்தெரிந்த தொழில்களைக் கூறி அதன்மூலம் அங்குள்ளவர்களைப் பழக்கம் செய்துகொண்டு அவர்களிடம் வேலைக்கமருதல் இயற்கையாதலின், நளனும் அங்குச் சென்றவுடன் அவர்களிடம் தனக்குத் தெரிந்த தொழில்களையும், அவற்றில் தான் சிறந்திருத்தலையும் கூறி இத்தகைய தொழில்களையுடையதான் வந்திருப்பதை அரசனிடம் தெரிவிக்குமாறு வேண்டினான். இவ்வாறு கூறியதன் மூலம் நளன் ருதுபர்ணனிடம் அத்தொழில்களைச் செய்யும் வேலையாளாய் அமர இசைந்திருப்பதையும் குறிப்பால் விளக்கினான். இவன், அசுவவித்தையிலும், பாகத்தொழிலிலும் சிறந்தவனாதலாலும், தேர்ப்பாகனாக அமரும்படி கார்க்கோடகன் தனக்குக் கூறியிருக்கிறபடியாலும தேர்ப்பாகனெனப் பெயர் வைத்துக்கொண்டே சென்று 'இவ்விரண்டு தொழில்களிலும் நான் வல்லவன்' என்று கூறினான். இவன் சமையல் தொழிலில் வல்லவனானது அக்கினிதேவன் கொடுத்த வரத்தினாலேயாம். இது

"மிடல்கெழு மேழக மேற்கொளு மேலோன்
உடைதிரை வேலையி னின்னமு தொப்ப
மடிதலில் வெங்கன லின்றியும் வாளா
அடிசி லடுந்தொழில் விஞ்சை யளித்தான்."

என்ற நைடதச் செய்யுளால் விளங்கும. இங்ஙனம் இவன் வரம் பெற்றதனால், நெருப்பில்லாமல் உருசி மிகுந்த உணவுகளைச் சமைக்குந் திறமை பெற்றான். இத்திறமையானது இன்னும் உலகத்தார், உயர்ந்த உணவுகளை, 'நளபாகம் போன்றவை' என்று உவமித்துக் கூறுவதன் மூலம் விளங்கும். அரசர்கள் அலங்காரத்திற்காகவும் அடையாளத்திற்காகவும், வெற்றிக் குறிகுறியாகவும் எப்பொழுதும் புஷ்பமாலையை யணிந்திருத்தல் இயல்பு; ஆதலின், 'தார்வேந்தன்' என்றார் புலவர். 'ஊன் தேய்க்கும் வேலான்' என்றது, தார்வேந்தனுக்கடை; இனி, இதனைத் தேர்வேந்தனுக்குங் கொள்ள

லாம். நளன், அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் என்னும் நால்வகை வீரர்களுள் அதிரதனாய்ச் சிறந்திருந்தவனாதலின், ஆசிரியர் அவனைத் 'தேர் வேந்தன்' என்றார். சதுரங்க சேனைகளில் தேர் சிறந்ததாதலின் அதனை மற்ற மூவ்வகைப் படைக்கும் உபலக்ஷணமெனவுங் கொள்ளலாம்.

மான், ஊன் என்பவற்றிலுள்ள,ன்-சாரியை; "ஆமாகோனவ்வணைய வும் பெறுமே" (நன்-உரு-பு.கூ) என்பது விதி. விலங்கின் பொதுப் பெய ராகிய மா-என்பது இங்கு இடம் நோக்கிக் குதிரையை உணர்த்தி நின்றது. தொழிற்கு-உருபு மயக்கம்; ஏழனுருபு நான்கனுருபாக மயங்கி வந்தது. மடை-மடுக்கப்படுவது; அதாவது; சோறு; இதில், மடு-பகுதி; ஐ-செயப்படு பொருள் விகுதி; மடுத்தல் உட்கொண்டு நிறைத்தல்; ஆகவே, 'மடை' என் பது 'சோறு' என்று பொருள்பட்டு 'மடைத்தொழில்' என்பது, சோறு சமைக்குந் தொழில்' எனப் பொருள்படும். மிக்கான் - வினையாலணையும் பெயர்; இதில் னகரவீற்றயல் ஆகாரம் ஓகாரமாயிற்று. (நன்·பெ.உ) நறு என்பதில் குறியதன்கீழ் ஆ, குறுகி அம்சாரியை சேர்ந்து நறவம் என்பதா யிற்று. உரைமின்-ஏவற்பன்மை. வாகுவன்-காரணவாக்கப் பெயர்; கார்க் கோடகன் நளனைக் கடித்ததனால் அவனுடைய தோள் சிறுத்தது பற்றி அக்கார்க்கோடகனால் அவனுக் கிடப்பட்டதிது. மிக்கோன் யான்-தன் மையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. வேலான் தார் வேந்தன்-இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. தான்-அசை.

### நளன் ருதுபர்ணனிடம் சேர்தல்.

345. அம்மொழியைத் தூத ரரசற் கறிவிக்கச்
செம்மொழியாத் தேர்ந்ததனைச் சிந்தித்தே—இம்மொழிக்குத்
தக்கானை யிங்கே தருமி னெனவுரைக்க
மிக்கானுஞ் சென்றான் விரைந்து.

(இ-ள்.) (நளன் அவ்வாறு கூறிய) அ மொழியை-அந்த வார்த்தையை, தூதர்-தூதுவர்கள் (செய்தியறிவிப்பவர்), அரசற்கு-ருதுபர்ணமன்னனுக்கு, அறிவிக்க-தெரிவிக்க, (அம்மன்னன்) அதனை சிந்தித்து-அந்தவார்த்தையை ஆலோசித்து,செம்மொழி ஆ தேர்ந்து-உண்மை வார்த்தையாகத் தெளிந்து, இமொழிக்கு தக்கானை-இந்தச் சொல்லுக்குத் தகுந்த யோக்கியதையுடைய வனை, இங்கே-இவ்விடத்தில், தருமின்-அழைத்துக் கொண்டு வந்து சேருங் கள், என உரைக்க-என்று அத்தூதுவரை நோக்கிக் கூறிக் கட்டளை யிட, (அவ்வாறே தூதுவர்களால் அழைத்துக் கொண்டு போகப்பட்டு), மிக்கா னும்-(அசுவவித்தையிலும் மடைத்தொழிலிலும்) மிகுந்தவனாகிய நளனும், விரைந்து-துரிதமாகி, சென்றான்-போய் அவ்வரசனிடம்சேர்ந்தான்; [எ-று]

நளன் கூறிய வார்த்தையைத் தூதுவர்போய்ச் சொன்னவுடனே ருது பர்ணனுக்கது உண்மையானதாகத் தோற்றிற்று; அதனால் அவன், நளனை

அழைத்து அவனுடைய தொழில் திறமையை நேரில் விசாரித் துணர்ந்து தன்னிடம் வேலைக்கு வைத்துக்கொள்ள விரும்பினான்; ஆதலின், நளனை அப்பொழுதே அழைத்து வருமாறு தூதுவர்க்குக் கட்டளை யிட்டான். அரசர் கட்டளையைத் தாமதமின்றி உடனே நிறைவேற்றுதல் மற்ற மனிதரின் கடமையாதலின் அக்கட்டளையைக் கேட்டவுடனேயே நளன் அம்மன்னனிடம் விரைந்து சென்றான். அரசர் நோக்கம் அடிக்கடி மாறிவிடும் இயல்பினை யுடையதாதலின், அவர் குறிக்கும் காரியங்களை அறிஞர் உடனே செய்து நிறைவேற்றி விடுவர்.

மொழிக்குத் தக்கான் என்றது, அதன்படி காரியம் செய்யத் தக்கவன் என்னும் பொருளில் நின்றது. அரசற்கு என்பதில் நான்கனுருபு - கோடற் பொருளது. ஆ-ஆக என்பதன் தொகுத்தல். உரைக்க - என்னும் செயவெனெச்சம் இங்கு இறந்த காலத்தில் வந்தது மிக்கான்-மிகு என்னும் முதனிலைமேற் பிறந்த இறந்தகால வினையாலணையும் பெயர்; இதில் பகுதி யிரட்டிக் காலங்காட்டிற்று. தக்கான்-என்பதில் தகு-பகுதி. மிக்கானும் என்றதிலுள்ள உம்மை-இறந்தது தழுவிய எச்சப் பொருளது.

**ருதுபர்ணன் வாகுவனாகிய நளனை நோக்கி வினவுதல்.**

346. பொய்யடையாச் சிந்தைப் புரவலனை நோக்கித்தன்
செய்ய முகமலர்ந்து தேர்வேந்தன் - ஐயாநீ
எத்தொழிற்கு மிக்கா னியாது பெயரென்றான்
கைத்தொழிற்கு மிக்கானைக் கண்டு.

(இ-ள்.) (அவ்வாறு சேர்ந்த மாத்திரத்தில்) தேர்வேந்தன் - தேரையுடைய அரசனாகிய ருதுபர்ணன், கைத்தொழிற்கு மிக்கானை-(தேர்க்குதிரை செலுத்துதலும் சமையல் செய்வதுமாகிய) கைத்தொழில்களிற் சிறந்தவனான அவனை, கண்டு-பார்த்து, (முகக்குறிப்பால் இவன் சிறந்த புத்திமானாகவே யிருப்பானென் றுன்னி), தன்-தன்னுடைய, செய்ய-செம்மையாகிய, முகம் மலர்ந்து-முகமானது மலர்சசி யடையப்பெற்று, (அவ்வாருகனென நடித்து வந்த), பொய் அடையா-பொய்சேராத, சிந்தை உள்ளத்தையுடைய, புரவலனை-நளமகாராஜனை, நோக்கி -, ஐயா-ஐயனே! நீ—, எத்தொழிற்கு மிக்கான்-எத்தொழிலிற் சிறந்தவன்?, பெயர்யாது - உன்னுடைய பெயரென்ன?, என்றான் -, என்று கேட்டான்; [எ-று.]

நளன்போய் ருதுபர்ணனைக் கண்டவுடன் அவன் முதலில் அந்நளனை நன்றாக உற்று நோக்கினான்; அவ்வாறு நோக்கிய மாத்திரத்தில் அந்நளனாகிய வாகுவன் தான் தூதுவரிடம் கூறியபடி இரண்டு தொழில்களிலும் வல்லவனாயிருப்பா னென்பதும், சிறந்த புத்திமானா யிருப்பானென்பதும் அவனுடைய முகத்தோற்றத்தால் விளங்கின. ஆதலின் ருதுபர்ணனுக்கு, "நாம்

இன்று இருதொழில்களின் மிக்கா னொருவனைப் பெற்றேம்" என்னும் மகிழ்ச்சி மனத்திலுதித்தது; அதனால் முகம் மலர்ச்சியடைந்தது. அங்ஙனம் அவன் களிப்புற்றபடியால் மீண்டும் நளனை நோக்கி, "நீ எத்தொழில் வல்லாய்? உன் பெயரியாது?" என்றுவினவினான். நளன் தொழில்களைத் தூதுவர்சொல்ல ருதுபர்ணன் அறிந்திருந்தும், அவனைத் தன்னிடத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்னும் எண்ணம் தனக்குதித்தபடியாலும், அவன் தொழில் பெயர் முதலியவற்றை நேரில் கேட்டுத் தெரிந்து கொள்வது முறைமையாதலாலும் இவ்வாறு அவனுக்குத் தெரிந்த தொழில்களைப் பற்றியும் பெயரைக் குறித்தும் அவனிடம் கேட்டான்.

ருதுபர்ணன், இங்குத் தொழிலாளியை 'ஐயா!' என்றது அன்பின் பொருட்டு வந்த மரபு வழுவமைதி: இனி, அவனுடைய யோக்கியதையைப் பற்றிக் கௌரவித்து ருதுபர்ணன் அங்ஙனம் விளித்தான் எனினும் அமையும். 'நீ மிக்கான்' என்றது முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. புரவலன்-பாதுகாத்தலில் வல்லவன்; புரத்தல்-பாதுகாத்தல், அதில் வல்லவன் புரவலன். செய்ய-செம்மை யென்னும் பண்படியிற் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; செம்மையின்மையீறு போய் முன்னின்ற மகரமெய் யகரமாகத்திரிந்தது. "கைத்தெழிற்கு மிக்கானைக் கண்டு" என்பதை அடுத்தசெய்யுளுடன் இயைத்துக் குளகமாக்கி, அதற்குப் "படைவகுப்புத் தொழிலில் சிறந்த ருதுபர்ணனைப் பார்த்து" என்று பொருள்கொண்டு, 'பார்த்து' என்னும் எச்சத்தை, அடுத்த செய்யுளில், 'வல்லவன் யானென்றான்' என்றமுற்றோடு கூட்டி முடித்தலுமொன்று. கை-படை வகுப்பு மாகும்.

ருதுபர்ணன் வினவுக்கு வாகுகனாகிய நளன் கூறிய விடை.

347. அன்ன மிதிப்ப அலர்வழியுந் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்குந் திருநாடர்—மன்ன
மடைத்தொழிலுந் தேர்த்தொழிலும் வல்லன்யா னென்றான்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து.

(இ-ள்) (அவ்வாறுவினவியவுடன்), கொடைத்தொழிலில்-ஈகைத்தொழிலில், மிக்கான்-மிகுந்தவனாகிய நளன், குறித்து-ருதுபர்ணனை நல்லவனாக மதித்து, (அவன் முகத்தை நோக்கி), அன்னம்-அன்னப்பறவைகள், மிதிப்ப-மேலேறி மிதித்தலினால், அலர்-தாமரை மலர்களினின்றும், வழியும்-வடிகின்ற, தேறல்-தேனானது, போய்- (வாய்க்கால்களின் வழியாக நீரோடு) கலந்தோடி, செந்நெல்-செந்நெற்பயிரை, விளைக்கும்-செழிப்புற்று வளர்ந்து விளையச் செய்கின்ற திரு-இலக்குமி வாசஞ்செய்யும்படியான, நாடர்-(கோசல) நாட்டி லுள்ளார்க்கு, மன்ன-அரசனே!, யான்-நான், மடைத்தொழிலும் சோறு சமைக்குந் தொழிலிலும், தேர்த்தொழிலும்-தேரைச் செலுத்துந் தொழிலிலும், வல்லன்-வல்லவன், என்றான்-என்றுரைத்தான்; [எ-று.]

ருதுபர்ணன் மேற்கூறியபடி வினவியவுடன் நளன் அவனை நோக்கி, "மன்னனே! நான் மடைத்தொழிலிலும் தேர்த்தொழிலிலும் வல்லவன்" என்று கூறினான் என்பது இதன் கருத்து. ருதுபர்ணன் தொழிலையும் பெயரையும் வினவியதற்கு நளன் தன் தொழில்களை மாத்திரம் கூறியதென்னையெனின், தொழில்களைக் கூறிய மாத்திரத்தில் அவைகாரணமான பெயர்களும் அமையுமென்பது பற்றி யென்க. 'மடைத்தொழிலிலும் தேர்த்தொழிலும் வல்லன்' என்றதனால் அத்தொழில்களினடியாகச் சுயம்பாகி யென ஒரு பெயரும், வாகுகன் என்று ஒரு பெயரும் அமைந்தன. ஆதலின், நளன் தன் தொழில்களை மட்டுங்கூறி அவற்றின் மூலம் பெயர்களையும் விளக்கினான். இதனாலேயே அவன் பெயர்களை வெளிப்படக் கூறவில்லை. இங்ஙனம் அவனுக்கு இரண்டு பெயர்கள் ஏற்பட்டிருப்பினும், கார்க்கோடகன் சொற்படி வாகுகன் என்றபெயரை முதலிலேயே அவன்வைத்துக்கொண்டு சென்றதனால் அப்பெயரே பெரும் பான்மையும் வழங்கும்.

இச்செய்யுளின் முதலிரண்டடிகளில் கோசல நாட்டின் வளங்கள்உயர்வுநவிற்சியாக அமைந்துள்ளன. அலர், மலர்கட்குப் பொதுப்பெயராயினும், அதில்அன்னத்தின் செய்கைகூறப்பட்டமையால் தாமரைமலரெனக்கொள்ளப்பட்டது; அன்னம்பெரும்பான்மையும் தாமரையிலேயே வாசஞ்செய்யும் இனிப் "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" என்ற நியாயம் பற்றியும் இங்ஙனம் கொள்ளலாம். முதலெழு வள்ளல்களில் நளனும் ஒருவனாதலின், 'கொடைத்தொழிலில் மிக்கான்' எனப்பட்டான். தேறல் - தெளிவுள்ளது; தெளிதல் என்னுந் தொழிற் பெயர் ஆகுபெயராய் அதனையுடைய மதுவை யுணர்த்தி நின்றது. நெல்லுக்குச் செம்மை, செழிப்புப் பற்றி வந்த பெயர்; நெற்பயிரின் தானியம் சிவந்திருத்தல் பற்றி வந்த தெனினுமாம். வல்லன் - தன்மை யொருமைக் குறிப்பு முற்று. கொடை - ஐவிகுதிபெற்ற தொழிற் பெயர். அன்னம்- ஹம்ஸம் என்ற வடமொழித்திரிபு. மிதிப்ப-செயவெனெச்சம்; இது காரணப்பொருள தாதலின் இறந்த காலத்ததாம். அலர் வழியும்- ஐந்தாம் வேற்றுமைத்தொகை. 'தொழிலும்' என்பதில் இல்லுருபுதொக்கது.

அடுத்த செய்யுளில் தமயந்தியின்செய்தி கூறப்படுவதால், இங்குநளன் செய்தி முடிவுறாதிருப்பினும் கதைத்தொடர்ச்சி பற்றி, "நளன் இவ்வாறு கூறியதைக் கேட்டு ருதுபர்ணன் அவனைத் தனக்குத் தேர்ப்பாகனாகவைத்துக்கொள்ள, அவன் மனைவியை விட்டகன்று வந்த வருத்தத்துடனே அங்குத் தங்கியிருந்தனன்" எனக்கூட்டி முடித்துக் கொள்ள வேண்டும். இனித் தந்தையிடம் சென்றிருந்த தமயந்தி ஆங்கிருந்து தன் நாயகனைத் தேடுதற்குத் தூதனுப்புஞ்செய்தி கூறப்படும்.

**தமயந்தி நளனைத் தேடுதற்குப் புரோகிதனை அனுப்பத் தொடங்குதல்.**

348. என்னை இருங்கானி னித்த விகல்வேந்தன்
தன்னைநீ நாடுகெனத் தண்கோதை—பின்னுப்

புரைகதிர்வேல் வேந்தன் புரோகிதனுக் கிந்த
உரைபகர்வ தாளு ளுணர்ந்து.

(இ-ள்) (நளன் அங்ஙனம் ருதுபர்ணனிடம் சேர்ந்திருக்க), தண் கோதை-குளிர்ச்சி பொருந்திய மாலையை யணிந்தவளான தமயந்தி, (தன் நாயகனைத்தேட நினைந்து), உணர்ந்து-(அவனைக்காணும் உபாயத்தைக் குறித்து ஆலோசித்து ஒரு மார்க்கத்தை) அறிந்து, மின்னுபுரை-மின்னலை நிகர்த்த, கதிர்-பிரகாசம் பொருந்திய, வேல்-வேலாயுதத்தையுடை, வேந்தன்-அரசனாகிய வீமனென்னும் தன் தந்தையினுடைய, புரோகிதனுக்கு-வைதிககாரியஞ் செய்யும் ஆசாரியனாகிய ஒரு வேதியனுக்கு, என்னை—, இருங்கானில்-பெரியகாட்டிலே நீத்த-விட்டுப் பிரிந்து போயின, இகல்-வெற்றி பொருந்திய, வேந்தன் தன்னை-அரசனாகிய என் நாயகனை, நீ நாடுகென-நீ தேடுவாயாக என்று, இந்த உரை-இந்த வார்த்தையை, பகர்வது ஆளுள்-சொன்னாள்;

தமயந்தி தன் நாயகனைத் தேடிக்காணும் மார்க்கத்தை யுணர்ந்து, வீமராஜனுடைய புரோகிதனை நோக்கி, 'நீ என் நாதனைத் தேடுவாயாக' என்று அதன் பொருட்டுக் கீழ்வரும் வார்த்தையை உரைத்தா ளென்பது இதன் கருத்து. கீழ் வரும் வார்த்தையாவது அவனைக் காணும் உபாயம் பொருந்திய வார்த்தையாம் அஃதடுத்த செய்யுளில் வரும் இங்குக் கூறிய புரோகிதன் பெயர் பர்ணாதன் என்பதாம்; இதுமுதனூலா லறியப்படும். இருமை + கான்=இருங்கான்; இதில் பண்புப்பெயரின் மை இறுதிபோய் இனமெல்லெழுந்து மிக்கது. இருமை பெருமை. 'நாடுகென' என்பது அகரந்தொகுத்தலாய், 'நாடுகென' என வந்தது. தண்கோதை-பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இனித் 'தண்கோதை' என்பதற்குக் 'குளிர்ச்சியான பூமாலை போல மெல்லியவளான தமயந்தி' எனப்பொருள் விரித்துக் 'கோதை' என்பதை உவமையாகு பெயராகக் கோடலுமொன்று. மின் + புரை=மின்னுப்புரை; இது, "மின்பின் பன் கன் தொழிற் பெயரனைய" (நன்-மெய்-கச) என்பதன் விதிபற்றி, உகரச்சாரியை பெற்று, "இயல்பினும் விதியினும்" என்றதன் பொதுவிதியால் வலிமிக்கு வந்தது. புரை-உவமையுருபு. புரோகிதன்-புரோஹிதன் என்ற வடசொற்றிரிபு; வைதிக காரியங்களில் முன்னே வைக்கப்படுபவனென்று காரணப்பொருள் தரும். பகர்வது ஆளுள்-சொல்லுதல் உண்டாகப் பெற்றாள்; 'சொன்னாள்' என்பது இதன் திரண்ட பொருள். 'புரோகிதனுக்கு' என்பதில் நான்கனுருபுத்தொடர் இரண்டனுருபும் பயனும் தொக்க பொருளில் வந்தது.

தமயந்தி, புரோகிதனுக்கு நளனைக் கண்டுபிடிக்கு முபாயங் கூறல்.

349. காரிருளிற் பாழ்மண்ட பத்தேதன் காதலியைச்
சோர்துயிலி னீத்த துணிவன்றோ—தேர்வேந்தற்

*சென்றறைந்தா னேர்நின் றெதிர்மாற்றந் தந்தாரைச்*
*சென்றறிந்து வாவென்றாள் தேர்ந்து*

(இ-ள்) (தமயந்தி மேற் கூறியபடி புரோகிதனிடத்தில் சொன்னதாவது: அவள் அவனை நோக்கி), தேர்ந்து ஒருபாயத்தை நிச்சயித்து, கார்இருளில்-கரிய இருட்டில், பாழ் மண்டபத்தே-பாழடைந்த ஒரு மண்டபத்தினிடத்திலே, தன் காதலியை-தன் ஆசைக்குரியவளாகிய நாயகியை, சோர் துயிலில்-அறிவு சோர்ந்திருக்கின்ற நித்திரை சமயத்தில், நீத்தல் விட்டுச் செல்லுதல், தேர்வேந்தற்கு-தேரையுடைய அரசனுக்கு, துணிவு அன்றோ-(இரக்கமின்றியும் பாவத்திற்கஞ்சாமலும் செய்யும் ஒரு) தைரியமான காரியமல்லவா?, என்று என்று (நீ ஒவ்வோரிடத்திலும்), சென்று - போய், அறைந்தால்-சொன்னால், (எவரேனும் இதற்கு மறுமொழி சொல்லுவார்; அங்ஙனம் யாராவது), நேர்நின்று (உனக்கு) எதிரில் நின்று, (இவ்வார்த்தைக்கு), எதிர்மாற்றம்-மறுமொழி, தந்தாரை-கொடுப்பாரை, (அதாவது: மறுமொழி கூறுவோர்களை), அறிந்துவா-தெரிந்துகொண்டு வருவாயாக, என்றாள் - என்று தமயந்தி கூறினாள்; [எ-று.]

நளன், இராத்திரியில் பாழ் மண்டபத்திலே தூங்குந்தருணத்தில் தன் காதலியைவிட்டு நீங்கிச்சென்ற இச்செய்தி, நளனுக்கும், தமயந்திக்குமே தெரிந்த இரகசியமாதலின், இதனைக் குத்துப்பாடாகக் கூறுங் காலத்தில் இதற்கு நளனொருவனே ஆத்திரங்கொண்டு மறுமொழி கூறுவன்; இதன் மூலமாக அவனை எளிதிற் றெரிந்துகொள்ளலாம்; ஆதலின் தமயந்தி இவ்வுபாய மொழியை ஆராய்ந்தறிந்து புரோகிதனிடம் கூறினாள்.

பாழ்-அழிவு,வெறுமை 'தன் காதலி' என்றதனால், 'அவள் தனதன்புக் கிடமானவள்' என்ற பொருளும், 'தன்னிடத்தே அன்புடையவள்' என்ற பொருளும் விளங்கும். ஆகவே, அவள் எவ்விடத்தும் எக்காலத்தும் எக்காரணத்தை முன்னிட்டும் கைவிடத்தகாதவள் என்பது அமையும். 'வேந்தற்குத் துணிவன்றோ' என்றது இழிவுகுறிக்கும் ஒரு நிஷ்டூர சொல்லாம். துணிவு தைரியம், இஃது இங்கே ஆகுபெயராய்ப் பாவத்துக்கஞ்சாது துணிந்து செய்யும் செய்கை மேனின்றது. 'அன்றோ' என்பதிலுள்ள ஓகாரம் தேற்றப்பொருளது. காரிருள் பண்புத்தொகை; கருமையில், மை-விகுதிகெட்டு நடுவுகரம் போய், ஆதி நீண்டது. சோர்துயில்-வினைத்தொகை. தந்தாரை-உயர்வினால் ஒருமையிற் பன்மைவந்த பால்வழுவமைதி; ஆண்பால் பலர்பாலாயிற்று; (நன்-பொது-உஅ) 'தருபவரை' என வருதற்பாலது 'தந்தாரை' எனவந்தது விரைவு அல்லது இயல்புபற்றி எதிர்காலம்இறந்தகாலமாகமாறி வந்தகால வழுவமைதியெனப்படும்; (நன்-பொது-கூ௨). தருதல் - இங்குச் சொல்லுதற்பொருளில் நின்றது. அறைந்தால் என்பதற்குப்பின் சில வாக்கியங்கள் இசை யெச்சமாகக் கூட்டி முடிக்கப்பட்டன. அறைந்தால்-என்பதில், ஆல்-வினையெச்ச விகுதி; அசையெனலுமொன்று.

புரோகிதன் அயோத்தி நகரடைதல்.

350. மின்னாடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடுங் கானகமு நாடினான்—மன்னு
கடந்தாழ் களியானைக் காவலனைத் தேடி
அடைந்தா னயோத்தி நகர்.

(இ-ள்) (தமயந்தி அவ்வாறு கூறியவுடனே அந்தப் புரோகிதன் அவ்விடத்தினின்றும் புறப்பட்டு), மின் ஆடும் (மேகங்கள் சேர்ந்திருப்பதால்) மின்னல் அசைந்துகொண்டிருக்கின்ற, மால்-பெரிய, வரையும்-மலைகளிலும், வேலையும்-சமுத்திரத்திலும், வேலைசூழ்-அக்கடல்சூழ்ந்த, நல்-நன்மையாகிய, நாடு-தேசங்களிலும், கானகமும்-வனங்களிலும, (போய்) நாடினான்-ஆராய்ந்தவனாய், (முடிவில்), மன்னு-பொருந்திய, கடம் - தாமரை, தாழ்-ஒழுகப்பெற்ற, களி செருக்குள்ள, யானை - யானையையுடைய, காவலனை அரசனாகிய நளனை, தேடி-தேடிக்கொண்டு, அயோத்திநகர்-அயோத்தியாபுரியை, அடைந்தான்-சேர்ந்தான்; [எ-று.]

மேற்கூறியபடி தமயந்தியின் கட்டளையைப்பெற்ற புரோகிதன், மலை, கடல், நாடு, வனம் முதலியவைகளிலெல்லாம் நளனைத் தேடிக் காணாமல் முடிவில் அயோத்தி நகரடைந்தான் என்பது இதன் கருத்து. மலைகள் மேகமண்டலம் வரை அளாவி அவற்றில் மேகங்கள் சஞ்சரிக்குமாதலின், அடிக்கடி மின்னலுண்டாகி ஆடிக்கொண்டிருக்கும். வேலை என்றது சமுத்திர மத்தியிலுள்ள தீவுகளை. உம்மைகள்-எண்ணுப்பொருளன. நாடினான்-முற்றெச்சம் கடம்-யானைக்கன்னம்; இஃதாகுபெயராய் அதில் வழியும் மதநீரையுணர்த்திற்று; இது வடசொல்.

அயோத்தியில் புரோகிதன் சொன்னதைக் கேட்டு நளன் எதிர்வருதல்.

351. கானகத்துக் காதலியைக் காரிருளில் கைவிட்டுப்
போனதுவும் வேந்தற்குப் போதுமோ—தானென்று
சாற்றினா னந்தவுரை தார்வேந்தன் தன்செவியி
லேற்றினான் வந்தா னெதிர்.

(இ-ள்) (அவ்வாறு புரோகிதன் அயோத்தியிற் சேர்ந்தவுடன்), கானகத்து-வனத்தில், காதலியை-மனையாளை, கார்இருளில் - கரிய இருட்டில் கைவிட்டுப் போனதுவும்-நீங்கிச் சென்ற செய்கையும், வேந்தற்கு - அரசனுக்கு, போதுமோ-தகுமோ?, என்று சாற்றினான்-என்றுரைத்தான், அந்த வுரை-அந்த வார்த்தையை, தார்வேந்தன்-மாலையை அணிந்த அரசனாகிய நளன், தன் செவியில்-தன்னுடைய காதுகளில், ஏற்றினான் - கொண்டவனாகி, எதிர் வந்தான்-(அந்தப்புரோகிதனுக்கு) எதிரில்வந்தான்; [எ-று.]

அயோத்தியிற் சேர்ந்த புரோகிதன், "கானகத்தில்காரிருளில் கைவிட்டுப்போதல் வேந்தனா யிருப்பவனுக்குத் தகுமோ?" என்று தெருக்களில் சொல்லிக்கொண்டே போயினன். அதை நளன் கேட்டான். அஃதவன் செய்த செய்கையைப்பற்றிய குத்துப்பாடான வார்த்தையாயிருந்தபடியால் 'அந்தோ! நம் செய்கையை எவனோ தெரிந்து நம்மைப் பழித்துரைக்கின்றானே' என்று அவனுக்கு மிக்க விசனமுண்டாயிற்று; அதனால் அவன், 'அம்மனிதனுக்குத் தக்க சமாதான வார்த்தை கூறி நம்மீது அவனுக்கேற்பட்டிருக்கும் தாழ்ந்த அபிப்பிராயத்தை நீக்கிவிடவேண்டும்' என்று கருதி அவ்வாறே சமாதானங் கூறுதற்கு அப்புரோகிதனுக் கெதிரில் வந்தான். உலகத்தில் எவருக்கேனும் இழிவான வார்த்தை யேற்பட்டால் அதன்பொருட்டவர் வருந்தி அவ்விழிவை நீக்கிக்கொள்ள முற்படுவ தியற்கை. ஆதலின் நளனும் இவ்வாறு செய்ய முன்வந்தான்

முதலடி முற்றுமோனை, போனது + உம் = போனதுவுங் குற்றியலுகரம் சிறுபான்மை கெடாமல் பொது விதியால் வகரவுடம்படு மெய் பெற்றது. போதுதல்-திருப்தியாதல்; அஃதிங்கே தகுதியாதல் என்னும் பொருளில் நின்றது. 'போனதுவும்' என்பதில், உம்மை-அசை 'போதுமோ' என்பதில் ஓ-எதிர்மறைப் பொருளது. தான்-அசை. ஏற்றினான்-முற்றெச்சம்.

அங்ஙனம் எதிரில் வந்த நளன் சொன்ன மறுமொழி.

352 ஒண்டொடி தன்னை யுறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனேகாண்—தண்டரளப
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறேல் நீ.

(இ-ள்.) (அவ்வாறு வந்த நளன், அப்புரோகிதனை நோக்கி வேதியனே!) ஒள் தொடி தன்னை-பிரகாசமாகிய வளையலையணிந்தவளாகிய மனைவியை, உறக்கத்தே-தூக்கத்தில் (அதாவது: அவள் தூங்கிக்கொண்டிருக்கும்போது), நீத்ததுவும் கைவிட்டதும், பண்டை-பழமையான, விதியின்-விதியினது, பயனே-பலனேயாகும், காண்-இதனை அறிந்துகொள், (காரிய நிகழ்ச்சி இங்ஙனமிருப்பதால்), தண்-குளிர்ச்சிபொருந்திய, தரளம் பூதாமம்-முத்துக்களின் அழகியமாலைகளையுடைய(அதாவது:முத்துமாலைகள் சுற்றிலும தொங்கவிடப்பட்ட), வெள்குடையான்.வெண்கொற்றக் குடையை உடையவனாகிய அரசன், பொன்மகளை-இலக்குமிதேவி போன்ற பெண்ணாகிய தன்மனைவியை, வெம்வனத்தே வெப்பம் பொருந்திய காட்டிலே, நீத்தான் (விதியினாலல்லாமல் தன்மனத்தால் வேண்டுமென்றே) கைவிட்டான், என்று-என்று நினைத்து, நீ ஐயுறேல்-(இவன் நல்லவனோ கெட்டவனோ என்று) நீ சந்தேகப்படாதே, (என்று கூறினான்); [எ-று.]

நளன், தான் மனைவியை நீத்தது விதிப்பயன் என்னும் துணிவுடைய வனாதலின், தன்னைப் பழித்துக் கூறிய புரோகிதனை நோக்கி, "வேதிய னே! அவ்வரசன் மனைவியை நீத்தது விதிப்பயனேயாகும்; ஆதலின், நீ இதனை ஆராயாமல், 'அவன் கன்னெஞ்சுடையவனாய் வேண்டுமென்றே அவளை நீத்தான்; அதனால் அவன் நல்லவனோ கெட்டவனோ' என்று சந்தேகப்படாதே" என்று கூறினான். தன்னை வெளிப்படுத்தக்கூடாதாதலால் தன் காரியத்தைப் படர்க்கையில் வைத்துரைத்தான். பண்டை விதியின் பயன்-முன் ஜன்மத்திற் செய்த கருமங்களினாலேற்பட்ட விதியின் பயனால் உண்டாம் காரிய நிகழ்ச்சி; பயன்-ஆகுபெயராய் அதனாலாம் காரியத்தை யுணர்த்தும்; விதி-இருவினைகளுக்குத் தக்கபடி இன்ன இன்ன காரியங்கள் நடைபெறுவதாக என்று நியமித்த தேவ கட்டளை. நளன், இப்பிறப்பில் தன்மனமறியத் தான் செய்த தீவினையொன்றுமில்லை யென்பதை யுணர்வானாதலின், 'இது முற்பிறப்பிற் செய்த தீவினையின் பயனே'என்று துணிந்து இங்ஙனம், "பண்டை விதியின் பயனே" என்றான். வெண்மை புகழையும், செம்மை பிரதாபத்தையும் விளக்கக் கூடியனவாதலின், வெள்ளைக்குடை, சத்தியந் தவறாது கீர்த்தியோடு பொருந்திய அரசாட்சிக் கறிகுறியாம். ஆதலின், 'சத்தியந்தவறாத புகழோடு கூடிய ஒரு மன்னன் இத்தகைய தீங்கான காரியத்தை வேண்டுமென்றே செய்யான்'என்பதை விளக்குதற்கு 'வெண்குடையான் பொன்மகளை நீத்தானென்றையுறேல் நீ' என்றான் நளன். ஆகவே, 'வெண்குடையான்' என்ற விசேஷ்யம் ஒரு கருத்தை உட்கொண்டதாதலின், 'கருத்துடையடைகொளியணி' எனப்படும். குளிர்ச்சி, முத்தின் இயற்கைக்குணமாதலின் அது தண் என்ற அடையேற்றது. முத்துமாலைகள், குடையைச்சுற்றிலும் சரங்களாகத் தொங்கவிடப்பட்டனவாம். புத்திரியை உணர்த்தும் 'மகள்' என்ற சொல், இங்குப் பொதுவாய்ப் பெண்ணுக்காய் மனைவியை உணர்த்திநின்றது. இவ்வாறே புத்திரனுக்காம் 'மகன்' என்ற சொல்லும் பொதுவாய் மனிதனுக்காய்க் கணவனையுணர்த்துவதும், சிறுபான்மையுண்டு. "நினக்கிவன் மகனாத்தோன்றியதூஉம், மனக்கினியார்க்கு நீ மகளாயதூஉம்," என்று மணிமேகலையிலும், "கண்போன்ற மாமன் மகள்" என்று சீவகசிந்தாமணியிலும், "நோகவுண்டோ நும்மகனார்க்கினி" என்று சிலப்பதிகாரத்திலும் வருவன இங்கு ஆராயத்தக்கவை மனைவியை, 'இன்னானுடைய ஸ்திரீ என்றும், கணவனை இன்னாளுடைய புருஷன் என்றும் உலகத்தார் வழக்கில் வழங்குதலு முணர்க. 'வெண்குடையான்' இங்கு நளனைக்குறித்து நின்றது; இனி, வீமனைக்குறித்ததாகக்கொண்டு 'பொன்மகள்' அவனுடைய புத்திரியெனினுமாம்; இங்ஙனங் கொள்ளுமுறையில் 'நீத்தான்' என்ற முற்றுக்கு 'அரசன்' என்னும் தோன்றா எழுவாய் வருவித்துரைத்தல் வேண்டும். "தண்டரளப் பூத்தாம

வெண்குடை" என்பதற்குக் "குளிர்ந்த முத்துக்களாலாகிய அழகிய ஒளி பொருந்திய வெள்ளைக்குடை" எனப் பொருளுரைத்தலு மொன்று; இவ் வுரையில் தாமம்-ஒளி; வடசொல். இனி, "நீத்தாளென்றையுறேல் நீ" என் பதை, "நீத்தான் நீ என்று ஐயுறேல்" என மாற்றி வேறுவகைப் பொரு ளுரைத்தலு முண்டு; இது, நலிந்து பொருள் கொள்ளலாம்.

ஒண்டொடி - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; இதில், ஒள்-ஒண்மை யென்னும் பண்படி; ளகரதகரங்கள் ணகர டகரங்களானது சந்தியும், விகாரமுமாம். தொடி - கைவளை. உறக்கம்-தொழிற்பெயர்; இதில், உறங்கு-பகுதி, அம்-விகுதி, வலித்தல்-விகாரம். 'ஒண்டொடி தன்னை' என்பதில், தன்-சாரியை. நீத்தது - இறந்த காலத் தொழிற்பெயர்; து விகுதி. 'பண்டை' என்பதில், ஐ-சாரியை; 'பண்டு' என்னும் மென்றொடர்க் குற்றியலுகரம் ஐயீறு பெற்றுவந்தது; "ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே" என்பதுய்த்துணர்க. 'நீத்ததுவும்' என்பதில் உம்மை-அசை. 'பயனே' என்பதில் ஏகாரம் - பிரிநிலையோடு தேற்றம். காண்-அசை யெனலுமொன்று; தேற்றமுமாம். ஐயுறேல்-எதிர்மறை ஏவ லொருமை வினைமுற்று; இதில் ஐயமுறு என்பதன் விகாரமான ஐயுறு-பகுதி. விதி, தாளம், தாமம் என்பன வடசொற்கள். 'பலம்' என்ற ஆரிய மொழி 'பயன்' என விகாரப்பட்டு வந்தது. வெம்மை+வனம்=வெவ்வ னம்; இதிலுள்ள வெம்மையென்னும் பண்புப் பகுதியில், மையீறுகெட்டு முன்னின்ற மகரமெய் வகரமெய்யாகத் திரிந்தது. ஈற்றில், 'என்று கூறி னன்' என்னும் பயனிலை இசை யெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது.

இவ்வாறு நளன் கூறியதைக் கேட்ட புரோகிதன், தான் வந்தகாரி யம் நிறைவேறி விட்டதென்று சந்தோஷித்து இச்செய்தியைக் கூறுதற்குத் தமயந்தியினிடம் விரைந்து திரும்பிப் போயினான் என்பதாம்.

அடுத்த செய்யுளில் தமயந்தி புரோகிதனிடம் நளமகாராஜனைக்கண்ட துண்டோ எனவினவும் செய்தி வருகின்றமையால், அவன் திரும்பிப் போயினசெய்தி கதைத்தொடர்ச்சிபற்றி இங்குக் கூட்டியுரைக்கப்பட்டது.

திரும்பிவந்த புரோகிதனிடம் தமயந்தி நீ எவ்வெவ் விடங்கட்குச் சென்றனை? மன்னனைக் கண்டதுண்டோ என வினவல்.

353. எங்க ணுறைந்தனைகொ லெத்திசைபோய் நாடினைகொல்
கங்கைவள நாட்டார்தங் காவலனை—அங்குத்
தலைப்பட்ட வாறுண்டோ சாற்றென்றாள் கண்ணீர்
அலைப்பட்ட கொங்கையா ளாங்கு.

(இ-ள்) (மேற்கூறியபடி புரோகிதன் திரும்பிப்போய்த் தமயந்தியைக் கண்டவுடனே, அவளை நோக்கி), கண்ணீர்-கண்ணீரானது, அலைப்பட்ட-

அசைந்து வடிதலைக் கொண்டிருக்கின்ற, கொங்கையாள்-தனங்களையுடையவளாகிய தமயந்தி, (வேதியனை நோக்கி நீ), ஆங்கு - அவ்விடத்தில், எங்கண் உறைந்தனை-எவ்விடத்திற்போய்த் தங்கியிருந்தாய்?, கங்கை-கங்கை சூழ்ந்த, வளம் - வளம்பொருந்திய, நாட்டார்தம் - நிடதநாட்டாருடைய, காவலனை-அரசனாகிய என் நாயகனை, எத்திசைபோய் நாடினை-எந்தத்திக்கிற் புகுந்து தேடினாய், அங்கு-நீ சென்ற அவ்விடத்தில், தலைப்பட்ட ஆறு-(அம்மன்னன்) எதிர்ப்பட்டவகை, உண்டோ-உளதோ?, சாற்று என்றான்-சொல்வாயாக என்று கேட்டனள், எ-று.

புரோகிதன் திரும்பி வந்த மாத்திரத்தில் அவனுடைய முகக்குறிப்பால் அவன் ஏதேனும் நல்ல செய்திகொண்டு வந்திருப்பானென் றுணர்ந்து அதனைக் கேட்டறிய வேண்டுமென்னும் விருப்பத்தால் தமயந்தி இவ்வாறு அவனை நோக்கி "நீ எங்குச் சென்றாய்? மன்னனைக் கண்டதுண்டோ?" என்று வினவினாள். அவள் இவ்வாறு அத்தருணம் விசனம் நீங்கி வினவினாளெனினும் அதற்கு முன்னர் அழுதுகொண்டே இருந்தபடியால், அவளை, "கண்ணீர் அலைப்பட்ட கொங்கையாள்" என்றார் ஆசிரியர்.

தலை—இடம்; இஃதிங்கே எதிரிடத்தை யுணர்த்தி நின்றது. படல்-ஆதல்; இஃதிங்கு நேர்தலை யுணர்த்திற்று; ஆகவே இவ்விரண்டும் இருவர் எதிரிடத்தில் சந்தித்தலை விளக்கி நின்றன. கொல் இரண்டும் - அசைகள். ஆங்கு-என்பதையும் அசையெனக் கோடலுமொன்றுமென்ப.

புரோகிதன் தான் அறிந்துவந்த செய்தியைத் தமயந்திக்குக் கூறுதல்.

354. வாக்கினான் மன்னவனை யொப்பான் மறித்தொருகால்
ஆக்கையே நோக்கி னவனல்லன்—பூக்கமழுங்
கூந்தலாய் மற்றக் குலப்பாக னென்றுரைத்தான்
ஏந்துநூன் மார்ப னெடுத்து.

(இ-ள்) (தமயந்தி அவ்வாறு வினவியவுடன்) ஏந்தும் நூல்மார்பன் - பூணூலைத்தரித்த மார்பையுடையவனாகிய அந்தப்புரோகிதன், (தமயந்தியை நோக்கி); பூகமழும் - (சூடிய) மலர்கள் மணக்கின்ற, கூந்தலாய் - அளகபாரத்தை யுடையவளே!, (நான் பற்பல விடங்கட்கும் போய் முடிவில் அயோத்தி நகரடைந்து, நீ கூறிய வார்த்தைகளைக் கூறினேன்; அதைக் கேட்டு ருதுபர்ணன் அரண்மனையிலுள்ள தேர்ப்பாகனொருவன் வந்து அதற்கு மறுமொழி கூறினான்), அக்குலப்பாகன்-அந்த உயர்ந்த தேர்ப்பாகன், வாக்கினால்- (நான் கூறியதற்கு அவன் கூறிய மறுமொழியாகிய) வார்த்தையினாலே, மன்னவனை ஒப்பான் - நளமகாராஜனை நிகர்ப்பவனாயிருக்கின்றான், மறித்து-திரும்பவும், ஒருகால் - ஒரு சமயம், ஆக்கையே-(அவனுடைய) உடம்பை மாத்திரம், நோக்கின்-பார்த்தால், அவன் அல்

வன்-அம்மன்னனல்லாதவனாயிருக்கின்றான், என்று எடுத்து-என்று (தான் கண்ட கேட்ட விஷயங்களை யெல்லாம்) மனத்தினின்றும் வெளிப்படுத்தி, உரைத்தான்-தமயந்தியினிடம் சொன்னான், எ-று.

மேற்கூறியபடி வினாவிய தமயந்தியை நோக்கி அப்புரோகிதன், "மலர் மணம் வீசுகின்ற கூந்தலையுடையவளே! நின்கட்டளைப்படியே நான் பற்பல விடங்கட்கும் சென்று முடிவில் அயோத்தி நகரடைந்து அவ்வார்த்தைகளைக் கூறினேன்; அதைக்கேட்டு அவ்வயோத்தி மன்னன் அரண்மனையிலுள்ள தேர்ப்பாகனொருவன் வந்து அதற்கு மறுமொழி கூறினான்; அவனுடைய வார்த்தைகளை நோக்குமிடத்து நம்மன்னனைப் போலவே விளங்குகின்றான்; திரும்பி யொரு சமயத்தில் தேகத்தை மாத்திரம் நோக்கினால் அவனை மன்னனென்று மதித்தற் கேதுவில்லை" என்று தான் அறிந்த விவரங்களை யெல்லாம் கூறினான் என்பது இதன் கருத்து. அத்தேர்ப்பாகன், பேச்சின் தன்மையாலும் குரலாலும் புரோகிதனுக்கு நளனைப்போன்று விளங்கினான்; உருவத்தால் வேறொரு மனிதனாகத் தோன்றினான். இவ்வாறு இருவழியிலும் புரோகிதனுக்குச் சந்தேகமே நிகழ்ந்தபடியால் அவன் ஒன்றைப்பற்றியும் துணிவு கொள்ளமுடியாமல் இவ்வாறு சொன்னான்.

புரோகிதன் நளனைக் கண்டதையும் அவனால் கூறப்பட்ட வார்த்தைகளையும் இதில் விளக்கமாகக் கூறாவிடினும், கதைத்தொடர்ச்சி பற்றியும், செய்யுட் கருத்து முடிபு நோக்கியும் 'அக்குலப்பாகன்' என்பதற்கு முன் அவ்விஷயங்கள் இசை யெச்சமாகக் கூட்டியுரைக்கப்பட்டன. அங்ஙன முரைக்காவிடின் இச்செய்யுள் பொருண் முடிபற்றதாகும். 'மதித்து' என்பது வினைமாற்றுப் பொருளை விளக்கி நின்றது. ஆக்கை - (எலும்பு தசை நரம்பு முதலியவற்றால்) ஆக்கப்பட்டது; இதில், ஆக்கு-பிறவினை விகுதி, ஐ-செயப்படு பொருள் விகுதி; இனி, யாக்கை யென்பது இங்ஙனம் மருவி வந்ததெனக் கோடலுமொன்று; 'யாக்கை' என்பதற்கு, 'எலும்பு நரம்பு முதலியவற்றால் யாக்கப்பட்டது' என்பது பொருளாம்; யாத்தல்-கட்டுதல். 'ஆக்கையே' என்பதில், ஏ-பிரிநிலைப் பொருளது. கூந்தலாய்-கூந்தலாள் என்பதன் ஈறுதிரிந்த விளி. "பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்" என்றதன் உம்மையினால் பொது விதிப்படி வன்மை தோன்றுதலாகி, 'பூகமழும்' என்பது, 'பூக்கமழும்' எனவந்தது. வாக்கு-வாக் என்னும் வடசொற்றிரிபு. உத்தமஸ்திரீகளின் கூந்தல், இயற்கை மணமுடைய தென்பது நூற்களின் துணிபாதலால், 'பூக்கமழும் கூந்தலாய்' என்பதற்கு "மலரைப்போன்று நறுமணங்கமழும் கூந்தலையுடையாளே" என்றும் பொருளுரைக்கலாம். நூல்-முப்புரிநூல்; அந்தணர் மார்பிலணியப்படுவது; இது பூணத்தக்கதாதலின் 'பூணூல்' என வழங்கும்; இஃது அந்தணர்க்கின்றியமையாததென்பது, "நூலேகரகம் முக்கோல்மணையே, ஆயுங்காலை அந்தணர்க்குரிய" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தாலுணரப்படும். 'ஏந்து நூன் மார்பன்' என்பது, 'நூலேந்து மார்பன்' என மொழி மாற்றப்பட்டது.

பாகன்-தேர்க்குதிரை செலுத்தும் சாரதி. எடுத்தல் - உயர்த்துதல்; அஃதிங்கு வெளிப்படுத்தற் பொருளில் வந்தது.

**தமயந்தி அவ்வாகுகனைத் தான் நேரிற்கண்டு நளனோ அல்லனோ என்பதைத் தெரிந்து கொள்ளுதற்கு ஓர்உபாயத்தைச் செய்யும்படி வேதியனிடங் கூறுதல்.**

355. *மீண்டோர் சுயம்வரத்தை வீமன் றிருமடந்தை*
*பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்—நீண்ட*
*கொடைவேந்தற் கித்தூரந் தேர்க்கோலங் கொள்வான்*
*படைவேந்த னென்றாள் பரிந்து.*

(இ-ள்) (அதுகேட்ட தமயந்தி சுதேவனென்னும் வேதியனைநோக்கி) பரிந்து-அன்புகொண்டு, அந்தண-பிராமணனே!, நீபோய்-நீ (அயோத்திக்குச்) சென்று, வீமன்-வீமராஜனுடைய திருமடந்தை - அழகிய குமாரத்தியாகிய தமயந்தி, மீண்டு - திரும்பவும், ஓர்சுயம்வரத்தை - ஒருசுயம்வரச் சடங்கை, பூண்டாள் என்று - ஏற்றுக்கொண்டனள் என்று, உரைத்தால்- சொன்னால், நீண்டகொடை-மிக்க ஈகையையுடைய, வேந்தற்கு - அவ்வயோத்தி மன்னனுக்கு, படை-ஆயுதங்களையுடைய, வேந்தன் (நாம் தேர்ப்பாகனெனச் சந்தேகிக்கும் நம்) நளமகாராஜன், இத்தூரம் - (நாமிருக்கும் இடமாகிய)இவ்வளவு தூரத்துக்கு, தேர்க்கோலம்-தேர்க்குரிய கோலத்தை கொள்வான்-தாங்குவான் (அதாவது: தேரோட்டும் சாரதி வடிவந்தாங்கி ருதுபர்ணனுக்குத் தேரைச் செலுத்திக்கொண்டு இங்கே வருவான்; அவ்வாறு வந்தால் நாம் அவனைச் சந்தேகமறத் தெரிந்துகொள்ளலாம்), என்றாள்-என்று தமயந்தி வேதியனிடத்துக் கூறினாள், எ-று.

"தமயந்தி கணவனை இழந்து விட்டபடியால் மீண்டும் ஒருகணவனைத் தேடிக்கொள்வதற்கு விரும்பி மற்றொரு சுயம்வரத்தை ஏற்படுத்தி இருக்கின்றாள்' என்று ஒரு பொய்ச் சமாசாரத்தை அயோத்திநகரில் புகவிட்டால் அந்நகரத் தரசன் உடனே புறப்பட்டு வருவான்; அப்போது அந்தணன் சந்தேகித்துரைத்த தேர்ப்பாகனும் அவனுக்குத் தேர் செலுத்திக் கொண்டுவருதல் கூடும்; அவ்வாறு வந்தால் நாம் நேரில் அவனைப்பார்த்து இன்னவனென நிச்சயித்துக் கொள்ளலாம்" என்று தமயந்தி கருதினாள்; ஆதலின், அந்தணனிடம், தான் கருதியபடியே அயோத்தியிற் போய் இவ்வாறு சமாசாரம் தெரிவிக்கும்படி கூறினாள். சுயம்வரமாவது: ஓர் இராஜ கன்னிகை, தன் தந்தையால் வருவித்து ஓரிடத்தில் சேர்க்கப்பட்ட இராஜ குமாரர்களில் தனக்கிஷ்டமானவனை நாயகனாகக்கொண்டு அவனுக்கு மணமாலை சூட்டுவதாம். தேர்க்கோலம் - தேருக்குரிய கோலம்; (அதாவது: தேரைச்செலுத்துந் தொழிற்குரிய சாரதிக்கோலம்) 'தேர்க்கோலங்கொள்வான்' என்றதனால், 'அக்கோலத்தைக் கொண்டு தேரைச் செலுத்திவரு

வான்' என்பது பெறப்படும். அயோத்திக்குப் போய் வந்த அந்தணன் கூறிய விவரத்தால் அவ்வாகுகன் பெரும்பான்மையும் நளனாகவே யிருப்பானென்ற எண்ணம் தமயந்திக் கேற்பட்டிருந்ததால் அவள் அவனை, 'படைவேந்தன்' என்றாள். முன் அயோத்திக்குப் போய்வந்த அந்தணன் வேறு, இச்செய்யுளிற் கூறப்பட்டவன் வேறு.

சுயம்வரம்-ஸ்வயம்வரம் என்ற வடசொற்றிரிபு. படை-பகைவரைப் படுக்குங்கருவி; இதில், படு-பகுதி, ஐ - கருவிப் பொருள் விகுதி. இனி, படை-சேனையெனலுமொன்று. 'படைவேந்தன்' என்பது முன்னிலைமை பற்றி யென்க. தாரம் வடசொல்.

சுதேவன் சென்று தமயந்தியின் இரண்டாம் சுயம்வரசெய்தியை ருதுபர்ணனுக் குரைத்தல்.

356. எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென்
றங்கோர் முரச மறைவித்தான்—செங்கோலாய்
அந்நாளு நாளை யளவென்றா னந்தணன்போய்த்
தென்னாளுந் தாரானைச் சேர்ந்து.

(இ-ள்) (தமயந்தி அவ்வாறு கூறியவுடன்), அந்தணன்-சுதேவனென்னும் பிராமணன், போய்-(அயோத்திக்குச்) சென்று, தென் ஆளும்-அழகை ஆளுகின்ற (அதாவது: அழகைத் தனக்குச் சொந்தமாகப் பெற்றிருக்கின்ற), தாரானை - மலர்மாலையையணிந்த ருதுபர்ணனிடத்தில், சேர்ந்து-அடைந்து, (அவனை நோக்கி), செங்கோலாய் - நீதிதவறாத அரசாட்சியையுடையவனே!, எங்கோன்-எங்கள் அரசனாகிய வீமனுடைய, மகளுக்கு-புத்திரியான தமயந்திக்கு, இரண்டாம் சுயம்வரம் என்று இரண்டாவது சுயம்வரம் நடைபெறுகிறது என்று சொல்லி, அங்கு-அவ்விடத்தில் (அதாவது: அந்தக் குண்டின புரியிலும் அதைச் சார்ந்த விதர்ப்பநாட்டிலும், ஓர் முரசம்-ஒப்பற்ற மணப் பேரிகையை, அறைவித்தான் - (முரசறைவோரால்) அடிக்கச்செய்து (அவ்விஷயத்தை எங்கும்) தெரிவித்தான், அந்நாளளவும்-அந்தச் சுயம்வரத்துக்குக் குறிப்பிட்ட தினத்தின் எல்லையும், நாளை என்றான்-நாளையே என்று கூறிச்செய்தி தெரிவித்தான், எ-று.

அரசர்கள் ஏதேனுமொரு செய்தியை உலகத்தார்க்குத் தெரிவிக்க வேண்டி யிருந்தால், தம்பணியாளரால் முரசறைவித்துத் தெரிவித்தல்மரபு; ஆதலின், இங்கு அந்தணன் ருதுபர்ணனிடத்தில் "எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென் றங்கோர் முரசமறைவித்தான்" என்றான். இன்னும் அங்ஙனம் அரசர் விஷயத்தெரிவிப்பதிலும் தம் தேசத்தில் முரசாலும், மற்ற தேசங்களில் தூதாலும் அறிவிப்பர்; ஆதலின், முரசறைந்ததை, குண்டின புரத்திலும் விதர்ப்ப நாட்டிலும் நடந்ததாகக் குறிப்பிடற்பாலது.

எம்-உளப்பாட்டுத் தன்மைப்பன்மை; அந்தணன், தன்னையும், விதர்ப்ப தேசத்து ஜனங்களையும் சேர்த்து, 'எம்' என்றான். முரசம்-வடசொல். செங்கோல்-கோணாதகோல்; இதுஅரசாட்சிக்கு உவமையாகுபெயர்; அரசாட்சியானது, சாயாதகோலைப் போன்று செவ்வனே நீதியில் நின்று நடைபெறுவதாதலின் இப்பெயர் பெற்றது. இதுபோலவே அரசாட்சியைத் 'தண்டம்' என்பர் வடநூலாரும் செங்கோலுக் கெதிர்மொழி - கொடுங்கோல்; இதற்குப் பொருள் 'வளைவுள்ளகோல்' என்பதாம்; இதுவும் உவமையாகு பெயராய் நீதிதவறிய அரசாட்சியை உணர்த்தி நிற்கும். 'தென் ஆருந்தார்' என்பதற்கு 'அழகு ஆருகிறமாலை' என்றாவது, 'அழகை ஆருகிறமாலை' என்றாவது பொருளுரைக்க. எங்ஙன முரைப்பினும் கருத்தொன்றேயாய் 'அழகுள்ளமாலை' என்றே பொருள்படும். இனி, தென் இசையெனக் கொண்டு 'வண்டுகளின் இசையை ஆருகின்றமாலை' எனவுமொன்று. அந்தணன்-காரணவிடுகுறிப்பெயர்; அழகிய தட்பத்தை யுடையவனென்று பொருள்படும்; தட்பம் - குளிர்ச்சி; அது அருளை யுணர்த்தும். 'அந்தணன்' என்பது காரணங் கருதியபொழுது அருளுடைய பலர்க்குஞ் செல்லும்; காரணங் கருதாத பொழுது வேதியனுக்கு மட்டுஞ்செல்லும்.

சுதேவன் உரைத்ததைக் கேட்டு ருதுபர்ணன் சிந்தித்தல்.

357. வேத மொழிவாணன் மீண்டுஞ் சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென் —றோதினான்
என்செய்கோ மற்றிதனுக் கென்றா னிகல்சீறும்
மின்செய்த வேலான் விரைந்து.

(இ-ள்) (சுதேவன் என்னும் அந்தணன் அவ்வாறு சொல்லியதைக் கேட்ட மாத்திரத்தில்) இகல்-பகைவர்களை, சீறும் - கோபிக்கின்ற, மின் செய்த-மின்னலைச் செய்கின்ற (அதாவது: மின்போற் பிரகாசிக்கின்ற), வேலான்-வேலாயுதத்தை யுடையவனாகிய ருதுபர்ணமகாராஜன், விரைந்து விரைவுகொண்டு, வீமன்தன்-வீமராஜனுடைய, காதலி-மகளாகிய தமயந்தி, மீண்டும்-மறுபடியும், சுயம்வரத்தை-சுயம்வரத்தினை, காதலித்தாள் என்று-விரும்பினாள் என்று, வேதமொழி வாணன்-வேத சாஸ்திரங்களில் வல்லவனான அந்தணன், ஓதினான்-கூறினான், இதனுக்கு-இதற்கு, என்செய்கோ-(நான்) என்ன செய்வேன், என்றான் - என்று (தன்வாகுகனிடத்தில்) யோசனைசெய்து தீர்மானித்தலின் பொருட்டுச் சொன்னான், எ-று.

முந்தின சுயம்வரத்தில் ருதுபர்ணன் தமயந்தியின்மீது மிக்ககாதல் கொண்டிருந்தான். அதனை அத் தமயந்தி உணர்ந்திருந்தாள். ஆதலின், அவள், தனக்கு இரண்டாம் சுயம்வரம் ஏற்பட்டிருக்கின்றதென்ற பொய்ச் செய்தியை அவனுக்கெட்டும்படி செய்தால் அவன் முன்பின் யோசியாமல் புறப்பட்டுக் குண்டினபுரத்துக்கு வருவானென்றும், அவனோடு விரைந்து தேர் செலுத்தக்கூடிய வாகுகனும் வருதல் கூடுமென்றும், அங்ஙனம் வந்

தால் அவ்வாகுகன் தன் நாயகன்தானு வென்பதை உணர்ந்து கொள்ளலா மென்றுங் கருதியே அந்தணனை இச்செய்தி தெரிவிக்கும்படி அயோத்திக் கனுப்பினுள். அவன்போய் மேற்கூறியபடி செய்தி தெரிவித்தவுடனே, அவள் உத்தேசித்தபடியேருதுபர்ணன், 'ஆசைகொண்டான்பித்தங்கொண் டான்' என்ற பழமொழிக்கிணங்க இஃதசம்பாவித மென்பதைப் பற்றிச் சிறிதும் யோசியாமல், இதனை மெய்யென்றே நம்பிக் குண்டினபுரத்துக்குப் புறப்படத் தீர்மானித்து, 'குண்டினபுரமோ நெடுந்தூரத்தி லிருக்கின்றது; நாளைக்கே சுயம்வரமாம், ஆகலின் நான் அதற்குள் எப்படி அங்குப்போய்ச் சேர்வேன்' என்று வாகுகனை நோக்கிக் கூறினுன். இவன் இங்ஙனம் வாகு கனை நோக்கிக்கூறியதால், "நீ தேர் செலுத்தி நாளைக்குள் என்னை அங்குக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடல் முடியுமா?" என்று வினவினுன் என்னுங் குறிப்புத் தொனிக்குமாகவே அது குறிப்பெச்சம்.

வேத மொழிவாணன்-வேத வசனத்தால் வாழ்பவன்; அதாவது: வேத சாஸ்திரங்களை ஓதியும், ஓதுவித்தும்; அவற்றின் பொருள்களை யுணர்ந்தும், அவற்றின்படி நடந்தும், ஜீவிப்பவன் என்பதாம். செய்கு-தன்மை யொரு மை எதிர்கால வினைமுற்று; கு-எதிர்காலங்காட்டும் விகுதி; (நன்-பத-கஅ) ஓ-கவலைக்குறிப்பினதாம். வாணன்-வாழ்நன் என்பதன் மரூஉ. காதலித் தாள்-காதல் என்ற பெயர்ச்சொல்லின்மேற் பிறந்த வினைமுற்று. இகல்-பகைமை; இது பண்பாகு பெயராய்ப் பகைவரையுணர்த்தி நின்றது. 'சீறும்' என்பது வேலானுக்கடை; அதனை வேலுக்குக்கொண்டால் அதற்கு, 'அழிக்கின்ற' என்று பொருளுரைக்க வேண்டும்; இது, காரியப் பொருளைக் காரணச்சொல்லாற் கூறிய உபசார வழக்காம்; இனி, வேலேந்தியவனது சீற்றத்தை உபசார வழக்காக வேலின்மேலேற்றிக் கூறிய தெனவுமாம். 'மின் செய்த' என்பதற்கு, 'மின்னல் போன்ற' என்றும் பொருளுரைக்க லாம்; இப்பொருள் கொள்ளுமிடத்து, 'செய்த' என்பது உவமவுருபாம். மற்று-அசை; வினைமாற்றெனினும் அமையும்.

வாகுகன் அதற்கு ஆக்ஷேபனை கூறுதல்.

558. குறையாத கற்பினுள் கொண்டானுக் கல்லால்
இறவாத வேந்திழையா ளின்று—பறிபீறி
செல்லிற் பருவரால் ஓடு நெடுநாடா
சொல்லப் படுமோவிச் சொல்.

(இ-ள்) (அதைக் கேட்டவுடன் நளனுகிய வாகுகன் ருதுபர்ணனை நோக்கி), பறிபீறி-பறியென்னும் மீன்படுக்குங் கருவியைக் கிழித்துக்கொண்டு பருவரால்-பெரிய வரால்மீன்கள், செல்லில் ஓடும்-செற்பயிரில் ஓடி ஒளிக் கின்ற, நெடுநாடா-பெரிய கோசல நாட்டையுடையவனே!, குறையாத கற்பினுள்-குறைவில்லாத பதிவிரதா தருமமுள்ளவளும், கொண்டானுக் கல்லால்-தன்னை முதலிற் கலியாணஞ் செய்துகொண்டவனுக்கே யல்லா

மல், (ஆகிய), எந்து இழையாள்-அணிந்த ஆபரணங்களையுடைய தமயந்தி இன்று-இப்பொழுது, இ சொல்-இந்தச்சொல்லை, சொல்லப்படுமோ-சொல்லத்தகுவளோ, சொல்லியிருக்கமாட்டாள் (என்றுகூறினான்) எ-று.

நளன், தமயந்தியின் நற்குண நற்செய்கைகளையும், பதிவிரதா தர்மத்தையும் நன்குணர்வானாகலின், அவள் ஒருபோதும் இரண்டாவது சுயம்வரத்தை விரும்பமாட்டாள்; இச்சொல் நம்பத்தகாததாயிருக்கின்றது என்று கருதி இவ்வாறு ருதுபர்ணனிடத்தில், "குறையாத கற்பினான் கொண்டானுக்கன்றி, இறவாத வேந்திழையாள்; இன்று சொலப்படுமோ இச்சொல்; இதில் ஏதோ ஓர் மர்மம் இருக்கவேண்டும் என்று ஆராய்ந்து பார்க்காமல் இதனை நீர் நம்பலாகாது" என்று கூறினான் என்பதாம்.

கற்பு-கணவனையே தெய்வமென்று கருதி நடக்கும் ஒழுக்கம். இறத்தல்-நடத்தல்; அஃதிங்கே தன்னைச் செலுத்துதல் என்னும் பொருளில் நின்றது. தன்னைச் செலுத்துதலாவது: தன்னை அன்னியனிடத்தே சேர்வித்துத் தன்னுடம்பு அவனுக்குச் சொந்தமாகும்படி செய்தல். இனி ஸ்திரீகள் தங்கள் தேகத்தைப் புருஷர் தீண்ட இசைவது மானங்கெடுதலாம்; அஃதவர்கட்கு இறப்புக்குச் சமானமாம். சொந்த நாயகர்க்கு அங்ஙனமிசைவது நீதியெனினுங்கூட அஃதவர்கட்குச் சொல்வழக்கால் மானக்கேடென்றே சொல்லப்படும்; அது மானக்கேடாயிருப்பினும் உத்தமஸ்திரீகள் தம் கணவரிடத்தில் மட்டும் அதற்கிசைவர்; மற்றையரிடத்தில் இசையார் ஆதலின் கொண்டானுக்கல்லால் இறவாத' என்பதற்குப் 'புருஷனுக்கேயன்றி மற்றையர்க்கு மானங்கெடாத' என்று பொருளுரைத்தலு மொன்று. இன்னும், பதிவிரதைகள் கணவன் இறந்தால் மாத்திரம் உடனிறப்பார்; மற்றையர்பொருட்டு உயிர்விடத் துணியார்; ஆதலின், 'கொண்டானுக்கல்லால் இறவாத' என்பதற்கு, 'நாயகனுக்கே யல்லாமல் மற்றையர்க்கு உயிர்கொடுக்கத் துணியாத' என்று பொருளுரைப்பினும் பொருந்தும். கணவனோடுயிர்விடல் பதிவிரதைகளுக்கு மற்ற எல்லாக் குணங்களினும் சிறந்த குணமாம். 'பறிபீறி நெல்லில்பருவராலோடும் நெடுநாடா' என்றதால் கோசலநாடு நிலவளத்துக்குக் காரணமான நீர்வளம் மிக்கதென்பது விளங்கும். நீர்வள மிகுதியால் வரால்கள் கொழுத்திருக்குமாதலின், அவைபறியைப் பீறிக்கொண்டோடும். பறி-பிடிக்கப்பட்ட மீன்களைப் போட்டுவைக்கும் குடலையுமாம். நெடுமை-பெருமையில் நின்றது. தமயந்தியின் இரண்டாம் சுயம்வரத்தை வாயினால் சொல்வதற்கும் நளன் கூசினானாதலின் 'இச்சொல்' என்று சுட்டிய வளவோடு நிறுத்திவிட்டான். மேல், 360. ம் செய்யுளிலும் 'தன் மரபுக்கொவ்வாதவார்த்தை இது' என்பதுணர்க. படும் செய்யுமென்னும் முற்று; பெண்பாலுக்கு வந்தது. 'எந்திழையாளால் இச் சொல் சொல்லப்படுமோ, என்று செயப்பாட்டு வினைமுடிபாகக்கொள்ளினும் அமையும். ஓ-ஈண்டு எதிர்மறைப் பொருளில் வந்தது.

நளன் கூறிய ஆக்ஷேபனைக்கு ருதுபர்ணன் சமாதானங் கூறுதல்

359. என்மே லெறிகின்ற மாலை யெழிலை நளன்றன்
முன்னே விழுந்ததுகாண் முன்னாளில்—அன்னதற்குக்
காரணந்தா னீதன்றோ வென்றான் கடாஞ்சொரியும்
வாரணந்தா னன்னான் மதித்து.

(இ-ள்) (வாகுகன் அவ்வாறு கூறியதைக்கேட்டு), கடாம்-மதநீரை, சொரி-பொழிகின்ற, வாரணம்-யானையை, அன்னான்-நிகர்த்தவனான ருதுபர்ணன், மதித்து-(சுதேவன் கூறிய வார்த்தையை மெய்யென்றே) கருதி, (வாகுகனை நோக்கி), முன்நாளில்-முதற்சுயம்வரம் நடந்த முற்காலத்தில், என் மேல் எறிகின்ற மாலை-(தமயந்தி என்னைக் கணவனாகக் கொள்ள விரும்பி) என்மீதெறிந்த பூமாலையானது, (என்பக்கத்திலிருந்த), எழில்-அழகுபொருந்திய, நளன்முன்னே-நளன்மேலே; விழுந்தது-தவறி விழுந்து விட்டது, அன்னதற்கு-அப்படி விழுந்ததற்கு, காரணம்-காரணமானது, ஈது-இந்த மறு சுயம்வரமே, (அதாவது: இங்ஙனம் மறு சுயம்வரம் ஏற்படுத்தி அவள் என்னையே மணந்துகொள்ளும்விதி நேர்ந்திருந்ததேயாகும்), என்றான்-என்று சொன்னான்; எ-று.

நளன் மேற்கூறியபடி உரைத்ததற்கு ருதுபர்ணன் அவனை நோக்கி "வாகுக! நீ உண்மை உணராமல் உரைக்கின்றாய்; தமயந்தி சுயம்வரம் ஏற்படுத்தியிருப்பது உண்மையாகவே இருக்கும்; எனெனில், அவள் முதற் சுயம்வரத்தில் என்னை மணந்துகொள்ள விரும்பி என்மீதே மாலையை எறிந்தாள்; அது தவறி என்பக்கத்திலிருந்த நளன் கழுத்தில் விழுந்து விட்டது; அவள் என்செய்வாள் பாவம்! மாலை விழுந்தகிரமப்படி அவனுக் சேமனைவியாக இசைந்து கொள்ளவேண்டுமாதலின், அவ்வாறுதற்கு மனதில் சிறிதும் இஷ்டமில்லாமலே மேலுக்கு இசைந்துகொண்டாள். ஆனால், அவள் விருப்பமுழுவதும் என்மீதிலேயே இருந்தது. அவள் விருப்பத்திற் கனுகூலமாக அவன் சொற்பகாலத்திலேயே அவளை விட்டு நீங்குங்காலம் நேர்ந்துவிட்டது. அதனால் அவள் சந்தோஷித்து, மறு சுயம்வரம்வைத்து அதில் என்னையே மணந்து கொள்ளலாமென்றும், 'இது தகுமோ' என்று கேட்பவர்க்கு, 'நளன் தானே மனைவியைத் தள்ளிவிட்டுச் சென்றமையால் தகுமெனவும், இது விதியினால் நேர்ந்ததெனவும் சமாதானம் கூறிவிடலா மென்றும் இந்த இரண்டாவது சுயம்வரத்தை ஏற்படுத்தியிருப்பாள். இவ்வாறு அவள் இரண்டாவது சுயம்வரத்தில் என்னை மணந்துகொள்வா ளென்ற ஊழும் ஏற்பட்டுளது. இந்த ஊழேதான் முந்தி அம்மாலையை நளன்கழுத்தில் விழும்படி செய்துவிட்டது. நீ சொல்லுகிறபடி அவள் பதிவிரதையென்பதும் மெய்தான். அதனாற்றான், தான் முதலிற்கருதிய என்னையே மறுவிவாகம் ஏற்படுத்தியாவது மணஞ் செய்துகொள்ளத் தீர்மானித்தாள். ஆனால், நளனிடத்திற் சொற்பகாலம் அவள் சேர்ந்திருந்

ததால் பதிவிரதாதர்மங் கெடுமெனிலோ, கெடாது; ஏனெனில், அது விதியினால் நேர்ந்ததாம்; நீ இவற்றையெல்லாம் ஆலோசனை செய்யவில்லை; எனக்கு எல்லாம் தெரியும்; ஆதலால் நீ இவ்விஷயத்தில் தர்க்கமாடாமல் என்னை அங்கு விரைவில் கொண்டுபோய்ச் சேர்க்கும் மார்க்கத்தை நாடுவாயாக" என்று கூறினான் என்பது இசெய்யுட் கருத்தாம். பேராசையுடையார்க்கு அறிவு குறைந்திருக்குமாதலின், ருதுபர்ணன் அவ்வாசையால் புத்திகெட்டு இவ்வாறு அசம்பாவிதமான கருத்துக்கொண்டு சொல்லத்தகாத வார்த்தைகளையெல்லாம் கூறினான் என்பதாம்.

'முன்நாளில் எறிந்தமாலை' என வரவேண்டியவிடத்தில் 'எறிகின்ற மாலை' என வந்தது, இயல்புபற்றி இறப்பு நிகழ்வாக மாறிவந்த கால வழுவமைதி; (நன்-பொது-௩௩). 'யாம் பண்டு விளையாடுகிறது இச் சோலை' என்றாற்போல அக்காலத்தைக்குறித்து இது நிகழ்காலத்திற் கூறப்பட்டது. கடாம்-கடம் என்பதன் விகாரம். மாலை-மாலா என்ற வடசொல் விகாரம் காரணம், வாரணம் என்பன வடசொற்கள். 'நளன் தன்' என்பதில், தன்-அசை. முன்-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. இதில் ஏ-அசை. காண் தான்-அசைகள்; 'காண்' என்பதற்கு 'நீ அறிந்துகொள்வாயாக' எனப் பொருளுரைத்தலு மொன்றெனக் கொள்க.

ருதுபர்ணன் கூறிய அசம்பாவிதமான வார்த்தைகளைக் கேட்டு
நளன் பலவிதமாகச் சிந்தித்தல்.

360. முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலாள்
என்னைத்தான் காண விசைந்ததோ—தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை யுலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ விது.

(இ-ள்) (அவ்வாறு ருதுபர்ணன் கூறியவற்றைக்கேட்டு), தன் மரபுக்கு-தமயந்தியினுடைய உயர்ந்த குலத்திற்கு, ஒவ்வாதவார்த்தை-பொருந்தாத வார்த்தையாகிய, இது-இசொல், உலகத்து-உலகத்தில், உரைப்பட்டது-வழங்கியது, முன்னை வினையால்-முந்தின ஜன்மத்திற்செய்த கருமத்தினால் முடிந்ததோ-நிறைவேறியதோ, மொய்குழலாள்-அடர்ந்த கூந்தலை யுடையவளாகிய தமயந்தி, என்னைக்காண-என்னைத்தேடிக் கண்டுபிடிப்பதற்கு, இசைந்ததோ-நேர்ந்ததோ, எவ்வாறு கொல்லோ-(இதன் காரணம்) வேறெவ்விதமோ? (நமக்கொன்றும் புலப்படவில்லை); எ-று.

இச் செய்யுளும் அடுத்தபாடலும் குளகமாதலின், இதில் வரும் விஷயங்களை அடுத்த செய்யுளில்வரும் விஷயங்களோடு கூட்டி, 'ஏவன் முடிப்பன் இனியென்று......தேன் துளிக்குந்தார்மன்......தேரைப்பூட்டினான் என்று முடித்துப் பொருள்கொள்ளுதல் வேண்டும்.

தமயந்தி சொல்லியனுப்பிய வார்த்தைக்குக் காரணம் இன்னதென்று புலப்படாமையால் நளன், 'இது முன்னை வினையான் முடிந்ததோ, என்னைக்கான இசைந்ததோ, இன்னும் இதற்குக் காரணம் வேறெதுவோ' என்று எதிலும் துணிவின்றிச் சந்தேகமாகவே கூறினான். 'தன் மரபுக் கொவ்வாத வார்த்தையிது' என்றது இரண்டாவது மணத்தைச் சுட்டிய தாம்; உயர்குலப் பெண்கள் இரண்டாவது மணஞ் செய்துகொள்வது கிருதயுகத்திலுங் கூட அருவருக்கப்பட்டதென்பது இதனால் விளங்கும். இன்னும், இது, 'குறையாத கற்பினாள்' என்னும் 353-ஆம் செய்யுளானு முணரப்படும். உரைப்பட்டது-சொல்லப்பட்டது. 'முன்னை' என்பதில் ஐ சாரியை, முதலிரண்டடிகளினு முள்ள ஓகாரங்கள் ஒன்றிலுள்ளதை வேறொன்றிற்குத் திருப்பும் விகற்பப் பொருளன. உலகம்-லோகம் என்னும் வடசொற்றிரிபு. கொல்-ஐயப்பொருளது; இதிலுள்ள, ஓ - அசை. மொய்குழல்-வினைத்தொகை நிலைத்தொடர்.

நளன் அவ்வெண்ணத்தை விடுத்துத் தன் வேலையிற் பிரவேசித்தல்.

361. காவலனுக் கேவற் கடன்பூண்டேன் மற்றவன்றன்
ஏவன் முடிப்ப னினியென்று—மாவிற்
குலத்தேரைப் பூட்டினான் கோதையர்தங் கொங்கை
மலர்த்தேன் றுளிக்குந்தார் மன்.

(இ-ள்) காவலனுக்கு-இந்த ருதுபர்ண மன்னனுக்கு, ஏவல் கடன்-பணிவிடை செய்யுங் கடமையை, பூண்டேன்-நான் தாங்கினவனாவேன், (ஆதலின்) அவன் வார்த்தைக் கெதிர்மொழி பேசுதல் தகாது; அவனே குண்டினபுரம் போய்ச் சேர்வதற்கு விரைவில் தேரை அலங்கரித்துக் கொண்டுவரும்படி குறிப்பால் நமக்குணர்த்தினான்; அக்குறிப்பின்படியே) இனி-இனிமேல், அவன் தன்-அவனுடைய, ஏவல் - கட்டளையை, முடிப்பன்-நிறைவேற்றுவேன், என்று—, கோதையர்தம்-மலர்மாலையை அணிந்த பெண்களுடைய, கொங்கை - தனங்களில், மலர்த்தேன் - மலர்களிலுள்ள தேனானது, துளிக்கும்-துளியாகத் தெறிக்கின்ற, தார்-மார்பின் மாலையை அணிந்த, மன்-அரசனாகிய நளன், மாவை - குதிரைகளை, குலத்தேரில் - உயர்ந்த தேரிலே, பூட்டினான்-சேர்த்துப் பிணித்தான். எ-று.

முன்செய்யுளிற் கூறியபடி, தமயந்தியின் இரண்டாம் சுயம்வர சம்பந்த வார்த்தைக்குக் காரணம் எதுவோவென்று சந்தேகித்த நளன், பின்னர், "நாமோ இந்த ருதுபர்ணனுக்குப் பணியாளனாக அமைந்திருக்கின்றோம்; இந்நிலைமையிலிருக்கும் நாம் - இவனுடைய வார்த்தையைத் தடுத்துரைத்தல் கூடாது, இவனே தேரை அலங்கரித்துக் கொண்டுவரும்படி குறிப்பால் நமக்குணர்த்தினான்; ஆதலின், அதன்படியே செய்யவேண்டும்" என்று தேரில் குதிரைகளைப் பூட்டினான் என்க அம்சுகவனுடைய மனைவி

யின் விஷயமாயிருந்தும் அவன் அப்போதிருந்த நிலைமையான்து அவ்விஷயத்தில் அதிகமாக அவன் புத்தியைச் செலுத்த இடங்கொடுக்கவில்லை.

மற்று-அசை. முடிப்பன்-உடன்பாட்டுத் தன்மை யொருமை எதிர்கால வினைமுற்று. 'மாவில் குலத்தேனை' என்பதை, 'குலததேரில் மாவை' என மாற்றுக. நளன் மார்பிலணியப்பட்டிருக்கும் மாலையிலுள்ள மலர்த்தேனானது எதிரில் நெருங்கியிருக்கும் தமயந்தியின் மார்பகத்தில் துளிக்கும் எனக் கொள்க. கொங்கை மலர்-ஏழாம் வேற்றுமைத் தொகை.

நளன் தேரை அலங்கரித்துக்கொண்டு வந்ததை
ருதுபர்ணனிடங் கூறுதல்

362 ஒற்றைத் தனியாழித் தேரென்ன வோடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன்—மற்றிதற்கே
போந்தேறு கென்றுரைத்தான் பொம்மென் றளிமுரலத்
தீந்தேறல் வாக்குந்தார்ச் சேய்.

(இ-ள்) (மேற்கூறியபடி தேரிற் குதிரைகளைப் பூட்டியவுடனே அத்தேரைக்கொண்டுவந்து ருதுபர்ணனுக்கெதிரில் நிறுத்திக்கொண்டு), அளி-வண்டுகள், (நெருங்கி), பொம் என்று முரல—பொம் என்று ஓசையுண்டாக ஒலிக்க, தீம் தேறல்-தித்திப்பாகிய தேனை, வாக்கும்-ஊற்றுகின்ற, தார்-பூமாலையை அணிந்த, சேய்-குமரனாகிய நளன், (ருதுபர்ணன் முகத்தை நோக்கி), தனி - ஒப்பற்ற, ஒற்றை ஆழி - ஒரே சக்கரத்தையுடைய, தேர் என்ன - தேரைப்போல, (அதாவது: சூரியனுடைய ஒற்றைச் சக்கரத் தேரைப்போல), ஓடுவது-விரைந்தோடத் தக்கதாகிய, ஓர்-ஒரு, கொற்றம்-வெற்றி பொருந்திய, நெடுந்தேர்-பெரியதேரை, கொடுவந்தேன்-கொண்டு வந்தேன், இதற்கு-இதில், போந்து-வந்து, ஏறுக-ஏறக்கடவாயாக, என்று உரைத்தான்-என்று சொன்னான். எ-று

தேரை அலங்கரித்த நளன், அதனைக் கொண்டுபோய் ருதுபர்ணனுக்கெதிரில் நிறுத்திக்கொண்டு அவனை நோக்கி, "நான் உயர்ந்த தேரைக் கொண்டுவந்தேன்; இதில் ஏறிக்கொள்" என்றான் என்க. இந்நளன் ஒரு விதத்தில் அரசன் கட்டளையை நிறைவேற்ற வேண்டுமென்று சென்றானெனினும், அவன் மனத்தில் மாத்திரம் தானும் விரைந்து குண்டினபுரிக்குப்போய் இரண்டாவது சுயம்வரத்தின் உண்மையை உணரவேண்டுமென்னும் விருப்பம் அதிகமாயிருந்தது. அதனால் அவன், 'ருதுபர்ணன் விரைந்து செல்லத்தக்க தேரைக் கொண்டுவரும்படி சொன்னது நம்முடைய எண்ணத்துக்கும் அனுகூலமாகவே யிருக்கின்றது; ஆதலின், மிக்க விரைவில் செல்லத்தக்க அஸ்வங்களையும் தேரையுமே நாம் கொண்டு செல்லவேண்டும்' என்று தீர்மானித்து அவ்விதமான தேர்குதிரைகளையே அலங்கரித்துக் கொண்டுவந்தான். அதனாலேயே அவன், "ஒற்றைத்தனியாழித் தேரென்ன

ஓடுவதோர், கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன்'' என்றான். இதனால் நளன் ருதுபர்ணனிடத்தில் ''என்செய்கோ மற்றிதனுக்கு' என்று நீ விசாரப்படாமல் இதில் ஏறிக்கொண்டால் குறித்த காலந் தவறாமல் நாளைக்கே குண்டினபுரிக்குப்போய்ச் சேரலாம்'' என்பதைக் குறிப்பா லுணர்த்தினனென்பதும் விளங்கும். சூரியனுடைய தேர் ஒற்றைச் சக்கரத்தையுடையதென்று புராணங்கூறும். நளன் இப்பொழுது கொண்டுவந்த தேர் சிறிதும் ஓயாமல் விரைந்து சென்று குறித்தவிடம் போய்ச் சேரக்கூடியதாதலின் இதற்குச் சூரியன் தேரை உவமை கூறினான். 'கொற்றத்தேர்' என்பது, 'எல்லாத் தேர்களினும் உயர்ந்ததேர்' என்பதை விளக்கும். மாலையில் வண்டுகள் சேர்ந்து தேனை உண்பதை, அவ்வண்டுகள், பொம்மென்னும் ஓசையால் தங்கள் பசித்துன்பத்தைச் சொல்லி முறையிடுவதாகவும், அதற்கிரங்கி மாலை, தேனை அளிப்பதாகவும் உருவகப்படுத்திக் கூறினர் ஆசிரியர் இவ்வாறு கூறியதனால் அம்மாலையைத்தரித்த நளனும் அதைப்போலவே உபகார சிந்தை யுடையவனென்ற குறிப்புத் தொனிக்கும். இது, 'இலேசமொழி கூறிய ருதுபர்ணனுக்குத் தேரைக்கொண்டுவந்து நிறுத்தி நளன் மதுரமொழி கூறினான்' என்பதால் பெறப்படும்.

ஒற்றை ஒன்று என்னும் மென்றொடர்க் குற்றியலுகரம் வன்றொடராய் ஐச்சாரியை பெற்றது; (நன் உயி-௬௪, ௬௫); இரட்டை என்பதும் இங்ஙனமே கொள்ளப்படும். கொற்றம்-(பகவரைக்) கொன்று பெறுவது; இது வெற்றிக்குக் காரணக்குறி; கொற்றம் என்பதில், கொல்-பகுதி, அம்-விகுதி, று-சாரியை, மற்றவை-சந்தி. இதற்கு உருபு மயக்கம்; (நன்-பெ-௬௦). போந்து-புகுந்து என்பதன் மரூஉ; 'போ' என்ற பகுதியினின்றே பிறந்ததெனலுமாம். 'ஏறுக என்று; என்பது, .ஏறுகென்று' எனத்தொகுத்தலாயிற்று. பொம் மெனல்-ஒலிக்குறிப்பு; இதனை 'சப்தாநுகரணம்' என்பர் வட நூலார். அளி-ஆரியமொழி. தீம்-இனிமை (தித்திப்பு); தீம் + தேறல் = தீந்தேறல்; கொடுமைப்பொருளைப் பயக்குமிடத்தில் இது 'தீத்தேறல்' என்று வலிமிகுந்து நிற்கும்; அப்பொழுது, தீமை தேறல் எனப் பதச்சிதைவு செய்யவேண்டும்; தீந்தேன் தீத்தேன், தீங்கவி தீக்கவி, என்பனவற்றில் இவ்வேறுபாடு காண்க. வாக்குதல்-வார்த்தல், மற்று-அசை 'இதற்கே' என்பதில், ஏ-அசை. கொடு-நடுக்குறைந்தது. சேய்-இளமைப் பருவமுடையவன். வீரனென்னும் பொருளதென்பினுமாம்.

அடுத்த செய்யுளில் தேர் விரைந்துசென்ற செய்தி கூறப்படுகின்றமையால், இங்கு நளன் சொற்படி ருதுபர்ணன் தேரில் ஏறினனென்பதையும், நளன் தேரைச் செலுத்தினன் என்பதையும் கதைத் தொடர்ச்சிக்குத் தக்கவாறு கூட்டி முடித்துக் கொள்ளவேண்டும்.

**இதில், நளன் செலுத்திய தேர் விரைந்து சென்றமை கூறப்படுகின்றது.**

363. மூந்தை வினைகுறுக மூவா மயல்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே—சந்தவிரைத்

தார்குன்று மெல்லோதி தன்செயலைத் தன்மனத்தே
தேர்கின்று னூர்கின்ற தேர்.

(இ-ள்.) (அவ்வாறு ருதுபர்ணனும் நளனாகிய வாகுகனும் தேரிலேறிப் புறப்பட்டுப் போருங்காலத்தில்), சந்தம்-அழகினையும், விரை-வாசனையையும், (உடைய), தார்-பூமாலைகள், குன்று-குறையாத (அதாவது: மிகுதியாகச் சூட்டப்பெற்ற), மெல் ஓதிதன்-மென்மையான கூந்தலையுடையவளான தமயந்தியினது, செயலை-செய்கையை, (அதாவது: அவள் இரண்டாவது சுயம்வரம் ஏற்படுத்தியிருக்கும் விஷயத்தை), தன்மனத்தே - தன்னுடைய மனத்திலே, தேர்கின்றான்-ஆலோசித்துக் கொண்டிருக்கின்றவனான நளன், ஊர்கின்ற-ஏறிச்செலுத்துகின்ற, தேர்-அந்த இரதமானது, முந்தை வினைகுறுக-பழவினையானது நெருங்க, (அதனால் அவமானப் படவேண்டித் தமயந்தியினிடத்து), மூவா-முடிவடையாத, (அதாவது: அளவு கடந்த), மயல் கொண்டான்-ஆசை மயக்கத்தைக் கொண்டவனான ருதுபர்ணனுடைய, சிந்தையினும்-மனமானது செல்லுவதைக் காட்டிலும், கடுகச்சென்றது - விரைவாகப் போயிற்று, எ-று.

நளன் செலுத்திய அத்தேரானது, பழவினைப்பயனால் அவமானத்தை அடைதற்குத் தமயந்தியின்மீது மிக்க ஆசை மயக்கத்தைக்கொண்ட ருதுபர்ணனுடைய மனத்தைக் காட்டிலும் வேகமாகச்சென்றது என்பது இதன்கருத்து. மனமானது எவ்வளவு தூரத்திலுள்ள பொருளை நினைத்தாலும் நினைத்த அக்கணத்திலேயே அப்பொருளினிடம் செல்லுதல் இயற்கை; அதனினும் காதல் மிக்கார் மனம் தீவிரமானது; ஆதலின், பெண்மயல் கொண்ட ருதுபர்ணனுடைய மனம் மிக்க வேகத்துக்குவமையாகக் கூறப்பட்டது. மிக்க வேகத்துக்கு 'மனோவேகம்' என்று உலகில் வழங்குதலுங் காண்க. "மயல்கொண்டான் சிந்தையினுங் கடுகச் சென்றது" என்றதனால்; தமயந்தியை விரும்பிய ருதுபர்ணன் அவளை மணஞ்செய்து கொள்ளற்கு எவ்வளவு வேகமாகத் தேர்செல்ல வேண்டுமென்று நினைத்தானோ அதைக்காட்டினும் மிக்க வேகமாக அது சென்றதென்பது பெறப்படும். நளன் வேகமுள்ளவையெனத்தெரிந்து பூட்டிய குதிரைகளின் வேகமொருபக்க மிருக்க, அவன் அச்வஹ்ருதய வித்தையை யுணர்ந்துபயோகித்து இக்குதிரைகளைச்செலுத்தியதாலும், ருதுபர்ணனைப்போலவே தானும விரைந்துபோக வேண்டுமென்று கருதித் தனக்காகவும் கடுகச் செலுத்தியதாலும் அத்தேர் இங்ஙனம் வேகமுடையதாயிற்றென்க. நளன் தன் பொருட்டும் தேரை வேகமாகச் செலுத்தினனென்பது, "மெல்லோதி தன் செயலைத் தன் மனத்தே தேர்கின்றான்" என்றதனாற் பெறப்படும். நீதிதவறாத மநுவமிசத்திற் பிறந்த ருதுபர்ணன், சாஸ்திரத்துக்கும் உலக வழக்கிற்கும் விரோதமான இரண்டாம் சுயம்வரத்தைமெய்யென்று நம்புவதற்கும், அம்மணத்திற்குப்போய்த்தான் அவமானப்பட்டுத் திரும்புவதற்கும் காரணம் அவன் பூர்வ ஜன்மத்திற் செய்த தீவினையேயாம்; ஆதலின்,

அவனை, "முந்தைவினை குறுக மூவாமயல் கொண்டான்" என்றார் ஆசிரியர். தமயந்தியின் கூந்தல் இயற்கையழகும், மாலைசூடல் முதலிய அலங்காரங்களால் செயற்கையழகும் பொருந்தியதாதலின், "சந்த விரைத்தார் குன்றா மெல்லோதி" எனப்பட்டது. கூந்தலுக்கு மென்மை பெண்பால் உரோமத்தின் உத்தமகுணம் ஐந்தனுள் ஒன்று.

முந்து - பழமையை உணர்த்து மிடைச்சொல்; இதில், ஐ-சாரியை; 'முந்தை' என்பது ஐயீற்றுடை மென்மெடர்க்குற்றியலுகரம். 'வினை' என்பது நல்வினை தீவினை இரண்டிற்கும் பொதுவாயினும் இங்குச் சந்தர்ப்பம் நோக்கித் தீவினைமேனின்றது குறுக-செயவெனெச்சம்; இது, காரணப் பொருளதாதலின் இறந்த காலத்ததாம். 'குறுகக்கொண்டான்' என இயையும். மூவா-மூ என்னும் வினைப்பகுதியடியாகப் பிறந்த ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்; இதன் உடன்பாடு 'மூத்த' என்பதாம்; மூத்தல்-கிழத்தன்மை யடைதல்; அஃதிங்கு 'முடிதல்' என்னும் பொருளில் நின்றது. கொண்டான், தேர்கின்றான் என்பன வினையாலணையும் பெயர்கள். சிந்தை சிந்தாவென்னும் வடசொற்றிரிபு; இதில் ஆவீறு ஐயீறாயிற்று. இன்-எல்லைப்பொருளதாகிய ஐந்தனுருபு. உம்-அதனினும் மேம்பட்ட வேகத்தைக் குறித்தலால் உயர்வு சிறப்புப் பொருளது. சந்த விரைத்தார் குன்றாமெல்லோதி-அடையடுத்த சினையாகு பெயர்; 'மெல்லோதி' என்பதைப் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகக் கொள்வாருமுளர்; அங்ஙனங் கொள்ளுமிடத்து, 'சந்த விரைத்தார் குன்றா' என்ற அடை 'மெல்லோதி' என்ற அன்மொழித் தொகைப் பெயரின் ஏகதேசமாகிய ஓதிக்கு ஏலாதாதலின் அது பொருந்தாமை யுணர்க. 'சென்றதே' என்பதிலும், 'மனத்தே' என்பதிலும், ஏ-அசை.

அங்ஙனம் அத்தேர் வேகமாகச் சென்றதற்கோர் அறிகுறி.

384. மேலாடை வீழ்ந்த தெடுவென்றா னவ்வளவில்
நாலாறு காத நடந்ததே—தோலாமை
மேல்கொண்டா னேறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.

(இ-ள்) (அத்தேர் அவ்வாறு சென்றபோது) தோலாமை - (பகைவர்க்குத்) தோற்காதிருக்குந் தன்மையை, மேல்கொண்டான் - தரித்தவனாகிய (அதாவது: வெற்றியைக் கைக்கொண்டவனாகிய) ருதுபர்ணன், ஏறிவர-அதில் ஏறியமர்ந்துவர, (அத்தேர் சென்ற வேகத்தால் உண்டான காற்று மோதியதால்), மேலாடை-(அவன்) மேலே தரித்த வஸ்திரமானது, வீழ்ந்தது-கீழே வீழ்ந்தது, (அப்போது ருதுபர்ணன் நளனை நோக்கி), எடுஎன்றான்-(அதனை) எடுப்பாயாக என்றான், அவ்வளவில் - அவ்வாறு சொல்லிய நேரத்துக்குள், வெம்மை-கொடுமையையுடைய, கலி - கலிபுருஷனுடைய, சூதின்-வஞ்சனையினால், மால்கொண்டான்-மயக்கத்தைக் கொண்ட நளன்,

கோல்கொண்ட-சாட்டைக்கோல் கொண்டு தூண்டி நடத்திய, மா-தேர்க் குதிரைகள், நால் ஆறுகாதம்-நான்கு அல்லது ஆறுகாததூரம், நடந்தது-வேகமாகப் பாய்ந்து சென்றுவிட்டன, எ-று.

கீழே வீழ்ந்த மேலாடையை எடுஎன்று, ருதுபர்ணன் நளனை நோக்கிக்கூறிய வார்த்தை முடிவதற்குள் குதிரைகள் நாலாறு காதம் நடந்தன என்றதனால், அக்குதிரைகளின் வேக மிகுதியும், நளன் தேர் செலுத்துந் திறமையும் நன்கு விளங்கும். ருதுபர்ணன் குண்டின புரத்துக்குப் போய் மணம் பெறாமல் மீள்வதால் மேலாடை வீழ்ந்தது அதற்கறி குறியான தீநிமித்தமாம். ருதுபர்ணன் இவ்விரண்டாம் சுயம்வரத்தில் தான் தமயந்தியை அடைவது நிச்சயமென்று கருதியிருந்தனனாதலின் அவனை, 'தோலாமை மேல்கொண்டான்' என்றார் ஆசிரியர். ஒரு பெண்ணின்மீது காதல் கொண்டார், அவள் தம்மை விரும்பாதிருப்பினும் அவள் செய்யும் செய்கைகளை யெல்லாம் தம் விருப்பாற் செய்வனவாகவே அக்காதன் மயக்காற் கருதுவது இயற்கையாதலின், இங்கு ருதுபர்ணனும் தனக்காகாத காரியத்தில் ஜெயம்பெறுவதாக உறுதிகொண்டான். நளன் இரண்டாவது சுயம் வரத்தைப்பற்றி ஒரு துணிவுங் கொள்ளாது மயக்கமுற்றிருந்ததற்குக் காரணம் கலியின் வஞ்சகச் செய்கையேயாம். ஆதலின், அவனை, "கலிச்சூதின் மால்கொண்டான்" என்றுங் கூறினார் புலவர்.

'நாலாறு' என்றது அவ்வெண்ணைக் குறியாமல் சில மாத்திரமாய் நின்றது. இனி, 'நாலாறு' என்பதை, 'நாலும் ஆறும்' என உம்மைத் தொகையாகக் கொண்டு 'பத்து' என்றும், 'நான்காகிய ஆறு' எனப் பண்புத் தொகையாகக் கொண்டு 'இருபத்துநான்கு' என்றும் உரைக்கலாம். எடு-வினைப்பகுதி; இது, தானே ஏவலொருமைக்குவந்தது. மா-சாதியொருமை; ஆதலின், அதற்கேற்ப இது 'நடந்தது' என்னும் ஒருமை முற்றைக்கொண்டது; 372-ஆம் செய்யுளில் 'பரிவிட்டவையாற்றி' என வருதல் நோக்கி இங்கு, மா-என்ற பால்பகாவஃறிணைப் பெயர்க்குப் பன்மைப் பொருள் கொள்ளப்பட்டது. வா-வினையெச்சம்; 'வீழ்ந்தது' என்ற முற்றோடு முடியும்; இதில் வருதல்; செல்லுதற் பொருளில் நின்றது. காதம்-ஏழரை நாழிகைவழி; அதாவது: பத்துமைல். கொண்டான் இரண்டும் - வினையாலணையும் பெயர்கள். கோல்-குதிரை நடத்தும் சாட்டை தோலாமை-எதிர்மறைத் தொழிற் பெயர். 'சூதின்' என்பதில், இன், - ஏதுப்பொருளதாகிய ஐந்தனுருபு. மேலாடை-உத்தரீயம; இதன் எதிர்மொழி - அந்தரீயம்; இதற்கு, 'உள்ளாடை' என்று பொருள். ஏ-அசை; தேற்றப்பொருளெனினுமாம்.

**ருதுபர்ணன், தனக்குத் தெரிந்த அக்ஷஹ்ருதய வித்தையை நளனுக்குக் காட்டுதல்.**

365. இத்தாழ் பணையி லிருந்தான் றிக் காயெண்ணிற்
பத்தா யிரங்கோடி யாமென்ன—உய்த்ததனில்

தேர்நிறுத்தி எண்ணினான் தேவர் சவைநடுவே
தார்நிறுத்துந் தோள்வேந்தன் தான்:

(இ-ள்) (அவ்வாறு தேர் வேகமாகச்சென்று கொண்டிருக்கையில் ருதுபர்ணன் வழியில் நின்ற ஒரு தான்றி மரத்தை நளனுக்குச் சுட்டிக்காட்டி அவனைநோக்கி), தாழ்பணையில்-(சுற்றிலும் தழைத்துத்) தாழ்ந்த கிளைகளையுடைய, இரு-பெரிய, இ தான்றி-இந்தத்தான்றி மரத்திலுள்ள, காய்-காய்கள், எண்ணில்-கணக்கிட்டுப் பார்க்குமிடத்தில், பத்தாயிரம்கோடி-பதினாயிரம் கோடி என்னும் தொகையினவாம், பார்-(நீபோய் எண்ணிச் சோதித்துப்) பார்ப்பாயாக, என்ன-என்று சொல்ல, தேவர் சவைநடுவே - தேவர்கள் கூடிய சபையின் மத்தியிலே, தார்-(தமயந்தி சூட்டிய) சுயம்வரமாலையை, நிறுத்தும்-(தன்னிடத்தே) நிற்கச்செய்யத, தோள்-தோள்களையுடைய, வேந்தன்-நளமகாராஜன், அதனில்-அம்மரத்தினிடத்தில், தேர்உய்த்து நிறுத்தி-தேரைச் செலுத்தி நிறுத்தி, எண்ணினான்-அக்காய்களை எண்ணிப் பார்த்து அவை ருதுபர்ணன் சொன்ன கணக்குப்படி சரியாயிருக்க வுணர்ந்து அளவற்ற அதிசயமடைந்தான், எ-று.

ருதுபர்ணன், தேரோடும் வேகத்தைக்கண்டு அதிசயித்து, 'இத்தேரில் பூட்டிய குதிரைகள் இங்ஙனம் விரைந்து செல்வதற்குக் காரணம், நளன் அச்வஹ்ருதய வித்தையை உணர்ந்திருப்பதே; அவ்வித்தை மிக அருமையானதாயிருக்கின்றது; அதனை நாமும் தெரிந்துகொண்டால் அது நமக்குப் பற்பல விஷயங்களில் அனுகூலமாயிருக்கும்; எனினும், அவ்வரிய வித்தையைப் பிரதிபலனின்றிக் கற்றுக்கொடுக்கும்படிநாம் இவ்வாகுகனிடம் கேட்பது தகாது; நமக்குத் தெரிந்திருக்கும் அக்ஷஹ்ருதய வித்தையை இவனுக்குக் காட்டி அதற்கீடாக இதனைக் கற்றுக்கொடுக்கும்படி இவனைக் கேட்டால் இவன் எளிதில் நமக்குணர்த்துவான்' என்று கருதினான். ஆதலின், நளனுக்கு அவ்வித்தையைக் காட்டினான். ருதுபர்ணன் இவ்வாறு கருதியே இதனைச்செய்தான் என்பது அடுத்த செய்யுளால்விளங்கும். தமயந்தியை நளனுக்கு மாலைசூட்டச் செய்தது அவனுடைய தோள் அழகேயாதலின், அத்தோளைத் 'தார்நிறுத்துந் தோள்' என்றார் ஆசிரியர்.

'இத் தான்றி' என இயைக்க. 'பணையில்' என்றதில், இல்-சாரியை; இஃது இன் என்பதுபோல அமைந்தது; இன்சாரியை கொண்டு பணையிளிருந்தான்றி' எனப்பாடமோதுதல் நேராம். இனி, 'தாழ்பணை இல்' என்று பிரித்து, 'தாழ்ந்த கிளைகள் இல்லாத' எனப்பொருளுரைத்தலு மொன்று; இதற்கு, 'மேலே வளர்ந்த கிளைகளையே உடையது' என்பது கருத்தாம். இன்னும், 'தாழ்பணையில் தான்றி' என்பதற்கு, 'தாழ்ந்தவயலில் உள்ள தான்றிமரம்' எனப்பொருள் கொள்வாருமுளர்; இதற்கு, 'பக்கத்திலுள்ள பள்ளத்தாக்கான மருத நிலத்திலிருந்த தான்றி' என்பது கருத்தாம். பத்தாயிரங்கோடி-பண்புத்தொகைப் பண்மொழித்தொடர்; இனி, 'பத்தாயி

ரங்கோடி' என்பதை, 'பத்தாயிரம்-பதினாயிரம், கோடி-(இதனைத் தள்ளாது மனத்திற்) கொள், என்று பிரித்துப் பதப்பொருளுரைப்பாரு முளர்; இவ்வுரை கொள்ளுமிடத்து, கோடி-ஏவலொருமை வினைமுற்று. இதில், கொள்-பகுதி, இ-விகுதி, பகுதி முதல் நீட்சி-விகாரம், த்-எழுத்துப்பேறு, தகரம் டகரமாய் ளகரம் கெட்டது-சந்தி. சவை-ஸபா என்ற வடசொற்றிரிபு. தான்-அசை. 'எண்ணினான்' என்பதில் 'கணக்கிட்டுப் பார்த்தான்' என்ற பொருள்மட்டு மிருப்பினும் மேல்வரும் விஷயம் நோக்கி அதன் பின்னர்ச் சிலவாக்கியங்கள் இசை யெச்சமாகக் கூட்டி முடிக்கப்பட்டன.

### ருதுபர்ணன், நளனிடத்தில், 'நம் வித்தைகளை மாற்றிக்கொள்வோம்' என்றுரைத்தல்.

366 ஏரடிப்பார் கோலெடுப்ப வின்றேன் றொடைபீறிக்
காரடுத்த சோலைக் கடனாடன்—தேரடுத்த
மாத்தொழிலு மித்தொழிலு மாற்றுதியோ வென்றுரைத்தான்
தேர்த்தொழிலின் மிக்கானைத் தேர்ந்து.

(இ-ள்.) (நளன் அவ்வாறு காய்களை எண்ணிப்பார்த்து அதிசயித்த போது தான் உத்தேசித்தபடியே), ஏர் அடிப்பார்-(உழுபடைகொண்டு உழும்போது) எருதுகளை அடித்தோட்டும் உழவர்கள், கோல் எடுப்ப-(அவற்றை அடித்தற்குத்) தாற்றுக்கோலை மேலே உயர்த்த, (அதுபட்டதனால்), இன்-இனிமையான, தேன் தொடை-தேன் கூண்டானது, பீறி-கிழிபட்டு, கார் அடுத்த-மேகத்தைச்சேரப்பெற்ற, சோலை-சோலைகளையுடைய, கடல் நாடன்-கடலடுத்த கோசல தேசத்தை யுடையவனான ருதுபர்ணன், தேர்த்தொழில் மிக்கானை-தேரோட்டுந்தொழிலில் சிறந்தவனான நளனை, தேர்ந்து-(அச்வஹ்ருதய வித்தையில் தேர்ந்தவனென்று) நன்குமதித்து, (அவனை நோக்கி), தேர் அடுத்த-தேரிற் சேர்ந்த (அதாவது: இரதத்திற் பூட்டப்பட்ட), மாத் தொழிலும்-குதிரைகளை யோட்டுந் தொழிலையும், இத்தொழிலும்-(எனக்குத் தெரிந்த) இந்தக்காயெண்ணுந் தொழிலையும், மாற்றுதியோ--மாற்றிக் கொள்கின்றாயா?, என்று உரைத்தான்-என்று சொன்னான், எ-று.

ருதுபர்ணன் நளனை நோக்கி "நான் அறிந்த அக்ஷஹ்ருதயம் என்னும் இந்தக் கணிதவித்தையை உனக்குத் தெரிவிக்கின்றேன்; நீ யறிந்த அச்வஹ்ருதயம் என்னும் வித்தையை எனக்குக் கற்பிக்கின்றனையா" என்றானென்பது இதன்கருத்து. நளன், தன்னுடைய வித்தையைப்பார்த்து அதிசயித்ததால் அதை விரும்பினானென்றும், அவ்வாறு விருப்பம் ஏற்பட்டதால் அவ்வித்தையைக் கற்றுக்கொண்டு அவனுடைய வித்தையைத் தனக்குக் கற்றுக்கொடுக்க இசைவானென்றும் ருதுபர்ணன் உணர்ந்தான்; அதனாலேயே இவ்வாறு 'வித்தைகளை மாற்றிக்கொள்கின்றனையா?' என்று அவனிடம் வினாவினான். ஒருவரிடம் ஒன்றைப் பெற்றுக்கொள்ள விரும்புவோர் அவர் அதனைக் கொடுப்பார் என்ற குறிப்பை யுணர்ந்தபின்னரே

கேட்டல் இயல்பு. மாத்தொழில்-அக்ஷஹ்ருதயம் என்னும் வித்தை; இத் தொழில் என்றது, ருதுபர்ணனுக்குத் தெரிந்த அக்ஷஹ்ருதயம் என்னும் வித்தை; இது, எவற்றையும் பார்த்த மாத்திரத்தில் கணக்கிட்டு உணரும் வல்லமையோடு சூதாட்டத்தில் ஜெயங்கொள்ளுந் தன்மையையுண்டாக்கக் கூடியது. மருத நிலத்தில் சோலைகள் வயல்களைச் சூழ்ந்து நிற்கும்; அவற்றில் மேகங்கள் படிந்திருக்கும்; அச்சோலைகளிலுள்ள மரங்களில் தேன் கூண்டுகள் ஆங்காங்கே யிருக்கும்; இவ்வாறு சோலைகளும் மேகமும் மருத நிலத்தைச் சூழ்ந்திருப்பதால் உழ வெருதுகளைத் தாற்றுக்கோலால் அடித் தோட்டும் மள்ளர்கள் அவ்வாறடிக்க அக்கோலை மேலே தூக்கும்போது அக்கோலின் நுனி தாழ்ந்த மரக்கிளைகளிலுள்ள தேனிறால்களிற்றாக்க அவைகிழிந்து அவற்றினின்றும் தேன் வெளிப்பட்டு அங்குப் படிந்திருக்கும் மேகத்தோடு கலக்கும். இனித் 'தேன் தொடைபீறிக் கார் அடுத்த' என்பதற்கு, 'இனிமையான தேன்கூடு கிழிபட்டு மேகததை யொத்திருக்கின்ற (அதாவது: மேகத்தைப்போலத் தேனைச் சொரிகின்ற' எனப்பொருளுரைத்தலுமொன்று; இன்னும் இதனை, முன் 347-ஆம்செய்யுளில் 'அன்னமிதிப்ப அலர் வழியுந் தேறல்போய்ச், செந்நெல் விளைக்குந் திருநாடு" என்பதுபோல அமைந்ததெனக் கொண்டு, 'தொடை' என்பதைப் பூ அல்லது பூங்கொத்தெனக்கொண்டு, பொருளுரைத்தலும் பொருந்தும். "கடல் நாடு" என்பதை உவமைத் தொகையாகக்கொண்டு, 'கடல்போல விசாலமான தேசம்' எனினும் பொருந்தும். கோசல நாட்டின் எல்லை கடற்கரை வரையில் உள்ள தென்பது சிலர் கொள்கை யாதலின் அதையொட்டிக் 'கடல் நாடு' என்பதற்கு, 'கடலடுத்த தேசம்' எனப் பொருளுரைக்கப்பட்டது. 'மாற்றுதியோ என்றுரைத்தான்' என்பதற்கு, 'மாற்றிக்கொள்கின்றாயோ என்று வினவி அக்ஷஹ்ருதய வித்தையை நளனுக்குச் சொல்லிக் கொடுத்தான்' என்று பொருள் கூறுவாருமுளர்,

கார் - மேகத்துக்குப் பண்பாகு பெயர்; கருமையென்னும் பண்புப் பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு இடை உகரங்கெட்டு, 'கார்' என நின்றது; கருமை என்னும் நிறக்குணப் பெயர் , அதனையுடைய மேகத்துக்காயிற்று. மா - என்பது, பலபொருளொரு சொல்லாய் விலங்கின் பொதுப்பெயருமாவதெனினும், 'தேரடுத்த' என்னும் அடையால் குதிரையையுணர்த்தி நின்றது. மாற்றுதி-முன்னிலையொருமை எதிர்கால முற்று; இதில் இகர விகுதியே காலங்காட்டிற்று; த் - எழுத்துப்பேறு. ஏர் - எருது, கலப்பை, நுகத்தடி முதலியவற்றின் கூட்டத்திற் கேற்பட்டபெயர். இஃதிங்கே முக்கியமாக எருதையுணர்த்தி நின்றது. எடுத்தல்-மேலோங்குதல்.

இனி அடுத்தசெய்யுளில் கலி, நளனைவிட்டு நீங்கினமை கூறப்படுகின்றபடியால், இடையில் நடந்த விஷயம் சொல்லப்படாவிடினும் கதைத்தொடர்பு நோக்கி, 'ருதுபர்ணன் அவ்வாறு கூறியதற்கு நளன் இசைய அதன் மேல் இருவரும் ஒருவர்க்கொருவர் வித்தையைக் கற்றுக்கொடுத்தார்' என்ற விஷயத்தை இங்குக்கூட்டி முடித்துக்கொள்ள வேண்டும்.

**கலிபுருஷன் நளனைவிட்டு நீங்குதல்.**

367. வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன் சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பா னின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பா னின்ற கலி.

(இ-ள்) (இவ்வாறு இருவரும் வித்தையை மாற்றிக்கொண்ட சமயத்தில்) காவலன்பால்-நளமகாராஜனிடத்தில், நின்ற-நிலைபெற்றிருந்த, கலி-கலிபுருஷனானவன், வண்டு ஆர்-வண்டுகள் நிறைந்த, வளம்-வளப்பம்பொருந்திய, வயல்-கழனிகள், சூழ்-சூழ்ந்த, மள்ளுவநாடு - மள்ளுவ நாட்டையுடைய (அதாவது: அத்தேசத்தை ஆளுகின்ற, எம்கோமான்-எங்கள் அரசனாகிய, தண்தார்புனை - குளிர்ச்சியான மலர்மாலையை அணிந்த, சந்திரன் சுவர்க்கி-சந்திரன் சுவர்க்கியென்னும் அரசனால், கொண்டாடும்-மேன்மைப்படுத்தப்படுகின்ற, பாவலன்பால்-கவிவல்லோனிடத்தில், நின்றபசிபோல-இருந்த பசியைப்போல, நீங்கிற்று-அந்நளனை விட்டு நீங்கினான், எ-று.

நளன் அக்ஷஹ்ருதயவித்தையை ருதுபர்ணனிடத்தில்கற்றுக்கொண்ட மாத்திரத்திலே கலிபுருஷன் அந்நளனைவிட்டு நீங்கினானென்பது இதன் கருத்து. இந்த வித்தை, எவற்றையும் பார்த்தமாத்திரத்தில் எண்ணிக்கையிடுதலையும், சூதில் வெற்றிபெறுந் திறத்தினையும் தரவல்லதாதலின், இது நளனைச்சேர்ந்த மாத்திரத்தில், கலிக்குரியனவாயிருந்த அவ்விருதொழில்களும் அந்நளனுக்குரியனவாயின. இதனால் கலியின்வல்லமை நளனிடத்திற் செல்லாததாயிற்று; ஆதலின், அவன் அந்நளனைவிட்டு நீங்கினானென்க. இந்நூலாசிரியர் தம் வழக்கத்தின்படியே தம்மை ஆதரித்து வந்த சந்திரன் சுவர்க்கியென்னும் பிரபுவை உபமான முகத்தாற் புகழ்ந்து கூறினர். இங்கு அவன் தம்மை ஆதரித்து வந்ததைச்சுட்டியே 'பாவலன்' என ஒருமையாற் கூறினர். இனி, பாவலன் என்பதைச் சாதியொருமையெனக் கொண்டு பல பாவலர்கள் எனக்கொள்ளலுமாம். பசித்திருந்த பாவலர் சந்திரன் சுவர்க்கியைச் சார்ந்திருந்தால் அஃதவர்கள் பால் நில்லாமல் ஓடியே போய்விடும்; அதாவது: அவனால் கொண்டாடப்படும் அவர்களிடத்தில் தரித்திரமென்பதே இராது. பசியானது புலவர்களிடத்து முன்னே நின்று சந்திரன் சுவர்க்கியிடம் அவர்கள் சேர்ந்தவுடனே நீங்கக்கூடியதாதலின் அதனை 'நின்றபசி' என்று இறந்த காலத்தாற் கூறினர் புலவர். இங்குக் கலி, பசிநோய்க்குவமையாகக் கூறப்பட்டான். சந்திரன் சுவர்க்கி என்ற பெயர் குளிர்ந்த அருட்டன்மையாலும் சகல பிராணிகட்கும் மகிழ்ச்சியை விளைவித்தலாலும் சந்திரனையும், செல்வத்தாலும் சுகானுபவத்தாலும் சுவர்க்காதிபனையும் நிகர்த்தவனென்று பொருள் தரும்.

வண்டு-சங்குமாம். வண்டார் என்பதைத் தண்டார்க் கடையாக்கினும் பொருந்தும். எம்-என்ற தன்மைப்பன்மை, அந்நாட்டுக் குடிகளையும், தம்

னைப்போன்று அவ்வரசனிடம் வந்து சேர்ந்திருக்கின்ற அந்நியநாட்டுப் புலவர்களையும் குறிக்கும். 'சந்திரன் சுவர்க்கி கொண்டாடும்'' என்பதை இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கொண்டு, 'சந்திரன் சுவர்க்கியைக் கொண்டாடும் பாவலன்' எனவுரைத்தலும் பொருந்தும். 'கோமான்' என்பதில், மான்-பெயர்விகுதி. தண்தார்-பண்புத்தொகை. தேவர்களை இருதிணையாலும் உரைக்கலாமென்பது இலக்கணமாதலின் கலிபுருஷனை இங்கே, 'கலிநீங்கிற்று' என்று அஃறிணையாற்கூறினார் புலவர். பாவலன்-பாட்டில் வல்லவன்; பா-பாட்டு. இச்செய்யுளில் உவமையணி காண்க.

அடுத்த செய்யுளில் ருதுபர்ணன் குண்டினபுரம் போய்ச் சேர்ந்தவிஷயம் வருவதால்; இங்கு நளனும் அவனும் அவ்விடத்தினின்றும் புறப்பட்டார்கள் என்ற விஷயம் கூட்டி முடித்துக்கொள்க.

ருதுபர்ணன் குண்டினபுரம் சேர்தல்.

368 ஆமை முதுகி லலவன் றுயில்கொள்ளும்
காமர் நெடுநாடு கைவிட்டு—வீமன்றன்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட் டெழுங்கூற்றம்
அன்னகரி யொன் றுடையா னங்கு.

(இ-ள்) (அதன்மேல்) போர் வேட்-யுத்தத்தை விரும்பி, எழும்-(அதைச் செய்யும் பொருட்டு) எழுகின்ற, கூற்றம் அன்ன-யமனை நிகர்த்த, கரிஒன்று-ஒருயானையை, உடையான் உடையவனான ருதுபர்ணன், ஆமை முதுகில்-ஆமையினுடைய முதுகிலே, அலவன்-நண்டுகள், துயில் கொள்ளும்- படுத்து நித்திரை செய்கின்ற, காமர்-அழகு பொருந்திய, நெடுநாடு-பெரிய தன்னுடைய தேசத்தை, கைவிட்டு-கடந்து, வீமன்தன்-வீமராஜனுடைய, பொன்நகரி-பொன்மிகுந்த நகரத்தில், சென்று அடைந்தான்-தனது நாட்டு எல்லையைக் கடந்துபோய்ச் சேர்ந்தான், எ-று.

தான்றி மரத்தடியினின்றும் புறப்பட்டவுடன் ருதுபர்ணன் தன் நாட்டின் எல்லையைக்கடந்து குண்டினபுரம் போய்ச் சேர்ந்தான் என்பது இதன் கருத்து. நீர்வள மிகுந்திருப்பதனால் ஆமை நண்டு முதலியன கொழுத்து அமைதியுடையனவா யிருக்குமாதலின், ஆமையின் முதுகில் நண்டுகள் படுத்துறங்கும். ஆமையும் சுகமிகுந்து தூங்குவதால் நண்டுகள் தன் முதுகிலேறிப் படுத்திருப்பதை யுணர்ந்து அவற்றைத் தள்ளுவதில்லை. ஆமையின் முதுகு வலிய ஓடாயிருப்பதால் அஃதவற்றை யுணர்வதில்லை யெனினுமாம். நண்டுகள், ஆமை ஒருபிராணியாயிருந்தும் அதனிடத் தஞ்சாது அதன்முதுகில் ஏறி நித்திரை செய்தல் எங்ஙனம் அமையுமெனின், அமையுமென்க. எங்ஙனமெனில், ஆமை வட்டமான கல்போன்று அசையாமல் படுத்திருப்பதால் அந்நண்டுகள் அதனைக் கல்லென்றே நினைத்து அதன்

மேலேறித் துயிலும். இதுபோலவே, "எருமை மேல் நாரை துயில்வதியு மூர்" என்று பழமொழியிற் கூறியிருத்தல் காண்க. இதனால் அந்நாட்டின் மருத நிலவளம் வெளியாம். நெடுநாடு-என்றது கோசல தேசத்தின் எல்லையைக் குறிக்கும்; இனி, அந்நாட்டிற்கும் விதர்ப்ப நாட்டிற்கு மிடையிலுள்ள தேசங்களைக் குறித்ததெனினும் பொருந்தும்.

கரி ஒன்று-பட்டத்துயானை. காமர்-காமம் என்ற வடசொற்றிரிபு; விருப்பம் என்ற பொருள் தரும் இசசொல் இலக்கணையால் விரும்பப்படும் அழகின்மேல் நின்றது. நகரி-நகரீ என்ற வடசொற்றிரிபு. வேட்டு-செய்தென்னும் வினையெச்சம்; இதில், வேள்-பகுதி, உ-விகுதி, ட்-இடைநிலை, ள் ட் ஆனது புணர்ச்சி விதியாலாய சந்தி. ஆங்கு-அசை.

## ருதுபர்ணன் வீமராஜன்மனையினுட் செல்லல்.

369. வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயின்
முற்றத் திருத்தி முறைசெய்யுங்—கொற்றவற்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து.

(இ-ள்) (அவ்வாறு போய்ச் சேர்ந்தபின்பு) மன்விரவு-பெருமை சேர்ந்த, தாரான்-மாலையை அணிந்தவனான, ருதுபர்ணன், மகிழ்ந்து-சந்தோஷித்து, வெற்றி-ஜெயம் பொருந்திய, தனி-ஒப்பற்ற, தேரை-தன்னுடைய இரதத்தினை, வீமன் வீமராஜனுடைய, பெருங்கோயில் பெரிய அரண்மனையின், முற்றத்து-முன்றிலிலே, இருத்தி - இருக்கச் செய்து (அதாவது; நிறுத்திவிட்டு), முறை செய்யும் நீதியைச் செய்கின்ற (அதாவது: நியாயத்தை நடத்துகின்ற), கொற்றவற்கு வெற்றியையுடைய அரசனாகிய வீமனுக்கு, தன்வரவு - தன்னுடைய வருகையை, கூற - சொல்லும்படி பணித்து-அங்கு நின்ற பணியாளர்க்குக் கட்டளையிட்டு, (அவர்கள் போய்த் தெரிவித்த பின்னர் வீமனுடைய அனுமதியைப் பெற்று), தனிபுக்கான்-தனியனாய் அவ்வரசனிடம் போய்ச் சேர்ந்தான், எ-று.

ஒருவரை ஒருவர் பார்க்கும் போது அவரனுமதி பெற்றுப் பார்த்தல் முறைமையாதலின், இங்கு ருதுபர்ணன் தேரை அரண்மனைவாயிலில் நிறுத்திவிட்டு, வாயில் காப்போரால் தன்வருகையை வீமனுக்குணர்த்தி அவனனுமதி பெற்று அவனிடம் போனான். வீமனுடைய சம்மதத்தின் பேரிலேயே தமயந்தி, ருதுபர்ணனை வரவழைத்ததாகிய இவ்வுபாயத்தைச் செய்தனளாதலின், வீமன் சந்தோஷமாகவே ருதுபர்ணன் வரவை ஏற்றுக்கொண்டான். ருதுபர்ணன் தேர் எல்லாத்தேர்களினும் மேம்பட்டிருத்தலானும், குறித்தகாலந்தவறாது விரைந்துபோய்ச் சேர்த்தமையானும் 'வெற்றித்தேர்' என்றும், வேறொரு தேருமின்றித் தனியாகச் சென்றமையால் 'தனித்தேர்' என்றும் கூறப்பட்டது. ருதுபர்ணனும் வேறொருவரு

யின்றித் தான் மாத்திரம் சென்றனனாதலின் அவனை, 'தனிப்புக்கான்' என்றார் ஆசிரியர். 'தனிப்புக்கான்' என்பதற்குத் 'தனியிடத்தைச் சேர்ந்தான்' என்று பொருள் கூறுவாருமுளர். அடுத்த செய்யுளில் வீமன், 'நீ இங்கு என் காரணமாக வந்தாய்', என்று வினவினனென வருதலால், அது பொருந்தாமை யுணர்க. 'பெருங் கோயில்' என்பதற்கு, 'சிறந்த அரண்மனை' யெனலுமாம் முற்றம்-முன்றில். இல் முன் என்பதிங்ஙனம் மாறிவரும்; இஃது இலக்கணப் போலியெனப்படும். இருத்தி ஏவுதற்கருத்தாவினை; இதற்கு, 'தேர்ப்பாகனைக் கொண்டு இருத்தி' எனப் பொருள் கொள்ள வேண்டும் வீமனை, 'முறைசெய்யுங் கொற்றவன்' என்றதனால், 'அவன் நீதிக்கு விரோதமாகிய இரண்டாம் சுயம்வரத்தை ஏற்படுத்தாதவன்' என்பது தொனிக்கும்படி அமைந்துள்ளது.

வரவு-தொழிற் பெயர். மன்-அரசு ஆதலின், 'மன்விரவுதார்' என்பது, 'அரசின் தன்மை விளங்கும் வெற்றிமாலை' என்று பொருள்படும்; வெற்றியாற் பெற்ற பெருமிதமாகிய அரசே இங்கு மன்-எனக் குறிக்கப்பட்டது. இனிதார் - 'சேனை' என்று பொருள்படுமாதலின், 'மன்விரவுதார்' என்பதற்குப், 'பெருமை பொருந்திய சேனையை உடைய' எனப் பொருள் விரிப்பினும் அமையும். ருதுபர்ணனுக்கு மகிழ்ச்சி - தான் சுயம்வரத்திற்குக் குறித்த தினத்தில் வந்து சேர்ந்துவிட்டதால் ஏற்பட்டதாம்; தமயந்தி நிச்சயமாகத் தனக்கு மனைவியாவாள் என்ற எண்ணத்தால் உண்டாய தெனயூகித்தற்கும் தகுதியுடையதாம்.

ருதுபர்ணன் அங்கு வந்ததற்குரிய காரணத்தை
வீமன் அவனிடம் விசாரித்தல்.

370. கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும்போய்
நெய்தற் கவாவு நெடுநாடா நீயென்பால்
எய்தற் கவாவியவா றென்.

(இ-ள், (அவ்வாறு ருதுபர்ணன் வீமனிடம் போய்ச் சேர்ந்த மாத்திரத்தில் அவன் ருதுபர்ணனை நோக்கி), கன்னி-இளமையான (அதாவது: புதியதான), நறும் தேறல்-நல்ல வாசனையுள்ள தேனை, மாந்தி - குடித்து, கமலத்தில்-தாமரை மலரில், மன்னி-பொருந்தி, துயின்ற-நித்திரை செய்த, வரி-இரேகைகளையுடைய, வண்டு-வண்டுகள், பின்னையும் போய்-மறுபடியும் சென்று, நெய்தற்கு அவாவும்-கருநெய்தல் மலரைச் சேர்வதற்கு விரும்புகிற, நெடு நாடா - பெரிய கோசல நாட்டையுடையவனே!, நீ என்பால் எய்தற்கு நீ என்னிடத்தில் வருதற்கு, அவாவிய ஆறு என்-விரும்பியவிதம் என்ன? (என்று வீமன் ருதுபர்ணனை நோக்கிவினவினன்), எ-று.

ருதுபர்ணன் அங்கு வந்த காரணத்தை வீமன் அறிவான் எனினும் அறியாதவன்போன்று அவனை நோக்கி, "மன்னனே! இங்கு என்னைக் காணவந்ததன் காரணம் யாது?" என்று வினவினான். ருதுபர்ணன் உலகத்தில் தனக்கு வேண்டிய இன்பங்கிடைத்திருந்தும் அம்மட்டில் திருப்தியடையாமல் மேலும் தமயந்தியையும் விரும்பி ஓடிவந்தானாதலின் அவனுடைய அக்குணத்தைக் குறிப்பாலுணர்த்துமாறு வீமன் அவனை, "கன்னிநறுந்தேறல் மாந்திக் கமலத்தின், மன்னித்துயின்ற வரிவண்டு பின்னையும் போய், நெய்தற்கவாவும் நெடுநாடா' என்றான்; இதனால் வீமன் அவனை 'நீயும் இவ்வண்டைப்போன்ற குணமுடையவன்' என்று குறிப்பால் இடித்துக்கூறினான் என்பது பெறப்படும். இதனாலேயே ருதுபர்ணன் அங்குவந்த காரணத்தை வீமனும் உணர்ந்திருந்தானென்பது தெளியப்படும்.

இதில், எழுவாயும், பயனிலையும் இசை யெச்சமாகக் கூட்டி முடிக்கப்பட்டன. கமலம்-வடசொல். நெய்தற்கு அவாவும்-நான்கனுருபு செயப்படுபொருளில் வந்தது. வரி-உடற்கோடு; இசைப்பாட்டெனினுமாம். கமலம், நெய்தல்-அவற்றின் மலர்கட்கு முதலாகுபெயர்கள். 'நெய்தற்கு' என்பதில் இரண்டனுருபு நான்கனுருபுமாக மயங்கிவந்த தெனினுமாம்; இங்ஙனங்கொள்ளுமிடத்து, 'நெய்தற்கவாவும்' என்பதற்கு, 'நெய்தலை விரும்பும்' எனப்பொருளுரைக்கவேண்டும்.

வீமன் வினவியதற்கு ருதுபர்ணன் விடைகூறல்.

371 இன்றுன்னைக் காண்டதோ ராதரவால் யானிங்ஙன்
மன்றன் மலர்த்தாராய் வந்தடைந்தேன்-என்றான்
ஒளியார்வேற் கண்ணாண்மே லுள்ளந்துரப்பத்
தெளியாது முன்போந்த சேய்.

(இ-ள்) (அவ்வாறு வீமன் கேட்டபோது), ஒளி ஆர்-பிரகாசம் நிறைந்த, வேல்-வேலாயுதம்போன்ற, கண்ணாள்-கண்களையுடையவளாகிய தமயந்தியினிடத்தில், உள்ளம்-தன் மனமானது, துரப்ப-தன்னைச் செலுத்தியதனால், தெளியாது - பொய்ச்சுயம்வரத்தின் செய்தியை உணராமல், முன்போந்த-எல்லோர்க்கும் முன்னே புறப்பட்டுவிரைந்து அங்குவந்து சேர்ந்த, சேய்-குமாரனாகிய ருதுபர்ணன், (வீமனைப்பார்த்து), மன்றல்-வாசனை பொருந்திய, மலர்த்தாராய்-மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்த மன்னனே!, உன்னைக் காண்பது-உன்னைப்பார்ப்பதாகிய, ஓர்-ஒரு, ஆதரவால்-ஆசையால், யான்-நான் இன்று-இப்பொழுது, இங்ஙன்வந்து அடைந்தேன்-இவ்விடம் வந்து சேர்ந்தேன், என்றான்-என்று சொன்னான்; எ-று.

ருதுபர்ணன் அங்குப் போனவுடன் அவ்விடத்திலிருந்த நிலைமைகளையும் வீமன் தன்னை வினவிய விதத்தையும் நோக்கி, அங்கே சுயம்வரம் ஏற்படவில்லை யென்பதையும், அதன் செய்தி ஏதோமாறுபாட்டால் தன்னிடம்

வந்திருக்கக் கூடுமென்றும் நினைத்தான். அதனால் அவன் உண்மையைக் கூறினால் மானக்கேடாகுமென்று இவ்வாறு வீமனைப்பார்க்க வந்ததாகக் கூறினான். "ஒளியார் வேற்கண்ணாள் மேல் உள்ளந்துரப்பத், தெளியாது முன்போந்த சேய்" என்றதனால், 'ருதுபர்ணன், 'எருது கன்று ஈன்றது' என்ற மாத்திரத்தில், 'அதனைப்பிடித்துக் கட்டு' என்று சொல்லும் பேதையைப் போன்று, 'தமயந்தியின் சுயம்வரம் நாளை நிகழ்வது' என்றவுடனே, அவளுடைய ஆசைமயக்கால் அறிவு மழுங்கி, அது அசம்பாவிதமா யிருக்குமென்பதைச் சிறிதும் ஆலோசியாமல் அதனை மெய்யென்று நம்பிப் புறப்பட்டு விரைந்தோடி வந்தான்" என்பது பெறப்படும்.

ஆதரவு-ஆதரம் என்ற வடசொற்றிரிபு. இங்ஙன்-இங்ஙனம் என்பதன் கடைக்குறை. ஆர்வேல் வினைத்தொகை. உள்ளம் - அகத்துறுப்பு; அதாவது: உட்கரணம். தெளியாது-எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம் முன் இடைச்சொல்; இஃதிங்கு விரைவின் மேனின்றது. இன்று, இங்ஙன்-இடைச்சொற்கள்; பெயர்களெனக் கொள்வாரு முளர்.

இனி, அடுத்த செய்யுளில் நளன் செய்கை கூறப்படுகின்றமையால், ருதுபர்ணன் அவ்வாறு விடை கூறியதன்மேல் வீமனால் உபசரிக்கப்பட்டு அங்கிருந்தான் என்பதை இங்குக் கூட்டி முடித்துக் கொள்க.

நளன், தேர்க் குதிரைகளை அவிழ்த்துவிட்டு மடைப்பள்ளியிற் சேர்தல்.

372. ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவை யாற்றிக்
கோதி லடிசிற் குறைமுடிப்பான்—மேதிக்
கடைவாயில் கார்நீலங் கண்விழிக்கு நாடன்
மடைவாயிற் புக்கான் மதித்து.

(இ-ள்) (ருதுபர்ணன் அவ்வாறு வீமனிடத்தில் ,விடைகூறிவிட்டிருக்க), மேதி - (புற்பூண்டுகளை மேய்கின்ற) எருமையின், கடைவாயில் - (குதட்டுகின்ற) வாய்க்கடையில், கார் கரிய, நீலம் - நெய்தற் பூவானது, கண்விழிக்கும்-மலர்ந்து விளங்குகின்ற, (சிறப்பினையுடைய), நாடன்-நிடத தேசாதிபதியான நளன், ஆதி - முதன்மையாகிய, நெடுந்தேர் - பெரிய தேரிற் பூட்டிய, பரிவிட்டு - குதிரைகளை அவிழ்த்துக் கூடத்தில் விட்டு, அவை-அவற்றை, ஆற்றி - இளைப்பாற்றுவித்து, (தான் செய்யவேண்டிய காரியங்களில்), குறை-(முடிக்காமல்) குறையா யிருக்கின்ற, கோதுஇல்-குற்றமில்லாத, அடிசில் உணவு சமைக்குங் காரியத்தை,முடிப்பான் மதித்து முடிக்கவெண்ணி, மடைவாயில் - மடைப்பள்ளியினிடத்தில், புக்கான் - மிக்க விரைவாகச் சென்று புகுந்தான், எ-று.

சாரதித் தொழிலும், உண்வு சமைக்குந் தொழிலும் நளனுக்குரியன வாதலின், அவன், தேரைக் கொண்டுபோய் நிறுத்தவேண்டிய இடத்தில் நிறுத்திக் குதிரைகளை அவிழ்த்துக் கூடத்தில் விட்டு இளைப்பாறுவித்துப்

பின்னர் எஞ்சியிருந்த உணவு சமைக்குந் தொழிலைச் செய்வதற்கு மடைப் பள்ளியிற் புகுந்தான். எருமை நீர் நிலைகளில் நீந்தித் திரிந்து, கொடி புல் முதலியவற்றை மேயும்போது நீலோற் பல மலர்கள் அதன் வாயிலகப்பட்டுக் கடைப்பாகத்தில் ஒதுங்கி மலர்ச்சிலோடு விளங்கும். இதனால், நிடத நாட்டின் நீர்வளம் இத்தகைத தென்பது புலப்படும். கண்விழித்தல் கண்ணைத் திறத்தல்; அஃதிங்கு மலர்தலில் நின்றது; இனி, நீலோற் பல மலர், மகளிர் கண்ணுக்குவமை யாதலின் 'கண்விழிக்கும்' என்பதற்கு, 'மகளிர் கண்ணைப்போல மலர்ந்து விளங்கும்' எனப் பொருளுரைத்தலு மொன்று.

மடை-சோறு; அஃதாகுபெயராய் உணவுசமைக்குமிடத்தைஉணர்த்தி நின்றது; வாய்-ஏழனுருபு. பரி-பாரத்தைப் பரிப்பது; பரித்தல்-தாங்குதல். அடிசில் - என்பதைத் தொழிலாகு பெயராகிய காரணக்குறியென்றும், அதில், அடு-பகுதி, இசில்-தொழிற்பெயர் விகுதியென்றும் கூறலாம் கடைவாய்-வாயினது கடை; இது முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை; இலக்கணப் போலியுமாம். முடிப்பான்-'பான்' என்னும் விகுதி காலங் காட்டும் எதிர்கால வினையெச்சம். முதல் வேந்தர் இக்ஷ்வாகு வமிசத்தவராதலின், அம்மரபில்வந்த ருதுபர்ணன் தேர் 'ஆதித்தேரானது'

நளன் சமையலுக்குச் சென்றவிடத்தில் அவனுக்குக் கிடைத்திருந்த வரபலத்தால் எல்லாப் பொருள்களும் தாமே வந்து நிறைதல்.

373. ஆதி மறைநூ லனைத்துந் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாதும்
நிரப்பாம லெல்லாம் நிரப்பிற்றே பொற்றேர்
வரப்பாகன் புக்க மனை.

(இ-ள்) (அவ்வாறு மடைப்பள்ளியிற் புகுந்தமாத்திரத்தில்), ஆதி - முதன்மை பெற்ற, மறைநூல் அனைத்தும்-வேதசாஸ்திரங்களை யெல்லாம், தெரிந்து உணர்ந்த-ஆராய்ந்தறிந்த, நீதி நெறியாளர்-நியாய வழியிற் செல்லும் பெரியோர்களுடைய (அதாவது: அவற்றையுணர்ந்து அவற்றிற்சொல்லப்படும் நீதி மார்க்கத்திலே நடக்கக்கூடிய பெரியோர்களின்), நெஞ்சம் போல்-மனத்தைப்போல, (அதாவது: அம்மனம் தனக்குத் தானே சத்விஷயங்களால் நிறைவுற்றிருப்பதுபோல), வரம-சிரேஷ்டமாகிய, பொன்தேர்ப் பாகன்-அழகிய தேர்ப்பாகனாகியநளன் (சமையல்செய்வதற்கு), புக்கமனை - புகுந்த அவ்வீடானது, யாதும் நிரப்பாமல் - (ஏவலாட்கள்) எதையும் கொண்டுவந்து நிறைக்காமலே, எல்லாம் - எல்லாப் பண்டங்களும், நிரம்பிற்று-அங்கு தாமே வந்து நிறைந்தன, எ-று.

நளன் சமையல் செய்யப் புகுந்த மனையில் இங்ஙனம் யாவும் வந்து நிரம்பியதற்குக் காரணம்:—அவனுக்கு வேண்டிய பொருள்களெல்லாம்

வேண்டிய விடத்திற்கிடைக்கும்படி முன்தேவர்கள் கொடுத்த வரமேயாம். அங்ஙனம் அவர்கள் வரங்கொடுத்ததைச் சுருங்கக் கூறிய "அங்கியமுதநீரம்பூ......" என்ற செய்யுளால் உணர்க. வேத சாஸ்திரங்களை யுணர்ந்து நீதிமார்க்கத்தில் நடக்கும் பெரியோர்களுடைய உள்ளம் ஒருவர் முயற்சியின்றித் தானே பூரணவஸ்துவால் நிறைவுபெற்றிருக்கும். இதுபோல் நளன் புக்கமனையிலும் ஒருவர் பிரயத்தனமில்லாமலே எல்லாம் நிறைந்தன. இனிப் பெரியோருள்ளம் சாஸ்திரவுணர்ச்சியால் எல்லாவற்றையும் உணர்ந்திருக்குமாதலின், அது யாவற்றாலும் நிறைவுற்றதெனினுமாம்.

வேதம் எல்லாவற்றிற்கும் முதனூலாதலின்; 'ஆதிமறை' எனப்பட்டது. பொன்தேர்-பொன்மயமாகிய தேரெனினுமாம். மறைநூல்-உம்மைத்தொகை; மறைகளும், அவற்றைச் சார்ந்த மற்றைய நூல்களும் என்று விரியும்; இனி இதனைப் பண்புத்தொகையாகக் கொண்டு மறையாகிய நூலெனினுமாம். அனைத்து-என்பதில் அத்தனை என்பதன் மரூஉவாகிய அனை-பகுதி. நெஞ்சம் என்பதில் அம்-சாரியை. 'எல்லாம் நிரம்பிற்று' எனவந்தது, "ஒருமையிற் பன்மையும் பன்மையினொருமையும், ஓரிடம் பிறவிடம் தழுவலுமுளவே" என்னும் (நன்-பொது-உகூ) ஆம் சூத்திர விதிபற்றிப் பன்மையில் ஒருமைவந்த பால்வழுவமைதி; எல்லாம் என்பது யாவும் கூடிய ஒரு கூட்டமென்னும் ஒருமையாய் நிரம்பிற்றென்னும் ஒருமைமுடிபேற்றதெனினுமாம். நிரம்பினவே' எனவும் பாடபேதமுண்டு; இது கொள்ளின் நேர். பெரியோர் உள்ளத்தை நளன்புக்க மனைக்குவமை கூறியதால் இஃதுவமை யணியெனப்படும். ஏ-அசை. 'எல்லாம் நிரம்பின' என்றதனால், 'நளனுடைய சமையல் வேலை எல்லாம் முடிந்து யாவும் சித்தமாயின' என்பது பெறப்பட்டது.

### தேர்ப்பாகனாகிய நளன் செயல்களை அறிந்து வரும்படி, தமயந்தி ஒருதோழியை அவனிட மனுப்புதல்.

374. இடைச்சுரத்திற் றன்னை யிடையிருளி னீத்த
கொடைத்தொழிலா னென்றயிர்த்த கோமான்—மடைத்தொழில்கள்
செய்கின்ற தெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்றாள்
நைகின்ற நெஞ்சா ளயந்து.

(இ-ள்.) (நளன் அவ்வாறு மடைப்பள்ளியிற் புகுந்து தன்வேலைகளை முடித்திருக்கும் போது) நைகின்ற-(கணவனைப்பிரிந்ததனால்) வருந்துகின்ற, நெஞ்சாள்-மனத்தையுடையவளாகிய தமயந்தி, சுரத்து இடையில்-பாலைவனத்தின் நடுவிலே, இடை இருளில்-நடுராத்திரியில், தன்னை நீத்த-தன்னை விட்டு நீங்கிப்போன, கொடைத்தொழிலான் என்று-ஈகைத்தொழிலையுடைய நளனென்று, அயிர்த்த-தன்னால் சந்தேகிக்கப்பட்ட, கோமான்-அந்தச் சிறந்த புருஷனாகிய வாகுகன், மடைத்தொழில்கள்-சமையல் வேலைகளை, செய்கின்றதெல்லாம்-செய்கின்ற வகைகளையெல்லாம், தெரிந்து-

(பலர் அறிந்துவந்து சொல்லக்கேட்டு) உணர்ந்து, (நளனாகவே யிருக்கலா மென்று துணிந்து மேலும் அவனைச் சந்தேகமற உணர்ந்து கொள்வதற்கு) நயந்து-விரும்பி (தன்தோழி யொருத்தியை நோக்கி) உணர்ந்துவா என்றான்-(நீபோய் இன்னும் அவனுடைய மற்ற செயல்களையும்), அறிந்துவரக் கடவாய் என்று கட்டளையிட்டாள், எ-று.

நளன் மேற்கூறியபடி சமையல் வேலையிற் புகுந்திருக்கும்போது, அவனைத் தந்திரத்தால் வரவழைத்த தமயந்தி, அவனைப்பற்றிய விஷயங்களை ஆராயத்தொடங்கியிருந்தாள். அத்தருணத்தில் நளன் அங்கே நெருப்பு நீர் முதலியன தேடாமலே உணவு சமைத்த அதிசயத்தைக் கண்ட சிலர் வந்து தமயந்தியிடம் தெரிவித்தார்கள். அதனைக்கேட்டதும், தமயந்தி, அவனுக்குள்ள அவ்வாற்றலை முன்னரே உணர்ந்திருப்பவளாதலின், அங்கு மடைத்தொழில் செய்பவன் நளனாகவேயிருக்கலாமென்று ஒருவாறு துணிவுகொண்டு மேலும் அவனைச்சந்தேகமின்றித் தெரிந்துகொள்ளும்பொருட்டு அவனிடத்து நிகழும் மற்ற செய்கைகளையும் உணர்ந்து வருமாறு தோழியை அனுப்பினாள். இதன் பொருட்டே தோழியை அனுப்பினாளென்பது அடுத்த செய்யுளால் விளக்கமாகப் புலப்படும்.

இனி, இச்செய்யுட்குத் "தமயந்தி தன்னை இடைச்சுரத்தில் இடையிருளில் நீத்த கொடைத்தொழிலானென்றயிர்த்த கோமான், மடைத்தொழில்கள் செய்கின்ற வகைகளையெல்லாம் தெரிந்துணர்ந்து வாவென்று தோழியை அனுப்பினாள்" என்று பொருள் கூறுவாருமுளர்; இதில் 'தன்னைப் பிரிந்தவனென்றயிர்த்தவன் செயல்களை நீ அறிந்துவா,' என்று கூறுதல் சரியான முடிபின்றி முரணாயிருத்தலின் இவ்வுரை பொருந்தாமை யுணர்க. இதுசரியானமுடிபாக வேண்டுமானால்: 'தன்னை' யென்பது அங்ஙனமே யிருப்ப, 'தெரிந்துணர்ந்து வா வென்றாள்' என்பது 'தெரிந்துணர்ந்து வரச்செய்தாள்' என்றிருத்தல் வேண்டும்.

இன்னும், 'என்றயிர்த்த கோமான்' என்பதை, 'என்றயிர்த்தக் கோமான்' எனப்பாடமோதி, இச்செய்யுட்கு, "பாலைவனமத்தியில் நள்ளிரவில் தன்னை நீத்த கொடைத்தொழிலானென்று சந்தேகித்து, அக்கோமான் மடைத்தொழில்கள் செய்கின்றதெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்று தமயந்தி தோழியை நோக்கிக் கூறினாள்" எனப்பொருளுரைப்பர் ஒருசாரார் இவ்வுரையில் அயிர்த்து என்பதற் கேற்பமுதலில், 'வாகுகனை' என்னுஞ் சொல்வருவித்துக் கொள்ளவேண்டும். இவ்வுரை ஒருவகையிற் பொருந்துமெனினும், மேல், சமையல் தொழில்வகைகளைத் தோழி ஆராய்ந்தாளென்பது வாராமையானும் அடுத்த செய்யுளில் தமயந்தி வேறு செயல்களை நாடுமாறுரைத்தலானும் சிறவாமை யுணர்க.

'அயிர்க்கப்பட்ட' என்னும் செயப்பாட்டு வினை, 'அயிர்த்த' என்று செய்வினைபோல் வந்தது; (நன்-பொது-௩௪)ஆம் சூத்திரம் பார்க்க. செய்

கின்றதெல்லாம்-ஒருமையிற் பன்மைவந்த பால் வழுவமைதி. 'செய்கின்ற வெல்லாம்' எனப்பாடபேதமுண்டு; அப்பாடங்கொள்வது நேர். சுரம்-ஜ்வரம் என்ற வடசொற்றிரிபு; இது 'வெப்பம்' எனப்பொருள்படும் எனி னும் இங்கு அதனையுடைய பாலைவனத்தின் மேனின்றது. 'இடைச்சுரம்' என்பது, 'சுரத்திடை' எனமாற்றிக் கொள்ளப்பட்டது.

தமயந்தி தோழியிடம் வாகுகனைச் சோதிக்கு முபாயங்கூறல்.

375 கோதை நெடுவேற் குமரனையுந் தங்கையையும்
ஆதி யரச னருகாகப்—போத
விளையாட விட்டவன்றன் மேற்செயனா டென்றாள்
வளையாடுங் கையாள் மதித்து.

(இ-ள்) (அவ்வாறு சொல்லிப் பின்னரும் மேற்செய்ய வேண்டிய காரி யங்களை யோசித்து), வளைஆடும் வளையல்கள் அசைந்தாடிக் கொண்டிருக் கின்ற, கையாள்-கரங்களை யுடையவளாகிய தமயந்தி, மதித்து-(தான் பாக னைச்சோதித்தற்குச் செய்யுமாறு யோசித்தவற்றுள் ஒன்றை) எண்ணி, (அதனைத் தெரிவிக்கத் தொடங்கித் தோழியை நோக்கி), கோதை-மாலை யைஅணிந்த, நெடுவேல்-நீண்ட வேலாயுதத்தைத் தரிக்கத்தக்க, குமரனை யும்-என் புத்திரனான இந்திர சேனனையும், தங்கையும்-(அவனுடைய) தங் கையான இந்திர சேனையையும், ஆதி-முதன்மை பெற்ற, அரசன் அருகு ஆக-அரசனான வாகுகன் சமீபமாக, போத-போகவும், விளையாட-விளையா டவும், விட்டு-அனுப்பி, மேல் - அதன் பிறகு, அவன்தன் - அவனுடைய, செயல்-செய்கையை நாடுஎன்றாள்-கவனித்துநோக்கு என்றுகூறினாள் எ-று

நளனுடைய சமையற்றொழிலின் திறத்தைத் தமயந்தி அறிந்ததன் மூலம் அவனைத் தன் நாயகனென்றே ஒருவாறு தெளிந்தனளெனினும் மேலும் சந்தேகமறத் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் எண்ணத்தால் இவ்வாறு தன் பிள்ளைகளை அவனெதிரில் விளையாடவிட்டு அவர்களைக் கண்டு அவன் செய்யும் காரியங்களை அறிந்து தனக்குத் தெரிவிக்கும்படி தோழிக்குரைத்தாள். அந்த வாகுகன் நளனாகவேயிருக்கும் பக்ஷத்தில் பிள் ளைகளைக் கண்டவுடன் பிள்ளைப் பாசமாகிய அன்புமறைக்க முடியாதாத லின் அவனிடத்தில் அதற்குரிய செய்கைகள் வெளிப்படும்; அதன்மூலம் நளனைத் தெரிந்து கொள்ளலாமென்பது தமயந்தியின் கருத்து. இவள் மிக்க பதிவிரதையாதலின், தேர்ப்பாகனவடிவந்தாங்கியிருக்கும் ஒருவனைத் தன் நாயகனென நிச்சயிக்கும் விஷயத்தில் இவ்வளவு ஜாக்கிரதையாய்ப் பல உபாயங்களைச் செய்தாள். தமயந்தியின் குமாரனுக்கு வேலாயுதத்தைத் தாங்கும் பருவம் இன்னும் வரவில்லையாதலின், 'வேற்குமரன்' என்பதற்கு, வேலைத் தாங்கத்தக்க புதல்வன்' என்று பொருளுரைக்கப்பட்டது, இனி 'வேற்குமரன்' என்பதை முருகக்கடவுளுக்கேற்றி அவர் பெயர் உவமை யாகு பெயராய் இப்புத்திரனுக்கு வந்ததெனவுமாம்.' யுத்தத்திற்குச் செல்

லுங்கால் வஞ்சிப்பூமாலையையும், யுத்தம் புரியுங்கால் தும்பைப்பூ மாலையை யும், போரில் வெற்றியடைந்தபோது வாகை மாலையையும் வீரர்கள் அணிந்து கொள்வதோடு தமது படைக்கலத்திற்கும் சூட்டுதல் மரபாகலின் 'கோதை' என்பது வேலுக்கடையாகக் கொள்ளப்பட்டது; இனி இதனைத் தமயந்தியின் புத்திரனுக்கும் அவன் தங்கைக்கும் அடையாக்கினும் அமை யும். தமயந்தி, கணவனைப் பிரிந்த துயரத்தால் உடல்மெலிந்தனளாதலின் அவளுடைய கைவளைகள் கரங்களில் இறுகச் சேர்தலின்றி அங்கு மிங்கு மோடி அசைவனவாயின. 'ஆதியரசன்' என்பதற்கு 'முன் அரசனாயிருந்து இப்போது அந்நிலைமை நீங்கியிருக்கின்ற நளன்', எனக்கொள்ளினுமாம்.

'தங்கை' என்பதில், தாம் பகுதி, கை - முறைப்பெயர் விகுதி, பகுதி முதல் குறுகிற்று. 'போத' என்பதில், போ-பகுதி, அ-விகுதி, து-சாரியை; போது-பகுதியென்பாருமுளர்; இனி, 'போத' என்பதை, 'புகுத' என்பதன் மரூஉவெனினும் பொருந்தும்; செய்தெனெச்சத்தின் திரிபாகக் கொண்டு, 'போத' என்பதற்கு, 'போய்' எனப் பொருளுரைத்தலுமாம். வளைஇ- வளைந்த வடிவமுள்ளது, அல்லது கையைவளைந்தது. செய்யுளில் 'நாடென்றாள்' எனக் கூறியிருப்பினும் உரையில் கதைத் தொடர்ச்சிக்குத் தக, 'நாடி அதனை எனக்குத் தெரிவி என்றாள்' என்று பொருளறிக.

இனி அடுத்த செய்யுளில், நளன், மக்களைக்கண்டு வருந்திய செய்கை கூறப்படுதலால் இங்குத் தோழி தமயந்தியின் சொற்படி, பிள்ளைகளை அழைத்துக் கொண்டுபோய் நளனுக்கெதிரில் விளையாடவிட்டாள் என்ற தொடர்ச்சி விஷயங் கூட்டி முடித்துக்கொள்க.

நளன் பிள்ளைகளைக் கண்டவுடன் செய்யும் செய்கைகள்.

376 மக்களைமுன் காணா மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காணீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன்.

(இ-ள்) (தமயந்தியின் சொற்படி, தோழி, பிள்ளைகளை அழைத்துக் கொண்டுபோய் நளனுக்கெதிரில்விட அப்போது), வன்மம் - பகைக் குண முடைய, களி-மதம் பொருந்திய, யானை-பட்டத்துயானையையுடைய, மன்-நளமகாராஜன், மக்களை-(அவ்வாறுதோழியால் கொண்டுவந்துவிடப்பட்ட) அப்பிள்ளைகளை, முன்காணா-எதிரில் பார்த்து. (இவர்களையும் பிரிந்தோமே என்ற துக்கத்தால்), மனம் நடுங்கா - நெஞ்சம் கலங்கி, வெய்து உயிரா - வெப்பமாகப் பெருமூச்சுவிட்டு, புக்கு எடுத்து-போய்த்தூக்கி, வீரம் - வைரத்தன்மை பொருந்திய, புயத்து அணையா - தோள்களிற் சேர்த்தணைத்து, (அவர்களை நோக்கி), மக்காள்-குழந்தைகளே! நீர் - நீங்கள், என்மக்கள் போல்கின்றீர்-என்பிள்ளைகளைப் போன்றிருக்கின்றீர்கள், யார்மக்கள்- எவருடைய குழந்தைகள், என்று உரைத்தான் - என்றுசொல்லி வினவினான்.

நளன் மறைந்தொழுகும் நிலைமையிலிருந்தும் தன் பிள்ளைகளைக் கண்டமாத்திரத்தில் தன்னிடத்தே அடக்கொணு அன்பெழுந்ததால் தன்னையும் மறந்து மனநடுங்கிப் பெருமூச்செறிந்து அவர்களை வாரியெடுத்துத் தோளோடு சேர்த்தான். அவ்வளவில் தன்னிலைமைபற்றிய எண்ணம் அவனுக்குதித்தபடியால் அவன் தன்னை மறைத்துக் கொள்ளவேண்டி அன்னியன் போல நடித்து அவர்களைநோக்கி, 'நீங்கள் யாருடைய பிள்ளைகள்; என்குழந்தைகளைப் போன்றிருக்கின்றீர்களே' என்று சொன்னான். இங்குக் கூறியவாறு அன்பு எந்நிலைமையினும் வெளிப்படுமென்பதை,

"அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூசல் தரும்."

என்னுந் திருக்குறட் செய்யுளாலுணர்க.

வன்மம்-உள்வயிரம்; அதாவது வெளிப்படாமல் மனதிற்குள்ளேயே வைத்திருக்கும்பகை; யானை உட்பகை வைத்திருந்து சமயம் பார்த்துத் தன்பகைவரைக்கொல்லும் இயற்கையுள்ளது; பாகன் தனக்கு ஆகாராதிகளை யூட்டினும் சில சமயங்களில் தன்னை அடித்தடக்கும் செயலைநினைத்து அவன்மீது பகைகொண்டு அதனை வெளிக்குக்காட்டாமல் அவனோடு சிநேகமாகவேயிருந்து மதச்செருக்குற்ற காலத்தில் அவனையே தேடிக் கொல்லும்; இதனை, "யானை அறிந்தறிந்தும் பாகனையேகொல்லும்" என்ற நாலடிச் செய்யுளடியாலுணர்க. இங்கு, 'யானையையுடைய அரசன்' என்றது முன்னிலைமைநோக்கி யென்க. இனி, 'களியானை மன்' என்பதற்கு, மதயானைபோன்ற அரசன்' எனப்பொருளுரைப்பினும் அமையும். மக்கள்-மகன் மகள் என்பவற்றின் பன்மை. முன்-இடமுன். காணு, நடுங்கா உயிரா அணையா என்பன-செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகால வினையெச்சங்கள்; இவற்றில் 'ஆ'-என்ற விகுதியே காலங்காட்டும். வெய்து-வெம்மையென்னும் பண்படியிற் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்றெச்ச வினையுரி; இதில், பண்புப்பகுதியின் ஈறுபோய் முன்நின்ற மகரம் யகரமாயிற்று. வீரம், *புஜம்-என்பன வடசொற்கள். மக்காள்—ஈற்றயல் திரிந்த விளி. நீர் யார்மக்கள்-முன்னிலையிற் படர்க்கை வந்த இடைவழுவமைதி. மன்-பெருமை; இது குணவாகுபெயராய் அதனையுடையானை உணர்த்திநின்றது. 'மனம் நடுங்கா என்றுரைத்தான்' என்பதில் சினைவினை முதலொடு முடிந்தது. 'வன்மம்' என்பதில், பண்படியாகிய வல்-பகுதி, அம்-தொழிற்பெயர் விகுதி, மகரம்-எழுத்துப்பேறு. வன்மையின் மை விகுதி கெட்டது.

**நளனுடைய மக்கள், தம்மை இன்னாரென் றுரைத்தல்.**

377. மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னை தனைக் கானில்விட் டவனேக—இந்நகர்க்கே
வாழ்கின்றோ மெங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றா னென்றா ரழுது-

(இ-ள்.) (நளன் அவ்வாறு வினவியபோது அம்மக்கள் அவனை நோக்கி) அழுது-கண்ணீர் விட்டழுதுகொண்டு, யாம்-நாங்கள், மன்னன்-பெருமையை உடையவனும் நிடதத்தார் வாழ்-நிடததேசத்தார் வாழ்தற்குக் காரணமான, வேந்தன்-அரசனுமாகிய நளனுடைய, மக்கள்-பிள்ளைகள், அவன்-அம்மன்னன், அன்னைதனை-எங்களுடைய தாயை, கான்விட்டு-வனத்திலே விட்டுவிட்டு, ஏக-பிரிந்துபோயினமையால், இந்நகர்க்கே-இந்தப்பட்டணத்திலேயே, வாழ்கின்றோம்-(நாங்களும் எங்கள் அன்னையும்) வசித்து ஜீவிக்கின்றோம், எங்கள்-எங்களுடைய, வளம் நாடு-வளப்பம்பொருந்தியநிடததேசத்தை, மற்றொருவன்-வேறொருவன், ஆள்கின்றான் ஆட்சிபுரிகின்றான் என்றார்-என்று சொன்னார்கள், எ-று.

பிள்ளைகள், தாய்தந்தையரைப் பிரிந்து முன்னமே அங்குவந்திருப்பினும், அவர்கள் தமயந்தியுடன் அவ்விடத்திலேயே தங்கியிருத்தற்குக் காரணம்; நளன் தமயந்தியைக் காட்டில் விட்டேக அவளும் அங்குவந்து சேர்ந்ததேயாதலின், 'அன்னைதனைக்கான்விட்டவனேக, இந்நகர்க்கே வாழ்கின்றோம்' என்றார்கள். நளன் அவ்வாறு செல்லாமல் தமயந்தியுடன் கூடியிருப்பானானால் எங்கேனு மோரிடத்தில் இல்வாழ்க்கைசெய்தல் கூடும்; அங்ஙனம் செய்தால் தங்களை இவ்வளவு காலம்வரை அங்கேவிட்டு வைத்திருக்க மாட்டானென்பது அப்பிள்ளைகளின் கருத்து. இவர்கள் உத்தமனுக்கும் உத்தமிக்கும் பிறந்தவர்களாதலின் உண்மையை மறைக்காமல் கூறினார்கள். நளன் உத்தமனெனினும் தான் மறைந்தொழுக வேண்டிய நிமித்தம் தன்னியல்பை மறைத்தான் நளன் தன்னுயிரைபபோல் மன்னுயிரைக் காக்கும் நீதியையுடையனாதலின் அவனை நிடததேசத்தார் வாழ்வதற்குக் காரணமானவனென்று கூறினார் புலவர், இந்நகர், என்றது குண்டினபுரியை; 'மற்றொருவன்' என்றது புஷ்கரனை.

வாழ் காலங்கரந்த பெயரெச்சம் (வினைத்தொகை); இது காரியப்பொருளில் வந்தது. மக்கள்யாம்-தன்மையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. 'நகர்க்கு' எனபதில் ஏழனுருபு நான்கனுருபாக் மயங்கி வந்தது இஃதுருபுமயக்கம். ஏ-பிரிநிலைப் பொருளது; இதனால், 'எங்கள் நகரத்திற்குப் போகாமல்' என்பது போதரும். அழுது-இறந்தகால வினையெச்சம்; அழுகை சொல்லுதற்கு முன் ஏற்பட்டதாதலின் இதில் இறந்தகாலங் கொள்ளுதல் தகுதி. இனி, 'அழாநின்று சொன்னார்கள்' என இதனை நிகழ்காலத்தாற் கூறுதலுமொன்று; இதில், அழுகையும் சொல்லும் உடனிகழ்ந்தனவாகக் கொள்ளப்படும்; இங்ஙனங் கூறுமிடத்து, 'அழுது' என்பது 'அழாநின்று' என்னும் நிகழ்கால வினையெச்சம் திரிந்து வந்ததாகக் கொள்ளப்படும். திருக்குறளில் "தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்" என்றதன் உரையில் பரிமேலழகர், 'தொழுநின்று என்பது தொழுது எனத்திரிந்து நின்றது' என்றமையால் இதனையுணர்க. 'ஏக' என்பதில் ஏகு-பகுதி, அ-இறந்தகால வினை எச்ச விகுதி.

மக்கள்கூறியதைக் கேட்டு நளன்வருந்தல்

378. ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி
நீங்கா உயிரோடு நின்றிட்டான்—பூங்காவில்
வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன்
உள்ளம்போற் கண்ணீ ருகுத்து.

(இ-ள்) ஆங்கு-அவ்விடத்தில், அவர்-அப்பிள்ளைகள், சொன்ன-அவ்வாறு கூறிய, உரை கேட்டு-வார்த்தைகளைக் கேட்டு, பூகாவில்-பூஞ்சோலைகளில், வள்ளம்போல்-கிண்ணங்களைப்போல, கோங்குமலரும்-கோங்கின் பூ மலரப்பெற்ற, திருநாடன்-அழகிய நிடததேசாதிபதியான நளன், அழிவு எய்தி-(எதுவும் தோன்றாதிருப்பதான சோர்வையடைந்ததால் மனம்) கரைதலை அடைந்து, உள்ளம்போல்-(அவ்வாறு கரைந்தொழுகும்) மனத்தைப் போல, கண்ணீர் உதிர்த்து-கண்ணீரை வடியச்செய்து, நீங்கா உயிரோடு-உடம்பை விட்டுப்போகாத பிராணனோடு, நின்றிட்டான் - நின்றான்.

தன் குழந்தைகள் சொன்ன பரிதாபமானவார்த்தைகளைக் கேட்டவுடன் நளனுக்கு ஆற்றொணாத்துக்கம் அதிகரித்தது. அதனால், அவனுடைய மனம் கட்டுவிட்டுருகிப்போயிற்று; கண்களிலிருந்து நீர் வடிந்தது; இவ்வாறு மிகுந்ததுக்கத்தால் அவன் யாதொரு செயலுமின்றி ஆவியைமட்டும் தாங்கி ஸ்தம்பித்து நின்றான். மனம் நீர்போன்றுருகிச் சோர்ந்ததாதலால், அது கண்ணீர் உதிர்தலுக்குவமையாயிற்று. எல்லாம் ஓய்ந்து உயிர்மாத்திரம் நீங்கக் கூடிய நிலைமையில் எஞ்சிநின்றதாதலின், அதனை விளக்கி ஆசிரியர் 'நீங்காவுயிரோடு நின்றிட்டான்' என்றார், கோங்கின்மலர் கிண்ணம்போன்றிருக்கும், "பூங்காவில் வள்ளம்போற் கோங்குமலருந் திருநாடு' என்றதனால் நிடததேசத்தின் சோலைவளம் விளங்கும்.

'ஆங்கு' என்பதற்கு, 'அப்படி' என்று பொருளுரைத்தலு மொன்று. நீங்கா-பெயரெச்சம். நின்றிட்டான்' என்பதில், இடு - பகுதிப்பொருள் விகுதி; இதனைத் துணைவினை யெனவும் பொருந்தும்.

நளன் தன் புத்திரனிடத்தில் ஒன்றுவினவுதல்

379 உங்க ளரசெீருவ ஞளநீ ரோடிப்போந்
திங்க ணுறைத லிழுக்கன்றோ—செங்கை
வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி யெடுத்து.

(இ-ள) (அவ்வாறு நின்ற நளன்), மாதவத்தால்-(தான் செய்த) சிறந்த தவத்தினாலே, பெற்ற-ஈன்ற, இள அரசை-இளமையாகிய அரசனை (அதாவது; இராஜகுமாரனை), எடுத்து-கையால் தூக்கி, (மார்போடணைத்து)

நோக்கி-அப்புதல்வன் முகத்தைப்) பார்த்து, செம்மைவளம் - சிவந்தகைகளின்வளத்தை (அதாவது: உத்தமவிலக்கணத்தை) யுடைய, அரசே-இராஜகுமாரனே! உங்கள் அரசு உங்களுடைய அரசாட்சியை, ஒருவன்-வேறொருவன், ஆள-ஆட்சிபுரிய, (விட்டுநளன் எங்கோசெல்ல), நீர்-நீங்கள், ஓடிப்போந்து-ஓடிவந்து, இங்கண் - இவ்விடத்தில், உறைதல்-தங்கியிருத்தல், இழுக்கு அன்றோ-(உங்களுக்குக்) குறைவல்லவோ?, என்று உரைத்தான்-என்று சொன்னான், எ-று.

நளன் துக்கத்தால் மேற்கூறியபடி சோர்ந்து நின்றான் எனினும், பின்னர்த் தெளிவுற்றுத் தன்புத்திரனுடைய மனம் எத்தன்மைத்தா யிருக்கின்றது என்பதை உணர்ந்து கொள்ளும் பொருட்டு இவ்வாறு அவனைத் தூக்கி மார்போடணைத்துக் கொண்டு அவனை நோக்கி, "உங்கள் அரசை மற்றொருவனை விட்டு நீங்கள் இங்ஙனம் வந்திருப்பது உங்கட் கிழிவன்றோ" என்று வினவினான். தன் புத்திரனுடைய மனம் க்ஷத்திரியர்க்குரிய தன்மையிலிருக்கின்றதா இல்லையாவென்பதைச் சோதித்தறிய வேண்டுமென்பது நளன் கருத்து. இவ்வாறே மனிதர்கள், தங்கள் குழந்தைகளின் மனோநிலைமையை இளமைப்பருவத்தில் சோதித்தறிந்து அது நல்ல விதத்தில் அமைந்திருந்தால் மகிழ்ச்சியையும், கெட்டவிதத்தில் அமைந்திருந்தால் துக்கத்தையும் அடைதல் இயற்கை.

செங்கைவளமாவது: அரசர்க்குரிய உத்தமரேகை முதலியன அமைந்திருத்தலாம்; ஈகையெனினும் அமையும். அரசு-நாட்டையாளுந்தன்மை; அஃதிங்கதனை யுடையான் மேனின்றது ஆகுபெயராம். இளவரசு-யுவராஜன்; அவன் பட்டத்திற்கு வரத்தக்க இராஜகுமாரன். 'இக்கண்' என்பது, 'இங்கண்' என மெலித்தல் விகாரம் பெற்றுவந்தது. நீர்-உளப்பாட்டு முன்னிலைப் பன்மை, அவனது தங்கையையும் தாயையும் அவனோடு சேர்த்துக்கூறியது. அன்றோ-வினாவகையால் தேற்றத்தில் நின்றது. 'உங்கள் அரசொருவனை' என்பதற்குப்பின், 'நளன் எங்கோசெல்ல' என்பது இசையெச்சமாக வருவித்துரைக்கப் பட்டது.

நளன் கூறியதைக்கேட்டுப் புத்திரன் கோபித்துரைத்தல்.

380. நெஞ்சாலிம் மாற்ற நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்ன ரடுமடையா—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலா யெங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி.

(இ-ள்) (நளன் அவ்வாறு கூறியதைக்கேட்ட அவ்விளங்குமாரன் அவனைநோக்கி), அடும்-(உணவு) சமைக்கின்ற, மடையா-மடைப்பள்ளியிலிருப்பவனே!' எஞ்சாது - குறையாமல், தீமையேகொண்ட - கொடுமையையே கொண்டிருக்கின்ற, சிறுதொழிலாய்-தாழ்ந்த தொழிலையுடையவனே!, இமாற்றம்-இந்த வன்வார்த்தையை, நெஞ்சால் நினைத்து - மனதால்

நினைத்து, உரைக்க-சொல்வதற்கு; நீ அல்லது-நீ அல்லாமல், மன்னர் அஞ்சாரோ-அரசர் பயப்படமாட்டார்களோ, (அதாவது:பயப்படுவார்கள்), எம் கோமான்-எங்கள் அரசனாகிய நளச்சக்கரவர்த்திக்கு, வாய்மையேவலி-சத்தியமே பலம், (ஆதலின், அவர் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு அரசாட்சியை விட்டாரேயன்றி வலியின்மையாலன்று,) கண்டாய் - நீ அறிந்தனையா?,

நளன் அவ்வாறு கூறிய வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் அப்புத்திரன், "இவன் நம்மையும், தந்தையையும் நிந்தித்துத் தாழ்மையான வார்த்தைகளைக் கூறுகின்றான்; இதற்குக் காரணம், நம் தந்தையின் தன்மையை உணராமையே; ஆதலின், இவனுக்கு இந்தத் தப்பபிப்பிராயம் நீங்கும்படியான வார்த்தைகளை நாம் கூறவேண்டும்" என்று கருதினான்; அதனாலேயே இவ்வாறு தன்தந்தையின் தன்மையையும், அவன் அரசாட்சியை விட்டதன் காரணத்தையும் விளக்கிக் கூறினான். நளன் புஷ்கரனை எளிதில் யுத்தத்தால் வெல்லக் கூடியவனாயிருந்தும், சூதாட்டத்தில் தோற்ற நாட்டை யுத்தத்தால் பெறுதல் நீதியாகாதென்று சத்தியத்திற்குக் கட்டுப்பட்டுவிட்டு வந்தானாதலின், இங்கு அக்குமரன் 'எம் தந்தைக்கு வாய்மையே வலி; ஆதலின், அதனைக் காப்பாற்றுதற்கே நாட்டைவிட்டு வந்தனர்; இதனால் அவருக்கு எவ்வித இழிவும் ஏற்படாது' என்பவற்றை விளக்கிக்காட்டி 'நீ புத்தியில்லாத மடைத்தொழிலுடையனாதலின் இவ்வாறு கூறினை; அரசராயினார் இங்ஙனம் கூறமாட்டார்கள்' என்றுரைத்தான். இவ்வாறு அவன் கூறியதனால் 'நீ புத்தியில்லாதவனாதலின் நான் மனம் பொறுத்தேன்; வேறொருவரானால் இதற்குத் தக்க தண்டனையடைவார்கள்' என்ற குறிப்பையும் உணர்த்தினான் மடையா-என்பதற்கு, 'புத்தியில்லாதவனே' எனப் பொருள் கூறினும் அமையும். 'அடும்மடையா' என்பதற்கு, 'நீதியைக்கொல்லும் மடையனே' என்றும், 'தீமையே கொண்ட சிறு தொழிலாய்' என்பதற்கு, 'வெப்பத்தையே கொண்ட அடுப்பு மூட்டுதலாகிய அற்பதொழிலையுடையவனே' என்றும் பொருள் கொள்ளலாம்.

அஞ்சாரோ-எதிர்மறை யெச்சம்; அஞ்சுவார் என்ற பொருளைத்தரும். 'மடையன்' என்பது ஈறுகெட்டு அயல்நீண்டு, 'மடையா' எனவிளியாயிற்று. கண்டாய்-அசையெனினுமாம்., இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.

381. எந்தை கழலிணையி லெய்யருங்குங் காணலாம்
கந்து சுளியுங் கடாக்களிற்றின் — வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியிற் றேய்ந்த வடு.

(இ-ள்) (இன்னும்) கந்து-கட்டுத்தறியை, சுளியும் கோபித்து முறிக்கின்ற, கடாக்களிற்றின்-ஆண் யானைகளின்மேல், வந்து-ஏறிவந்து, பணிமுடியில்-ஆதிசேடனாகிய பாம்பின் சிரசில் தங்கியிருக்கும், பார் - பூமியை,

காக்கும்-ஆளுகின்ற, பார்வேந்தர் தங்கள் - முறைமை தங்கிய அரசர்களு டைய, மணிமுடியின்-இரத்தின கிரீடங்களால், தேய்ந்த - தேய்வுற்றதனு லுண்டாகிய, வடு-தழும்பை, எந்தை-எம்தந்தையாகிய நளச்சக்கரவர்த்தியி னுடைய, கழல் இணையில் இரண்டு பாதங்களிலும், எம்மருங்கும் - எந்தப் பக்கத்திலும், காணலாம்-(இருக்கப்) பார்க்கலாம், (என்று சொன்னான்.)

நளனுடைய புத்திரன், முன் செய்யுளிற் கூறியவற்றை யுரைத்ததன்றி மேலும், தந்தையின் பிரதாபத்தை விளக்குதற்கு, "பலதேயத்தரசர்களும் தினந்தோறும் வந்து வணங்கி வணங்கி அவர்களுடைய முடி உராய்ந்ததனு லேற்பட்ட வடுவானது எம்தந்தையின் பாதங்களில் எம்மருங்கு மிருக்கக் காணலாம்" என்று கூறினன். இவ்வாறுரைத்ததனால், நளன் எல்லா அர சர்களையும் அடக்கியாண்ட மகாவீரனென்பதும், அத்தகைய வீரன் இப் போது சத்தியத்தைக் காப்பாற்றும் பொருட்டே நாட்டைவிட்டுச் சென் றனனென்பதும் பெறப்படும்.

கழல் வீரகண்டை; இஃதாகுபெயராய்ப் பாதத்தையுணர்த்தி நின்றது. 'எம்மருங்கும்' என்பதில், உம்மை முற்றுப்பொருளது. சுளித்தல்-கோபித் தல்; அஃதிங்கு முறித்தன்மேனின்றது. பார்-முறைமை; அதாவது: ஒழுங்கு.

கோபித்துப்பேசிய புத்திரனைநோக்கி நளன் சமாதான வார்த்தை கூறுதல்.

282. மன்னர் பெருமை மடையர் அறிவரோ
உன்னை யறியா துரைசெய்த—என்னை
முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண்.

(இ-ள்.) (அவ்வாறு கூறிய குமாரனை நோக்கி நளன் மனத்தில் மிக்க அன்பு பூண்டு இராஜகுமாரனே!), மன்னர்-அரசர்களுடைய, பெருமை- உயர்வை, மடையர்-சோறுசமைக்குந் தொழிலையுடையார், அறிவரோ-அறி வார்களோ? (அறியமாட்டார்கள்; ஆதலின், நானும் மடையனாதலால்), உன்னை அறியாது-(இத்தகைய வீரகுணமுள்ள) உன்னைத் தெரிந்துகொள் ளாமல், உரைசெய்த-ஏதேதோ பேசிய, என்னை—, முனிந்தருளல்-கோபிக் கவேண்டாம், என்று என்று சொல்லி, முடிசாய்த்து - தலையை வணங்கி, கனிந்து உருகி-மனமிளகிக் கரைந்து, கண்-கண்களில், நீர்வார-நீர் ஒழுக, நின்றான்-மௌனமுற்று நின்றான், எ-று.

நளன், தன்னுடைய புத்திரன் க்ஷத்திரிய குலத்திற்குத் தக்கவாறு வீரமும், நீதியும் பொருந்திய வார்த்தைகளைச் சொல்லக் கேட்டவுடனே, அவனுடைய புத்திசாதுரியத்தைப்பற்றி ஒருவகை மகிழ்ச்சியும் அன்பும் கொண்டு, 'இத்தகைய புத்திரனையும் பிரியுங்காலம் நேர்ந்ததே' என்று வருந்தினன். அதனல், மனமுருகிக் கண்ணீர் சோர நின்றான். நளன்.

மடையனல்லாதவனு யிருந்தும் இவ்வாறு, "மன்னர் பெருமை மடையர் அறிவரோ, உன்னை யறியாதுரைசெய்த, என்னை, முனிந்தருளல்" என்று தன்னைத் தாழ்த்திக் கூறியது, புத்திரன்மீதேற்பட்ட மகிழ்ச்சியால், விளையாட்டாகக் கூறியதாம். தாய் தந்தையர் பிள்ளைகளிடத்தில் அதிசயகுணங்களைக் கண்டால் இங்ஙனமே மகிழ்ந்தும் அவர்களைப் புகழ்ந்தும் உரிமை பாராட்டி விளையாட்டாகப் பேசுதல் உலகியற்கை. நளன் கஷ்டத்திற்குள்ளாகி யிருக்கும்போது மகிழ்ச்சியுற்றதற்குக் காரணம் தன் பிள்ளையின் மதிநுட்பமான வார்த்தைகளைக் கேட்டதேயாம். கண்ணீர் மகிழ்ச்சியாலும் துக்கத்தாலும் ஏற்பட்டது.

இதிலும், 'மடையர்' என்பதற்கு, 'அறிவில்லாதவர்' எனப்பொருள் கூறலாம். அறிவரோ-எதிர்மறை யெச்சம். முனிந்தருளல்-எதிர்மறை ஏவலொருமை வினைமுற்று; வியங்கோள் வினைமுற்றுமாம்; இதில், அல் விகுதியே எதிர்மறுத்தலையும் ஏவலையும் உணர்த்துமெனக் கூறுவாருமுளர். 'அருள்' என்பது மரியாதை குறித்துவந்தது; பெரியோரிடம் உயர்வு நோக்கி இதனை எல்லாவிடங்களிலும் கூட்டியுரைத்தல் இயல்பு; எழுந்தருள், கூறியருள், உண்டருள், கேட்டருள், இருந்தருள் என்பனபோன்ற வாக்கியங்களால் இஃதுணரப்படும்.

இனி, அடுத்த செய்யுளில், நளன்செய்கைகளைத் தோழியும், மக்களும் தமயந்தியிடம் கூறியதும், அதைக்கேட்டு அவள் வருந்தியதும் கூறப்படுகின்றமையால், தோழி, தமயந்தியின் பிள்ளைகளை அவளிடம் அழைத்துக் கொண்டுபோன செய்கையை இங்குக்கூட்டி முடித்துக்கொள்க.

நளன் செய்கைகளைத் தன் பிள்ளைகளும், தோழியும்
உரைக்கக்கேட்டுத் தமயந்தி வருந்துதல்.

383. கொற்ற குமரனையுங் கோதையையுந் தான்கண்டு
மற்றவன்று ஙுங்குரைத்த வாசகத்தை—முற்றும்
மொழிந்தாரம் மாற்ற மொழியாத முன்னே
அழிந்தாள் விழுந்தா ளழுது.

(இ-ள்) (தமயந்தியின் பிள்ளைகளும் தோழியும் திரும்பிப்போய் அத் தமயந்தியிடம்), 'கொற்றம்-வெற்றி பொருந்திய, குமரனையும்-அந்த இராஜ புதல்வனையும், கோதையையும் - இராஜபுத்திரியையும், கண்டு - பார்த்து, அவன்-அந்த வாகுகன், ஆங்கு-அவ்விடத்தில், உரைத்த -சொன்ன, வாசகத்தை-அவ்வார்த்தையை, முற்றும்-முழுவதும், மொழிந்தார்-உரைத்தார்கள், அம்மாற்றம்-அந்த வார்த்தையை, மொழியாத முன்னே - சொல்லி முடிக்காததற்கு முந்தியே, (தமயந்தி), அழிந்தாள்-மனவுறுதி கெட்டவளாகி, (அதாவது: மனங்கரைந்து), அழுதுவிழுந்தாள் - அழுதுகொண்டு தன்னையே மறந்து அப்படியே நிலத்தில் வீழ்ந்தாள்; எ-று.

நளன் மேற்கூறியவாறு பிள்ளைகளைக் கண்டவுடனே செய்த செய்கைகளை அவர்களும் தோழியும் கூறியவுடனே அவனைத் தன் நாயகனென்றே நிசசயமாக உணர்ந்துகொண்டாள். அதனால், அவள், 'அந்தோ! நம் நாதர் இந்நிலைமையை அடைந்தனரே!' என்று வருந்தி மனமுருகிக் கீழே வீழ்ந்தழுதாள். அவ்வார்த்தைகள் முடிவதற்கு முந்தியே அவளுக்குத் தன் நாயகன் செய்கை விளங்கிவிட்டபடியால் அவற்றை முடியக் கேட்பதற்கு முந்தியே அவள் துக்கங்கொண்டு வீழ்ந்தாளாதலின், 'அம்மாற்றம், மொழியாத முன்னே அழிந்தாள் விழுந்தாள் அழுது' என்றார் ஆசிரியர்.

கோதை உவமையாகுபெயர். உம்மைகள்-எண்ணுப்பொருளன. தான் இரண்டும்-அசைகள். 'ஆங்கு' என்பதற்கு, 'அப்படி' எனப் பொருளுரைத்தலுமாம். மற்று - அசை. 'முன்னே' என்பதில் ஏ - விரைவுப்பொருள் குறித்து நின்றது அழிந்தாள்-முற்றெச்சம்.

இதுவுமது.

384 கொங்கை யளைந்து குழறிருத்திக் கோலஞ்செய்
அங்கை யிரண்டு மடுபுகையால்—இங்ஙன்
கருகியவோ வென்றழுதாள் காதலனை முன்னாள்
பருகியவேற் கண்ணாள் பதைத்து.

(இ-ள்) (அவ்வாறழுதுமேலும்), முன்னாள் - முந்திய நாள்களில், காதலனை-தன் ஆசைக்குரியவனாகிய நாயகனை, பருகிய-உட்கொண்ட, வேல்-வேலாயுதத்தைப் போன்ற, கண்ணாள் - கண்களையுடையவளாகிய அத்தமயந்தி, பதைத்து-பதறி, (நளனே மனத்தால் நோக்கி, என்னுயிர்த்துணைவனே!), கொங்கை அளைந்து - வாசனை வஸ்துக்களைக் கலந்தெடுத்து. (அவற்றைப்பூசி), குழல் திருத்தி என் கூந்தலை ஒழுங்குபடுத்தி, கோலம் செய் எனக்கு அலங்காரம் செய்கின்ற, அங்கை இரண்டும்-உள்ளங்கைகளிரண்டும், அடுபுகையால்-சமையல் தொழில் புரிவதாலுண்டாகும் புகையினாலே, இங்ஙன்-இப்படி, கருகியவோ - கருமையடையினவோ, என்று அழுதாள்-அன்று சொல்லி மேலும் அரற்றினாள், எ-று.

முன்னுரைத்தபடி நளன் தன்மையைக் கேட்டமாத்திரத்தில் வீழ்ந்தழுத தமயந்தி மேலும் அவனுடைய கைகள் சமையல் தொழில் செய்வதால் கருமையுற்றிருக்கின்றனவென்று தோழி முதலியவர்கள் சொன்னதால் உணர்ந்தாளாதலின், அவன் செங்கரங்கள் முன் நாளில் தன் குழலைச் சீவி முடித்துத் தனக்கு அலங்காரஞ்செய்ததையும், அப்போது அடுப்பின் புகையால் கருமையுற்றிருப்பதையும் நினைத்து இவ்வாறு 'கொங்கையளைந்து குழல்திருத்திக் கோலஞ்செய் அங்கையிரண்டும் அடுபுகையால், இப்படிக் கருகியவோ'என்று கூறி அழுதாள் என்பதாம்.

கொங்கு-வாசனை; அஃது இங்கு வாசனைத்தைலம் முதலியவற்றின் மேனின்றது. அளைதல்-கலத்தல்; இஃது இங்கு எடுத்துப்பூசுதலை யுணர்த்திற்று.

'கொங்கை அலேந்து' என்பதற்கு, 'தனங்களில் சந்னக்குழம்பு முதலியவற்றைப் பூசி' எனப்பொருளுரைத்தலுமொன்று; இதில், 'சந்தனக்குழம்பு' என்பதை இசையெச்சமாக வருவித்துரைத்தல் வேண்டும், உயர்குலப் பெண்கட்கு உயர்குலப் பூமான்கள் அன்பின்மேலிட்டால் இங்ஙனம் அலங்காரம் செய்தல் இயல்பு. (நன்-மெய்-பு-கக) ஆம் சூத்திரவிதிபற்றி 'அகங்கை' என்பது 'அங்கை எனவந்தது. அகம்-உள்; அகங்கை-உள்ளங்கை. இங்ஙனம்' என்பது, அம்-குறைந்து, 'இங்ஙன்' எனநின்றது. ஓ-இரக்கப்பொருளது. காதலனைக் கண்பருகுதலாவது முடியநோக்கி இன்பமுறலாம். இனி 'கொங்கை அளைந்து' என்பதற்கு 'கொங்கைகளைத் தடவி' எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். காதலர் விருப்பமேலீட்டால் உடம்பைத் தடவி அலங்கரித்தல் இயல்பு. 'கொங்கை வருடிக்குழைதிருத்தி' எனவும் பாடபேதமுண்டு இதற்கு, 'தனங்களைத்தடவிக், காதணிகளை ஒழுங்கு பெறச்செய்து' எனப்பொருளுரைத்தல் வேண்டும்.

தமயந்தி, வாகுகனே நளனென்பதைத் தன் தாய்தந்தையர்க்கறிவித்தல்.

385. மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேருங் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே, செய்கின்ற மன்னவன்கா ணெங்கள்
கொடைத்தொழிலா னென்றாள் குறித்து.

(இ-ள்) (அவ்வாறு அழுததமயந்தி தன் தாய்தந்தையரிடத்திற் சென்று), குறித்து-நளன் செய்கைகளைச் சுட்டிக்காட்டி, இத்திருநகர்க்கு-இந்த அழகிய பட்டணத்திற்கு, வந்து அடைந்த-வந்து சேர்ந்த, மன்னவற்கு ருதுபர்ணமகாராஜனுக்கு; கொற்றம்-வெற்றிபொருந்திய, தனி-ஒப்பற்ற, தேரும் கொண்டு அணைந்து-இரதத்தையும் ஓட்டிக் கொண்டு வந்து சார்ந்து, மற்றம்-பின்னரும், மடைத்தொழிலே செய்கின்ற-சமையல்வேலையையும் செய்கின்ற, மன்னவன்-அரசன், எங்கள்-எங்களுடைய, கொடைத் தொழிலான்-ஈகைத் தொழிலுக்குரியவனாகிய நள மகாராஜனே யாவான், என்றாள்-என்று சொன்னாள், எ-று.

வாகுகனை நிச்சயமாக நளன்தானென்றறிந்து கொண்ட தமயந்தி, உடனே தன்தாய்தந்தையரிடத்தில் அவனுடை குணம் செயல் முதலியவற்றைக் குறித்துக் காட்டி, 'ருதுபர்ணனுக்குத் தேர் செலுத்திக் கொண்டு வந்து இங்கு உணவு சமைக்குந் தொழிலேயும் செய்கின்ற வாகுகனே எங்கள் வள்ளலாகிய நளன்' என்று சொன்னாள். இங்ஙனம் அவளுரைத்ததற்குக் காரணம், விரைந்துபோய் அவனே அழைத்துவர வேண்டுமென்று கருதியேயாம். தமயந்தி, நளனுடைய குணங்களையும் செய்கைகளையும் 'இது அவனுடையகுணம், இது அவனுடையசெய்கை' என்று ஒவ்வொன்றாக அங்குள்ளாரிடத்தில் சுட்டிக்காட்டினள்; அதனாலேயே, 'குறித்து,

என்றார் ஆசிரியர். தமயந்திமுன்னே நளனுடையசமையல் திறத்தைக் கேட்டபோதே அவனே நளனென்று துணிந்தாள்; எனினும், அத்துணிவில் சிறிதுசந்தேக மிருந்தது; அதுபற்றி அப்போது அவன் விஷயத்தை தாய்தந்தையரிடத்தில் தெரிவிக்காதிருந்தாள்; இப்போது அவன், பிள்ளைகளைக்கண்டு துக்கித்தா னென்றதைக் கேட்டதனால் அவனே நளனென்பதை நிச்சயமாகத் தெரிந்து கொண்டாள்; ஆதலின், இத்தருணத்தில் அவன்செயல்களைத்தாய்தந்தையரிடத்திற் கூறி அவனே தன்நாயகனென்பதை விளக்கிக்காட்டி அவனை விரைவில் அழைத்துவரவேண்டு மென்றாள்.

முதலி னுள்ள மற்று-அசை. 'நகர்க்கே' என்பதில் ஏ-அசை தேரும் என்பதன் உம்மை-எதிரது தழுவியது. மற்றும் என்பதன் உம்மை-இறந்தது தழுவியது. தொழிலே என்பதிலுள்ள ஏ-எண்ணுப் பொருளில் வந்தது; தேர்கொண்டணைந்ததும், மடைத்தொழில் செய்ததும் எண்ணிக்கையில் நிற்றல் காண்க இரண்டாவது வந்த மற்று-வினைமாற்றுப் பொருளில்வந்த இடைச்சொல். காண்-அசை; இதற்கு, 'அறி' என்றுபொருள் கூறுவாருமுளர். 'தமயந்தி' நளன் விஷயங்களைத் தாய்தந்தையர்க்குக் கூறினாள்' எனப்பொருள் கொண்டிருப்பதால் 'அறி' என்னும் ஏவலொருமை கொள்ளல் பொருந்தாமை யுணர்க. தமயந்தி தந்தையை மாத்திரம் நோக்கிக்கூறினாள் எனக்கொள்ளின், காண்-என்பதற்கு, 'அறி' என்று பொருள் கொள்ளல் அமையும். எங்கள்-என்றது தன்னையும், பிள்ளைகளையும் நிடதநாட்டு ஜனங்களையும் சேர்த்துரைத்ததாம்.

வீமன் வாதுகனிடம் போய் அவனே நளனென்
றுணர முடியாமல் திகைத்து நிற்றல்.

386. போதலருங் கண்ணியான் போர்வேந்தர் சூழப்போய்க்
காதலிதன் காதலனைக் கண்ணுற்றான்—ஓதம்
வரிவளைகொண் டேறும் வளநாடன் றன்னைத்
தெரிவரிதா நின்றான் றிகைத்து

(இ-ள்) (அவ்வாறு தமயந்தி கூறியதைக் கேட்வுடன்) போது-பூவரும்புகள், அலரும்-மலர்ந்து விளங்குகின்ற, கண்ணியான்-மாலையை அணிந்தவனாகிய வீமராஜன், போர்வேந்தர்-யுத்தஞ்செய்யும் வீரராகிய பல அரசர்கள், சூழ-தன்னைச் சூழ்ந்துவர, போய் (வாகுகனிருந்த மடைப்பள்ளிக்குச்) சென்று, காதலிதன்-தன்னுடைய அன்பிற் குரியமகளாகிய தமயந்தியின், காதலனை ஆசைக்குரிய நாயகனாகிய நளனை, கண்ணுற்றான்-பார்த்தான், (அப்போது நளனுருவம் அவனிடத்தின்மையால்), ஓதம்-கடல்நீரின் அலையானது, வரி-இரேகைகளையுடைய, வளைகொண்டு-சங்குகளை எடுத்துக்கொண்டு, ஏறும்-கரையில் ஏறி மடங்குகின்ற, வளம்-கடல் வளத்தை

யுடைய, நாடன் தன்னை-விடதேசாதிபதியான நளமகாராஜனை, தெரிவு அரிதா-அறிதல் அருமையாக (அதாவது:அறிதல் முடியாமலிருந்தபடியால்) திகைத்து நின்றான்-மயங்கி நின்றான், எ-று.

தமயந்தி, நளன் அங்குளனென்று கூறியதைக் கேட்டவுடனே, வீமன் மகிழ்ந்து, அவனைக் கண்டழைத்து வரும்பொருட்டுப் பல அரசர்கள் தன்னைச் சூழ்ந்து வரப்புறப்பட்டுப்போய் அவனைப்பார்த்து அவனிடத்தே நளனுருவம் இல்லாமையால் திகைத்து நின்றான். நளன் உருவம்மாறுபட்டிருந்தமையால், வீமன் நம்குமாரத்தி இவனை எதனால் நாயகனென்றுகூறினாள்? நளனாயிருந்தால் இவனுடைய உருவம் மாறுபட்டிருத்தற்குக்காரண மென்ன?' என்று பலவிதமாகச் சந்தேகங் கொண்டபடியால் அவனுக்கு மதிமயக்க முண்டாயிற்று. போர்வேந்தர் - வீமனுக்கடங்கிக் கப்பங்கட்டி வரும் சிற்றரசர்கள்; அன்றிப் போர்த்தொழிற்குரியாராய் அவனிடத்தே அமர்ந்திருக்கும் அவன் குடும்பத்தைச் சார்ந்த க்ஷத்திரியர் எனினுமாம். அரசன் வெளிப்புறப்படுங்கால், சிற்றரசர், போர்வீரர் முதலியவர்கள் அவனைச்சூழ்ந்து செல்லுதல் மரபு. 'போர்வேந்தர் சூழ' என்பதில் வீமனுக்குரிய மற்ற எல்லோரையும் அடக்கி, 'தமயந்தி, அவளுடைய குழந்தைகள் முதலிய எல்லோருமே போயினார்கள்' எனக்கொள்க; 'இது, பின்னர் 'தமயந்தியும் குழந்தைகளும் நளனடியில் வீழ்ந்தழுதார்கள்' என வருகிற கதைத்தொடர்ச்சியாற் கொள்ளப்படும்.

காதலி-அன்பிற் குரியவள்; மகள்; இது மனைவி என்னும் பொருளி லும்வரும். காதலன் - ஆசைக்குரியவன்; கணவன்; இது குமாரனுக்கும் வரும். ஓதம்-குளிர்ச்சி; இது நீருக்காய், நீர் கடலுக்காய், கடல் அலைக்காய் நின்றது; ஆதலின் மும்மடியாகு பெயராகும். அலை சங்குகளைக் கரையில் ஒதுக்கித்தள்ளும்; அதனை இங்கு எடுத்து வருவதாகக் கூறினார் புலவர். அரிதாக, என்பது, 'அரிதா' என ஈறுதொக்கி நின்றது. 'காதலின்' என்பதற்கு, 'நளன்மனைவியாகிய தமயந்தியின்', எனப்பொருளுரைப்பினுமாம்.

வீமன் நளனைத் தெரிந்து கொள்ளுதல்.

387. செவ்வாய் மொழிக்குஞ் செயலுக்குஞ் சிந்தைக்கும்
ஒவ்வாது கொண்ட வுருவென்றோ—எவ்வாயும்
நோக்கினான் நோக்கித் தெளிந்தா னுணங்கியதோர்
வாக்கினான் றன்னை மதித்து.

(இ-ள்) (மேற்கூறியபடி சந்தேகித்து மயங்கிநின்ற வீமன் நளனோடு சிறிது நேரம் சம்பாஷணைசெய்து, அவன் குணம், செயல் வாய்மை முதலியன உயர்வை விளக்குவதையும், அவனுடைய உருவம் தாழ்மையைத்தெரிவிப்பதையும் நோக்கி), கொண்ட-இவன் கொண்டிருக்கின்ற, உரு வடிவமானது, (இவனுடைய) செவ்வாய் மொழிக்கும் - செம்மையான வாயி

னின்றுமுண்டாகும் வார்த்தைக்கும், செயலுக்கும் - செய்கைக்கும், சிந்தைக்கும்-மனத்திற்கும், ஒவ்வாது என்று - பொருந்தாது என்று, (அதாவது: அவ்வடிவம் இவற்றிற்குத் தகுந்ததில்லையென்று), எவ்வாயும் எல்லா வழிகளையும், நோக்கினான் - ஆராய்ந்து பார்த்தான், நோக்கி - அவ்வாறு பார்த்து, நுணங்கியது-(கருத்தில்) நுட்பமுடையதாகிய ஓர் - ஒப்பற்ற, வாக்கினான் தன்னை - வார்த்தையை யுடையவனாகிய நளனை, மதித்து-(அவ வார்த்தையினால்) நிச்சயித்து, தெளிந்தான்-அறிந்துகொண்டான், எ-று.

வீமன் நளனிடத்தே சென்றவுடன் அவனுடைய உருவத்தைப் பார்த்துச்சந்தேகித்து மயங்கி்நின்று சிறிதுநேரம்வரை அவனோடு சம்பாஷணை செய்தான். அவ்வாறு செய்தபோது அவனுடைய பேச்சும், செய்கையும், குணமும் கௌரவமான புருஷனிடத் துள்ளவை போலத் தோன்றின. ஆதலின், அவன், 'இவற்றிற்கும் இவனுடைய வடிவத்திற்கும் சிறிதும் பொருத்த மில்லாமலிருக்கின்றதே; பேச்சு முதலியவைகள் முதலியன இவன் அரசனென்பதை விளக்குகின்றன; உருவம் வாகுகனென்பதை விளக்குகின்றது; இவற்றைக் கொண்டு நாம் எவ்வாறு இவன் நளனென்று துணியலாம்' என்று மேலும் அவனை அறிவதற்கான பலவழிகளைக்கொண்டும் ஆராய்ந்து பார்த்தான். அவ்வாராய்ச்சியில் நளனுடைய உயர்ந்த கருத்தடங்கிய நுட்பமான வார்த்தையே அவன் இன்னவனென்பதை நன்கு புலப்படுத்திவிட்டது. அதன்மேல் வீமன் அவனை நளனென்றே உணர்ந்துகொண்டான். 'நுணங்கியதோர் வாக்கினான் றன்னை மதித்து' என்றதனாலேயே, 'வீமன் நளனுடைய வாக்கைக்கொண்டே அவனை நளன்தான் என்று தெளிந்தான்' என்பது பெறப்படும்.

மொழிக்கும், செயலுக்கும், சிந்தைக்கும் என்பவற்றின் உம்மைகள் எண்ணுப் பொருளன. 'எவ்வாயும் என்பதன் உம்மை-முற்றுப் பொருளது வாய்-வழி; அதாவது: அறியும் உபாயம் என்பதாம்.

வீமன் நளனிடத்தில் அவனுடைய இயற்கை வடிவத்தைக் காட்டும்படி கூறுதல்.

388. பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை யையுற்று—மந்தி
தெளியா திருக்குந் திருநாடா உன்னை
ஒளியாது காட்டுன் னுரு.

(இ-ள்) (அவ்வாறு நளனைத் தெரிந்துகொண்ட வீமன் அவன் முகத்தைநோக்கி), பூகத்தின்-கமுகமரத்தினுடைய, ஐ-அழகிய, தலையின்-தலைப்பக்கத்திலுள்ள, பாளைதனை-மலராதபாளையை, பைந்தலைய - பசுமையான தலையையுடைய, நாகபணமென்று - சர்ப்பத்தின் படமென்று நினைத்து, மந்தி - குரங்கானது, தெளியாதிருக்கும் - (அச்சந்தேகம்) தெளியாதிருக்கின்ற, திருநாடா - அழகிய நிடததேசத்தையுடைய மன்னனே!, உன்னை

ஒளியாது-(இனியும்) உன்னை மறைக்காமல், உன் உரு-உனதுயதார்த்தவடிவத்தை, காட்டு-காண்பிப்பாயாக, (என்று கூறினன்), எ-று.

வீமன் நளனைநோக்கி, "உன்னை இன்னவனென்று நாங்கள் உணர்ந்துகொண்டோமாதலின் இனிமேல் நீ உருவத்தை மறைப்பதால் ஒருபயனுமில்லை ஆதலின், உன்னுடைய யதார்த்த வடிவத்தைக் காட்டிவிடு" என்று உரைத்தானென்பது இதன் கருத்து. நளனை இன்னவனென்றறிந்துகொண்ட வீமன், அவன்; தன்னுடைய தாழ்ந்த நிலைமையில் தன்வடிவத்தைப் பிறருக்குக் காட்டக்கூடாதென்று மறைத்திருக்கிறானென்பதையும் உணர்ந்துகொண்டான். ஆதலின், இவ்வாறு கூறினன். இவ்விதம் கூறியதன் கருத்தாவது:"நீ இப்படியிருப்பது நன்றன்று; இனியாவது நினதுண்மைச சொரூபத்தைக் காட்டி மனைவிமக்களுடன் கூடி மேம்படுதற்காம் உபாயங்களைச் செய்வாய்" என்பதாம் மலராத கமுகின்பாளை பாம்பின் படத்தைப் போன்றிருக்கும்: அதைப் பாம்பென்று நினைத்துக் குரங்கு மதி மயங்கியிருக்கும். பாம்புக்கு, மந்தி மிகுதியும் அஞ்சுதல் இயற்கை. இங்ஙனம் மந்திதெளியாதிருக்குந் திருநாடனே' என்றதனால் "நின் நாட்டுக்கமுகம் பாளை குரங்கை மயக்குவதைப் போன்று நீயும் வேற்றுருவங்காட்டி என்னை மயக்குகின்றாய்" என்னும் குறிப்பு தொனிக்கும்.

பசுமைத்தலை, ஐமைத்தலை என்பன, பைந்தலை, ஐந்தலை எனவிகாரப்பட்டு வந்தன. 'நாகபணம்' என்பது வடமொழித் தொடராதலின் பகரவொற்று மிகவில்லை. தலைய-பெயரெச்சம். 'நாடன்' என்பது ஈறுகெட்டு அயல்நீண்டு, நாடா-எனவிளியாயிற்று. 'என்று கூறினன்' என்றமுடிபு கூட்டியுரைக்கப் பட்டதாகவே இசை எச்சம்.

**நளன், தன்னுடைய வடிவத்தைப்பெறும் பொருட்டு,**
**முன் கார்க்கோடகனால் கொடுக்கப்பட்ட**
**வஸ்திரங்களை அணிதல்.**

389 அரவரசன் றான்கொடுத்த வம்பூந் துகிலின்
ஒருதுகிலை வாங்கி யுடுத்தான்—ஒருதுகிலைப்
போர்த்தான் பொருகலியின்வஞ்சனையாற் பூண்டளிக்குங்
கோத்தாய முன்னிழந்த கோ.

(இ-ள்.) (அவ்வாறு வீமன் கூறியதைக் கேட்டபின் தன்னுடைய யதார்த்தவடிவத்தை அடையும் பொருட்டு), பூண்டு - வழிவழியாகக் கொண்டு, அளிக்கும்-காக்கின்ற, கோத்தாயம்-அரசுரிமையை, பொரு-தன்னோடு இரகசியமாக எதிர்த்துத் தீங்குசெய்த, கலியின் - கலிபுருஷனுடைய, வஞ்சனையால்-சூதிலே, முன்-முற்காலத்தில், இழந்த-இழந்துவந்த, கோ-நளமகாராஜன், அரவரசன்-சர்பராஜனாகிய கார்க்கோடகன், கொடுத்த-முன் உதவிய, அம்பூந்துகிலின்-மிக்க அழகாகிய வஸ்திரங்களுள் ஒரு துகிலை-ஓர் ஆடையை, வாங்கி-கையினால் எடுத்துப்பிரித்து, உடுத்தான்-

அரையிற் கட்டிக்கொண்டான், ஒரு துகிலை-மற்றொருவஸ்திரத்தை, போர்த்தான்-உடம்பின்மேல் போர்த்துக் கொண்டான், எ-று.

வீமன் கூறியவார்த்தைகளைக் கேட்டவுடனே நளன், 'இவர்கள் நம்மைத்தெரிந்துகொண்டார்கள்; இனி, நாம்மறைந்து கொண்டிருப்பதால் ஒருபயனுமில்லை; ஆதலின், நம் இயற்கை உருவத்தைக் காட்டிவிடுதலே நலம்' என்று கருதி அங்ஙனம் தன்வடிவைப்பெறுதற்கு, முன்னே கார்க்கோடகனால் கொடுக்கப்பட்ட வஸ்திரங்களுள் ஒன்றையெடுத்து அரையிற் கட்டி, மற்றொன்றைத் தேகத்திற் போர்த்துக் கொண்டான்.

தாயம்-ஒருவனுடைய குடும்பத்தில் வழிவழியாகவந்து அவன் அடையத்தக்கதாயிருக்கும் உரிமைப்பொருள்; கோத்தாயம் - அரசுரிமையாகிய பொருள், கலி, நளனுக்கு வெளிப்படாமல் இருந்து இரகசியமாக அவனோடு எதிர்த்து வந்தானாதலின், 'பொருகலி' எனப்பட்டான். தான் - அசை. அம்பூ-ஒருபொருட் பன்மொழி; சிறப்புப்பற்றி வந்தது; "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா" (நன்-பொது-சஎ) என்பது விதி; இது, மீமிசைச்சொல்லெனவும் படும். வாங்குதல்-கைப்பற்றுதல்; இஃதிங்கு 'எடுத்துப்பிரித்தல்' என்னும் பொருளில் நின்றது; இனி, 'வாங்கி உடுத்தான்' என்பதற்கு, 'வளைத்துக் கட்டினான்' எனப்பொருளுரைப்பினும் அமையும்.

நளனுடைய மாறுவேடம் நீங்குதல்.

390. மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே—அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு.

(இ-ள்.) (அவ்வாறு வஸ்திரங்களை அணிந்து கொண்டமாத்திரத்தில்) அக்காலம்-அந்தக்காலத்தில், கானகத்தே-காட்டில், காதலியை-மனைவியை, நீத்து-கைவிட்டு, கரந்து-உருவம் மறைத்து, உறையும்-வாசஞ் செய்கின்ற, மால்-பெரிய, நகம் - மலையையொத்த, தேர்ப்பாகன் - தேர்பாகனுக்குரிய, வடிவு-உருவமானது, மிக்கோன் - தேவர்களுக்குள்ளே உயர்ந்தோனாகிய மகாவிஷ்ணுவின்; உலகு அளந்த-உலகங்களை அளவிட்ட, மெய் அடியே-மெய்யான பாதங்களையே, சார்வுஆக-துணையாக, புக்கோர்-(அவற்றினிடம்) அடைந்தவர்களின், அருவினைபோல்-(நீங்குதல்) அரிதாகிய பாபகர்மங்கள் (நீங்குவதைப்) போல, போயிற்று நீங்கிற்று, எ-று.

அந்த வஸ்திரங்களை மேற்கூறியபடி நளன் எடுத்து அணிந்து கொண்டவுடன், அவன் கொண்டிருந்த தேர்ச்சாரதி வடிவமானது, மகாவிஷ்ணுவினுடைய பாதங்களைச் சார்ந்தவர்களின் பாவங்கள் உடனே நீங்குவது போல நீங்கிவிட்டது. 'திருமாலின் அடிகளைச் சேர்ந்தவர் பாவங்கள் நீங்குவது போல் நளனது தேர்ச்சாரதிவடிவம் நீங்கிற்று' என்றது உவமை

யணி. 'மிக்கோன்' என்றது 'உருவத்தில் மிகுந்தவன்' என்னும்பொருளை யுந்தரும்; பலிச்சக்கரவர்த்தியினிடத்தே, திருமால் வாமனரூப மாகச் சென்று மூன்றடி மண்கேட்டு, எல்லாவுலகங்களையும் அளக்கும் பொருட்டு நீண்டவடிவத்தைக் கொண்டனர்; அதன் பொருட்டே அவருக்கு, 'நெடியோன்' என்னும் பெயர் ஏற்பட்டது; பின்னர், 'உலகளந்த மெய்யடி' என வருதலால், 'மிக்கோன்' என்பதற்கு, 'நெடியோன்' எனப்பொருள்கொள்ளுதல் மிகவும் பொருத்தமுடைத்து. 'உலகளந்த' என்பது திருமாலின் அருட்டிறத்தை விளக்கும். திருமாலின் அடிகள், தம்மைச சார்ந்தாரின் பாவங்களை மெய்யாகவே போக்கக் கூடியனவாதலின், 'மெய்' என்ற அடையை ஏற்றன. 'மெய்யடியே சார்வாக' என்பதை, 'அடியே மெய்ச் சார்வாக' எனவும் மாற்றிப் பொருளுரைக்கலாம். அருவினை - ஆகாமிய சஞ்சித கர்மங்களாகிய பாவவினைகளாம்; இவைகள் திருமாலின் அடிகளைச் சேர்ந்த மாத்திரத்தில் நீங்கிப்போம்; இவ்வாறு நீங்குமென்பதை,

"உளதான வல்வினைக் குள்ளம் வெருவி யுலகளந்த
வளர்தா மரையினை வன்சர ணாக வரித்தவர்தாம்
களைதா னெனவெழுங் கன்மந் துறப்பர் துறந்திடலும்
இளைதா நிலைசெக வெங்கள் பிரானருட் டேனெழுமே"

என்பதால் உணர்க. முன் கலிதொடர் காண்டத்தில் கலிசேர்ந்த தன்மையைக்கூறும் பாடலில், "நாராயணாய நமவென்றவனடியிற், சேராரைவெந்துயரஞ் சேர்ந்தாப்போல்" என்றதற் கேற்ப, நளனுடைய கஷ்டம் நீங்குவதைக் கூறும் இப்பாடலில், "தேர்ப்பாகன் வடிவு, மிக்கோனுலகளந்த மெய்யடியே சார்வாகப், புக்கோ ரருவினைபோற் போயிற்றே" என்றார் ஆசிரியர். இதனால் இவர், விஷ்ணுபக்தி மிக்காரென்பது விளங்கும்.

திருமாலின் அடியைச் சார்ந்தவர்களுடைய பாவங்கள் நீங்குவது நிச்சயமாதலின், 'அருவினைபோல்' என்பதனிடையில் 'நீங்குவது' என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது. அக்காலம் - என்பதிலுள்ள சுட்டு சேய்மைச்சுட்டு; நளன் தமயந்தியைக் காட்டில்விட்டு நீங்கிய அக்காலத்தை யுணர்த்தி நின்றது. 'அடியே' என்பதில் ஏகாரம்-பிரிநிலை. 'போயிற்றே' என்பதிலுள்ள ஏ-அசை.

இயற்கைவடிவம் பெற்ற நளனைக் கண்டவுடன்
அவனுடைய பிள்ளைகள் வருந்துதல்.

391. தாதையைமுன் காண்டலுமே தாமரைக்க ணீரரும்பப்
போதலருங் குஞ்சியான் புக்கணைந்து—கோதிலாப்
பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான்
மின்னிடையா ளோடும் விழுந்து.

(இ-ள்) (அவ்வாறு நளன், தேர்ச்சாரதி வடிவம் நீக்கியவுடனே இயற்கைவடிவம் பெற்று விளங்கினான்,) போது அலரும்-முடிக்கப்பட்ட மாலையிலுள்ள பூவரும்புகள் மலர்ந்து விளங்குகின்ற, குஞ்சியான்-மயிர் முடியையுடைய இந்திரசேனன் என்னும் இராஜகுமாரன், தாதையை - (அங்ஙனம் இயற்கை வடிவம்பெற்று விளங்கியதன்) தந்தையாகிய நளனை, முன்-எதிரில், காண்டலும் - பார்த்த மாத்திரத்தில், தாமரைக்கண் - தாமரை மலர் போன்ற கண்களில், நீர் அரும்ப-நீர்துளிக்க, மின் இடையாளோடும்-மின்னலைப்போன்ற இடையை யுடையவளாகிய தன் தங்கை இந்திரசேனையுடனே, புக்கு அணைந்து அந்நளன் சமீபத்திற்போய்ச சேர்ந்து, விழுந்து-அவனுடைய பாதங்களின்மேல் வீழ்ந்து, கோது இல்லா - குற்றமற்ற, பொன்-அழகிய, அடியை-அப்பாதங்களை, கண்ணில் புனலால்-கண்களிலிருந்துண்டான நீரினால் (அதாவது: கண்ணீரால்), கழுவினான்-அலம்பினான் (அதாவது: அப்பாதங்களின்மேல் கண்ணீர் விட்டழுது வணங்கினான்),

நளனுடைய யதார்த்த வடிவத்தைக்கண்டவுடன் பிள்ளைகள் அவனைத் தங்களுடைய தந்தையென்றுணர்ந்து, "அந்தோ! நம்தந்தையோ இந்நிலைமையிலிருந்தனர்" என்று வருந்திக் கண்ணீர்விட்டழுதுகொண்டே அவனுடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கினார்கள். இங்ஙனம் அவர்களுக்கு வருத்தம் ஏற்பட்டது. தாங்கள் நெடுநாள் அவனைப் பிரிந்திருந்து கண்டதாலும், முன் அவனை யுணராமையால் மடையனென்று இகழ்ந்துரைத்ததை நினைத்ததாலும் உண்டான தென்க. 'மின்னிடையாளோடும் புக்கணைந்து விழுந்து பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான்' என்றதனால் இருவரும் அவ்வாறு செய்தார்கள் என்பது பெறப்படும்.

காண்டலும்-வினையெச்சம்; இதனீற்றிறகாரம்-அசை; விரைவுப்பொருளில் நின்றதெனலுமாம். தாமரைக்கண்-உவமைத்தொகை. அரும்ப-வினையெச்சம். அலரும் - பெயரெச்சம். அணைந்து - வினையெச்சம். ஓடும், என்பதில், உம்-அசை.; உயர்வு சிறப்புப் பொருளென்பினுமாம்.

தமயந்தி நளனைக்கண்டு வருந்தியழுது அவனடியில் வீழ்ந்து வணங்குதல்.

392. பாதித் துகிலோடு பாய்ந்திழியுங் கண்ணீருஞ்
சீதக் களபதனஞ் சேர்மாசும்—போத
மலர்ந்ததார் வேந்தன் மலரடியில் வீழ்ந்தாள்
அலர்ந்ததே கண்ணீ ரவற்கு.

(இ-ள்) (அவ்வாறு அப்பிள்ளைகள் வீழ்ந்தழுது வணங்கிய தருணத்தில் தமயந்தியும்) பாதித்துகிலோடு-(முன்னே காட்டில் அறுபட்டுத் தன்னால் உடுத்திக்கொண்டிருக்கப்பட்ட) பாதிவஸ்திரத்துடனே, பாய்ந்து-ஓடி, இழியும்-வடிகின்ற, கண்ணீரும்—, சீதம்-குளிர்ச்சிபொருந்திய, களபம்-கல

மைச் சார்ந்தை புணியத்தக்க, தனம்-தனங்களில், சேர்-அடைந்திருக்கின்ற மாசும் புழுதியும், போத-அதிகரித்து விளங்க, மலர்ந்த-அரும்புகள் மலர்ந்து விளங்குகின்ற, தார்-மாலையை அணிந்த, வேந்தன்-நளமகாராஜனுடைய மலர் அடியில்-தாமரை மலர்போன்ற பாதங்களில்,வீழ்ந்தாள்—,(அங்ஙனம் வீழ்ந்த மாத்திரத்தில்) அவற்கு அந்நளனுக்கும், கண்ணீர் அலர்ந்தது கண்ணீரானது மிகுதியாக வெளிப்பட்டுத் தோன்றிற்று, எ-று.

மேற்கூறியபடி பிள்ளைகள் நளன் பாதத்தில் வீழ்ந்தவுடனே தமயந்தியும் துக்கம் சகிக்கமுடியாமல் கண்ணீர்விட்டழுதுகொண்டே வீழ்ந்தாள். இவள், காட்டில் நளனால் அறுக்கப்பட்ட பாதிவஸ்திரத்துடனே அவனைப் பிரிந்த அந்நாள்தொட்டு வேறுவஸ்திரமுடுத்தாமலும், ஸ்நானஞ்செய்து உடம்பை அலங்கரித்துக் கொள்ளாமலும், மாசுபடிந்த மேனியுடனேயே கண்ணீர்விட்டழுதுகொண்டு இருந்தாள். ஆதலின், 'பாதித்துகிலோடு பாய்ந் திழியும் கண்ணீருஞ், சீதக்களபதனஞ் சேர்மாசும், போத' என்றார் ஆசிரியர். தமயந்தி வீழ்ந்தழுத மாத்திரத்தில் நளனுக்கும் துக்கம் மேலிட்ட படியால் அவனும் கண்ணீர் விட்டழுதான். பிரிந்தோர் ஒன்று சேர்வது மகிழ்ச்சியைத் தருவதாயினும் அப்போது மனிதர், முன் நிகழ்ந்தவற்றை யெண்ணித்துக்கப்படல் இயற்கை. ஆதலின், இவர்களும் இங்ஙனம் வருந்தினர்.

இச்செய்யுளில் 'தமயந்தி' என்னுந் தோன்றா எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. போதுதல்-நீளல், வருதல்; இஃதிங்கு அதிகரித்தற் பொருளில் நின்றது. நளனைக்கண்ட மாத்திரத்தில் தமயந்தியினுடைய பரிதாப கோலமும் துக்கமும் நீங்கிவிடுமாதலின், 'பாதித்துகிலோடு பாய்ந்திழியுங் கண்ணீரும், சீதக்களபதனஞ் சேர்மாசும், போத, மலர்ந்த தார்வேந்தன் மலரடியில் வீழ்ந்தாள்' என்பதற்கு, "பாதிவஸ்திரமும், கண்ணீரும், தனஞ்சேர் மாசும் அகலும்படி வேந்தனுடைய மலர்பாதத்தில் வீழ்ந்தாள்" எனப்பொருளுரைப்பினும் அமையும். 'சீதக்களபதனம்' என்றது முன்னிருந்த நிலைமை பற்றிவந்ததென்க. 'பூவெனப்படுவது பொறிவாழ்பூவே' என்றதனால், இங்கு மலர் என்பது தாமரையை உணர்த்தி நின்றது. எ-அசை.

**தமயந்தி, மிகுதியாகக் கண்ணீர்வடிய நின்றநிலை.**

393. வெவ்விடத்தோ டொக்கும் விழியிரண்டும் வீழ்துயில்கொள்
அவ்விடத்தே நீத்த வவரென்றே—இவ்விடத்தே
வாரார் முலையாளம் மன்னவனைக் காணாமல்
நீரான் மறைத்தனவே நின்று

(இ - ள்) (அவ்வாறு தமயந்தியும் நளனும் அழுது நின்றபோது),வெம்விடத்தோடு-வெவ்விதாகிய விஷத்துடனே, ஒக்கும்-நிகர்த்திருக்கின்ற, விழிஇரண்டும் (அத்தமயந்தியின்)இரண்டு நேத்திரங்களும், வீழ்-சோர்ந்து

படுக்கையில் வீழ்கின்ற, : துயில்கொள்-தூக்கத்தைக் கொண்ட, அவ்விடத்தே-அந்தப்பாழ்மண்டபத்திலே, நீத்த நம்மைப் பிரிந்துசென்ற, அவர் என்றே-(இவர்) அந்தக்கன்மனதுடையாரென்று, (நினைத்து அத்தகைய நளனைப்பார்த்தல் கூடாதென்னும் எண்ணத்தால்), இவ்விடத்தே-இந்த வீமராஜனது மாளிகையினிடத்தில், வார்ஆர்-கச்சணியப்பெற்றிருக்கின்ற, முலையாள்-தனங்களையுடைய தமயந்தியானவள், அம்மன்னவனை-அந்த நளமகாராஜனை, காணாமல்-காணாதிருக்குமாறு, நீரால்-வடிகின்றநீரினாலே மறைத்தன-அவனுருவத்தை மறைத்து விட்டன, எ-று.

நளன் தமயந்தியைக் காட்டில் விட்டுப்பிரிந்து சென்றவனாதலின், அத்தகைய கன்மனத்தனைக் காணுதல் தகாதென்று நினைத்துக் கண்கள் அவனுடைய உருவம் அவளுக்குத் தெரியாதபடி நீரால் அதனைமறைத்து விட்டன என்பது இதன் கருத்து. தாங்கள் வெறுக்கத்தக்க செயல்களைச் செய்தவரைக் காணுதற்கு உலகத்தார் கூசுதல் இயற்கையாதலின், தமயந்தியின் கண்களும் தங்களையும் தமயந்தியையும் பிரிந்த நளனைப் பார்த்தல் கூடாதென்று இங்ஙனம் செய்தனவென்க. ஒரு கூட்டத்தார்க்கு வெறுப்பானவன் மீது எல்லோருமே அருவருப்புக் கொண்டிருப்பினும், அவர்களுட் சிலர் வெறுப்புடையவராயும் சிலர் விருப்புடையவராயு மிருத்தலும், விருப்பையுடையார் நேயங்காட்ட நினைப்பினும் அவர்களை வெறுப்புடையார் அங்ஙனம் செய்யவொட்டாது தடுத்தலும் இயற்கை. இதுபோல் இங்கு நளன், தமயந்திக்கும், அவளுடைய கண்களுக்கும் வெறுப்பானவனே யெனினும் தமயந்தி அவ்வெறுப்பைப் பாராட்டாது அவனைப்பார்க்க நினைத்தாள்; கண்கள் மிகுதியும் வெறுப்புடையனவாதலின் அவளுடைய எண்ணம் நிறைவேறாதபடி நீரால் அந்நளனுடைய உருவத்தை மறைத்து விட்டன. நளன் பிரிந்தகாலத்தில் நித்திரைசெய்து கொண்டிருந்தவை கண்கள். அவ்வாறு அயர்ச்சியுற்ற காலத்தில் நளன் நீங்கியது அக்கண்களையே ஏமாற்றிச் சென்றதாகும்; ஆதலின், அவை, நளன்மீது, தமயந்தியைக் காட்டினும் மிகுதியாக வெறுப்படைந்தன வென்க. தமயந்தி, துக்க மிகுதியால் அழும்போது கண்ணில் மிகுதியும் நீர் ஒழுகிற்று; அதனால் கண் பார்வை மறைவுற்றது. அதனையே இங்ஙனம் உருவகப்படுத்திக் கூறினார் ஆசிரியர், கண்கள் மிகவும் சீற்றமுடையவையென்பது தோன்ற விஷத்திற்கு நேராகக் கூறப்பட்டன.

'இரண்டும்' என்பதிலுள்ள உம்மை-முற்றுப்பொருளது. நித்திரை மனிதரின் உடம்பைக் கீழே வீழ்த்தக் கூடியதாதலின் 'வீழ்துயில்' எனப்பட்டது. இனி, 'வீழ்துயில்' என்பதற்கு, 'விரும்பத்தக்க நித்திரை' எனப்பொருளுரைத்தலுமாம். என்றே, இடத்தே என்பவற்றிலுள்ள ஏகாரங்கள் அசைகள். நின்று-அசை. 'நின்று நீரான் மறைத்தன' எனமாற்றி, 'நிலைபெற்று நீரினாலே மறைத்தன' எனப்பொருள் கோடலுமொன்றும்.

### தேவர் நளன்மேல் பூமாரி பொழிதல்.

394. உத்தமரின் மற்றிவனை யொப்பா ரொருவரிலை
இத்தலத்தி லென்றிமையோ ரெம்மருங்கும்—கைத்தலத்தில்
தேமாரி பெய்யுந் திருமலர்த்தார் வேந்தன்மேற்
பூமாரி பெய்தார் புகழ்ந்து.

(இ-ள்) (அத்தருணத்தில்) இமையோர்-தேவர்கள், இத்தலத்தில்-இந்தப்பூமியில், (இருக்கின்ற) உத்தமரில் - நல்லோர்களுக்குள்ளே, இவனை-இந்த நளனை, ஒப்பார்-நிகர்த்திருப்பவர், ஒருவர் இலை - ஒருவரும் இல்லை, என்று-என்று சொல்லி, புகழ்ந்து - அவனைத்துதித்து, தேம்மாரி - தேன் மழையை, பெய்யும்-சொரிகின்ற, திரு—அழகிய, மலர்த்தார் - பூமாலையை அணிந்த, வேந்தன்மேல்-நளமகாராஜன்மீது, எம்மருங்கும்-எப்பக்கத்திலும் (விழும்படி), கைத்தலத்தில் - தங்கள் கரங்களால், பூமாரிபெய்தார் - மலர் மழையைச் சொரிந்தார்கள், எ-று.

நளன், அரசுரிமையைக் கைவிட்டு வறுமையுற்ற காலத்திலும் வேட்டகஞ்சேர்தல் இழிவென்று கருதி, மனைவிமக்களையும் பிரிந்து காலத்திற்குத் தக்க கோலம் பூண்டு தன் உயர்ந்த நிலைமையைக் கருதாது இழிதொழில் புரிந்து மனவுறுதியுடனிருந்து தான்கொண்ட சத்தியத்தை நிறுத்திவெளிப்பட்டனனாதலின், தேவர்கள் அவனை இவ்வாறு புகழ்ந்து அவன்மீது பூமழை பொழிந்து வாழ்த்தினர்.

மற்று-அசை. ஒருவர்-சிறப்பினால் ஒருமையிற் பன்மை வந்த பால்வழுவமைதி; இதில் இழிவு சிறப்பும்மை தொக்கது. இல்லையென்பது 'இலை' என நடுக்குறைந்து வந்தது. இமையோர்-கண் இமைக்காதவர்கள். மருங்கும், என்பதிலுள்ள உம்மை-முற்றுப்பொருளது. கைத்தலத்தில் - உருபு மயக்கம்; மூன்றனுருபு ஏழனுருபாக மயங்கி வந்தது.

### கலி நளனைப் புகழ்ந்து தன்னிடம் வேண்டும்வரங்கேட்டுக் கொள்ளும்படி அவனுக்குரைத்தல்.

395 தேவியிவள் கற்புக்குஞ் செங்கோன் முறைமைக்கும்
பூவுலகி லொப்பாயார் போதுவார்—காவலனே
மற்றென்பால் வேண்டும் வரங்கேட்டுக் கொள்ளென்றான்
முற்றன்பாற் பாரளிப்பான் முன்.

(இ-ள்.) (அவ்வாறு தேவர்கள் புஷ்பமாரி பொழிந்த சமயத்தில் கலிபுருஷன்), முற்று அன்பால்-நிறைந்த அருளினாலே, பார்-பூமியை, அளிப்பான் முன்-காக்கின்றவனாகிய நளமகாராஜனின் எதிரில், (நின்று அவனை நோக்கி), காவலனே-இராஜனே!, தேவி-உன்மனைவியாகிய, இவள்—இத்தமயந்தியினது, கற்புக்கும்-பதிவிரதா தர்மத்திற்கும், செங்கோல் - உன்னுடைய அரசாட்சியின், முறைமைக்கும்-ஒழுங்குக்கும், பூ உலகில் - இந்த

மண்ணுலகத்தில், ஒப்பா-நிகராக, போதுவார்-வருகின்றவர், யார்-எவர்?, (ஒருவருமில்லை; ஆதலின், உங்கள்மீது நான் கொண்ட பகையை நீக்கி அன்புகொண்டேன்; இனி), என்பால் - என்னிடத்தில், வேண்டுவரம்-நீங்கள் பெற்றுக்கொள்ள வேண்டிய வரத்தை, கேட்டுக்கொள் - நீ கேட்டுக் கொள்வாயாக, என்றான்-என்று சொன்னான், எ-று.

முன் 367-ஆம் செய்யுளிற் கூறியபடி, நளன் அக்ஷஇருதயம் என்னும் வித்தையைக் கற்றுக்கொண்டவுடனே, 'இனி நம்வல்லமை இவனிடத்துச செல்லாதென்று அவனைவிட்டு நீங்கிய கலி, இப்போது, தமயந்தியின் கற்புயாவையும், நளனுடைய நீதிவழுவாச் செய்கையையுங்கண்டு, 'இத்தகைய நற்குணம் வாய்ந்த இவர்க்கு நாம் இதுவரை தீங்குசெய்து வந்தது தகாத காரியம்; ஆதலின், இனி அப்பகையைநீக்கி நலம்புரிதல் வேண்டும்' என்று கருதினான். அதனாலே இங்ஙனம் நளன் செங்கோன் முறைமையையும், தமயந்தியின் கற்புயர்வையும் பிறப்பித்துக்கூறி, 'உங்கட்கு, வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்' என்று நளனிடம் கூறினான். அடக்கமுடையார்க்குத் தீங்குசெய்வோர், தங்களால் இயன்றவரை துன்பங்களைச்செய்து பார்த்து அவர் எதிர்த்தொன்றுஞ் செய்யாதிருக்க, தாமே பகை தணிந்து அவ்வடக்கம் தம்மனத்தைச்சுடத் தாங்கள் செய்த கொடுஞ்செய்கைகளைக் குறித்துத் தங்களைத் தாங்களே நிந்தித்து நல்வழிக்குத் திரும்பி அவர்க்கு நலஞ்செய்தல் இயற்கை; ஆதலின், கலியும்அவ்வாறே செய்யத்துணிந்தான்.

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்றுவிடல்"

என்றபடி நளன், செருக்கால் தனக்குத் தீங்கியற்றிய கலியைத் தன் அடக்கத்தால் வென்றான். தமயந்தியின் கற்பைச் சிறந்து நிற்கும்படி செய்தது, நளன் ஐசுவரியத்தையிழந்து தன்னையும் நீக்கிச் சென்றும் அவள், அவன் மீதுள்ள ஆர்வம் நீங்காதிருந்ததாம். நளனுடைய செங்கோன் முறைமையைச் சிறந்து விளங்கும்படி செய்தது, அவன் தனக்கு, புஷ்கரனை வெல்லலாம் ஆற்றலிருந்தும், சூதாட்டத்தில் தோற்ற அரசுரிமையை யுத்தத்தால் அடைதல் தகாதென்று அதனைவிட்டுப் பல கஷ்டங்களை அனுபவித்ததாம். இவ்விரு செயல்களும் இவ்விருவரையும் விட்டு நீங்காதிருத்தற்கே கலி, பகை நீங்கிச் சந்தோஷித்தான் எனக்கொள்க.

உம்மைகள்-எண்ணுப்பொருளன. யார்-உயர்திணைப் பொதுக்குறிப்பு வினைமுற்று; "யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால்" (நன்-வினை-கூ0) என்னுஞ் சூத்திரம் பார்க்க. கொள் - தற்பொருட்டு என்றும் பொருளில் வந்தவிகுதி. போதுவார்-புகுதுவார் என்பதன் திரிபு; 'போ' என்னும் முதனிலையே இங்ஙனம் புடைபெயர்ச்சி யுடைத்தாயிற்றெனவுமாம்; அங்ஙனங்கொள்ளுமிடத்து, போ-பகுதி, து-சாரியை, வ்-எதிர்கால இடைநிலை ஆர்-விகுதி; 'புகுதுவார்' என்பதில், புகுது-பகுதி; 'புகு-பகுதி, து-சாரியை' எனக் கோடலுமொன்று. 'காவலன்' என்பது, 'காவலைச்செய்பவன்' என்

றும், 'காத்தலில் வல்லவன்' என்றும் இருவகைப் பொருள்படும்; 'காவலைச் செய்பவன்' என்று பொருள் கொள்ளுமிடத்து, காவல்+அன்—எனவும், 'காத்தலில் வல்லவன்' என்று கொள்ளுமிடத்து, கா+வலன்—எனவும் பிரித்தல்வேண்டும்; கா-முதனிலைத் தொழிற்பெயர்.

நளன், கலியினிடத்தில் வரங்கேட்டுக் கோள்ளல்.

396. உன்சரிதஞ் செல்ல வுலகாளுங் காலத்து
மின்சொரியும் வேலாய் மிகவிரும்பி—என்சரிதம்
கேட்டாரை நீயடையே லென்றான் கிளர்மணிப்பூண்
வாட்டானை மன்னன் மதித்து.

(இ-ள்) (அவ்வாறு கலிபுருஷன் கேட்டபோது), கிளர்-பிரகாசிக்கின்ற மணி-இரத்தினங்களினாலாகிய, பூண்-ஆபரணங்களையும், வாள்-வாளாயுதத்தைத்தரித்த, தானை-சேனையையுமுடைய, மன்னன்-நளமகாராஜன், மதித்து-(கலியின்வார்த்தையை) உயர்வாகக்கொண்டு, (அவனைநோக்கி), மின்சொரியும்-பிரகாசத்தைப் பொழிகின்ற, (அதாவது: பிரகாசம் மிகுந்த), வேலாய்-வேலாயுதத்தையுடையவனே! உன்சரிதம் செல்ல-உன்னுடைய வரலாறு நடைபெறும்படி, உலகு ஆளும்-நீ உலகத்தை ஆட்சிபுரிகின்ற, காலத்து-கலிகாலத்து, மிகவிரும்பி-மிகுதியாகப் பிரியங்கொண்டு, என் சரிதம்-என்னுடைய சரித்திரத்தை, கேட்டாரை-கேட்பவர்களை, நீ அடையேல்-நீ சேராதிருப்பாயாக, என்றான்-என்றுசொன்னான், எ-று,

கலி தனக்கு மிக்க தீங்குசெய்தவனாயிருந்தும், தானே பகைநீங்கி வரந் தருவேன் என்று கூறினமையால் நளன், அவன் சொல்லை உயர்வாக மதித்தான். இவன், தன்சௌக்கியத்தின் பொருட்டு ஒன்றையுங் கேளாமல் தன்சரித்திரத்தைக் கேட்கும் உலகத்தார்க்கு நலஞ்செய்யுமாறு கேட்டுக் கொண்டது இவனது பரோபகார சிந்தையாகியபெருங்குணத்தை விளக்கும். கலியின் சரிதம் செல்ல அவன் உலகாளுங் காலமாவது: கலிகாலமாம்; அவன்சரிதம் செல்லுதலாவது: அவனுடைய செய்கை எங்கும் பரவியிருத்தலாம். கலிகாலத்தில் எங்கும் கொடுமையே பரவியிருத்தலும், அக்கொடுமை கண்டாரெல்லாரும் 'இது கலிகாலக்கொடுமை' என்று சொல்லுதலும் இயற்கை என்பது இதனுள் பொதிந்துள்ளது.

'உன்சரிதம் சொல்லி' எனவும் பாடபேதமுண்டு; இப்பாடங் கொள்ளுமிடத்து, "நீ, 'நான் இத்தகைய குணமுடையவன்,' என்று கூறி உன்னுடைய வரலாற்றை விளக்கிக் காட்டி" எனப்பொருளுரைத்தல் வேண்டும் கலி, தன் சரிதத்தைக் கூறுதலாவது: தன்னுடைய கொடுமை எங்கும் பரவச்செய்தலாம். மற்றகாலத்திலுள்ளவர்களைக் காட்டினும் கலிகாலத்திலுள்ளவர்களே மிகுதியும் கஷ்டத்திற்குள்ளாவராதலானும், அவர்களுடைய ஆபத்தை நீக்குதலே சிறந்த புண்ணியமாதலானும் அக்காலத்திலுள்ளாரில் தன்சரிதங் கேட்பார்க்கு நலம் புரியுமாறு வேண்டினான் நளன்.

'வேலான்' என்பது ஈறுதிரிந்து 'வேலாய்' எனவிளியாயிற்று. கேட்டாரை-எதிர்காலம் இறந்தகாலமாகமாறிவந்த காலவழுவமைதி. அடையேல்-எதிர்மறை ஏவலொருமை வினைமுற்று. மன்னன் - அரசன்.

கலி நளனுக்கு வரங்கொடுத்துப் போதல்.

397. என்காலத் துன்சரிதங் கேட்டாரை யானடையேன்
மின்கா லயில்வேலாய் மெய்யென்று—நன்காவி
மட்டிறைக்குஞ் சோலை வளநாடன் முன்னின்று
கட்டுரைத்துப் போனான் கலி.

(இ-ள்) (நளன் அவ்வாறு சொன்னதைக்கேட்டு), கலி-கலிபுருஷன் நன்காவி-நல்ல நீலோற்பலமலர்கள், மட்டு-தேனை, இறைக்கும்-சிதறுகின்ற சோலை-சோலைகள் சூழப்பெற்ற,வளம்-வளப்பம் பொருந்திய, நாடன்-நிடத தேசத்தரசனாகிய நளனது, முன்நின்று-எதிரில் நின்று, (அவனைநோக்கி), மின்கால் - பிரகாசத்தைக் கக்குகின்ற, அயில் - கூர்மையுள்ள, வேலாய்-வேலாயுதத்தையுடைய அரசனே!, என்காலத்து-என்னுடைய காலத்தில் (அதாவது : கலியுகத்தில்), உன் சரிதம்-உன்னுடைய கதையை, கேட்டாரை-கேட்பவர்களை, யான் அடையேன்-நான்சேர்ந்து வருத்தமாட்டேன், மெய்:(இது) உண்மை' என்று —,கட்டுஉரைத்து-உறுதிசொல்லி, போனான்-தன்னிருப்பிடத்திற்குப் போயினான், எ-று.

கலி நளன் விரும்பியவற்றையெல்லாம் கொடுக்கவிரும்பி அவனிடத்தில், 'நீ விரும்பும் வரத்தைக் கேட்டுக்கொள்' என்று கூறினனாதலின், அந்நளன் கூறியதைத் தடையின்றிச் செய்வதாக உறுதி கூறிப்போயினான். சோலையிற் காவி எங்ஙன மிருக்குமெனில், ஆங்குள்ள தடாகங்களில் உளதாமென்க. ஒருவனிடம் கலிசேர்தல் துன்பத்திற்கேதுவாமாதலின், 'யான் அடையேன்', என்பதற்கு, 'நான்சேர்ந்து வருத்தேன்', என்று பொருள்.

கேட்டார்-வினையாலணையும் பெயர். அடையேன்-தன்மை யொருமை எதிர்காலவினைமுற்று.கால்அயில்-வினைத்தொகைநன்மையென்னும் பண்புப் பெயர் மையீறுகெட்டு நின்றது. 'கட்டுரைத்து',என்பதில், கட்டுரை-பகுதி.

வீமன்,நளனையும்,தமயந்தியையும்,அவளின்
பிள்ளைகளையும் மாளிகைக் கழைத்துப்போய்
அவர்கட்கு விருந்துசெய்தல்.

398. வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கட்
கோதையையு மக்களையுங் கொண்டுபோய்—தாது

புதயத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையக்கோன் செய்தான் விருந்து.

(இ-ள்) (அதன்மேல்) 'தாது-மகரந்தங்கள், புதைய-புதைந்துபோகும்படி, தேன்-மதுவானது, பாய்ந்து ஒழுகும்-பாவிவடிகின்ற, பூஞ்சோலை; மலர்கள்மிகுந்த சோலைகளாகிய, வேலி-வேலியையுடைய, விதையக்கோன்-விதர்ப்ப தேசத்தரசனாகியவீமன், வேதநெறி- வேதமார்க்கத்தினின்றும், வழுவா - நீங்காத, வேந்தனையும்-நளமகாராஜனையும், பூ-நீலோற்பலமலர் போன்ற, தடம்-விசாலமாகிய, கண் - கண்களையுடைய, கோதையையும்-மாலைபோன்றவளாகிய தமயந்தியையும், மக்களையும்-(அவர்களுடைய) பிள்ளைகளையும், கொண்டுபோய்-அழைத்துக் கொண்டுபோய் (தன் அரண்மனையிற் சேர்த்து), விருந்து செய்தான்-(அவர்கட்குப்) புதிதாக உணவளித்தல் முதலிய உபசாரங்களைச் செய்தான், எ-று.

வீமன், தன்மருகனாகிய நளனை நெடுநாட்கள்வரை பிரிந்திருந்து கண்டனனாதலாலும், நளன் தாழ்ந்த நிலைமையில் மறைந்திருந்து அப்போது தன் இயற்கை வடிவத்துடன் வெளிப்பட்டதனாலும் மகிழ்ச்சி யடைந்து, இங்ஙனம் அவனுக்கும், அவனுடைய மனைவிமக்களுக்கும் விருந்து செய்தான். விருந்தாவது: புதிதாக வந்தோர்க்கு நல்லுணவளித்தல், பின்னும் வேண்டுவன நல்கல் முதலியனவாம். தமயந்தியும் அவளுடைய பிள்ளைகளும் வீமன் மாளிகையிற் சேர்ந்திருந்தாலும் நளனைப் பிரிந்த துக்கத்தால் நல்லுணவருந்தாமலும், நல்லாடை யுடுத்தாமலும், அலங்காரம் செய்து கொள்ளாமலு மிருந்தார்கள். ஆதலின், அன்று வீமன், அவர்களெல்லோருக்கும் நல்லுணவளித்து அவர்களை மேன்மைப் படுத்தினான். தேன்மிகுதியாகப் பாயும்போது மலர்களிலுள்ள மகரந்தங்கள் நனைந்துமறையும். வேலி ஊரையோ நிலத்தையோ சுற்றிக் காவலாயிருக்கும்படி மரம் செடி முதலியவற்றையோ மதிலையோ அமைத்தலாம்.

உம்மைகள் - எண்ணுப்பொருளன. நெறிவழுவா-ஐந்தாம் வேற்றுமைத் தொகை. 'பூந்தடங்கண்' என்பதற்கு, 'மலர்களையுடைய தடாகம்போன்ற கண்' எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். கோதை-தமயந்திக் குவமையாகுபெயர்; கோதை - மாலை; இது பெண்ணுக்குவமையால், நுடக்கமும் மென்மையும் மணமும் அழகும் பற்றியென்க. விதையம்-விதர்ப்பமென்னும் ஆரியமொழித்திரிபு. வேலி என்பது ஊருக்கும் பெயராமாதலின், 'பூஞ்சோலை வேலிவிதையக்கோன்' என்பதற்கு, 'மலர்சோலைசூழ்ந்த கிராமங்களையுடைய விதர்ப்ப தேசாதிபன்' எனப் பொருளுரைப்பினுமாம்.

ருதுபர்ணன், நளனிடம் மன்னிப்புக் கேட்டுக்
கொண்டு தன்பதிக்கேகுதல்:

399. உன்னையா னொன்று முணரா துரைத்த வெலாம்
பொன்னமருந் தாராய் பொறுவென்று—பின்னைத்தன்
மேனீர்மை குன்ற வெறுந்தேர் மிசைக்கொண்டான்
மானீ ரயோத்தியார் மன்.

(இ-ள்) (நளன், தமயந்தி முதலியவர்கள் அங்ஙனம் விருந்துண்டு மகிழ்ந்திருக்கும்போது), மால் - பெருமை பொருந்திய, நீர் - நீர்வளமுள்ள, அயோத்தியார்-அயோத்தியைச் சார்ந்த நாட்டாருடைய, மன்-அரசனாகிய ருதுபர்ணன், (அங்கு நடந்தவைகளையெல்லாம்பார்த்து, தன்னிடம் தேர்ப்பாகனா யமர்ந்திருந்தவன் நளனென்பதையுணர்ந்து 'நளச்சக்கரவர்த்தியை நாம் தேர்ப்பாகனாக வைத்து ஏதேதோ இழிவான வார்த்தைகளையும பேசினோமே' என்று வியப்பும் திகிலுமடைந்து நளனிடம் சென்று), பொன் அமரும்-அழகு பொருந்திய, தாராய்-மாலையை அணிந்த நளமகாராஜனே!, யான்-நான், ஒன்றும் உணராது - (இரகசியமாயிருந்த நின் விஷயங்களில்) ஒன்றையேனும் அறியாமல், உன்னை உரைத்த எல்லாம் - உன்னைப்பற்றிக் கூறியவைகளை யெல்லாம், பொறு என்று - பொறுத்துக் கொள்வாயாக என்று சொல்லி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, பின்னை-பிறகு, தன் - தன்னுடைய, மேல் நீர்மை-உயர்ந்த தன்மையானது, குன்ற-குறைந்து, வெறுந் தேர் மிசைக்கொண்டான்-வெறுமையான தேரின்மேலேறிப் புறப்பட்டுப் போய்த் தன் நகரஞ்சேர்ந்தான், எ-று.

நளன் தேர்ப்பாகனாய்த் தன்னிடம் அமர்ந்திருந்த காலத்தில் ருதுபர்ணன் அவனை இழிந்த குலத்தினனென மதித்து எளனஞ்செய்து பேசிவந்தான்; அதாவது: தமயந்தியின் இரண்டாம் சுயம்வரச் செய்தியைக் கேள்விப்பட்டபோது நளன் கூறிய வார்த்தைகளை அவன் தடுத்துரைத்தது முதலியவைகளாம். முன்னே ருதுபர்ணன் அவ்வாறு பேசியிருந்தபடியால் நளன் யதார்த்த வடிவத்தோடு வெளிப்பட்டவுடன், "அந்தோ! ஓர் சக்கரவர்த்தியை நாம் தேர்ப்பாகனாக ஏற்றுக்கொண்டதோடு அவமதித்தும் பேசினோமே" என்று மனதில் திகில் கொண்டான். அதனாலேயே இங்ஙனம் நளனிடத்தில், "நான் உன்னுடைய தன்மையைச் சிறிதும் உணராமல் பேசிய வார்த்தைகளைப் பொறுத்துக்கொள்" என்று கூறினான். இவன், தமயந்தியை மணஞ்செய்ய விரும்பிவந்து அவமான மடைந்தானாதலின், இவனுடைய உயர்வுகுன்றிப் போயிற்று; அதனால், 'மேனீர்மைகுன்ற' என்றார் ஆசிரியர். ருதுபர்ணன், தமயந்தியை ஏற்றிக்கொண்டு வரவேண்டுமென்று கருதி ஓட்டிக்கொண்டு வந்ததேரை, அவளின்றித் திருப்பிக் கொண்டு போயினமையால் புலவர் அதனை 'வெறுந்தேர்' என்றார்; இனி பாகனின்றி அம்மன்னனே நடத்திக்கொண்டு போயினமைபற்றி உரைத்

தாரெனினுமாம். 'தன் மேனீர்மை குன்றா' என்பதற்கு, 'தனது உயர்ந்த தன்மை குறையாமல்' எனப் பொருளுரைப்பாருமுளர்; ருதுபர்ணன் சாஸ்திர விரோதமாகிய இரண்டாம் சுயம்வரத்தை விரும்பிவந்ததும், மற்றொருவனுக்கு மனைவி யானவள்மீ திச்சைகொண்டதும் இழிந்த செய்கைகளாம்; இவைபற்றி அவனுக்குத் தாழ்வு கூறுதலே மிகவும் பொருத்தமுடையதாம்; ஆதலின், இவ்வுரை பொருந்தாமையுணர்க. குன்றா-குன்றி.

'பொன்அமரும் தாராய்' என்பதற்கு 'ஜயலட்சுமிபொருந்திய புயத்தையுடையவனே' எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். மிசைக்கொள்ளுதல் மேலிடத்தை அடைதல்; அதாவது: அவ்விடத்தை இருக்கையாகப் பெற்றிருத்தல்; மிசைக்கொண்டான் என்பதை ஒரு சொன்னீர்மைத்தாக்கொண்டு, 'ஏறினன்' எனப்பொருளுரைத்துக் கொள்க. மிசை-ஏழனுருபு. அயோத்தி நகரம் இங்கு அதைச்சார்ந்த நாட்டையுணர்த்தி நின்றது. இனி 'அயோத்தியார்மன்' என்பதற்கு, 'அயோத்தியிலிருக்கின்ற அரசன்' எனவும் பொருளுரைக்கலாம். 'தேர்மிசைக்கொண்டான்' எனவே, தேரேறிப் புறப்பட்டுத் தன்நகரம் போய்ச்சேர்ந்தான்' என்பது தானே அமையும்.

### நளன், மனைவி மக்களுடன் மாவிந்த நகரத்திற்றுப் புறப்பட்டுப் போதல்.

400 விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேற் றேவியொடும் போயினான்—முற்றாம்பல்
தேனீ ரளித்தருகு செந்நெற் கதிர்விளைக்கும்
மாநீர் நிடதத்தார் மன்.

(இ-ள்) (ருதுபர்ணன் அவ்வாறு போயினபின்), முற்று ஆம்பல்-முதிர்ந்த அல்லிமலர்கள், தேன்-மதுவாகிய, நீர்-நீரை, அளித்து-கொடுத்து அருகு - பக்கத்திலுள்ள, செந்நெற்கதிர் - செம்மையாகிய நெற்கதிர்களை, விளைக்கும்-விளையச்செய்கின்ற, மா-சிறந்த, நீர்-நீர்வளமுள்ள, நிடதத்தார்-நிடதேசத்தாருடைய, மன்-அரசனாகியநளன், வில்-வில்லையேந்திய, தானை சேனையானது, முன்செல்ல - முன்னேசெல்ல, வேல்வேந்தர்-வேலாயுதத்தையுடைய அரசர்கள், பின் செல்ல-பின்புறத்திற்செல்ல, தேவியொடும்-மனைவியாகிய தமயந்தியுடனே, பொன் தேர்மேல்-அழகிய தேரின்மேல், (ஏறி), போயினான்-மாவிந்த நகரத்திற்குப் புறப்பட்டுப்போனான், எ-று.

ருதுபர்ணன் சென்றபின்பு, நளன், மேல்நடக்கவேண்டிய காரியங்களைப்பற்றி வீமராஜன் முதலியவர்களோடு கலந்து யோசித்து, சூதினால் தோற்ற அரசுரிமையைச் சூதினாலேயே பெறவேண்டு மென்றும், தனக்கு அக்ஷஇருதயவித்தை தெரிந்திருப்பதால் இனிப்புஷ்கரனை எளிதில் வெல்லலாமென்றும் உறுதிகொண்டு, அங்ஙனமே அவனோடு சூதாடித் தன்நாட்டைக்கைப்பற்றுதற்கு வில்வீரர்களும் வேல்மன்னர்களும் தன்னை முன்னும்

பின்னும் சூழ்ந்துவர .மனைவிமக்களுடன் தேரேறிப் புறப்பட்டு மாவிந்த நகரம் நோக்கிச்சென்றான். 'தேவியொடும்' என்றதனால், 'மக்களும் உடன் போயினார்கள்' என்பது தானே அமையும் என்ப.

ஆம்பல்.முற்றுதல்-அரும்பின் தன்மை முதிர்ந்து மலரும் பருவத்தை அடைதல். 'விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்ல என்பவை வினைச்செவ்வெண். முன்பின் என்பன இடைச்சொற்களாதலின்,இவற்றின் னகரங்கள் "இடையுரி வடசொலினியம்பிய கொளாதவும்......" நன்மெய்-பு-௩௪) என்னும் சூத்திரவிதியினால் இயல்பாயின. "தேவியொடும்" என்பதில் உம்-அசை. தேனீர்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அளித்தல்-தருதல்; இஃதிங்கே 'பாய்தல்' என்னும் பொருளில் நின்றது. ஆம்பல் தேனை நீரைப்போலச்சொரிந்து பாய்ச்சிச் செந்நெல்லை விளைவிக்கு மென்க. 'செம்மைநெல்' என்பது, 'செந்நெல்' எனத்திரிந்து வந்தது; செம்மையின் மையீறுபோய், நடுநின்ற மகரமெய் நகரமெய்யாகத் திரிந்தது. 'மாநீர்' என்பதற்கு 'மேலானகுணம் பொருந்திய' எனப்பொருளுரைப்பினுமாம்.

பிரயாணமாய்ச் செல்லும்போது தமயந்தி, மேற்செல்லும்வழியின் தூரத்தை வினவுதலும், அதற்கு நளன் விடை கூறுதலும்.

401. தானவரை வெல்லத் தரித்தநெடு வைவேலாய்
ஏனைநெறி தூரமினி யெத்தனையோ—மானேகேள்
இந்த மலைகடந் தேழுமலைக் கப்புறமா
விந்தமெனு நம்பதிதான் மிக்கு

(இ-ள்)(அவ்வாறு புறப்பட்டுப்போகும்போது தமயந்தி நளனைநோக்கி) தானவரை-அசுரர்களை, வெல்ல-ஜெயித்தற்கு, தரித்த கையில் தாங்குகிற, நெடு-நீண்ட, வை-கூர்மைபெற்ற, வேலாய் வேலையுடைய குமாரக்கடவுள் போன்ற அரசனே!, (இதுவரை நாம் கடந்ததுபோக இன்னும் கடக்க வேண்டியிருக்கும்), ஏனை நெறி-மற்றவழியின், தூரம்-தூரமானது, இனி எத்தனையோ-மேலே எவ்வளவோ?, (என்றுவினவ அதற்குநளன், அவளை நோக்கி எதிரிலிருந்த ஒரு மலையைச் சுட்டிக்காட்டி),மானே-மான்போன்ற மருண்டபார்வையையுடைய பெண்ணே!, கேள்- நீ கேட்பாயாக, இந்தமலை கடந்து-இந்தப்பர்வதத்தைத் தாண்டி, (பின்னால் தோன்றும்) ஏழுமலைக்கு அப்புறம்-ஏழுபர்வதங்களுக்கு அப்பால், மிக்க-சிறப்பினால் மிகுந்த, நம்-நம்முடைய, மாவிந்தம் எனும்பதி மாவிந்தம் என்னும் நகரமானது (உளது) என்று தமயந்திக்குக் கூறினான், எ-று.

பெண்கள், புருஷர்களுடன் ஊர்ப்பிரயாணஞ்செய்யுங் காலததில் வழியின்தூரத்தை வினவுதலும் ஆங்காங்குள்ள விசேஷங்களைப் பற்றிக் கேட்டலும் இயற்கை. அவர்கள் வெளியில் அதிகமாகச் சஞ்சாரமில்லாதவர்களாதலானும், ஒவ்வொன்றின் இயற்கைக் குணத்தையும் ஆழ்ந்து யோசித்

துணரும் ஆற்றலில்லாத பேதைக் குணமுடையவராதலானும் எதையும் புருஷர்களிடத்திற் கேட்டுக் கொண்டேயிருப்பார்கள். ஆதலின், இங்குத் தமயந்தியும் அங்ஙனமே வழியின் தூரத்தைப்பற்றிக் கணவனிடம்வினவினள். பெண்கள் கேட்பவற்றிற் கெல்லாம் புருஷர்கள் வெறுக்காது அவர்களின் மனம் திருப்தியடையுமாறு விடைகூறுதல் இயல்பாதலின், நளனும் தமயந்தியின் வினாவிற்குத் தக்கவாறு விடையளித்தான்.

தானவரை வெல்லத்தரித்த நெடுவைவேலன்-குமாரக்கடவுள்; இவர் பெயர், நளனுக்கு உவமையாகுபெயராய் வந்தது ஓ-வினாப் பொருளது. மான்-தமயந்திக்கு உவமையாகுபெயர். இச்செய்யுள் வினாவுத்தரமாக அமைந்தது வினாவிற்கும் விடைக்கும் கர்த்தாக்கள் கூறப்படவில்லையெனினும், சொற்களின் குறிப்பு நோக்கி வினாவிற்குத் தமயந்தி என்னும் எழுவாயும், முடிக்குஞ் சொல்லும், விடைக்கு நளன்என்னும் ஏழுவாயும் பயனிலைச் சொற்களும் இசையெச்சமாகக் கூட்டியுரைக்கப்பட்டன. இனி, 'தானவர்' என்பதை அசுரரைப்போலக் கொடுந்தொழில் செய்யும் பகைவர்க்குவமையாகு பெயராகக்கொண்டு, 'தானவரை வெல்லத்தரித்த நெடுவை வேலாய்' என்பதற்கு, 'அசுரரைப்போன்ற பகைவரை வெல்லக் கையில் தாங்கிய நீட்சியும் கூர்மையுமுள்ள வேலாயுதத்தையுடையவனே' எனப்பொருள் கூறினும் அமையும் தான்-அசை 'உளது' என்னுஞ் சொல் வருவித்துரைக்கப் பட்டது.

நளன் செல்லும்போதுண்டான இரவு நீங்கிச்
சூரியன் உதயஞ் செய்தல்

402. இக்கங்குல் போக விகல்வே னளனெறிநீர்
செய்க்கங்கு பாயுந் திருநாடு—புக்கங்
கிருக்குமா காண்பான்போ லேறினன் குன்றிற்
செருக்குமான் றேர்வெய்யோன் சென்று.

(இ ள) (இவ்வாறு தமயந்தியும் நளனும் பேசிக்கொண்டு செல்லும் போது பகல் நீங்கி இரவுவந்து அதுவும் நீங்கும் தருணமாயிருந்தது; அச்சமயத்தில்), செருக்கு-(வேகத்தில் தங்கட்கு மிஞ்சியவைகளில்லை யென்று கொண்ட) கர்வத்தையுடைய, மான்-குதிரைகள், பூட்டிய, தேர்-இரதத்தையுடைய, வெய்யோன்-சூரியன், இக்கங்குல் போக-இங்குக்கூறிய இரவானது நீங்க, (மறுதினம்), இகல்-வெற்றியைக் கொண்ட, வேல்-வேலாயுதத்தையுடைய, நளன்-நளமகாராஜன், எறி-கரைகளில் அலைய வீசுகின்ற, நீர்-தண்ணீரானது, செய்க்கு-வயல்களுக்கு, பாயும்-பாயும்படியான, திரு-அழகிய, நாடு-விடதேசத்தில், புக்கு-புகுந்து, அங்கு-அவ்விடத்தில், இருக்கும் ஆ-தங்கும் விதத்தை, காண்பான்போல்-பார்க்கவருபவன் போல, குன்றில்-உதயகிரியில், சென்று-போய், எறினன்-எறி உதயஞ்செய்தான், எ-று.

நளன் புறப்பட்ட அன்று பகலும் இரவும் தங்காமற் பிரயாணஞ் செய்தான். அவ்வாறு போகும்போது அற்றை இரவு நீங்கிச்சூரியன் உதித்தான் என்பது இதன் கருத்து. சூரியன் உதித்ததை, நளன் மறுதினம் நிடத தேசத்தில் சேர்ந்திருப்பதைப் பார்க்க வந்ததுபோல் வந்தானென்றுரைத்தார் புலவர், 'செய்க்கங்கு' என்பதில், அங்கு-அசை. பிரயாணத்தில் முன்னர் இரவு கூறப்படாவிடினும், இதில், 'இக்கங்குல்' என்று கூறியதனால், 'நளன்பகலும் இரவும் பிரயாணஞ் சென்றான்' என்பது பெறப்படும். 'இக்கங்குல்' என்பதிலுள்ள இகரச் சுட்டு இங்கு நூலில் கூறியவிஷயத்தைக் குறித்து அண்மைச் சுட்டாய் நின்றது. நெடுங்காலம் வரை ஓரிடத்தை விட்டுப் போயிருந்தவன் மீண்டும் அவ்விடத்திற்கு வருவானாயின், ஆங்கு மனிதர்கூடி அவனை வரவேற்பதும், அவனுக்குபசாரமொழி கூறுதலும் அவன் அவர்கட்குபசாரமொழி கூறுதலும் மிக்க விநோதமுடையனவாயிருக்கும்; ஆதலின், அந்நிகழ்சிகளைப்பலர் பார்க்க விரும்புதல் உலகியற்கை அதுபற்றியே இங்குச் சூரியனையும், 'நளன் நிடதஞ்சார்தலைப் பார்க்கவந்தவன் போன்று வந்தான்' என்றுரைத்தார் ஆசிரியர்.

'இருக்குமாறு' என்பது, 'இருக்குமா' என ஈறு தொக்கிநின்றது 'எறிநீர்' என்பதை, 'நெறிநீர்' எனக்கொண்டு, அதற்கு, 'வாய்க்கால்களின் வழியாகச்செல்லும் நீர் எனப்பொருள் கூறினும் அமையும்.

**நளன், தன்மனைவிமக்களுடன் மாவிந்த நகரம் போய்ச் சேர்ந்து ஒரு சோலையில் தங்குதல்**

403. மன்றலிளங் கோதையொடு மக்களுந் தானுமொரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்-சென்றடைந்தான்
மாவிந்த மென்னும் வளநகரஞ் சூழ்ந்தமொரு
பூவிந்தை வாழும் பொழில்.

(இ-ள்) (அவ்வாறு சூரியன் உதயமான பின்னர் நளன்), மன்றல்-வாசனை தங்கிய, இளம்கோதையொடு இளமையான மாலையை அணிந்த தமயந்தியுடனே, மக்களும் தானும்-பிள்ளைகளும் தானுமாய், (மேற்கூறியபடி), ஒரு ஒப்பற்ற, வென்றி - வெற்றிபொருந்திய, மணி - இரத்தினங்கள் பதித்த, நெடும்-உயர்ந்த, தேர்மேல் ஏறி-இரதத்தின் மேலேறி, சென்று-போய் மாவிந்தம்என்னும்-மாவிந்தம் என்கிற, வளம்-வளப்பம் பொருந்திய, நகரம்-நகரத்தை, சூழ்ந்தது-சூழ்ந்ததாகிய, பூவிந்தை-தாமரைப்புஷ்பத்தில் வீற்றிருக்கின்ற இலக்குமி, வாழும் வாசஞ் செய்கின்ற, ஒருபொழில்-ஒரு சோலையை, அடைந்தான்- சேர்ந்தான், எ-று.

சூரியோதயமான தருணத்தில், நளன், தன்மனைவிமக்களுடன் மாவிந்தநகரத்தருகிற் சார்ந்து ஒரு பூஞ்சோலையில் தங்கினான் என்பது இதன் கருத்து. மாவிந்த நகரம் நளனுக்குரியதாயினும் அக்காலத்தில் புஷ்கரன்

வசப்பட்டிருந்தமையால் அதற்குள் நுழைதல் தகாதென்று கருதியே நளன், இங்ஙனம் பூஞ்சோலையில் தங்கினான். மன்றல் இளங்கோதை-அன்மொழித்தொகை; இனி, கோதையை உவமையாகு பெயராகக் கொண்டு, மன்றல், இளமை ஆகியவற்றை அதற்கடைகளாக்கினுமாம். 'மன்றல்' என்பதற்கு, 'கலியாணம்' எனப்பொருள் கூறினும் அமையும். 'மன்ற விளங்கோதை' எனவும் பாடபேதமுண்டு; அங்ஙனங் கொள்ளு மிடத்து, 'மன்ற' என்பதை, அசையெனக்கோடல் வேண்டும். உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன 'பூவிந்தைவாழும்' என்பதற்கு, 'மலர்களின், அதிசயம் தங்கியிருக்கின்ற' எனப்பொருளுரைப்பினும் பொருந்தும்; இங் ஙனம் கொள்ளுமிடத்து 'விந்தை' என்பது தெலுங்கிலிருந்து வந்த திசைச் சொல்லெனப்படும். 'நளன்' என்னும் தோன்றா எழுவாய் வருவித்துரைக் கப்பட்டது.

மறு சூதாடப் புஷ்கரனை அழைத்து வரும்படி
நளன் தூதரை அவனிடமனுப்புதல்.

404. மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணைய முளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீ ரென்று குலத்தூ தரைவிடுத்தான்
தண்டெரியற் றேர்வேந்தன் றான்.

(இ - ள்) (அங்ஙனம் அச்சோலையில் தங்கியிருக்கும்போது), தண்-குளிர்ச்சி பொருந்திய, தெரியல் - மாலையை அணிந்த, தேர் - இரதத்தையுடைய, வேந்தன் நளமகாராஜன், (தூதுவரை அழைத்து அவர்களைநோக்கி), அவனுக்கு-அந்தப்புட்கரனுக்கு, என்வரவு சொல்லி-என்னுடைய வருகையைக் கூறி (அதாவது; நான் இங்கு மறு சூதாட வந்திருப்பதைச் சொல்லி), மறு சூதுக்கு-(அங்ஙனம் ஆடும்) மறுமுறைச சூதாட்டத்திற்கு, உற்ற-பொருந்திய, பணையம் பந்தயமும், உளது என்று-இருக்கின்றதென்றும் தெரிவித்து கொற்றவனை-அம்மன்னவனை; கொண்டு-அழைத்துக்கொண்டு, அணைவீர் என்று-இங்குவந்து சேர்வீராக என்று சொல்லி, குலத்தூதரை-மேன்மையாகிய அத்தூதுவர்களை, விடுத்தான்-அந்தப் புஷ்கரனிடம் அனுப்பினான்,

நகரத்தில் நுழையக்கூடாதென்று சோலையில் தங்கிய நளன், அங்கிருந்தபடியே, தான் மறுசூதாட வந்திருப்பதையும், தன்னிடம் பந்தயப் பொருள் இருப்பதையும் புஷ்கரனிடம் கூறி அவனைச் சூதாட்டத்திற் கழைத்து வரும்படி தூதுவரை அனுப்பினான். அக்ஷஇருதய மென்னும் வித்தையால் தனக்கு நிச்சயமாக ஜெயமுண்டாகு மென்னும் உறுதி நளனுக்கேற்பட்டிருந்தபடியால் அவன் இங்ஙனம் தானே புஷ்கரனை வலியச்சூதாட அழைத்தான். முன் நளன் சூதாட்டத்தில் தோற்றுச் சென்ற போது, மேலே பந்தயம் வைத்தாடப் பொருளொன்றுமில்லாமற் போன

தைப் புஷ்கரன் உணர்ந்திருந்தானாதலின், 'இப்பொழுது அவனிடம் பணயப் பொருள் உண்டோ இல்லையோ' என்று சந்தேகங்கொண்டு சூதாட்டத்திற்கு வரமாட்டானென்று கருதியே நளன் இவ்வாறு பணயப் பொருளும் உளதென்றுரைக்குமாறு கூறினான். வீமன், நளனுக்குச் சகல சிறப்புக்களையும் செய்தனுப்பினானாதலின் அவனிடம் சூதாடும் பணயத்திற்கு வேண்டும் பொருள்களிருந்தன. அதனால், பொருள் விஷயத்திலும் அவன் தைரியங்கொண்டு கூற ஏதுவாயிற்று. 'குலத்தூதர்' என்பதற்குப் பரம்பரையாகத் தூதுத்தொழிலே புரிபவர் எனப்பொருளுரைப்பினுமாம்; பரம்பரையாக ஒருதொழிலையே செய்து வருவார்க்கு அதில் மிக்க வன்மையிருக்குமாதலின், குறித்த காரியத்தைச் சாதித்துத் தீரவேண்டி அத்தகைய குலத்தூதரையே தேடியனுப்பினான் நளன். எப்படியாவது புஷ்கரனைச் சூதாட்டத்திற் கழைத்து வரவேண்டுமென்பது நளன் கருத்து.

மற்று, தான்-அசைகள். வரவு-தொழிற்பெயர். சொல்லி, என்று என்பவைகளில் எண்ணும்மைகள் தொக்கன.

புஷ்கரன் வந்து நளனைக் காணுதல்.

405. மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வன்னெஞ்சன்
தூய நறுமலர்பூஞ் சோலைவாய்—ஆய
பெருந்தானை சூழப் பெடைநடையா ளோடும்
இருந்தானைக் கண்டா னெதிர்

(இ-ள்) (நளன் கட்டளைப்படியே தூதர் சென்றுரைத்ததைக் கேட்டு உடனே புறப்பட்டுவந்து), மாயம்-மோசம் பொருந்திய, நெடும் சூதில்-பெரியசூதாட்டத்தில், வஞ்சித்த-முன்னே வஞ்சனை செய்து நளனிடம் அரசுரிமை முதலியவற்றைக் கைப்பற்றிய, வல்நெஞ்சன்-கடினமனதை யுடையவனாகிய புஷ்கரன், தூய பரிசுத்தமான, நறுமலர்-நல்ல மலர்கள் நிறைந்த பூஞ்சோலைவாய்-அழகிய சோலையினிடத்தில், ஆய-தன்மாமனால் தனக்குப் புதிதாக உண்டாகிய, பெரும்தானை-பெரியசேனைகள், சூழ-நெருங்க, பெடைநடையாளோடும்-பெட்டை யன்னத்தை நிகர்த்த நடையினையுடையவளாகிய தமயந்தியுடனே, இருந்தானை-இருந்தவனாகிய நளனை, எதிர்-எதிரிலே, கண்டான்-பார்த்தான், எ-று.

நளன் கூறியனுப்பிய வார்த்தைகளைத் தூதுவர் சொல்லக்கேட்டவுடனே, புஷ்கரன், முன் ஜெயங்கொண்டிருந்த செருக்கால், மறுசூதாட்டத்திலும் வெற்றியுண்டாகுமென்று பேராசைகொண்டு விரைந்துவந்து நளனைக் கண்டான். புஷ்கரன் முன்னே கலியினுடைய மோசசெய்கைக் கிணங்கி வஞ்சனையால் நளனுடைய அரசுரிமையைக் கைக்கொண்டானாதலானும், நளன் எல்லாவற்றையு மிழந்து பரிதாப நிலையோடு சென்ற காலத்திலும் மனதிரங்காமல் நகரமாந்தரை அவனோடு பேசக்கூடாதென்று

ரைத்தது முதலிய கொடுமைகளைச் செய்தனனாதலானும் அவனை, 'வஞ்சித்த வன்னெஞ்சன்' என்றார் ஆசிரியர்.

பெடை-பறவைகளில் பெட்டையின் பெயர்; இஃதிங்குச் சிறப்புப் பற்றி அன்னத்தையுணர்த்தி நின்றது; இங்ஙனம் நின்றபெயர் ஆகுபெயராய் நடையையுணர்த்தும். உம்-அசை.

புஷ்கரன் நளனிடம் க்ஷேமம் விசாரித்தல்.

406. செங்கோ லரசன் முகநோக்கித் தேர்ச்சியிலா
வெங்கோ லரசன் வினவினான்—அங்கோலக்
காவற் கொடைவேந்தே காதலற்குங் காதலிக்கும்
யாவர்க்குந் தீதிலவே யென்று.

(இ-ள்) (அவ்வாறு பார்த்த மாத்திரத்தில்), தேர்ச்சி இலா - அறிவில்லாத, வெம்கோல் அரசன்-கொடுங்கோலரசனாகிய புஷ்கரன், செங்கோல் அரசன் - செம்மையான அரசாட்சியையுடைய நளமகாராஜனது, முகம் நோக்கி-முகத்தைப்பார்த்து, அம்-அழகிய, கோலம்-வடிவத்தையும், காவல் உலகத்தைக் காக்குந் தொழிலையும், கொடை - ஈகையையும், (உடைய), வேந்தே-நளமகாராஜனே!, காதலற்கும்-தமயந்தியின் ஆசைக்குரிய கணவனாகிய உனக்கும், காதலிக்கும்-நின்மனைவியாகிய தமயந்திக்கும், யாவர்க்கும்-(பிள்ளைகள் முதலிய மற்ற) எல்லோருக்கும், தீதுஇலவே என்று-கெடுதிகள் இல்லையே என்று, வினவினான்-கேட்டு க்ஷேமம் விசாரித்தான், எ-று.

புஷ்கரன் நளன்மீது உட்பகையுள்ளவனெனினும் மேலுக்கு அன்புடையவன் போன்று இங்ஙனம் அவனிடம் க்ஷேமம் விசாரித்தான்; இது நயவஞ்சகரின் செய்கை. நளன் முன்னே சூதாடி நாடிழந்த காலத்தில் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டுப் புஷ்கரனோடு யுத்தம் புரியாமல் போய் விட்டானாதலின், 'செங்கோல் அரசன்' எனப்பட்டான். புஷ்கரன் அக்காலத்தில் நகரமாந்தர் நளனோடு பேசவுங்கூடாதென்று தடுத்துக்கொடுமை புரிந்தானாதலின், 'வெங்கோல் அரசன்' எனப்பட்டான். இன்னும் அவன் மறுசூதில் தோல்வியடைவதை உணராமல் செருக்குடன் வந்தானாதலின், 'தேர்ச்சியிலா வெங்கோலரசன்' எனவுங் கூறப்பட்டான்.

'காதலற்கும்' என்பது முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி இனி, காதலன், காதலி என்பவற்றைப் புத்திரன், புத்திரி எனக்கொண்டு "காதலற்குங் காதலிக்கும் யாவர்க்கும்" என்ற தொடருக்கு, "புத்திரனுக்கும் புத்திரிக்கும் நீ உன் மனைவி முதலிய மற்ற யாவர்க்கும்" எனப்பொருளுரைப்பினும் பொருந்தும். 'தீது' என்பது பால்பகாஅஃறிணைப் பெயராதலின், பன்மையில் வந்து 'இலவே' என்னும் பன்மை வினையைக்கொண்டது; (நன்-பெய-உ ச-ஆம்) சூத்திரம் பார்க்க. 'காதலர்க்கு' எனவும் பாடபேதமுண்டு; இப்பாடங்கொள்ளின், இதற்கு, 'பிள்ளைகளுக்கும்' எனப் பொருளுரைத்தல் வேண்டும் எனக்கொள்க.

நளனை இவ்வாறு புஷ்கரன் க்ஷேமம் விசாரித்த பிறகு இருவரும் சம்பாஷணைசெய்து சூதாடுவதற்கிசைந்தார்கள் என்பது கதைத்தொடர்ச்சி.

சூதாட்டத்திற்கு நளனும் புஷ்கரனும் பந்தயம் வைத்தல்.

407. தீது தருகலிமுன் செய்ததனை யோராதே
யாது பணைய மெனவியப்பச்—சூதாட
மையாழி யிற்றுயிலு மாலனையான் வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து

(இ-ள்.) (புஷ்கரனும் நளனும் சூதாட இசைந்தபோது, புஷ்கரன், நளனிடம் முன்னே ஜெயித்த எல்லாவற்றையும் பந்தயமாகவைத்து) தீது தரு-தீமையைக் கொடுக்கின்ற, கலி-கலிபுருஷன், முன் - முன்னே, (நளன் தேரோட்டி வருங்காலத்தில் ருதுபர்ணனிடம் அக்ஷஇருதயம் என்னும் வித்தையைக் கற்றுக் கொண்டபோது அவனைவிட்டு நீங்கியும், வீமன் பதியில் அவனுக்கு வரங்கொடுத்தும்), செய்ததனை-செய்த சகாயத்தை, ஓராது அறியாமல், (நளன் முகத்தை நோக்கி), சூதாட-நாம் சூதாடுதற்கு, பணையம் யாது என-நீ வைக்கும் பந்தயம என்ன என்று, இயம்ப-வினவ, மை-கரிய, ஆழியில்-சமுத்திரத்தில், துயிலும்-நித்திரை செய்கின்ற, மால் அனையான்—மகாவிஷ்ணுவை நிகர்த்தவனாகிய நளன, வண்மைபுனை-ஈகை சேர்ந்திருக்கின்ற, கை-தன் கரத்திலணியப் பட்டிருந்த, ஆழி - மோதிரத்தை, கழித்து-கழற்றி, வைத்தான்-பந்தயமாக வைத்தான், எ-று.

புஷ்கரன், முன்னே சூதாட்டத்தில் வெற்றிகொண்ட கர்வத்தால், தான் நளனிடம் ஜெயித்த எல்லாவற்றையும் பந்தயமாகவைத்து, நளனை நோக்கி, 'நீ என்னபணையம் வைக்கின்றாய்' என்று வினவ அவன் தன்விரல் மோதிரத்தைக் கழற்றிவைத்தான். இதில் புஷ்கரன் பந்தயம் வைத்தது கூறப்படாவிடினும் அடுத்த செய்யுளில், "செப்பரிய செல்வத் திரு நகரும் ஒப்பரிய, வன்றானையோடு வளநாடும் வென்றான்" என வருதலால், அவன் நாடுநகரங்க ளெல்லாவற்றையும் வைத்தானென்பது பெறப்படுமாதலின் இங்கு அவன் அவற்றைப் பந்தயம வைத்தானென்பது கூட்டியுரைக்கப் பட்டது. இனி, சூதாட்டத்தில் முன்னே வெற்றியடைந்தோர், பின்னரும் தமக்கே ஜெயமுண்டாகு மென்னுஞ் செருக்கால் தாங்கள் ஜெயித்த பொருள்களையெல்லாம் ஒரே ஆட்டத்தில் பணயமாக வைப்பது இயற்கையாதலின், இங்குப் புஷ்கரனும் அங்ஙனமே ஜெயித்தவற்றைப் பந்தயம் வைத்து நளனை நோக்கி, 'நீ என்ன பந்தயம் வைக்கின்றாய்' எனக்கேட்பது இயற்கை; ஆதலின், நளனிடம் பந்தயம் என்னவென்று கேட்டான் என்ற குறிப்பினாலேயே தானும் மேற்கூறியவற்றைப் பந்தயம் வைத்தானென்பது பெறப்படு, மெனினுமாம், கலி, ஆதியில் நளனுக்குத் தீங்கு செய்தானெனினும் பின்னர் நலஞ்செய்ததைப் புஷ்கரன் உணராமல் மறந்து

தாடவந்தானுதலின், 'அவன், நீதுதருகலிமுன் செய்தத்னை யோராதே யாதுபணைய மெனவியம்ப' என்றார் புலவர். இங்கே முன் என்றது, இந்த மறுசூது நிகழ்வதற்கு முன் வீமன் பதியிலும், தான்றி மரத்தடியிலும் நடந்தவற்றைக் குறித்து நின்றது. இன்னும், முதற்சூதாடுங் காலத்தில் கலி நளன்மீதுள்ள விரோதத்தால் புஷ்கரனுக்குச் சகாயமாயிருந்தான் எனினும் எப்பொழுதும் அப்படி இருப்பானென்பது நிச்சயமில்லை. இப்பொழுதோ அவன் நளனுக்குச் சகாயமாயிருக்கிறான். இவ்வாறிருந்தும் கலிமுன் போலவே, தனக்குச் சகாயம் செய்வானென்று புஷ்கரன் கருதிவந்தான். இவ்வாறு கருதி வந்ததற்குக் காரணம் முன்கலிசெய்தது இன்னதற்காகச் செய்தா னென்பதை யுணராமையே ஆதலின், "நீதுதருகலி முன் செய்ததனையோராதே" என்பதற்கு, "முன்னே தனக்குக் கலிசெய்த உதவியை பற்றி ஆராய்ந்து, 'இதை ஒரு காரணார்த்தமாகச் செய்தான்; எப்பொழுதும் இப்படியே சகாயம்செய்யமாட்டான்' என்று தெரிந்துகொள்ளாமல்" எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். திருமால் பள்ளிகொண்டது பாற்கடலிலெனினும் அது கருங்கடலோடு விரவியிருத்தலால் பொதுவாகச் சமுத்திரத்தைக் குறித்து, "மையாழி யிற்றுயிலும்" என்றார் ஆசிரியர்; இனி இதனை உவமைத் தொகையாகக்கொண்டு, இதற்கு, "கரிய கடலைப்போலப் பாற்கடலிற் றுயிலும்" எனப்பொருளுரைப்பினும் அமையும்; திருமால் காத்தற்றொழிலுடையவர்; அரசரும் அத்தொழிற் குரியார்; ஆதலின், நளமகாராஜன் திருமாலுக்கு நிகராகக் கூறப்பட்டான்.

'மால்பராய்' எனவும் பாடமேதமுண்டு; 'அப்பாடத்திற்கு' 'விஷ்ணுவைத் துதித்து' எனப்பொருள் கூறவேண்டும். 'ஓராதே' என்பதில், ஏ-அசை

நளன் புஷ்கரனைச் சூதில் வெல்லல்.

408. அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும்—ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து.

(இ-ள்) (அவ்வாறு பந்தயம் வைத்தபின்), அவ்வேந்து-அந்த நளமகாராஜன், அருகு இருந்தார்-சமீபத்திலிருந்தவர்கள், மதிக்க-கொண்டாட, அப்பலகை ஒன்றின்-(அவ்வாறு பந்தயம் வைத்தாடத் தொடங்கிய) அச்சொக்கட்டான் பலகையொன்றிலேயே (அதாவது: அப்பலகையில் ஆடிய ஒரே ஆட்டத்திலேயே), செப்பு அரிய-சொல்லுதற் கருமையாகிய, செல்வம்-ஐசுவரியம் பொருந்திய, திரு-அழகிய, நகரும்-நகரத்தையும் ஒப்பு அரிய உவமையில்லாத, வல்தானையோடு-வலிமையாகிய சேனையுடனே, வளநாடும்-வளப்பம் பொருந்திய நாட்டையும், வஞ்சனையால்-சூதினாலே, (முன்பு) வென்றானை-தன்னிடத்தில் ஜயித்த புஷ்கரனிடத்தில், வென்றான்-ஜயித்துக்கொண்டான், எ-று.

நளன், முன்னே தன்னிடத்தில் நாடுநகரங்களையெல்லாம் மோசத்தினாலே ஜயித்துக்கொண்ட புஷ்கரனிடத்தில், இப்போது அவற்றை ஒரே ஆட்டத்தில் ஜெயித்துக் கொண்டான் என்பது இதன் கருத்து; "வஞ்சனையால் வென்றானை வென்றானவ்வேந்து" என்றதனால் புஷ்கரன் மோசமாகச் சூதாடி வென்றானென்பதும், நளன் மோசமின்றி அவ்விளையாட்டில் வென்றானென்பதும் பெறப்படும். நளன் இவ்வாறு வெற்றி கொண்டது நியாயம் பற்றியதாதலானும், அவனுக்குரிய நாடுநகரங்கள் மீண்டும் அவனிடத்திலேயே சேர்ந்ததாலும் அவனுடைய சத்தியத்தைப் பற்றி அவனை எல்லோரும் கொண்டாடினார்கள். அதுபற்றியே ஆசிரியர், "அருகிருந்தோர் தாம்மதிக்க" என்று கூறினர்.

'பலகை' யென்பது அதில் ஆடும் ஆட்டத்தை யுணர்த்தி நின்றது. தாம்-அசை. ஒடு எண்ணி நிற்றற் பொருளில் வந்தது. வென்றானை, வென்றான் என்பன-வினையாலணையும் பெயர்கள். அரிய் என்பது இன்மைப் பொருளில் நின்றது.

### புஷ்கரன் எல்லாவற்றையும் தோற்றபின் மாவிந்த நகரத்தைவிட்டுச் செல்லல்.

409 அந்த வளநாடு மவ்வரசு மாங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லா னளனென்று போற்றிசைக்குங்
கோவேந்தற் கெல்லாங் கொடுத்து.

(இ-ள்) (அவ்வாறு நளன் எல்லாவற்றையும் ஜெயித்துக் கொண்டபின், புஷ்கரன்), அந்த வளநாடும்-அந்தவளப்பம் பொருந்திய நிடததேசமும், அ அரசும்-அந்த அரசாட்சியும், ஆங்கு-அவ்விடத்தே, ஒழிய-தன்னைவிட்டு நீங்க, (அதன்மேல் அங்கிருத்தல்தகுதியன்றென்று கருதி), செந்தமிழோர்-செம்மையாகிய தமிழ்வித்வான்கள், நாஏய்ந்த-நாவிற்பொருந்திய, சொல்லால்-வார்த்தையினாலே, நளன் என்று-நளன் என்று சொல்லி, போற்று இசைக்கும்-துதிகூறுகின்ற, கோவேந்தற்கு-உயர்ந்த அரசனுக்கு, எல்லாம் கொடுத்து-யாவற்றையும் கொடுத்துவிட்டு, வந்தபடியே-(முன்பு) தான் வந்தவிதமாகவே, (அதாவது: மாவிந்தநகரம் முதலியவை தன்னிடத்திலில்லாமல் வந்தது போலவே), வழிக்கொண்டான்-வழியைப்பற்றிச் சென்றான்.

புஷ்கரன் மேற்கூறியவாறு தேல்வியடைந்தபின், எல்லா ஐசுவரியங்களையும் நளனிடம் கொடுத்துவிட்டு முன்புதான் ஒன்றுமில்லாமல் வந்தது போலவே திரும்பித் தன்நகரத்திற்குப் புறப்பட்டுப் போயினான் என்பது இதன் கருத்து. புஷ்கரன் முன்னே சூதாடவரும்போது அங்கே தனக்கு சொந்தமாக ஒன்றுமில்லாமல் வந்தான். இப்பொழுது திரும்பிச்செல்லுங் காலத்திலும் எல்லாவற்றையு மிழந்துவறிதே சென்றான்; அதனால் அவ

